ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம் 2034

இயற்பா,

ப்ரபந்நஜந கூடஸ்தரான நம்மாழ்வா ரருளிச்செய்த

# திருவிருத்தம்

இதற்கு,

பெரியவாச்சான்பிள்ளை தம்பொருளா அருளிச்செய்த,

மணிப்ரவாள வ்யாக்யாநம்,

இதற்கு விவரணரூபமான

அரும்பதம், அப்பு அரும்பதம்: வேறொரு அரும்பதம்.

கசு-பாசுரங்களுக்கு அப்பிள்ளை உரை,

தர்க்கதீர்த்தரான-ஸ்ரீமான், சிங்கப்பெருமாள் கோவில்,

மாடபூசி - ராமாநுஜாசார்யராலெழுதப்பட்ட

ப்ரதிபதம், தாத்பர்யம்

இந்த எட்டு க்ரந்தங்களும்

மாடபூசி-ராமாநுஜாசார்யராலும்

வி - மூத்துக்ருஷ்ணநாயுடு அவர்களாலும்,

நாநாதேசாநீதாநேக ஸ்ரீகோசங்களின் ஸஹாயத்தினால்

பரிசோதிப்பிக்கப்பட்டு

ஸ்ரீவைஷ்ணவ க்ரந்த முத்ராபகஸபையாரால்

ஸ்ரீ பராங்குச திருவவதாராதி [illegible]-வது ஸம்வத்ஸரமான

சோபக்ருத் ஸம்வத்ஸரத்தில்

சென்னபட்டணம்.

ஸ்ரீநிகேதந முத்ராக்ஷர சாலையில்,

அச்சிட்டு ப்ரசுரம் செய்யப்பட்டது.

விஜயதேதராம்.



நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ஸ்ரீவைஷ்ணவக்ரந்த முத்ராபகஸபை (லிமிடெட்)

# திருவிருத்தம்

இந்த க்ரந்தம் திவ்யப்ரபந்தத்தில் மூன்ருவது ஆயிரமான இயற்பாவில், ஐந்தாவது ப்ரபந்தம். இதை அருளிச்செய்தவர் மயர்வற மதிநலமருளப்பெற்ற நம்மாழ்வார். இவர் ப்ரபாவம் ஸங்க்ரஹமாக இதன்கீழ் எழுதப்பட்டிருக்கிறது. இந்தக்ரந்தம் நம்மாழ்வார் ஸாதித்தநாலுக்ரந்தங்களில் முதல் ப்ரபந்தம். ருக்வேதஸாரம். இது ஶ்ருங்கார ரஸப்ரதாநமாய், ஸ்வாபதேச கர்ப்பிதமாய், ரஸவத்தமமாயிருக்கும். இதில் பாசுரங்கள் ௧௦௦. இந்த ஶ்லாக்யமான ப்ரபந்தத்துக்கு வ்யாக்யாநமருளிச்செய்தவர் பெரியவாச்சான்பிள்ளை. இவர் ப்ரபாவம் தனி ஶ்லோகபீடிகையில் எழுதப்பட்டிருக்கிறது. இந்தப்ரபந்தத்துக்கு வ்யாக்யாநாந்தரங்கள்—நம்பிள்ளைகளருளிச்செய்த ஈடு, அழகிய மணவாள ஜீயரருளிச்செய்த ஸ்வாபதேச உரை, பெரிய பரகாலஜீயர் வ்யாக்யாநம், இம்மூன்றும் தெலுங்கெழுத்தில் அச்சிடப்பட்டிருக்கின்றன. அப்பிள்ளையருளிச்செய்தஉரையும்பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்தவ்யாக்யாநத்திற்கு மூன்று அரும்பதங்களுமுண்டு. இன்னும் இந்தக்ரந்தத்துக்கு பட்டர்முதலானபூர்வாசார்யர்கள் ஸாதித்த வ்யாக்யாநங்களநேகங்கள் உண்டென்றும் ப்ரஸித்தியுண்டு. அவைகள்

இப்போதைக்கு மகப்படவில்லை. இந்தக்ரந்தத்தில் ஆழ்வார்நாயகி, ஸர்வேஶ்வரன் நாயகன். ஆழ்வார், நாயகியாகும்விதம் எப்படியெனில், பார்யையானவள் எப்படி பர்த்தாவுக்கு அநந்யார்ஹசேஷபூதையுமாய், அநந்யசரணையுமாய், அநந்யபோக்யையுமாய் ஆகிறுளோ; அப்படியே ஜீவாத்மாக்களெல்லாம் ஸர்வேஶ்வரனுக்கு அநந்யார்ஹசேஷமுமாய் அநந்யசரணமுமாய்அநந்யபோக்யமுமாயிருக்குமாகையால் ஜீவஸ்வரூபரான ஆழ்வாரை நாயகியென்னத்தட்டில்லை. சாஸ்த்ரங்களிலும், (க) "సర్వవాసుదేవో ఉసౌ సాక్షాత్పురుష ఉచ్యతే। స్త్రీప్రాయమితర త్సర్వం జగద్బ్రహ్మ పురస్సరమ్. ஸர்வவாஸுதேவோஸௌஸாக்ஷாத்புருஷ உச்யதே| ஸ்த்ரீப்ராயமிதரத்ஸர்வம் ஜகத்ப்ரஹ்மபுரஸ்ஸரம்" என்றும் (உ) "స్వామిత్వాత్మత్వ శేషిత్వపుంస్త్వాద్యా స్స్వామినో గుణాః। స్వేభ్యో దాసత్వ దేహత్వ శేషత్వ స్త్రీత్వదాయినః ஸ்வாமித் வாத்மத்வ சேஷித்வபும்ஸ்த்வாத்யாஸ்ஸ்வாமிநோகுணா: | ஸ்வேப்யோதாஸத்வ தேஹத்வசேஷத்வஸ்த்ரீத்வதாயிந:" என்றும், அநேக இடங்களில் ஸர்வேஶ்வரனொருவனே ஸ்வதந்த்ரனாகையால் புருஷனென்றும், இதரமான சேதநவர்க்கமெல்லாம் அவனுக்குப் பரதந்த்ரமாகையால் ஸ்த்ரீ என்றும் இவ்வர்த்தம் உத்கோஷிக்கப்பட்டிருக்கிறது.

இப்ப்ரபந்தத்தில் அத்யவஸாய ஜ்ஞாநத்தைத்தாயென்றும்; பாகவதர்களை ஸகிகளென்றும், கடகனை ஆசார்யனைத்தூதென்றும், ஜ்ஞாநவைலக்ஷண்யத்தைக் கண்ணழகென்றும், பக்திவைலக்ஷண்யத்தை போகோபகரணமான முலையழகென்றும், வைராக்யத்தை இடையென்றும், அநுஷ்டாநத்தை நடையென்றும், அநந்யார்ஹதாசிஹ்நங்களை வளைகளென்றும், அஜ்ஞாநத்தை இருளென்றும், பாதகபதார்த்தங்களை வாடை, தென்றல், அன்றில் என்றும், ஆலஸ்யாவஹநத்தை இரவு நெடுமையென்றும், போகயோக்யகாலஸந்நிதியை பொழுதோடுபுலம்பல் மாலைக் காற்றுமையென்றும், விஶ்லேஷத்தில் பாதகமான விவேகத்தைச் சந்த்ரோதயமென்றும் கூறப்பட்டன. இதில் நடந்தகதைகளைச் சொல்லுகிறபடியால் இக்ரந்தத்துக்குத் திருவிருத்தமென்று திருநாமமாயிற்று.

## நம்மாழ்வார் வைபவம்,

பரமபாவநங்களான கங்காதிஸகலநதிகளிலும் ஶ்லாக்யமான தாம்ரபர்ணியின்தென்கரையில் திருக்குருகூரென்று ஒருதிவ்யதேசமுண்டு. இந்நகரத்தை த்வாபரயுகாந்தத்தில் கௌரவமஹாராஜர் பரிபாலித்துவந்தார். அப்போதந்த வம்சாவாரத்தில் சதுர்த்தவர்ணத்தில்* வீபூதிநாதேந்த்ரரென்று ஒருபாகவதோ

(க) (உ)

* இந்தபரம்பரை ப்ரபந்நாம்ருதத்தை யநுஸரித்தது. குருபரம்பரையில் வேறுவிதமாகக் காண்கிறது.

த்தம ரெழுந்தருளியிருந்தார். அவர் குமாரர் தர்மதரர், அவர் குமாரர் சக்ரபாணியார், அவர் குமாரர் அச்யுதர், அவர் குமாரர் ஸுமதி, அவர் குமாரர், செந்தாமரைக்கண்ணன், அவர் குமாரர் காரி. அவர் சமதமாதி ஸகலாத்மகுண ஸம்பந்நராய் விசேஷபகவத் பக்தியுக்தரா யெழுந்தருளியிருந்தார். இவருடைய தேவிகள் உடைய நங்கையார்: இவர் சிலகாலம் ஸந்தாநமில்லாமலிருந்து பின்பு திருக்குறுங்குடி நம்பி ஸந்நிதியில் ப்ரார்த்திக்க, அந்த எம்பெருமானுடைய அநுக்ரஹத்தினால் காரியாருக்கு உடைய நங்கையார் கர்ப்பத்தில் கலி பிறந்த ௪௪-வது நாள் ப்ரமாதிஸம்வத்ஸரம் வைகாசிமாஸம் சுக்லபக்ஷ சதுர்த்தசி வெள்ளிக்கிழமை கூடினவிசாகநக்ஷத்ரத்தில் கடகலக்நத்தில் தேதிப்யமான தேஜஸ்ஸையுடையவரான நம்மாழ்வாரவதரித்தார்.

இவர் ப்ராக்ருத சிசுக்களைப்போலன்றியே ஸ்தநபாநம் ரோதநம் முதலிய விகாரமற்றவராய், திருவவதாரம் முதல் திருக்கண்களை மூடிக்கொண்டு பகவத் த்யாநபரராய் எழுந்தருளியிருந்தார். இவ்வாஶ்சர்யத்தைக் காரியார் முதலானோராலோசித்துத் திருவவதரித்த பன்னிரண்டாவது நாள் பொலிந்துநின்ற பிரான் ஸந்நிதிக்கெழுந்தருளப் பண்ணிக்கொண்டுபோய் எம்பெருமானை ஸேவிப்பிக்க, அப்போது திருக்கண்களைவிழித்துப்பொலிந்து நின்றபிரானை ஸேவித்து, அநந்தரம் மெள்ளமெள்ளத் தவழ்ந்துபோய் சேஷாம்சமா யவதரித்திருக்கிற திருப்புளியாழ்வா ரடியில் பத்மாஸநமிட்டு ஜ்ஞாநமுத்ரையைத்தரித்து யோகநிஷ்டராய் அந்நபாநாதிகளைவிட்டு பகவதநுபவத்தையே தாரகபோஷக போக்யங்களாகக்கொண்டு தினந்தோறும் வ்ருத்தியடைந்துகொண்டு மௌநமாயெழுந்தருளியிருந்தார்.

இப்படியருக்குமபோது, திவ்யதேச யாத்ரையாக எழுந்தருளியிருந்தமதுரகவிகள் பதரிகாஶ்ரமத்திலிருந்து திருவயோத்யைக் கெழுந்தருளி அங்கேசில நாள் எழுந்தருளியிருந்தார். ஒருநாள் ராத்திரி ஜலஸ்பர்சத்துக் கெழுந்திருந்து தக்ஷிண்முகமாக நிற்க, அப்போது அத்திசையில் ஒருபெரிய தேஜஸ்ஸைக் கண்டு; இதென்னவென்று ஆலோசித்து, அந்த தேஜஸ்ஸையே அடையாளமாகவைத்துக்கொண்டு தென்திசைக்கெழுந்தருளி திவ்யதேசங்கள்தோறும் ஆராய்ந்துகொண்டு திருக்குருகூர்வரையில்வந்து அதற்கப்புறம் அத்தேஜஸ்ஸைக்காணாமல், இந்ததேஜஸ்ஸையுடையவர் இங்கே இருக்கவேணும் என்று ஆலோசித்து அவ்வூரில் விசாரிக்க, அங்கு ஆழ்வார் ப்ரபாவத்தைக்கேட்டு அவர் ஸந்நிதிக்கெழுந்தருளி பத்தாஞ்ஜலிபுடராய் சிலகாலம் ஸேவித்துக் கொண்டிருந்தார். இப்படியிருந்தும் ஆழ்வார் திருக்கண்களை விழித்துக் கடாக்ஷியாமையால் இவர்க்குக் கண்ணுண்டோ செவியுண்டோவென்று ஸந்தேஹித்து ஒருபெரிய கல்லையெடுத்து ஆழ்வார் திருமுன்பே திடீரென்று போட, அந்தப்பேரொலியைக்கேட்டு ஆழ்வார் திருக்கண்களை விழித்துக்கட

க்ஷித்தார். பின்பு இவர் மஹிமையை யறியக்கோரி, * "செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத்தின்று எங்கே கிடக்கும்" என்று பாவகர்ப்பமாய் மதுரகவிகள் ப்ரஶ்நம்பண்ணினார். அதற்கு ஆழ்வார், ‡ "அத்தைத்தின்று அங்கேகிடக்கும்" என்றுஸாதிக்க, அதைக்கேட்டு மதுரகவிகள் ப்ரீதமநஸ்கராய், இவர் ஸர்வஜ்ஞரென்று நிஶ்சயித்து ஆழ்வாருக்கு நித்யஸேவைபண்ணிக் கொண்டிருந்தார். இவர்லோகயாத்ரையைவிட்டு (க) "உண்ணும்சோறு பருகு நீர்தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்" என்கிறபடியே பகவந்நாமங்களையே தாரகபோஷக போக்யங்களாகக்கொண்டு ததேகபரராயிருக்கு மிருப்பைக்கண்டு அந்தந்த திவ்யதேசத்தெம்பெருமான்கள் திருப்புளியாழ்வாரடிக்கெழுந்தருளி ஆழ்வாருக்கு ஸேவைஸாதிக்க, அந்த எம்பெருமான்களை மங்களாசாஸநம் பண்ணி பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகள் தலையெடுத்து, அவ்வநுபவ பரீவாஹரூபமாக ௧00-பாசுரமுள்ள ருக்வேதஸாரமான திருவிருத்தத்தையும், ௭-பாசுரமுள்ள யஜுர்வேதஸாரமான திருவாசிரியத்தையும், ௮௭-பாசுரமுள்ள அதர்வணவேதஸாரமான பெரிய திருவந்தாதியையும், ௧௧0௨-பாசுரமுள்ள ஸாமவேதஸாரமான திருவாய்மொழியையும் அருளிச்செய்து மதுரகவிகளுக்கு அத்யயநம் செய்வித்தார்.

இவர்க்கு நாமாந்தரங்கள்,—காரிமாறன், காரிஸூநு, மாறன், சடகோபன், பராங்குசன், திருவாய் மொழிப்பெருமாள், உதயபாஸ்கரர். திருநாவீறுடைய பிரான், குருகேசன், குருகாதிபன், குருகைப்பிரான், திருக்குருகூர்நம்பி, தென்னரங்கன்பொன்னடி, வகுளாபரணன், வகுளபூஷணன், அருள்மாறன், பகவத்ஸாக்ஷாத்காரத்தால் இவருடைய ஸ்வபாவம்மாறினபடியால் மாறனென்றும், சதுர்வேதங்களின் ஸாரங்களை த்ராவிடபாஷையி லருளிச்செய்தபடியால் வேதம் தமிழ்செய்த பெருமாள் என்றும், அஜ்ஞாநப்ரதமான சடவாயுவை நிரஸித்தபடியால் சடவைரி என்றும் திருநாமமாயிற்று. இவர் ப்ரபந்நஜந கூடஸ்தர்; இவர்க்கு மற்றுள்ள ஆழ்வார்களும் ஆசார்யர்களும் அவயவ பூதராயிருப்பார்கள். அதெப்படியெனில் இவருடைய திருமுடி நம்பெருமாள்; ஸ்ரீஹஸ்தம்முதலிய திருமேனி, ஆழ்வார்களும் ஆசார்யர்களும்; திருவடி நம் தர்சநப்ரவர்த்தகரான உடையவர்.—இவர்க்குத் திருவாராதநம் பொலிந்து நின்ற

---

* செத்தது என்றால் அசேதநமான ப்ரக்ருதி. அதின்வயிற்றில் பிறக்கையாவது அத்தோடு கர்மபரவசனாய்ச் சேருகை. தின்னுதல் என்றால் அநுபவித்தல். சிறியது என்றால் அணுஸ்வரூபியான ஜீவன். ஜீவன்கர்மபரவசனாய்ப் ப்ரக்ருதியோடு சேர்ந்தால் எதை புஜித்துக்கொண்டு எங்கே வஸிப்பன் என்று தாத்பர்யம்.

‡ அந்தப்ரக்ருதியை யநுபவித்துக்கொண்டு அந்தப்ரக்ருதியிலே கிடப்பன் என்று பொருள்.

(க) திருவாய்மொழி ௬-௭-௧.

பிரான்: ஆசார்யர் ஸேனைமுதலியார்; சிஷ்யர்கள் மதுரகவிகள், நாதமுனிகள் முதலானோர். இவர் ஆழ்வார் கோடியிலும் ஆசார்ய கோடியிலும் அந்வயித்திருப்பர்.

இவர் மங்களா சாஸநம்பண்ணின திவ்யதேசங்கள்-(க) திருமாலிருஞ்சோலை, (உ) திருமலை, (ங) சோளஸிம்ஹபுரம், (ச) திருக்குருகூர் - (ரு) திருக்குறுங்குடி, (சு) வானமாமலை, (எ) திருக்குடந்தை, (அ) திருவல்லவாழ், (கூ) திருவண்வண்டூர் (க0) திருவிண்ணகர், † (கக) திருத்தொலைவில்லிமங்கலம், (கஉ) திருத்தொலைவில்லி மங்கலம், (மங்களபுரம்), (கங) திருக்கோளூர், (கச) கோயில், (கரு) தென்திருப்பேரை, (கசு) திருவாறன்விளை, (கஎ) திருக்குளந்தை, (பெருங்குளம்), (கஅ) திருவண்பரிசாரம், (ககூ) திருச்செங்கனூர், (உ0) திருக்கடித்தானம், (உக) குட்டநாட்டுத்திருப்புலியூர், (உஉ) திருப்புளிங்குடி; (உங) வரகுணமங்கை, (உச) ஸ்ரீவைகுண்டம், (உரு) திருக்காட்கரை, (உசு) திருமூழிக்களம், (உஎ) திருநாவாய், (உஅ) திருக்கண்ணபுரம், (உகூ) திருமோகூர், (ங0) திருவநந்தபுரம், (ஙக) திருவாட்டாறு, (ஙஉ) திருப்பேர்நகர்.

இப்படி ஙரு-ஸம்வத்ஸரம் பரமவைபவத்துடன் சேதநரை உஜ்ஜீவிப்பித்துக்கொண்டு எழுந்தருளியிருந்து, இச்சேதநோஜ்ஜீவநகைங்கர்யத்தை மதுரகவிகள் முதலானோர்க்காஜ்ஞாபித்து, அநந்தரம், பரமபதநாதன் ஸபரிவாரமாக எழுந்தருளி இவரை எழுந்தருளப் பண்ணிக்கொண்டுபோக, அர்ச்சிராதி மார்க்கத்தில் அங்கங்கு தேவதைகள்ஸத்கரிக்க, தேவதுந்துபி வாத்யங்கள்முழங்க பகுவைபவத்துடன் ஸ்ரீவைகுண்டத்துக் கெழுந்தருளினார்.

பின்பு, மதுரகவிகள் ஆழ்வார்ப்ரபாவ ப்ரதிபாதகமான "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்கிற திவ்யப்ரபந்தத்தைச்செய்தருளி, ஆழ்வாரை அர்ச்சாவதாரமாக எழுந்தருளப்பண்ணி, கோபுரமண்டப ப்ராகாராதிஸஹிதமாகத்திருக்கோயிலைப் ப்ரதிஷ்டைபண்ணி நித்யோத்ஸவபக்ஷோத்ஸவ மாஸோத்ஸவ ஸம்வத்ஸரோத்ஸவங்களையும் நடப்பித்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார்.

பின்பொருகாலத்தில், ஆழ்வாருடையதிவ்யப்ரபந்தம் ஸர்வலக்ஷணஸம்பந்நமாய், ஸர்வோத்க்ருஷ்டமாய், பகுவிலக்ஷணமாயிருக்கிறதென்று சில விலக்ஷணர் இப்ப்ரபந்தத்தை விஶ்வஸித்துஸ்துதிக்க, சில அஸூயாபரரானதமிழர் அதைக்கேட்டுப் பொறுமையினால், நம்கவிகளைக்காட்டிலும் இப்ப்ரபந்தம் ஶ்லாக்யமாகமாட்டாதென்று அதிக்ஷேபோக்திகளைச்சொல்ல, அந்நாட்டரசன் இப்ப்ரபந்தத்துக்கும் மற்றுமுள்ள தமிழர் ப்ரபந்தத்துக்கும் வாசியறிகைக்காக அவர்கள் கவிகளையும், இப்ப்ரபந்தத்தில் ஓர்பாசுரத்திலொருபாதமான' (க)'கண்ணன்கழலிணை" என்கிற ஆழ்வார் ஸ்ரீஸூக்தியையும் சங்கப்பலகைமேல் எழு

---

† கக-வது திவ்யதேசமும், கஉ-வது திவ்யதேசமும் இரட்டைத் திருப்பதி என்று வழங்குகின்றன. (க) திருவாய்மொழி க0-ரு-க.

கூறித்தார். பின்பு இவர் மஹிமையை யறியக்கோரி, * "செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத்தின்று எங்கே கிடக்கும்" என்று பாவகர்ப்பமாய் மதுரகவிகள் ப்ரஶ்நம்பண்ணினார். அதற்கு ஆழ்வார், ‡ "அத்தைத்தின்று அங்கேகிடக்கும்" என்றுஸாதிக்க, அதைக்கேட்டு மதுரகவிகள் ப்ரீதமநஸ்கராய், இவர் ஸர்வஜ்ஞரென்று நிஶ்சயித்து ஆழ்வாருக்கு நித்யஸேவைபண்ணிக் கொண்டிருந்தார். இவர்லோகயாத்ரையைவிட்டு (க) "உண்ணும்சோறு பருகுநீர்தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்" என்கிறபடியே பகவந்நாமங்களையே தாரகபோஷக போக்யங்களாகக்கொண்டு ததேகபரராயிருக்கு மிருப்பைக்கண்டு அந்தந்த திவ்யதேசத்தெம்பெருமான்கள் திருப்புளியாழ்வாரடிக் கெழுந்தருளி ஆழ்வாருக்கு ஸேவைஸாதிக்க, அந்த எம்பெருமான்களை மங்களாசாஸநம் பண்ணி பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகள் தலையெடுத்து, அவ்வநுபவ பரீவாஹரூபமாக க00-பாசுரமுள்ள ருக்வேதஸாரமான திருவிருத்தத்தையும், எ-பாசுரமுள்ள யஜுர்வேதஸாரமான திருவாசிரியத்தையும், அஎ-பாசுரமுள்ள அதர்வணவேதஸாரமான பெரிய திருவந்தாதியையும், ககoஉ-பாசுரமுள்ள ஸாமவேதஸாரமான திருவாய்மொழியையும் அருளிச்செய்து மதுரகவிகளுக்கு அத்யயநம் செய்வித்தார்.

இவர்க்கு நாமாந்தரங்கள்,—காரிமாறன், காரிஸூநு, மாறன், சடகோபன், பராங்குசன், திருவாய் மொழிப்பெருமாள், உதயபாஸ்கரர். திருநாவீறுடைய பிரான், குருசேகன், குருகாதிபன், குருகைப்பிரான், திருக்குருகூர்நம்பி, தென்னரங்கன்பொன்னடி, வகுளாபரணன், வகுளபூஷணன், அருள்மாறன், பகவத்ஸாக்ஷாத்காரத்தால் இவருடைய ஸ்வபாவம்மாறினபடியால் மாறனென்றும், சதுர்வேதங்களின் ஸாரங்களை த்ராவிடபாஷையி லருளிச்செய்தபடியால் வேதம் தமிழ்செய்த பெருமாள் என்றும், அஜ்ஞாநப்ரதமான சடவாயுவை நிரஸித்தபடியால் சடவைரி என்றும் திருநாமமாயிற்று. இவர் ப்ரபந்நஜந கூடஸ்தர்; இவர்க்கு மற்றுள்ள ஆழ்வார்களும் ஆசார்யர்களும் அவயவ பூதராயிருப்பார்கள். அதெப்படியெனில் இவருடைய திருமுடி நம்பெருமாள்; ஸ்ரீஹஸ்தம்முதலிய திருமேனி, ஆழ்வார்களும் ஆசார்யர்களும்; திருவடி நம் தர்சநப்ரவர்த்தகரான உடையவர்.—இவர்க்குத் திருவாராதநம் பொலிந்து நின்ற

---

* செத்தது என்றால் அசேதநமான ப்ரக்ருதி. அதின்வயிற்றில் பிறக்கையாவது அத்தோடு கர்மபரவசனாய்ச் சேருகை. தின்னுதல் என்றால் அனுபவித்தல். சிறியது என்றால் அணுஸ்வரூபியான ஜீவன். ஜீவன்கர்மபரவசனாய்ப் ப்ரக்ருதியோடு சேர்ந்தால் எதை புஜித்துக்கொண்டு எங்கே வஸிப்பன் என்று தாத்பர்யம்.

‡ அந்தப்ரக்ருதியை யநுபவித்துக்கொண்டு அந்தப்ரக்ருதியிலே கிடப்பன் என்று பொருள்.

(க) திருவாய்மொழி சு-எ-க.

பிரான்: ஆசார்யர் ஸேனைமுதலியார்; சிஷ்யர்கள் மதுரகவிகள், நாதமுனிகள் முதலானோர். இவர் ஆழ்வார் கோடியிலும் ஆசார்ய கோடியிலும் அந்வயித்திருப்பர்.

இவர் மங்களா சாஸநம்பண்ணின திவ்யதேசங்கள்-(க) திருமாலிருஞ்சோலை, (உ) திருமலை, (௩) சோளஸிம்ஹபுரம், (௪) திருக்குருகூர் - (௫) திருக்குறுங்குடி, (௬) வானமாமலை, (௭) திருக்குடந்தை, (௮) திருவல்லவாழ், (௯) திருவண்வண்டூர் (௧0) திருவிண்ணகர், † (௧௧) திருத்தொலைவில்லிமங்கலம், (௧உ) திருத்தொலைவில்லி மங்கலம், (மங்களபுரம்), (௧௩) திருக்கோளூர், (௧௪) கோயில், (௧௫) தென்திருப்பேரை, (௧௬) திருவாறன்விளை, (௧௭) திருக்குளந்தை, (பெருங்குளம்), (௧௮) திருவண்பரிசாரம்,(௧௯) திருச்செங்கனூர், (உ0) திருக்கடித்தானம், (உ௧) குட்டநாட்டுத்திருப்புலியூர், (உஉ) திருப்புளிங்குடி; (உ௩) வரகுணமங்கை, (உ௪) ஸ்ரீவைகுண்டம், (உ௫) திருக்காட்கரை, (உ௬) திருமூழிக்களம், (உ௭) திருநாவாய், (உ௮) திருக்கண்ணபுரம், (உ௯) திருமோகூர், (௩0) திருவநந்தபுரம், (௩௧) திருவாட்டாறு, (௩உ) திருப்பேர்நகர்.

இப்படி ௩௫-ஸம்வத்ஸரம் பரமவைபவத்துடன் சேதநரை உஜ்ஜீவிப்பித்துக்கொண்டு எழுந்தருளியிருந்து, இச்சேதநோஜ்ஜீவநகைங்கர்யத்தை மதுரகவிகள் முதலானோர்க்காஜ்ஞாபித்து, அநந்தரம், பரமபதநாதன் ஸபரிவாரமாக எழுந்தருளி இவரை எழுந்தருளப் பண்ணிக்கொண்டுபோக, அர்ச்சிராதி மார்க்கத்தில் அங்கங்கு தேவதைகள்ஸத்கரிக்க, தேவதுந்துபி வாத்யங்கள்முழங்க பகுவைபவத்துடன் ஸ்ரீவைகுண்டத்துக் கெழுந்தருளினார்'

பின்பு, மதுரகவிகள் ஆழ்வார்ப்ரபாவ ப்ரதிபாதகமான "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்கிற திவ்யப்ரபந்தத்தைச்செய்தருளி, ஆழ்வாரை அர்ச்சாவதாரமாக எழுந்தருளப்பண்ணி, கோபுரமண்டப ப்ராகாராதிஸஹிதமாகத்திருக் கோயிலைப் ப்ரதிஷ்டைபண்ணி நித்யோத்ஸவபக்ஷோத்ஸவ மாஸோத்ஸவ ஸம்வத்ஸரோத்ஸவங்களையும் நடப்பித்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார்:

பின்பொருகாலத்தில், ஆழ்வாருடைய திவ்யப்ரபந்தம் ஸர்வலக்ஷணஸம்பந்நமாய், ஸர்வோத்க்ருஷ்டமாய், பகுவிலக்ஷணமாயிருக்கிறதென்று சில விலக்ஷணர் இப்ப்ரபந்தத்தை விஶ்வஸித்துஸ்துதிக்க, சில அஸூயாபரரானதமிழர் அதைக்கேட்டுப் பொறாமையினால், நம்கவிகளைக்காட்டிலும் இப்ப்ரபந்தம் ஶ்லாக்யமாகமாட்டாதென்று அதிக்ஷேபோக்திகளைச்சொல்ல, அந்நாட்டரசன் இப்ப்ரபந்தத்துக்கும் மற்றுமுள்ள தமிழர் ப்ரபந்தத்துக்கும் வாசியறிகைக்காக அவர்கள் கவிகளையும், இப்ப்ரபந்தத்தில் ஓர்பாசுரத்திலொருபாதமான (க)'கண்ணன்கழலிணை" என்கிற ஆழ்வார் ஸ்ரீஸூக்தியையும் சங்கப்பலகைமேல் எழு

---

† ௧௧-வது திவ்யதேசமும், ௧உ-வது திவ்யதேசமும் இரட்டைத் திருப்பதி என்று வழங்குகின்றன. (க) திருவாய்மொழி ௧0-௫-க.

தினன். அப்பலகை, மற்றத்தமிழர்களுடைய கவிகளைக் கீழேதூக்கியெறிந்து விட்டு ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தியைமாத்ரம் சிரஸாவஹித்துக்கொண்டிருந்தது. அதைக்கண்ட தமிழ்ப்புலவர்கள் ஆஶ்சர்யப்பட்டு அதிப்ரவணராய் ஆழ்வாரை ஆஶ்ரயித்து பக்திபுரஸ்ஸரமாக ஆழ்வார்விஷயத்தில் அநேகம் கவிகளைப்பாடி க்ருதார்த்தரானார்கள்.

அநந்தரம், மூவாயிரம் ஸம்வத்ஸரம் கழிந்தபின் நாதமுனிகள், அப்போதிருந்த குத்ருஷ்டிகளினால் லுப்தமாய்ப்போன திவ்யப்ரபந்தங்களில் அவர்கள் கையிலகப்படாமல் தப்பிப்பிழைத்திருந்த ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தியில் பத்துப்பாசுரங்களை ஒரம்மையார் அநுஸந்தித்துக்கொண்டிருக்கையில் கேட்டு, அத்திருவாய்மொழியின் கடைசியானபாசுரத்தில் இதுஒராயிரம் ப்ரபந்தமென்றிருப்பதை ஆலோசித்து, விலக்ஷணமான இந்ததிவ்யப்ரபந்தத்தைப் பூர்ணமாக ஸம்பாதிக்கவேணுமென்று யத்நிக்கையில் அவை எங்கும் காணாமையால் லுப்தமாகப்போயிற்றென்று நிஶ்சயித்து, அநந்தரம் அந்தப்ரபந்தத்தைப்பெறுகைக்காகக் கண்ணிநுண் சிறுத்தாம்பைப் புரஶ்சரணம் பண்ணினார். அப்போது நாதமுனிகளுக்கு ஆழ்வார் ப்ரத்யக்ஷமாய் யோகாப்யாஸதசையில் நாலாயிரம் திவ்யப்ரபந்தங்களையும் ப்ரஸாதித்தருளினார்.

இவ்வாழ்வார், நித்யஸூரிகளிலொருவரென்றும், முக்தபுருஷர்களிலொருவரென்றும், ஸர்வேஶ்வரன் தானே லோகோஜ்ஜீவநார்த்தமாக ஆழ்வாராக அவதரித்தானென்றும் சிலர் அருளிச்செய்வர்கள். அவ்வாக்யங்களெல்லாம் ப்ரபாவபரமாயிருக்கும். நம்தர்சந ப்ரவர்த்தகர்களாய், தத்வயாதாத்ம்ய விதக்ரேஸரர்களாய், ஆப்ததமர்களான நம்பிள்ளைபெரியவாச்சான்பிள்ளை முதலான பூர்வாசார்யர்கள், இவர் பத்த ஸம்ஸாரி என்று நிர்வஹிப்பர்கள். அதெப்படியெனில் — அர்த்தவாதமாகையன்றிக்கே (க) "பொய்யில்பாடல்" என்று ஸர்வாம்சங்களிலும் ப்ரமாணதமமான தமது திவ்யப்ரபந்தத்தில் (உ) "மாறிமாறிப்பல பிறப்பும்பிறந்து" இத்யாதி அநேக ஸ்ரீஸூக்திகளினால் ஆழ்வார் தாமே தாம் இதுவரையில் பத்தஸம்ஸாரியாயிருந்தபடியை அருளிச்செய்படியால் இவ்வர்த்தமே ஸத்யமாக அங்கீகரிக்கப்படும். இவ்விஷயங்களை இவர் திவ்யப்ரபந்தங்களின் வ்யாக்யாநங்களிலும் ஆசார்யஹ்ருதயம் முதலான க்ரந்தங்களிலும் விசதமாகக் கண்டுகொள்க.

இப்படிக்கு,
இச்சபாபண்டிதரான ஸ்ரீமாந்
சிங்கப்பெருமாள்கோவில் மாடபூசி
தர்க்கதீர்த்தர் ராமாநுஜாசார்யர்.

---

(க) திருவாய் ௪-௩-௧௧.
(உ) திருவாய் ௨-௩-௮.

## நம்மாழ்வாருடைய திருநக்ஷத்ரதனியன்.

వృషభేతువిశాఖాయాం కురుకాపురి కారిజమ్,
పాణ్డ్యదేశే కలే రాదౌ శఠారింసైన్యపంభజే.

வ்ருஷபேது விசாகாயாம் குருகாபுரிகாரிஜம்
பாண்ட்யதேசேகலே ராதௌ சடாரிம்ஸைஸங்யபம்பஜே

శ్రీవిజ్ఞానది నోత్తరేఽహావికళావర్షేప్రమాద్యాహ్వయే,
మాసేమాధవనామ్నిభార్గవదినేచర్క్షే విశాఖాభిధే,
లగ్నేశుద్ధచతుర్దశీతిథియుతేశ్రీమత్కురీశేపిచ,
క్షిత్యాంప్రాదురభూత్పరాఙ్కుశకవిర్భాగ్యోదయాన్మాదృశామ్.

ஶ்ரீவிஜ்ஞாநதிநோத்தரேஹநி கலௌ வர்ஷேப்ரமாத்யாஹ்வயே
மாஸேமாதவநாம்நிபார்க்கவதிநேசர்க்ஷே விசாகாபிதே
லக்நேசுத்த சதுர்த்தசீதிதியுதே ஸ்ரீமத்குரீசேபிச
க்ஷித்யாம்ப்ராது ரபூத்பராங்குசகவிர் பாக்யோதயாந் மாத்ருசாம்,

## நித்யதனியன்.

మాతాపితాయువతయస్తనయావిభూతిః,
సర్వంయదేవనియమేనమదన్వయానామ్,
ఆద్యస్యనఃకులపతేర్వకుళాభిరామం,
శ్రీమత్తదఙ్ఘ్రియుగళంప్రణమామిమూర్ధ్నా.

மாதாபிதாயுவதயஸ்ஸ்தநயாவிபூதி:
ஸர்வம் யதேவநியமேந மதந்வயாநாம்
ஆத்யஸ்யந: குலபதேர்வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமிமூர்த்நா.

## வாழித்திருநாமம்.

ஆனதிருவிருத்தம்நூறு மருளினான்வாழியே
ஆசிரியமேழு பாட்டளித்தபிரான் வாழியே
ஈனமறவந்தாதி எண்பத்தேழீந்தான் வாழியே
இலகுதிருவாய்மொழி ஆயிரத்தொரு நூற்றிரண்டுரைத்தான் வாழியே
வாரணியும் மாமாடக்குருகை மன்னன்வாழியே
வைகாசி விசாகத்தில் வந்துதித்தான் வாழியே
சேனையர்கோனவதாரம் செய்தவள்ளல் வாழியே,
திருக்குருகைச் சடகோபன் திருவடிகள் வாழியே.

மேதினியில் வைகாசிவிசாகத்தோன் வாழியே
வேதத்தைச்செந்தமிழாய் விரித்துரைத்தான் வாழியே
ஆதிகுருவாய்ப் புவியிலவதரித்தான் வாழியே
அனவரதம் சேனையர்கோனடிதொழுவோன் வாழியே
நாதனுக்கு நாலாயிரமுரைத்தான் வாழியே
நம்மதுர கவிவணங்கும் நாவீறன் வாழியே
மாதவன்பொற்பாதுகையாய் வளர்ந்தருள்வோன் வாழியே
மகிழ்மாறன் சடகோபன் வையகத்தில் வாழியே.

நாள்பாட்டு.

ஏரார்வைகாசி விசாகத்தினேற்றத்தைப்
பாரோரறியப் பகர்கின்றேன்·சீராரும்
வேதம்தமிழ்செய்த மெய்யனெழில் குருகை
நாதனவ தரித்தநாள்.

உண்டோ வைகாசி விசாகத்துக்கொப்பொருநாள்
உண்டோ சடகோபர்க்கொப்பொருவர், உண்டோ
திருவாய்மொழிக்கொப்பு தென் குருகைக்குண்டோ,
ஒருபால் தன்னிலொக்குமூர்

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

நம்மாழ்வார் ப்ரபாவம் முற்றிற்று.



ஸ்ரீ:ரஸ்து

ஆழ்வார்திருவடிகளேசரணம்

எம்பெருமானார் திருவடிகளேசரணம்

# திருவிருத்தம்.

† கிடாம்பியாச்சான் அருளிச்செய்த

## தனியன்.

கருவிருத்தக்குழிநீத்தபின்காமக்கடுங்குழிவீழ்ந்து,
ஒருவிருத்தம்புக்குழலுறுவீர், உயிரின் ‡பொருள்கட்
கொருவிருத்தம்புகுதாமல்குருகையர்கோனுரைத்த,
திருவிருத்தத்தோரடிகற்றிரீர் திருநாட்டகத்தே.

அர்த்தம்—கரு-கர்ப்பஸ்தாநமாகிற, விருத்த-விருத்தமான (ஹேயமான), குழி-பள்ளத்தில் நின்றும், நீத்தபின்-கழுவினபின், காமம்-காமமென்கிற, கடும்-க்ரூரமான, குழி - பள்ளத்தில், வீழ்ந்து - விழுந்து, (பிறகு), ஒருவிருத்தம் - ஒரு கார்யத்திற்கும் யோக்யதையில்லாத கிழத்தனத்தை, புக்கு - அடைந்து, உழலுறுவீர் - திரிகிறப்ராணிகளே! உயிரின் - ஜீவாத்மாவாகிற, பொருள் கட்கு-வஸ்துக்களுக்கு, ஒருவிருத்தம்-ஒருதுர்க்கடத்தையும், புகுதாமல் - சேராமற்படிக்கு, குருகையர்கோன்-திருநகரிக்குஸ்வாமியான நம்மாழ்வார், உரைத்த - அருளிச்செய்த, திருவிருத்தத்து - திருவிருத்தமென்கிற திவ்யப்ரபந்தத்தில், ஓரடி - ஒருபாதத்தை, கற்று - அப்யஸித்து, திருநாட்டகத்து - ஸ்ரீவைகுண்டத்தில், இரீர் - (நிஸ்சிந்தராய்) இருங்கோள்.

[பிள்ளைலோகார்யஜீயர் வ்யாக்யாநம்.]

அவதாரிகை:—இதில், ஸப்தாவஸ்தாவஸ்திதரான ஸம்ஸாரிகளைக் குறித்து, 'ஸம்ஸாரதுக்கம் அநுவர்த்தியாமல் ஸுகோத்தரமான திருநாட்டை ப்ராபிக்கையின் இடையாட்டமாகத் திருவிருத்தமென்கிற திவ்யப்ரபந்

† சோமப்பிள்ளை அருளிச்செய்ததென்றும், ஆளவந்தார் அருளிச்செய்ததென்றுஞ் சொல்லுவர்.

‡ பொருளுக்கு என்றும் பாடம்

தத்திலே ஒருபாதத்தை அப்யஸித்திருங்கோள்' என்கிறது; அதாவது - (௧) "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா வொழுக்கு மழுக்குடம்பு மிந்நின்ற நீர்மை யினியா முறாமை" என்றத்தை நினைக்கிறது. (௨) * பொய் - (௩) * யாதானும் - (௪) * அழுந்தார் என்றிறே, தாத்பர்யம்: (௫) "பொய் - யாதானும் - அழுந்தார் என்று-விரோதி நிவ்ருத்தியையும்'' என்றாரிறே; எல்லாங்கூட, ஏகவாக்ய மென்றபடி. (௬) "அடியேன் செய்யும் விண்ணப்பம்," (௭) "மாறன் விண்ணப்பஞ்செய்த" என்று ப்ரபந்தமெல்லாங்கூட, வ்ருத்தவிஜ்ஞாபநமென்றபடி.

வ்யாக்யாநம்:—ஸம்ஸாரதோஷத்தை தர்சிப்பிக்கிறதாயிறே முதலடிதான் இருப்பது. (கரு விருத்தக் குழி நீத்தபின்) கர்ப்ப ஜந்ம பால்ய யௌவந ஜரா மரண நரகங்களாகிற அவஸ்தாஸப்தகங்களில் முந்தின அவஸ்தையை முதலிலே சொல்லுகிறது; 'கருவிருத்தக்குழி' என்று. 'கரு' என்று - கர்ப்பமாய்; 'இருத்தக் குழி' என்று - இருத்தப்பட்ட குழியென்றாய், வைக்கப்பட்ட குழியென்றபடி. (௮) "[Grantha]-மாதாபஸ்த்ரா" என்று இட்டுவைக்கும் பையோபாதிபாயிறே மாதா இருப்பது. (௯) * மக்கள் தோற்றக்குழியான (௧0) * வயிற்றுக்குழியிலேயிறே, உழைக்கிறது. அன்றிக்கே, புறக்கருவாய், விருத்தமான (விருத்தமான) குழியென்றுமாம்; அதுதான் அத்யந்தம் கர்ஹையாயிறே இருப்பது. இதின் தோஷத்தை பஞ்சாக்நிவித்யையிற் பரக்க ஓதிற்றிறே. அங்ஙனுமன்றிக்கே, 'விருத்தம்' என்று - வ்ருத்தமாய் வளைவாய், (௧௧) "சூழ்பிறப்பு" என்று வளையவளைய வருகிறதாகவுமாம். இதுதான், (௧௨) "வயிற்றிற் றொழு" என்னும்படி கழற்றப்போகாததா யிருக்கும்: (௧௩) "[Grantha]-மாதுர் ஜடரகோல்பக:" (௧௪) "[Grantha]-உல்பஸம்வேஷ்டிதோபுக்ந ப்ருஷ்டக்ரீவாஸ்திஸம்ஹதி:" என்று நெருக்கப்பட்டாயிற்று இருப்பது. (குழிநீத்தபின்) (௧௫) "[Grantha]-க்லேஶாந்நிஷ்க்ராந்திமாப்நோதி" என்று துக்கத்தோடே கர்ப்பமார்க்காந் நிர்க்கதனாய், யோநிஸங்கடநிர்க்கமத்திலே (௧௬) "[Grantha]-விஜ்ஞாநப்ரம்சமாப்நோதி" என்று அறிவுகலங்கி, அறிவில்லாத சைசவதசையை அடைந்து, (௧௭) "[Grantha]

(௧) திருவிருத்தம் - ௧.
(௨) ,, ,, ௧.
(௩) ,, ,, ௧௫
(௪) ,, ,, ௧00.
(௫) ஆசார்யஹ்ருதயம் - ௩
(௬) திருவிருத்தம்-௧.
(௭) ,, ,, ௧00.
(௮) ஸ்ரீவிஷ்ணுபுராணம்-௪-௧௯-௧௨.
(௯) பெரியதிருமொழி-௧௧-௮ ௨.
(௧0) பெரியதிருமொழி-௬-௨-௩.
(௧௧) திருவிருத்தம்-௪௫.
(௧௨) பெரியாழ்வார்திருமொழி-௫-௨-௩
(௧௩)
(௧௪) ஸ்ரீவிஷ்ணுபுராணம்-௬-௫-௧0,
(௧௫) ,, ,, ௬-௫-௧௫.
(௧௬) ,, ,, ,, ,, ௧௬.
(௧௭) ,, ,, ,, ,, ௧௮.

யா । அஸுத்தப்ரஸ்ரேஸுப்த:- ஸ்நாநபாநாதிசாஹார மவாப்நோதிபரேச்சயா | அசுத்தப்ரஸ்ரேஸுப்த:" என்று அதிலே அந்த துக்கத்தையும் அநுபவித்து, அநந்தரம் (க) "ஜாதோ ஹ்யஹம்-பால்யேக்ரீடநகாஸக்தா:" (உ) "தெரியேன் பாலகனாய்ப் பலதீமைகள் செய்துமிட்டேன்" என்று பால்யத்திலுண்டான க்லேசத்தையும் அநுபவித்து, *அநந்தரம்.

(ங) "வெங்காமக் கடுங்குழி வீழ்ந்து," (ச) "துயரஞ்செய் காமம்" என்னுமாபோலே, பின் (காமக் கடுங் குழி வீழ்ந்து) (ரு) "வழுக்கி யங்கோர் மூழையினிற் புக்கிட் டழுந்திக் கிடந்துழல்வேனை" என்றும், (சு) "சாந்தேந்து மென்முலையார் தடந்தோள் புணரின்ப வெள்ளந் தாழ்ந்தே னருநரகத் தழுந்தும் பயன்படைத்தேன்" என்றுந் தப்பவொண்ணாதபடி துக்காத்மகமான ஸ்வப்ரத்திலே பதித்து.

பின்பு விஷயாநுபவயோக்யமான பருவங் கழிந்தவாறே: (ஒரு விருத்தம் புக்கு) அத்விதியமான வார்த்தகத்தை ப்ராப்தராய்; 'விருத்தம் - வ்ருத்தம்; (வ்ருத்தம்.) அத்தால், வ்ருத்ததையை (வ்ருத்தத்வம்) அடைந்து என்றபடி. இந்த மூத்தமையா லுண்டான குற்றத்தை (எ) * முற்ற மூத்திலே மூதலித்தருளினாரிறே.

உழலுறுகையாவது - ஜராமரண நரக வேதனைகளிலே அடிப்பட்டு அதுவே யாத்ரையாய்ப் போருகிறவர்களென்றபடி: அம்மை வயிற்றே[illegible] கழுவோடு வளையவளைய உழன்றிறே திரிவது; (அ) "யமாலயஸஹஸ்ரேஷு ஜரரே மாத்ருராதுர: - யமாலயஸஹஸ்ரத்திலே ஜடரே மாதுராதுர." என்னக்கடவதிறே.

அன்றிக்கே, (ஒரு விருத்தம் புக்கு) என்று - அநாதரத்தாலே 'ஒரு விருத்தம்' (ஒரு வ்ருத்தம்) என்றதாய், *இப்படி பொல்லாவொழுக்கத்திலே புக்கு உழலுகிறவர்க ளென்றாகவுமாம்.

இப்படிஉழலாதபடி; (உயிரின் பொருள்கட்கு) (கூ) "அங்கலத்தொண்பொருள்" என்னும்படி பகவதநுபவ யோக்யரான ஆத்மவஸ்துக்களுக்கு; 'உயிரின்பொருளுக்கு' என்றபோது, தேஹத்தளவன்றிக்கே ஆத்மப்ரயோஜநார்த்தமாக என்றுமாம்.

---

(க) ஸ்ரீவிஷ்ணுபுராணம் க-கஎ-எரு. (சு) பெரியதிருமொழி அ-ரு-ச
(உ) பெரியதிருமொழி-க-க-எ. (எ) ,, ,, க-ரு-
(ங) (அ)
(ச) திருவாய்மொழி-எ-அ-எ. (கூ) திருவாய்மொழி-க-உ-கம.
(ரு) பெரியாழ்வார்திருமொழி-ரு-உ-எ.

(ஒரு விருத்தம் புகுதாமல்) ஏவம் விதமான விருத்தங்கள் (வ்ருத்தங்கள்) ஏகதேசமும் ப்ரவேசியாமல்; துர்வ்ருத்தங்கள் (துர்வ்ருத்தங்கள்) ஒன்றுஞ் சென்றணுகாமலென்றுமாம். (௧) * கடாவிய கூற்றமிறே. (௨) "இப்பிறப்பறுக்கும்" என்றும், (௩) "அழித்தாயுன் திருவடியால்" என்றும் (௪) "அடியனை வல்வினைத்துப்பாம் புலனைந்தும் துஞ்சக்கொடான்" என்றும் (௫) ஒயுமூப்புப் பிறப்பிறப்பு, என்றும், (௬) "உயிர்கொண் டுடலொழியவோடும்போதோடி யயர்வென்ற தீர்ப்பான்" என்றும், (௭) "இளைக்கநமன்றமர்கள் பற்றியிளைப் பெய்த நாய்தந்து மோதாமை நல்குவான்" என்றுந்தாமே அருளிச்செய்தாரிறே.

இப்படி நிவர்த்யங்களானவை வந்து ப்ரவர்த்தியாமல், (குருகையர் கோன் உரைத்த) (௮) "குருகைக்கோன் சடகோபன்" என்கிறபடியே (௯) * நல்லார் நவில்குருகூர்நகரானான ஆழ்வார் அருளிச்செய்த.

(திரு விருத்தத்து ஓர் அடி கற்றீர்) ப்ரதம ப்ரபந்தமான திருவிருத்தத்திலே ஒருபாதத்தை ஓதியிருங்கோள்; உங்களுக்கு உஜ்ஜீவநத்துக்கு ஓரடியே போதும். திருவிருத்தம், என்கையாலே, கலித்துறை விருத்தமென்றுதல், தம்முடைய வ்ருத்த விஜ்ஞாபநமென்றுதல் ஆகிறது. (ஓர் அடி கற்றீர்) ஆசார்யோச்சாரணாநுச்சாரண முகத்தாலே அப்யஸித்து தந்நிஷ்டராயிருங்கோள். அவரும் (௧௦) "திருமாலவன் கவி யாதுகற்றேன்" என்றாரிறே,

இத்தை அப்யஸிக்கிறது எதுக்காகவென்னில்:— (திருநாட்டகத்தே) திருநாட்டிடையாட்டமாக; திருநாட்டு விஷயமாக; அத்தை ப்ராபிக்கைக்காக என்றபடி. (௧௧) * இருள்தருமாஞாலத்தில் அவித்யாதி தோஷங்களை அநுஸந்தித்தாலிறே திருநாடு வித்திப்பது. அல்லது, [உயிர்கட்கு ஒருவிருத்தம் புகுதாமல் திருநாட்டகத்தே திருவிருத்தத் தோரடி கற்றீர்] என்றுமாம்; (௧௨) * ஊரு நாடு மூலகமுந் தம்மைப்போலே யாக்கவல்ல தரமுடையவரிறே: (திருநாடு) திருநகரியோடு அணித்தான திருவழுதிநாடு என்றபடி. (௧௩) "ஜநஸ்தாநவநாஸிந:- பவத்விஷயவாஸிந:" என்றிருந்தால் ஒரு விருத்தம் புகுதாது: (௧௪) "நத்ரஸஞ்சரிஷ்யந்தி- நதத்ரஸஞ்சரிஷ்யந்தி" இதி; அஷ்டாக்ஷரஸம்வித்தரிறே ஆழ்வார்; ஆகையால், ஸம்ஸாரநிவர்த்தகராய் மோக்ஷப்ரதாநதீக்ஷிதருமாயிருப்பர். (திருநாட்டகத்தே திருவிருத்தத் தோரடி கற்றீர்)

(௧) திருவிருத்தம்-௬.
(௨) திருவாய்மொழி-௧0-௨-௫
(௩) ,, ,, ௬-௨-௯
(௪) ,, ,, ௧-௭-௨.
(௫) திருவாய்மொழி. ௩-௩-௯.
(௬) நான்முகன் திருவந்தாதி-அஅ.
(௭) பெரியதிருவந்தாதி-௨௩.
(௮) திருவாய்மொழி-௯௬-௧௧.
(௯) திருவிருத்தம்-௧00.
(௧0) ,, ,, ௪அ.
(௧௧) திருவாய்மொழி-௧0௬-௧.
(௧௨) ,, ,, ௬-௭-௨.
(௧௩) ஸ்ரீராமாயணம்-ஆரண்ய ௧-௨0.
(௧௪)

திருநாட்டுக்குள்ளே யென்னுதல், திருநாட்டிடத்திலே யென்னுதல் ; இரண்டாலும் அவர் விஷயவாஸம் உண்டென்றபடி.

ஆழ்வார்க்குக் கீழில் அவஸ்த்தாஸப்தகத்தில் அநுபவமெல்லாம் பகவத்விஷயத்திலேயாயிருக்கும். (௧) * கண்ணன் நீண்மலர்ப் பாதம் பரவிப்பெற்றவரிறே. உடைய நங்கையார் திருவயிற்றிலே எழுந்தருளியிருக்கச் செய்தே (௨) * அடிமை செய்ய வுற்றிருப்பர். (௩) * அறியாக் காலத்துள்ளே யடிமைக்க ணன்புசெய்வித்து, * (௪) ஆழியங்கைப் பேராயர்க் காளாம் பிறப்பாய், திருவவதரிக்கும்போதும் சடகோபராக அவதரித்து, (௫) * க்ருஷ்ணத்ருஷ்ணாதத்வஜந்மயாய், (௬) * ஸஹஜஜ்ஞாநகநபூர்ணராய், பின்பு (௭) "அவன்முகத் தன்றி விழியேன்" என்று முகுளிதநயநராய், முலைப்பா லருந்ாதே, (௮) "அருளான் மன்னு குருகூர்ச் சடகோபன்" என்னும்படி அருளே தாரகமாக வளர்ந்து, (௯) அவ்வூர்த் திருநாமங் கற்றபின்" என்னும்படி வார்த்தை கற்று, (௧௦) * என்னவார்த்தையுங் கேட்குறுதே; (௧௧) "சங்கென்னும் சக்கரமென்னும் துழாயென்னும்" என்று கைகண்டத்தையும் நடுக்கிடந்தத்தையும் சொல்லி, (௧௨) * மேவி நைந்து நைந்து விளையாடலுறுதே, (௧௩) * யானையுந் திருமால் திருநாமங்களேயாய், (௧௪) ...- "க்ருஷ்ணக்ரீடாம் யஆததே" என்று தச்சேஷ்டிதாநுகாரியாய், பதினாறு திருநக்ஷத்ரம் நிரம்பினவாறே (௧௫) * அமுதமென் மொழியான திருவாய்மொழி பாடி அடிமை செய்து; (௧௬) "எல்லாங்கண்ணன்" என்று, பின்பு (௧௭) * பாலேபோற் சீரிற் பழுத்து, அநந்தரம் (௧௮) * பாடிப்போய்க் காயங் கழித்து அவன் தாளிணைக் கீழ்ப் புகுங் காதலையுடையராய், (௧௯) "ஐயார் கண்ட மடைக்கிலும் நின்கழலெய்யா தேத்தவருள்செய்" என்னும் மநோரதத்தையுடையராய், (௨௦) * போம்வழியைப்பெற்று, (௨௧) * அவாவற்று வீடுபெற்று, (௨௨) * திருவடியே சுமந்துழலக் கூட்டரிய திருவடிக்கட் கூடி, (௨௩) * வழுவிலா வடிமை செய்து வாழுமவரிறே.

---

(௧) திருவிருத்தம்-௩௭.
(௨) பெரியாழ்வார் திருமொழி-௫௩-௯.
(௩) திருவாய்மொழி-௧-௩-௩.
(௪) பெரிய திருவந்தாதி-௭௯.
(௫) பராங்குசாஷ்டகம்-௩.
(௬) பார்க்கவபுராணம்.
(௭) நாய்ச்சியார் திருமொழி-௧௨-௪.
(௮) திருவாய்மொழி-௧-௫-௧௧.
(௯) ,, ,, ௬-௫-௯.
(௧௦) ,, ,, ௬-௫-௭.
(௧௧) ,, ,, ௪-௨-௯.
(௧௨) ,, ,, ௬-௭-௫.
(௧௩) திருவாய்மொழி. ௬-௭-௩.
(௧௪)
(௧௫) திருவாய்மொழி-௬-௫-௨.
(௧௬) ,, ,, ௬-௭-௧.
(௧௭) பெரியதிருவந்தாதி-௫௮.
(௧௮) திருவாய்மொழி-௩-௯-௮.
(௧௯) ,, ,, ௨-௯-௩.
(௨௦) ,, ,, ௩-௯-௩.
(௨௧) ,, ,, ௧௦-௧௦-௧௧.
(௨௨) ,, ,, ௪-௯-௯.
(௨௩) ,, ,, ௩-௩-௯.

ஆகையால், 'அல்லாதார்ஸூக்தி பந்தஹேது ; ஆழ்வார் திவ்யஸூக்தி முக்திஹேது' என்றதாயிற்று.

இத்தால் 'இழக்கிறது ஹேயமான ஸம்ஸாரம் ; பெறுகிறது விலக்ஷணமான பரமபதம் ; இதுக்குடலாக ஸதாசார்யன் அருளிச்செய்த ஒரு நல்வார்த்தையை ஸத்துக்களிடத்திலே அப்யஸித்து நிர்ப்பரனாயிருக்கக்கடவன்' என்னுமர்த்தம் சொல்லிற்றாயிற்று.

பிள்ளைலோகாசார்யஜீயர் திருவடிகளேசரணம்.

தாத்பர்யம்:—கர்ப்பஜந்மபால்யயௌவநஜராமரணநரகங்களென்று எழுவிதமாய் அத்யந்த துக்ககரமாயிருக்கிற அவஸ்தைகளை மாறி மாறி யநுபவித்துக்கொண்டு அங்கு நின்றும் கரையேறச் சக்தியற்றவர்களாய்த் திரிகிற ஓப்ராணிகளே ! உங்களுக்கோர் நல்வழி யுபதேசிக்கிறேன் கேளுங்கள். நீங்கள் தேகாத்மப்ரமத்தைவிட்டு குருகாதிபரான நம்மாழ்வார் அருளிச்செய்த திருவிருத்தத்தில்முதல்பாதத்தை யப்யஸித்துநிர்ப்பரராயிருந்து தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணமாயிருக்கிற ஆத்மவஸ்துவை இஸ்ஸம்ஸாரத்தில் நின்றும் விலக்கி பரமபதத்தை யடைவிப்பிக்கப் பாருங்கோள்.

ஸ்ரீரஸ்து

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

# திருவிருத்தம்.

## வ்யாக்யாநம்.

பொய்ந்நின்றஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பும்,
இந்நின்றநீர்மை யினியாமுறாமை, உயிரளிப்பான்
எந்நின்றயோனியுமாய்ப்பிறந்தாயிமையோர்தலைவா
மெய்ந்நின்றுகேட்டருளாய், அடியேன்செய்யும்விண்ணப்பமே.

அர்த்தம்:—உயிர்-ப்ராணிகளை, அளிப்பான்-ரக்ஷிக்கைக்காக, எந்நின்ற-அநேகவிதமான, யோனியுமாய் - பிறவிகளாய், பிறந்தாய் - அவதரித்தவனே! இமையோர் - நித்யஸூரிகளுக்கு, தலைவா - ஸ்வாமியானவனே! பொய்ந்நின்ற - அஸத்யமாயிருக்கிற, (தேகாத்மாபிமான ரூபமான) ஞானமும் - ஜ்ஞாநமும், பொல்லா ஒழுக்கும் - விபரீதநடத்தையும், அழுக்கு - மலிநமான, உடம்பும், சரீரமும், (ஆகிற) இந்நின்ற-இப்படிப் பட்டஸ்வபாவத்தை, இனி - இதுமுதல், யாம் - நாங்கள், உறாமை - அடையாமற்படி, அடியேன் - தாஸபூதனான நான், செய்யும் - செய்கிற, மெய் - யதார்த்தமான, விண்ணப்பம் - விஜ்ஞாபநத்தை, நின்று - ஸ்திரமாயிருந்து, கேட்டருளாய் - கேட்டருளவேணும்.

[அப்பிள்ளை உரை,]

அவ:—முதற்பாட்டு - எம்பெருமானை ஸாக்ஷாத்கரித்த ஆழ்வார், 'த்வதநுபவவிரோதியானப்ரக்ருதி ஸம்பந்தத்தை அறுத்தருளவேணும்' என்று, அவன் திருவடிகளிலே விழுந்து தம்முடைய அபிலஷிதத்தை விஜ்ஞாபிக்கிறார்.

உரை:—(பொய்ந்நின்ற ஞானமும்) அஸ்வேஸ்வபுத்தியையும், அநாத்மந்யாத்மபுத்தியையும் சொல்லுகிறது; (நின்ற) இதுதான் என்றுமொக்க நிலைநின்றபடி. (பொல்லா ஒழுக்கும்) பொய்ந்நின்றஜ்ஞாநாநுகுணமான பரத்ரவ்யாபஹாராதி சாரித்ரமும். (அழுக்குடம்பும்) இதுக்கெல்லாம் அடியான ஹேயமான சரீரமும். (இந்நின்ற நீர்மை) இப்படி நிலைநின்ற ஸ்வபாவம்;

தேவரீர் திருவடிகளுக் கிட்டுப்பிறந்த இஜ்ஜந்மந் தப்பாமே பட்டேனிது வென்று கருத்து, (இனி) குறைவாளனாய்த் தேவரீர் திருவடிகளிலே வந்தபின்பு. (யாம் உறுமை) நாங்கள் ஸ்பர்சியாதபடி: ஸம்ஸாரிகளுடைய வ்யஸநந் தம்மதாகையாலே, 'யாம்' என்கிறார்; ஆத்மநிபஹுவசநம்வா. (உயிரளிப்பான்) போக்யாபோக்யதை பாராதே ஸகலாத்மாக்களையும் ஸம்ரக்ஷணம் பண்ணுமதுவே ப்ரயோஜநமாக. (எந் நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய் இமையோர் தலைவா) அகர்மவஸ்யனாய் (௧)* அயர்வறு மமரர்க ளதிபதியாயிருந்துவைத்து, உன் கேவலக்ருபையாலே, கர்மவஸ்யர்பிறக்கும்பிறவிகளிலே,(௨) "ஆத்மாநம் மாநுஷம் மந்யே - ஆத்மாநம்மாநுஷம்மந்யே" என்னும்படியே, அதுக் கவ்வருகறியாதானைப் கொண்டு, எல்லாயோநிகளிலும் வந்து பிறந்தருளினவனே! இதுக்குக் கருத்து - 'உம்முடைய கார்யம் நீரே நிர்வஹித்துக்கொள்ளும், என்ன, 'அங்ஙனேயாகில், தேவரீருடைய அவதாரங்களுக்கு வேறு ப்ரயோஜனமென்' என்று. (மெய்) 'உபக்ரமத்தில் இங்ஙனே காணும் எல்லாருஞ் சொல்லுவது; நீரும் அவ்வோபாதியிறே' என்று எம்பெருமான் அருளிச்செய்ய, 'அங்ஙனன்று; என்னுடைய விஜ்ஞாபநம் ஸத்யம்' என்கிறார். (நின்று கேட்டருளாய்) எம்பெருமான் பேராநிற்கப்புக, இத்தை நின்று கேட்டருளவேணும்; என்னுடைய ஸர்வதுக்கமும் போமென்று கருத்து. (அடியேன் செய்யும் விண்ணப்பம்) அடியேனுடைய விஜ்ஞாபநம்; இவருடைய உக்தியிலே இவருடைய மெய்ப்பாடறியலாமென்று எம்பெருமான் கேட்டருள 'அடியேன்' என்று தம்முடைய ஸ்வரூபத்தை விண்ணப்பம்-செய்கிறார்; (செய்யும்) இவ்வபேக்ஷைக்கு மேலில்லை.

# அரும்பத விளக்கம்

பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை, திருவிருத்த ப்ரபந்தத்துக்கு வ்யாக்யாநமிட்டருளுவதாகத் திருவுள்ளம்பற்றி, ஸர்வேஸ்வரன் ஸம்ஸாரிகளிலே அந்யதமரான இவரை (௩) 'ஒருங்கே மறிந்து கிடந்தலர்ந்த மென்காற் கமலத் தடம்போற் பொலிந்தன" என்றும், (௪) 'பெருங்கண் மலர்ப்புண்டரீகம்நம்மே லொருங்கே பிறழவைத்தார்" என்றும் இவர் தாமே அருளிச்செய்யும்படி நிர்ஹேதுகமாகக் கடாக்ஷித்தானென்று அருளிச்செய்யக் கோலி, இவ்வாழ்வாருடைய ஆர்த்யதிஶயத்துக்குடலாக இவரவதார விஷயமான

(௧) திருவாய்மொழி-௧-௧. (௩) திருவிருத்தம்-௪௨.
(௨) ஸ்ரீராமாயணம்-யுத்தகாண்டம்-௧௨௦-௧௧ (௪) ,, ௪௫.

## பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம்.

ப்ரவேசம்.—ஆழ்வாரை முக்தரென்பர்கள், சிலர்; அருளாளப் பெருமா ளெம்பெருமானார் ஸ்ரீபாதத்தை ஆச்ரயித்தாரொருவர், முக்தப்ராயரென்பர்; அங்குள்ளாரொருவரை நீர்போய்ப் பிறவுமென்னப் பிறந்தாரென்பர்கள், சிலர்; வங்கிப்புரத்துநம்பி, எம்பெருமான்றான் இப்படிவந்து அவதரித்தானென்பர். இப்படிசொல்லுகைக்கு அடி, ஆழ்வாருடைய ப்ரபாவத்தாலே. முக்தரிலே ஒருவரை இங்கே போர விட்டதாகில், நாம்போந்த கார்யம்முடிந்தவாறே போகிறோமென்று ஆறியிருக்கக் கூடும்; அங்ஙனன்றியிலே, "இந்நின்ற நீர்மை யினியா முறாமை" என்றும், (௧) "பாவியேனைப் பலநீகாட்டிப்படுப்பாயோ" என்றும், (௨) "மாறி மாறிப் பலபிறப்பும்" என்றும், (௩) "முன்பரவைகடைந் தமுதங்கொண்ட மூர்த்தியோ" என்றுங் கூப்பிடுகையாலே, இவர் ஸம்ஸாரத்திலே ஒருவராமித்தனை; அராஜகமான தேசத்திலே ஆனையைக் கண்ணைக்கட்டி விட்டால் ஆனையெடுத்தவன் ராஜாவாமாபோலே எம்பெருமான் கடாக்ஷித்தா ரொருவராமித்த

---

அரு|| மற்றும் ஆசார்யர்களுடைய ஸூக்திகளை அருளிச்செய்கிறார்; (ஆழ்வாரை) இத்யாதி. (௪) "அடியார் நிலாகின்ற வைகுந்தமோ" என்கையாலே நித்யரும் முக்தருமென்பர்கள், (முக்தப்ராயர்) என்று - ப்ரவேசதீபவாக்யங்கள்: இப்படி சொல்லுகைக்கு அடி. - (௫) "சிதனையே தொழுவார்" என்றது; அன்றிக்கே, (௬) "தடங்கடற் பள்ளிப் பெருமான் றன்னுடைப்பூதங்கள்" என்றதாதல்: இங்குத்தையராய் வந்தபடியாலேயன்றோ, இவர் இருந்தின படியைக் காணவருவது. (௭) "[illegible]" "பக்தாத்மநா ஸர்வஜநாங் ஸம்கோப்தும்" இத்யாதியைப்பற்ற, (எம்பெருமான்றான்) என்றது. 'ப்ரபாவத்தாலே' என்றது - ப்ரபாவமென்றபடி. இவ்விடத்திலே, (௮) "இதுக்கு மூலம் யான் நீ" என்கிற ஆசார்யஹ்ருதய வசனத்தைக் கண்டு கொள்வது. 'கடாக்ஷம் நிர்ஹேதுகமாகில், அல்லாதாரிடத்திலும் ப்ரவர்த்திக்கவேணுமே' என்ன, (அராஜகமான) இத்யாதி: (௯) "[illegible] - ஸ்வாதந்த்ர்ய மைஸ்வர மபர்யநுயோஜ்ய மாஹு:."

(௧) திருவாய்மொழி-௬-௯-௯.
(௨) ,, ,, ௨-௬-௮.
(௩) ,, ,, ௭-௧-௧0.
(௪) திருவிருத்தம்- ௭௫.
(௫) ,, ௭௩.
(௬) திருவாய்மொழி-௫-௨-௪.
(௭)
(௮) ஆசார்ய ஹ்ருதயம்-௨.
(௯) ஸ்ரீவைகுண்டஸ்தவம்-௫௩.

வ்யாக்யை. சிரகாலஸாத்யமான கர்மத்தையுடையா ரொருவர்க்குக்கடாக்ஷித்த அநந்தரம் இங்ஙனே ஆகக்கூடுமோவென்னில்;—(௧) "[illegible] - ப்ருந்தாவநம் பகவதா க்ருஷ்ணேநாக்லிஷ்டகர்மணா | சுபேநமநஸாத்யாதம் கவாம்வ்ருத்திமபீப்ஸதா" என்கிறபடியே நெருஞ்சிற்காடாய்க் கிடந்த ஸ்ரீப்ருந்தாவநம் க்ருஷ்ணனுடைய வீக்ஷணத்திலே (௨) "[illegible] - உத்பந்நநவசஷ்பாட்யம்" என்கிறபடியே சாணைரைப்புல்லாய்ப் பசுகு பசுகென்று அறுக்கஅறுக்கத் தொலையாதே கிடந்தாற்போலே, இவர்க்கும் இதுகூடும்.

அவ.—ஸர்வேஶ்வரன், தன்னுடைய ஸ்வரூப ரூபகுண விபவங்களையும், நித்ய விபூதியோகத்தையும், லீலாவிபூதி யோகத்தையுங் காட்டிக்கொடுக்கக்கண்டு, அநந்தரம் அங்குள்ளாருடைய ஜ்ஞாநத்தையும், வ்ருத்தத்தையும், அங்கிருக்கு மிருப்பையுங்கண்டு, அதுக்கெதிர்த்தட்டான ஸம்ஸாரத்திலே அவ்வநுபவத்துக்கு விரோதியான ப்ரக்ருதி ஸம்பந்தத்தோடே தாமிருக்கிற இருப்பையும் அநுஸந்தித்து, இவ்வநுபவ விரோதியான ப்ரக்ருதி ஸம்பந்தத்தை அறுத்துத் தரவேணுமென்று அபேக்ஷிக்கிறார்.

(௩) "[illegible] - ஜராமரண மோக்ஷாய மாமாஶ்ரித்ய யதந்தியே" என்று கேவலரைப்போலே இவர்

---

அரு|| (ஆனைமெடுத்தவன்) இத்யாதி. (௪) "[illegible] - கேவலம்ஸ்வேச்சயைவாஹம்." இத்தால், க்ருபாகார்யமான ஸர்வாத்ம விஷயமான கடாக்ஷத்தைப்பற்ற இவ்வாழ்வார் விஷயத்தில் ஸ்வாதந்த்ர்யகார்யமாய் அநிதரஸாதாரணமான கடாக்ஷத்துக்கு வ்யாவ்ருத்தி காட்டிற்று. ஸாத்யமான - ஆர்ஜிதமான. (இங்ஙனே ஆகக்கூடுமோவென்னில்) என்றது- (௫) "அறியாக்காலத்துள்ளே யடிமைக்கணன்பு" முதலாக ப்ரக்ருதி ஸம்பந்தத்தில் அஸஹதை முடிவாக இங்ஙனே ஆகக்கூடுமோ என்றபடி. த்யாநாநந்தரம் கடாக்ஷமாகையாலே, (வீக்ஷணத்திலே) என்றது. 'இமையோர்' என்று அநிமிஷத்வஞ் சொல்லுகையாலே, ஜ்ஞாநம். நித்ய விபூதி யோகஞ் சொன்னது, அல்லாதனவுக்கும் உபலக்ஷணம். 'அபேக்ஷிக்கிறார்' என்கிறவாக்யாநந்தரம், 'இந்நின்ற நீர்மை' என்கிறவாக்யம் அநுஸந்தேயம்.

- 'இவ்வநுபவ விரோதியான ப்ரக்ருதி ஸம்பந்தத்தை' என்று கீழ்ச்சொன்ன அர்த்தந்தன்னையே ஸங்கித்து பரிஹரிக்கிறார்; (ஜராமரண) இத்யாதி.

---

(௧) ஸ்ரீவிஷ்ணுபுராணம்-௫-௬-௨௮. (௪) ஸ்ரீபாஞ்சராத்ரம்.
(௨) ,, ,, ௩௭. (௫) திருவாய்மொழி ௨-௩-௩.
(௩) கீதை-௭-௨௯.

வ்யா||விரோதியைப் போக்கித்தரவேணு மென்பானென்னென்னில்;- காந்தன் ஸந்நிதியிலே காமினி அழுக்குக்கழற்றுமாபோலேயும், ராஜகுமாரன் அபிஷேகமென்றவாறே ஔபாஸ்யாதிகளைப் போக்க நினைக்குமாபோலேயும், ததநுபவவிரோதியென்றகழிக்க நினைக்கிறார். இது தான் ப்ரீதியோ, அப்ரீதியோவென்னில்;—இரண்டும்: மஹாராஜர்க்குப் பெருமாளைக்கண்ட ப்ரியமும், வாலிக்கு அஞ்சிப் போக்கிருந்த அப்ரியமும் போலே, இவர்க்கும் ப்ரக்ருதியோடே இருக்கிற அப்ரியமும், எம்பெருமானைக்கண்ட ப்ரியமும்.

வைஷ்ணவர்களையுந் தலைமகளுகப் பேசுவானென்னென்னில்; "இமையோர் தலைவா" என்றும், (க) "அடியாரடியார் தம்மடியார்" என்றும், "அடியார்கள் குழாங்களை-உடன்கூடுவதென்றுகொலோ" என்றும், (உ) "அந்தமில் பேரின்பத் தடியரோ டிருந்தமை" என்றுஞ் சொல்லுகையாலே, பகவத்விஷயத்தில் அவகாஹிக்கும்போது கடகர் வேண்டுகையாலும், அநுபவதசையில் வ்ருத்த கீர்த்தநம் பண்ணுகைக்கும் இவர்கள் வேண்டுகையாலே.

"இந்நின்ற நீர்மை யினியாமுறாமை" என்றும், (ங) "அழுந்தார் பிறப்பாம்" என்றும் உபக்ரமமும் உபஸம்ஹாரமும் ஏகார்த்தமாகையாலே, விரோதியைப் போக்கித் தரவேணு மென்கிறது இப்ப்ரபந்தத்தால்.

---

அரு||(இதுதான்)என்ற ஶங்காவாக்யத்துக்குத்தாத்பர்யம்-இப்ப்ரபந்தத்திற்ப்ரீத்யப்ரீதிப்ரதிபாதகமான பாசுரங்கள் உண்டாயிருக்கையாலே,விருத்த(ஸ்வஃ) தர்மங்களான ப்ரீத்யப்ரீதிகள் ஏகாஶ்ரயத்திலே உண்டாம்படி என்னென்று. (ச) [illegible] - விஷயபேதாத்விரோதோநாஸ்தி" என்று பரிஹாரம், 'என்றுஞ்சொல்லுகையாலே' என்ற அநந்தரம், 'அவனைப்ராப்தி ப்ராப்யராகையாலும்' என்று அத்யாஹரித்துக் கொள்வது; ஆக ஸர்வப்ரகாரத்தாலும் அபிமதராகையாலே, தலைமகளுகச் சொல்லுகிறது என்றபடி.

பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை, திருவிருத்தத்துக்கு வ்யாக்யாநஞ் செய்தருளுவதாகத்திருவுள்ளம்பற்றி, இப்ப்ரபந்தவக்தாவான ஆழ்வாருடைய வைபவத்தை ஆப்தஸம்வாதமுகேந அருளிச்செய்கிறார்: (ஆழ்வாரை)

---

(க) திருவாய்மொழி-ங-எ-க0. (ங) திருவிருத்தம்-க0.

(உ) ,, க0-௯-கக. (ச)

வ்யா.—(பொய்ந் நின்றஞானம்) என்கிறது - அநாத்மந்யாத்ம புத்தியை: அந்யதாஜ்ஞாநம்; ப்ரக்ருதி ப்ராக்ருதங்களைப்பற்றி நிற்கும் ஜ்ஞாநங்கள், பொய்யான விஷயங்களைப்பற்றி நிற்கையாலே: யதார்த்தஜ்ஞாநமொழிய அயதார்த்தமானவற்றைப் 'பொய்'என்னக்

---

அருளி என்று தொடங்கி, (இவர்க்கு மிதுகூடும்) என்னுமளவாக.'முக்த ப்ராயர்' என்றது-முமுக்ஷுவென்றபடி: அதாவது - ஶ்வேதத்வீப வாஸிகளிலே ஒருவரென்றபடி; (க) "சீரியரிலே யொருவரோ" என்னக்கடவதி! இவையெல்லாம், ப்ராயவபரம்; முமுக்ஷுவென்றே நிஶ்சயிக்கிறார்; (முக்தரிலே யொருவரை) என்று. ஸம்ஸாரிகளிலே அந்யதமரான இவரை, அல்லாத சேதநரைவிட்டு, ஸம்ஸாரிகளையுந் திருத்தும்படி, ஈஶ்வரன் அப்படி விஷயீகரிக்கலாமோ வென்ன, (அராஜகமான) இத்யாதி; அதாவது - நிரங்குஶ ஸ்வதந்த்ரனுகையாலே விஷயீகரித்தானென்றபடி. 'ஶஷ்பாட்ட்யம்' என்கிறது, மணிப்ரவாள ஸமாதியாலே. 'ஆட்யம்' என்கையாலே, (சாணைரப்புல்) இத்யாதிகள். இனிமேல் இப் ப்ரபந்த தாத்பர்ய மேதென்ன, அருளிச்செய்கிறார்; 'ஸர்வேஶ்வரன்' இத்யாதி. 'இமையோர்தலைவா' என்கிற நித்ய விபூதியோகம், லீலா விபூதிக்கும் உபலக்ஷணம். 'இமையோர்' என்கையாலே, ஜ்ஞாநம். பொல்லாவொழுக்குக்கு ப்ரதி கோடித்வேந, (வ்ருத்தத்தையும்) என்றது. 'இதுதான்' என்றது - இப்ப்ரபந்த மென்றபடி. ப்ரக்ருதி ஸம்பந்த நிவ்ருத்தியே யன்றிக்கே, அல்லாத அர்த்தங்களுஞ் சொல்லவில்லையோ வென்ன, (இந்நின்ற) இத்யாதி: இவ்வாக்யந்தான், 'ஜராமரணமோக்ஷாய' என்கிற வாக்யத்துக்கு முன்னே அநுஸந்தேயம். (இரண்டும்) என்றது-ப்ரீத் யப்ரீதிக ளிரண்டு மென்றபடி. வ்ருத்த கீர்த்தநம் பண்ணுகைக்கும் இவர்கள் வேண்டுகையாலும், தலைமகனைப் பேசுகிறு ரென்றபடி.

முதற்பாட்டு.—(பொய்ந்நின்றஞானம் என்கிறதுக்கு, 'பொய்' என்று-நஶ்வரமானதுப்ரக்ருதிப்ராக்ருதங்க ளென்றபடியாய்,இவற்றிலே நிற்கையாவது-ஏதத்விஷயமென்றபடியாய், இத்தாலே, ஜ்ஞாநத்துக்கு ஸ்வரூபத்தை விபர்யஸ்தத்வேந க்ரஹிக்கையாகிற விபரீத ரூபத்வமும், ப்ரகார விபர்யாஸக்ராஹகவேஷேண அந்யதாரூபத்வமு மாகிற ஆகாரத்வயத்தையும் (பொய்ந்நின்றஞானமென்கிறது) இத்யாதி வாக்யத்தாலே. கீழ் வாக்யத்வயோக்தமான அர்த்தத்தை விவரிக்கிறார்; (ப்ரக்ருதி ப்ராக்ருத) இத்யாதி. 'ப்ரக்ருதி ப்ராக்ருதங்கள்' என்கிற பேதத்தைப்பற்ற, 'ஜ்ஞாநங்கள்' என்கிறது. அநாத்மந்யாத்ம புத்தியாவது ஏதென்ன, (அந்யதாஜ்ஞாநம்) என்று. (யதார்த்தஜ்ஞாநமொழிய) என்றது ஸ்வஸ்வரூப பரஸ்வரூபத்தைப் பற்றின ஜ்ஞாநமொழியவென்றபடி. ஸ்வதப்ரமாண ஜ்ஞாநத்தை, 'பொய்' என்னலாமோ என்ன, (பொய்யான) இத்யாதி; (உ) "அர்த்தேநைவ விஶேஷோஹி நிராகாரதயா தியாம்." "அர்த்தேநைவ விஶேஷோஹி நிராகாரதயாதியாம்" என்னக்கடவதிறே. உக்தார்

---

(க) ஆசார்யஹ்ருதயம்-உ. (உ) பூர்வமீமாம்ஸாகாரிகை.

வ்யா||கடவது; (க) "[illegible] - தத்ஜ்ஞாந மஜ்ஞாநம தோ(அ)ந்யதுக்தம்" உத்தேஸ்யத்தை யொழிந்த அர்த்தஜ்ஞாநமெல்லாம் அஜ்ஞாந மாகையாலே. காண்கிற ப்ரக்ருதியைப் பொய்யென்னும் படி எங்ஙனே யென்னில்; ஸூந்யவாதியைப்போலே பொய்யென்கிற தன்று; மாயாவாதியைப்போலே துச்சமென்கிறதன்று; என்னென்னில்,—ஆத்மாவைப்போலே ஒருபடிப்பட்டிராமையாலே. ஆவது என்னென்னில்;—(உ) "[illegible] - யத்துகாலாந்தரேணாபி நாந்யஸம்ஜ்ஞா முபைதிவை | பரிணாமாதிஸம்பூதாம் தத்வஸ்துந்ருப தச்சகிம்" பரிணாமாதி ஸம்பூதையாய்க்கொண்டு காலாந்தரத்தில் அந்ய ஸம்ஜ்ஞையை அடையாதொழிகிறதுயாதொன்று, அதுதான் வஸ்துவாகிறது; ஏகரூபமாயிருக்கும் ஆத்மஸ்வரூபம்; அங்ஙனன்றிக்கே, க்ஷயவ்ருத்தி (வ்ருத்தி) பரிணாமாதி பாக்காய்க்கொண்டிருக்கையாலே, ப்ரக்ருதியைப் 'பொய்' என்கிறது. இதிலே அழுந்தினபடியைச்சொல்லுகிறது 'நின்ற' என்கையாலே. (ஞானமும்) ஜடமாயிருக்கிறதனக்கு ஒருஜ்ஞாநமும் பாரீர். (பொல்லா ஒழுக்கும்) ஜ்ஞாநகார்யமான வ்ருத்தமுண்டாகில், ஜ்ஞாந மில்லையாகில் லென்செய்யவேணு மென்னில;—வ்ருத்தமும் இல்லை ; (ங) "[illegible]. - அஹமேவ ஸஞ்கரிஷ்யாமி," (ச) "[illegible]. - குருஷ்வமாமநுசரம்" என்றிருக்கும் ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தமின்றியிலே, கண்டதடைய 'அறமறம்' என்

---

அரு||தேப்ரமாணம்-'தத்ஜ்ஞாநம்' இத்யாதி. இதுக்குத் தாத்பர்யம்-(உத்தேஸ்யத்தை) இத்யாதி. ஸூந்யவாதியைப்போலே துச்சமென்கிறதன்று; மாயாவாதியைப்போலே பொய்யென்கிற தன்று என்றபடி. ஆதிஸப்தத்தாலே, மற்றை மூன்றுவிகாரங்களையும் நினைக்கிறது. வ்யங்க்யோக்தி-(ஜடமான) இத்யாதி. ஜடமான ப்ரக்ருதியை விஷயமாக உடைத்தா யிருக்கையாலே தானும் ஜடமாயிருக்கத் தனக்கு ஒரு ஜ்ஞாநமென்கிற வ்யபதேஸமும் பாரீர் என்றபடி. (அறமறமென்றிருக்கை) என்றது - வ்ருத்த ராஹித்ய பலிதார்த்த கதநம். "பொய்க்கின்ற ஞானம்" என்று ப்ரக்ருதியை 'பொய்' என்கையாலே ஆத்மா நித்யமென்றும், "பொல்லாவொழுக்கு" என்று இப்படி தேஹாத்மப்ரமமடியாக 'பொல்லாவொழுக்கு' என்றபோதே நிவ்ருத்த தேஹாத்மகனுக்கு உத்தேஸ்ய பகவத்விஷயத்[தி]ல் நல்லொழுக்கமுண்டென்று அர்த்தாத் பலிக்

(க) ஸ்ரீவிஷ்ணுபுராணம்-சா-ரு-அஎ. (ங) ஸ்ரீராமா-அயோத்யா-ஙக-உரு.
(உ) ,, உ-கங-க00. (ச) ,, ,, உஉ.

வ்யா|| திருக்கை.(அழுக்குடம்பும்)இவையிரண்டுக்கு முடலான அஸத்ப்ரக்ருதி. மஹாபாரதமெல்லாம், கூளமும் பலாப்பிசினும் போலே ப்ரக்ருதிபுருஷவிவேகம் பண்ணமாட்டிற்றில்லை; இவர், (க) *மயர்வற மதிநலம் பெற்றவ ராகையாலே, மூன்றுபதத்தாலே ப்ரக்ருதிபுருஷவிவேகம் பண்ணியருளினார். (இந்நின்ற நீர்மை) இப்படிப்பட்டுள்ள ஸ்வபாவம்; உதிரக்கூறை காட்டுகிறாரென்று அம்மாள்; (உ) "𑌏𑌹𑌿 𑌪𑌶𑍍𑌯 𑌶𑌰𑍀𑌰𑌾𑌣𑌿 - ஏஹிபஶ்யஶரீராணி" என்று ஸ்ரீதண்டகாரண்யத்தில் ருஷிகள் பெருமாளுக்கு ராக்ஷஸர்தின்ற உடம்பைக் காட்டினாற்போலே, ப்ரக்ருதி தின்ற ஆத்மாவைக் காட்டுகிறாரென்று ஆளவந்தார். (பொய்ந்நின்ற ஞானமித்யாதி) இதொருவெட்டு, இதொருவெட்டு என்னுமாபோலே. (இந் நின்றநீர்மை) ஆசார்யனுபதேஶத்துக்கும் கேளாதே, ப்ரமாணங்களாலும் பேதிக்கவொண்ணாதே, இதுவே ஸ்வரூபமென்னலாம்படி யிருக்கை. (இனி) ஈஶ்வரனும் ஒரு முழங்கைத்தண்ணீரு மென்றிருந்த காலமன்றியே, உன்னாலல்லது செல்லாதென்றிருந்தபின்பு. (யாம்) பராநர்த்தம் நெஞ்சிலே படுகையாலே; நாட்டுக்காகத் தாம் மன்றாடுகிறார். (உறாமை) ஸ்பர்ஶியாமல். (ங) "𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌫𑌲𑌂 𑌪𑍍𑌰𑌯𑍋𑌕𑍍𑌤𑍍𑌰𑌿 - ஶாஸ்த்ரபலம் ப்ரயோக்த்ரி" என்கிறபடியே பலம் பெறுவா ரன்றோ அதுக்குக் க்ருஷிபண்ணுவார்; நம்மைக்கிட்டுகைக்கு வழிகள் கண்டுவைத்தோமாகில் அவற்றின்படியே வந்து கிட்டுகிறீர், என்ன; 'ஸர்வஜ்ஞனுமாய் ஸர்வஶக்தியுமாயிருக்கிற நான் இவற்றைச்செய்துவருகிறேன்; உன்னுடைய

---

அரு|| கையாலும், "அழுக்கு டம்பு" என்கையாலே ஏதத்ப்ரதிகோடித்வேந நிர்மலஜ்ஞாநரூப னாத்மாவென்றும், இப்படி ப்ரக்ருதி புருஷ விவேகம் பண்ணினாரென்றபடி. 'இ' என்றதுக்குத் தாத்பர்யம்-(உதிரக்கூறை) இத்யாதி. 'உதிரக்கூறை காட்டுகிறார்' - அடிபட்டவன் ரக்தமான புடைவையைக் காட்டுமாபோலே என்றபடி. அம்மாள் அருளிச்செய்த வார்த்தையை முகபேதேந ஆளவந்தார் அருளிச்செய்தா ரத்தனை. நின்றவுக்குத்தாத்பர்யம்-(ஆசார்யனுபதேஶத்துக்கும்) என்று.(ஈஶ்வரனும் ஒருமுழங்கைத்தண்ணீரு மென்றிருந்த காலம்) என்றது - 'என்னுடைய ரக்ஷணத்துக்கு நானே போரும்; ஈஶ்வரனை அபேக்ஷிக்கிறது எதுக்காக' என்கிற காலமென்றபடி. மேலே 'அடியேன்' என்று ஏகவசனமா யிருக்க, 'யாம்' என்கிறது என்னென்ன, (பராநர்த்தம்) இத்யாதி. 'வழிகள்'- கர்மஜ்ஞாநபக்திகள். அவன் இவனை ரக்ஷிக்கைக்காக அவ

---

(க) திருவாய்மொழி-௧-௧-௧. (ங) பூர்வமீமாம்ஸை.
(உ) ஸ்ரீராமா-ஆரண்ய-௬-௧௬.

வ்யா|| அவதாரத்துக்கு ப்ரயோஜநஞ் சொல்' என்கிறார்; (௧) ✻ஒருவா றொருவன் புகாவாறு உருமாறு மாயவரிறே; ஆனபின்பு நீயோ தானே உபாயாநுஷ்டாநம் பண்ணுவார்சொல்லு. (உயிர்) பிராட்டிமார், திருவடி திருவநந்தாழ்வான் என்று வ்யாவர்த்திக்கதோ? (அளிப்பான்) சிலர் அபேக்ஷித்தாருண்டோ? உன் க்ருபையாயிறே. தான் சொல்லும்போதும் (௨) "ஸம்பவாமி-பஹூநி" என்றிறே சொல்லுவது: (எந்நின்ற யோநியுமாய்) (௩) "[illegible]-ஆத்மாநம்மாநுஷம் மந்யே." (பிறந்தாய்) ஆணியிலே சோற்றிறுப்போலேயாதல், ஆனைக்கு உதவினாற்போலேயாதல் அன்றிக்கே, (௪) "[illegible] - ததஶ்சத்வாதசே மாஸே" என்று பத்துமாஸத்துக்குப் பன்னிரண்டு மன்றோ கர்ப்பவாஸம் பண்ணிற்று; (௫) பன்னிருதிங்கள்" இத்யாதி, (௬) "ஸங்கை: - ஸஹிதைர்வை:" இத்யாதி. (இமையோர் தலைவா) குறைவாளனாய்ச் செய்தானல்லன்கிடீர்: (௭) ✻ சூட்டுநன் மாலைப் படியே ஒருநாடாகத் தனக்கென்றிருப்பாரை யுடையவன்கிடீர்; அஸங்குசித ஜ்ஞாநரையும் தடிப்பித்துக்கொண்டு நிர்வாஹகனாயிருக்கிற படி. 'இது எத்தனை குளிக்த நிற்கும்? பலரும் இப்படி சொல்லி,

அரு||தரிக்குமோவென்ன, அருளிச்செய்கிறார்;(ஒருவாறொருவன்)என்று: ஒருவன-ஒருசேதநன், ஒரு ஆறு-ஒரு துர்மார்க்கத்திலே, புகா ஆறு-ப்ரவேஶியாதபடி, உருமாறும் - தன்னுடைய விக்ரஹத்தை மநுஷ்யஸஜாதீயமாக்கும், ஆயவர் - க்ருஷ்ணன் என்று பொருள்; அவதார ப்ரயோஜநம், ஒருவனுக்கு ஸாதநாநுஷ்டாநம்பண்ணுமைக்கன்றோ என்றபடி. 'ஆனால், அவன் அவதரிக்கிறது ஒருவனும் ஒருஸாதநம் பண்ணுமைக்கோ' என்ன, (ஒருவாறு)இத்யாதி: ஒருஉபாயத்தையும் ஒருவரும் அநுஷ்டியாதபடி பண்ணுமென்றபடி வென்னவுமாம், 'பஹூநி - என்றிறே சொல்லுவது' - ஆகையாலே, இவரும் 'இந்நின்ற' என்கிறார் என்றபடி. 'ஆய்' என்கிற மெய்ப்பாட்டுக்குத் தாத்பர்யம் - (ஆத்மாநம்) இத்யாதி. (தனக்கென்றிருப்பார்) என்றது-தனக்கு ஶேஷமென்றிருப்பாரென்றபடி. விவரணம்-(அஸங்குசித) இத்யாதி. (இது எத்தனை குளிக்குநிற்கும்) இத்யாதி வாக்யத்துக்குத் தாத்பர்யம்-' யாமுறாமை' என்று ப்ரக்ருதி ப்ராக்ருதங்கள் முதலானவற்றில் நசையற்று நம்முடைய கைங்கர்யமே புருஷார்த்தமென்று சொல்லிக்கொண்டு, கிட்டினால் ப்ரயோஜநாந்தரத்

(௧) பெரியதிருவந்தாதி-௫௬.
(௨) கீதை-௪-௫.
(௩)
(௪) ஸ்ரீராமா-பாலகாண்டம்-௧௮-௮.
(௫) பெரியாழ்வார்திருமொழி-௩-௨-௮.
(௬) ஸ்ரீராமா-அயோத்யா-௪-௭.
(௭) திருவிருத்தம்-௨௧.

வ்யா||கிட்டினவாறே மடியேற்பர்கள்' என்ன, (மெய்) என்கிறார்: (க) "விஜ்ஞாபநமிதம் ஸத்யம்". (நின்று) "பொய்ந்நின்றஞானம்" தொடங்கி, (உ) "மங்கவொட்டுன் மாமாயை" என்னுமளவுஞ்செல்ல. (கேட்டருளாய்) கேட்கைதானே உத்தேஸ்யமாயிருக்கிறது; அறிவித்தால் இத்தலைக்குச் செய்யவேண்டுவதில்லாமை. வாக்யபேதம் பிறக்கிறதோ வென்று, 'நீர் ஆர்' என்றான்; (அடியேன்) என்கிறார்: இவருடைய நானிருக்கிறபடி. (செய்யும்விண்ணப்பமே) 'நான்' என்றாராகில் இறே, 'சொன்ன வார்த்தை' என்பது; 'அடியேன்' என்கையாலே, விண்ணப்பம்' என்கிறார்.

'பொய்ந்நின்றஞானம்,' 'இந்நின்றநீர்மை' என்கையாலே, விரோதிசொல்லிற்று; 'எந்நின்றயோனியுமாய்ப் பிறந்தாய்' என்கையாலே, உபாயஞ்சொல்லிற்று; 'இமையோர் தலைவா' என்கையாலே, ப்ராப்யஞ் சொல்லிற்று; 'அடியேன்' என்கையாலே, ப்ராப்தாவைச் சொல்லிற்று; 'செய்யும் விண்ணப்பம்' என்கையாலே, ப்ராப்திபலங் கைங்கர்யமென்று சொல்லிற்று. ௧.

அரு||கைஅபேக்ஷித்திரென்றபடி. தாத்பர்யாந்தரம்-(அறிவித்தால்) இத்யாதி. 'அறிவித்தால் இத்தலைக்குச் செய்யவேண்டுவ தில்லாமை' - தன்னுடைய ருசியை அறிவிக்கிறமாத்ரம் சேதநக்ருத்யம், மேல் ஈஸ்வரக்ருத்யமாகையாலே. (வாக்யபேதம் பிறக்கிறதோ) என்றது - 'உறாமை' என்று ப்ரக்ருதி ஸம்பந்தத்தை அறுத்து அநந்யப்ரயோஜநரைப்போலே சொல்லுகிறவாக்யம் பேதமாகிறதோ வென்றபடி. ஆனால், இங்கே 'அடியேன்' என்கிறாராகில் கீழ் 'யாம்' என்பானென்னென்ன; (இவருடைய நானிருக்கிறபடி) என்கிறார்: அதாவது - இவர் நானென்னுமது, அடியேனென்னுமதோடு பர்யாயமென்றபடி: இத்தால், 'யாம்' என்கிற பஹுவசநவிவக்ஷயா பராநர்த்தமென்கிற அர்த்தந்தவிர, ஆத்மநிபஹுவசநமாய் ஏகவசந விவக்ஷயாபி ஓரர்த்தங் கண்டுகொள்வது, இப்ப்ரபந்தத்திலே அர்த்தபஞ்சகமும் ப்ரதிபாத்யமாகையாலே, தத்ஸங்க்ரஹரூபமான இப்பாட்டிலும் அத்தை அருளிச்செய்கிறார்; (பொய்ந்நின்ற ஞானம்) இத்யாதி.

[உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்! இமையோர் தலைவா! பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்குடம்பும் இந்நின்றநீர்மை இனியாம்உறாமை அடியேன் செய்யும் விண்ணப்பம் நின்று கேட்டருளாய்; மெய்; என்று அந்வயம்.] ௧.

---

(க) ஸ்தோத்ரரத்நம்-௫௭. (உ) திருவாய்மொழி-௧0-௭-௧0.

## அப்பு அரும்பதம்.

ப்ரவேசம்.—பரமகாருணிகனான ஸர்வேச்வரன், ஸ்ருஷ்டிக்கு அநேகம் புத்ரர்கள் உண்டானால் அதிலே சிலர் ஸத்புத்ரராய் ஸம்ஜ்ஞாதோத்ஸராய் ப்ரியபா திக்கச், சிலர் சேஷாக்ரகதராய் சத்ருராய் க்லேசப்படுமாபோலே, (க) “யோஸ்யாநந்த ஶ்ருதிஸ்ஸம்ப்ரதாயஸ்ஸர்வம் - நாலம்பநா ஸ்வஸ்வஸம்விதே ஸ்யாத்மாநூபயாப்யதே” என்கிறபடியே ஸம்பந்தம் அவிசிஷ்டமாயிருக்கச்செய்தே நித்யரும் முக்தரும் தன்னை அநுபவித்து நிரதிசயாநந்த யுக்தராய் வாழாநிற்க, ஸம்ஸாரிகள், (உ) “அநாதிமாயயா ஸுப்த: - அநாதிமாயயாஸுப்த:” என்கிறபடியே பகவந்மாயாதிரோஹித ஸ்வப்ரகாசராய், சப்தாதிவிஷய ப்ரவணராய், பகவத்விமுகராய் அநர்த்தப்படுகிறபடியைக் கண்டு, இவர்களையும் நல்வழியே போக்கவேணுமென்று பார்த்து, சாஸ்த்ர ப்ரதாநாதிகளும் அவதாரங்களும் அகிஞ்சித்கரங்களாகையாலே, இனைக்குப் பார்வை வைத்து ம்ருகம்பிடிப்பாரைப்போலே, ஸஜாதீயரைக்கொண்டே திருத்த வேணுமென்று, அதுக்கு இவர் முதல்வராமென்று, கர்மாதிமாறிப் பயிறப் பும் பிறந்து திரிகிற இவரை, முக்தரென்றும் நித்யரென்றும் தாமென்றும் பிரிவுடையாரில்லையாக ஸங்கிக்கவேண்டும்படி, விசேஷகடாக்ஷம் பண்ணி யருளினனென்கிறார்; (ஆழ்வாரை) இத்யாதி. ‘முக்தப்ராயர் - முமுக்ஷு என்று இப்படி ஸங்கிக்குமதேயோ? இவர் ஸ்வபாவந்தானேதென்ன, அருளிச்செய்கிறார்; (முக்தரிலே ஒருவரை) இத்யாதி; ஆர்த்தி தோற்றக் கூப்பிடுகையாலே, முக்தருமன்று; (ச) “பிறந்து” என்கையாலே, நித்யருமன்று; (ரு) “அமுதங்கொண்ட மூர்த்தி” என்கையாலே, அவன்தானுமன்று என்றபடி. ஸம்ஸாரிகளிலே ஒருவரானால், எல்லாருமிருக்க இவரைக் கடாக்ஷிப்பானென்னென்ன, அருளிச்செய்கிறார்; (அநாதிகமான) இத்யாதி: இங்கு வைதிகமர்யாதை அழிந்திருக்கை-‘அராஜகம்’. (சிரகால ஸாத்யம்) என்றது-அநேககாலங்கள் ப்ராயஸ்சித்தாதிகளாலே போக்குதல், அநுபவித்துப்போக்குதல் செய்யவேண்டுங் கர்மத்தை. லக்ஷ்யருடைய லக்ஷணங்கள் சொல்லிற்று, கீழ்; இனி, ப்ரபந்த தாத்பர்யமருளிச்செய்கிறார்; (ஸர்வேச்வரன்) இத்யாதி. இதுதான் - இப்ப்ரபந்தந்தான்; ப்ரீதியாய்ச் செல்லுகிறதோ, அப்ரீதியாய்ச் செல்லுகிறதோ என்றபடி. அர்த்தபஞ்சகமும் ப்ரதிபாதியாநிற்க, விரோதி நிவ்ருத்தியைச் சொல்லுகிறதென்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன, அருளிச்செய்கிறார்; (இந்நின்றநீர்மை) இத்யாதி.

முதற்பாட்டு.—அந்யதா ஜ்ஞாநமாவது - அநாத்மாவாயிருக்கிற தேஹத்திலே ஆத்மபுத்தியைப் பண்ணுகை; இது, ஸ்வரூபாந்யதாபாவம்; அன்றிக்கே, அஸ்வதந்த்ரமாயிருக்கிற ஆத்மாவிலே ஸ்வதந்த்ரபுத்தியைப் பண்ணுகை.

---

(க) மந்த்ரராஜபத ஸ்தோத்ரம்.
(உ) மாண்டூக்யோபநிஷத்.உ-உக.
(ங) திருவாய்மொழி-உ-கூ-எ.
(ச) ,, ,, ,,
(ரு) ,, ,, எ-க-ச.

இது, ஸ்வபாவார்ப்பதாபாவம்; இந்த அர்த்தமுங் கண்டுகொள்வது. (க) ‘‘அநாத்மந்யாத்மபுத்திர்யா-அஸ்வேஸ்வமிதியாமதி:’’ என்றத்தைப்பற்ற, அருளிச்செய்கிறார்; (ப்ரக்ருதிப்ராக்ருதங்களை) இத்யாதி. ப்ரக்ருதி ப்ராக்ருதங்களாவது-தேஹாத்மாபிமானம் புத்ரமித்ரகளத்ராதிகளைப்பற்றின மமகாரஜ்ஞாநம்; ஸ்வபாவபரமானபோது, ஸ்வர்க்காதி போகங்களைப்பற்றின மமகாரஜ்ஞாநம். இந்த ஜ்ஞாநத்தைப் பொய்யென்பானென்னென்ன, அருளிச்செய்கிறார்! (பொய்யான) இத்யாதி. அச்சமாவது-ஶூந்யவாதியைப்போலே ஸாத்யமாக இல்லையென்றாதே, ‘இதம்ரஜதம்’ என்றால் ‘நேதம்ரஜதம்’ என்று ஸாக்திகை பாதிக்குமாபோலே, பாதிதஜ்ஞாநத்தால்வரும் ஶூந்யதை. ‘பாரீர்’ - ஜடமான ப்ரக்ருதியைப் பற்றின தனக்கு ஜ்ஞாநமென்று பேரும் பாரீரென்று கேஷபம். ஜ்ஞாநமில்லாவிட்டாலும் அநுகூலவ்ருத்தியுண்டாகில் என்று ஸங்காபிப்ராயம். ருஷிப்ரோக்தத்தைப் பற்றவும் இதுக்கு வ்யாவ்ருத்தி உண்டென்றுமத்தைப்பற்ற, அருளிச்செய்கிறார்;(மஹாபாரதம்) இத்யாதி. ‘ரக்தக்கூறையைக் காட்டிச் சுட்பிடிகையிலே நோக்காய், ‘‘இந்நின்றநீர்மை’’ என்று லோகத்தார் படியைக்காட்டுகிறார்’ என்று அம்மாள்; பதந்தோறுந் தனித்தனியே காட்டுகையிலே நோக்காய் ஸ்வார்த்தபரமாக ஆளவந்தார். பதந்தோறும் (ஏ)சகாரத்துக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறார்;(இதொருவெட்டு) இத்யாதி. அவதாரம் ரக்ஷணார்த்தமாகவோ வென்ன, அருளிச்செய்கிறார்; (ஒருவாறு) இத்யாதி. ‘ஆய்’ என்றத்தைப் பற்ற, அருளிச்செய்கிறார்; (ஆத்மாநம்) இத்யாதி. பன்னிரண்டு மாஸ மென்றதுக்கும், பிறந்ததுக்கும் ப்ரமாணத்வயங் காட்டுகிறார்; (பன்னிருதிங்கள்) இத்யாதி. ‘இமையோர்’ என்று அநிமிஷத்வஞ்சொல்லுகையாலே, (அஸங்குசிதஜ்ஞாநர்) என்கிறது. ஸத்யமாறுஞ் சேட்கை யெவ்வளவென்று ஸங்காபிப்ராயமாக, அருளிச்செய்கிறார்: ‘நின்று’ என்று. ‘வாக்யபேதம்’ - பலவார்த்தைகேட்டால் வாய்தமொறிவேறொன்றைச் சொல்லவுங் கூடுமென்று. ‘விண்ணப்பம்’-வாசாகைங்கர்யம்.

[இமையோர்தலைவா! உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய். பொய்ந்நின்ற தொடங்கி இந்நின்ற நீர்மை இனி யாம் உறாமை அடியேன் செய்யும் மெய்யான விண்ணப்பம் நின்று கேட்டருளாய் என்று அந்வயம்.] (க)

[வேறொரு அரும்பதம.]

பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை, தம்முடைய பரமக்ருபையாலே, (உ) ‘‘பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை யையன்’’ என்கிறவர்களுடைய திருவந்தாதிகளுக்கு வ்யாக்யாநஞ் செய்தருளி, (ங) ‘‘அருள்மாறன்’’ என்கிற ஆழ்வார் அருளிச்செய்த திருவிருத்தத்துக்கு வ்யாக்யாநஞ்செய்தருளத் திருவுள்ளம்பற்றி, வக்த்ருவைலக்ஷண்யாதிகளை

(க) ஸ்ரீவிஷ்ணு-கூ-எ-கக.

(உ) உபதேசரத்தினமாலை-ங

(ங) ,, ,, ,,

அருளிச்செய்கிறார் ; (ஆழ்வாரை) இத்யாதி. (முக்தர்) என்றது - முதல் திருவாய்மொழியிலே உபய விபூதியையும் ததீயத்வாகாரேண அநுபவித்தபடியாலே. (முக்தப்ராயர்) என்றது-(க) "வீடுமின் முற்றவும்" முதலாகப் பிறர்க்கு உபதேசித்துத் திருத்தும்படியான ஜ்ஞாநவைபவத்தைப்பற்ற. (அநந்யார்ஹர்களானாரை) இத்யாதிக்கு, (உ) "பின்னைகொல் நிலமா மகள்கொல் திருமகள்கொல் பிறந்திட்டாள்" என்றதிலே நோக்கு. (வங்கிபுரத்து) இத்யாதிக்கு, (ங) "யானொட்டியென்னுள்ளிருத்துவமென்றிலன் தானொட்டி வந்து தன் தனித்தனிப் பாதம் தாம்பாடி" என்னும்படியான பகவத் ஸாந்நித்ய விசேஷத்திலே நோக்கு. ப்ரபாவத்தாலே இப்படி சங்கிக்கும்படியிருந்தாராகில் நிஜஸ்வபாவந்தானென்னென்ன, அருளிச்செய்கிறார்; (முக்தரிலே) இத்யாதி. "இந்நின்ற நீர்மை" என்றதாலே முக்தரன்றென்றும், "பலநீ காட்டி" என்கையாலே முக்தப்ராயரன்றென்றும், "மாறிமாறி" இத்யாதியாலே நித்யரன்றென்றும், "அமுதங்கொண்ட மூர்த்தியோ" என்கையாலே எம்பெருமானன்றென்றுந் திருவுள்ளமாயித்தனை யென்று நிர்த்தரிக்கையாலே, அதுவே நிஜாகாரமென்று தோற்றுகிறது. ஆகில் இவரைப் பூர்வர்கள் சங்கிக்கைக்கு ஹேதுவென்னென்ன, அருளிச்செய்கிறார்; (அநாஜ்ஞகமான) இத்யாதி : இத்தால், நிர்ஹேதுகவிசேஷகடாக்ஷலப்தஜ்ஞாநரென்கிற வைலக்ஷண்யம் ஸூசிதம். உக்திவைலக்ஷண்யத்தை சங்காபரிஹாரரூபேண ஸ்த்ரீகரிக்கிறார்; (சிரகால) இத்யாதி. வக்த்ருவைலக்ஷண்ய மருளிச்செய்தாராய், ப்ரதிபாத்யதாத்பர்ய கதநமுகேந, ப்ரபந்த வைபவத்தை அருளிச்செய்கிறார்; (ஸர்வேஸ்வரன்தன்) இத்யாதி. (இதுதான்) என்றது-இப்ப்ரபந்தந்தான் என்கிறபடி. (ப்ரீதியோ அப்ரீதியோ) என்றது - ப்ரீதிகார்யமோ, அப்ரீதிகார்யமோ என்றபடி. 'இரண்டும்' - இரண்டின்கார்யமும். இரண்டும் ஏகதா கூடுமோவென்ன, விஷயபேதேந இரண்டுங்கூடு மென்கிறார்; (மஹாராஜர்) இத்யாதி. 'ப்ரியமும்,என்ற அநந்தரம், 'நடந்துசெல்லும்' என்று சேஷம். 'ஆனால் எம்பெருமானையன்றோ, தலைமகனாகப் பேச அடுப்பது; இப்ப்ரபந்தத்திலே பாகவதர்களையுஞ் சொல்லுவானென்' என்கிற சங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார்; (ஸ்ரீவைஷ்ணவர்களையும்) இத்யாதி. 'அநுயோகதசையில்' - போகாநுஸந்தாநஸமயத்தில் என்றபடி. ப்ரதாந ப்ரதிபாத்யமின்னதென்கிற முகத்தாலே, ப்ரதிபாத்ய வைலக்ஷண்ய மருளிச்செய்கிறார் ; (இந்நின்ற) இத்யாதி.

முதற்பாட்டு.—ப்ரமாணகந்தியாகச்சொன்ன அர்த்தத்தை விவரிக்கிறார் ; (அந்யதாஜ்ஞாநம்) இத்யாதி : "அஸ்வேஸ்வமிதியாமதி:" என்றதுக்கும் உபலக்ஷணமென்று கருத்து. (யதார்த்தஜ்ஞாநமொழிய) என்றது - பகவதீயமென்று அறிகையொழிய என்றபடி. 'உக்தம்' என்ற அநந்தரம், 'சொன்னார்களிறே' என்று சேஷம். உத்தேஸ்யத்தை'-ததீயத்வேந வந்த

---

(க) திருவாய்மொழி-கஉ.
(உ) ,, ,, சு-ரு-க0.
(ங) ,, ,, க0-எ-ரு.

உத்தேஸ்யத்தை.(நக்சம்) என்றது - ஜ்ஞாநநிவர்த்யமான மித்யை என்றபடி. பொய்யில்நின்றத்தை அஜ்ஞாநமென்னவேண்டியிருக்க, ஞானமென்றது-ஜ்ஞேயபத்திலே நோக்கென்று, அருளிச்செய்கிறார்; (ஜடம்) இத்யாதி: ப்ரக்ருதியிலே ஒன்றித் தெரியாதே ஜடப்ராயமான ஆத்மாவுக்குப் பிறந்தத்தை ஜ்ஞாநமெனகிறபடி என்னென்று க்ஷேபிக்கிறாரென்கை. 'வ்ருத்தம்' - கைங்கர்யம். 'கண்டதனை'-கண்ட ஆசாரமெல்லாவற்றையும். 'அஹமஹமென்றிருக்கை' - 'நான் பண்ணுகிறேன்; நான்பண்ணுகிறேன்; என்று பண்ணுகை. ப்ரக்ருதி ப்ராக்ருதங்களை 'பொய்' என்கையாலே ஆத்மா மெய்யென்றும், 'ஞானம்' என்கையாலே ஜ்ஞாத்ருஜ்ஞேயத்வமும், 'ஒழுக்கு' என்கையாலே கர்த்ருத்வமும், 'உடம்பு' என்கையாலே ஶரீரவத்வமுந் தோன்றுகையாலே, இத்தையெல்லாந் திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டு, பாரதாத்யபேக்ஷயா வைலக்ஷண்யத்தைக் காட்டி ஈடுபடுகிறார்; (மஹாபாரதம்) இத்யாதி. 'பொய்ந்நின்ற' இத்யாதி 'உடம்பும் யாமுறாமை' என்ன அமைந்திருக்க, 'இந்நின்றநீர்மை' என்று மீளவும் அநுவதிக்கிறதுக்குக் கருத்து இரண்டு வகையாக அருளிச்செய்கிறார்; (உதிர) இத்யாதி: ஆழ்வார் பிறர்படியைக்காட்டிக் கூப்பிடுகிறாரென்று அம்மாள் நிர்வாஹம்; (ஸ)க்தத்துக்குத் தாம்பட்டபாட்டையே காட்டுகிறாரென்று ஆளவந்தார்நிர்வாஹம்; 'அடியேன்' என்று ஸ்வரூபஜ்ஞாநம்பிறந்த இவர்க்கு இப்போது இல்லையிறே சகாரங்களுக்குத் தாத்பர்யம் - (இதொரு) இத்யாதி. 'இ' என்ற பதத்துக்கு அர்த்தமருளிச்செய்கிறார்; (ஆசார்யன்) இத்யாதி. 'யாம்' என்று பஹுவசநதாத்பர்யம்-(பரா ர்த்தம்) இத்யாதி. மேலுக்கு அவதாரிகை-(ஶாஸ்த்ர) இத்யாதி, அவதாரத்துக்கு ரக்ஷணமே ப்ரயோஜநமாகையாலே, இவனே உபாயமென்னுமத்தை விவரிக்கிறார்; (ஒருவாறு) இத்யாதி. 'சொல்லு' என்ற அநந்தரம், 'என்கிறார்' என்று ஶேஷம். கண்ணனாய் ராமனாய்ப் பிறந்தானென்று விஶேஷியாமல் ஸாமாந்யமாகச் சொன்னதுக்கு (ஸூக்ஷ்ம)பாவம் - (தான்) இத்யாதி. 'யோனியிற்பிறந்தாய்' என்னாதே 'ஆய்' என்கையாலே, புரையற தஜ்ஜாதீயமானமை தோற்றுகிறதென்று, ப்ரமாணங் காட்டுகிறார்; (ஆத்மாநம்) இத்யாதி. ஆனால் 'வானோர்' என்னாதே 'இமையோர்' என்று அநிமிஷத்வந்தோற்றச்சொல்லுவானென்னென்ன, அருளிச்செய்கிறார்; (அஸங்குசித) இத்யாதி. 'இதுவிண்ணப்பம், கேளாய்' என்னாதே, 'அருளாய்' என்றதுக்கு (ஸூக்ஷ்ம)பாவம்-(கேட்கை) இத்யாதி. 'இல்லாமை'-இல்லாமையாலே. மேலுக்கு அவதாரிகை-(வாக்ய) இத்யாதி. முன்புபோல 'நான்' என்கிறாரோ, ஶேஷத்வாநுகுணமாக 'அடியேன்' என்கிறாரோ என்று கேட்டானென்று கருத்து.

[இமையோர்தலைவா! உயிரளிப்பானாக எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்! பொய்ந்நின்ற இத்யாதியாமுறாமை அடியேன் செய்யும் மெய்யான விண்ணப்பம் நின்று கேட்டருளாய் என்று அந்வயம்] க.

தாத்.— ஸர்வஜ்ஞர்களான நித்யஸூரிகளுக்கும் தலைவனான ஓ ஸ்ரீமந்நாராயணனே! ஸம்ஸாரிசேதநரைக் கடாக்ஷித்து உஜ்ஜீவிப்பிக்கைக்காக ராம

க்ருஷ்ணாத்யநேகாவதாரங்களெடுத்து க்ருஷிபண்ணின நீ, அத்யந்த நிஹீநமான இந்த சரீரத்தை யடைந்து அதில் ஆத்மபுத்தியைப்பண்ணி அதின் ரக்ஷணத்துக்காக அநர்த்தமான அஸத்வ்யாபாரங்களைப் பண்ணிக்கொண்டு திரிகிற எனக்கு இனி இந்தஸ்வபாவம் தவிரும்படி கடாக்ஷித்தருளவேணும். இப்போது அடியேன்செய்கிற இந்த விண்ணப்பம் ஒரு ப்ரயோஜநாந்தரத்தை உத்தேசித்துச் செய்ததன்று. இதை யதார்த்தமென்று திருவுள்ளம் பற்றவேணும்.

செழுநீர்த்தடத்துக்கயல்மிளிர்ந்தாலொப்பச், சேயரிக்க
ணழுநீர்துளும்பவலமருகின்றன, வாழியரோ
முழுநீர்முகில்வண்ணன்கண்ணன்விண்ணாட்டவர்மூதுவராம்
தொழுநீரிணையடிக்கே, அன்புசூட்டியசூழ்குழற்கே. உ.

அர்.— முழு - பரிபூர்ணமான, நீர் - ஜலத்தைப் பாநம்செய்த, முகில் - மேகம்போன்ற, வண்ணன்-நிறமுடையவனும், கண்ணன் - பவ்யனுமான ஸ்ரீக்ருஷ்ணனுடைய, மூதுவராம்-அநாதிஸித்தர்களாய், விண்ணாட்டவர் - பரமபதவாஸிகளான நித்யஸூரிகள், தொழும் - ஆச்ரயிக்கத்தகுந்த, நீர் - ஸ்வபாவமுடைய, இணை - சேர்ந்திருக்கிற, அடிக்கே - திருவடிகளிலே, அன்பு-ப்ரேமமாகிற மாலையை, சூட்டிய, ஸமர்ப்பித்த, சூழ் - சுருண்ட, குழற்கு - மயிர்முடியையுடைய இவளுக்கு, செழும் - அழகிய, நீர் - ஜலத்தையுடைய, தடத்து - தடாகத்திலே, கயல் - மத்ஸ்யம், மிளிர்ந்தாலொப்ப - புரண்டதோடு ஸமானமாயிருக்கிற, சே - சிவந்த, அரி - ரேகைகளையுடைய, கண் - நேத்ரங்களானவை, அழு - அழுகிற, நீர் - அச்ருஜலம், துளும்ப-அலையும்படி, அலமருகின்றன - சுழலாநின்றன. வாழியரோ - (இவ்வவஸ்தை) நித்யமாகச் செல்லவேணும். உ.

[அப்பிள்ளை உரை.]

அ.—தலைமகனோடே இயற்கையிலேபுணர்ந்து பிரிந்து மிகவும் அவஸந்நையான தலைமகள், லஜ்ஜையாலே வ்ருத்தமானபடி சொல்லாதொழிய, வடிவின் வேறுபாட்டாலே தோழியானவள், வ்ருத்தமான ஸம்ச்லேஷத்தை அறிந்தபடியைச் சொல்லி, அவனை ஆஸ்வாஸிப்பிக்கிறாள்.

உரை.—(செழும் நீர்த் தடத்துக் கயல் மிளிர்ந்தால் ஒப்ப-) அழகிய நீரையுடைத்தான தடாகத்திலே விம்ம ஒருகயல் மிளிர்ந்தாற்போலே. (சேய் அரிக் கண் அழு நீர் துளும்ப அலமருகின்றன) செவ்வரியை யுடைத்தானகண்கள் அழுகிற நீர் துளும்ப அலமருகின்றன. (செழுநீர்) பெரியநீரென்றுமாம். (வாழியரோ) இந்த ஐஸ்வர்யம் நித்யமாகவேணும். (முழு நீர் முகில் வண்ணன்) அவனை விஸ்லேஷித்த இவளுடைய வடிவைக் கண்டு, ஆதாராதேயமிரண்டும் நீரேயான மேகம்போலேயிருக்கும் இவனைப்பிரிந்த அவன்வடிவு என்று நிஸ்சயிக்கிறாள். (கண்ணன்-)பவ்யதா உச்யதே. (மூதுவராம் விண்ணு

ட்டவர் தொழும் நீர் இணை அடிக்கே-) பழையரா யிருந்த * அயர்வறு மமரர்கள் தாங்கள் உளராகைக்காகத் தொழும் நீர்மையையுடைய திருவடிகளிலே. (அன்பு சூட்டிய) ஸ்நேஹத்தை அவன்தானே ஆதரிக்கும்படி பண்ணின. (சூழ் கழற்கு) அவனைச் சூழவற்றான மயிர்முடியை யுடையவளான இவளுக்கு; சூழ்ந்திருந்த குழலென்றுமாம்,

ஸ்வாபதேசம்.—தாம் அபேக்ஷித்தபோது அபேக்ஷிதஞ் செய்யாமையாலே தமக்குப் பிறந்த அவஸாதத்தை அருளிச்செய்கிறார். (உ)

## பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம்.

அவ.—''இமையோர்தலைவா'' என்று அவனுடைய பரம பும்ஸ்த்வத்தை முதலிலே அநுஸந்தித்து, அப்படியே அவனைக் கிட்டப் பெறாமையாலே, ஆண் பெண்ணாம்படி யாயிற்று. இங்ஙனே செய்யக் கூடுமோ வென்னில்;—(உ) ''[illegible] - பும்பாவம் மநஸா யயு:'' (௩) ''[illegible] - பும்ஸாந் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்'' என்றும் உண்டாகையாலே, இதுவுங் கூடும். அங்ஙனேயாகில், கேவலம் ஸ்த்ரீத்வமன்றியிலே ஒருபிராட்டி தசையாம்படி எங்ஙனேயென்னில்;— ஸம்ஶ்லேஷத்தில் இனிமையும், விஶ்லேஷத்தில் தரியாமையும், ஸ்வதஸ்ஸித்தமான ஸம்பந்தமும் உண்டாகையாலே. தோழி தசையும், திருத்தாயார்படியும் உண்டாகிறபடி எங்ஙனே யென்னில்;—கிண்ணகம் பெருகாநின்றால் ஆறுகளுங் கால்வாய்களுங் குளங்களும் நிறைந்து ஸமுத்ரத்திலுங் குறைவற்றுப் புகுமோபாதி, விஷயம் அபரிச்சிந்நமாகையாலே, இதுவுங் கூடும். இவர்க்கு இங்குண்டான விரோதிகளையுங் காட்டி, அவற்றிலுண்டான

அரு|| கீழே ப்ரக்ருதிஸம்பந்த நிவ்ருத்தியை ப்ரார்த்தித்த இவர்க்கு அந்யாபதேசப் பேச்சு வருகைக்கு ப்ரஸக்தி ஏதென்ன, ('இமையோர்தலைவா' என்று) இத்யாதி. (பரமபும்ஸ்த்வத்தை) என்றது-வைரஉருக்கான விக்ரஹவிஶிஷ்டமான பரம பும்ஸ்த்வத்தை யென்றபடி. 'ஸம்ஶ்லேஷத்தில்' என்கிற வாக்யத்திலே அநந்யஶரணத்வ அநந்யபோக்யத்வ ததேகநிர்வாஹ்யத்வ ரூபமான மற்றை மூன்று ஹேதுக்களுங் கண்டுகொள்வது. ஸ்வதஸ்ஸித்தமான ஸம்பந்தம் - அநந்யார்ஹஶேஷத்வம். (உண்டாகிறபடி எங்ஙனேயென்னில்) என்றது - உண்டானால் தம் அபிநிவேஶம் குறையாதோ என்றபடி. 'விஷயம் அபரிச்சிந்நமாகையாலே' - அந்தவிஷயத்தில் ப்ராவண்யமும் அபரிச்சிந்நமாயிருக்கையாலே; எல்லா அவஸ்தையும் ஏககாலத்திலே கூடுமென்றபடி. 'பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பும்' என்று விரோதியையுங்காட்டி, 'இனியாமுறாமை' என்று அவற்றிலுண்டான ருசிகளையுங்

(உ) மஹாபாரதம். (௩) ஸ்ரீராமாயணம்-அயோ-௩-உ௯.

வ்யா||ருதிகளையுந் தவிர்த்து, தன்னுடைய நித்யவிபூதியோகத்தையுங் காட்டிக்கொடுக்க, அநந்தரம் அங்குள்ளாருடைய ஜ்ஞாநத்தையும், அங்குத்தைப் பரிமாற்றத்தையும், தேஹவிசேஷத்தையுங் கண்டு, அவ்விடத்தை ப்ராபிக்கல்லது நிற்கமாட்டாத த்வரையும் பிறந்தது. ஆகில், இவரபேக்ஷிதஞ் செய்துகொடாதொழிவா னென்னென்னில்;—ஸம்ஸாரிகளிற்காட்டில் வ்யாவ்ருத்தராக்கி, நம்மையல்லது அறியாதபடியும் பண்ணி, அலாபதசையிற் கூப்பிடும்படி பண்ணி, இவர்க்கு, ஸ்வரூபமான அடிமையும் வாசிகமாகக் கொள்ளாநின்றோமாகில், அவ்வருகிற் ப்ராப்தியுஞ் செய்வோம் நாமானபின்பு, செய்துகொடுக்கிறோமென்று ஆறியிருந்தான்; இவர்க்குக் கீழ்ச்செய்தது ஜ்ஞாநலாபமாகையாலே, அநந்தரம் ப்ராப்தி பண்ணித்தரவேணுமென்று த்வரிக்கிறார். ஈஶ்வரன் இங்ஙனே இருப்பதொரு படி உண்டு; ப்ரஜைகள் பசித்திருக்க விருந்தினரைப் பேணுமாபோலே, அஸாதாரண பரிகரத்துக்குக் தாழ்த்தும், அல்லாதார்கார்யந் தலைக்கட்டும்; எங்ஙனேயென்னில்;—கைகேயிகார்யந் தலைக்கட்டின அநந்தரம் ஸ்ரீபரதாழ்வான் கார்யஞ் செய்கையாலும், மஹாராஜர் கார்யஞ் செய்து பின்னைப் பிராட்டி கார்யஞ் செய்கையாலும், இவர்களுக்கு முற்படச்செய்கிற தென்னென்னில்;—கார்யத்தளவே யின்றே அவர்களுக்கு உள்ளதாகையாலே. அஸாதாரணர்க்கு அபேக்ஷிதஞ் செய்யாதோ வென்னில்;—ஸ்ரீ பரதாழ்வானுக்கு முடியைத் தவிர்த்துக் கொடுக்கையாலே, இவர்களபேக்ஷிதமுஞ் செய்யும்.

நாயகியுந் தோழியுமாக உத்யாநவநத்திலே பூக்கொய்யவென்று புறப்பட்டு, ஒரு வ்யாஜத்தாலே நாயகனும் அங்கே வர, தோழி

---

அரு|| தவிர்த்து, 'இமையோர் தலைவா' என்று தன்னுடைய நித்யவிபூதியோகத்தையுங் காட்டிக்கொடுக்க, அநந்தரம் அஜ்ஞாநத்துக்கு எதிர்த்தட்டான அங்குள்ளாருடைய ஜ்ஞாநத்தையும், பொல்லாவொழுக்குக்கு எதிர்த்தட்டான அங்குள்ளாருடைய பரிமாற்றத்தையும், அழுக்குடம்புக்கு எதிர்த்தட்டான தேஹவிசேஷத்தையும் என்றபடி. ஆனால் இவர் த்வரிக்கிறதேதென்ன, அருளிச்செய்கிறார்; (இவர்க்குக் கீழ்ச்செய்தது) என்று. இவரை ஆக்கப் படவிட்டு நாட்டுக்கு ஹிதசிந்தை பண்ணுகிறதேதென்ன, அருளிச்செய்கிறார்; (ஈஶ்வரன் இங்ஙனே) என்று: அன்றிக்கே, ஈஶ்வரன் இவரைவைத்ததுக்கு ஹேத்வந்தரமாகவுமாம். 'இவர்களுக்கு' - கைகேயி, மஹாராஜர் இவர்களுக்கு. 'கார்யத்தளவே' - ராஜ்யத்தைக் கொடுக்குமளவே. ஸ்ரீ பரதாழ்வானுக்கு நித்யகைங்கர்யத்தைப் பண்ணிக்கொடுக்கவேணுமென்றிறே, தாத்பர்யம்.

வ்யாஜமும் ஒரு வ்யாஜத்தாலே பிரிய, தைவயோகத்தாலே கூடி, கூடினவழியே பிரியவும், 'பிரிவுதானுங்கலவியிலே ஒருவகையோ' என்றிருந்தாள்; பிரிவின் மெய்ப்பாட்டாலே புளகிதகாத்ரையாய்க்கொண்டு சோர்வுபடுகிறபடியைக்கண்டு இவளுக்கு ஸம்ஶ்லேஷம் வ்ருத்தமாய்க் கழிந்ததென்று அறிந்து, இனி நாம் உடன்பட்டு இவள் ஸத்தையை உண்டாக்கிக்கொள்வோமென்று, 'இதொருவடிவு இருந்தபடி என்? இவ்விருப்பு நித்யமாகவேணும்' என்று மங்களாஶாஸநம் பண்ணுகிறாள்.

வ்யா.—(செழுநீர்த் தடத்துக்கயல் மிளிர்ந்தால் ஒப்ப) ஸாந்த்ரஜலமாயிருக்கிற தடாகத்திலே ஒருகயல் இடம் வலங்கொண்டாற்போலேயிருக்கை: உபமாநமே பிடித்துத் திருத்திக்கொண்டுசொல்லவேண்டுகிறது, உபமேயத்தினுடைய வைலக்ஷண்யம்; 'ஒப்ப' என்றது - ஸர்வதாஸாம்யமன்று; ஒருவகைக்கு ஒப்பாமித்தனை. (சேய் அரிக் கண் அழுநீர் துளும்ப) (க) * அஸிதேக்ஷணை கண்கிடாய், அஶ்ருப்ரவஹிக்கிறது: என் காரியந் தலைக்கட்டிற்று; இவள் காரியந் தலைக்கட்டுமத்தனை: பகவத்வ்யதிரேகத்தில் கண்ணுங் கண்ணீருமாயிருக்குமிதுவிறே, ஒரு ஆத்மாவுக்கு ஸ்வரூபம்; இத்தைக் காணுமதிறே, இவர்களுக்கு உத்தேஶ்யம்: இவ்விருப்பை இவனுங் காணப்பெற்றதில்லை, அசவிட்டுக் கேட்குமித்தனையிறே. (உ) "ந

---

அரு|| செழுமை-அழகாய், ஸாந்த்ரதையைநினைக்கிறது. கேவலம் 'கயல்மிளிர்ந்தாலொப்ப' என்னாதே, 'செழுநீர்த்தடம்' என்று விஶேஷிப்பானென்னென்ன, அருளிச்செய்கிறார்; (உபமானமே) இத்யாதி. 'சேயரிக்கண்'—சேய் என்று - அழகாய், அரி என்று - வண்டாய், அழகிதான வண்டுபோலேயிருக்கிற கண் என்றபடி; அன்றிக்கே, சிவந்த அரியையுடைத்தான கண் என்று உரையிலே வாதிகேஸரிநிர்வாஹம்; அன்றிக்கே, அரி என்றது - ஹரிக்கிற தென்றபடி; சிவந்து மநோஹாரியான கண் என்றுமாம்: பிந்தின இரண்டர்த்தத்தால் கருங்கண்ணியானவள் தவிர்ந்து விஶ்லேஷத்தாலே சிவந்திருக்கிறபடி. 'சேயரிக்கணழுநீர்துளும்ப' என்கிற அநுவாதத்து ஹார்த்த பாவம் - (என்காரியம்) இத்யாதி. (என்காரியந் தலைக்கட்டிற்று) என்றது - (௩) "ஸதா'த்ரஷ்டவ்யஸ்ஸதா-த்ரஷ்டவ்ய:" என்கிறபடியே இவளுடைய கண்ணுங் கண்ணீருமாயிருக்கிற இருப்புக் காணப்பெறுகை. இத்தைக்காணுமது அவள் காரியமோ என்ன, (பகவத்) இத்யாதி. 'அசவிட்டு' - தோழி சொல்ல என்றபடி. அப்படியே இவ்

---

(க) ஸ்ரீராமாயணம்-ஸு-௧௫-௫. (உ) ஸ்ரீராமாயணம்-ஸு-௩௩-௫.

(௩) ஸ்ரீவிஷ்ணுதத்வம்.

வ்யா||[illegible]-ஙிமர்த்தய்" இத்யாதி—ஆர்குடி கொப்பரிய இக்கண்ணுங் கண்ணீருமாயிருக்கிறது; ஆரைச் சேதநராகக்கொண்டு என்றுமாம். (அலமருகின்றன) தடுமாறுகின்றன. (வாழியரோ) இவ்வவஸாதம் நீங்கி ஜீவித்திடுக; (௧) "[illegible]-யாமேரக்ஷதிமிவா யுஷ்மத்". (முழு நீர் முகில் வண்ணன் கண்ணோ) திக்கடலைத் தவா யாகப் பருகின மேக மிருக்கபடி; (உ) "[illegible]-தாமஞ்ஜபோதிஸ் ஸலிலம்ருசாம ஸத்கிபாத:" என்று அன்னனுந் தன்னனுமாயிருக்கையன்றிக்கே, ஆகாராதேய மிரண்டுந் தானேயா யிருக்கை; கடலைப்பருகிற்றென்றால் புஷ்கலாவர்த்தகமென்று இருக்க வேண்டாவோ? கடலைக் கலக்கிற்றென்றால் மந்தரமென்று அறியு மாபோலே: இக்கிறத்வத இக்குமினை ஆக்கினுன், இக்கிறமுடையவ னிறே; இவ்வடிவழகைக் கொண்டு ஸர்ப்பயாகத்தில் ஸர்ப்பங்கள்வர விருக்குமாபோலே எல்லாரும் வரவிருக்கு மிதக்கனைபோ வென் னில்;—இவ்வடிவுடையானுந் தானேயாய், வருவானுந் தானேயாயிரு க்கிறபடி. (விண்ணாட்டவர் மூதுவர்) (௩) "[illegible]-யத்ர பூர்வே ஸாத்த்யாஸ் ஸந்தி தேவா:" என்றும், (௪) "[illegible]-யத்ர ருஷய: ப்ரதமஜா யே புராணா:" என்றும் பழையராயிருக்கிறவர்கள்; இவர்கள் ஸத்தாதாரகமாகத் தொழாநின் றவர்கள். (தொழுநீர்) (௫) "[illegible]-நம இத்யேவவா திந:" என்கிறபடியே தொழுகையே ஸ்வரூபமாயிருக்கும். (இணை

அரு||விருப்பு போக்யமாயிருக்குமோவென்ன, (கிமர்த்தம்) இத்யாதி. (ஆரைச் சேதநராகக்கொண்டு) என்றது-இக்கண்ணுங் கண்ணீருமாயிருக்கிற இருப்பை க்கண்டு ஈடுபடுகைக்கு ஆர் விஷயமென்றபடி. இத்தால் ஈஶ்வரன் கண்டால் உக்கு மென்றபடி. 'வாழியரோ' என்றதுக்கு, கண்ணுங் கண்ணீருமாயிருக் கிற இவ்விருப்பு நித்ய மாகவேணுமென்று மங்களாஶாஸநம் பண்ணுகிறா ளென்று அவதாரிகையிலே ஓர் அர்த்தம் அருளிச்செய்து, அர்த்தாந்தரம் அருளிச்செய்கிறார்; (இவ்வவஸாதம்) இத்யாதி. 'முழுநீர் முகில்வண்ணன்' என்கையாலே, மேகமென்றும், அதுக்குள்ளே ஜலமென்றும் இரண்டு இன்றி க்கே ஜலமாயிருக்குமென்று அருளிச்செய்கிறார்; (தாமஞ்ஜபோதி:) என்று முழுநீரான முகில்வண்ணனென்றபடி. தாத்பர்யங்கள் - (கடலை) இத்யாதி. (தொழுநீ ரிணையடிக்கே) என்றது - நீர் என்று, ஸ்வபாவமாய், நித்யஸூரிக ளாலே தொழப்படுகைக்கே ஸ்வபாவமாயிருக்கிற இணையடியென்றபடி. 'முழு

(௧) ஸ்ரீராமாயணம்-ஆரண்-௬௭-௧௫. (௪) யஜுர்வேதம்- அச்சித்ரம்-௬-௭-௧.
(உ) மேகஸந்தேஶம்-௧-௫. (௫) பாரதம்-மௌஸலபர்வம்-௧௩௪-௪௦.
(௩) புருஷஸூக்தம்-௯-௭-௨௨.

வ்யா||(அடிக்கே) ஒன்றுக்கொன்று ஒப்பான திருவடிகள்: ஓரவயவம் நன்றாயிருக்குமவன் நமக்கு அவ்வருகில்லையென்றிருக்கும்; ஒருவனு க்கு பவ்யனாயிருக்குமவன், நமக்கு அவ்வருகு நீர்மையுடையாரில்லை யென்றிருக்கும்; ஒருவனுக்கு நிர்வாஹகனாயிருக்குமவன், நமக்கு அவ்வருகு நிர்வாஹகரில்லை யென்றிருக்கும்; இவைமூன்றுங் கண் ணழிவற உண்டான பசுங்கூட்டிறே பாரதத்வமாகிறது; இதுக்கிறே, இவள் ஈடுபட்டது. (அடிக்கே அன்பு சூட்டிய) குணஜ்ஞராய் விழு வது காலிலேயிறே; 'சூட்டிய' என்பானென்னென்னில்; (௧) "வாச கஞ்செய் மாலையே" என்னுமாபோலே. (சூழ் குழற்கே) சூழ்ச் சியையுடைய குழல்; கண்டாரைச் சூழ்த்துக்கொள்ளுங் குழல்: சுரு ண்ட குழல் என்றுமாம்.

[சூழ்குழற்கு வாழியரோ என்று அந்வயம்.]

இப்பாட்டுக்கு ஸ்வாபதேசம்.--ப்ரதம தர்ஸநத்திலே ப்ரக்ருதி ப்ராக்ருதங்களில் உபேக்ஷைபிறக்கும்படி தமக்கு பகவத்விஷயத்திற் பிறந்த ப்ராவண்யத்தைக் கண்டார் உகந்து பேசுகிறபடியைத் தாம் அநுஸந்தித்து இனியராகிறார்.

---

அரு||நீர் முகில்...கண்ணன்விண்ணாட்டவர் மூதுவராந் தொழுநீரிணை யடிக்கே' என்ற...த்ரயத்தையுங் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார்; (ஓரவயவம் நன்றாயிருக்குமவன்) என்று. அவதாரண தாத்பர்யம்- (குணஜ்ஞர்) இத்யாதி; ஸௌலப்யாதி குணங்களைச் சொல்லுகிறது. 'வாசகஞ்செய் மாலை' என்னுமா போலே, இவருடைய அன்பு மாலையாயிருக்கிற தென்றபடி. (சூழ்ச்சியை யுடைய குழல்) என்றத்தை விவரிக்கிறார்; (சுருண்ட குழலென்றுமாம்)என்று.

[அலமருகின்றன: மூழுநீர்தொடங்கி சூழ்குழற்கு வாழியரோ என்று அந்வயம்; அதவா, மூழுநீர் என்றதொடங்கி சூழ்குழற்கு செழுநீரென்று தொடங்கி வாழியரோ என்று அந்வயமாதல்.] (உ)

[அப்பு அரும்பதம்.]

இரண்டாம்பாட்டு.—'இனிமை-' தரிக்கை. தரிக்கையும், தரியாமையும், ஸம்பந்தமுஞ் சொன்னது-அநந்யஸரணத்வம், அநந்யபோக்யத்வம், ததேகநிர் வாஹ்யத்வமாகிறமூன்றுக்கும் உபலக்ஷணம்; இத்தால்,பிராட்டியோடேஸாம் யஷட்கமுஞ்சொன்னபடி.'எல்லார்படியும் உண்டாகக்கூடுமோ, உண்டானால் ப்ராவண்யம்மட்டாகாதோ'என்று ஸங்காபிப்ராயம். (விஷயம் அபரிச்சிந்நம்) என்றது-விஷயாநுகுணமான ப்ராவண்யமும் அபரிச்சிந்நமாகையாலே,எல்லா ங்கூடுமென்றபடி.இப்படி ஆண்பெண்ணாய் த்வரிக்கைக்கு அடி என்னென்ன,

---

(௧) திருவாய்மொழி- ௪-௨-௨.

அருளிச்செய்கிறார்; (இவர்க்கு இங்கு) இத்யாதி: 'பொய்ந்நின்றஞானம்' என்று இங்குள்ள அஜ்ஞாநிகளைக் காண்கையாலே, எதிர்த்தட்டான ஜ்ஞாநிகளாருடைய ஜ்ஞாநாதிகளையுங் கண்டாரென்றபடி. அத்யர்த்தம் த்வரிக்கிறவர்க்கு ப்ராப்தி பண்ணிக்கொடாமலிருப்பா னென்னென்ன, அருளிச்செய்கிறார் (ஈஶ்வரன்) இத்யாதி. 'கார்யஞ்செய்யும்' - தங்கள் ப்ரயோஜநங் கொள்ளுமளவும். 'முடியைத்தவிர்த்துக் கொடுக்கையாலே' - அவன் வேண்டாவென்ற முடியைத்தவிர்த்துத்தாம் முடிசூட்டுகையாலே. தமிழர் சொல்லுகிற ந்யாயத்தாலே அந்யாபதேசங் காட்டுகிறார்; (நாயகியும்) இத்யாதி. இதுக்கு ஸ்வாபதேசம் - (க) * திருவிண்ணகர்ச் சேர்ந்தபிரான் பெய்த காவான ஸம்ஸாரத்திலே (உ) * வீட்டைப் பண்ணி விளையாடும் விமலனான ஸர்வேஶ்வரன் யாத்ருச்சிகாதிகளாலே அவகாஶம்பெற்று இச்சேதநனைக் கடாக்ஷிக்க, ஸத்வோத்தரனாய் ஜ்ஞாநம்பிறந்து திருவடிகளிலே கைங்கர்யம் பண்ணப்பாரித்து அலமாந்திருக்கை 'செழுநீர்' என்று விஶேஷிக்கவேண்டுவா னென்னென்ன, அருளிச்செய்கிறார்; (உபமாநமேபிடித்து) இத்யாதி. 'செழுமை' - அழகாய், ஜலத்துக்கு அழகு - தெளிவு. 'சேயரிக்கண்' - சேய் என்று - அழகாய், அழகிய வண்டுபோலேயிருக்கிற கண் என்னுதல்; சேய் என்று - சிவப்பாய், தாமரைப்பூவிலே வண்டிருக்குமாபோலே யிருக்கிற கண் என்னுதல்; புஷ்பத்தை, ஹ[ஸ்]ரிப்பிக்கிற - தோற்பிக்கிற. கண் என்னுதல். இவள் கண்ணழகு கண்டு அவன்கண் அஶ்ருப்ரவஹிக்கவேண்டியிருக்க, இவள்கண் ப்ரவஹிப்பதே! என்று தாத்பர்யம் 'என் காரியம்' - இவள் கண்ணநீரோடேயிருக்கிற அழகை அநுபவிக்கை. 'அசவிட்டுக்கேட்கை' - (ங) "மதுராமதுராலாபா கிமாஹ. மதுராமதுராலாபா கிமாஹ" என்று பெருமாள் திருவடிவாயாலேகேட்டது. நாயகன்காணப்பெற்றதில்லை யென்றவிடமுண்டோவென்ன, அருளிச்செய்கிறார்; (கிமர்த்தம்) இத்யாதி: 'தவநேத்ராப்யாம் ஶோகஜம் வாரிஸ்ரவதி; கிமர்த்தம்' என்று அந்வயித்து, அருளிச்செய்கிறார்; (ஆர்குடி) இத்யாதி: 'புண்டரீகபலாஶாப்யாம் விப்ரகீர்ண முதகமிவ வாரி ஸ்ரவதி; கிமர்த்தம்' என்று இங்ஙனே கூட்டி, அருளிச்செய்கிறார்; (ஆரைச் சேதநராக) இத்யாதி. இவ்வழகு காண்கைக்குச் சேதநரான பெருமாளாகவேண்டாவோ வென்றபடி. இப்படி கண்டவுடனே மங்களாஶாஸநம் பண்ணினபேருண்டோ வென்ன, அருளிச்செய்கிறார்; (யாமோஷதிம்) இத்யாதி. கீழே தடாக த்ருஷ்டாந்தஞ் சொல்லுகையாலே, இவளை "கடல்" என்கிறது. 'முழுநீர்' - முழுதும் நீர்; என்கையாலே, அன்னலுந் துன்னலுமான மேகத்தை வ்யாவர்த்திக்கிறது. 'அன்னலுந் துன்னலும்' - கண்டதுங் கடியதும். இவளை ஈடுபடுத்தினவன் ஈஶ்வரனென்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன, அருளிச்செய்கிறார்; (கடலைப்பருகிற்று) இத்யாதி. 'கண்ணன்' என்ற ஸௌலப்யத்தைப்பற்ற, அருளிச்செய்

(க) திருவாய்மொழி - ௯ - ௩. (உ) நாய்ச்சியார் திருமொழி. ௧௭ ௧.

(ங) ஸ்ரீராமாயணம் - ஸு - ௩௬ - ௨௨

கிறார்; 'இவ்வடிவழகை' இத்யாதி. 'தொழுநீரிணையடி'-இவர்கள் தொழுகை யே ஸ்வபாவமாகவுடைய திருவடிகள். 'முகில்வண்ணன் கண்ணன் விண் ணாட்டவர்தொழு நீ ரிணையடி' என்கிற விசேஷணங்களுக்கு ப்ரயோஜந மேதென்ன, அருளிச்செய்கிறார், (ஓரவயவம்) இத்யாதி. 'பசுங்கூட்டு' - சந் தந கர்ப்பூர குங்கும கூடினவை. நாயகியானவள் காலிலே விழக்கூடுமோ வென்ன, அருளிச்செய்கிறார் (குணஜ்ஞர்) இத்யாதி. 'அன்பைப் பண்ணிய' என்னாமல் 'சூட்டிய' என்பானென்னென்னில் என்றபடி; வாசகம் மாலையா னாற்போலே, அன்பு மாலையானபடி. (உ)

[வேறொரு அரும்பதம்.]

இரண்டாம்பாட்டு.—கீழ்ப்பாட்டிலே சாமானதன்மையிலே'விண்ணப்பம்-'கேட்டருளாய்'என்ற ஆழ்வார்,மேற்பாட்டுக்களிலே பெண்பேச்சாகவுந் தோ ழிபேச்சாகவுந் தாய்பேச்சாகவும் பாடினதுக்கு ஹேது என்னென்ன, அருளிச் செய்கிறார் (இமையோர்) இத்யாதி. "குழற்கோவலர்" என்கிற பாட்டிலே பிராட்டிகளைச்சொல்லியிருக்கையாலே, தத்ஸாரூப்யம் வேணுமென்றுபாவனை பிறந்தத்தைப் பற்ற ஶங்கித்து பரிஹரிக்கிறார்;(அங்ஙனேயாகில்)இத்யாதி.'இ னிமை'.தரிப்பு,'ஸம்பந்தம்' ஆகர்யார்ஹ ஶேஷத்வம்; அநந்யஶரணத்வ அநந் யபோக்யத்வ தீதகிர்வாஹ்யத்வங்களுக்கும் உபலக்ஷணம்.'ஆனால்' தோழி யாயுந்தாயாயும் பெண்ணாயும் பலநிலத்தும் பேசக்கூடுமோ? கூடினால் ப்ராவ ண்யம் மட்டாகாதோ' என்கிற ஶங்கையை அநுவதித்துப்பரிஹரிக்கிறார் (தோ ழிதசையும்) இத்யாதி. (விஷயம் அபரிச்சிந்நம்) என்றது - விஷயாநுகுண மான ப்ராவண்யம் அபரிச்சிந்நமாகையாலே; எல்லாங் கூடுமென்றபடி. இப்படி ப்ராவண்யம் அபரிச்சிந்நமாக வரக் காரண மென்னென்ன, அருளிச் செய்கிறார்; ( இவர்க்கு ) இத்யாதி. அவர் ஆறியிருந்தால் இவர் த்வரிப்பா னென்னென்ன, (இவர்க்கு) இத்யாதி. இப்படி இவரைத் துடிக்கவிட்டு நாட் டார்க்கு உபகாரஞ்செய்ய ஆறியிருக்கலாமோஎன்ன, (ஈஶ்வரன்) இத்யாதி. 'கார்யத்தளவு' - கார்யத்துக்குள்ள ளாகவும். இத்தால் கைகேயி அபேக்ஷிதம் அல்பகால ஸாத்யமாய் பரதாழ்வான் கார்யம் சிரவதிகமா யிருக்கையும், மஹாராஜர்கார்யம் அல்ப ப்ரயத்ந ஸாத்யமாய்ப் பிராட்டிக்கு பஹுக்ருதி ஸாத்யமாகையு மானாற்போலே, ஸம்ஸாரிகளுக்கு உஜ்ஜீவநம் இவன் வாங் மாத்ரஸாத்யமாய் இவரபேக்ஷிதம் யாவதாத்மபாவியாக நடத்தவேண்டுகை யாலே முற்கூற லகுகார்யஞ்செய்யு மென்றபடி. ஆனால் அப்போது இவர்க ளுக்கும் அபேக்ஷிதம் ஸாதாரம் செய்யானோ, என்று ஶங்கித்து பரிஹரிக்கி றார் (ஆனையாலே) இத்யாதி. பரகாப்ரதாநத்வாரா பாரதந்த்ர்யத்தை நிறு த்துகையாலும், தூதப்ரேஷணாதி முகத்தாலே பிராட்டியைத் தரிப்பிக்கையா லும், ஆழ்வாரைக்கொண்டு வாசிகமான அடிமை கொண்டருளுகையாலும், இவரபேக்ஷிதம் யதோசிதம் தலைக்கட்டுவ னென்றதாயிற்று. ஆக இப்படி பெண்ணுடையுடுத்த இவர்க்கு இந்த இரண்டாம்பாட்டிற் சொல்லுகிறப்ரகார

மேதென்ன, (நாயகியும்) இத்யாதி. (ஒருவ்யாஜத்தாலே) என்றது - வேட்கை யென்கிற வ்யாஜத்தினாலே யென்கை. சேய் என்று - அழகாய் - அளி என்று - வண்டாய், அழகிய, வண்டுபோலே யிருக்கிற கண் என்னுதல்; சேய் என்று - சிவப்பாய், சிவந்த தாமரைப்பூவிலிருக்கும் வண்டு போன்ற கண் என்னுதல்; என்று சப்தார்த்தமாய், கூடிபாடுதோற்ற. பாவம் - (அவிழ) இத்யாதி. இவள் கண்ணைக்கண்டு அவன்கண் நீர் ப்ரவஹிக்க வேண்டியிருக்க, இவள்கண் நீர் ப்ரவஹிப்பதே! என்று தாத்பர்யம். தாத்பர்யாந்தரம் - (என்கார்யம்) இத்யாதி: இவள் இப்படி ப்ரவணையாய்க் கண்ணுங்கண்ணீருமாயிருக்கப்பெறுகை, ஸ்வாபதேசத்தை அருளிச்செய்கிறார்; (பகவத்) இத்யாதி. 'அசலிட்டுக் கேட்கை' - திருவடிவாயாலே பிராட்டிவ்யஸநம் கேட்டாற்போலே தான் தோழிவாயாற் சொல்லக்கேட்கை. நாயகன் காணப்பெற்றதில்லையென்ற இடமுண்டோ வென்ன, அருளிச்செய்கிறார்; (நிமர்த்தம்) இத்யாதி. "நிமர்த்தத்தவநேத்ராப்யாம் வாரிஸ்ரவதிசோகஜம் - புண்டரீக பலாசாப்யாம் விப்ரகீர்ணமிவோதகம்" என்றதிலே 'சோகஜம்' என்றதன் தாத்பர்யம் - (ஆர்குடி) இத்யாதி: பிரிந்த ராவணன், குடிகெட்டுப்போகிறானென்று கருத்து. 'புண்டரீக பலாசாப்யாம்' என்று த்ருஷ்டாந்தத்தால் பலிதார்த்தம் - (ஆரை) இத்யாதி. (ஆரைச் சேதநராக) என்றது - ஆர் இவ்வழகை அறிவாராக எண்ணி என்றபடி. இவ்வழகைக் காண்கிறாராரோ என்று அழுகிறீரென்று கருத்து; இதுவே இவ்விடத்துக்கு வேண்டுவது. இப்படி அவஸாதங் கண்டவுடனே மக்களோபலாஸநம் பண்ணுவாருண்டோ என்ன, (யாம்) இத்யாதி. 'இக்கடலே' - காம்பீர்ய முடைய இவரை. 'முகில்வண்ணன்' என்ன அமைந்திருக்க முழுதும் நீரான முகிலென்று விசேஷித்ததுக்கு பாவம். (தூம) இத்யாதி. (அன்னமும் துன்னாலும்) என்றது - கண்டதுங் கடியதுமான தூமாதிகள். கூடினவனை அறியாதிருக்க 'முகில்வண்ணன்,' என்னக்கூடுமோ வென்ன, (கடலைப் பருகிற்று) இத்யாதி. 'கண்ணன்' என்றபதத்துக்கு ப்ரஸ்ந ப்ரதிவசந ரூபேண பாவம் - (இவ்வடிவழகை) இத்யாதி 'முகில்வண்ணன்' என்றதுக்கும், 'கண்ணன்' என்றதுக்கும், விண்ணாட்டவர் தொழுநீரிணையடி' என்றதுக்கும் தாத்பர்யங்களை அருளிச்செய்கிறார் (ஒரவயவம்) இத்யாதி. நாயகி அடியைப்பற்றலாமோ என்ன, (குணஜிதா) இத்யாதி. விவரணம் - (கண்டாரை) இத்யாதி. உ.

தா.—ஸர்வேஸ்வரனுடைய நித்யவிபூதி வைபவத்தை யநுஸந்தித்து ஆழ்வார் அப்பொழுதே அவ்விபூதியை யடைந்து அங்குள்ள ஸர்வேஸ்வரனை அநுபவிக்க விரும்பினார். அவ்விருப்பம் அப்பொழுதே தலைக்கட்டாமையாலே அத்யந்த மார்த்தராய்த் தன்னுடைய ஸ்வபாவத்தைமறந்து தன்னைப்பிராட்டியாகப் பாவித்துக் கொண்டிருக்கையில், அங்குள்ளபாகவதர்கள் இவரைச்சில பாசுரங்களாலே ஆஸ்வஸிப்பித்தார்கள், அப்போதந்தபாகவதர்களை பிராட்டியவஸ்தையை அடைந்த தமக்குத் தோழிமாராகவும், அவர்கள் சொல்

லும் பாசுரத்தை, நாயகனோடு ஸம்ச்லேஷித்துப்பிரிந்து விரஹவேதனையநுபவிக்கிறதனக்கு ஆச்வாஸகரமாகத் தோழிமார்சொல்லும் பாசுரமாகவும் அநுஸந்தித் தருளிச்செய்கிறார்.

நீர்கொண்டமேகம்போல் அதிஸுந்தரமான ஸர்வேச்வரனுடைய வடிவழகை ஸ்ரீவைகுண்டத்தில் நித்யஸூரிகளெல்லாருமாச்ரயித்து அநுபவிக்கிறாற்போல், இவள்தானும் அநுபவிக்க ஆசைப்பட்டு அது கிடைக்கப்பெற்றிலளாய் வ்யஸநமுற்று தன்னுடைய மத்ஸ்யம்போன்ற கண்களில் நின்றும் கண்ணீரை தாரைதாரையாக பெருக்கிக்கொண்டு தன்னுடைய நாயகன் எந்தத்திக்கில் நின்றும் வருவனோவென்று நாலுபக்கங்களிலும் கண்களைச்சுழற்றி விழித்துப்பார்த்துக்கொண்டிருக்கிறாள்; பூர்ணதடாகத்தில் துள்ளுகிற இரண்டுமத்ஸ்யம் போன்ற இவள் கண்ணழகை யநுபவிக்க இப்போது இவள் கணவனுக்குப்ராப்தியில்லையே! இனிசீக்ரத்தில் நாயகனுடன் சேர்ந்து இவள் இவ்வவஸ்தையைத்தவிர்த்து ஸுகிக்கக்கடவாள். ௨.

---

குழற்கோவலர் மடப்பாவையு மண்மகளுந், திருவு [ழா
நிழற்போல்வனர்கண்டு நிற்குங்கொல்மீளுங்கொல், தண்ணந்து
யழற்போலடுஞ்சக்கரத்தண்ணல் விண்ணோர்தொழக்கடவுந்
தழற்போல்சினத்த, அப்புள்ளின்பின்போன தனிநெஞ்சமே. ௩.

அர்.—தண்-குளிர்ந்தும், அம்-அழகியதுமான, துழாய்-திருத்துழாயினுடைய, அழல்போல் - உஷ்ணம்போலே, அடும்-பீடிக்கிற, சக்கரம், ஸுதர்சநத்தையுடைய, அண்ணல்-ஸ்வாமியான ஸர்வேச்வரனாலே, விண்ணோர்-நித்யஸூரிகள், தொழ - ஆச்ரயிக்கும்படி, கடவும் - நடத்தப்படுமவனாய், தழல்போல் - நெருப்புப்போன்ற, சினத்த - கோபத்தையுடையவனான, அப்புள்ளின் - அந்த கருத்மானுடைய, பின் - பின்னே, போன - தொடர்ந்த, தனி-ஸஹாயமில்லாத, நெஞ்சம் - மனஸ்ஸு, குழல் - மயிர்முடியையுடையளாய், கோவலர் - இடைக்குலத்திலவதரித்தவளாய், மடம்-பவ்யையுமான, பாவையும் - நப்பின்னைப்பிராட்டியும், மண்மகளும் - ஸ்ரீபூமிப்பிராட்டியும், திருவும்-பெரியபிராட்டியும் (ஆகிய), நிழல்போல்வனர் - (ஆச்ரிதர்க்கு) நிழல்போலே (ப்ரமஹரமாய்) இருக்கிற, இவர்களை, கண்டு-ஸேவித்து, நிற்குங்கொல்-அங்கேநின்றுவிடுமோ? மீளுங்கொள் - திரும்பிவருமோ?. ௩.

[அப்பிள்ளை உரை.]

அ.—மூன்றாம்பாட்டு.—தோழி இக்கலவியை அறிவிக்க, அவளைக்குறித்து, ‘அவன் பக்கற்போன நெஞ்சு, மீண்டுவருமோ? அங்கே நிற்குமோ’ என்கிறாள்.

உரை.—(குழற் கோவலர் மடப்பாவையும்) குழலையுடையளாய், கோவலருடைய மடப்பத்தையுடைய பெண்பிள்ளையாய், எம்பெருமானுக்கு அதி

வ்யா|| குற்றத்தைப் பொறுப்பிக்கும், பிராட்டி; 'குற்றங் காண்பா னென்? பொறுப்பானென்' என்றிருக்கும், ஸ்ரீபூமிப்பிராட்டி; நப்பின் னைப்பிராட்டி, அநுமைதான் ஒருவடிவாயிருக்கும். பெரியபிராட்டியார், இவனுக்கு ஸம்பத்தாயிருக்கும்; அதுவிளையும் தரை; அதனை அநு பவிக்கும் போக்தாவாயிருக்கும், நப்பின்னை. (நிழற்போல்வனர்) இவர்கள் மூவரும் அவனுக்கு நிழற்போலே யிருப்பர்கள்; ஒருவர்க் கொருவர் நிழற்போலே யிருப்பர்களென்றுமாம்; ஆஶ்ரயித்தார்க்கு நிழலாயிருப்பர்கள். (கண்டு நிற்குங்கொல் மீளுங்கொல்) இப்ப டிகளைக் கண்டு இதுவே பற்றாசாக தரித்து நிற்குமோ! இம்மேன் மையைக் கண்டு கடலில் துரும்புபோலே எழவீசுமோ? (தண் அந் துழாய் அழற்போல் அடுஞ் சக்கரத்து அண்ணல்) குளிர்ந்து பரிம ளத்தை யுடைத்தான திருத்துழாயழற்போலே முடியாநின்றுள்ள திருவாழியை யுடைய ஸர்வேஶ்வரன்: உபமாநஞ் சொல்லும்போ தும் அவ்வருகிட்டுச் சொல்லும்படி பகவத்விஷயத்தை அவகாஹித்த படி; அநுகூல ப்ரதிகூல விபாகமில்லை, திருவாழிக்கு: அநுகூலர்க் கேயாயிருக்கும், திருத்துழாய். (அண்ணல்) திருவாழி பிடிக்கும் போது போராதபடி பிடிக்கும் இச்செயலாலே என்னை எழுதிக்கொண் டவன். (தழற்போல்சினத்த) அஸ்த்ராநே பயஶங்கிதனுய்க்கொண்டு

அரு||கிறார்; (ஆஶ்ரிதர் குற்றத்தைப் பொறுப்பிக்கும்) என்று. பரத்வத்துக்கு உட லான ஆகாரத்தைஅருளிச்செய்கிறார்; (பெரியபிராட்டியார்இவனுக்குஸம்பத்தா யிருக்கும்) என்று. திருத்துழாயினுடைய லக்ஷணம்போலே பாதக(பாதக)யாநிற்கிற திருவாழியென்றுஸப்தார்த்தம். (அவ்வருகிட்டு) என்றது-பகவத்ஸம்பந்தமுள்ள தொன்றையிட்டுஎன்றபடி: விரஹத்தில் திருத்துழாய் பாதகமாகையாலே அத் தை த்ருஷ்டாந்தமாக்கி அருளிச்செய்கிறாரென்றபடி. அக்நிபோலேபாதியாநி ற்கிற திருவாழியென்கிறதென்னென்ன, அருளிச்செய்கிறார்; (உபமாநஞ் சொல் லும்போதும்) என்று: இத்தால், பகவத்விஷயமொழிய வேறொன்று அறியாரெ ன்றபடி. திருவாழி ஆயுதமுமாய், அழகுக்கு உடலாயிருக்கையாலே, அநுகூலப் ரதிகூல விபாகமறபாதக(பாதக)மாயிருக்கும்; திருத்துழாய் ஆயுதகோடியல்லா மையாலே அநுகூலர்க்கே பாதக(பாதக)மாயிருக்குமென்றபடி. 'தண்ணந்துழா யழற்போலடுஞ்சக்கரம்' என்றதுக்கு இரண்டு பொருள். — அதாவது-தண்ண ந்துழா யழற்போலே நம்மை அடுகிற சக்கர மென்னுதல்; ஆஶ்ரிதரையே முடி க்குமதானதண்ணந்துழாயழற்போலே ஆஶ்ரிதாநாஶ்ரிதவிபாகமற முடிக்குந் திருவாழியென்னுதல். இரண்டாம் அர்த்தம்- (அநுகூல) இத்யாதி; இரண்டா மர்த்த மென்கிறது, ஸ்வரஸம்: தண்ணந்துழாயழலை த்ருஷ்டாந்திகரிக்கை யாலே, பாதகத்வத்தில் உறைப்பைச் சொல்லுகிறதென்கையே ஸ்வரஸம்.

வ்யா||சதகதவென்னுகிற்கும். (விண்ணோர்தொழக்கடவும்) நித்யஸூரிகள் தொழும்படி பெரியதிருவடியை நடத்துகிற: அவர்கள், தொழுது உளராவர்கள்; அவர்களைத் தொழுவிசருக்கொண்டு உளனும் அவன். (அப் புள்ளின் பின்போன) தன்னிழவுபாராதே அத்தலைக்குப் பரிவாருண்டென்று கொண்டாடுகிருள்; அவனிலும் அவனுக்குப் பரிந்த புள்ளின் பின்னே தன்நெஞ்சு போனபடி. (க) ["கெண்டையொண்கணும்" இத்யாதி-] உறங்காத கண்களும் உறங்கும்; என்நிறம், கலப்பதுக்கு முன்புத்தை நிறம்போலேயாம்: ["மிக்கசீர்' இத்யாதி -] அநந்ய ப்ரயோஜநரிட்ட அழகிய திருத்துழாயின் பரிமளத்தை வண்டு கொண்டுவந்து ஊதுமாகில்; அநந்யப்ரயோஜந ரென்பானென் னென்னில்;—அத்தலைக்குப்பரிவாருண்டென்று தான் தேறுகைக்காக; பரிமளத்தின்வாசி, அல்லாதாரிடுமதிற்காட்டில் அறிகையாலே (தனி நெஞ்சம்) ஸ்வதந்த்ரமான நெஞ்சு; 'வேண்டா' என்றால் மீளமாட்டாத நெஞ்சு.

ஸ்வா,—பிராட்டிமாரையும் நித்யஸூரிகளையுஞ் சொல்லுகையாலே, ஸர்வஸ்மாத்பரனாய் ஸ்ரீவைகுண்டநாதனாயிருக்கிற இருப்பிலே தமக்கு பாவபந்தம் பிறந்ததென்னுமிடஞ் சொல்லிற்று.

---

அரு|| 'அநுகூலர்க்கேயாயிருக்கும்.' பாதகமாயிருக்கும். (விண்ணோர் தொழக்கடவும்) என்றது-நித்யஸூரிகள் தொழும்படி நடத்தப்படுகிற. 'தழல்போலே சினத்த அப்புள்' என்கையாலே, அவனுடைய மங்களாஸாஸநபரத்வந் தோற்றுகிறது. இந்த ஆழ்வார்கள் அத்தலைக்குப்பரிவாருண்டென்று உகப்பர்களோவென்ன, அருளிச்செய்கிறார் (கெண்டையொண்கணும்) இத்யாதி. இதக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (உறங்காத கண்களும்) என்று. 'மிக்கசீர்த்தொண்டர்' என்றபதம் இக்கருத்தைக்கு வேண்டுவது. அநந்யப்ரயோஜநரிட்டதறியும்படி யென்னென்ன, அருளிச்செய்கிறார்; (பரிமளத்தின் வாசி) என்று. சேர்த்திக்குத் தாத்பர்யம்-(திருத்துழாய்) இத்யாதி என்னவுமாம். (௩)

[அப்பு அரும்பதம்.]

மூன்றும்பாட்டு.—'ஒளித்தாள்'-லஜ்ஜையாலே ஒளித்துத்தோழிசொல்லக் கேட்டாளென்றபடி, 'குழல்'-இடையர்க்காதல், நப்பின்னைக்கு விஸேஷணமாதல். பிராட்டிமாரோட்டைச்சேர்த்தி நீர்மைக்கும் மேன்மைக்கும் உடலாகையாலே, இவற்றை வாக்யத்வயத்தாலே அருளிச்செய்கிறார்; (ஆஸ்ரிதர் குற்றத்தை) இத்யாதி. விரஹதஸையாகையாலே, திருத்துழாயை 'அழல்'என்கிறது. 'அழற்போல்' என்னுமல், 'தண்ணந்துழா யழற்போல், என்று விஸேஷிப்பானென்னென்ன, அருளிச்செய்கிறார்; (உபமாநம்) இத்யாதி: திருத்துழாய்சுடுகிற ப்ரகாரம்லௌகிகாக்நியிலுங் கொடிதாகையாலே, இவ்வருகுள்ளவற்றைச் சொல்லு

கையன்றிக்கே,'அவ்வருகிட்டு'-அவன்ஸம்பந்தமுடைய திருத்துழாயையிட்டுச்
சொல்லுகிறதென்றபடி. 'அவகாஹித்தபடி' - அவன்ஸம்பந்தமுள்ளதும், வி
ஶ்லேஷதசையாயிற் சுடும்படியாயிற்றென்றபடி. திருவாழியாழ்வான் சுடுவது
ப்ரதிகூலர்க்கன்றோவென்ன; (அநுகூல) இத்யாதி: அநுகூலர்க்கு ஆபரண
மாகத் தோற்றி, பாதக (ஸாதக) மாம்; திருத்துழாயும் அப்படியோ வென்ன,
அருளிச்செய்கிறார்; (அநுகூலர்க்கு) இத்யாதி. கதகதவென்று அக்நிகல்பனான
புள்ளை விண்ணோர் கிட்டித் தொழும்படி குளிரப்பண்ணி நடத்துமென்று
தாத்பர்யம். இப்படி நடத்தவேண்டுவானென்னென்ன, அருளிச்செய்கிறார்;
(அவர்கள் தொழுது) இத்யாதி. புள்ளின்பின்னே போவானென்னென்ன
அருளிச்செய்கிறார்; (அவனிலும்) இத்யாதி. தன்னிழவுபாராதே பரிந்தபேரு
ண்டோவென்ன, அருளிச்செய்கிறார்; (கெண்டையொண்கணும்) இத்யாதி.
பிரிந்திருக்கிறவளுக்கு அநந்யப்ரயோஜநரிட்டது தெரிகிறபடி எப்படியென்ன
அருளிச்செய்கிறார்; (பரிமளத்தின்) இத்யாதி.

[வேறொரு அரும்பதம்.]

மூன்றாம்பாட்டு.—கீழ்ப்பாட்டிலே, தோழி அறியாதபடி தன்ப்ராவண்ய
த்தை அடக்கிக்கண்ணீர் விழவிட, அவ்வழியாலே அவள் அறிந்து "முழுநீர் மு
கில்வண்ணன் கண்ணன்" என்று அவனுடைய பரத்வஸௌலப்யங்களுக்கு வா
சகமானவற்றைச்சொல்லி மங்களாஶாஸநம்பண்ண, அத்தாலேப்ராவண்யம் வி
ஞ்சி அவளோடே தான் நெஞ்சுபறியுண்டத்தைச்சொல்லுகிறாளென்று ஸங்கதி
யை அருளிச்செய்கிறார்; (கீழில்) இத்யாதி. கண்ணனுடைய திருக்குழலிலே தான்
ஈடுபட்டிருக்கையாலே அது தோற்றக் கோவலரை விஶேஷித்தாளென்று,
ஒருதாத்பர்யம் அருளிச்செய்து, தன்னை "சூழ்குழற்கே" என்னக்கேட்டவ
ளாகையாலே தன்னைப்போலே யிருந்தவளென்று நப்பின்னைக்கு விஶேஷண
மாக்கி அர்த்தாந்தரம் அருளிச்செய்கிறார்; (அன்றிக்கே) இத்யாதி. ஸ்ரீபூமிநீ
ளைகளென்கிற க்ரமத்தை விட்டு வ்யுத்க்ரமமாகச் சொன்னதுக்கு ப்ரயோஜந
த்தையும், இவர்களைத் தான் இப்போது சொன்னதுக்கு 'நெஞ்சு நிற்குங்
கொல் மீளுங்கொல்' என்கிற கோடித்வயத்துக்கு முடலாக, ஸர்வேஶ்வரனு
டைய நீர்மைக்கும் மேன்மைக்கும் உறுப்பாகவேணுமென்னுமிடந் தோன்ற,
பிராட்டிமார்ஸ்வபாவங்களை அருளிச்செய்கிறார்; (ஆஶ்ரிதர்) இத்யாதிவாக்ய
ஷட்கத்தாலே ஸ்ரீபூமிப்பிராட்டி, க்ஷமைதான் ஒருவடிவாயிருக்கும்; நப்பின்
னைப்பிராட்டி,'குற்றங் காண்பானென்? பொறுப்பானென்? என்றிருக்குமென்று
வாக்யத்தை அந்வயித்துக்கொள்வது. ஆக, போக([illegible])படலங்களாலே மறை
ப்பிக்குமவளொன்றும். அநுபவிப்பிக்குமவளொன்றும் உண்டான ஏற்றத்தாலே
இப்படியும் ஒருக்ரமத்தை அநுஸந்தித்தாரென்றதாயிற்று. நெஞ்சு மீளுகை
க்கு உடலான மேன்மைக்கு அநுகுணமான தாத்பர்யம் அருளிச்செய்து, நீர்
மைக்கு உறுப்பாக இரண்டு தாத்பர்யம் அருளிச்செய்கிறார்; (ஒருவர்க்கு)
இத்யாதி வாக்யத்வயத்தாலே, அவர்கள் ஸாபத்ந்யங் கொண்டாடாதே யிருக்

கையைக் கண்டு, நமக்கும் இப்படி யிருக்கலாமென்று, நெஞ்சு நிற்குமென்று கருத்து. திருத்துழாயின் அழகு த்ருஷ்டாந்தமாகச் சொல்லுவானென்னென்ன (உபமானம்) இத்யாதி. விரஹதசையில் தண்ணந்துழாய் சூடுமது கொடிதா கையாலே, இவ்வருகுள்ள லௌகிகாக்யாதிகளை விட்டு, பகவத்விஷயத்தி லுள்ளத்தையிட்டுச் சொல்லும்படி, அநுபவம் நடக்கிறதென்று கருத்து. திருத்துழாயை த்ருஷ்டாந்தமாகச் சொல்லும்படி திருவாழியிலும் இதுக்கு ஏற்றமென்னென்ன, அருளிச்செய்கிறார்: (அநுகூல) இத்யாதி வாக்யத்வயத்தாலே. ஆயுத கோடியிலும் ஆபரணகோடியிலுமா யிருக்குமதுபோலன்றியே, கேவலம் அழகுக்கே உடலாய் நெஞ்சைப்பறிப்பது இதுவே யாகையாலே, இது வேறுயிருக்குமென்று கருத்து. ப்ரதிபக்ஷத்தின்மேலே கநகதவென்று அக்கி போலே ஜ்வலித்துக்கொண்டுபோகிற புள்ளை மெள்ள நிறுத்தி விண்ணோர் கிட்டித்தொழும்படிக்கு அநுகுணமாக நடத்தப்படுகிற அப்புள் என்று விவக்ஷித்து, அருளிச்செய்கிறார்; (அஸ்த்தானே) இத்யாதி. 'நடத்துகிற' -நடத்தப்படுகிற. இப்படி மெள்ளநடத்துவானென்னென்ன, (அவர்கள்) இத்யாதி. அப்புள்ளு, தழற்போற்சினத்த அப்புள் என்று மீளவுஞ் சொன்னதுக்கு பாவம்- (தன்னிழவு) இத்யாதி. இப்படி அத்தலைக்குப் பரிவாருண்டென்று தன்னிழவு பாராதே தேறினவருண்டோ வென்ன (கெண்டை) இத்யாதி.

[தண்ணந்துழாயையுடைய அழற்போலுஞ்சக்கரத்தண்ணலுடைய தழற்போற்சினத்ததாய் விண்ணோர்தொழக்கடவப்பட்டதான அப்புள்ளின்பின் போன தனிநெஞ்சமானது, குழல் இத்யாதி நிழற்போல்வனரென்று கண்டு நிற்குங்கொல்? மீளுங்கொல்? என்று அந்வயம்.]

தாத்பர்யம்.—இப்பாசுரத்தில் ஆழ்வார், தம்முடைய திருவுள்ளம் ஸர்வேஶ்வரன் விஷயத்தில் ப்ரவணமாயிற்றென்னு மத்தை, நாயகனைப் பிரிந்த நாயகி தன்தோழியைப்பார்த்துத் தன்னுடைய நெஞ்சு அவன்பின் சென்றபடியைச் சொல்லும் பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

ஒதோழீ! நாயகனைப்பிரிந்திருக்கிற இத்தசையில் அவன் சாத்தியருளின குளிர்ந்த திருத்துழாயும், அவன் திருக்கைக்கு நிறைந்த ஆபரணமாகிய திருவாழியும் என்மேல் தீவீசி என்னை மிகவும் உபத்ரவியாநின்றன. இவ்வவஸ்தையிலுங்கூட அந்தஸர்வேஶ்வரன் அந்தத்திருத்துழாய் மாலையோடும் திருவாழியோடு மெழுந்தருளி எனக்கு ஸேவைஸாதியாமல், நித்யஸூரிகளைத் தன்னை ஆஶ்ரயிப்பித்துக்கொண்டு அவர்களை உஜ்ஜீவிப்பிக்கைக்காகத் தன்னிடத்திற் பரிவால் இலையசைந்தாலும் விரோதிகளோவென்று சீறியருளும் திருவடியை வாஹநமாகக்கொண்டு நடத்தியருளும்போது, என்னுடைய நெஞ்சு என்னையும் விட்டுவிட்டு அத்திருவடியின் பின்னே தனியாய்ப்போய்விட்டது. அங்குபோனபின், நிறைந்த மயிர்முடியையுடைய நப்பின்னைப்பிராட்டியும் ஶ்ரீ பூமிப்பிராட்டியும் பெரியபிராட்டியாருமான இவர்கள் ஸர்வேஶ்வரனை

யநுவர்த்தித்து ஆஶ்ரிதர்குற்றங்களைப் பொறுப்பிக்க அப்போது ஸர்வேஶ்வரனுக்குத் தலையெடுத்திருக்கும் ஸௌலப்யத்தைக்கண்டு என்னெஞ்சு அங்கே நின்றுவிடுமோ? ஶ்ரீ பூ நீளாஸேவ்யனான அவன் மேன்மையைக்கண்டு அங்கேதரித்து நிற்கமாட்டாமல் திரும்பிவருமோ? சொல். ௩.

தனிநெஞ்சம்முன்னவர்புள்ளேகவர்ந்தது,தண்ணந்துழாய்க்
கினிநெஞ்சமிங்குக்கவர்வதியாமிலம்,நீநடுவே
முனிவஞ்சப்பேய்ச்சிமுலைசுவைத்தான்முடிசூடுதுழாய்ப்
பனிநஞ்சமாருதமே,எம்மதாவிபனிப்பியல்வே. ச.

அர்த்தம் —தனி - விலக்ஷணமான, நெஞ்சம் - மனஸ்ஸை, முன் - முன்னமே, அவர் - அந்த ஸர்வேஶ்வரனுடைய, புள்ளே - (வாஹநமான) கருடபக்ஷியே, கவர்ந்தது - அபஹரித்தது. இனி - இனிமேல், யாம் - நாம், இங்கு- இவ்விடத்தில், தண் - குளிர்ந்தும், அம் - அழகியதுமான, துழாய்க்கு - திருத்துழாய்க்கு, கவர்வது-பறித்துக்கொள்வதற்காக, நெஞ்சம்-மனஸ்ஸை, இலம்- உடையோமல்லோம், முனி - கோபத்தையுடையளாய், வஞ்சம் - கபடத்தையுடையளான, பேய்ச்சி - பிசாசமான பூதனையினுடைய, முலை - ஸ்தநத்தை, சுவைத்தான் - பாநம்செய்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய, முடி - திருவபிஷேகத்தில், சூடும் - ஸமர்ப்பிக்கப்பட்ட, துழாய் - திருத்துழாயினுடைய, பனி - குளிர்த்தியையுடையதாய், நஞ்சம் - விஷமாயிருக்கிற (பாதகமாயிருக்கிற), மாருதமே - ஓகாற்றே! நீ - நீ, நடுவே - மத்தியில், எம்மது - எங்களுடைய, ஆவி-ப்ராணனை, பனிப்பு-நடுக்குகை, இயல்வே-ஸ்வபாவமா!(தகுந்ததோ)?௪.

[அப்பிள்ளை உரை.]

உரை.—நாலாம்பாட்டு (தனிநெஞ்சம்) விலக்ஷணமான நெஞ்சை. (முன் அவர்புள்ளே கவர்ந்தது) அவருடைய வாஹநமான பெரியதிருவடியே முன்பு வேறுசிலர்க்கு ஶேஷியாதபடி பிரித்துக்கொண்டான். (தண் அந் துழாய்க்கு இனிநெஞ்சம் இங்குக் கவர்வது யாம் இலம்) அவனோடு ஸ்பர்ஶமுண்டான திருத்துழாய்க்குக் கவர்வதான நெஞ்சு நாம் இனி இங்கு உடையோமல்லோம். (நீ நடுவே) பாத்யபாதகமின்றியே யிருக்கச்செய்தே. (முனி வஞ்சப் பேய்ச்சி முலை சுவைத்தான் முடி சூடு துழாய்ப் பனி நஞ்சம் மாருதமே) சீறி வஞ்சகையான பேய்ச்சியினுடைய முலையைச் சுவைத்து அவனை முடித்தவனுடைய திருமுடியிலே சூட்டப்பட்ட திருத்துழாயினுடைய குளிர்த்தியையுடையையாய் பாதகமாகிறமாருதமே! (எம்மதுஆவி பனிப்பு இயல்வே) பண்டே நோவுபட்டிருக்கிற எங்கள் ப்ராணனை நோவுபடுத்தாதே கொள்; (இயல்வே) நோவுபடுத்துகை ஈடோவென்றுமாம். 'முனிவஞ்ச' என்ற விஶேஷணத்துக்குக் கருத்து-பூதனை முலையிலே நஞ்சைக் கலந்துகொடு வந்தாற்போலே' காற்றுத் திருத்துழாயிற் பரிமளத்தைக் கொண்டுவந்து பாதகமாகிறபடி.

ஸ்வா.—(க) "ஶப்தாதிமன்மஹிமவஸ்துஸம்ஸ்ப்ருஷ்டி - தத்ஸித்தமஸ்ஸர்வமஸஹ்யம்" என்னுமாபோலே, பகவத்விஶ்லேஷத்தாலே ஸர்வமும் அஸஹ்யமாயிருக்கிறபடி. (சு)

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—நாலாம்பாட்டு. "இமையோர்தலைவா" என்னும்படியே நித்யவிபூதியைக்காட்டிக்கொடுக்கையாலே, அங்குள்ள பதார்த்தங்கள் ஸ்மாரகமாய் நலிகிறபடியைச் சொல்லுகிறது.

வ்யா.—(தனி நெஞ்சம்) பாக்யத்தினளவன்றிக்கே பாதகமிருக்கிறபடி. (முன் அவர் புள்ளே கவர்ந்தது) திருவடிமேலே யிருக்கிற இருப்பிலே தோளின்மாலையோடே அணைக்கக் காணும், ஆசைப்படுகிறது; அவ்வளவுங் கிட்டுவதற்குமுன்னே ஒருதிருவடி வழிபறித்துக்கொண்டபடி. (அவர் புள்) அங்குத்தைக்கு அஸாதாரணமென்று தான் ஈடுபட்டபடி. (புள்ளே) ஸஜாதீயர்க்கும் வையாதொழிந்தபடி. (கவர்ந்தது) தனக்கும் அரைவயிறாயிருந்தபடி. (முன்) திருத்துழாய்க்குமுன்னே திருவடி முற்பட்டபடி. (தண் அந்துழாய்க்கு) குளிர்ந்த திருத்துழாய்க்கு. (இனி நெஞ்சம்) மரம்போலே நிமிர்த்திருந்தாலு மாவதுண்டோ? ஓரடி முற்படப்பெற்றதில்லை; ஒப்பூணாக உண்ணலாயிற்று; உங்களபேக்ஷிதமில்லை. (இங்கு) விளக்கேற்றிக் காட்டுகிறாள். (யாம் இலம்) திருவடியோடே போமித்தனை; பாவியேன் பலநெஞ்சு படைக்கப்பெற்றிலேன்; தண்ணந்துழாய்க்குக் கவர்வதான நெஞ்சத்தை யாம் இனி இங்கு உடையோமல்லோம். (நீ நடுவே) திருத்துழாயாழ்வார் மரம்போலே நிமிர்த்திருந்தாரென்று பார்த்து அவ்வளவிலே கால்கடுகி வந்தது: 'அஸாதாரணர் பட்டினிவிடாநிற்க, உனக்கென்' என்கிறாள்; அங்கு ஸம்பந்தமுண்டாதல், இங்கு விஷயமுண்டாதலன்றியே, நடுவே. (முனி வஞ்சப் பேய்ச்சி) முனிவையும் க்ருத்ரிமத்தையும் உடைய பூதனை. (முலை சுவைத்தான்) தன் நாவிற் பசைகொடுத்துச் சுவைத்தான்: (க) "பெற்ற தாய்போல் வந்த பேய்ச்சி பெருமுலை யூடுயிரை, வற்ற வாங்கி யுண்ட வாயான்" (முடி சூடு துழாய்-) அத்தலையிலுள்ளதைக் கொண்டுவந்து வாய்ப்புரோ ரிக்கிறபடி, ஸஹ்யத்தில் நீரை ஆகாஶத்திலே முகந்து நின்று இறைக்குமாபோலே; திருத்துழாயை முடித்துவந்துபோலே காணும், பூத

(க) திருமொழி க-ரு-க.

வ்யா|| னையை முடித்தது: திருவபிஷேகத்தில் திருத்துழாயென்று அறிந்தபடி என்தான்! (பனி நஞ்சம் மாருதமே) குளிர்ந்தகாற்று அக வாய் நஞ்சா யிருக்கிறபடி. (எம்மது ஆவி-) சென்றற்றிருக்கிறபடி; பாதக (ஸாதக) ங்களின் கையிலே அகப்பட்டு அவஶேஷித்த ப்ரா ணன். (பனிப்பு இயல்வே) நடுக்குகை ஸ்வபாவமே; விஜாதீயர் செய்யுமத்தை ஸஜாதீயமான நீ செய்யக்கடவையோ? (ச)

---

அரு|| நாலாம்பாட்டு. ‡'பனி' என்று-குளிர்த்தியாய், திருத்துழாய் கந்தத்தாலே குளிர்ந்துஅகவாய் நஞ்சாயிருக்கிற காற்றென்று ஸப்தார்த்தம். பனி நஞ்சமாரு தமாயிருக்கையாலே, திருவபிஷேகத்தில் திருத்துழா யென்று அறிந்தபடி. திரு த்துழாயின்குளிர்ந்த மதுஜலத்தாலே நஞ்சூட்டினாற்போலே யிருக்கிற மாருத மென்று ஸப்தார்த்தம். விவரணம்-(†பாதகங்கள்) இத்யாதி. 'பனிப்பு' என்று குளிர்த்தியாய், 'இயல்வு' என்று - ஸ்வபாவமாய், நடுக்குகை ஸ்வபாவமெ ன்றபடி: அதாவது - 'என்னுடைய ப்ராணனை நடுங்கப்பண்ணுகை ப்ராப்த மோ வென்றபடி. 'ஆவி' என்று - ப்ராணனாய், ப்ராணன் வாயுவாகையாலே விஜாதீயமான புள்ளு திருத்துழாய் செய்யுமத்தை ஸஜாதீயமான நீ செய்ய க்கடவையோ வென்றபடி.

[அவர்புள்ளே முன்தனிநெஞ்சங் கவர்ந்தது; தண்ணந்துழாய்க்குக் கவர் வதாக நெஞ்சம் இங்கு இனி யாம் இலம்; முனி வஞ்சப்பேய்ச்சி முலைசுவை த்தான் முடிசூடுதுழாய்ப் பனிநஞ்சமாருதமே! நீ நடுவே எம்மதாவி பனிப்பு இயல்வே என்று அந்வயம்.] (ச)

## [அப்பு அரும்பதம்.]

நாலாம்பாட்டு. (அங்குள்ள பதார்த்தம்) என்றது-காற்று. 'தனிநெஞ்சம்' என்று-நெஞ்சுஒன்றாகையாலும், அவர்கள் மூவராகையாலும், பாத்யம் அதிக மென்றபடி. 'முன்' என்பத்தைப்பற்ற, அருளிச்செய்கிறார் (திருவடிமேல்) இத்யாதி. திருத்துழாய் நித்யரஸகையாலே, (ஸஜாதீயர்) என்கிறது, 'கவருகை-' க்ரஸிக்கையாய், பக்ஷயத்தினுடைய அல்பத்வம் தோற்றுகிறது. (மரம்-) சாடு. (ஸாட்டு) (கால்-) சாடு. 'நீ' என்றத்தைப்பற்ற, அருளிச்செய்கிறார்; (அஸாதாரணர்) இத்யாதி. திருவடியுந் திருத்துழாயும் ஸதா ஸேவ்யராகை யாலே, காற்றைப்பற்றவும் (அஸாதாரணர்) என்கிறது. 'நடுவே' என்றத் தைப்பற்ற, அருளிச்செய்கிறார்; (அங்கு) இத்யாதி. காற்றுக்கு அவர்களோ பாதி அவனோடு ஸம்பந்தமில்லை; வந்தேறி என்றபடி. சுக்குப்போலே ஸாக்ஷ கபதார்த்தங்களுக்குத் தன் நாவிலீரங்கொடுத்துப் பசையுண்டாக்கி புஜிக்கை, (அத்தலை-) சாடு. தான்காணுதிருக்கச்செய்தே பரிமளத்தாலே திருவபிஷே

---

‡ முதல் மூன்று அடிகளுக்கு இந்த அரும்பதங் கிடைக்கவில்லை.

(க) பெரியதிருமொழி - ௬ - க.

கத்திற் பரிமளமென்று அறியும்படி அவசாஞகாதிஶய மிருந்தபடி என் தான்! என்று ஈடுபாடு. ப்ராணனும் வாயு விஶேஷமாகையாலே, ஸஜா தீயம்) என்கிறது. (ச)

[வேறொரு அரும்பதம்.]

நாலாம்பாட்டு. 'அங்குள்ள பதார்த்தங்கள்' - புள்ளும், திருத்துழாயும், அத்தோடேஸம்பந்தித்த மாருதமும். 'ஸ்மாரகமாய்'-நாயகனை ஸர்வேஶ்வரனு க்கு ஜ்ஞாபகங்களாய். நெஞ்சுக்குத் தனிமை சொன்னதுக்கு பாவம் - (பாத்ய த்தின்) இத்யாதி. 'முன்' என்றது - அந்நோக்குக்கு முன் என்றாய், (ஒருதிரு வடி) இத்யாதி. 'புள்' என்ன அமைந்திருக்க, 'அவர்' என்றதுக்குத் தாத்பர் யம்-(அங்குத்தைக்கு) இத்யாதி. அவதாரணார்த்தம்-(ஸஜாதியர்க்கும்) இத்யாதி: திருத்துழாயாழ்வார் நித்யஸூரியாகையாலே, புள்ளுக்கு ஸஜாதீய ரென்று கருத்து. 'கவருகை-' க்ரஸிக்கையாய், பாவம் (த்வநி) (தனக்குர்) இத்யாதி. 'முன்' என்றதுக்கு அர்த்தாந்தரம் - (திருத்துழாய்க்கு) இத்யாதி. 'இனி'க்கு அர்த்தம் - (மரம்போலே) இத்யாதி: போகோமென்று இருந்தாலும், இங்கு ப்ரயோஜநமில்லையென்று கருத்து. 'யாம்' என்றதுக்கு வ்யாவர்த்யம் - (திரு வடி.) இத்யாதி. ஒரு நெஞ்சுடைய யாமென்று, தாத்பர்யாந்தரம் - (பல) இத்யாதி. கீழோடே ஸங்கதி காட்டுகிறார்; (திருத்துழாய்) இத்யாதி. 'கா ல்கடுகி-' வேகமாக நடந்து என்று, (வ்யா.) சாடு. 'நீ' என்றதுக்கு (த்வநி) பாவம் - (அஸாதாரணர்) இத்யாதி. 'நடுவே' என்றதுக்கு பாவம் - (த்வநி) (அங்கு) இத்யாதி. வஞ்சப்பேய்முலை நஞ்சாயிருக்க, க்ரஸிக்க ரஸமுண்டோ வென்ன; (தன்நாவில்) இத்யாதி. 'வஞ்சப்பேய்ச்சி' என்றதுக்கு ஸம்வாதம்- (பெற்ற) இத்யாதி. 'அத்தலையில்-' அவன்திருமுடியில் என்று, (வ்யா.) சாடு. 'ப்ரேரிக்கிறபடி' - வீசுகிறபடி. பேய்ச்சியை முடிக்கும்போது, திருத்துழா யுண்டோவென்ன; (திருத்துழாயை) இத்யாதி. ஈடுபாடு (திருவபிஷேக) இத் யாதி. விவரணம் - (பாதகங்களின்) இத்யாதி. 'நடுக்குகை-' நடுங்கப்பண் ணுகை, ஸ்வபாவமென்றென்றதை விவரிக்கிறார்; (விஜாதீயர்) இத்யாதி. ப்ராணன் வாயுவாகையாலே, (ஸஜாதியம்) என்றது.

[முனிவஞ்ச இத்யாதி மாருதமே! தனிநெஞ்சத்தை முன் அவர் புள் ளே கவர்ந்தது; தண்ணந்துழாய்க்குக் கவர்வதான நெஞ்சத்தை இனி இங்கு யாம் இலம்; நீ நடுவே எம்மதாவி பனிப்பிக்கை இயல்வே என்று அந்வயம்.]

தாத்பர்யம்.—இப்பாசுரத்தில், ஸர்வேஶ்வரனை ஆழ்வார்முன்பு மாநஸ மாக அனுபவிக்கையாலே அவனோடு ஸம்பந்தித்த பதார்த்தங்கள் இப்போது ஆழ்வார்க்கு ஸ்ம்ருதிவிஷயமாய், அலாபத்தினால் பாதகமானபடியை, நாயக னைப்பிரிந்த நாயகி வாடைக்காற்றுகாதவளாய்ச் சொல்லும் பாசுரத்தாலே, அருளிச்செய்கிறார்.

விஷத்தைக்கொண்டு வீசுகிறாப்போல் எனக்கு அத்யந்தபாதகமாய் குளி ர்ந்து வீசுகிற ஓ! மாருதமே! ஸர்வேஶ்வரன் பெரியதிருவடியை நடத்திக்கொ

ண்டு எழுந்தருளும்போது அவனைசேவித்து எனக்கிருந்த ஒருமனஸ்ஸூம் அத்திருவடியின்பின்னே போய்விட்டது. இனிமேற்பட, அவன் சாத்தியரு ளின திருத்துழாய்வந்தாலும் அதுகொண்டுபோகைக்கு என்னிடத்தில் வேறு மனஸ்ஸூஇல்லையாது. இப்படி மனஸ்ஸைப்பறிகொடுத்து அவஸ்தைபடுகிற ஸமயத்தில் நீயும்வந்து, தன்னைமுடிக்கநினைத்து சீறிக்கொண்டு கபடத்தினால் தாய்வேஷங்கொண்டுவந்த பூதனையின் முலையுண்டு நமக்கு விரோதியான அவளைமுடித்துவிட்ட உபகாரகனான அந்த ஸர்வேஶ்வரன் திருமுடியிற் சாத்திய திருத்துழாயுடன் ஸம்பந்தித்த அப்பரிமளங்களைக்கொண்டு என்மேல்வீசி என்னை இப்படி பாதிப்பது உனக்கு தர்மமன்றுகாண் ஆகையால் என்னை நீ பாதியாதொழியவேணும். ச.

---

பனிப்பியல்வாகவுடைய தண்வாடை, இக்காலமிவ்வூர்ப்
பனிப்பியல்வெல்லாந்தவிர்ந்தெரிவீசும், அந்தண்ணந்துழாய்ப்
† பனிப்புயல்சோருந் தடங்கண்ணி மாமைத்திறத்துக் கொலாம்
† பனிப்புயல்வண்ணன், செங்கோலொருநான் றுதடாவியதே. ரு.

அர்த்தம்.—பனிப்பு - குளிரப்பண்ணுவதை, இயல்பாகஉடைய - ஸ்வபாவமாகஉடைத்தான, தண்-குளிர்ந்த, வாடை-வாடைக்காற்று, இக்காலம் - இந்தகாலத்தில், இவ்வூர்-இந்தஊரில், பனிப்பு-குளிரப்பண்ணுகிற, இயல்வெல்லாம் - ஸ்வபாவத்தையெல்லாம், தவிர்ந்து - விட்டு, எரிவீசும் - நெருப்பை வீசாநின்றது, அம் - அழகிய, தண்ணம் - குளிர்த்தியையுடைய, துழாய் - திருத்துழாய் நிமித்தமாக, பனி - குளிர்ந்த, பியல் - வர்ஷம்போன்ற கண்ண நீரை, சோரும் - பெருக்குகிற, தடம் - விசாலமான, கண்ணி - கண்களையுடைய இப்பெண்ணினுடைய, மாமைத்திறத்துக்கொலாம் - அழகுநிமித்த மாகவோ, பனி - குளிர்ந்த, புயல் - மேகம்போன்ற, வண்ணன் - வர்ணத்தையுடைய ஸர்வேஶ்வரனுடைய, செங்கோல் - ஆஜ்ஞை, ஒருநான்று-ஒருநாள், தடாவியது - வளைந்தது (பக்நமாய்விட்டது.) ரு.

[அப்பிள்ளை உரை.]

அ.—ஐந்தாம்பாட்டு. இப்படி வாடையாலே நலிவுபடுகிற பிராட்டியுடைய தசையை அநுஸந்தித்த திருத்தாயார், 'காற்றுக்குக் குளிரக்கடவதாக ஈஶ்வரன் நியமித்தவதுவும் அந்யதாவாகிறது, என் பெண்பிள்ளை நிமித்தமாகவன்றே' என்று இன்னாதாகிறாள்; இது தோழிவார்த்தை யாகவுமாம்,

உரை.—(பனிப்பு இயல்வாக உடைய தண்வாடை இக்காலம் இவ்வூர்ப் பனிப்பு இயல்வு எல்லாந்தவிர்ந்து எரி வீசும்) குளிர்த்தியை ஸ்வபாவமாக வுடைய மந்தமாருதம் இக்காலத்திலே இவ்வூரொன்றிலும் குளிரும் ஸ்வபாவத்தைத் தவிர்ந்து நெருப்பை வீசாநின்றது. (அந்தண்ணந் துழாய்ப் பனிப்பு

---

† பாடாந்தரம்-பனிப்பியல்.

இயல் சோருந் தடங் கண்ணி மாமைத் திறத்துக்கொலாம், பனிப்பியல் வண்ணன்செங்கோல் ஒரு நான்று தடாவியது) அழகிய திருத்துழாயின் குளிர்த்தியிலே தன்னுடைய ஸ்வபாவத்தை இழப்பதுஞ்செய்து அழகியகண்களையுடைய என் பெண்பிள்ளை மாமையிடையாட்டத்துக்காகவன்றே, வர்ஷுகவலாஹகம்போலே யிருக்கிற வடிவுடையவனுடைய செங்கோல் ஒருநாள் வளைந்தது; பனிப்பியலிலே சோராநின்ற தடங்கண்ணி யென்னவுமாம்.

ஸ்வா.—ஸம்ஸாரத்தில் எல்லார்க்கும் பாஹ்யவிஷயங்களே அநுகூலமாய்ச் செல்லாநிற்கத் தமக்கு எம்பெருமானுலல்லது செல்லாதே அவற்றோட்டை ஸஹவாஸம் (ஸாதக) பாதகமாயிருக்கிறபடியைச் சொல்லுகிறது. (ரு)

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—ஐந்தாம்பாட்டு.—விபூத்யாகாரத்தாலே, இங்குள்ளபதார்த்தங்கள்ஸ்மாரகமாய் நலிகிறபடி; ஜ்ஞாநஸங்கோசமற்று (க) “ந ச புநராவர்த்ததே-நசபுநராவர்த்ததே” என்கிறதேஶத்திலே போனால் ஸ்மாரகமாமவை இங்கே ஸ்மாரகமாகிறபடி எங்ஙனேயென்னில்,—ஸ்வயத்நஸாத்த்யமான ஜ்ஞாநமன்றிக்கே * மயர்வற மதிநல மருளப்பெறுகையாலே பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகள் ஏகக்ஷணத்திலே இவர்க்கு உண்டாகையாலே இங்கே இருக்கச்செய்தே ஸ்மாரகமாய் நலியும்படி, இவர்க்குப் பிறந்த ஜ்ஞாநவைஶத்ய மிருந்தபடி.

வ்யா.—(பனிப்பு இயல்வாக உடைய தண் வாடை) குளிர்த்தியை ஸ்வபாவமாகவுடைத்தான மந்தமாருதம். (இக்காலம் இவ்வூர் பனிப்பு இயல்வு எல்லாந் தவிர்ந்து எரி வீசும்) இக்காலத்திலே இத்தேஶத்திலே இதுக்கு ஸ்வபாவபேதம் பண்ணுகின்றவனுகையாலே அவனுக்காக நின்றபடி. பதார்த்தங்கள் ஸ்வபாவபேதமும் ஸ்வரூபபேதமும் பண்ணிக்கொண்டேயாகிலும் இவளை அழிக்க நினைத்தபடி.

அரு||ஐந்தாம்பாட்டு—(விபூத்யாகாரத்தாலே) என்றது-ததீயத்வாகாரத்தாலே. இங்குள்ள பதார்த்தங்கள் ஈஶ்வரனுக்கு ஸ்மாரகமாய் நலிகிறபடியைச் சொல்லுகிறது என்றபடி. (ஸ்மாரகமாமவை) என்றது-ததீயத்வாகாரேண ஸ்ம்ருதி விஷயமாய் இவர்க்கு உண்டாகையாலே உண்டானதுபோலே தோன்றுமவை என்றபடி. ‘ஸ்வபாவபேதமும் ஸ்வரூபபேதமும் பண்ணிக்கொண்டேயாகிலும்’ என்கிறமேலில்வாக்யத்துக்கு அநுகுணமாக, (ஸ்வபாவபேதம் பண்ணுகின்றவனுகையாலே) என்றது-ஸ்வபாவபேதம் பிறப்பிக்கின்றவனுகையாலே யென்னவேணுமென்று அருளிச்செய்வர். ‘தண்வாடை’-மந்தமாருதம். வேறோரூரிலே வேறொருகாலத்திலே யன்றிக்கே இக்காலத்திலே இவ்வூரிலே தண்வாடை எரிவீசுகையாலே அவற்றுக்கு ஸஹகாரியாயிருந்து பாதிக்கிறதென்றபடி. குளிர்த்தியைத் தவிர்ந்தபோதே அந்யவஸ்துவென்னவொண்ணாதே, குளிர்த்தியைத் தவிர்ந்தாலும் அநுஷ்ணஶீதமா யிருக்கலாமென்று கருத்து. தண்

(க) சாந்தோக்யம் அ-கரு-க.

வ்யா||அவன்தனக்கு ஸ்வரூபஸ்வபாவங்கள் வேறுபட்டால் அவனைப் பின்செல்லுகிறவற்றைச் சொல்லவேணுமோ? (அந் தண்ணந்துழாய் பனிப்புயல் சோருந் தடங் கண்ணி) ஸர்வேஶ்வரனுடைய குளிர்ந்து அழகிதான திருத்துழாயை ஆசைப்பட்டுக் கண்ணநீர் சோரா நின்றாள். இக்குற்றஞ்செய்தார்க்குப் படவேண்டுவது இவ்வளவோ? இப்பரப்புமாற ஒரு ஏகார்ணவம் பெற்றாலும் போராது. (மாமைத் திறத்துக்கொலாம்) இந்நிறத்தை அழிக்கைக்குக் கிடீர், இப்பாடு பட்டது. (பனிப்புயல் இத்யாதி) தாபத்ரயங்களும் போம்படி யிருந்தபடி. (பனிப்புயல் வண்ணன்) நிர்ஹேதுகஸ்வபாவன். (செங்கோல்) நாம் பட்டபடி படுகிறோம்; அத்தலையி லாஜ்ஞைக்குஒருஹாநிவா

அரு||வாடையானது அக்நியாலே,ஸ்வரூபபேதம்; எரிவீசுகையாலே, ஸ்வபாவபேதம். அவனுக்கு ரக்ஷகத்வம் ஸ்வரூபமாய் க்ருபை ஸ்வபாவமாயிருக்கும்: அப்படியிருக்க, ரக்ஷகனுகைதவிர்ந்து பாதகனானான்; க்ருபைபோய், நிஷ்க்ருபனானான்; ஆகையாலே இவையும் ஸ்வரூபஸ்வபாவங்களை மாறடின வென்றபடி. ‘பனிப்புயல் சோருந் தடங்கண்ணி’ - ‘பனி’ என்று - குளிர்த்தியாய், ‘புயல்’ என்று - மேகமாய், குளிர்ந்த மேகம்போலே வர்ஷிக்கிற கண்ணையுடையவளென்றபடி. ‘பனிப்புயல்சோருந் தடங்கண்ணி’ - துளிக்கிற புயல் போலே நீர் சொரிகிற பெரிய கண்ணையுடையவளென்றுமாம். (இக்குற்றஞ் செய்தார்க்குப் படவேண்டுவது இவ்வளவோ) என்றது-வ்யங்க்யோக்தியாய், ப்ராப்தசேஷிவிஷயமான திருத்துழாயை ஆசைப்பட்டவளுக்கு இம்மாத்ரம் துக்கம்போருமோ? இன்னம் அநேகம் வேணுமென்றபடி. தண்ணந்துழாய் நிமித்தமாக ஆசைப்பட்டுப் பனிப்புயல் சோருந் தடங்கண்ணி யென்றபடி. ‘தட’ என்ற ஶப்தத்துக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்; (இப்பரப்புமாற) என்று. (ஏகார்ணவம்) என்றது- ஏகார்ணவ ஜலத்தையாய், அதுவும்போராது இப்பரப்புக்கு என்றபடி. ‘ஆம்’ என்ற ஶப்தத்துக்கு அருளிச் செய்கிறார் (இந்நிறத்தை அழிக்கைக்குக் கிடீர், இப்பாடுபட்டது) என்று. (இப்பாடுபட்டது) என்றது-‘எரிவீசும்’ என்றத்தைப் பற்ற. ‘பனிப்புயல்வண்ணன்’ என்றதுக்கு இரண்டுபொருள்:—‘பனி’ என்று-குளிர்த்தியாய், ‘புயல்’ என்று-மேகமாய், ‘வண்ணம்’ என்று - வர்ணமாய், தாபத்ரயங்களும் போம்படி குளிர்ந்த மேகம்போன்ற வர்ணத்தையுடையனுதல்; அன்றிக்கே, ‘வண்ணம்’ என்று - ஸ்வபாவமாய், க்ருபாஸ்வபாவத்தை யுடையனென்னுதல்: குளிர்ந்த வர்ஷுகவலாஹகம்போலே யிருக்கிற வடிவை யுடையவன். ‘செங்கோல்’ - ஆஜ்ஞை. ‘தடாவியதே’ என்கிற ஸ்வரத்தாலே, இப்படி அவனுடைய ஆஜ்ஞைக்கு ஹாநிவருகையாலே, ‘நாம் துக்கப்பட்டாலும் படுகிறோம்; அத்தலையிலாஜ்ஞைக்கு ஒருஹாநி வாராதொழியவேணும்’ என்று பலிதார்த்தத்தை அருளிச் செய்கிறார்; (நாம்பட்டது படுகிறோம்) என்று.

வ்யா|| ராதொழியவேணும். (ஒரு நான்று) இன்று தொடங்கி. (தடாவியது) விலங்கிற்று. இது, திருத்தாயார்வார்த்தை.

(உ) "காமஞ்சாராவெறியதின்னமை, காட்சிமகிழ்தனலம்பாராட்டு."

---

அரு||[பனிப்பியல்வாகவுடைய தண்வாடை இக்காலம் இவ்வூர்ப் பனிப்பியல் வெல்லாந்தவிர்ந்து எரிவீசுகிறது; அந்தண்ணந்துழாய் நிமித்தமாகப் பனிப்புயல்சோருந் தடங்கண்ணி மாமைத்திறத்துக்கொலாம்; ஆகையாலே, பனிப்புயல்வண்ணன் செங்கோல் ஒருநான்று தடாவியதே என்று அந்வயம். அன்றிக்கே, அந்தண்ணந்துழாய்ப் பனிப்புயல்சோருந் தடங்கண்ணி மாமைத்திறத்துக்கொலாம், பனிப்பியல்வாகவுடைய தண்வாடை என்றுதொடங்கி எரிவீசும்; ஆகையாலே, பனிப்புயல்வண்ணன் செங்கோல் ஒருநான்று தடாவியதே என்று அந்வயமாதல்.] (ரு)

[அப்பு அரும்பதம்.]

ஐந்தாம்பாட்டு.—பேஷவஸ்துவாகையாலே, சேஷிக்கு ஸ்மாரகம். (க) "ஸர்வம் ஹ பஶ்ய: பஶ்யதி"- என்று முக்திதசையில் ஜ்ஞானஸங்கோசமற்று. 'தண்வாடை' - மெத்தென்றவாடை. காற்றுக்கு ஸ்வபாவபேதம் பிறக்கவேண்டுவானென்னென்ன, அருளிச்செய்கிறார்; (இதுக்கு) இத்யாதி. (இதுக்கு) இந்தக்காற்றுக்கு; ஸ்வபாவபேதம் பண்ணுகிறவன் ஆஜ்ஞையாலே, அவளுக்காக நின்றபடியென்கை. விவரணம்-(பதார்த்தங்கள்) இத்யாதி. 'ஸ்வரூபஸ்வபாவம் பேதிக்கை'-வாயுவானது அக்நியாகையும், குளிர்த்தி அழலாகையும் அவன், ரக்ஷகஸ்வரூபமும் க்ருபாஸ்வபாவமும்மாறி பாதகனுமாய் நிர்க்ருணனுமானால், இவற்றுக்குச் சொல்லவேணுமோவென்றபடி. 'பனிப்புயல்சோருந் தடங்கண்ணி' என்று நீர்கொண்டெழுந்த காளமேகம்போலே சொரியாநிற்கிற கண்ணையுடையவளென்கையாலே, இப்பரப்புமாற இவள் கண்ணில் ஜலஸம்ருத்தி வரும்போது ஏகார்ணவம் நிறைந்தாலும் அவ்வருகாய் அதுபோராதென்கிறது. 'இப்பாடுபட்டது'-வாயு ஸ்வரூபஸ்வபாவம் மாறுடிற்றென்றபடி. 'வண்ணம்-' நிறமாதல், ஸ்வபாவமாதல். ஆஜ்ஞை விலங்குகை - அவனாஜ்ஞையைப் பின்செல்லக்கடவ வாயுவானது ஸ்வபாவம் மாறுகை.

[தடங்கண்ணி மாமைத்திறத்துக்குப் பனிப்பியல்வெல்லாந் தவிர்ந்து எரிவீசும்; செங்கோல் தடாவியதே என்று அந்வயம்.]

'காமஞ்சாரா' என்றதுறை, மேலிற்பாட்டுக்கு. (ரு)

[வேறொரு அரும்பதம்.]

ஐந்தாம்பாட்டு.—இங்குள்ளபதார்த்தங்கள் அவனுக்குஸ்மாரகமாகைக்கு அவனதென்றுஅநுபவமில்லாமையாலே ஸ்மாரகத்வங்கூடுமோவென்னும்சங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார்; (ஜ்ஞானஸங்கோசம்) இத்யாதி. 'போனால்என்ற அநந்தரம், 'ததீயத்வேந அநுபவம் நடந்தபின்பு' என்று சேஷம், 'தண்' என்று-தணிக்கையாய், அர்த்தம். (மந்தமாருதம்) என்று. வாடைக்கு

---

(உ)

(க) சாந்தோக்யம் உ௬-உ-உ.

ப்பனிப்பியல்வு தவிர்வா னென்னென்ன, (இக்காலத்திலே) இத்யாதி. அவன் தான் ஸ்வபாவபேதம் பண்ணுவா னென்னென்ன, (பதார்த்தங்கள்) இத்யாதி. (ஸ்வபாவபேதம்) என்றது - குளிர்த்திபோய் ஔஷ்ண்யம்பிறக்கை; (ஸ்வரூபபேதம்) என்றது-வாடை எரியாய்ப்போகை. (அவன் அழிக்கநினைத்தாலும் வஸ்து வஸ்த்வந்தரமாமோ வென்ன, (அவன்) இத்யாதி. (ஸ்வரூபம்) என்றது-ரக்ஷகத்வமென்றபடி. 'ஸ்வபாவம்-' க்ருபையாகிற குணமென்றபடி. (துழாய்) என்ற அநந்தரம், 'ஆசைப்பட்டு' என்று அத்யாஹரித்து, அர்த்தம் அருளிச்செய்கிறார்; (ஸர்வேச்வரனுடைய) இத்யாதி. 'பனிப்பியல்' என்று ஈட்டிற் பாடம். 'புயல்' என்று ஸ்வாபதேசப்படிகளிற் பாடம். பியல், புயல், மழை என்று இத்யாதிகள் வர்ஷத்துக்குப் பேராகையாலே, குளிர்ந்திருந்துள்ள வர்ஷம்போலே சோராநின்றுள்ள கண்ணீரையுடைய தடங்கண்ணி யென்று சப்தார்த்தம். விரஹதசையிற் குளிர்த்தி சொல்லக்கூடாமையால், 'அத்தால் பலித்தது தர்சநீயதை' என்று ஈட்டில் நிர்வாஹங் கண்டுகொள்வது. 'தலைமகள் திருத்துழாயை ஆசைப்பட்டுக் கண்ணுங்கண்ணீருமாயிருந்த படியைக் கண்டு திருத்தாயார் ஈடுபட்டபடி - (இக்குற்றம்) இத்யாதி. 'தட' என்றதுக்கு பாவம் - (இப்பரப்பு) இத்யாதி. ஏகார்ணவ ஜலமெல்லாங் கொண்டுவந்து கொட்டினாலுங் கண்ணில் ஏகதேசத்துக்குப் போராதென்று கருத்து. 'இப்பாடுபட்டது' - தன் ஸ்வபாவத்தை விட்டு அக்நியின் ஸ்வபாவத்தை பஜித்தது. 'பனி' என்ற விசேஷணத்துக்குத் தாத்பர்யம் - (தாப) இத்யாதி. 'புயல்' என்ற பததாத்பர்யம் - (நிர்ஹேதுக) இத்யாதி. எம்பெருமானார் கூரத்தாழ்வானைப் பிரிந்திருக்கமாட்டாத க்லேசத்தைப் பொறுத்து அவன் ஸத்யஸங்கல்பதையைப் பேணினாற்போலே, இத் திருத்தாயாரும் 'அவனுடைய ஸங்கல்பத்துக்கு ஹாநிவந்ததே, இவளைத்தொட்டு' என்று அத்தலைக்குப் பரியும்படியான தாத்பர்யம் அருளிச்செய்கிறார்; (நாம்) இத்யாதி; இத்தால், வாய்வாதிகளுக்கு முன்பு சைத்யாதிகள் நித்ய ஸ்வபாவங்களாக ஸங்கல்பித்த ஸங்கல்பம் இப்போது இழந்துபோகிறதே யென்று அதுக்குக் கரைகிறா ரென்றதாயிற்று.

[அந்தண்ணந்துழாய் இத்யாதி திறத்துக்கொல், பனிப்புயல் இத்யாதி எரிவீசுமாம்; பனிப்புயல் இத்யாதி தடாவியதே என்று அந்வயம்.]

மேற்பாட்டுக்குக் கிளவித்துறையைக் காட்டுகிறார்; "காமஞ்சாரா" இத்யாதி: அதாவது-ஸம்ச்லேஷமாகிற, காமமானது-இஷ்டமானது; சாரா-கிட்டாமையாலுண்டான வெறிஉண்டு-பிச்சு; அதினுடைய இளமையாவது; காட்சி-த்ருஷ்டிபந்தத்தைச் சொல்லுகையும்; மகிழ்தல்-அநந்தரமுண்டான ஹர்ஷவசநமான மந்தஸ்மிதத்தை நினைக்கையும்; நலம்பாராட்டு-ஸௌந்தர்யாதிகளைக் கொண்டாடுகையுமான இவையென்று: தமிழர் கிளவித்துறை யென்பர்கள்.

தாத்பர்யம்.—இப்பாசுரத்திலாழ்வார், இவ்விபூதியிலுள்ள மாருத முத லிய பதார்த்தங்கள் ஸர்வேஶ்வர ஸ்ருஷ்டங்களென்றும் அவனுக்கே சேஷ பூதங்களென்றும் அநுஸந்தித்தவளவில் அவ்வடியாக ஸர்வேஶ்வரன் ஸ்ம்ரு திவிஷயமாக, அவனுடைய ப்ராப்தியில் த்வரையுடையவராய் அலாபத்தி னாலே விஷண்ணராயிருக்க, அப்போது பக்கத்திலுள்ள பாகவதர் சொல்லும் பாசுரத்தை, ஒரு விரஹிணி மந்தமாருதத்தினால் பாதிக்கப்பட்டுக் கிடக்க அவளவஸ்த்தையைக்கண்டு அவள் தோழியுரைக்கும் பாசுரத்தாலே யருளிச் செய்கிறார்.

இப்பெண், நாயகனான ஸர்வேஶ்வரன் சூடின திருத்துழாயை ஆசைப் பட்டு அதைப்பெற வேணுமென்று பெருமழை பொழிந்தாற்போல் தன்னு டைய விசாலமான நேத்ரங்களில் நின்றும் தாரைதாரையாக கண்ணீரைப் பெருக்கிக்கொண்டிருக்கையில், ரக்ஷகனான ஸர்வேஶ்வரனும் இவள் விஷய மாகத் தன் ஸ்வரூபத்தை மாறுடிக் கொண்டு கருணையற்றவனானான். இவனி ப்படியாகவே இப்பெண்ணின் ஸௌந்தர்யத்தை யழிக்கக்கோலி இவனுக்கு நியாம்யமான சீதஸ்வபாவமான வாயுவும், தன்னுடைய ஸ்வரூபஸ்வபா வங்களை மாறுடிக்கொண்டு தன் சீதஸ்வபாவத்தை விட்டு உஷ்ணஸ்வபாவத் தையடைந்து நெருப்பாய் அவனுடைய அவலம்பத்தினால் இவ்வூரிலிப்போது இவள்மேலழல்வீசத்தொடங்கிற்று. வாயு அனுஷ்ணசீதமாகக்கடவதென் கிற ஸர்வேஶ்வரனுடைய ஆஜ்ஞையுங்கூட இப்போதிவருக்காக பங்கமாய் விட்டது. (௫)

---

தடாவியவம்பும் † முரிந்தசிலைகளும்போகவிட்டுக்,
‡ கடாயினகொண்டொல்கும்வல்லியிதேனும், அசுரர்மங்கக்
கடாவியவேகப்பறவையின்பாகன்மதனசெங்கோல்
நடாவியகூற்றங்கண்டீர், உயிர்காமின்கள்ஞாலத்துள்ளே. ௬

அர்த்தம.—கடாயின - தஞ்தியாய், தடாவிய - விசாலமான, அம்பும் - பாணத்தையும் (பாணம்போன்ற கண்களையும்), முரிந்த - வளைந்த, சிலைக ளும் - விற்களையும் (விற்போன்ற புருவங்களையும்), போகவிட்டுக் கொண்டு - (உள்ளே) அடக்கிக்கொண்டு, ஒல்கும் - ஒடுங்குகிற, வல்லியிதேனும் - கொடிபோன்றவளேயாயினும், அசுரர் - அஸுரர்கள், மங்க - நசிக்கும்படி, கடாவிய-நடத்தப்பட்ட, வேகம் - வேகத்தையுடைய, பறவை, கருத்மானு க்கு, இன்-இனியனான, பாகன்-நிர்வாஹகனான, ஸர்வேஶ்வரனுடைய (பின் ளையாகிய), மதனன் - மன்மதனுடைய, செங்கோல் - ஆஜ்ஞையை, நடாவிய- நடத்துகிற, கூற்றம்கண்டீர் - ம்ருத்யுகிடிகோள். ஞாலத்துள் - பூலோகத்தில் (இருக்கநினைத்திகோளாகில்), உயிர் - ப்ராணனை, காமின்கள் - ரக்ஷித்துக் கொள்ளுங்கோள். (௬)

---

† முறிந்தவென்றும், ‡ கடாயனவென்றும்பாடம்.

[அப்பிள்ளை உரை.]

அவ.—ஆரும்பாட்டு.—தலைமகனைக்கண்டதலைமகள் வ்ரீளையாலே தன்னை நோக்காதிருக்க, வ்ரீளைபோய்த் திண்ணிதாகி நோக்குகைக்கு அவளுடைய ஸௌந்தர்யாதிகளாலே ஈடுபடுகிறபடியைப் பிறர்க்குச் சொல்லுகிறான்.

உரை.—(தடாவிய அம்பும் முரிந்த சிலைகளும் போகவிட்டுக் கடாயின கொண்டு ஒல்கும் வல்லி இதேனும்) வில்லோடே அடுத்துப்பிடித்த அம்பும் வளைந்த விற்களும் அவற்றுக்கு விஷயமில்லாமையாலே இட்டுவைத்து நிர்வஹிக்க வேண்டும் ஒடுங்குகிற வல்லியாகிலும் இது. (அசுரர் மங்கக் கடாவிய வேகப்பறவையின் பாகன் மதன செங்கோல் நடாவிய கூற்றங்கண்டீர்) ப்ரதிகூலர் மங்கும்படி யுத்தத்திலே நடத்துகிற திருவடிக்குப் பாகனானவனுக்கு சேஷபூதனான காம னுஜ்ஞையை நடத்துகிற ம்ருத்யு கிடிகோள். (உயிர் காமின்கள் ஞாலத்துள்ளே) ஸம்ஸாரத்திலுள்ளார் உங்களுடைய ப்ராணன்களை நோக்கிக்கொள்ளுங்கோ ளென்கிறான். திருவடியை இப்போது சொல்லிற்று - அஸுர நிரஸநத்தில் த்வரிக்குமாபோலே, காமனுஜ்ஞா பாலநத்திலே இவள் ஒருப்படுமென்று தோற்றுகைக்காக. 'பறவையின்பாகன் மதனன்' என்கிறது - ஸகலபதார்த்தங்களையும் பகவச் சேஷமென்றல்லது அநுஸந்திக்க அறியாமையாலே.

ஸ்வா.—பகவத்விரஹத்தாலே அவஸந்நரா யிருக்கிற ஆழ்வார்படியைக் கண்ட ஸ்ரீவைஷ்ணவர்கள், "ஸம்ஸாரத்தில் 'அஹம்,' 'மம' என்றிருப்பார்க்கு, இவருளாகத் தப்ப விரகில்லை" என்று சொல்லுகிறது. இவர்க்கு பகவதலாபத்தால் வந்த அவஸாதந் தீரும்படி கலந்து ஆச்வஸிப்பிக்கிறபடி. எம்பெருமானையும் ஸ்ரீவைஷ்ணவர்களையும் இருவரையுந் தலைமகனாகச் சொல்லாமோவென்னில்,—எம்பெருமான் பாட்டுடைத் தலைமகனாகவும், ஸ்ரீவைஷ்ணவர்கள் கிளவித் தலைமக்களாகவும் அப்படி சொல்லப்பெறலாம்,

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—ஆறும்பாட்டு.—நாயகியுடைய முழுநோக்கிலே அகப்பட்ட நாயகன், 'தந்தாம் ஸத்தை கொண்டு தரித்திருக்கவேண்டுவார், இஸ்ஸந்நிதிவேஸத்திலே செல்லாதேகிடிகோள்' என்கிறான்.

வ்யா.—(தடாவிய அம்பும்) பரந்தவாயம்பும்: காணுக்கோலா

---

அரு|| ஆறும்பாட்டு.—நாயகியுடைய முழுநோக்கிலே அகப்பட்ட நாயகன், ஸம்ஸாரிகளைப்பார்த்து, 'தந்தாம் ஸத்தைகொண்டு தரித்திருக்கவேண்டுவார், இவள் ஸந்நிதியிலே செல்லாதேகிடிகோள்' என்கிறான்: இங்கு நாயகராகச் சொல்லுகிறது-ஸ்ரீவைஷ்ணவர்களை; 'நாயகி' என்றது-ஆழ்வாரை. 'தடாவிய அம்பு' என்றதுக்கு இரண்டு பொருள்:—தடாவுதல் - பரம்புதலாய், பரந்த வாயையுடைய அம்பென்னுதல்; தடாவுதல் - வக்ரமாய், வக்ரமான அம்பென்னுதல்: முந்தின அர்த்தத்தை அருளிச்செய்கிறார், (பரந்தவாயம்பு) என்று;

வ்யா|| யிருக்கை; வில்லோடேகூட அடுத்துப்பிடித்த அம்பு: புடை பெருத்திருக்கை; (தடாவிய) வளைவாயம்பு: கோடிவருகிறது மர்மத்திலே படுகை; பிடித்த பிடியிலே பயங்கரமாயிருக்கை. (முரிந்த சிலைகளும்) அகர்மகமாய் அகர்த்ருகமாயிருக்கை. அம்புஞ்சிலைகளுமென்பா னென்னென்னில்;—'அம்பு' என்கிறது - ஜாதிப்பன்மையாலே; 'சிலைகளும் என்கிறது' - இரண்டாகையாலே. அம்புஞ் சிலைகளுமென்று உபமாநமாகச்சொல்லாதே, தானேயாகச்சொல்லுவா னென்னென்னில்;—ஸர்வதா ஸாத்ருஸ்ய முண்டாகையாலே. (போகவிட்டுக் கடாயின கொண்டு) ஆரெதிராக இவற்றை விடுவதென்று தன்பக்கலிலே இட்டுவைத்தது: தன்னுடைய ஸ்த்ரீத்வத்தோடே பா

---

அரு|| இரண்டாமர்த்தம் அருளிச்செய்கிறார்,(காணுக்கோலாயிருக்கை)என்று: (காணுக்கோலாயிருக்கை) என்றது - வருகிறபோது தெரியாதே மேலே பட்டபோது தெரிகை; முந்தின அர்த்தத்தை விவரிக்கிறார், (வில்லோடேகூட) என்று; இரண்டாமர்த்தத்தை விவரிக்கிறார், (தடாவிய) என்று; தடாவுதல் - வளைவாய், அதாவது - வக்ரமாய், அம்புக்கு வக்ரமாவது - மர்மத்திலே படுகை. அருளிச்செய்கிறார், 'தடாவிய' என்றதுக்கு மூன்று பொருள்: அதாவது - தடாவுதல் - வளைதலாய், வளைவாயம்பென்றபடியாய், அர்த்த சந்த்ராகாரமான பெருவாயம்பென்னுதல்; விலங்குகையாய், வக்ரமாயிருக்கிற அம்பென்னுதல்; தடாவுதல் - ஸ்பர்ஶிக்கையாய், வில்லோடேகூடப் பிடித்த அம்பென்னுதல்: இந்த மூன்றர்த்தத்தையும் அடைவே விவரிக்கிறார், பரந்தவாயம்பும்) இத்யாதி வாக்யத்ரயத்தாலே; முந்தின அர்த்தவிவரணம்-) (புடைபெருத்திருக்கை) இத்யாதி வாக்யத்வயமும்; இரண்டாமர்த்த விவரணம் - (கோடிவருகிறது) இத்யாதி; கோடி-வக்ரமாய்; மூன்றாமர்த்த விவரணம் - (பிடித்தபிடியிலே) இத்யாதி. அருளிச்செய்கிறார், 'தடாவிய' என்றதுக்கு நாலுபொருளாகவுமாம்: அதாவது - தடாவுதல் - பரப்பாய், பரந்த வாயையுடைய அம்பென்னுதல்; தடாவுதல்-தட்டுதலாய், ஸ்பர்ஶித்தபோது தெரியுமதாய்க் காணுக்கோலென்னுதல்; வில்லோடே ஸ்பர்ஶித்த அம்பென்னுதல்; வக்ரமான அம்பென்னுதல். 'முரிந்த' என்றது - வளைந்த என்றபடி. 'முரிக்கப்பட்ட' என்னாதே 'முரிந்த' என்கையாலே, அகர்த்ருகமாய், விஷயம் பாற்றம் போராமையாலே, அகர்மகமாயிருக்கை. அம்புகளுஞ் சிலைகளுமென்னாதே, 'அம்பு' என்று ஏகவசநமாய், 'சிலைகள்' என்று பஹுவசநமா யிருப்பா னென்னென்ன, அருளிச்செய்கிறார்; (அம்பென்கிறது - ஜாதிப்பன்மையாலே) என்று, 'ஜாதிப்பன்மை-' ஜாத்யேகவசநம், அம்பென்று கண்களையும், சிலைகளென்று ப்ருக்களையுஞ் சொல்லுகிறது. (போகவிட்டு) என்றது - ப்ரத்யாஹரித்து என்றபடி. 'தன்னுடைய ஸ்த்ரீத்வத்தோடே பாவம்' என்ற வாக்யமும், 'இவளைப் பிராட்டியாக வுடையவன்' என்ற வாக்யமும் ஸந்திக்தங்கள். (தன்னுடைய ஸ்த்ரீத்வத்தோடே பாவம்)

வ்யா||வம்; போகவிட்டுக்கடாயின தடாவிய அம்பையும் முரிந்த சிலைகளையுந் தன்பக்கலிலே ப்ரத்யாஹரித்து. (ஒல்கும் வல்லி இதேனும்) ஒடுங்குகிற வல்லியேயாகிலும்; தனக்கென்ன ஒரு கொள்கொம்பைப் பற்றியல்லது நிற்கவொண்ணாதவளவிலுஞ் செயல்கள் இப்படியாயிருக்கை. (அசுரர் மங்கக் கடாவியவேகப்பறவையின் பாகன்) ப்ரதிபக்ஷம் முடியும்படிக்கீடான மிடுக்கையுடைய பெரியதிருவடியை நடத்துகிற நிர்வாஹகன்; ஸர்வேஶ்வரன் காணவந்த சோழரோபாதி எதிரிகளை முடிக்கைக்குத் தானே அமையும். 'பறவையின் பாகன்' என்றது-ஸர்வேஶ்வரத்வஸூசகம். (மதனசெங்கோல்நடாவிய) இவளைப்பிராட்டியாக வுடையவன், காமனுடைய ஆஜ்ஞையை நிர்வஹிக்கிற. (கூற்றம்) அவனைப்போலே பாணங்களாலே மோஹிக்கப்பண்ணுகையன்றிக்கே,தானே முடிக்குமை யென்கிறது. (உயிர் காமின்கள் ஞாலத்துள்ளே) ஜீவிக்க நினைத்திருப்பார் தந்தாமை நோக்கிக் கொள்ளுங்கோள்.

ஸ்வா.—'ஸம்ஸாரத்திலே குடியுந் தடியுமாயிருக்க நினைத்தார், ஆழ்வார் திருப்புளிக்கீழ இருக்கும் இருப்புக்காணச் செல்லாதே கொள்ளுங்கோள்' என்கிறது.

---

அரு||என்றது-தன்னுடைய ஸ்த்ரீத்வத்தை நோக்கவேணுமென்கிற அபிப்ராயத்தாலே கடாக்ஷியாதே தன்பக்கலிலே ப்ரத்யாஹரித்ததை ஆரெதிராகப் போகவிடுகிறோமென்று ப்ரத்யாஹ்ரித்ததாக உத்ப்ரேக்ஷிக்கிற தென்றபடியென்னவுமாம். 'கடாயின-'கடத்தின; நோக்கின என்றபடி. (போகவிட்டு) என்றது, (கடாயின) என்றது - த்விருக்திபோலே இருக்கையாலே, அந்வயிக்கிறார்; (கடாயின) இத்யாதி- (செயல்கள்) என்றன - ம்ருத்யுவைப்போலே பாதகமாயிருக்கை முதலானவை. அசுரர் மங்கும்படியான வேகத்தையுடைய பெரியதிருவடியை நடத்துகிற பாகனென்னு மபதார்த்தம். பாகனுடைய மகனான காம னென்றபடி; ஸ்வாபதேஶத்துக்கு, பெரிய திருவடிக்கு நிர்வாஹகனாகையாலே விலக்ஷணனான ஈஶ்வரன்விஷயத்திலே நிரந்தர காமுகதையை நிர்வஹிப்பதான கூற்ற மென்றபடி. (தானேமுடிக்கை) என்றது - தன்னுடைய ஸந்நிவேஶமே முடிக்கை யென்றபடி.

[கடாயின தடாவிய அம்பும் முரிந்த சிலைகளும் போகவிட்டுக்கொண்டு ஒல்கும் வல்லி இதேனும் அசுரர்மங்கக்கடாவிய வேகப்பறவையின் பாகன் மதனசெங்கோல் நடாவிய கூற்றங் கண்டீர்; ஞாலத்துள்ளே யிருக்கிறவர்களே! உயிர்காமின்கள் என்று அந்வயம். (சு)

[அப்பு அரும்பதம்.]

ஆறும்பாட்டு.—கீழ்ச்சொன்ன துறைக்கு அர்த்தம் - ஸம்ஶ்லேஷபரிசயமில்லாத புதுநாயகன் நாயகியினுடைய ஸௌந்தர்யாதிகுணங்களிலே அகப்பட்டு அத்தைக்கொண்டாடுகை; நாயகர்-பாகவதர்கள். 'அம்பு' என்று-கண்ணையும், 'வில்' என்று-புருவத்தையுஞ் சொல்லுகிறது. தடாவுகை - பரம்புகையாய், பெருவாயம்பென்னுதல்; தடாவுகை-விலங்குகையாய், கோணிவருகிற அம்பென்னுதல்: இத்தை அருளிச்செய்கிறார், (காணுக்கோல்) இத்யாதி-வருகிறது தெரியாமற் படும்போது தெரிகை; முந்தினதை விவரிக்கிறார், (வில்லேலாடே) இத்யாதி; இரண்டாவதை விவரிக்கிறார், (தடாவிய) இத்யாதி; கிரியவும் விவரிக்கிறார், (கோடிவருகிறது) இத்யாதி வாக்யத்வயத்தாலே. முரிகை-வளைகை: அகர்மகமாய்த் தனக்கு விஷயமு மின்றிக்கே, அகர்த்ருகமாய்த் தன்னை வளைக்கக் கர்த்தாவு மின்றிக்கே யிருக்கை; எப்போதும் வளைந்திருக்கு மென்றபடி. 'அம்பு' என்று-ஏகவசநமாய், 'சிலைகளும்' என்று-பஹுவசநமாகச்சொல்லுவானென்னென்னில் என்று ஶங்காபிப்ராயம். கண்கள் இரண்டானாலுங் கடாக்ஷங்கள் திரளாகையாலே, 'அம்பு' என்றது - ஜாதிபரமாய்த் திரளைக் காட்டுகிறது; ஏகவசநம்-ஜாதிபரம். 'ஸ்த்ரீத்வத்தோடேபாவம்' -ஸம்ப்ரதாயமில்லை; ஆனாலுந் தன்னுடைய ஸ்த்ரீத்வமதிப்பாலே உத்தமநாயகனில்லாமையாலே கம்பீரையாய்ப் பாரேனென்றிருக்கிறாளென்று தோற்றுகிறது. 'கடாயின' - ஏறி நடத்தாநிற்கிற, கண்களை, 'ப்ரத்யாஹரித்து-' உள்ளே அடக்கி; விஷயமில்லாமையாலே பார்க்கிற கண்களைத் திருப்பினாளென்றபடி. 'வல்லியிதேனும்'-நாயகஸம்ஶ்லேஷமொழியத் தரியாதவளவிலும் மதிப்பாலே பார்க்கிறாளென்றபடி. 'செயல்கள்'-வ்யாபாரங்கள். வேகம் - வேக(ரீX)மாய், அத்தால் பறக்கைச் சொல்லுகிறது. 'வேகப்பறவை' என்றதைப்பற்ற அருளிச்செய்கிறார்; (ஸர்வேஶ்வரன்) இத்யாதி. 'காணவந்த'-யுத்தம் பண்ணவருகையன்றிக்கே யுத்தம்பார்க்க வந்த, ராஜாக்களென்றபடி. அவனுடைய மந்மதாஜ்ஞையை நடத்துகையாலே, (இவளைப் பிராட்டி) என்கிறது; மந்மதாஜ்ஞை நடத்துமவள் நாயகி யென்றபடி. 'அவனைப்போலே-' மந்மதனைப்போலே. 'கூற்றம்' என்கையாலே, 'முடிக்கை' என்கிறது. இது, பா(ஞா)ணவ்யாவ்ருத்தி. பறவையின் பாகன் பரிகரமான காமனுடைய ஆஜ்ஞையை நடத்துகை-நாயகனைத் தன்வஶமாக்குகை; அந்யாபதேஶம். பறவையின் பாகனுடைய காமத்தை-அவன் விஷயமான பக்தியை, நடத்துகிற என்று ஸ்வாபதேசம். 'குடியுந் தடியும்'—குடி- க்ருஹம்; தடி-க்ஷேத்ரம். ஆழ்வாரை ஸேவிக்கவே ஸம்ஸாரம் அடியறு மென்றபடி.

[கடாயின தடாவிய அம்பும் முரிந்த சிலைகளும் போகவிட்டுக்கொண்டு ஒல்கும் வல்லி இதேனுங் கூற்றங்கண்டீர்; ஞாலத்துள்ளே உயிர்காமின்கள் என்று அந்வயம்.] (௬)

[வேறொரு அரும்பதம்.]

இரும்பாட்டு.—கீழ்ச்சொன்ன நறையிற் காட்சியை இப்பாட்டுச் சொல்லுமென்று அவதாரிகை-(நாயகி) இத்யாதி. கீழ்தாய்பேச்சாலே தமக்குப்பிறந்த ஜ்ஞாநவைபவத்தைப்பேசின ஆழ்வார், நாயகன்வார்த்தையாலே தம்முடைய வைபவத்தைப் பேசுகிறாரென்று ஸங்கதி. இங்கு 'நாயகன்' என்றது-கடகரான ஸூரியை; (க) "நாயகனாய்நின்ற நந்தகோபனுடைய கோயில்காப்பான்" என்றாற்போலே உபகாராதிசயத்தாலே நாயகனென்பது. (ஸத்தை கொண்டு) என்றது - உயிர்காமின்கள்' என்றதைப்பற்ற. தடாவுகை - பரம்புகையென்று அர்த்தம் அருளிச்செய்து, விலங்குகையாய், காணாமல்வருகையென்று அர்த்தாந்தரம் அருளிச்செய்கிறார்; (காண) இத்யாதி: கடைக்கண் பார்வையாகையாலே, வருகிறது தெரியாமற் பட்டபின் தெரிகை, முந்தின அர்த்தத்தை விவரிக்கிறார்; (வில்லோடே) இத்யாதி: அதாவது - கண் அம்பும், புருவம் வில்லு மாகையாலே, புருவந்தோடேயொத்த கண் என்றதாய், விசாலநேத்ரை யென்றபடி. இரண்டாம் அர்த்தத்தை விவரிக்கிறார்; (தடாவிய) இத்யாதி வாக்யத்வயத்தாலே, 'கோடிவருகிறது' - கோணிவருகிறது என்றபடி. 'மூரித்த' - வளைந்த என்றாய், அத்தாலே பலிதம்-(அகர்மக) இத்யாதி; தானே வளைந்திருக்கையாலே இன்னார்க்காக வளைந்ததென்றும், இன்னார் வளைத்தாரென்றுஞ் சொல்லவொண்ணாதே, வளைந்தே யிருக்குமென்கை: ஒருத்தரைக்குறித்து வளைத்தாலிறே, ஸகர்மகமாவது கார்முகம்; ஒருத்தர் வளைத்தாலன்றோ, ஸகர்த்ருகமாவது. (ஜாதிப்பன்மையாலே) என்றது - ஜாதியினுடைய பஹுத்வம்; அதாவது - பஹுவ்யக்தி நிஷ்டமாயிறே ஜாதி இருப்பது. அத்தைப்பற்ற ஜாத்யபிப்ராயேண அம்பென்று ஏகவசநமாகச்சொன்னதென்றபடி. பார்வைகள் பலவகை யாகையாலே, அவற்றையெல்லாஞ் சொல்லுமென்கிற தென்று கருத்து. 'போக' என்றும், 'இட்டு' என்றும் இரண்டுபதமாக்கி, 'இட்டு' என்றதுக்குத் தாத்பர்யம் - (ஆரெதிர்) இத்யாதி; 'போக' என்றதுக்குபாவம், போக்க என்றாக்கிபாவம்-(தன்னுடைய) இத்யாதி. அந்வயங் காட்டாநின்று கொண்டு பலிதார்த்தம் அருளிச்செய்கிறார்; (கடாயின) இத்யாதி. 'கடாயின -' கடத்தத்தக்கவையான; இத்தால், தம்முடைய அத்யந்த பாரதந்த்ர்யாநுஸந்தாநத்தால் 'இந்தலோகத்தி லாருண்டோ' என்று திருக்கண் திறவாம லிருந்த வைபவஞ் சொன்னபடி. யத்வா, 'போகவிட்டு' என்றது - போகட்டு என்று முழுச்சொல்லாய், அர்த்தம்-(ஆர்) இத்யாதி; விவரணம் - (தன்னுடைய) இத்யாதிவாக்யத்வயமென்றுமாம். தாத்பர்யம் அருளிச்செய்கிறார்; (தனக்கு) இத்யாதி. 'செயல்கள்-' வ்யாபாரங்கள். (இப்படியாய்) என்றது - ஒருவரையும் பாராதே யென்றபடி. அசுரர் மங்கும்படி, கடாவிய-நடத்தப்பட்ட என்று ஶப்தார்த்தமாய், நடக்கையே அஸுரர் மங்குகைக்கு ஹேதுவென்று விவக்ஷித்து

(க) திருப்பாவை, ௧௬.

அருளிச்செய்கிறார்; (ப்ரதியக்ஷம்) இத்யாதி. 'தானைவந்த-' யுத்தம்பார்க்க வந்த. 'தானே-' திருவடிதானே. 'இவனே-' இந்த கல்வியானது, 'ப்ராட்டியாகவுடையவன்' என்றது-பரமையின் பாகனுடைய மதனகோல் நடத்துகையாலே. ஸ்ரீருக்மிணிப்பிராட்டியைப்பிராட்டியுடைய வென்றபடி. 'அம்பும் முரிந்த சிலைகளும் போகட்டுச் சொன்றொல்லும் வல்வி' என்றதைக் கடாக்ஷித்து, வ்யாவர்த்ய பூர்வகம் விவரிக்கிறார்; (அவனை) இத்யாதி. (குடி) என்றது-க்ருஹம்; (தடி) என்றது - க்ஷேத்ரம். (௬)

தாத்பர்யம் —இப்பாசுரத்திலாழ்வார், பகவத்ப்ராவண்யத்தாலே நேத்ரங்களை மூடிக்கொண்டு தமேகத்யானபரராயிக்க அப்போது தம்மைக்கண்ட பாகவதர் சொன்னபாசுரத்தை, நாயகியின் கடாக்ஷத்தில் மூழ்கின நாயகன் சொல்லும் வார்த்தையாலே யருளிச்செய்கிறார்.—

இந்தநாயகி, எப்போதும்வளைந்திருந்துள்ள தனுஸ்ஸைப்போன்ற தன்னுடையவட்டமாகிய புருவங்களைநெறித்து, மேல்விழுந்து துளைக்கும் பாணம்போல அதிதீக்ஷ்ணமாய் விலாசமானகண்களைத்திறந்து பார்க்கைக்குத்தகுந்த விஷயமொருவருமில்லையென்று அவற்றை வெளிவிடாமல் தன்னிடத்திலே யடக்கிக்கொண்டவளாய், கொடிபோல் அதிதுர்பலையாயிருக்கச் செய்தேயும், சத்ருவர்க்கம் மாளும்படியான ஆதிக்யத்தையுடைய பெரியதிருவடியை வாஹநமாக வுடைய ஸர்வேச்வரனுக்குப் புத்ரனாகிய மன்மதனுடைய ஆஜ்ஞையை அப்ரதிஹதமாய் நடத்தக்கடவதான ம்ருத்யுவாக வென்றுணர்க்கோள். பூலோகத்தில் நீங்கள் சிலகாலம் பிழைத்திருக்கவேண்டுமாகில் உங்கள் ப்ராணனை இவள் கையிலகப்படாதபடி ஜாக்ரதையாய் ரக்ஷித்துக்கொள்ளுங்கோள். (௬)

ஞாலம்பனிப்பச் ‡ செறுத்துநன்னீரிட்டுக்கால்சிதைந்து
நீலவல்லேறுபொராநின்றவானமிது, திருமால்
கோலஞ்சுமந்து பிரிந்தார்கொடுமை குழறுதண்பூங்
காலங்கொலோவறியேன், வினையாட்டியேன்காண்கின்றவே. ௭.

அர்த்தம்.—இது-இது, நீலம்-கறுத்தும், வல்-பலிஷ்டமுமான, ஏறு-வ்ருஷபங்கள், ஞாலம் - பூமி, பனிப்ப-நடுங்கும்படி, செறுத்து - கோபித்து, நல் நீர் - நல்லமதஜலத்தை, இட்டு - பெருக்கிக்கொண்டு, கால்சிதைந்து - கால்பிறாண்டிக்கொண்டு, பொராநின்ற - சண்டைபோடுகிற, வானம் - ஆகாசம்; (இல்லாவிட்டால்), வினையாட்டியேன் - பாபமுடையநான், காண்கின்ற - பார்க்கிற, இது-இது, திருமால் - ஸ்ரிய:பதியினுடைய, கோலம்-வேஷத்தை, சுமந்து - வஹித்து, பிரிந்தார் - விரஹிணிகளுடைய, கொடுமை-(துக்க) க்ரௌர்யத்தை, குழறும் (அக்ஷரமாக) - சொல்லுகிற, தண் - குளிர்ந்த, பூ - அழகிய, காலங்கொலோ - (வர்ஷா) காலந்தானோ, அறியேன் - நிர்ணயிக்கமாட்டுகிறிலேன். (௭)

‡ (பா) செறித்து.

[அப்பிள்ளை உரை.]

அவ.—ஏழாம்பாட்டு.—'வர்ஷஸமயத்திலே வருகிறேன்' என்று பிரிந்த தலைமகன் வாராதே சொன்னவன் வரவு தாழ்க்க, அந்தக் காலதர்ஸநத்தாலே நோவுபடுகிற தலைமகளைத் தோழியானவள் 'சொன்னகால மன்று' என்று காலத்தை மயக்குகிறாள்.

உரை.—(ஞாலம் பனிப்பச்செறுத்து நல் நீர் இட்டுக் கால்சிலைத்து நீல வல் ஏறு பொராநின்ற வானம் இது) பூமியடைய நடுங்கும்படி செறித்து நன்றான நீரை இட்டுக் கால்விழுந்து கறுத்த நிறத்தை யுடைத்தாய் வலிய வான ருஷபங்கள் பொராநின்ற ஆகாஸமானது. (திருமால் கோலஞ் சுமந்து பிரிந்தார் கொடுமை குழறு தண் பூங்காலங்கொலோ.) ஸ்ரிய:பதியுடைய வடிவைத் தரித்து நம்மை விஸ்லேஷித்தவருடைய கொடுமையைச்சொல்லா நின்றிருந்துள்ள குளிர்ந்த அழகிய காலமோ? (அறியேன்) அறிகிறிலேன், திருமால்கோலஞ்சுமந்து நீலவல்லேறு பொராநின்ற வானமிது வென்றுமாம். (வினையாட்டியேன் காண்கின்றவே) இவளை இப்படி காண்கைக்கிடான பாபத்தைப்பண்ணின நான் காண்கின்ற இவை.

ஸ்வா.—ஸ்ரீவைஷ்ணவர்களைப் பிரிந்தால், அவர்கள் வருமளவும் தரிக்க வொண்ணாத ஆழ்வார் தசையைச் சொல்லுகிறது. (எ)

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—ஏழாம்பாட்டு.—துறை-காலமயக்கு: வர்ஷாவிலே வரக்கடவதாகக் காலங்குறித்துப் போன தலைமகன் வர்ஷாவாகச்செய்தே வாராதொழிய, இவ்வளவிலே தலைமகள் மோஹிக்கிறபடியைக் கண்ட தோழி, அவன் வருமளவும் இவள் ஸத்தையைத் தரிப்பிக்கைக்காக 'வர்ஷாவந்ததன்று; கறுத்தனஇரண்டு ருஷபம் அந்யோந்யம் விரோதத்தாலே பூமியில்இடம்போராமைஆகாஸத்திலே பிணங்குகிறதுகாண்' என்று, ப்ரபஞ்சாபலாபம் பண்ணுவாரைப்போலே காலத்தைக்ஷேபிக்கிறாள். ப்ரபஞ்சாபலாபம் பண்ணி, 'ஈஸ்வரனும் ஜகத்தும் இல்லை' என்பார்கள்; இவள் ஜகத்தும் ஈஸ்வரனும் உண்டாகைக்காகச் செய்கிறாள். இப்படி காலக்ஷேபம் பண்ணுதொழியில், நாயகி ஆற்றாளாய் முடியும்;

அரு||ஏழாம்பாட்டு,—(காலமயக்கு) என்றது-வர்ஷாகாலம் வந்திருக்க அதை அந்யதாவாக்குகை. 'பிணங்குகிறது-' யுத்தம்பண்ணுகிறது. 'க்ஷேபிக்கிறாள்'-அந்யதாகரிக்கிறாள். ஆனால் பாஹ்யரைப்போலே அபலபிக்கலாமோவென்ன, அருளிச்செய்கிறார். (ப்ரபஞ்ச)இத்யாதி. இப்படி காலத்தை அந்யதாகரியாவிட்டால் ஜகத்தும் ஈஸ்வரனும் இல்லாதே போய்விடுமோ வென்ன, அருளிச்செய்கிறார்; (இப்படி காலக்ஷேபம்) என்று. 'காலக்ஷேபம் பண்ணுதொழியில்' - காலத்தை அந்யதாகரியாவிடில் என்றபடி. 'ஞாலம் பனிப்பச் செறு

வ்யா || இவள் இல்லையாகவே, அவன் இல்லையாம்; பின்னை விபூதியாக இல்லையாம்.

வ்யா.—(ஞாலம் பனிப்பச் செறுத்து) 'லோகமடங்க இவ்வ திவ்ருஷ்டியாலே குளிர்ந்து நடுங்குகிறபடி பாராய்' என்று நாயகி சொல்ல, 'அங்ஙனல்லகாண்; இவை அயோக்யம் பிணங்குகிறபடியைக் கண்டு பீதியாலே நடுங்குகிறபடி காண்.' (செறுத்து) அயோக்யஞ் சீற்றமிருந்தபடி. (நல் நீர் இட்டு) நெடும்போது வர்ஷித்தபடியாலே தரையில் அழுக்குக் கழிந்து அள்ளிப் பருகலாம்படி பெருகுகிற நீரைக் கண்டு, 'இப்பரிசுத்தமான ஜலஸம்ருத்திக்கு அடி என்' என்ன; 'விலக்ஷணமான ருஷபங்கள் சீற்றத்தாலே எப்போதும் நீரிடுகிறபடிகாண்.' (கால்சிதைந்து) வர்ஷத்தினுடைய பூர்வாவஸ்தையிலே 'கால்விழவு' என்று சொல்லுமளவு தவிர்ந்து, வர்ஷத்தினிடை மத்யமமாயிற்று; பூர்வாவஸ்தையிற் காற்றுத் தவிர்ந்து நிலைநின்ற வர்ஷமேயாயிற்று' என்று சொல்ல, 'அங்ஙனல்லகாண்; கோபத்தாலே கால்சிதைகொள்ளுகிறபடிகாண். (நீல வல் ஏறு பொராநின்ற வானம் இது) கறுத்து மிடுக்கையுடைத்தான ருஷபங்கள் இடைவிடாதே பொருகிற ஆகாசங்காண். (திருமால் கோலஞ்

---

அரு|| த்து'–பனிப்பாலே நடுங்குதலைச்சொல்லி, ஞாலமெல்லாம் நடுங்கும்படி, செறுத்து-கோபித்து.மேகமென்று நாயகி சொல்லுகிறபக்ஷத்தில் 'கால்சிதைந்து' என்றதுக்கு இரண்டு பொருள் அருளிச்செய்கிறார்: அதாவது - 'கால்' என்று - மழைக்காலாய், வர்ஷிக்க உத்யோகிக்கிற வளவிலே அங்ஙனுக்கன் சிதறிப்போய்ப் பெய்யுமது; அதைக் கால்விழவென்று சொல்லக்கடவது; அது சிதைகையாவது-அப்படி சிதறிப் பெய்யுமது தவிர்ந்து நல்ல நடு மழையாயிற்று இது என்று ஒருபொருள்: 'கால்' என்று காற்றாய், 'சிதைந்து' என்றது - அந்தக் காற்றுப்போய் நிலைநின்ற வர்ஷமாயிற்று இது. என்னுதல், இவவிரண்டையும் அடைவே அருளிச்செய்கிறார்; (வர்ஷத்தினுடைய) இத்யாதி வாக்யத்வயத்தாலே. ருஷபங்களென்று சொல்லுகிற தோழிபக்ஷத்திலே 'கால்சிதைந்து' என்றது – ருஷபங்கள் கால்பிறண்டுகொள்ளுகிறது என்று அருளிச்செய்கிறார்; (அங்ஙனல்லகாண்) இத்யாதி. 'அங்ஙனல்லகாண்-' நிலைநின்ற வர்ஷாகாலமல்லகாண். (வர்ஷத்தினுடைய பூர்வாவஸ்தையிலே கால்விழவென்று சொல்லுமளவு தவிர்ந்து வர்ஷத்தினுடைய மத்யமமாயிற்று) என்றது - தாராவர்ஷந் தவிர்ந்து, வர்ஷதாரை முறிந்துவிழுகை. (இச்சொல்லாலே இவற்றைச் சொல்லுவானென்னென்னில்) என்றது - பிராட்டியும் ஈஶ்வரனுமான சேர்த்தியை த்ருஷ்டாந்தமாகச் சொல்லுகிறது, மேகத்துக்காயிருக்க, ருஷபங்களுக்குச் சொல்லுகிற தென்னென்றபடி; பிராட்டி

வ்யா|| சுமந்து நீலவல்லேறு பொராகின்ற வானம் இது)இச்சொல்லாலே இவற்றைச்சொல்லுவானென்னென்னில்,—இவை விலக்ஷணமப்பத்ததாலே சொல்லக்கடவதுகாண்.முடியப் பொய்சொல்லுமதன்றிக்கே, தன்னை விச்வஸிக்கைக்காகத் தானுங் காலத்தை ஸம்ஶயிக்கிறாள்,இத்தசை வந்தால் நாயகன்வரவு ஸம்பவிக்குமென்னுமத்தாலே. (திருமால் கோலஞ் சுமந்து பிரிந்தார் கொடுமை குழறு ) அவனுக்குப் போலியான வடிவோடேகூட நின்று 'நான் வந்தபின்பு அவன் வந்திலன் கண்டாயே' என்று அவனுடைய குற்றத்தை இவளுக்கு முன்னிடுகிறாற்போலே யிராநின்றது, குழறுகிறபடி. (தண் பூங்காலங்கொலோ அறியேன் ) குளிர்ந்து அழகிதான காலமோ அறிகிறிலேன்; ஸம்போகயோக்யமான காலந்தானோவென்றபடி. (வினையாட்டியேன் காண்கின்றவே) அவன் உகப்பாரைக் கைவிடுமவனுமன்று; இவளுக்கு ஆசை இல்லாமையன்று; வரவேண்டும் தசை இல்லாமையன்று; ப்ராப்தி இல்லாமையன்று; காண்கிற என் பாபமித்தனையிறே: (க) "மத்பாபமேவாத்ரநிமித்தம் - மத்பாபமேவாத்ர நிமித்தம்."

ஸ்வா.—ஆழ்வாருடைய விச்லேஷதசையைக் கண்ட வைஷ்ணவர்களுக்கு ப்ரபஞ்சாபலாபம் பண்ணியாகிலும் தரிப்பிக்கவேண்டியிருக்கிறபடி.

---

அரு||யும் ஈச்வரனுங் கூடினால் மின்னும் மேகமும்போலே யிருப்பர்களாகையாலே; திருமாலை மேகத்துக்கு த்ருஷ்டாந்தமாகச் சொல்லலாம். (முடியப் பொய்சொல்லுமதன்றிக்கே, தன்னை விச்வஸிக்கைக்காகத்தானுங் காலத்தை ஸம்ஶயிக்கிறாள்) என்றது-முடிய அஸத்யஞ்சொன்னால் இவள் விச்வஸியாளென்று பார்த்துத் தன்னை விச்வஸிக்கைக்காக வர்ஷாகாலந்தானோ வென்று ஸந்தேஹிக்கிறாளென்றபடி. (இத்தசைவந்தால்) என்றது-நாயகிக்கு இந்த அவஸ்த்தை பிறந்தாலென்றபடி. 'திருமால் கோலஞ் சுமந்து' என்றதை மேலேகூட்டுதல். குழறுகிறது, மேகம்; மேகம்-அத்த்யாஹார்யம். (விடுமவனுமன்று) என்றது-'திருமால்' என்றத்தைப்பற்ற; ப்ராப்தியும் இதிலே ஸித்தம்.

[ஞாலம்பனிப்பச் செறுத்து நன்னீரிட்டுக் கால்சிதைந்து திருமால் கோலஞ்சுமந்து நீலவல்லேறு பொராநின்ற வானம் இது; அன்றியே வினையாட்டியேன் காண்கின்ற திருமால்கோலஞ்சுமந்து பிரிந்தார்கொடுமை குழறு தண்பூங்காலங்கொலோ? அறியேன் என்று அந்வயம்.] (௭)

[அப்புஅரும்பதம்.]

ஏழாம்பாட்டு,—'காலமயக்கு-' "வர்ஷாகாலமன்று"என்று காலத்தை அந்யதாகரிக்கை.'ப்ரபஞ்சாபலாபம்-' ப்ரத்யக்ஷமான ஜகத்தை இல்லையென்று அப

லாபம்பண்ணுகை, தள்ளுகையென்றபடி: இப்படி சொல்லுவார், பௌத்தர், 'காலக்ஷேபம்'-சாடு,நாயகிதரிக்கைக்காக மேகங்களை இரண்டெருதாக நிரூபிக்கிறாள். நாயகிவார்த்தையான இடம் - அத்யாஹாரியம். பனிப்பு - குளிர்த்தியாய், அர்த்தாத் நடுக்கம். 'கால்-'மேகத்தினுடைய கால்விழுகையாதல், காற்றாதல். 'கால்சிதை' கால்சிக்கை, 'இச்சொல்லு-' எருதுகளைத் திருமாலுடைய கோலத்தைச் சுமந்து என்கிற இச்சொல்லாலே அய்யதா கரித்தபடியே விராமற் காலத்தை ஸம்சயிக்கிறது - முடியப் பொய் சொல்ல வொண்ணாதெ. ன்மைக்காக வாதல்; அவன் வந்தாலும் வருமென்றுமத்தாலே யாதல். 'இத்தசை' - வர்ஷாகாலம். குழறுகை - மேகம் கர்ஜிக்கை. வார்ஷிகீம் தஸா' - வர்ஷாகாலம்.

[காண்கின்ற இது வானத்திலே பொராகின்ற நிலைவல்லேறு. அல்லியே காலங்கொலோ? அறியேன் என்று அர்யாம்.] (௭)

[வேறொரு அரும்பதம்.]

ஏழாம்பாட்டு.—இழ்ப்பாட்டிலேகடகத்யாப்ராப்யபூதரான பாகவதர்பாகரத்தாலே தம்முடைய ததேகத்யாநத்தைக்கொண்டாடின ஆழ்வார், இஸ்ஸம்பந்தம் பெறாதே த்வரை விஞ்சினபடியை உசாத்துணையான பாகவதர்பேச்சாலே பேசுகிறாரென்று ஸங்கதி. அந்யாபதேஶத்திலே இப்பாட்டுக்குக் கிளவித்துறையில் இன்னதென்கிறார்; (துறை) இத்யாதி. காலமயக்கு-வர்ஷாகாலத்தை அதன்றென்று மயங்கும்படி பண்ணுகை. இந்தத் துறைதன்னை விவரிக்கிறார்; (வர்ஷாவிலே) இத்யாதி. 'க்ஷேபிக்கிறார்-' தள்ளுகிறார். (ப்ரபஞ்சாபலாபம் பண்ணுவார்) என்றது ஆரையென்ன, பௌத்தரையென்னுமிடந்தோன்ற அருளிச்செய்கிறார்; (ப்ரபஞ்ச) இத்யாதி. இவள் இப்படி பொய்சொல்லலாமோவென்னில், (இவள்) இத்யாதி. பனிப்பு-குளிர்த்தியாய்,அத்தாலே நடுக்குகை அர்த்தஸித்தமாக்கி, நாயகிவார்த்தைக்கு உத்தரமாகத் தாத்பர்யம்-(ஶ்லோகம்)இத்யாதி. 'நல்'என்று விஶேஷித்ததுக்கு பாவக தந முகே:(ஶ்ராந்தஶ்ரமயுதீவ) அருளிச்செய்கிறார்; (நெடும்போது) இத்யாதி.(கால்)என்றது-காற்றாக அர்த்தாந்தரம்-(பூர்வாவஸ்த்தையில்)இத்யாதி, கால்சிதைக்கை-கால்சீக்கை; காலாலே தரையைக்கிறுகை. (இச்சொல்) என்றது-ருஷபங்களைத் திருமால்கோலஞ் சுமந்ததாகச் சொன்ன சொல்லென்கை. மேலே 'பூங்காலங்கொலோ என்று ஸம்ஶயிக்கைக்கு இரண்டுவிதமாக்கி ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார் (முடிய) இத்யாதி வாக்யத்வயத்தாலே. 'இத்தஶா'-வர்ஷாகாலம். 'திருமால் கோலஞ்சுமந்து' என்று மேலும் கூட்டி அருளிச்செய்கிறார்; (திருமால்) இத்யாதி.குழறுகிறபடி - கர்ஜிக்கிறபடி. 'திருமால்' என்றதைப்பற்ற அருளிச்செய்கிறார்; (அவன்) இத்யாதி. (௭)

தாத்பர்யம்.—இப்பாசுரத்தில், ஆழ்வார், தமக்கு பகவத்ப்ராவண்யம் மேலிட்டு அநுபவ ப்ராப்தியுண்டாக வேண்டுமளவிலும் அதுண்டாகாமை

யாலே கலங்கியிருக்க, அப்போதவரை ஆஶ்வஸிப்பித்த பாகவதர்பாசுரத்தை, வர்ஷாகாலத்தில் வருவதாகச் சொல்லிப் போனநாயகன் வர்ஷாகாலத்தில் வாராமையால் தளர்ந்தநாயகியை ஆற்றினதோழியின் பாசுரத்தாலே அருளிச்செய்கிறார்.

ஓ தோழீ! நாயகன் வர்ஷாகாலத்தில் வருவதாகச் சொல்லிப் போனான்; வர்ஷாகாலம்வந்துவிட்டது; மேகங்கள் சுற்றிச்சூழ்ந்து நெருங்கி குளிரவர்ஷிக்கத் தொடங்கிற்று; ஆறுகளும் குளங்களும் பெருகத்தொடங்கிற்று; இப்போதும் நாயகன் வரவில்லையென்று நாயகிசொல்ல, அதற்குத் தோழி, இவளுடைய வ்யஸநத்தை மாற்றக்கருதி இதுவர்ஷாகால மன்றுகாண் என்கிறாள். ஓ ஸகியே! இப்போது நீ ஆகாசத்திற்காண்கிறது மேகமன்று; இரண்டு கறுத்த வ்ருஷபங்கள் பூமியிலிடம்போராமல் ஆகாசத்திற்கிளம்பி, ஒன்றுக்கொன்று சீறிக்கொண்டு பூமியெல்லாம் நடுங்கும்படி கால் பிறாண்டிக்கொண்டு சண்டையிடுகிறது; அதினுடைய மதஜலமே இப்படி துளிக்கிறது. என்று சொல்லி, இப்படி காண்கிற விக்காலத்தை அந்யதாகரித்தால் நம்மிடத்தில் அவிஶ்வாஸம் பிறக்குமென்று நினைத்துச்சொல்லுகிறாள்; ஓ தோழியே! இது ஸ்ரீயஃபதியினுடைய வேஷங்கொண்ட மேகமாயும் ஆகலாம்; இது கர்ஜிப்பதைப்பார்த்தால் நான்வந்தகாலத்திலும், உன்னைவிட்டுப்பிரிந்த நாயகன் வரவில்லையே என்று உன்னுடைய துக்கத்தைக் கேட்கிறாப்போலிருக்கிறது. இந்த உன்னுடைய அவஸ்த்தையைக்காண்பது என்னுடைய பாபமென்றே நினைக்கிறேன்.

---

காண்கின்றனகளுங்கேட்கின்றனகளுங்காணில், இந்நாட்
பாண்குன்றநாடர்பயில்கின்றன, இதெல்லாமறிந்தோ
மாண்குன்றமேந்திதண்மாமலைவேங்கடத்தும்பர்நம்புந்
சேண்குன்றஞ்சென்று,பொருள்படைப்பான் கற்றதிண்ணனவே.

அர்த்தம்.—இந்நாள் - இப்போது, காண்கின்றனகளும் - காணப்படுகிற (உம்முடைய) வ்யாபாரங்களும், கேட்கின்றனகளும் - கேட்கப்படுகிற (உம்முடைய) உக்திகளையும், காணில் - நிரூபித்துப்பார்க்கில், பாண் - (வண்டுகளின்) பாட்டையுடைய, குன்றம் - திருவேங்கடமலையை, நாடர் - நாடாக உடையநீர், பயில்கின்றன - அடுத்தடுத்துச் செய்கிற, இதெல்லாம் - இவைகளெல்லாம், மாண் - அழகிய, குன்றம் - கோவர்த்தநபர்வதத்தை, ஏந்தி - தரித்து, தண் - குளிர்ந்தும், மாமலை - பெரியமலையுமான, வேங்கடத்து - திருவேங்கடத்திலுடையதாய், உம்பர் - நித்யஸூரிகள், நம்பும் - விரும்பத்தக்கதாய், குன்றம் - சிகரத்தை, சென்று - கிட்டி, பொருள் - தநமாகிய திருவேங்கடமுடையானை, படைப்பான் - பெறுகைக்காக, கற்ற - அப்யஸித்த, திண்ணனவு - தார்ட்யம் (வஞ்சனைகள்) (என்று), அறிந்தோம் - தெரிந்துகொண்டோம் -

(அ)

[ அப்பிள்ளை உரை. ]

அவ.—எட்டாம்பாட்டு—தன்னோடு கலந்த தலைவியின் நலத்தின் வ்யாமோஹாதிசயத்தாலே நீசமாகப் பண்ணுகிற உக்திசேஷ்டிதங்களைக் கண்டு, பிரியக்கருதி அத்தாலேபிறக்கிறதாக நினைத்த தலைமகள் தான் அறிந்தபடியைச் சொல்லுகிறாள்.

உரை.—(காண்கின்றனகளுங்கேட்கின்றனகளுங் காணில் இந்நாள் பாண் குன்றநாடர் பயில்கின்றன இது எல்லாம் அறிந்தோம்) செயல்களுஞ் ப்ரலாபவசனமும் அநுஸந்திக்கில் இந்நாள் வண்டுகளின் மிடற்றோசையை யுடைய குறிஞ்சிநிலத்தில் தலைமகனுடைய உன்னுடைய மிக்க ப்ரவ்ருத்திகளை இவையெல்லாம் அறிந்தோம்; பாண்-பாண்மை, (மால் குன்றம் ஏந்தி தண் மாமலை வேங்கடத்து உம்பர் நம்புஞ் சேண் குன்றஞ் சென்று பொருள் படைப்பான் கற்ற திண்ணனவு.) மநோஹரமாய் கோவர்த்தநோத்தாரணம் பண்ணினவனுடைய ஸ்ரமஹரமாய் ஸ்லாக்யமான திருவேங்கடத்து அயர்வறுமமரர்கள் விரும்புவதுஞ்செய்து உயர்ந்த சிகரத்திலே சென்று பொருள் ஸம்பாதிக்கைக்காகக் கற்ற திண்ணனவு.

ஸ்வா.—வைஷ்ணவர்களோட்டை ஸம்ஸ்லேஷத்திலும் பிரிவை சங்கிக்கும்படியாக அபிநிவேசம் மிக்கபடியைச் சொல்லிற்று. இப்பாட்டிலும் மேலிற்பாட்டிலுஞ் சொல்லிற்றாயிற்று, பாகவதஸஹவாஸத்தில் ஆய்விருப் பொழிய வேறு எம்பெருமானுகந்தருளின தேசத்துக்குப்போகநினைக்கை தப்பாய் நினையாமையைப் பெறவேண்டும்படியான பாகவத ஸஹவாஸஸ்லாக்யதை.

[ பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம், ]

அவ.—எட்டாம்பாட்டு.—இப்படி தோழி இவளைத் தரிப்பித்த வளவிலே நாயகன் வந்து இவளோடே அதிமாத்ரமாக ஸம்ஸ்லேஷம் பண்ணினபடியைக் கண்டு, யதா பூர்வமான பரிமாற்றமன்றியே கலவியிலே குவால்வகைகளுண்டாயிருந்து இப்படி செய்கைக்கு அடி பிரியநினைத்தானாகவேணுமென்று அதிசங்கை பண்ணுகிறாள்.

வ்யா.—(காண்கின்றனை) நின்றாற்போலே நில்லாக் காலையெடுத்துத் தலையிலேவைப்பது, கும்பிடுவதாகிறபடி. (கேட்கின்றனை) அடியேனென்பது, வாயதுவிரல், மார்பத்தெழுத்து என்று சொல்லுகிற சாடுஸூக்தங்கள். (காணில்) நிரூபிக்கில்; (க) "நெஞ்சென்னுமுட்கண்ணால் காணும் புணர்ந்து." (இந்நாள்) இன்று. (பாண்)

---

அரு|| எட்டாம்பாட்டு.—தாழ்ந்த பரிமாற்றங்கள் - 'காண்கின்றனை' நீசோக்திகள் - 'கேட்கின்றனை' என்றபடி. நெஞ்சாலே காணலாமோவென்ன, அருளிச்செய்கிறார்; "நெஞ்சென்னுமுட்கண்ணால்" என்று. குன்றநாடர் பயில்கின்

(க) பெரிய திருவந்-௩௪.

வ்யா||புலமையாயிராநின்றது.(பாண் குன்றநாடர்) வண்டுகள் பாடா நின்றுள்ள திருமலையைத் தேசமாகவுடையவர்; குறிஞ்சிநிலத்துத் தலைமகனென்றபடி.(பயில்கின்றன இதுவெல்லாம்அறிந்தோம்) தன் உடைமைக்குத் தான் செய்யுமளவன்றிக்கே பெரும்பேறு பெற்றாற்போலே செய்கிற இவற்றின் மேன்மை அறிந்தோம். (பயில்கின்றன) ஸம்ஶ்லேஷம் உச்சிவிடுவிடாதே யிருக்கிறபடி; மஹாராஜர் பெருமாளை மின்னுக்கும் இடிக்கும் இரையாக விட்டுவைத்துப்போய் உதித்ததும் அஸ்தமித்ததும் அறியாதே யிருந்தாற்போலே. (மாண் குன்றம் ஏந்தி) ஒன்றை ஆதேயமாகக்கொண்டும் ஒன்றை ஆதாரமாகக் கொண்டும் ரக்ஷித்தபடி: மாட்சி - அழகு: (ஏந்தி-) அநாயாஸமா யிருந்தபடி. (தண் மா மலை வேங்கடத்து) (க) "குளிரருவி வேங்கடம்" என்னும்படியே ஶ்ரமஹரமான திருமலை, (உம்பர் நம்பும்-) (உ)"மந்திபாய்வட வேங்கட மாமலை வானவர்கள், சந்தி செய்ய நின்றான்" என்னும்படியே நித்யஸூரிகள் ஸமாராதநம் பண்ணுகிற இடம்; (ந) "ஒக்கச் சந்திப்பார் வேங்கடத் தத்தனை" என்னும்படியே நித்யஸூரிகள் விரும்புகிறபடி; தாங்கள் அநுஸந்தித்த மேன்மையன்றிக்கே, நீர்மை மிக்க இடமானவாறே விரும்புவர்கள். (சேண் குன்றம) உயர்த்தியான ஶிகரங்களென்றுமாம். (பொருள்) நீயே பொருளென்றிருந்தபடி கண்டோம். (படைப்பான்) ஸாத்யங்களிலலை, எல்லாம் ஸித்த மென்றபடி கண்டோம். (கற்ற) இவை பண்டில்லை; இப்போது எங்கே குருகுலவாஸம் பண்ணினீர். (திண்ணனவே) அம்மென்மையெல்லாம் போய்த் திண்மை எங்கே உண்டாயிற்று?()

அரு||றனவான இந்நாள்காண்கின்றனகளுங் கேட்கின்றனகளுங் காணிற்பாண் என்று இதெல்லா மறிந்தோ மென்னுதல். 'பயில்கின்றன' என்றது - உக்தசேஷமாதல். இந்த பக்ஷத்தில் மாநஸமான செறிவு அருளிச்செய்கிறார், ஸம்ஶ்லேஷமாதல், 'பயில்கின்றன' என்கிற வர்த்தமாநதாத்பர்யம் - (உச்சிவிடு) இத்யாதி, 'பாண்' என்று - ஸ்தோத்ரமாய், ஸ்தோத்ரமாயிருந்த தென்றபடி. அருளிச்செய்கிறார், 'பாண்' என்று-காநமாய், வண்டுகளினுடைய காநத்தையுடைத்தான குன்றநாடர் இந்நாள் பயில்கின்றன காண்கின்றனகளுங் கேட்கின்றனகளுங் காணிலறிந்தோ மென்னுதல்; மாண்குன்றமேந்தினவனுடைய தண்மாமலை வேங்கடமாகிற உம்பர்நம்புஞ்சேண்குன்றஞ்சென்று என்னுதல், 'சேண்குன்றம்-' உந்நதமானமலை. அருளிச்செய்கிறார், மாண்குன்றமேந்தினவனுடைய தண்மாமலை வேங்கடமாகிற குன்றத்தினுடைய உம்பர்நம்புஞ் சேண்குன்றஞ் சென்று என்னுதல். 'சேண்' என்று - உயர்த்தியாய், ஶிகரத்தைச் சொல்லுகிறது. நித்யஸூரிகள் விரும்புகிற தென்னென்ன, அருளிச்செய்கிறார், (தாங்கள் அநுஸந்தித்த) என்று.

(க) நாய்ச்சியார் திருமொழி - அ - ஈ. (ஈ)
(உ) அமலனாதிப்பிரான் - ௩,

அரு|| [இந்நாள் காண்கின்றனகளும் என்று தொடங்கிப் பயில்கின்றன இதெல்லாங் கற்ற திண்ணனவு என்றறிந்தோம் இதி அந்வயம்.] (அ)

[அப்ப அரும்பதம்.]

எட்டாம்பாட்டு —'குவால்வகை' - அநேகவகை. காண்கை கண்ணின் வ்யாபாரமன்றோ? 'நிரூபிக்கில்' என்று நெஞ்சின் வ்யாபாரமாகச் சொல்லுகை எப்படி கூடுமென்ன, அருளிச்செய்கிறார் ; "நெஞ்சென்றும்" இத்யாதி. 'புலமை' - ஸ்தோத்ரம்; அர்த்தவாதமாய், பொய்யென்றபடி. 'இந்நாள் பாண்' என்று கீழே கூட்டுதல்; 'பாண் குன்றம்' என்று மேலே கூட்டுதல். இவற்றின் நிசவ்ருத்தி, சாடுரூதங்களாகிற சேஷ்டிதங்களான இவற்றின். பயிலுகைக்கு த்ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார்; (மஹாராஜர்) இத்யாதி. அவர்கள் விரும்புவர்களென்னுமதுக்கு ஸம்வாதமாக, பூர்வத்தில் த்ருநாடகத்தை எடுத்துக் காட்டுகிறார் ; (ஒக்கச்சத்திப்பர்) இத்யாதி - இக்குன்றோடொக்க. 'சேண் குன்றம்-' உயர்ந்த குன்றமாதல் ; குன்றத்திற் சேண் - குன்றத்தில் ப்ரதேசமாதல். 'அம்மென்மை-' கீழ்ச்சொன்ன தாழ்ச்சி.

[குன்றநாடர் இந்நாள் பயில்கின்றனவான காண்கின்றனகளுங் கேட்கின்றனகளுங் காணிற் பாண் ; இதெல்லாம் அறிந்தோம் ; மாண்குன்றமென்று தொடங்கிப் பொருள்படைக்கைக்காகக்கற்ற திண்ணனவு என்று அந்வயம்.]

[வேறொரு அரும்பதம்.]

எட்டாம்பாட்டு,—கீழ் ப்ராப்யபூதரான ஸ்ரீவைஷ்ணவர்கள் விஶ்லேஷத்தாலே நொந்த ஆழ்வாரை உசாத்துணையான பாகவதர் காலயக்கென்கிற துறையாலே தேற்றி ஆஶ்வஸிப்பித்தாற்போலே ஆஶ்வஸிப்பிக்க, அவர்களும் வந்து ஸம்ஶ்லேஷித்திருந்த திருமலைக்குப்போய் * ஸ்ரீநிதியைப்பெறவேணுமென்று பிரியத் தேடி அதுக்கு உறுப்பாகச் சிலதாழ்வுகளைச் செய்யக்கண்ட ஆழ்வார், அர்த்தார்ஜநார்த்தம் போகநினைத்த நாயகனைப் பிரிவாற்றாதே சொல்லுந் துறையாலே அருளிச்செய்கிறாரென்று ஸங்கதி - (இப்படி) இத்யாதி. 'குவால்வகைகள்-' அதிகமான ப்ரகாரங்கள். 'நில்லா-' நின்றுகொண்டு. 'வாயது விரல்-' கால்விரலைக் கவ்வுகிறேனென்றபடி 'காணில்' என்று சொன்னது - நிரூபணமாமோ வென்ன, "நெஞ்சென்னும்" இத்யாதி ; நெஞ்சைக் கண்ணாகச் சொல்லுகையாலே, நிரூபணமாகலாமென்கை. 'புலமை-' ஸ்துதி; அர்த்தவாதமாயிராநின்றதென்றபடி. மேலுக்கு விசேஷணமாக்கி, அர்த்தாந்தரம் - (வண்டுகள்) இத்யாதி. குறிஞ்சிநிலம் மலைச்சாரலாய் அது கூடுமிடமாகையாலே, அதையிட்டு விசேஷித்ததுக்கு பாவம் - கூடியேயிருக்க வேண்டியிருக்கப் பிரியநினைக்கக்கூடுமோ வென்னுங்கருத்தாலே யென்று விவக்ஷித்து, அருளிச்செய்கிறார், (குறிஞ்சி) இத்யாதி. வர்த்தமானார்த்தம் - (ஸம்ஶ்லேஷம்) இத்யாதி. மாண்குன்றத்தை வர்த்திவனுடைய தண்மாமலை யென்று சப்தார்த்தந் திருவுள்ளம்பற்றி, ஏருமலையத்தினதுக்கும், ஒருமலை

யில் நின்றதுக்கும் பாவம் - (ஒன்றை) இத்யாதி. பரமபதத்தை விட்டு வர வேண்டுவானென்னென்ன, (தாங்கள்) இத்யாதி. தண் - குளிர்ந்த, மா - பரப்பையுடைத்தான, மலையான வேங்கடத்தில், சேண் - உயர்த்தியை யுடைத்தான, குன்றம் - நாராயணகிரி முதலானவை யென்று சப்தார்த்தம் விவக்ஷித்து அருளிச்செய்து, 'குன்றம்' என்றது - ஏகதேசவாசியாக ஸமுதாயத்தைச் சொல்லவுமாமென்கிறார்; (உயர்த்தியான) இத்யாதி. பொருள் - திருவேங்கடமுடையானாய், அதைப் படைக்கவேணுமென்று கற்ற, திண்மை - நெஞ்சில்வன்மை யென்று சப்தார்த்தமாய், 'அறிந்தோம்' என்றதுக்குச்சேர வ்யங்க்யமாக பாவங்களை அருளிச்செய்கிறார், (நீயே) இத்யாதி ; நாயகன் நாயகியைப்பார்த்து 'நீயேபொருள்' என்றும், 'எனக்கு இனி ஸித்திக்க வேண்டுவதொரு புருஷார்த்த முண்டோ' என்றுஞ் சொன்னதையெல்லாம் பொய்யாக்கி அபஹஸிக்கிறாரென்று கருத்து. 'மென்மை-' ம்ருதுத்வம். (அ)

தாத்பர்யம்.—இப்பாசுரத்தில், இந்நின் ஸஹவஸித்தபாகவதர்கள் திருவேங்கடமுடையானை ஸேவிக்கப்போக உத்தேசித்து, அதை ஆழ்வாரிடத்தில் விண்ணப்பம் செய்கைக்காகச் சிலஅபூர்வமான நைச்யோக்திகளையும் தாத்ருசவ்யாபாரங்களையும் செய்ய, அவற்றை ஆழ்வார் நோக்கியருளி, இவர்கள் நம்மைப்பிரிய நினைத்தார்களென்று ஸம்சயித்துரைத்த பாசுரத்தை, நாயகனுடைய அதிமாத்ர ஸம்ச்லேஷத்தைக் கண்டு நம்மைப்பிரியநினைத்து இவனிப்படி செய்கிறானென்று ஸந்தேஹித்துரைத்த நாயகியின் பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

உம்மிடத்தில் இதுவரையில் இவ்விதமான உக்திகளும் வ்யாபாரங்களும் காணவில்லை, இப்போது உம்முடைய சொலவுகளையும் செயல்களையும் நிரூபித்து இதற்கடியென்னென்று பார்க்கில்-நித்யஸூரிகளும் விரும்பத்தக்கதாய் ப்ரமஹரமாய் மநோஹரமான திருவேங்கடமலையைச் சென்றுகிட்டி, அங்கு, முன்பு கோவர்த்தநோத்தரணம் பண்ணி கோக்களை ரக்ஷித்தவனாய், இப்போது ஸர்வஸுலபனாய் எல்லார்க்கும் ஸேவைஸாதிக்கைக்காக எழுந்தருளியிருக்கிற திருவேங்கடமுடையானை ஸேவிக்கப்போக நினைத்தீர்கோள் (அந்யாபதேசத்தில், அம்மலையைக்கிட்டி தாரர்ஜநம் பண்ணப்போகநினைத்திகோள்) என்று உம்முடைய மநோரதங்களை யெல்லாம் நாம்ஸுவ்யக்தமாக வறிந்தோம் என்னை இப்படி விட்டுப்பிரிந்து போவது உங்களுக்குத்தகாதுகாணும் என்கிறாள்.

---

திண்பூஞ்சுடர்நுதிநேமியஞ் செல்வர், விண்ணாடனைய
வண்பூ † மணிவல்லியாரேபிரிபவர்தாம், இவையோ
கண்பூங்கமலங்கருஞ்சுடராடி வெண்முத்தரும்பி
வண்பூங்குவளை, மடமான் விழிக்கின்றமாயிதழே.

---

† வணிவல்லி என்றும் பாடம்.

அர்த்தம்.—திண் - த்ருடமாயும், பூ - அழகாயும், சுடர் - உஜ்வலமாயும், நுதி-கூர்மையாயுமிருக்கிற, நேமி-திருவாழியிருல், அம்செல்வர் - அழகிய ஐச்வர்யத்தையு முடையஶ்ரியஃ பதியினுடைய, விண்ணாடனைய, பரமபதம் போலே அதிபோக்யையாய், வண் - உதாரையாய், மணி - மணிபோலே ப்ரகாசிக்கிற லாக்யையாய், வல்லி - கொடிபோன்றவளான ஒ நாயகியே! பூ - அழகிய கமலம் - தாமரைபுஷ்பம் போலவும், வண் - உதாரமாய், பூ - அழகியதான, குவளை-கருநெய்தல் போலவும் இருக்கிறதாய், கருஞ்சுடர்-நீலமான காந்தியை ஆடி-அவகாஹித்ததாய், ( உடையதாய் ), வெண்முத்து - வெளுத்தமுத்துக்கள் போன்ற கண்ணீர்களை, அரும்பி - அரும்பு போலேவிடாநின்ற தாய், மா இதழ் - மாந்தளிர்போன்ற அதரத்தையுடையளாய், மடமான் - பவ்யமான மான் போன்றவளான நீ, விழிக்கின்ற - திறந்து பார்க்கிற, இவை - இவை, கண்ணோ - நேத்ரமா! ஆரே - ஆர்தான், பிரிபவர்தாம் - ( இப்படிப்பட்ட உன்னைவிட்டுப்) பிரிவார்கள்.

[அப்பிள்ளை உரை.]

அவ.—ஒன்பதாம்பாட்டு.—நான் ஸந்நிஹிதனாயிருக்கச்செய்தே விச்லேஷத்தை நினைத்து விச்லேஷித்தாற்போலே இவள் நோவுபடுகிற படியைக் கண்டு, ‘இங்ஙனே ஶங்கிலையாகவேண்டா; நான் பிரிய நினைத்திலேன்’ என்று அவளைத்தரிப்பிக்கிறான்.

உரை.—[திண் பூஞ் சுடர் நுதி நேமி அஞ் செல்வர் விண்ணாடு அனைய வண் பூ மணி வல்லி-) திண்ணியதாய் அழகிதாய் ஒளியையும் வாயையுமுடைத்தான திருவாழியையுடையராகையாகிற அழகிய ஐஶ்வர்யத்தையுடையவனுடைய பரமபதம்போலே (க)“ந ச புநராவர்த்ததே-ந ச புநராவர்த்ததே” என்னும்படியாய், அதுக்குமேலே அழகிதாயிருந்துள்ள மணிவல்லிபோலே யிருந்துள்ளாயே!(யாரே பிரிபவர்தாம்)உன்னைப் பிரியுமவர்கள் ஆர்? (இவையோ கண் பூங் கமலங் கருஞ்சுடர் ஆடி வெண்முத்து அரும்பி வண்பூங் குவளை மடமான் விழிக்கின்ற) பூங்கமலமுமாய்க் கருங்குவளையுமா யிருந்துள்ள இக்கண் கறுத்திருந்துள்ள ஒளியையுடைத்தாய் வெளுத்திருந்துள்ள முத்தரும்பி முக்தமான மானின் நோக்குப்போலே விழியாநின்றன. (மா இதழே) ஶ்யாமமான இதழ்போலே யிருந்துள்ள அதரத்தையுடையாய்! மாயிதழுமாயிருந்துள்ள கண்ணென்று கூட்டவுமாம்.

ஸ்வா.—ஶ்ரீவைஷ்ணவர்கள் இவரைப் பிரிந்து தங்களுக்குத் தரிக்கவொண்ணாமையை இவர்க்கு அறிவித்து அவ்வழியாலே இவரைத் தரிப்பித்தபடியைச் சொல்லிற்று. (கூ)

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—ஒன்பதாம்பாட்டு.—‘திருமலைக்குப்போக நினைத்தான்’ என்று பழியிட்டாள்; ‘நீகாண் நினைத்தாய்’ என்கிறான், அவன்: அதா

---

(க) சாந்தோக்யம் - அ. கடு-க.

வது - பாகவதஸம்ஸ்லேஷம் பிறந்தபின்பு பகவத் ஸம்ஸ்லேஷம்பழி யாயிருந்தபடி; ஸ்வரூபஜ்ஞாநங்கண்டிலோம்; எங்களை அறியாதொழிந்தால் உன்னை அறியாதொழியவேணுமோ? எம்பெருமானார் திருமலைக்குப் போவதாகப் பிறந்தபடி கேட்டுப் பிள்ளையுறங்காவில்லிதாஸர் தம்மகத்தேபோய் மூடிக்கொண்டுகிடந்து "காண்கின்றனகளும்" என்கிற பாட்டை அநுஸந்தியாநிற்க, அங்குச் செய்கிறஅளவென்னென்று பார்க்க ஒருவைஷ்ணவனைப் போகவிட, 'இப்பாட்டை அநுஸந்தித்து ஸோகித்துக்கிடந்தார்' என்ன, 'வண்பூமணிவல்லி யாரேபிரிபவர்தாம்' என்று சொல்லிப் போரமாட்டிற்றிலையோ என்று அருளிச்செய்தார்.

வ்யா.—(திண் பூ) ஆஸ்ரிதருடைய விரோதியைப் போக்குமிடத்துப் பிற்காலியாதே பணைக்கிறபடி, ஆயுதகோடியிலும் ஆபரணகோடியிலும் அந்வயம் உண்டாகையாலே. (சுடர்-) தேஜஸ்ஸு. (நுதி-) கூர்மை. (நேமி-) திருவாழி. (அஞ்செல்வர்-) திருவாழியையுடையராகையாலேவந்த அழகும், ஐஸ்வர்யமும். (விண்ணோடு அனைய இத்யாதி-) (க)"ந ச புநராவர்த்ததே-ந ச புநராவர்த்ததே" என்கிறதேஸத்தைப்பிரியிலன்றோ, உன்னைப் பிரிவது. (வண்மை-) ஔதார்யம்; தமக்கு மாநஸாநுஸந்தாநமாக அநுபவித்திருக்க அமைந்திருக்கச்செய்தே, ஜகத்துக்கு உபகாரமாக ப்ரபந்தத்தை அருளிச்செய்தபடி: எம்பெருமான் தம்மொருவர்க்கும் * மயர்வற மதிநல மருளத் தாம் ஜகத்துக்கு * மயர்வற மதிநல மருளினபடி; தாமே சொல்லிலும், (உ)"வண்சடகோபன்" என்றிறே சொல்லுவது. (பூ) போக்யதை. (மணி வல்லி) தனக்குத்தான்

அரு|| ஒன்பதாம்பாட்டு.—திருமலைக்குப் போக நினைத்தாயென்று பழியிட்டது பொறுமல் நீகாண்போக நினைத்தாயென்கிற நாயகன் சொன்ன இத்தால் ஸ்வாபதேஸத்தில் எந்த அர்த்தம் பலித்ததென்ன, அருளிச்செய்கிறார்; (அதாவது) இத்யாதி. (ஸ்வரூபஜ்ஞாநங் கண்டிலோம்) என்றது - ஸ்வரூபமென்று விக்ரஹமாய், உன்னுடைய விக்ரஹவைலக்ஷண்யம் நீ அறியாயென்று கண்டோமென்றபடி. (ஸ்வரூபஜ்ஞாநங் கண்டிலோம்) என்றதை விவரிக்கிறார். (எங்களை அறியாதொழிந்தால்) என்று. 'உன்னை' - விலக்ஷணமான உன்னை. ப்ராஸங்கிகம் - (எம்பெருமானார்) இத்யாதி. 'பூ' என்று - அழகாய் 'அழகு உண்டோ? ஆயுதமன்றோ' என்ன; (ஆயுத) இத்யாதி. நித்யவிபூதித்ருஷ்டாந்தத்துக்குத் தாத்பர்யம்-(நசபுந:) இத்யாதி. வண்மைக்கு ஸ்வாபதேஸத்திலே தாத்பர்யம் - (தமக்குமாநஸ) இத்யாதி. விவரணம் - (எம்பெருமான்) இத்யாதி. 'வல்லி' என்றதுக்கு இரண்டு தாத்பர்யம்: அதாவது - கொடியானது கொள்கொம்பிலே சுற்றிக்கொள்ள வேண்டுகையாலே, நாயகன் கழுத்தைக்கட்டிக்கொண்டிருக்கிறதென்னுதல்; யத்வா, ஒரு கொள்கொம்பிலே சேர்க்க

(க) சாந்தோக்யம் அ. கரு-க. (உ) திருவாய் - உ-அ-கக.

வ்யா|| ஆபரணமாயிருக்கிறபடி; கழுத்தைக் கட்டிக்கொண்டு கண்ணுங் கண்ணநீருமாயிருக்கிறபடி; ஒருகொம்பிலே சேர்க்கவேண்டியிருக்க நிலத்திடை கிடக்கிறபடி. (ஆரேபிரிபவர் தாம்) ப்ராணயித்வ மில்லையாகிலும் சைதந்ய மில்லையோ. (இவையோ கண்-) வெறும்புறத்திலே ஆலத்திவழிக்கவேண்டுங் காண். (பூங் கமலம்) அழகிய கமலம். (கருஞ்சுடர் ஆடி) மதமதப்பு இருந்தபடி. (வெண் முத்து அரும்பி) சிப்பியிலே முத்தரும்பினாற்போலே ஶோகபிந்துவேயாய்த் தோற்றினபடி.(வண் பூங் குவளை) உதாரமாய் அழகிதான குவளை. (மட மான் விழிக்கின்ற.) ஸர்வதா ஸாம்யம். (மா இதழே) அதரமிருக்கிறபடி.

[மாயிதழ் மடமான் விழிக்கின்ற வண்பூமணிவல்லி யாரேபிரிபவர்தாம்?]

ஸ்வா—ஆழ்வார் வைஷ்ணவர்களோடுகூட இருக்கச்செய்தே பிரிவுரிற் செய்வதென்னென்று அதிஶங்கிக்கவண்ண, அத்தைக்கண்ட வைஷ்ணவர்களே பரிஹரிக்கவேண்டியிருக்கிறபடி. (௮)

---

அரு|| வேண்டியிருக்க நாயகன் போகிறபடியை நினைத்து நிலத்திடைக் கிடக்கிறளென்னுதல்; இந்த இரண்டையும்(கழுத்தைக்கட்டி) இத்யாதி வாக்யத்வயத்தாலே, அருளிச்செய்கிறார். 'ஆரே' என்றதைக்கொண்டு, (சைதந்யமில்லையோ) என்றது. கருவிழி தளமாயிருக்கையைக்கொண்டு, (மதமதப்பிருந்தபடி) என்றது. மடமான்போலேயென்றொழிவானென்னென்ன, (ஸர்வதாஸாம்யம்) என்கிறார். மாயிதழ்' - ஶ்லாக்யமான இதழ்போன்ற அதரமென்று பதார்த்தஃ.

[அழகிய கமலம்போலவும் வண்பூங்குவளைபோலவுமிருப்பனவாய்க் கருஞ்சுடரையுடைத்தாய் அஶ்ருபிந்துக்களையுமுடைத்தான மாயிதழ் மடமானுடைய இந்தக்கண்கள் விழிக்கின்றன, ஆகையாலே, திண்பூஞ்சுடர் நுதிநேமியஞ்செல்வர் விண்ணாடனைய வண்பூமணிவல்லி யாரேபிரிபவர்தாம் இத்யந்வயஃ. (௯)

[அப்பு அரும்பதம்.]

ஒன்பதாம்பாட்டு.—நீ காண் நினைத்தாயென்கைக்குப் பிரிவால்வரும் வருத்தமேதென்ன, அருளிச்செய்கிறார்; (அதாவது) இத்யாதி. ஸ்வரூபஜ்ஞாநம் - ரூபஜ்ஞாநமாய், உன்வடிவில் ஸௌகுமார்யமும் அறியாதொழியவேணுமோவென்றபடி. கீழ்ப்பாட்டிற் பிரிவு அஸஹ்யமென்னுமதுக்கும், இப்பாட்டிற் பிரியேனென்னுமதுக்கும் ஸம்வாதமாக ஒரைதிஹ்யம் அருளிச்செய்கிறார்; (எம்பெருமானாரித்யாதி). பூ-என்று அழகாய் அத்தைச்சொல்லுவானென்னென்ன, அருளிச்செய்கிறார் (ஆயுதகோடியிலும்) இத்யாதி, விண்ணாட்டொப்பு - போக்யதாதிஶயத்தாலே. 'மணி' என்றதைப்பற்ற அருளிச்செய்கி

றார்; (தனக்குத்தான்) இத்யாதி. 'வல்லி' என்றதைப்பற்ற, தாத்பர்யத்வயம் அருளிச்செய்கிறார்; (கழுத்தைக்கட்டி) இத்யாதி வாக்யத்வயத்தாலே. கழுத்தைக்கட்டி நாயகன் பிரியப்போகாமைக்கு ஹேது அருளிச்செய்கிறார்; 'இவையோகண்' என்று தொடங்கி முடிய.'மதமதப்பு-'ஶ்ரத்தை தோற்ற விழிக்கை; வெண்முத்தரும்பின கமலம்போலவும், கருஞ்சுடராடின குவளைப்பூப் போலவுமிருக்கை [மாயிதழ்மடமானுடைய கமலம்போலவுங் குவளைபோலவுமிருக்கிற கண்ணானது இவையோ? விழிக்கின்ற திண்பூஎன்று தொடங்கி ஆரே பிரிபவர்தாம்]என்று, அந்வயமாக்கி, அருளிச்செய்கிறார்; (மாயிதழ்) இத்யாதி.

[வேறொரு அரும்பதம்.]

ஒன்பதாம்பாட்டு.—'ஆரேபிரிபவர்' என்றதைக் கடாக்ஷித்து ஸங்கதி - (திருமங்கைக்கு) இத்யாதி, பழியாவானென்னென்ன, (அதாவது) இத்யாதி; இதனால், நான்பிரிவைநினையாதிருக்க, நீ பிரிய நினைத்தா யென்றதாயிற்று. அவளை பிரியநினைத்ததுக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார்; (ஸ்வரூப) இத்யாதி; உன்னுடைய ரூபஜ்ஞாநம் உனக்கு இல்லாமையாலே பிரிய நினைத்தா யென்றபடி. (எங்களை-)ப்ரணயித்வமுடைய எங்களை. (உன்னை) வைலக்ஷண்யமுடைய உன்னை. பாகவதவிஶ்லேஷம் துஸ்ஸஹ மென்னுமதுக்கும், பிரிவதில்லையென்று ஸமாதாநம்பண்ணினதுக்கும் ஸம்வாதம்-(எம்பெருமானார்) இத்யாதி. 'பூ' என்று - அழகாய், அர்த்தம்-(ஆபுத) இத்யாதி. ப்ரபந்தத்தால் ஞாநாதிஶயம் பிறக்குமென்று அருளிச்செய்கிறார்; (எம்பெருமான்) இத்யாதி. மணியத தாத்பர்யம்-(தனக்கு) இத்யாதி. 'வல்லி' என்றதுக்கு இரண்டு தாத்பர்யம்- (கழுத்தை) இத்யாதி வாக்யத்வயம். 'கழுத்தை' - நாயகன் கழுத்தை. பிரியாமைக்கு ஹேது-(ப்ரணயித்வம்) இத்யாதி. 'மதமதப்பு'-ஶ்ரத்தை. பாருகவே சொன்னதுக்கு ஹேது-(ஸர்வதா ஸாம்யம்) என்று. 'மாயிதழ்'-மாந்தளிர்போலேயிருக்கும் அதரத்தையுடையவளென்று ஶ்ப்தார்த்தம்.[மாயிதழாய் மடமானாய் விழிக்கின்றவளாய்த் திண்பூ இத்யாதி மணிவல்லி கருஞ்சுடராடி வெண்முத்தரும்பின வண்பூங்குவளைபோலவுமான கண் இவையோ? இப்படியா யிருக்கையால், உன்னை யாரே பிரிபவர்தாம்] என்று அந்வயந் திருவுள்ளம்பற்றி, அருளிச்செய்கிறார்; (மாயிதழ்) இத்யாதி. (௯)

தாத்பர்யம்.—முன்பாசுரத்தில, ஆழ்வார், தமக்குஸுஹ்ருத்துக்களான பாகவதர்கள் தம்மைவிட்டுப் பிரியநினைத்ததாக ஸந்தேஹித்து விஷண்ணராயிருக்க, அந்தபாகவதர்களும் ஆழ்வாருடைய வைலக்ஷண்யத்தைக் கண்டு "நாமும்மைப்பிரிய மாட்டுகிறிலோம்" என்றருளிச் செய்த பாசுரத்தை, நாயகியினுடைய ஸௌந்தர்யத்தில் மக்நனான நாயகனுரைத்தபாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

ஸௌந்தர்யம், லாவண்யம், ஸந்நிவேசம், மார்தவம் முதலானவற்றில் நிருபமானமான அவயவங்களையுடைய ஓநாயகியே! ஶ்ரீமானான ஸர்வேஶ்வரனுடைய பரமபதத்தை யடைந்தவர்கள் அங்குள்ள ஆஶ்ரிதர்க்குத்தே

ஜோமயமான ஆபரணமாயும் அநாச்ரிதர்க்கு வலிய ஆயுதமாயுமிருக்கிறதிரு வாழி முதலியவற்றின் போக்யதையை யநுபவித்து அதைவிட்டு எப்படி திரும்பமாட்டார்களோ, அப்படிப்போலவே, உன்னுடைய மாந்தளிர்போன்ற அதரத்தையும், கமலம்போ லதிஸுந்தரமாய், கருநெய்தலில் முத்துக்கள் சிதறிக்கிடந்தாற்போல் சோகாச்ருக்களையுடையதாய் மான்போல் விழிக்கின்ற குவளை போன்ற உன்னுடைய கண்களையும் கண்டால் யாருக்குதான் பிரிய மனமுண்டாகும்? ஆதலால் நானுன்னைவிட்டுப் பிரியமாட்டேன்; நீ சோகிக்கவேண்டாவென்கிறான். (௯)

---

மாயோன்வடதிருவேங்கடநாட, வல்லிக்கொடிகாள்
நோயோவுரைக்கிலுங்கேட்கின்றிலீருரையீர், நமது
வாயோவதுவன்றிவல்வினையேனுங்†கிளியுமெள்கு
மாயோவடுந்தொண்டையோ, அறையோவிதறிவரிதே. ௧௦.

அர்த்தம்.—மாயோன் - ஆச்சர்யபூதனான திருவேங்கட முடையானுடையதாய், வடதிருவேங்கடநாட-வடக்குதிக்கிலிருக்கிற திருமலையைநாடாகவுடையவர்களான, வல்லி - கொடிபோன்ற, கொடிகாள் - ஓபெண்காள்! நோய் - (என்) பாதையை, உரைக்கிலும - சொன்னாலும், கேட்கின்றிலீர் - கேட்கிறிலிகோள். ஓ - ஐயோ, நமது - உங்களுடைய, வாயோ - வாயா? அதுவன்றி - அதுவல்லாமல், வல் வினையேனும் - (இச்சொல்லில் ஈடுபடும்படியான) பாபத்தையுடைய நானும், கிளியும் - கிளியும், எள்கும் - (கேட்டுத்) துவளும்படியான, ஆயோ - "ஆயோ" என்கிறசப்தமா? தொண்டையோ - தொண்டைக்கனிபோன்ற அதரமா? அடும் - (இப்படி) பாதிக்கிறது. உரையீர் - சொல்லுங்கோள், இது இந்நோயின்காரணம், அறிவரிது - அறியக்கூடாததாயிருக்கிறது - "அறையோ" என்பது ஐயசப்தம். ௧௦.

[அப்பிள்ளை உரை.]

அவ.—பத்தாம்பாட்டு—புனங்காக்கத் தோழிமாருந் தலைமகளுமாயிருக்க அங்கே சென்று, அவர்களைச் சிலவார்த்தை கேட்டு, அவர்கள் தன்னைக்குறித்து மறுமாற்றஞ் சொல்லாதொழிய, அவள் ஸௌந்தர்யாதிகள் தன்னைநலியத் தான் ஈடுபடுகிறபடியைச் சொல்லுகிறான்.

உரை.—(மாயோன் வட திரு வேங்கட நாட வல்லிக் கொடிகாள்) ஆச்சர்யபூதனானவனுடைய வடக்கில்திக்குக்கு ச்லாக்யமான திருமலையில் வல்லிபோலே யிருக்கிற பெண்பிள்ளைகாள்! (நோயோ உரைக்கிலுங் கேட்கின்றிலீர்) என்னுடைய ஆர்த்தியை நானே அறிவிக்கிலுங் கேட்கிறிலிகோள். (உரையீர் நமது வாயோ அது அன்றி வல்வினையேனுங் கிளியுமெள்கும் ஆயோ அடுந் தொண்டையோ அறையோ இது அறிவரிது) உங்கள் வாயோ? அதுவன்றிக்கே சொல்லிலே தோற்கும்படி பாபத்தைப் பண்ணின நானுங் கிளியும் லஜ்ஜிக்கும்படியான ஆயோவென்கிற சொல்லோ? அதரமாத்ரமோ? அறிகை அரியதாய் நலியாநின்றது; இத்தைச் சொல்லிகோள்.

---

† கிளியும் வெள்கும் என்றும் பாடம்.

ஸ்வா.—இவருடைய ஸௌந்தர்யாதிகளோடு உக்தியோடு வாசியின்றியே எல்லாம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஶ்லாக்யமாயிருக்கிறபடியைச் சொல்லுகிறது. (௧௦)

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—பத்தாம்பாட்டு.—துறை—மதியுடன்படுத்தல். தலைமகள் தோழியாரும் தானுமாய்ப் புனத்திலே யிருக்க, தலைமகன் சென்று இரண்டாங்காட்சியாகையாலே தன் ஆசையை ஆவிஷ்கரிக்கிறான். (௧) "மதியுடன் படுத்தல் தோழிக்குரித்து" என்னும்பக்ஷத்திலே அவள் முகத்தைநோக்கிச் சொன்னானாகவுமாம்.

வ்யா.—(மாயோன்) இந்த ஆஶ்சர்யமான பதார்த்தங்களையுடையனுவதே: பரமபதத்தை இருப்பிடமாகவுடையவன்; (௨) "கானமும் வானரமும் வேடுமுடைவேங்கடம்" என்னும்படி இங்கே வந்துநின்ற நீர்மையிலேற்றமென்றபடி. (வடதிரு வேங்கடநாட) திருமலைக்கு அவ்வருகு நாடில்லையென்றிருக்கிறார்; ஆழ்வார்களருளிச்செயல் நடையாடின தேஶமே நாடென்றிருக்கிறார். (வல்லிக்கொடிகாள்) 'வல்லி' என்றது-† 'ஆணறுத்து' என்னும்படி ஸ்த்ரீத்வத்தின் அதிஶயத்தைச் சொல்லுகிறது; 'கொடிகாள்' என்று-உபக்நத்திலே அணைந்து நிற்கவேண்டியிருக்கிறபடி; "பதிஸம்யோகஸுலபம் - பதிஸம்யோகஸுலபம்" இத்யாதி. கொள்கொம்புஒன்றாய்க்கொடி பலவாயிரு

அரு||பத்தாம்பாட்டு.—'மதியுடன்படுத்தல்' என்றது - நாயகனானவன் தன்னுடைய ஆற்றாமையை நாயகிநெஞ்சிலே படும்படி அறிவிக்கை. முன்னே யாத்ருச்சிகமாக ஸம்ஶ்லேஷித்துப்போய் இரண்டாங்காட்சி யாகையாலே தன் ஆசையை ஆவிஷ் கரிக்கிறானென்றபடி. நாயகியோடே மதியுடன்படுத்துகிறானென்றார், கீழ்; அத தமிழர் 'மதியுடன்படுத்தல் நாயகிக்கு ப்ராப்தமன்று; தோழிக்கு ப்ராப்தம்' என்று சொன்னார்கள்: அந்தபக்ஷத்தில் தோழிமார்முன்பு இத்தைப் பார்த்துச்சொல்லுகிறானென்னுதல். (உரித்து) என்றது-ப்ராப்தமென்றபடி. 'மாயோன்' என்றதுக்கு இரண்டு தாத்பர்யம்: முந்தினது - வல்லிக் கொடிகாள்' என்றதைக் கடாக்ஷித்து, அருளிச்செய்கிறார், (இந்த) இத்யாதி; ஸௌஶீல்ய ஸௌலப்யங்களை யுடையவனென்று அருளிச்செய்கிறார், (பரமபதத்தை) இத்யாதி. 'வடதிருவேங்கட நாடு' என்கிறதென்? அப்பால் வடக்கே தேஶமில்லையோ வென்ன, அருளிச்செய்கிறார்; (திருமலைக்கு அவ்வருகு) என்று. உண்டாயிருக்க இல்லையென்கிறதுக்குக் கருத்து என்னென்ன, (ஆழ்வார்கள்) இத்யாதி. வடதிருவேங்கடநாட்டிலே வர்த்திக்கிற வல்லிக்கொடிகாள் என்று ஸம்பந்தார்த்தம். 'வல்லி' என்றாற் போராதோ? 'கொடிகாள்' என்கிற இரட்டிப்புக்குக் கருத்தென் னென்ன, அருளிச்செய்கிறார்; (வல்லி என்றது) என்று. ('ஆண்நாறிற்று' என்னும்படி) என்றது-பும்ஸ்த்வத்தை கந்திக்கிறதென்னும்படி யென்றபடி. (கொள்கொம்பு ஒன்றாய்) என்றது-நாயக னொருவனே யென்றபடி. நோய் ஓ என்று பதச்சேதமாய், 'ஓ' என்ற பத

(௧)    (௨) நான்முகன்திருவந்தாதி-௪௭.

† 'ஆணறுத்து' என்று ப்ரதி பேதம்.

வ்டா||க்கிறபடி (நோயோ.) முடியவும் ஒட்டாதே ஜீவிக்கவும் ஒட்டாதே யிருக்கிறபடி. (நோய் உரைக்கிலும் ஓ கேட்கின்றிலீர்) என்றும் நோய் கொள்ளுவேனும் நானேயாய் வருவேனும் நானேயாய்ச் சொல்லுவே னும் நானேயானாலுங் கேட்கை அரிதாகவேணுமோ? அநுஷ்டானம் வேண்டா, கேட்கவே அமையும். உரையீர்-கேளாதவர்களைச் சொல் லிற்றது, ஆசையின் மிகுதி இருந்தபடி; நோயறிந்தீராகில் நாங் கள் இனிச்சொல்லுவதென்னென்ன, நோய்கொண்டமை யறிந்தே னத்தனை, நோய்க்கு நிதான மறிந்திலேன். (நுமதுவாயோ) உம்மு டைய முகவிகாஸமோ? (அது அன்றி வல்வினையேனுங் கிளியும் எள் கும் ஆயோ) அதில் ஏகதேஶமான 'ஆயோ' என்கிறசொல்லோ? (கிளியும் எள்கும்) இவள் சொல்லைக் கேட்டு ஸந்தக்ரஹணத்தாலே புறம்புள்ளத்தை விட்டுக் கிடக்கிறபடி. எள்குதல் ஈடுபடுதல் என்ற போது, இச்சொல்லைக் கேட்டுத் துவண்டுகிடக்கிறபடி. வல் வினை யேனும்·) அவற்றைப்போலன்றியே ஸந்தக்ரஹணத்தாலும் ரூபக்ர ஹணத்தாலும் ஈடுபட்டபடி. (தொண்டையோ-) அதரமோ? (அடும்-) முடிக்கிறபடி உண்டாயிருந்தது. (அறையோ இது அறிவரிது-) இன்ன

---

அரு||க்துக்குத்தாத்பர்யம் அருளிச்செய்கிறார்; (முடியவுமொட்டாதே ஜீவிக்க வுமொட்டாதே யிருக்கிறபடி) என்று. 'நோயுரைக்கிலுங்கேட்கின்றிலீர்' என்று கூட்டி, தாத்பர்யம் அருளிச்செய்கிறார்; (நோய் கொள்ளுவேனும்) என்று. இதுக்குத் தாத்பர்யம்-என்னுடைய விஶ்லேஷத்தில் நோய் கொள்ளுகையும் ஆற்றாமை யாவிஷ்கரிக்கையும் உங்களுக்கு ப்ராப்தமாயிருக்க, இவையெல் லாஞ் செய்வேன் நானேயாகிலுங் கேட்கை அரிதாகவேணுமோ வென்றபடி. 'நோய்'-நோயை யென்றபடி. 'கேட்கின்றிலீர்' என்றதுக்குத்தாத்பர்யம் அரு ளிச்செய்கிறார்; (அநுஷ்டானம்வேண்டா, கேட்கவேஅமையும்) என்று. (நோ யறிந்தீராகில் நாங்கள் இனிச் சொல்லுவதென்) என்றது - நாயகிவார்த்தை யாய், மேலுக்கு அவதாரிகை. நோய்க்கு நிதான மறிந்திலேன், அத்தைச் சொ ல்லுங்கோளென்று கேட்கிறான்; (நுமதுவாயோ) என்று. 'வாய்' என்று முக த்தை லக்ஷிக்கிறது. 'ஆய்' என்றது - ஆயோ ஆயோ என்று அவர்கள் கிளிகளை ஓட்டுகிற ஶப்தம் 'எள்கும்' என்றதுக்கு இரண்டுபொருள்: எள்குதல்-விடுத லாய், புறம்புள்ள ஆஹாரங்களை விட்டிருக்கிறமை சொல்லுதல்; ஈடுபாட் டைச் சொல்லுதல். 'அடும்'-முடிக்கிறது. முடிக்கிறபடி உண்டாயிருந்தது. (இன்னவ்யக்தியென்று அறிகிறிலேன்) என்றது-பாதிக்கிறபாதை உண்டாயிரு க்கிறது, இன்னது பாதிக்கிறதென்று நிஶ்சயிக்கமாட்டேனென்றபடி. 'நும துவாயோ' என்றதைக் கடாக்ஷித்து, (ரூபக்ரஹணத்தாலும்) என்றது. (ஆத் மகுணங்களோடு) என்றது-கொடி உபக்ரஸாபேக்ஷமாகையாலே பகவத்ரூப

வ்யா||வ்யக்தியென்று அறிகிறிலேன்: அறியவொண்ணுமைக்கு அறை யோ அறை; 'நாவலோ நாவல்' என்றாற்போலே.

இத்தால், ஆழ்வாருடைய ஆத்மகுணங்களோடு தேஹகுணங் களோடு அவற்றில் ஏகதேசத்தோடு வாசியற ஸ்ரீவைஷ்ணவர்களு க்கு உத்தேச்யமாயிருக்கிறபடி. (௪௦)

அரு||வஸாபேக்ஷமான பாரதந்த்ர்யாத்யாத்மகுணங்களோடென்றபடி.'ஆயோ' என்கிற சொல்லு, வல்வினையேனை என்னையும் கதிர்பக்ஷிக்கவந்த கிளிகளை யும் ஈடுபடுத்துகிறதென்றபடி.

[மாயோன்வடதிருவேங்கடநாட வல்லிக்கொடிகாள்! நோய் உரைக் கிலும் ஓ கேட்கின்றிலீர்; இந்த நோய்க்கு ஹேது, நமது வாயோ? அது வன்றி, வல்வினையேனுங் கிளியு மெள்கு மாயோ? தொண்டையோ? அடும்- அடுகிறது; இது அறிவரிது; உரையீர்; அறியவொண்ணுமைக்கு நீங்களும் ஒத் திருக்கையாலே அறையோ அறை இதி அந்வய:] (௪௦)

[அப்பு அரும்பதம்.]

பத்தாம்பாட்டு.—'மதியுடன்படுத்தல்-' தன்னுடைய ஆற்றாமையை நா யகிக்கு அறிவிக்கை. 'நாயகன் தீராதாத்த நாயகனுகையாலே, நாயகிக்கு அறிவிக்கை உரித்தன்று; தோழிக்கு அறிவிக்கையே உரித்து' என்கிற தமிழர் பக்ஷத்திலே யென்றபடி. 'வல்லி' என்ன அமையாதோ? கொடியென்பா னென்னென்ன, அருளிச்செய்கிறார்; (வல்லியென்றது) இத்யாதி. ஆண்நாறு கை - வல்லி என்றால் புருஷவ்யாவ்ருத்தி மாத்ரந் தோற்றுகையாலே புருஷ சுந்தியென்றாய், வல்லிக்கொடியென்கிற மீமிசையாலே ஸ்த்ரீகளில் வ்யாவ் ருத்தி சொல்லி ப்லாக்யமான ஸ்த்ரீகளென்றபடி. 'ஓ' என்றது - நோயி னுடைய அதிஶயத்தா லுண்டான கேதமாதல், அவர்கள் கேளாமையால் வந்த கேதமாதல். 'வாய்' என்று - வாச்குச்கு ஆஶ்ரயமான முகத்தைச் சொல்லுகிறது. 'ஆயோ' - முகத்தி லேகதேஶமான வாயினுடைய கார்யமா ன குருவிகளோட்டுகிற சொல்லோ வென்றபடி. எள்கல் - விடுகையாதல், ஈடுபாடாதல். புறம்புள்ளதாரகாதிகளை விட்டு இவள்சொல்லே தாரகமாயிரு க்கை. 'அறியவொண்ணுமைக்கு-' என்மாத்ரமன்றிக்கே, உங்களாலும் அறி யப்போகாமைக்கு, 'அறையோ அறை' - ஜயகோஷம். ஆத்மகுணமாவது - 'வேங்கடநாட வல்லிக்கொடிகாள்' என்கையாலே திவ்யதேஶவாஸமும், ஸம் ஶ்லேஷத்திலே தரிக்கையும், விஶ்லேஷத்தில் தரியாமையுமாகிற இவை- 'இது அறிவரிது அறையோ என்று அந்வயம்.] (௪௦)

[வேறொரு அரும்பதம்.]

பத்தாம்பாட்டு.—கீழே "காண்கின்றனகளும்" என்கிறபாட்டில் ப்ரவ்ரு த்தமான ஸம்ஶ்லேஷதஶையிற் பிரிவை அதிஶங்கைபண்ணின நாயகியைக் குறித்து 'ஆரேபிரியவர்தாம்' என்று கொண்டு(க)"பேதை நின்னைப்பிரியேனி

(க) பெரியதிருமொழி-அ௬-௩.

ணியென்றகன்றான்" என்கிறபடியேபிரிய, தலைவியுந் தோழிகளோடேகூடிப் போதுபோக்காகச் சோலையிலேபோய் அந்யபரதையை பாவித்திருக்க, நாயகன் பிரிவாற்றாமையாலே அங்கேவந்து அவள் மநஸ்ஸை அநுகூலிப்பித்துக் கொள்ளுகிற துறையாலே தம்முடைய வைலக்ஷண்யத்தைப் பேசுகிறானென்று ஸங்கதி உட்கொண்டு துறையைக் காட்டுகிறார்' (துறை) இத்யாதி. ஆரே பிரியவர்தாம்' என்ற பாகவதர் பொய்சொல்லிப் பிரியலாமோ வென்ன, அது புருஷார்த்த காஷ்டையையுங் குலைக்கும்படியான திருவேங்கடமுடையான் வைலக்ஷண்யம் பிரியப்பண்ணிற்றித்தனை; மாயோனிறே, அவன். (இரண்டாங்காட்சி) என்றது - "தடாவிய வம்பும்" என்றபாட்டிற் காட்சியைச் சொல்லுகையாலே. கீழே 'வண்பூ மணிவல்லி' என்றாற்போலே சொல்லாதே 'வல்லிக்கொடிகாள்' என்று பஹுவசநமாயிருக்கையாலே தோழிகளைப் பார்த்துச் சொல்லலாமென்று தமிழர்சொல்லுகிற கட்டளையைக் காட்டியருளுகிறார்; (மதியுடன்) இத்யாதி. திரோதாத்ருநாயகனாகையாலே, தானே நாயகியுடன் மதியுடன்படுத்துகிறானென்று தம்பக்ஷம்; தமிழர்க்குத் தோழிக்ருத்யம் மதியுடன்படுத்தலென்று நியமம்; அப்படியே தானாகப் பகரலாமென்றபடி. 'ஊரித்து' - அடுத்தது. 'பதார்த்தங்கள்' - 'வல்லிக்கொடிகாள்' என்கிறவை. தாத்பர்யாந்தரம் - (பரம) இத்யாதி. 'வட' என்று விசேஷித்ததுக்கு, வடக்கிலுள்ளதுக்குள்ளே நாடாயிருப்பது திருமலைப்ரதேசமே; அவ்வருகுள்ளதெல்லாங் காடென்றிருக்கிறமை தோற்றுகிறதென் றருளிச்செய்கிறார்; இத்யாதி. ஸ்ரீவைஷ்ணவர்கள் பாசுரமாகையாலே, திவ்யப்ரபந்தாநுஸந்தாநம் ப்ராயேண உள்ளதவ்வளவேயென்று சொல்லலாமென்கிறார்; (ஆழ்வார்கள்) இத்யாதி. ஆணறுகை - புருஷவ்யாவ்ருத்தி. 'வல்லி' என்றத்தாலே புருஷவ்யாவ்ருத்தியும், 'கொடி' என்றத்தாலே ஸ்த்ரீகளில் வ்யாவ்ருத்தியும் பலிதமாய் (௧) நாரீணாமுத்தமையோடு ஸாத்ருஸ்யஞ் சொல்லிற்றென்று ப்ரமாணம் - (பதி) இத்யாதி. நாயகியைப்பார்த்து இப்பாட்டு மதியுடன்படுத்தலாகலாமென்ற பக்ஷத்தில் பஹுவசநபாவம் - (கொள்கொம்பு) இத்யாதி. 'ஓ' என்றதுக்கு பாவம் - (மூடிய) இத்யாதி. 'ஓ' என்றதை 'கேட்கின்றிலீர்' என்றதோடு அந்வயித்து, அவர்கள் கேளாமையால் வந்த கேதத்தைச் சொல்லுமென்று அர்த்தாந்தரம் - (என்றும்) இத்யாதி. 'சேர்கின்றிலீர்' என்னவேண்டியிருக்க, 'கேட்கின்றிலீர்' என்பானென்னென்ன, (அநுஷ்டாநம்) இத்யாதி. மேலுக்கு அவதாரிகை - (நோய்) இத்யாதி. 'ஏகதேசமான' என்றது - வாயின் கார்யமான, ('ஆயோ' என்கிற சொல்-) குருவிகளை ஓட்டுகிற சப்தம். என்கல் - விடுதலாய் ஒருதாத்பர்யம் அருளிச்செய்து, ஈடுபாடாக்கி அருளிச்செய்கிறார், (என்கல்) இத்யாதி. 'அறையோ அறை' - ஜயகோஷம், அறியவொண்ணாமையென்றமாத்ர மன்றிக்கே உங்களாலும் அறியப்போகாமையால் நான் ஜயித்தேனென்கை. (௧௦)

(௧) ஸ்ரீராமாயணம், பாலகாண்டம்-௧-௨௭.

தா.—இப்பாசுரத்தில், ஆழ்வாருடைய ஸௌந்தர்ய ஸௌசீல்யாதி குணங்களில் ஈடுபட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் பாசுரத்தை, நாயகியின் ஸௌந்தர்யத்தில் வ்யாமுக்தனான நாயகன் சொல்லாலே யருளிச்செய்கிறார்.

ஓஸ்த்ரீ ரத்நமே! நானிப்படி வேதனைப்படுகிற ஸமயத்தில் நீவந்து என்னை விசாரித்து இந்நோய்க்குப் பரிஹாரம் செய்யவேண்டியிருக்க, அது தவிர்ந்தது மன்றி, நானுன்னைக்கிட்டி என்னவஸ்தையை யறிவிக்குமளவிலும் அதைக் காதுகொடுத்துக் கேட்கவும் உனக்குக் கஷ்டமாயிருக்கிறது. என்னுடையபாதையோ அஸஹ்யமாயிருக்கிறது. இந்தபாதைக்குக் காரணமென்னவென்று பார்க்கில் - அக்காரணம், உன்னுடைய அவயவ ஸௌந்தர்யமென்றும், கிளியும்கூடத் தோற்று இரையெடுப்பதும் தவிர்ந்து ஈடுபடும்படி நீ குருவியோட்டுகிற "ஆயோ" என்கிறசப்தமென்றும் எனக்குத் தெரியவில்லை. உனக்குத் தெரிந்திருந்தால் சொல்லவேணும். ௧௦.

அரியனயாமின்றுகாண்கின்றன கண்ணன்விண்ணனையாய்
பெரியனகாதம்பொருட்கோபிரிவென - ஞாலமெய்தற் [கைப்
குரியனவொண்முத்தும்பைம்பொன்னுமேந்தியோரோருடங்
பெரியனகெண்டைக்குலம், இவையோவந்துபேர்கின்றவே. ௧௧.

அர்த்தம்.— கண்ணன் - ஸ்ரீக்ருஷ்ணனுடைய, விண் அனையாய் - பரமபதம்போல் அதிபோக்யையானவளே! பொருட்கு - தனத்துக்காக, பிரிவு - பிரிகை, என - என்றபோதே, பெரியன - பெரிதான, காதம் - காதம்வழி (பிரிந்தாற்போலிருக்கிறது). ஓ - ஆஶ்சர்யம், ஞாலம் - ஜ்ஞாநாதிகரான விலக்ஷணர், எய்தற்கு - அநுபவிக்கைக்கு, உரியன - தகுந்ததும், ஒண் - அழகிய, முத்தும் - அபரூபிக்கிறவாகிற முத்துக்களையும், பை - பசுமையான, பொன்னும் - வைவர்ண்யமாகிற பொன்னையும், ஏந்தி - வந்திக்கொண்டு, ஓரோருடங்கை - ஒவ்வொரு சிறுங்கையளவாக இருப்பதும், பெரியன - பெரிதான, கெண்டை - மத்ஸ்யங்களுடைய, குலம் - கூட்டம்போலேயிருப்பதுமான, இவை - இக்கண்கள், வந்து - வந்து, பேர்கின்றன - சலியாகின்றன. ஓ - ஆஶ்சர்யம், யாம் - நாம், இன்று - இப்போது, காண்கின்றன - பார்க்கிறவை, அரியன - அபூர்வமானவைையே. ௧௧.

[அப்பிள்ளை உரை.]

பதினோராம்பாட்டு.—பொருள்வயிற் பிரிய நினைத்த தலைமகன், இவள் கருத்தை அறிகைக்காகச் சிலசொல்லி, பொருளுக்காகப் பிரிவர் என்னுமிடத்தை ப்ரஸங்கிக்க, 'இவன் இது சொல்லிற்று, தானும் பிரிய நினைத்தோ,' என்று அவன் பிரிந்தாற் படும் வ்யஸநத்தை அவன் முன்பே இவள் பட்டதைக் கண்டு, 'நான் உடனேயிருக்கச் செய்தே இப்படி படவேணுமோ' என்று விஸ்மிதனாகிறான்.

உரை.—(அரியன யாம் இன்று காண்கின்றன-) லோகத்திற் சிலர்க்குக் கூடாதன நாங்கள் இப்போது காண்கிற இவை: (கண்ணன் விண் அனையாய்-) புறம்பே சிலரோடே கலந்தவர்கள் ஓரோஹேதுக்களாலே பிரியக்கண்டு என்னையும் அங்ஙனே ஶங்கிக்கிறாயாகில், அல்லாத விஷயங்கள் போலேயோ நீ: உன்னுடைய வீறுபாட்டைப் பாராய். (பெரியனகாதம் பொருட்கோ பிரிவு என-) 'சிலரைச் சிலர் பொருளுக்குப்பிரிவர்' என்ன, (க) "ஆவயோரந்தரே ஜாதா:- ஆவயோரந்தரேஜாதா:" என்னும்படியாலே அநேகதூரத்திலே பிரிந்திருப்பார் படும் வ்யஸநத்தைப் படாநின்றாய்; நெடுந்தூரம் பொருளுக்குப் பிரிவர்களென்று சொல்லிற்றாகவுமாம். (ஞாலம் எய்தற்கு உரியன-) லோகத்தையடையத் தனக்கு ஶேஷமாக்கிக்கொள்ள உரியன; லோகத்துக்கெல்லாம் ஆசைப்படப்படுவனவென்றுமாம். (ஒண் முத்தும் பைம் பொன்னும் ஏந்தி-) கலங்கினபோதுள்ள ஆற்றாமையால் வந்த சிவப்பையும், கண்களில் உள்வாயிலுள்ள சிவப்பையும், நிர்க்கமநத்தில் முத்துப்போலே திரண்டிருக்கிறபடியையும், பத்தகூட்டிலே முத்து முத்தின்றிப்போலே அழகிதாயிருக்கிறபடியையுஞ் சொல்லுகிறது. (பைம்பொன்-) விரஹசங்கையாலுண்டான வைவர்ண்யத்தைச் சொல்லிற்றாகவுமாம். (ஓரோ குடங்கை-) பருக்கலாயிருக்கிறபடி இத்தாற்சொல்லப்படுகிறது. (பெரியன-) இங்ஙனே யிருந்தவைத்தும் பெரும் பரப்பாயிருந்தன. (கெண்டைக் குலம்-) முக்த்தமான நோக்கினுடைய பரம்பரை இருக்கிறபடி. (இவையோ வந்து பேர்கின்றவே-) தன்னைக் கண்டாரை இப்படி படுத்தவல்லவை இப்பாட்டோடே ஸஞ்சரியாநின்றன.

ஸ்வா.—பிரிவென்று ஒன்று உண்டென்னுமளவில் ஸ்ரீவைஷ்ணவர்களோட்டைப் பிரிவு பிறந்ததென்று வெறுக்கும்படியாகத் தமக்கு உண்டான பாகவத விஶ்லேஷாஸஹத்வத்தைச் சொல்லுகிறது. (கக)

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

பதினோராம்பாட்டு.—தலைமகளோடே கலந்து விஶ்லேஷமறியாதபடி அதிமாத்ரமாய்ச் செல்லாநிற்க, பொருளதிகாரத்தை ஒருவன் வந்து வாசிக்க, அதைக்கேட்டிருந்ததைக் கொண்டு "அப்ரதிஷித்தம் ஸமதம் பவதி-அப்ரதிஷித்த மநுமதம் பவதி" என்று-ப்ரதிஷேதியாமையாலே அநுமதமாயிருந்ததென்று கொண்டு இவனோடேகூட ஒரு படுக்கையிலே யிருக்கச்செய்தே பிரிந்தானென்று நினைத்துப் பிரிந்தாற் பிறக்குங் கார்யமும் பிறந்து செல்லுகிறது.

வ்யா.—(அரியன-) ஒக்க இருக்கச்செய்தே கண்ணும் கண்ணீருமாயிருந்தபடி என்னென்று கொண்டாடுகிறான்; கலந்த காலத்திலும்

அரு|| பதினோராம்பாட்டு —பொருளதிகாரமாவது -தேஶாந்தரத்திலேபோய் த்ரவ்யார்ஜநம்பண்ணும் ப்ரகாரம். (பிறந்துசெல்லுகிறது) என்றது - பிறந்து செல்லுகிறபடியைக் கண்டு நாயகன் ஆஶ்சர்யப்படுகிறானென்றபடி. ஒண் முத்தும்பைம்பொன்னு மேந்தி' என்னுமளவுக்குத்தாத்பர்யம்-(ஒக்க) இத்யாதி

வ்யா|| பிரிந்தகாலத்திலுங்கண்டறியோம். (யாம்இன்று-) கடலிற்குளப்படியும் ஆயிரத்தில் ஒன்றும்உண்டானாற்போலே இவள் ஸம்ஶ்லேஷத்துக்குள்ளே எல்லாமுண்டென்றிருக்க, சில பெறுதற்கரியன இருந்தபடி என்னென்கிறான். (காண்கின்றன-) (க) "ஓதல் காவல் பூசல் பரத்தைமாட்டு" என்றுசொல்லப்பட்ட நாலுவகையிற் பிரிவிலும் இது கண்டறியோமென்கிறான். (கண்ணன் விண் அனையாய்-) (உ) "நசபுநராவர்த்ததே-நசபுநராவர்த்ததே" என்னும்படியே அத்தேஶத்திற் புக்கார் புறப்படிலன்றோ, உன்னைக் கிட்டினார்பிரிவது. (ந) "அவிகாராய-அவிகாராய" என்ற தேஶத்தை ஒத்திருக்கிற எனக்கு இவ்விகாரங்களெல்லாம் என்? (பிரிவு என ஓ பெரியன காதம்-) பிரிவென்றமாத்ரத்திலே பிரிந்ததாய் நெடுந்தூரமுமாய் நடுவே மலைகளுங் கடல்களுமாய் ஆளியக்கமற்று தூதப்ரேஷணத்துக்கும்யோக்யமின்றியே யிருந்தபடி. (பொருட்கு-) ஸம்ஶ்லேஷத்துக்கு உறுப்பாகப் பொருளுக்குப் பிரியத்தேடினீராகில், அவை இங்கே உண்டென்கிறது. (ஞாலம் எய்தற்கு உரியன) - (ச) "உலகமென்ப துயர்ந்தோர் மாட்டு" என்கிறபடியே விஶேஷஜ்ஞானர்க்கு அநுபவிக்கவாயிருந்தபடி; உபயவிபூதி

அரு|| 'இன்று' என்றதுக்குத் தாத்பர்யம்-(கலந்தகாலத்திலும்) இத்யாதி. 'யாமின்றரியன காண்கின்றன' எல்லாவற்றுக்குந் தாத்பர்யம்-(கடல்) இத்யாதி. (ஸம்ஶ்லேஷத்துக்குள்ளே எல்லாமுண்டென்றிருக்க) என்றது - எல்லாரஸங்களும் உண்டென்றிருக்கவென்றபடி. 'ஓதல்' என்றது-ஓதற்பிரிவு; 'காவல்' என்றது, ராஜ்யரக்ஷண நிமித்தமாகப்பிரிவு, 'பூசல்' என்றது-யுத்தநிமித்தமான பிரிவு, 'பரத்தைமாட்டு' என்றது-வேறே ஒரு அபிமதஸ்த்ரீபக்கல்போகை. 'கண்ணன்விண்ணனையாய்' பரமபதம்போலே நிரதிஶய போக்யபூதையானவளே! யென்று நாயகியை ஸம்போதிக்கிறான்: இந்த ஸம்போதனை - போக்யதையைச் சொல்லுதல்; அவிகாரத்வஞ் சொல்லுதல். 'ஒண்முத்தும் பைம்பொன்னும்' என்றத்தைப்பற்ற தாத்பர்யம்- (ஸம்ஶ்லேஷத்துக்கு) இத்யாதி. ஒருமுகத்தாலே இங்கே உண்டேயென்கிறானென்றபடி. பொருட்கு-பொருள் நிமித்தமாக. 'பிரிவென' - பிரிவைப்ரஸங்கித்தமாத்ரத்திலே. 'ஓ' - ஆஶ்சர்யம். பெரியனகாதம் - அநேகதூரம் விஶ்லேஷித்துப்போனாற்போலே யிருந்தது. பெரியன கெண்டைக்குலம் பேர்கின்றவே. ஆளியக்கமற்று - மநுஷ்ய ஸஞ்சாரமற்று. நாயகி வார்த்தையாக அநுவதித்துக்கொண்டு மேலுக்கு அவதாரிகை - (ஸம்ஶ்லேஷத்துக்கு உறுப்பாக) என்று. 'ஞாலமெய்தற்குரியன' என்றதுக்கு ஸ்வாபதேசம் அருளிச்செய்கிறார், (உலகமென்பது) என்று; அதாவது—உலகமென்று - விசேஷஜ்ஞராய், எய்துகை-கிட்டுகையாய், விசேஷஜ்ஞர் அநுபவிக்கலாம்படி தக்கிருக்கிறவென்றபடி. அந்யாபதேசம் (உபயவிபூதியும்) என்று; அதாவது—'ஞாலம்' என்றது-நித்யவிபூதிக்கு உப

(க) (ந) ஸ்ரீவிஷ்ணுபு. க உ. க.
(உ) சாந்தோக்யம்-அ-கரு-க. (ச) திவாகரம் பெயர்த்தொகுதி.

வ்யா||யும் விலையென்னலாம்படி யிருக்கையென்னாக, ஒருமுகத்தாலே நீர் தேடிப்போகிறவை: இங்கே உண்டென்கிறன். (ஒண்முத்தும்-) ஆகரத்தேபட்ட முத்தும். (பைம்பொன்னும்-, பசும்பொன்னாயிருக்கபடி. (ஏந்தி-) இவை உண்டாயிருக்கப் போகையாவது என்னென்று இவற்றைக் கைக்கொள்ளுமென்று ஏந்தினபடி. (ஒரோ குடங்கை-) போக்தாவுக்குக் கண்களைச் சுருங்கித்துப் பருகலாயிருக்கபடி. (பெரியன) போக்தாவுக்குப் பரிச்சேதிக்கலா மத்தனைதான் அவ்வருகாயிருக்கபடி. (குடங்கைப் பெரியன-) கைக்கடங்காதனையிறே, இவள் தான் ஒருமுகத்தாலே கொடுக்கிறது. (கெண்டை-) மௌக்த்யமும் மதமதப்பு மிருக்கபடி. (குலம்-) ஜாதியாகக் கூடினால் ஒப்புப்போருமத்தனை. (இவையோ வந்து பேர்கின்றவை-) அசலமான பதார்த்தம் சலித்தபடி; இக்கண்களைக் கண்டார் படும்பாட்டைக் கண்டான்பட்டபடி. (வந்து பேர்கின்றவே-) சேதனஸமாதியாலே சொன்னபடி.

ஸ்வா.—இத்தால்; ஆழ்வாருக்கு வைஷ்ணவர்களோடே கூடி யிருக்கச்செய்தே பிரிவை அதிசங்கைபண்ணி நோவுபடும்படி பிரிவு பொறுமை யிருக்கபடி. (௧௧)

---

அரு||லக்ஷணமாய், எய்துகை-கிட்டுகையாய், அதாவது-கொடுக்கையாய், உபய விபூதியும் விலையாகக் கொடுக்கும்படி தக்கிருக்கிறவென்றபடி. 'குடங்கை'-இருங்கை. குடங்கைபோலே யிருப்பனவாய்ப் பெரியனவான கெண்டைக்குலம் போலே பேர்கின்றன வென்றபடி. 'பேர்கின்றன-' சலிக்கின்றன.

[கண்ணன் விண்ணனையாய்! பொருட்கோ பிரிவெனப் பெரியனகாதம் போனதாகக்கொண்டு ஞாலமெய்தற்குரியனவாய் ஒண்முத்தும் பைம்பொன்னுமேந்தி யிருப்பனவாய் ஒரோகுடங்கைபோலே யிருப்பனவாய்ப் பெரியனவான கெண்டைக்குல மிவைபோ வந்து பேர்கின்றன; யாமின்று அரியன காண்கின்றன என்று அந்வயம்.]

'கெண்டைக்குலம்' என்றது-முற்றுவமை. 'ஒண்முத்து'-அச்ருபிந்துக்கள். ()

[அப்பு அரும்பதம்.]

பதினோராம்பாட்டு.—'பொருளதிகாரம்'-பொருள்மேற்பிரிவாய், ஸம்ச்லேஷார்த்தமாக நாயகன் த்ரவ்யந்தேடப்போகை. நாயகிக்குப்பிறந்த விகாரத்தை நாயகன் கொண்டாடுகிறானென்றபடி. 'யாமின்று அரியன' என்று கூட்டி அருளிச்செய்கிறார்; (கடல்) இத்யாதி. 'ஓதல்'-வித்யாப்யாஸநிமித்தமாகவும்; 'காவல்' அர்த்தந்தேடிவந்து இவளை ரக்ஷிக்கைக்காகவும்; 'பூசல்' - இந்த ஸம்ச்லேஷ விரோதிகளை யுத்தம்பண்ணுகைக்காகவும்; 'யாத்திரைமாட்டு' - இவள்நிமித்தமாக; அதுவும் ஒரு பிரிவு விசேஷம்: ஆக நாலுபிரிவிலு மென்றபடி. 'விண்ணனையாய்' - போக்யதையும், நிர்விகாரத்வமும். பிரிவென்ற மாத்ரத்திலே,

‘ஓ பெரியன காதம்-’ மிகவுந்தூரமாய்த் தோற்றுவதே இவளுக்கென்றபடி. ‘ஞாலம்’-உலகமாய், உயர்ந்தோராதல்; லோகபரமாதல். கண்ணீர் - முத்தும், வைவர்ண்யம் - பொன்னும். கண்களை ‘குடங்கை’ என்கிறது - எந்த ஆகாரத்தாலேயென்ன, அருளிச்செய்கிறார்; (போக்தாவுக்கு) இத்யாதி. ‘ஒருமுகத்தாலே’ - சாடு; பிரிய நினைத்த ப்ரகாரத்தாலே என்று அர்த்தம்: முகத்திலே என்று த்வநி. ‘பேர்கின்ற’ என்று-மலை பேர்த்தாற்போலே யிருக்கையாலே, (அகலமான பதார்த்தம்) என்கிறது; சம்ப்ரமத்தையாலே கண்கள் தெரியாதிருக்கிறபடி. ‘இவை’ என்கையாலே, இவற்றைக் கண்டவன்படும் பாட்டை இவைபடுவதே யென்றபடி.

[கண்ணன் விண்ணனையாய்! பொருட்குப் பிரிவென ஓ பெரியனகாதமாய் ஞாலமென்று தொடங்கிப் பேர்கின்றன; யாம் இன்று அரியன காண்கின்றன என்று அந்வயம்] (௧௪)

[வேறொரு அரும்பதம்.]

பதினொராம்பாட்டு,—கீழே புனங்காத்திருந்த வல்லிக்கொடிகளை மதியுடம்படுத்தின பின்பு ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாயிருக்க, த்ரவ்யார்ஜநார்த்தம் வரும்பிரிவை அதிஶங்கை பண்ணிக் கண்ணீர் விழவிட்டவளைக் கொண்டாடின நாயகன் வார்த்தையென்று ஸங்கதி உட்கொண்டு அருளிச்செய்கிறார்; (தலைமகனோடு) இத்யாதி. ‘பொருளதிகாரத்தை’-த்ரவ்யமுள்ள தேசத்திலிருந்து வந்த பத்ரிகாவிசேஷத்தை; அன்றிக்கே, அர்த்தார்ஜநோபாதிகமான சாஸ்த்ரத்தை. ‘இவையோ’ என்று - ஸந்நிக்ருஷ்டமாகக் காட்டுகையைப் பற்ற, அருளிச்செய்கிறார்; ( ஒரு படுக்கையிலே ) என்று. ( கலந்த காலம் ) என்றதுக்கு, புனத்திலிருக்கச்செய்தே நான் வடிவு எப்போதுங் கண்டதில்லையென்று கருத்து. (பிரிந்தகாலத்திலும்) என்றதுக்கு, “நாணின்றனகளும்” என்கிறபாட்டிற் பிரிவை ப்ரஸங்கித்தபோதுமென்று. ‘யாம்’ என்று சொன்னதுக்கு பாவம்-(உடல்) இத்யாதி. ‘இருக்க’ என்ற அநந்தரம் ‘கடவ நமக்கு’ என்று சேஷம். ‘இன்று’ என்றதைக் கூட்டி, பாவம் - ( ஓதல் ) இத்யாதி - ஶ்ருங்கார சாஸ்த்ராப்யாஸ நிமித்தமான விஶ்லேஷம்; ‘காவல்’ - போகார்த்தமான அர்த்தார்ஜநம்பண்ணி ரக்ஷிக்கத்தேடிவந்த பிரிவு; ‘பூசல் -’ ஸம்ஶ்லேஷவிரோதி நிரஸநார்த்தமாக யுத்தம்பண்ணப் போகையாலுண்டான பிரிவு; ‘பரத்வதமாட்டு’ - ஸம்ஶ்லேஷம் ஸாத்மிக்கைக்காகப் பரத்வத்தை மாட்டிக்கொண்டு எட்டாதிருக்கையாலுண்டான பிரிவு. இப்பாட்டிற் பிரிவு- அஞ்சாம் பிரிவு; அதாவது - கூடியிருக்கச்செய்தே அதிஶங்கையால் வரும் பிரிவென்று கண்டுகொள்வது. தாத்பர்யாந்தரம் - ( அவிகாராய ) இத்யாதி. ‘என்ற’ என்ற அநந்தரம், ‘படியே நிர்விகாரனான கண்ணனுடைய’ என்று சேஷம். ‘பிரிவென்றமாத்ரத்திலே’ - நடுவே சிலர் சொன்ன மாத்ரத்திலே’ ‘ஆளியக்கம்’-மநுஷ்யஸஞ்சாரம். மேலுக்கு அவதாரிகை - ( ஸம்ஶ்லேஷத்துக்கு) இத்யாதி. ‘என்றது’ என்ற அநந்தரம், ‘தோற்ற இருக்கிறபடியைச்

சொல்லுகிறதின்மேல்' என்று சேஷம். 'உயர்ந்தோர்மாட்டு' - விசேஷஜ்ஞர் விஷயத்திலே; ஞாலபதமும் உலகபதம்போலே, விசேஷஜ்ஞர் பரமென்று கருத்து. 'ஞாலம்-'உபலக்ஷணமாய், தாத்பர்யாந்தரம்-(உடை) இத்யாதி. சாடு (ஒரு) இத்யாதி. கண்ணனுக்குக் குடங்கை ஸத்ருசமானபடியைக்காட்டுகிறார்; (போக்தாவுக்கு) இத்யாதி. 'இவையோ' என்றதுக்கு பாவம் - ( இக்கண் ) இத்யாதி. (௧௧)

தாத்பர்யம் — இப்பாசுரத்தில், பாகவதவிஶ்லேஷத்தைக் கொஞ்சமும் ஸஹியாத தம்முடைய வைலக்ஷண்யத்தைக்கண்டு ஸ்ரீவைஷ்ணவர்களுரைத்த பாசுரத்தை, தனார்த்தமாகப்பிரிய நினைத்தநாயகன் விஶ்லேஷம் ஸஹியாத நாயகியினவஸ்த்தையைக்கண்டுரைத்தநாயகன் பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

அத்யந்த போக்யதையையுடைய நாயகியே! நாமின்றைக்கு ஒருநாளுங்காணாத அத்புதங்கண்டோம்; அதென்னவென்றால், சிலர் என்னிடத்தில் பிரிவின் கதையைச் சொல்லும்போதே நானவர்களை நிஷேதியாமையால் நானும் பிரியநினைத்தேனென்றெண்ணி அவ்வளவிலேயே வெகுதூரம் பிரிந்துபடும் பாட்டைப்படுகிறாய். நானுன்னைவிட்டுப் பிரியமாட்டேனென்பது உனக்குத்தெரியாதா? உபயவிபூதியுங்கண்டனுபவித்து ஆஶ்சர்யப்படும்படி அஶ்ருபிந்துக்களை விட்டுக்கொண்டு வைவர்ண்யத்தையடைந்து ஒவ்வொரு சிறுக்கையளவாயுள்ள உன்னுடையகண்கள் பெரிய இரண்டுமத்ஸ்யங்கள் துள்ளுவதுபோல் நின்ற நிலையில் நில்லாமல் சலிக்கிறதே, இதென்ன ஆஶ்சர்யம் என்கிறார். ௧௧.

போர்கின்றது மணிமாமைபிறங்கியள்ளற்பயலை
ஊர்கின்றது கங்குலூழிகளே, இதெல்லாமினவே
யீர்கின்றசக்கரத்தெம்பெருமான் கண்ணன்றண்ணந்துழாய்
சார்கின்றநன்னெஞ்சினீர், தந்துபோனதனிவளமே. ௧௨.

அர்த்தம்.— ஈர்கின்ற - அழகைக்காட்டி (என்னைப்)பிளக்கிற, சக்கரத்து-திருவாழியையுடைய, எம்பெருமான் - என்னுடை ஸ்வாமியான, கண்ணன் - க்ருஷ்ணனுடைய, தண் - குளிர்ந்த, அம் - அழகிய, துழாய் - திருத்துழாயிலே, சார்கின்ற - அபிநிவிஷ்டமாயிருக்கிற, நல் - விலக்ஷணமான, நெஞ்சினீர் - மனஸ்ஸை, தந்துபோன - கொடுத்துப்போன, தனி - அத்விதீயமான, வளம் - ஸம்பத்து, (என்னவென்றால்), மணி - ஶ்லாக்யமான, மாமை - அழகு, போர்கின்றது - புறப்பட்டுப் போகாநின்றது. பிறங்கி - மிகுந்தும், அள்ளல் - நெருங்கியுமிருக்கிற, பயலை - வைவர்ண்யம், ஊர்கின்றது - பரவாநின்றது. கங்குல் - ராத்ரி, ஊழிகளே - யுகங்களாயே வளராநின்றது. இதெல்லாம் - இந்தவைவர்ண்யம் முதலானவை யெல்லாம், இனவே - இப்படி பாதகமாகாநின்றது.

[அப்பிள்ளை உரை.]

அவ.—பன்னிரண்டாம்பாட்டு.—எம்பெருமானோடே புணர்ந்து பிரிந்து ஆற்றாமையாலே அவஸந்நையாய்த் தனக்குப் பிறந்த வைவர்ண்யாதிகளைச் சொல்லி நெஞ்சோடே கலாய்க்கிறாள்.

உரை.—(பேர்கின்றது மணி மாமை.) தன் நிறத்தை அவன் புகழும்படியாலே சொல்லி அவன் விரும்புகையாலே எனக்குத் தாரகமான நிறங்காணக் காண அழியாநின்றது. (பிறங்கி அன்னற் பயலை ஊர்கின்றது-) அறமிக்குச் செறிந்திருந்துள்ள பயலையானது என் உடம்பெல்லாம் அப்ரதிஹதமாம்படி வண்டலிடாநின்றது. (சுற்குல் ஊழிகளே- இப்படி நிறந்தொடக்கமானவை கலியுகத்திற் பதார்த்தவ்யவஸ்தைகள் மாறுமாபோலே அந்யதாசரிக்கப் புக்கவாறே காலம்பாக்கிருக்கிறதென்று அன்று ராத்ரியானது அநேககல்பங்களாகாநின்றது. (இது எல்லாம் இனியே- இந்நிறத்த வைவர்ண்யமுதலானவையெல்லாம் இப்படியே. (ஈர்கின்ற சக்கரத்து எம்பெருமான் கண்ணன் தண் அந்துழாய் சார்கின்ற நல் நெஞ்சினார் தந்து போன தனிவளம்-) தான் பிரிகிறபோது கையுந் திருவாழியும் பொருந்தினபடியைக்காட்டி என்னை ஈராநிற்பதுஞ்செய்து அவ்வழகாலே என்னை எழுதிக்கொண்டு பெண்களுக்கு பவ்யமாயிருந்துள்ள அவனுடைய தோளின் மாலையைக்கண்டு நம்மைப்போலே கிடைக்கும் கிடையாதென்று விசாரியாதே பதறிவிழுந்து நெஞ்சு நமக்குத் தந்துபோன ஒப்பில்லாத அழகு. (ஈர்கின்ற) என்று-ப்ரதி பக்ஷத்தை யீர்கையென்றுமாம். (நெஞ்சினார்) என்று-ஸ்தோபோக்தியும், எம்பெருமானோடு ப்ரத்யாஸந்நமாகையாலே கொண்டாடுகிறதென்றும்.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—பன்னிரண்டாம்பாட்டு.—கீழெல்லாம் வைஷ்ணவர்களைத் தலைமகளாகப் பேசிற்று; இதிலே எம்பெருமானைத் தலைமகனாகப் பேசுகிறது. பகவத்ஸம்ஶ்லேஷம் பாகவதஸம்ஶ்லேஷபர்யந்தமாய் நிற்கக்கடவதாகையாலும், பாகவத ஸம்ஶ்லேஷம் பகவத்ஸம்ஶ்லேஷபர்யந்தமாய் நிற்கக்கடவதாகையாலும், இவர்க்குக் கீழ் உண்டான பாகவத ஸம்ஶ்லேஷம் பகவத்ஸம்ஶ்லேஷபர்யந்தமாக்கினபடி.

வ்யா.—(பேர்கின்றது மணிமாமை-) விலக்ஷணமான நிறம் போகிறபடி.(க) "மாமைத்திறத்துக்கொலாம்" என்று ஆசைப்பட்ட நிறம் போகிறபடி; காணக்காணச் சரக்கு வாங்குகிறபடி; இவ்வளவிலே

அரு|| பன்னிரண்டாம்பாட்டு —பாகவத ஸம்ஶ்லேஷம் பகவத் ஸம்ஶ்லேஷ பர்யந்தமாக அதிலே அபேக்ஷை பிறந்து அதுகிடையாமையாலே வந்த வ்யஸநத்தைச் சொல்லுகிறதென்றபடி; பாகவத ஸம்ஶ்லேஷமும் * போதயந்தஃ பரஸ்பரம் த்வாரா பகவானுக்கு ஸ்மாரகத்வேந தத்பர்யந்தமாயிருக்குமென்றபடி; நாயகி ஆசைப்பட்ட நிறமென்றபடி. 'பேர்கின்றது' என்றவர்த்தமாகாரர்த்தம்-(காணக்காண) என்று. இத்தால், தாத்பர்யம் - (இவ்வளவிலே)

(க) திருவிருத்தம்-௫.

வ்யா| வரினும் மீட்கலாமாயிருக்கிறபடி. 'மணிமாமை' என்று தன் நிற த்தைத்தானே கொண்டாடுவானென்னென்னில்;—ஒரு நிறமே, எழி லே என்று அவன் கொண்டாடும்படிகளைக் கேட்டிருந்தபடியாலே தனக்குத்தா னன்றியிலே அவனுக்காகத்தானாயிருக்கையாலும். (பிற ங்கி அள்ளற் பயலை-) நிறம்போன இடம் பாழ்கிடவாமை பயலையாக் கிறபடி. (பிறங்கி-) கிண்ணகம்போலே பெருகி. (அள்ளல்-) இட்ட இடத்திலே கால் செருகும்படி வண்டலிட்டபடி; தானே வந்தாலும் தூர்வை யெடுக்கவொண்ணாது. (ஊர்கின்றது-) விஷம்பரந்தாற்போ லே; ஸார்வபௌமரான ராஜாக்கள் போகப் பள்ளிகள்வந்து புகுரு மாபோலேயும்: ஸ்ரீபர்ணசாலையில்நின்றும் இளையபெருமாள் போக ராவணன் புகுந்தாற் போலவும். (கங்குல் ஊழிகளை-) கலப்பதற்கு முன்பு முப்பதுநாழிகையா யிராநின்றால், கலந்தவாறே ஒருக்ஷணமா யிராநின்றது; பிரிந்தவாறே கல்பங்களாயிராநின்றது. (இது எல்லாம் இனவே-) நெஞ்சிற்பட்டவற்றைக் கொண்டு அல்லாதவற்றையுஞ் சொல்லுகிறது; மற்றுமுண்டான அன்றில், தென்றல் இவையெல் லாம் இப்படியே: பிராட்டியும் பெருமாளுமாகக் கலந்தபோது எடுத் துக் கைகூட்டின பதார்த்தங்கள் அவன்போய்நிற்குங் காட்டில் நின் றாற்போலே பகையானாற்போலே. (ஈர்கின்ற சக்கரம்-) அநுகூலப்ர திகூலவிபாகமின்றியே ஈர்கின்றபடி; சேதநஸமாதியாலே; ப்ரதிகூல

அரு||என்று. 'அவனுக்காகத் தானாயிருக்கையாலும்' என்றது-தான் அவனுக்கு சேஷமென்றிருக்கையாலு மென்றபடி. 'பிறங்குதல்'-மிகுதியைச்சொல்லுகிற து.'அள்ளல்'-ஸாந்த்ரதை.'செருகுகை'-புதைகை. தூர்வையெடுக்கையாவது-கிணறுமண் தூர்ந்துகிடந்தால் அத்தை எடுக்கை; இத்தால், இந்த வைவர்ண் யம் அவனாலும் போக்கப்போகாதென்றபடி. காந்திபோன இடம் வைவர்ண் யம் ஆக்ரமிக்கிறது என்போல விருக்கிறதென்ன, அருளிச்செய்கிறார்; (ஸார்வ பௌமரான) என்று. 'இதெல்லாமினவே' என்று-இவைமுதலான அன்றில், தென்றல் முதலான அநுகூலபதார்த்தங்களெல்லாம் இப்படியே விபரீதமாயிற் றென்றபடி. விஶ்லேஷத்திலே இவை பாதகமாகிறபடி என்போலவிருக்கிற தென்ன, (பிராட்டியும்) என்று. (க)" యాని స్మ రమణీయాని తయా సహ భవన్తి మే । తాన్యేవారమణీయాని జీవతో మే తయా వినా- யாநிஸ்மரமணீயாநி தயாஸஹபவந்தி மே - தாந்யேவாரமணீயாநி ஜீவதோமேதயாவிநா" என்றாரிறே பெருமாள். (நின்றாற்போலே பகையானாற்போலே) என்றது-இருந்த இருப்பிலே பகையா னாற்போலே யென்றபடி. 'இன்னா' என்று விசேஷியாமையைப்பற்ற, (அநுகூல) இத்யாதி; சேதநஸமாதியாலே ஈர்கின்றதென்கிறு ரென்றபடி. (அநுகூலப்ரதி கூலவிபாகமின்றிக்கே) என்ற வாக்யத்தைவிவரிக்கிறார்; (அநு

(க) ஸ்ரீராமாயணம்-கிஷ்கிந்தாகாண்டம்-க-கக.

[அப்பு அரும்பதம்.]

பன்னிரண்டாம்பாட்டு.—பாகவதர்களை அநுபவித்தவர் எம்பெருமான் பக்கலிலே புகுவானென்னென்ன, அருளிச்செய்கிறார்; (பகவத்ஸம்ஶ்லேஷம்) இத்யாதி. நிறம் அவனுக்கு சேஷமாகையாலுங் கொண்டாடுகிறாளென்று தாத்பர்யார்த்தம். ஸ்வாபாவிகமான நிறம்போனவுடனே வைவர்ண்யம் வந்ததுக்கு த்ருஷ்டாந்த த்வயம் அருளிச்செய்கிறார்; (ஸார்வபௌமரான) இத்யாதி. 'கெஞ்சிற்பட்டது'-வைவர்ண்யம், சங்குல்; இவைபோலே அன்றில்முதலானவும் பாதகமென்றபடி. அநுகூலமான அன்றில் முதலானது இருந்தாற்போலே பாதகமானதுக்கு த்ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார்; (பிராட்டியும்) இத்யாதி. திருவாழியாழ்வான் பரமசேதநனாயிருக்கச்செய்தேயும், இங்கு 'சேதநமாகில்' என்கிறது-ஆயுதஸாம்யத்தாலே. ஆஶ்ரிதார்த்தமாக மறைத்தவித்தனையொழிய க்ருஷ்ணனுக்குத் திருவாழி உண்டென்றபடி. எல்லைநிலமான திருத்துழாயைக்கண்டு 'சார்கின்ற' என்றதைப்பற்ற அருளிச்செய்கிறார்; (உன்பழமை; இத்யாதி: 'பழமை' - சேர்த்தி. ரேபாந்தத்தைப்பற்ற அருளிச்செய்கிறார்; (அலர்ந்தபரியட்டம்) இத்யாதி: பரியட்டம் - ஏத்தாப்பு; வஸ்த்ரம். அங்கே போய்ச்செய்கிற கார்யம் ஏதென்ன, அருளிச்செய்கிறார்; (பூசுஞ்சாந்து) இத்யாதி. 'ஸம்பத்து-' வைவர்ண்யம் முதலானது.

[மற்றுமுண்டானவையும் இனவே - இப்படியே; இதெல்லாம் நெஞ்சினூர் தந்துபோன தனிவளம் என்று அந்வயம்.] (௧௨

[வேறொரு அரும்பதம்.]

பன்னிரண்டாம்பாட்டு.—'இழை "தடாவியவம்பும்" என்றபாட்டுத்தொடங்கி ஆறுபாட்டிலே பாகவதரைத் தலைமகளுக்கப்பேசி அநுபவித்துவரச்செய்தே அடுத்த கீழ்ப்பாட்டிலே கூடியிருக்கச்செய்தே பிரிவை நினைத்துக் கண்ணுங் கண்ணீருமாயிருக்கும் அதிமாத்ர ப்ராவண்யத்துக்கு நிவர்த்தகரில்லாமை அதைக் கண்டவர்களிருக்க, அந்தப்பிரிவு பகவத் பர்யந்தமாய் விளைந்து நோவுபடுகிறார், இப்பாட்டில் என்கிற ஸங்கதியை உட்கொண்டு அருளிச்செய்கிறார்; (கீழெல்லாம்) இத்யாதி. பாகவதவிஶ்லேஷம் பகவத்விஶ்லேஷ பர்யந்தமாக விளைகைக்கு அடி என்னென்ன, (பகவத்) இத்யாதி. 'இருக்கிறபடி' என்ற அநந்தரம், 'ஆகையாலே' ததியவிஶ்லேஷம் தத் விஶ்லேஷ ஜநகம்' என்று கூட்டுவது, வைலக்ஷண்யத்தை விவரிக்கிறார்; (மாமை) இத்யாதி' வர்த்தமாநதாத்பர்யம் - (காண) இத்யாதி வாக்யத்வயம். 'இருக்கையாலும்' என்ற அநந்தரம், 'கொண்டாடுகிறார்' என்று சேஷம். 'இது' என்றது-புத்திஸ்த்த பராமர்ஶியாகையாலே, அதை விவரிக்கிறார்; (மற்றும்) இத்யாதி. 'எடுத்துக்கைநீட்டின' - போகத்துக்கு அநுகூலங்களான. 'கடைச்செறி' ஆயுதவிசேஷம். 'சதுர்ப்புஜம்' என்ற அநந்தரம், 'என்கிறபடியே அநுகூலர்க்கு காலாய்த்தோற்றும்' என்று சேஷம். 'கண்ணனே யன்றி அவன் கண்ணியன்றிக்கே அதின் தண்மையிலும் அழகிலுமாயிற்று, 'சோர்கின்றது'

என்று பாவம் அருளிச்செய்கிறார்; (முதல்) இத்யாதி. 'போகின்ற' என்றே 'சார்கின்ற' என்றதுக்கு, 'என்னோடுபழக்கம்வேண்டா' என்றும், 'அங்கே தானே சார்ந்தது' என்றும் பாவம் (உன்) இத்யாதி பஹுவசந தாத்பர்யம் - (தம்முடைய) இத்யாதி. பகவத்விஷயத்திலே முற்பட்டுப் போய்ச் செய்ய வேண்டுவ தென்னென்ன, (பூசும்) இத்யாதி. (கஉ)

தாத்பர்யம்.—இப்பாசுரத்தில், தம்முடைய திருவுள்ளம் பகவத்ப்ரவணமாய், அத்தாலே தத்விரஹம் அஸஹ்யமாய்ப் பிறந்த சைதில்யத்தை, நாயகனுடைய விரஹத்தை ஸஹியாத நாயகியின் வார்த்தையாலே யருளிச் செய்கிறார்.

கையும் திருவாழியுமாக எனக்குக்கண்ணன் ஸேவைஸாதிக்கும் போது அவன் சாத்தியருளின திருத்துழாய் மாலையை ஆசைப்பட்டு அவன் பின்னே என்மனஸ்ஸு போய்விட்டது. அதுபோன உடனே என்தேஹ ஸௌந்தர்யமு மழிந்து சரீரமெல்லாம் வெளுத்து வைவர்ண்யத்தை யடைந்தது. மற்று முண்டான தென்றல் முதலியவையும் பாதிக்கத்தொடங்கிற்று. இந்த பாதைகளினால் ஓரிரவு அனேகம் யுகங்களாய்ப் பெருகத் தொடங்கிற்று. என்னுடைய இந்த நெஞ்சுடன் ஸஹவாஸம் பண்ணினதற்குஇதுவே பலமாய் விட்டது என்று நோவுபடுகிறார். (கஉ)

தனிவளர்செங்கோல்நடாவு தழல்வாயரசவியப்
பனிவளர்செங்கோலிருள் வீற்றிருந்தது, பார்முழுதுந்
துனிவளர்காதல்துழாயைத் துழாவுதண்வாடைதடிந்
§ தினிவளைகாப்பவரார், எனையூழிகளீர்வனவே. கங.

அர்த்தம்.—தனி - அத்விதீயமாய், வளர் - வ்ருத்தியடையாநின்ற, செங்கோல், ஆஜ்ஞையை, நடாவு - நடத்துகிற, தழல் - உஷ்ணத்துக்கு, வாய் - ஸ்தாநமான, அரசு - ராஜாவான ஸூர்யன், அவிய - அழிய, (அஸ்தமிக்க) பனி - குளிர்த்தி, வளர் - வ்ருத்தியடைகிற, செங்கோல் - ஆஜ்ஞையையுடைய, இருள் - அந்தகாரம், பார்முழுதும் - பூமியெல்லாம், வீற்றிருந்தது - வ்யாபித்திருந்தது. துனி - துக்கத்தை, வளர் - வ்ருத்தியடைவிப்பிக்கிற, காதல் - ஆசைக்கு விஷயமான; துழாயை - திருத்துழாயை, துழாவு - அளாவுருகிற, தண் - குளிர்ந்த, வாடை - வாடைக்காற்றை, தடிந்து-வெட்டி, இனி - இனிமேல், வளை - வளையை, காப்பவர் - ரக்ஷிப்பவர், ஆர் - எவர்? எனை - என்னை, ஊழிகள் - (இந்தராத்ரி) கல்பங்களாய், ஈர்வனவே .. பிளவாநின்றது. (கங)

§ எனைவளைகாப்பவரார் என்று பாடாந்தரம்.

[அப்பிள்ளை உரை.]

அவ.—பதின்மூன்றாம்பாட்டு.—ஆதித்யாஸ்தமயமான பின்பு அபிஸாரிகாந்த அந்தகாரம் வந்து நலியாநின்றது; இதனுடைய உபத்ரவத்தைத் தவிர்த்து நமக்கு ரக்ஷகராகவல்லார் ஆரென்கிறாள்.

உரை.—(தனிவளர் செங்கோல் நடாவு தழல்வாய் அரசவிய-) ஏகச்சத்ராதிகளை அடர்த்து வளராநின்றுள்ள செங்கோலை நடத்துகிற உஷ்ணகிரணனான ராஜா சிறிது ப்ரளயமறும்படியாக அஸ்தமிக்க விளக்கவித்தாற்போலே நசிக்க; அரசர் இறந்து அந்தகாரசத்ருக்களை அடர்த்துக்கொண்டு அவன் பணைக்கிறபடியே. (பனிவளர் செங்கோல் இருள் வீற்றிருந்தது பார்முழுதும்-) துக்கத்தை மிகப் பண்ணுகின்ற அந்தகாரமானது ஆதித்யனாய்ப்போய் நிஷ்ப்ரதிபக்ஷமானவாறே தன் வேண்டிற்றெல்லாம் செய்யும்படி பூமியைத் தனக்கு இருப்பிடமாக்கிக்கொண்டிருந்தது. (துனிவளர் காதல் துழாயைத்துழாவு தண்வாடை தடிந்து இனி வளைகாப்பவர் ஆர்-) துக்கத்தை வளர்க்காநின்றுள்ள காதலை விளைப்பதான திருத்துழாயை அளைந்துகொண்டு வருகிற குளிர்ந்த வாடையை இருதுண்டமாகவிட்டு, இப்படி நான் † பட்டிலையான இத்தசையில் இவ்வளை நில்லாததைப்போக்கி ரக்ஷிக்கவல்லாரார்? (எனை ஊழிகள் ஈர்வனவே-) பாதகமான இவை எத்தனைகாலம் ஈர்க்கடவன. (கங)

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—பதின்மூன்றாம்பாட்டு—ஆஸ்வாஸகரமான காலம் போகையும், ப்ரதிகூலமான காலம் வருகையும், அதுக்கு ஸஹகாரிகள் உண்டாகையும், ரக்ஷகன் வாராதொழிகையும், [illegible] என்கிறாள்: பகல் பதார்த்ததர்ஸநம் பண்ணி இந்த்ரியங்கள் அங்கேயாமவகையாலே தரித்திருக்கலாம்; ராத்ரி எல்லாவற்றுக்கும் உபஸம்ஹாரமாய் இருக்கையாலும் ஸமபோகயோக்யமான காலமாகையாலும் தரிக்கவொண்ணாது.

வ்யா.—(தனிவளர் செங்கோல் நடாவு-) ராவியன், ப்ரபக்ஷம்பட்டதென்சொல்லுகிறாள் ராத்ரியிலே சந்த்ரநக்ஷத்ரங்களுக்கு

அரு॥ பதின்மூன்றாம்பாட்டு.—(ஸஹகாரிகள் உண்டாகையும், ரக்ஷகன் வாராதொழிகையும்) என்றது - 'வாடைதடிந் தினிவளைகாப்பவரார்' என்றதைப் பற்ற. பகல் ஆஸ்வாஸகரமாய் ராத்ரி ப்ரதிகூலமானபடி என்னென்ன, அருளிச்செய்கிறார்; (பகல்பதார்த்ததர்ஸநம்பண்ணி) என்று. ஆதித்யனை வர்ணிக்கிறதுக்குத் தாத்பர்யம் - (ராவியன்) இத்யாதி. (ராவியன், ப்ரபக்ஷம்பட்டதென்னென்கிறாள்) என்றது - ஸூர்யோதயமானவாறே சந்த்ரநக்ஷத்ராங்களெல்லாம் நிஸ்தேஜஸ்கமாயிற்றென்றபடி; இருளுக்குப் ப்ரதிபக்ஷமான ஆதித்யனென்றபடி. 'தனி' என்ற பதத்துக்குத் தாத்பர்யம் - (ராத்ரியிலே சந்த்ர

† விழுவில்லையான என்றும் பாடாந்தரம்.

வ்யாபாரச் செலுத்தினதெல்லாந் தானே செலுத்துகை ராத்ரியைப் போலே ஸத்காரமும் பண்ணிச்செலுத்துகையன்றியே, எதிரிகளும் நிற்கச்செய்தே அஸத்கல்பமாம்படி தேஜஸ்ஸாலே அமுக்கிச் செலுத்துகை; (க) "ஸர்வாந் ப்ரச்சாதயந் ச்ரியா - குரூந்ப்ரச்சாதயந்ச்ரியா" (செங்கோல்நடாவு-)மநுமாந்தாதாக்களைப்போலே. (தழல்வாய்அரசு அவிய-) அநபிபவநீயன்கிடீர், இப்படி பட்டான். (அரசு-) ஏகவீரன். (அவிய,) விளக்கு அவிந்தாற்போலே; (உ) "ஒண்சுடரோன் வாராதொளித்தான்" என்னுந்தலைமக்கு அவ்வாறுகாயிருந்தபடி: விடியக் காணாமையாலே; இவன் முடிந்தானென்கிறாள். (பனிவளர்செங்கோல் இருள்வீற்றிருந்தது-) குளிர்த்தியை வளராநின்றுள்ள செங்கோலையுடைய ராத்ரி பூமிப்பரப்பையடங்கத் தனக்கு இருப்பிடமாகக்கொண்டது; ராஜ்யம்பண்ணின ராஜா முடிந்தால் வேறொரு ராஜா புகுருமாபோலே? புதுக்கோமுற்றானாக் கண்டால் நடுங்குமாபோலே வீற்றிருந்தது. ஆதித்யன ராஜ்யமித்தனையும் ராத்ரிக்கு அழ கோலக்க மிருக்கப்போந்த வித்தனை. (வீற்றிருந்தது-) இனி எதிரிகளில்லையென்னும்படி இருந்தது. (பனிவளர்செங்கோல் இருள்வீற்றிருந்தது-) அறைகளிலே ஒளித்துக்கிடந்தார் புறப்படுமாபோலே. (துனிவளர்காதல் துழாயைத் துழாவு தண்வாடை தடிந்து இனி வளைகாப்பவர் ஆர் -) துக்கம் வளராநின்றுள்ள காதலை யுடைத்

அருளும்)என்று:ராத்ரி ஸூர்யனை ஸவாஸநமாகப்போக்கித் தான்விஜ்ரும்பிக்கும்; ஸூர்யனாகில் சந்த்ராதிகள் இருக்கச்செய்தே அஸத்கல்பமாம்படி தன் தேஜஸ்ஸாலே அமுக்கிச் செலுத்துமென்றபடி. க்ருஷ்ணன் தன்னுடைய காந்தியாலே, "ஸர்வாந் ப்ரச்சாதயந் ச்ரியா-குரூந்ப்ரச்சாதயந்ச்ரியா." 'தனிவளர்-' அத்விதீயமாய் வளராநிற்கிற; ஆஜ்ஞையை நடத்துகிற, 'தழல்வாய் அரசு' - உஷ்ண கிரணனை அரசென்று ஸூர்யனைச்சொல்லுகிறது. அங்கு 'வாராதொளித்தான்' என்றார்; இங்கு 'அவிய' என்கையாலே, அத்தலைக்கு அவ்வருகா யிருந்ததென்றபடி. ஆனால், ஸூர்யன் நசித்தானோவென்ன, (விடியக்காணாமையாலே) என்று. 'அவிய'-நசிக்க. 'பனி-' என்று-குளிர்த்தியாதல், நடுக்கமாதல்; 'பனி' என்று - குளிர்த்தியையும், நடுக்கத்தையுஞ் சொல்லுமென்றதுக்கு நிகண்டு: (ஈ) "அச்சமுந்துன்பமு நடுக்கமுந்துகிலும், பற்றிய சீதமும் பனியெனப் படுமே" என்று. 'பனி' என்று - நடுங்குதலென்ற இரண்டாம் அர்த்தத்தை அருளிச்செய்கிறார்; (புதுக்கோமுற்றானை) என்று. ஸூர்யனுடைய ராஜ்யமெல்லாம் ராத்ரிக்கு ஓலக்கமிருக்கப் போந்ததென்றபடி. 'அரசவியப் பனிவளர்செங்கோ லிருள்வீற்றிருந்தது' என்ற சேர்த்திக்குத் தாத்பர்யம் - (அறைகளிலே) இத்யாதி. 'துனி'-துஃகம். காதலையுடைத்தான - காதலுக்கு விஷயமான, திருத்துழாயைத் துழாவு - ஸ்பர்சி

(க)

(உ) திருவாய்மொழி-௬௪ ௯.

(ஈ) திவாகரம்.

வ்யா||தான துழாயைத்துழா விவருகிற குளிர்ந்தவாடையை இருமுறியாகவெட்டி இனி வளையைக் காப்பவரார்? (தண்வாடை-) அமூர்த்தம் மூர்த்தமாகிறபடி. பாதகத்வத்தி லூற்றப்பு. (இனிவளைகாப்பவர்ஆர்) வந்து கிட்டுவது காணுமென்றிருக்கிறாள். (ஏனை ஊழிகள் ஈர்வன வே-) அநேகமான கல்பங்கள் ஈராநின்றன,

ஆழ்வார்க்கு ஸம்ஸாரத்தோடு பொருந்தாமை யிருந்த படிசொல்லுகிறது.

கங.

---

அரு||த்துவருகிற,வாடையைத் தடிந்து-இருதுண்டமாக வெட்டி. அமூர்த்தமானதை 'தடிந்து' என்னும்படி என்னென்ன, அருளிச்செய்கிறார்: (அமூர்த்தம் மூர்த்தமாகிறபடி பாதகத்வத்திலுறைப்பு) என்று. (வந்து கிட்டுவதுகாணுமென்று இருக்கிறாள்) என்றது - வாடையைவெட்டி வளைகழலாதே ஸம்ஶ்லேஷிக்கக் கிட்டுமோ வென்கிறாளென்றபடி. (கங)

[தனிவளர் செங்கோல் நடாவு தழல்வாயரசவியப் பனிவளர் செங்கோல் இருள்பார்முழுதும் வீற்றிருந்தது; ஏனை ஊழிகள் ஈர்கின்ற; தனிவளர் காதற்றுழாயைத் துழாவு தண்வாடை தடிந்து இனிவளைகாப்பவராரென்று அந்வயம்.] 'என வளைகாப்பவரார்' என்று பாடாந்தரம். (கங)

[அப்பு அரும்பதம்.]

பதின்மூன்றாம்பாட்டு.—பகலுக்கும் இரவுக்கும் ஆநுகூல்ய ப்ராதிகூல்யம்எந்த ஆகாரத்தாலே என்ன, அருளிச்செய்கிறார்; (பகல்) இத்யாதி. உபரதமாகை-வேறுவிஷயமில்லாமையாலே ஒழிந்து ஒருமுகமாகை. ஆதித்யனுக்குப் பரபக்ஷம்-சந்த்ராதிகள். 'தனி' என்றதைப்பற்ற அருளிச்செய்கிறார்; (ராத்ரியிலே இத்யாதி. 'வளர்' என்றதைப்பற்ற அருளிச்செய்கிறார்; (ராத்ரியைப்போலே) இத்யாதி. 'ஸத்தாநாஶம்-' ஆதித்யாஸ்தமனம். எதிரிகள்நிற்கத் தேஜஸ்ஸாலே மறைத்த விடமுண்டோ வென்ன, அருளிச்செய்கிறார், (குருந்) இத்யாதி; துர்யோதநாதிகள் நிற்க க்ருஷ்ணன் தன் தேஜஸ்ஸாலே மறைத்தானென்றபடி. 'ஒளிக்க' என்னுமல் 'அவிய' என்பானென்னென்ன, அருளிச்செய்கிறார்; (ஒண்சுடரோன்) இத்யாதி. ஆனால் 'அவிய' என்கைக்கு ஆதித்யனுக்கு நாஶமுண்டோவென்ன, அருளிச்செய்கிறார்; (விடியக்காணுமை) இத்யாதி. 'பனி-' குளிர்த்தியாதல், நடுக்கமாதல். இத்தை அருளிச்செய்கிறார், (புதுக்கோமூற்றார்) இத்யாதி. வீற்றிருக்கை - விஸ்த்ருதமாயாதல், வேறுபாடுதோற்றவாதல். அழகோலக்கமிருக்கை - தானிருக்க இடம்போந்த வித்தனையொழிய ராஜ்யம்பண்ண இடம்போராதென்றபடி. முந்தின அர்த்தத்திலே அங்கங்கே இருந்தபடியே புறப்பட்டபடிக்கு த்ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார்; (அறைகளிலே) இத்யாதி. 'துழாய்-' திருத்துழாய்; வளைகாக்கை-ஸம்ஶ்லேஷத்தை உண்டாக்குகை. அமூர்த்தமான வாடையை 'தடிந்து' என்னப் போமோவென்ன, அருளிச்செய்கிறார்; (அமூர்த்தம்) இத்யாதி. 'ஆர்,

என்று நிர்வேதமன்றிக்கே, ப்ரஸ்நமாக்கி அருளிச்செய்கிறார்; (வந்துகிட்டு வது) இத்யாதி; நாயகன்வந்து கிட்டவற்றோ வென்றபடி. ராத்ரி-ஸம்ஸாரம்; வாடை-விஷயம்; இது, ஸ்வாபதேசம்.

[தனிவளர் தொடங்கிப் பார்முழுதும் இருள் வீற்றிருந்தது; எனை யூழி களாய் ஈர்வன; இனித், தனிதொடங்கி வளை காப்பவரார் என்று அந்வயம்.]

[வேறொரு அரும்பதம்.]

பதின்மூன்றாம்பாட்டு.—இப்பாட்டில் பகவத்விஸ்லேஷத்தாலே நொந்த இவர்க்கு இந்தவிபூதியிற் பொருந்தாமை விளைந்ததை ராத்ரிவ்யஸநத்தாலே நொந்த நாயகி பாசுரத்தாலே அருளிச்செய்கிறாரென்று ஸங்கதியுட்கொண்டு பாட்டடைவே வ்யாக்யாநித்து பாவம்-(ஆஸ்வாஸ) இத்யாதி. 'ஒழிகையும்' என்ற அநந்தரம், 'உண்டாகையாலே' என்று சேஷம். 'அவிய' என்னுமளவுக்குங்கருத்து அருளிச்செய்கிறார்; (பாவியேன) இத்யாதி. 'பரபக்ஷம்-' இருளுக்கு ஶத்ருபக்ஷம். 'தனி' என்றதுக்குத் தாத்பர்யம்-(ராத்ரியிலே) இத்யாதி. 'வளர்' என்றதுக்குத் தாத்பர்யம்-(ராத்ரியைப்போலே) இத்யாதி. 'ஸத்தாநாஶம்பண்ணி-' ஸூர்யனுடைய அரசை அவியப்பண்ணி. 'செலுத்து கை-' செங்கோல்நடத்துகை. எதிரிகள் இருளையும் அத்தோடு கூடின நக்ஷத்ர சந்த்ரர்களையுஞ் சொன்னபடி. இந்த ஆதித்யனுக்கு (க)* அச்யுதபானுவை த்ருஷ்டாந்தமாய்க் காட்டுகிறார்; (குரூர) இத்யாதி; துர்யோதநாதிகள் நிற்க, க்ருஷ்ணன் தேஜஸ்ஸாலே மறைத்தானென்றபடி. 'தழல்' - ஔஷ்ண்யத்துக்கு' 'வாய்' இடமானவனென்று சப்தார்த்தமாய், தாத்பர்யம் - (அநபி) இத்யாதி. 'ஒளிக்க' என்னுதே 'அவிய' என்றதுக்குத் தாத்பர்யம் - (இனி) இத்யாதி. மூர்த்தின் அர்த்தத்திலே இருந்தபடியே புறப்பட்டமைக்கு த்ருஷ்டாந்தம்-'அறைகளிலே) இத்யாதி. 'காதலையுடைத்தான-' தன்காதலுக்குவிஷயமான. 'இருமுறியாக-' இரண்டு துண்டமாக. காற்றை இருதுண்டமாக்கக் கூடுமோ வென்ன, (அமூர்த்தம்) இத்யாதி. 'ஆர்' என்றத்தாலே ஒருவருமில்லையென்று தோற்றுமைக்காக ப்ரஶ்நமாக அருளிச்செய்கிறார்; (வந்து) இத்யாதி, நாயகன் வந்து கிட்டவேணுமென்று இருக்கிறாளென்றபடி. ராத்ரி-ஸம்ஸாரமாகவும், வாடை - விஷயமாகவும் ஸ்வாபதேசம் அருளிச்செய்கிறார்; (ஆழ்வார்க்கு) இத்யாதி. (கங)

தாத்பர்யம்.—இப்பாசுரத்தில் லாழ்வார் தமக்கு ஸம்ஸாரம் அஸஹ்யமானபடியை, குறித்துப் போனஸமயத்தில் நாயகன் வாராமையைக்கண்டு ரைத்த நாயகியின் பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

பகற்காலத்தில் ஸூர்யன் சந்த்ரனும் நக்ஷத்ராதிகளும் மறையும்படி தன் கிரணங்களை வ்யாபிக்கச்செய்து ஸகலபதார்த்தங்களையும் ப்ரகாசிப்பிக்க, அப்பதார்த்தங்களைப் பார்த்துக்கொண்டு காலம் போக்கினோம். இப்போது அந்த ஸூர்யனுமஸ்தமித்து ராத்ரிப்ரவேசித்தது; குளிர் நடுக்கத்தொடங்கிற்று;

(க) ஸ்ரீவிஷ்ணுபுராணம் ரு- -உ.

பதார்த்தங்களொன்றும் கண்ணுக்குத்தோன்றாதபடி இருள்மூடிக்கொண்டது. இதற்குமேலே, நானாசைப்பட்ட அவன் சாத்தியருளின திருத்துழாய் மேலெளாவிவந்த வாடைக்காற்றும் பாதியாநின்றது. இதனால் என்சரீரம் இளைத்துக் கைவளை கழலாநின்றது. நாயகனோவரவில்லை. எனக்கு பாதகங்களான இவைகளைப் போக்கி நாயகனெப்போது வந்துரக்ஷிப்பனோ தெரியவில்லை யென்கிறாள். (௧௩)

ஈர்வனவேலுமஞ்சேலுமுயிர்மேன்மிளிர்ந்து, இவையோ
பேர்வனவோவல்லதெய்வநல்வேள்கணைப், பேரொளியே
சோர்வனநீலச்சுடர்விடுமேனியம்மான்விசும்பூர்
தேர்வன, தெய்வமந்நீரகண்ணோவிச்செழுங்கயலே. ௧௪.

அர்த்தம்.—ஈர்வன - பிளக்கின்ற, வேலும் - வேலாயுதமாகவும், அம் - அழகிய, சேலும் - மத்ஸ்யமாகவும் இருக்கிற, இவை - இவை, உயிர்மேல் - ப்ராணன்மேலே, மிளிர்ந்து - பாய்ந்து, பேர்வனவோவல்ல - மீளுகின்றனவல்லவே. தெய்வம் - தேவனாய், நல் - விலக்ஷணனான, வேள் - மன்மதனுடைய, கணை - பாணமானதாமரஸபுஷ்பத்தினுடைய, பேர் - பெரிய, ஒளி - காந்தியை, சோர்வன - விடாநின்றன. நீலம் - இருண்ட, சுடர் - தேஜஸ்ஸை, விடும் - வீசுகிற, மேனி - திருமேனியையுடைய, அம்மான் - ஸ்வாமியான ஸர்வேஶ்வரனுடைய, விசும்பு - பரமபதமான, ஊர் - ஊரிலிருக்கிற நித்யஸூரிகளை, தேர்வன - தேடாநின்றன. தெய்வம் - அப்ராக்ருதமாய், அந்நீர - அப்படிவிலக்ஷணமான, இ - இந்த, செழும் - கொழுத்த, கயல் - மத்ஸ்யம், கண்ணோ கண்ணோ? (௧௪)

[அப்பிள்ளை உரை.]

அவ.—பதினாலாம்பாட்டு-இவள்கண்ணழகிலே ஈடுபட்ட தலைமகன் அவற்றின் அழகைச் சொல்லி ஶ்லாகிக்கிறான்.

உரை.—(ஈர்வனவேலும்-) தன்னை ஈடுபடுத்துகிறபடியாலே விடாதே ஈர்கிற வேல்போலேயிராநின்றதென்கிறான். (அஞ் சேலும்-) மௌக்த்யத்தால் அழகிய சேல்போலே யிராநின்றன. (உயிர்மேல் மிளிர்ந்து இவை ஓ பேர்வனவோ அல்ல-) இலக்குத்தப்பாதே மர்மத்திலேபடு மம்புபோலே இவையும் உயிர்நிலையிலே பட்டுக் குத்தியெடுத்தாற்போலே அங்கே நின்று பேதித்துக் கழியப்போகிறனவில்லை; 'ஓ' என்று விஷாதாதிஶயஸூசகம். (தெய்வம் நல் வேள் கணை பேர்ஒளியே சோர்வன-) இங்ஙனன்றிக்கே அப்ராக்ருதமான அழகையுடையனாயிருப்பானொரு காமனம்பினுடைய ஒளியைக் காலாநின்றன; தப்பவொண்ணாதபடியைச் சொல்லுகிறது. (நீலச் சுடர் விடு மேனி அம்மான் விசும்பு ஊர் தேர்வன-) கண்வட்டத்திலே அகப்பட்டார்க்கு மீளவொண்ணாதபடி ஶ்ரமஹரமான வடிவையுடையனான ஸர்வேஶ்வரன்தான் திருநாட்

[அப்பு அரும்பதம்]

பதினாலாம்பாட்டு — நாயகியுடைய கண் பாதகமாகிறபடிக்கு மந்மதபாணமும் வேலுங்கயலும் த்ருஷ்டாந்தம். மேல் 'வேல்கணை' என்று காமபாணஞ் சொல்லுகையாலே, அதுக்கு அநுகுணமாக ஒரு யோஜனை பண்ணுகிறார்; (காமபாணம்) இத்யாதி. கண்ணை வேலாகவுஞ் சேலாகவும் எந்த ஆகாரத்தைப்பற்றிச் சொல்லுகிறதென்ன, அருளிச்செய்கிறார்; (இரண்டாலுமாக) இத்யாதி. 'அம்' என்றும், 'ஈர்வன' என்றும் விசேஷிக்கிறதுக்குத்தாத்பர்யமேதென்ன, அருளிச்செய்கிறார்; (தன்பின்) இத்யாதி வாக்யத்வயத்தாலே. பின்-அழகு, இருந்தபடியே பாதகமாகை. புரித்தாற்போலே—புரிக்கை - திருப்புகை. பரிஹாரத்துக்காகப் பரிஹரிக்கும்போதும் பிடுங்கிப் பரிஹரிக்க வேண்டுகையாலே நோவாமல் வருத்தத்தோடே பிடுங்கவேணும்; அப்படியன்றியே பாதிக்கைக்காகப் பிடுங்கினாலு மென்றபடி. கண்களானவை வேலாகாரமுஞ் சேலாகாரமும் பஜித்த வளவன்றிக்கே, காமபாணாகாரமும் பஜிக்கையாலே (பலவடிவு கொள்ளுகிறபடி) என்கிறது. காமனுக்குக் கார்யகர்த்ருத்வம்-ஸ்ருஷ்டிகார்யார்த்தமாக யோஷித்புருஷஸம்யோகம் பண்ணுவிக்கை. அவன் வடிவில் அநுபவிப்பர்களென்னுமதுக்கு ப்ரமாண மருளிச்செய்கிறார்; (தஸ்யைவ) இத்யாதி. 'தேர்வன' - இவள்கண்ணானது விசும்பூரைத்தேடாநின்றதென்னுதல்; விசும்பூராலே தேடப்படாநின்றதென்னுதல்: அத்தை அருளிச்செய்கிறார், (அப்படி) இத்யாதி. இப்படிப்பட்டகண் அங்கே தேடுவானென்னென்ன, அருளிச்செய்கிறார்; (லீலாவிபூதியை) இத்யாதி. ஸர்வதாஸாம்யத்தாலே நிர்ணயித்தபடி.

[இச்செழுங்கயலானகண் ஈர்வனவென்று தொடங்கி இவையெல்லாஞ் செய்கையாலே தெய்வமன்னீர-அப்ராக்ருதமாயிராநின்றது என்றுக்ரியை.]

[வேறொரு அரும்பதம்.]

பதினாலாம்பாட்டு.— கீழே "அரியனயாம்" என்கிறபாட்டில் தலைமகனை பாகவதர் தாங்கள் கூடியிருக்கச்செய்தே பிரிவை அதிசங்கை பண்ணிக் கண்ணுங் கண்ணீருமாயிருந்தபடியிலே ஈடுபட்டிருக்கச்செய்தே, புருஷார்த்தகாஷ்டையைக் குலைக்கும்படியான பகவத்விஷயம் இவரை வஶீகரிக்க, அத்தை அப்போதேகிட்ட வேணுமென்று ஆசைப்பட்டு அது எட்டாமையாலே மாமையிழந்து விடியாதராத்ரி வ்யஸநத்தாலே தாம் இஸ்ஸம்ஸாரத்திலிருப்புக்கு நோவுபட்டபடியை அடுத்தகீழிரண்டுபாட்டிலுஞ் சொன்னதைக்கண்டு, அந்தபாகவதரான தலைமகன்பிரிவுபொறுக்கமாட்டாதவனாகையாலே பிரிவுவாராதபடி அவளுடைய கண்ணிலே ஈடுபட்டுக் கொண்டாடுகையாலே, ஆழ்வாருடைய ஜ்ஞாநவைபவத்திலே ஈடுபடுகிறார், ஸ்ரீவைஷ்ணவர்கள் என்று ஸங்கதியுட்கொண்டு இப்பாட்டுக்குத்துறை இன்னதென்கிறார்; (துறை) இத்யாதி. நலம்பாராட்டு- நாயகன் நாயகியின் நன்மைகளைக் கொண்டாடுகை. 'தெய்வ

நல்வேள்களை சர்வனவேயாகிலும் அஞ்சேயாகிலும், இவையோ-இரண்டான இவையோ? உயிர்மேல் மிளிர்ந்து பேர்வனவோவல்ல; அவ்வளவன்றிக்கே, பேரொளியே சோர்வன’ இத்யாத்யந்வயந் திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார்; (காம) இத்யாதி. மௌக்த்ய வைதக்த்யங்களைச் சொன்னதுக்குப் பலிதம்-(தன்) இத்யாதி. மேலைக்கு பாவஞ்சொல்லுகைக்கு உறுப்பாகப் பலிப்பிக்கிறார்; (சர்வன) இத்யாதி. விஶேஷித்ததுக்கு ப்ரயோஜநமென்னென்ன, (தோல்புரை) இத்யாதி. ‘புரித்தாற்போலே’- திருப்பினாற்போலே. ‘பரிஹாரத்துக்கு’- புண்ணை ஆற்றுகைக்கு. ‘பறித்து’-திரும்பவாங்கி. வேலுஞ்சேலுமாவனவன்றிக்கே, வேள்கணைகளுமாவதே யென்று ஈடுபடுகிறாராகபாவம்-(ஸௌபரி) இத்யாதி. ஶப்தார்த்தம்-(கார்ய) இத்யாதி. பாணங்கள் கரணங்களாகையாலே ததபேக்ஷயா இவனுக்கு உள்ளப்ராதாந்யத்தை ‘தெய்வம்’ என்றதென்று கருத்து. ‘ஊர்’ என்றது ஊரரைச் சொல்லுகிறதென்று யோஜநாந்தரம்- (அயர்வறும்) இத்யாதி. ‘தேர்வன’-தேரப்படுவன என்றுக்கி அருளிச்செய்கிறார்; (அப்படி) இத்யாதி. முந்தின யோஜனையில் தாத்பர்யம்- (லீலா) இத்யாதி. தெய்வத்தினுடைய அப்படிப்பட்ட நீர்மை - ஸ்வபாவத்தை யுடைய கண் என்று விவக்ஷித்துத் தாத்பர்யம் - (இங்கு) இத்யாதி. அர்த்தாந்தரம் - (அன்னீரென்றது) இத்யாதி; தெய்வ ஶத்ருஶஶங்களான உங்களுடையகண் என்று ஶப்தார்த்தம்.(கச)

தாத்பர்யம்.—இப்பாசுரத்தில், ஆழ்வாருடைய ஜ்ஞாநவைலக்ஷண்யத்தைக்கண்டுரைத்தபாகவதர் பாசுரத்தை, நாயகியின் கண்ணழகி லீடுபட்ட நாயகன் வார்த்தையாலே யருளிச்செய்கிறார்.

அழகிய இரண்டு மத்ஸ்யம் போலேயும் தாமரஸபுஷ்பம் போலேயும் அதிஸுந்தரமாய் என்கண் முன்னேகாண்கிற இவை வேல்போலே என்மேல் பாய்ந்து என்னுயிரைச் சிந்நபிந்நமாகப் பிளந்து, இன்னமும் பாதிக்கைக்காகத்திரும்பி மீளுகிறதில்லை. இவற்றின் வைலக்ஷண்யத்தைக்கண்டு நித்யஸூரிகளும் ஶ்யாமஸுந்தரவிக்ரஹனான ஸர்வேஶ்வரனுடைய அநுபவத்தையும் விட்டுப்பரமபதத்திலிருந்து இவற்றையநுபவிக்கைக்காக இங்கேதேடிக் கொண்டு வந்தார்கள். இப்படி முக்தமாகக்காண்கிற இவை உன்னுடைய கண்ணேயிருக்குமா என்ன என்று நாயகியைப்பார்த்துக் கேட்கிறான். (கச)

கயலோநுமகண்களென்றுகளிறுவினவிநிற்றீர்,
அயலோரறியிலுமீதென்னவார்த்தை,கடல்கவர்ந்த [டுப்
புயலோடுலாங்கொண்டல்வண்ணன் புனவேங்கடத்தெம்மொ
பயலோவிலீர், கொல்லைகாக்கின்றநாளும்பலபலவே. கரு

அர்த்தம்.—நும - உங்களுடைய, கண்கள் - நேத்ரங்கள், கயலோ - மத்ஸ்யமா, என்று - என்றுகேட்டு, (பின்பு), களிறு - ஆனையை, வினவி - ப்ரஶ்நம்பண்ணிக்கொண்டு, நிற்றீர் - நின்றீர். அயலோர் - அசலார், அறியிலும்-

(இவ்வார்த்தையை) அறிந்தார்களேலும், ஈது - இது, என்னவார்த்தை - என்னவார்த்தையா யிருக்கிறது. கடல் - ஸமுத்ரத்தை, கவர்ந்த - நிஶ்ஶேஷமாகக் குடித்ததாய், புயலோடு - ஜலத்தோடு, உலாம் - ஸஞ்சரிக்கிற, கொண்டல் - மேகம்போன்ற, வண்ணன் - வர்ணத்தையுடைய திருவேங்கடமுடையா னெழுந்தருளியிருக்கிற, புனம் - கழனிகளையுடைய, வேங்கடத்து - திருமலையில், கொல்லை - கொல்லையை, பலபலநாளும் - அநேககாலமாய், காக்கின்ற - காத்துக்கொண்டிருக்கிற, எம்மொடும் - எங்களோடு, பயலோ இலீர் - பழகியறியீர். ௧௫.

[அப்பிள்ளை உரை.]

அவ.—பதினைந்தாம்பாட்டு.—தலைமகளுந்தோழிமாரும்புனங்காத்திருக்க, அங்கேவந்து சிலவற்றை வினவத்தொடங்கின தலைமகன் தங்களுடைய தர்ஶநத்தாலே அடைவுகெட்டபடியைக் கண்டு, கேட்டார்க்கு அவனுடைய வ்யாமோஹத்தை நிவேதிக்கிறார்களென்று தோன்றும்படி, தங்களாசையையும் ஆவிஷ்கரிக்கிறார்கள்.

உரை.—(கயலோ நுமகண்கள் என்று களிறுவினவிநிற்றீர்-) முக்தமான உங்களுடைய கண் 'கயலோ' என்றுவினவத்தொடங்கி, அஸங்கதமாம்படி 'அம்போடே ஓரானைபோந்ததோ' என்றுவினவி, 'சொல்லத் தொடங்கின தின்னது, நான்சொல்லிமுடித்த தின்னது' என்றறியாதே ஸ்தப்தராய் நில்லாநின்றீர். 'நும கண்கள்' என்று - கண்டாற் கயலென்று சங்கிக்கவேண்டும்படியான அவர்களுடைய வைலக்ஷண்யஞ் சொல்லுகிறது. (அயலோர் அறியிலும் ஈது என்ன வார்த்தை-) அந்யரா யிருப்பா ரறியிலும், இதென்ன வார்த்தை சொல்லுகிறீர்; உகவாதாரறியிலும் என்கையாலே, அவனுக்கே தாங்கள் அற்றிருக்கிறபடியைச் சொன்னார்களாயிற்று. (ஈது என்ன வார்த்தை-) இவ்வார்த்தை அடிக்கழஞ்சு பெறுமே யென்று கொண்டாடுகிறாள். (கடல் கவர்ந்த புயலோடு உலாங் கொண்டல் வண்ணன் புன வேங்கடத்து எம்மொடும்பயலோஇலீர்-) கடலைநிஶ்ஶேஷமாகப்பருகி அந்நீரால் மந்தமாக ஸஞ்சரிக்கிற மேகம்போலே யிருக்கிற திருநிறத்தையுடையனான திருவேங்கடமுடையானுடைய அவ்வடிவழகை நீராகவிளையும் புனங்களையுடைய திருமலையைத் தேசமாகவுடைய எங்களோடு அப்யஸித்தறியீர். (கொல்லை காக்கின்ற நாளும் பலபல-) நாங்கள் கொல்லை நோக்கியிருக்கிறநாளுக்கு ஒருமுடிவில்லை இத்தாற் சாலக்காலமுண்டு, புனம்நோக்குகை யென்று ஒருபேராயிட்டு உம்முடைய வரவுபார்த்து, எங்களுக்குப் புனங்காத்து மீண்டுபோமளவாயிற்று; இத்தனை நாளும் வந்திலீரென்று இன்னாதாகிறார்களாகவுமாம். நெடுநாள் பழகினாலுங் கண்டறியாதானாப்போலே யிருக்கும்படியான இவனுடைய ஸ்ப்ருஹணீயதையைச் சொல்லுகிறார்களாகவுமாம்.

ஸ்வா.—ஆழ்வார்படியைக் கண்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் தடுமாறுகிற படியைச் சொல்லுகிறது.

---

(௧) ஸ்தோத்ரநீதி-௧-௯அ.

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—பதினைந்தாம்பாட்டு.—இயற்கையிலே கலந்து பிரிந்த தலைமகன் இரண்டாங்கூட்டத்துக்காகப் புனத்திலே வந்து கிட்டக்கடவதாகக் குறிவரவிட்டுப்போய்க் காலாதிக்ரமம் பிறந்து பின்பு அங்கே சென்று கிட்டினவன், இவர்களைக்கண்டு கலங்கி அஸங்கதபாஷணம் பண்ண, அவர்களும் அத்தைக்கொண்டு இவர் வருவதாகப் போனபடிக்கும் வந்தபடிக்கும் இப்போது ஆற்றாமைதோற்றப் பேசுகிற பேச்சுக்கும் ஒருசேர்த்திகண்டிலோமென்று சிரித்துக்கொண்டாடுகிறார்கள். இவன் தான் வீரனுகையாலே, என்றும் ஆனைவேட்டைக்குப் போம் பழக்கத்தாலே, ஆனைவேட்டையை வினவிக்கொண்டு செல்லக்கடவதாகநினைக்கிறான். பிடியையிழந்ததொரு களிறு தன் ஆற்றாமையாலே அமணுனைப்பட்டுத் திரியுமாபோலே இவர்களையிழந்து தன் ஆற்றாமையோடே திரிகிறபடியை அந்யாபதேசத்தாலே ஆவிஷ்கரிக்கிறான்.

வ்யா.—(கயலோ நும கண்கள்-) ஓரானை இங்ஙனே போந்ததோவென்றுசொல்ல மநோரதித்துக்கொண்டுவந்த இவன் இவர்களைக்கண்டு கலங்கி உண்ணப்புக்கு வாயை மறைப்பானைப்போலே கண்ட இக்கண்களைக் கயலோவென்கிறான். (க) "నోపజనంస్మరన్నిదంశరీరమ్" "நோபஜநம்ஸ்மரந் நிதம்ஶரீரம்" என்றுகொண்டு முக்தர் ஸம்ஸாரயாத்ரையை நினையாதாப்போலே, இவனும் இவர்கள் கண்கள் கண்டபின்பு வேறொன்றை நினைக்க அறியாதிருந்தபடி. (உ) "యద్విస్మయ స్తిమిత మస్తమితాన్యభావమ్-யத்விஸ்மயஸ்திமித மஸ்தமிதாந்யபாவம்" என்று-தன்னையும் அறியாதே விஷயத்தையும் அறியாதிருப்பார்களென்றுசொல்

அரு.—பதினைந்தாம்பாட்டு.—(குறிவரவிட்டுப்போய்) என்றது - வாயாலே குறியிட்டுப் போயென்றப்படி; அதாவது - ஸங்கேதம் பண்ணிப்போ யென்றபடி. ஆனையை வினவிக்கொண்டுவந்ததுக்கு இரண்டுதாத்பர்யம்: அதாவது-(இவன்தான் வீரனுகையாலே) என்று தொடங்கி அருளிச்செய்கிறார்; அதவா (பிடியையிழந்ததொருகளிறு) என்று தொடங்கி அருளிச்செய்கிறார். (அமணுனைப்பட்டு) என்றது - மந்மத விகாரத்தோடே; அதாவது - மேட்டாம் நாலவென்றபடி. (உ) "యద్విస్మయ స్తిమిత మస్తమితాన్యభావమ్-யத்விஸ்மயஸ்திமித மஸ்தமிதாந்யபாவம்" என்றானிறே, பவபூதி. 'ஆனை வந்ததோ' என்று கேட்க நினைத்து அத்தை மறந்து, 'கயலோ நுமகண்கள்' என்று சொல்லுகிறுனுகையாலே, தன்னை மறந்தபடி. (விஷயத்தையும்) என்றது - விஷயாந்தரத்தையு

(க) சாந்தோக்யோபநிஷத்-அ-௧௨-௩. (உ) மாலதீமாதவம்-௧௨௨.

வ்யா||னுமாபோலே. (௧)[ "యత్రనాన్యత్పశ్యతినాన్యచ్ఛృణోతినాన్యద్విజానాతిస భూమా - யத்ரநாந்யத்பஶ்யதிநாந்யச்ச்ருணோதி நாந்யத்விஜாநாதிஸபூமா"-]யாதொன்றைக் கண்டால் வேறொன்றைக்காணாதொழியும், யாதொன்றைக்கேட்டால் வேறொன்றைக் கேளாதொழியும், யாதொன்றை அறிந்தால்வேறொன்றை அறியாதொழியும், அது நிரபேக்ஷவிஷயமென்கையாலே. 'கயலோ' என்று உபமாநத்தாலே சொல்லாதே ப்ராதாந்யத்தாலேசொல்லுவானென்னென்னில்;—ஸர்வதாஸாத்ருஶ்யத்தாலே. த்ரவ்யாந்தரத்துக்கும் ஸாம்யமுண்டோ வென்னில்;—கேவலங்கண்ணைச் சொல்லிற்றாகில், இல்லையென்னலாம்; அதுஸ்வதரையாலாகலாம். பஹுவசநத்தாற் சொல்லுவானென்னென்னில்;—(௨) "மையமர் வாணெடுங்கண் மங்கைமார்" என்று-அவனுக்குத்(௩)*தன்னேராயிரம் பிள்ளைகளோபாதி இவளுக்கும் அநேகர் உண்டாயிருக்கையாலே; அவனோடு கிட்டினார்க்கு(௪) "నిరఞ్జనః పరమంసామ్యముపైతి-நிரஞ்ஜந: பரமம்ஸாம்யமுபைதி" என்னுமாபோலேயிறே இவர்களோடே கூடினாரும் இவளைப்போலேயிறே இருப்பது; காணப்புகுகிற தன்னை மறந்தவோபாதியுங் காண்கிறவர்கள் தன்னையும் மறந்தபடி. அவயவப்ரதிபத்தியாதல் அவயவாந்தர ப்ரதிபத்தியாதல் இன்றிக்கே, வெறுங்கண்ணுக்கு மேற்பட அறியாதிருந்தபடி. (களிறு வினவி நிற்றீர்) அஸங்கதபாஷணம் பண்ணுகிற இவர் ஆரென்று முகத்தைமாற வைத்தார்கள்; நோக்குப் பெறுதபோது தன்ஸத்தை இல்லையாயிருக்குமிறே; இவர்கள் பார்க்கும்படியாக ஓரானை இங்ஙனே போந்ததோ வென்கிறான். இங்ஙனே சொன்னவாறே இவர்கள்

---

அரு||மென்றபடி; இத்தால், பகவத்விஷயம், தன்னையொழிய வேறொன்றறியாதபடி பண்ணுமாபோலே, பாகவதவிஷயமும் வேறொன்றறியாதபடி பண்ணுமென்றபடி. 'ப்ராதாந்யமாக'-ஸாக்ஷாத் அதுதானாகவென்றபடி. (ஸ்வதரையாலாகலாம்) என்றது - இவனுடைய ப்ராவண்யத்தாலே அப்படி தோற்றுமென்றபடி. த்ரவ்யத்துக்கும் த்ரவ்யாந்தரத்துக்கும் ஸர்வதாஸாம்ய முண்டோவென்னிலென்றபடி. 'நும' என்ற பஹுவசநத்துக்குத் தாத்பர்யம் - (காணப்புகுகிற) என்று: அதாவது - 'ஆனை இங்ஙனே போந்ததோ' என்னவந்து, "கயலோநும கண்கள்" என்று கண்களைக்கண்டு முன்பு சொல்லவந்த வார்த்தையை மறந்தாற்போலே நாயகியைச்சொல்லவந்து, கலங்கி பஹுவசநமாகச்சொல்லுகிறானென்றபடி. 'கண்கள்' என்று முந்துற முன்னம் சொன்னதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்; (அவயவப்ரதிபத்தி) என்று. 'களிறு வினவி' என்றதுக்குத் தாத்பர்யம் - ( இவர்கள் பார்க்கும்படியாக ) என்று :

---

(௧) சாந்தோக்யோபநிஷத்-௭-௨௩-௧. (௩) பெரியாழ்வார் திருமொழி-௨-௧-௪.
(௨) திருவாய்மொழி-௯-௮-௨. (௪) முண்டகோபநிஷத்-௩-௧-௩.

வ்யா|| தில்லையா யிருந்தபடி. திருமங்கையாழ்வார்க்குச் சரணம் புக வேண்டுமாபோலே இவர்க்கும் பலகாலும் காலமயக்கு வேண்டியிருக்கிறபடி. கீழ், காண்கிற பதார்த்தங்களை அபலபித்து காலத்தை மயக்கிற்று; இங்கு, பதார்த்தங்களை அபலபிப்பதுஞ்செய்து சாஸ்த்ர ஸித்தமானவற்றை முன்னிடுவதுஞ் செய்தது. மேகத்துக்கும் கடலுக்கும் அந்யோந்யம் விரோதமாய்ப் பிணங்குகிறது காண்.

வ்யா.—(கடல்கொண்டெழுந்தது வானமித்யாதி) வானம் - மேகம். மேகமானது, கடலைத் தரையாகப் பருகி ஜலசரஸத்வங்கள் துடிக்கும்படிக்கிடாய்ப்போகிறபடியைக்கண்டு, நம் ப்ரஜைகள் நோவுபட, "நம்முடைமையை நோக்கக்கொடுபோவதே" என்று தொடர்ந்து தன்னுடைமையை வாங்கிக்கொள்ளுகிறதுகாண். அன்றி-சீறி. (ஒழிந்தவதனாலிது) மேல்விழுகிறதுளிகளென்னென்றுகாட்ட, அவை பிணங்குகிறபோது சிந்தினவைகாணிது. மேகந்தான் பரார்த்தமாயிருக்கையாலே தொங்கினத்தைக்கொண்டு உபகரிக்கிறபடி. பெரியவுடையாரும் ராவணனும் யுத்தம்பண்ணுகிறபோது சகலங்கள் விழுந்தாற்போலே. (கண்ணன் மண்ணும் விண்ணு மித்யாதி) அங்ஙனேயாகில் இவ்வெள்ளத்துக்கடியென்னென்ன; ஸர்வேஶ்வரனுடைய

அரு||கையும்) என்றது-அவனைப் பெறுவிடில் முடியும்படியான தசையாகையென்றபடி. (இதல்ல தில்லையா யிருந்தபடி) என்றது-இந்த காலமயக்கொழியத்தரித்திருக்கைக்குவேறொன்றில்லையென்றபடி. அருளிச்செய்கிறார் (இவர்க்கும்) இத்யாதி, கீழ்காலமயக்கைப் பற்ற விசேஷமுண்டென்கிறார், (கீழ்காண்கிற பதார்த்தங்களை) என்று. (இங்கு பதார்த்தங்களை அபலபிப்பதுஞ் செய்து) என்றது - வர்ஷாகாலத்தை அந்யதா கரித்து மேகமுங்கடலும் யுத்தம் பண்ணுகிறதென்று சொல்லுகை. (சாஸ்த்ரஸித்தமானவற்றை முன்னிடுவதுஞ்செய்தது) என்றது-மேகம் ஸமுத்ரத்திலே ஜலத்தைப் பானம்பண்ணுகை சாஸ்த்ர ஸித்தமாயிருக்குமென்றபடி. தோழிவார்த்தையாக ஸமுதாயதாத்பர்ய மருளிச்செய்கிறார் (மேகத்துக்குங் கடலுக்கும்) என்று. "ஒழிந்தவதனாலிது" என்றதுக்குத் தாத்பர்யம். கடல் அன்றி அவ்வானத்தைப் பின் தொடர்ந்து, கொண்டொழிந்தவதனால் - ஜலத்தைத் திரும்பக் கொண்டுவருகிறதினாலே, இது - இந்தமழையென்னுதல். அருளிச்செய்கிறார். (மேல்விழுகிற) இத்யாதி. கடலானது சீறி அவ்வானத்தைப் பின்தொடர்ந்து சென்று, கொண்ட ஜலத்தைத் தான் ஸ்வீகரித்து, ஒழிந்தவதனால்-மேகத்திலே சேஷித்த அந்த ஜலத்தாலே, இது இந்தமழையென்னுதல். முந்தின பொருளிலே "கொண்டொழிந்தவதனால்" என்று முழுச்சொல்லு. அன்றி - சீறி. முந்தின பொருளிலே உத்ப்ரேக்ஷிக்கிறார் (பெரியவுடையாரும்) என்று. "அங்ஙனேயாகில்" என்றது – அவையுத்தம்பண்ணிற்றாகில், என்றபடி. கடல்கொ-

வ்யா||பூமியும் மேலுண்டான வாகாசமும் கடல்கொண்டுபோன அக்காலமோ; அறிகிறிலேன். ப்ரளயங்கொண்டகாலம். தன்னை விஶ்லேஷிக்கைக்காகத் தானுமதுவோ? இதுவோ? என்று ஸம்சயிக்கிறாள்; இத்தசைவந்தால் அவன் வருமென்னுமத்தாலே. (புயற்காலங்கொலோ) அன்றியே, அவ்வர்ஷாதானோ? அறிகிறிலேன். இவையெல்லாம் வேணுமோ? இவ்வெள்ளத்துக்கடி யழிந்தோமென்கிறாள். (கடல்கொண்டகண்) கடலைத் தோற்பித்தகண். அத்தைக்கொள்ளுகையாவது-அதின்படியெல்லா முண்டாயிருக்கை. தோற்பித்ததென்றுமாம். (நீராருவிசெய்யாநிற்கும்) இப்ப்ரளயத்துக்கடி கடலுடைந்தாற்போலே இக்கண்ணில் வெள்ளங்காண். (காரிகையே) இவையெல்லாம் பொறுக்கமாட்டாத அபலை கிடீர். கஅ.

---

அரு||ண்டொழிந்த வக்காலம் - ஸர்வேஶ்வரனுடைய ப்ரும்யந்தரிக்ஷங்களை மஹாப்ரளயார்ணவங் கொண்ட காலம், என்று பொருள். "கடல்கொண்டகண்" என்றதுக்கு இரண்டுபொருள். அதாவது-கொள்கை-ஜயிக்கையாய்,தோற்பித்தகண், என்னுதல்; அதைஅருளிச்செய்கிறார், (கடலைத் தோற்பித்தகண்) என்று. கொள்கை உடைத்தாகையாய், அதின்பக்ஷமெல்லாமுண்டாயிருக்கை என்னுதல், அதை அருளிச்செய்கிறார் (அத்தைக்கொள்ளுகையாவது) இத்யாதி. (தோற்பித்தென்றுமாம்) என்றது-முந்தினபொருளுக்கு விவரணம்.

[கடல்கொண்டகண்ணீ ராருவி செய்யாநிற்குங் காரிகையே வானம் கடல்கொண்டெழுந்தது கடல் அன்றி அவ்வானத்தைச் சென்றுகொண்டொழிந்த வதனாலும் இது கண்ணன் மண்ணும் விண்ணும் கடல் கொண்டெழுந்த வக்காலங்கொலோ புயற்காலங்கொலோ•] என்றந்வயம். காரிகையே என்றது. ஸம்போதநம். கஅ.

[அப்பு. அரும்பதம்.]

பதினெட்டாம் பாட்டு.—(கடல்) இவளாகை- க்ஷணம் பிரியாத ம்ருதுஸ்வபாவையாகை. அவனாகை-அதிவிலக்ஷணனாகை. தசை-வர்ஷாகாலமாதல்,விச்லேஷதசையாதல். கீழ்காலமயக்குக்குமிதுக்கும்வாசியென் னென்னில், அருளிச்செய்கிறார் (கீழ்காண்கிற) இத்யாதி. மேகங்கடலிலே பருகுகை சாஸ்த்ரஸித்தம். (கொண்ட)மேகமானபோது க்ரஹிக்கை; கடலானபோது வாங்குகை, "ஒழிந்த" என்றது அந்யோந்யம். யுத்தம் பண்ணச்செய்தே தப்பிச்சிந்தினது என்னுதல்; கடல்வாங்கி மேகத்திலே சேஷித்ததென்னுதல். இத்தையருளிச் செய்கிறார் (மேகந்தான்) இத்யாதி. சகலம்-தேரில் மேற்குப்பிகள், கொடிமுடி இவற்றின் சிதிலங்கள். ஸம்சயம், தன்னை விஶ்லேஷிக்கைக்காதல்; அவன் வருமென்னு மத்தாலே யாதல். கண் கடலைக்கொள்ளுகை - க்ரஸிக்கையாய், தோற்பிக்கையென்னுதல், அப்போது விசாலாக்ஷீ என்னும்படி, ஶ்ரீமஹாரதையாலும், கறுப்பாலும் போக்யதைவிஞ்சியிருக்கை. அன்றியே, கொள்கை-உடை

த்தாகையாய், அதினுடையஸ்வபாவத்தையுடைய கண் என்னுதல். அப்போது, ஜலஸம்ருத்தியை யுடைத்தாகை என்றுமாம். முந்தினஅர்த்தத்தின் விவரணம் (தோற்பித்து) என்று.

[கடல்கொண்டகண் நீர் அருவிசெய்யா நிற்கும் காரிகையே. கடல்கொண்டித்யாதி புயற்காலங் கொலோ] என்றந்வயம். கஅ.

[வேறொரு அரும்பதம்.]

பதினெட்டாம்பாட்டு, (கடல்) இத்யாதி. கீழ் தேர்க்காலைக் கண்டு கடற்கரையிலே கிடக்குந் தலைமகளைத் தோழியானவள் வந்து வினவிக்கொண்டிருக்கச்செய்தே "இருள்பிரிந்தவன் என் சொல்லிப் போந்தான்" என்ன, "வர்ஷாகாலத்திலே வருகிறோமென்றான்" என்னச்செய்தே, அக்கடல்மேலே மேகமெழுந்து வர்ஷிக்க, இவளத்தைக்கண்டு, நாயகன் வரக்காணாமே அழப்புக, அது பொறுக்கமாட்டாமல் காலத்தைமயக்குகிறாள் என்று ஸங்கதியுட்கொண்டருளிச்செய்கிறார் (துறை) இத்யாதி. இந்தத்துறை, "ஞாலம்பனிப்ப" என்கிறபாட்டிலே நடந்ததன்றோ வென்ன, (கீழ்) இத்யாதி. இவளிவளாகையும் - பிரிவு பொறுக்கமாட்டாத ம்ருது ஸ்வபாவை யாகையாலும், அவனவனாகையும் - அதிவிலக்ஷண விஷயமாகையாலும், தசை இதுவாகையும் - அவன் குறித்துப் போன வர்ஷாகால மாகையாலும். இப்படி அநேகாவ்ருத்தி காலமயக்குச் சொல்லுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (திருமங்கை யாழ்வார்க்கு) இத்யாதி, க. "வந்துன் திருவடி யடைந்தேன்" என்று தொடங்கின சரணாகதியைப் பத்தும்பத்தாகச் சொல்லிவிடுகை. இவர்க்கும்ப்ராயேண நடக்குமென்று கருத்து. ஆனாலு மிக்காலமயக்கிலே விசேஷமுண்டென்கிறார் (கீழ்) இத்யாதி. காண்கிறபதார்த்தம் - நீல வல்லேறுகள். இங்கு பதார்த்தங்களையென்றது - மேகஸமுத்ரங்களாகிற காண்கிற பதார்த்தங்களை யென்றபடி. சாஸ்த்ர ஸித்தமானவை - ப்ரளயகாலம். இப்பாட்டுக்கவதாரிகை யிடுகிறார் (மேகத்துக்கும்) இத்யாதி. "அன்றி" என்றது - சீறியென்றாகையாலே, அதுக்கு ஹேதுவை அருளிச்செய்யா நின்றுகொண்டு தாத்பர்ய மருளிச்செய்கிறார் (மேகமானது) இத்யாதி. தாத்பர்யாந்தரம் (மேகந்தான்) இத்யாதி. முந்தின தாத்பர்யத்துக்கு த்ருஷ்டாந்தம் (பெரிய) இத்யாதி. (தன்னை விஸ்வஸிக்கைக்கு) என்றது-பொய்சொல்லுகிறாளென்று தன்வார்த்தையைத் தப்பாமல் போகாமைக்காக வென்றபடி. ஹேத்வந்தரம் (இத்தசை) இத்யாதி. மேலுக்கவதாரிகை (இவை) இத்யாதி. கொள்ளுகை-ஸாத்ருச்யத்தைக்கொள்ளுகையென்றர்த்தாந்தரம், (அத்தை) இத்யாதி-முந்தின வர்த்தமே திருவுள்ளமென்னுமது தோற்ற வருளிச்செய்கிறார் (தோற்பித்தன்றுமாம்) என்று. சஅ.

தாத்பர்யம்,—இப்பா சுரத்தில்,பாகவதர்திருமலைக்குப்போம்போதுவரவு குறித்திட்டுப்போன காலத்தில் வாராமையைக்கண்டு ஆழ்வார்விஷண்ணராயிருக்க, அவரை ஆஶ்வாஸிப்பிக்கும் அன்பர்பாசுரத்தை,நாயகன் வர்ஷாகால

(க) திருமொழி - க - சு - க.

த்தில் வருவதாகச் சொல்லிப்போய் அக்காலத்தில் வாராமையாலே கண்ணும் கண்ணீருமாய் துக்கிக்கிற நாயகியைப்பார்த்து, இவளை ஆச்வஸிப் பிக்கைக்காக வர்ஷாகாலத்தை அபலாபம் செய்கிற தோழி வார்த்தையாலே யருளிச் செய்கிறார்.

நாயகன் வரவு குறித்துப் போனகாலம்வந்துவிட்டதே; இன்னும் நாயகன்வரவில்லையேஎன்று வர்ஷாகால சிந்நங்களைப்பார்த்து நாயகிவ்யஸநப்பட, ஓ ஸகீ? உனக்கு இப்படி கண்ணீர் வெள்ளமிட்டுக்கொண்டு துக்கிக்கவும் சக்தியில்லையே; நீதுக்கிக்கவேண்டாம். இது வர்ஷாகாலமானால் நாயகன்வந்தேயிருப்பன். ஆகையால் இதுவர்ஷாகாலமன்று என்று தோழிசொல்ல, ஆனால் ஆகாசத்தில் இருண்டு ஸஞ்சரிக்கிறவை என்னஎன்று நாயகிகேட்க, அம்மா இது நீ ப்ரமித்தபடியன்று காண். மேகம் ஸமுத்ரத்திலிறங்கி அந்நீரையெல்லாம் பாநம்செய்து மேலே கிளம்பிப்போக, தன் ஜலத்தை அபஹரித்துக்கொண்டுபோன அம்மேகத்தின்மேல் ஸமுத்ரம் கோபித்துக்கொண்டு அவ்விரண்டும் ஆகாசத்தில் சண்டைசெய்கிறது, அதுகாண் இது என்ன, ஆனால் நம்மேல்விழுகிற திவலைகளேதென்ன, மேகத்தில் சேஷித்திருந்த திவலைகள் நம்மேல் சிந்துகிறது என்று தோழிசொல்லி, ப்ரத்யக்ஷமான மேகத்தை அபலாபம்செய்தால் நம் வார்த்தையை இனிப்பொய்யாக வெண்ணுவள் என்று, ஆனால் இது ஸகல ஜகத்தையும் அழிக்கும் ப்ரளயகாலமோ? அல்லது - வர்ஷாகாலந்தானோ? என்று ஸந்தேஹித்துரைத்தாள். க௮.

காரிகையார்நிறைகாப்பவர்யாரென்று,கார்கொண்டின்னே
மாரிகையேறியறையிடுங்காலத்தும்,வாழியரோ
சாரிகைப்புள்ளர்ந்தண்ணந்துழாயிறைகூயருளார்
சேரிகையேறும்,பழியாய்விளைந்ததென்சின்மொழிக்கே. க௯.

அர்த்தம்.—காரிகையார் - ஸ்த்ரீகளுடைய, நிறை - அடக்கத்தை, காப்பவர் - ரக்ஷிக்கத்தக்கவர், யார் - எவர்? என்று - என்று, கார்கொண்டு - கறுத்துக்கொண்டு, இன்னே - இப்படியே, மாரி - மழையானது. கையேறி - கும்பலும்பலாகவேறி, அறையிடும்காலத்தும், (ஜயித்தோம்என்று) பேரொலியிடும் காலத்திலுங்கூட, சாரிகை - வட்டமாய் ஸஞ்சரிக்கிற, புள்ளர் - கருத்மானை வாஹநமாகவுடைய ஸ்ரியப்பதி, இறை - கொஞ்சமும், அம் - அழகிய, தண் - குளிர்ந்த, துழாய் - திருத்துழாய்மாலையை, கூய் அருளார் - கூப்பிட்டுப் ப்ரஸாதித்தருளமாட்டார். என் - என்னுடைய, சின்மொழிக்கு - சிறிய - (அக்ஷரமான) சொல்லையுடைய இவளுக்கு, சேரி - சேரியிலுள்ளார், கை ஏறும், கைகளை மேலே தூக்கிச் சொல்லும்படியான, பழியாய்-அபவாதமாய், விளைந்தது-பர்யவஸித்து விட்டது. வாழியரோ- இவ்வருத்தம் நீங்கிடுக. க௯.

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—பத்தொன்பதாம்பாட்டு.—இவளிருந்து பொய்யென்னுங்காட்டில் பொய்யாகாதிறே. (க) "ரஜோத்தாநாமிவவாரணாநாம்-ரணே

(க) ஸ்ரீராமாயண கிஷ்கிந்தா-௨௮-௬௨.

த்யதாநாமிவவாரணாநாம்." என்று ஆனை யணிவகுத்தாற்போலே மேகம் நாலுமூலையும் கையும் அணியும்வகுத்து வர்ஷிக்கிறபடியைக் கண்டுஇவள் மோஹிக்க, (க) "எம்மின் முன்னவனுக்குமாய்வர்" என்னும்படியே இவளுடைய மோஹத்தைக்கண்டு தோழியும் மோஹிக்க, இவ்வளவில் உணர்ந்திருந்த தாயார் இவ் வ்யவஸாயம் நீங்கிடுக வென்று ரக்ஷாவிதாநம்பண்ணுகிறாள்.

வ்யா.—(காரிகையாரித்யாதி) நாங்கள் ஸஞ்சரியாநிற்க, ஸ்த்ரீகளுடைய அடக்கத்தை நோக்குவன் என்பாரார்? பெண்பிறந்தாராயிருந்து வைத்து எங்கள் ஸந்நிதியில் தந்தாமுடைய ஸ்த்ரீத்வத்தை நோக்கிக்கொடு இருப்பாரார்? என்றும். (கார்கொண்டு) கறுத்துக் கொடு. (இன்னே மாரிகையேறி யறையிடுங்காலத்தும்) இன்னே - இப்படியே. (மாரிகையேறி)அதிவ்ருஷ்ட்டியான வர்ஷமானது அணிக்கணியும் தூசியுமாகத் தோற்றினபடி. (அறையிடுங்காலத்தும்) அறைகூவுகிறபடி. மஹாராஜர் 'பெருமாளை அண்டைகொண்டு வாலியை அறைகூவினாற்போலே; இது அங்ஙனுமன்றியே, தனிநின்று வென்றபடி. அங்கோ ரேகவீரனை வாலியை; இங்கோ ரபலையை. அங்குச்சொல்லிற் றறிவா னொருசேதநன்; இங்கு அசேதநம் (வாழியரோ) இவ்வ்யவஸாயம் நீங்கி ஜீவித்திடுக. (சாரிகைப்புள்ளர்) அபரிகரனாய் வாராதிருந்தா னல்லன்கிடீர்; "பதினாலாண்டு கூடவந்தவழியை இன்றும்போகலாமோ" என்றிருக்கவே

அரு||பத்தொன்பதாம்பாட்டு.—(காரிகையார்) "విద్యుత్పతాకాభిరలఙ్కృతానాముదీర్ణగమ్భీరమహారవాణామ్।విభాన్తి రూపాణి బలాహకానాం రణోద్యతానామివ వారణానామ్ - வித்யுத்பதாகா பிரலங்க்ருதாநாம் உதீர்ணகம்பீர மஹாரவாணாம்! விபாந்தி ரூபாணி வலாஹகாநாம் ரணோத்யதாநா மிவவாரணாநாம்" (ரக்ஷாவிதா (ன) நம்பண்ணுகிறாள்)என்றது-"வாழி"என்று மங்களாசாஸநம் பண்ணுகிறாள்,என்றபடி. "காரிகையார் நிறைகாப்பவர் யார்"என்றதுக்கு-இரண்டுபொருள். அதாவது - காரிகையாருடைய ஸ்த்ரீத்வத்தை நோக்குவேன், என்பாரார் என்னுதல், அத்தை அருளிச்செய்கிறார் (நாங்கள்) இத்யாதி. காரிகைகளாயிருந்து வைத்துத் தம்முடைய ஸ்த்ரீத்வத்தை நோக்கிக்கொண்டு இருப்பாரார் என்னுதல்; அத்தை அருளிச்செய்கிறார் (பெண்பிறந்தாராயிருந்து வைத்து) இத்யாதி. காரிகையார், ஸ்த்ரீகள்; நிறை-ஸ்த்ரீத்வம். கார்கொண்டு - கறுத்துக்கொண்டு என்றபடி - (மாரிகையேறி) மாரி - அதிவ்ருஷ்டியான வர்ஷமானது, கை- பல கையாக; அதாவது - அணிக்கணியுந் தூசியுமாக-ஏறி - தோற்றி; அறையிடுங்காலத்து - அறைகூவுகிறகாலத்திலே. (சாரிகைப்புள்ளர்) சாரிகை-மண்டலாகாரமாகவராநிற்கிற, புள்ளர்-பெரிய திருவடியையுடைய ஸர்வேஶ்வரன். (சொல்லிற் றறிவானொருசேதநன்) என்றது - மஹாராஜரை. "சாரிகை" என்றவிசேஷணத்துக்குத் தாத்பர்யம் (பதினாலாண்டு) இத்யாதி. இன்றும் போகலாமோவென்றிருந்தார் பெருமாளை

(க) திருவாய் மொழி ௬ - ௯ - ௫.

வ்யா|| ண்டாதபடி ஸஹசாரியான பரிகரத்தையுடையவன், ஆஶ்ரிதரை யிட்டுத் தன்னை நிரூபிக்கும்படி அவர்களுக்கு வைத்துக்கொடுத்த தாம். பெரியதிருவடிமேலே போரவிருத்தல், திருவாழியைக்கையி லேயுடையனாதல், பெரியபிராட்டியாரை "எனக்கு" என்னப்பெறுதல், திருத்துழாயைத்தனக்குத் தாராக உடையனாதல், இவையிறே ஸர் வாதிகலக்ஷணம். (அந்தண்ணந்துழாய்) போன உயிரை மீட்கவற்றா யிருக்கை. "ஸந்தாநகரணி - விசல்யகரணி" என்னுமாபோலே. (இறைகூயருளார்) ப்ரணயித்வந் தவிர்ந்தால் ஸ்வாமித்வமுந் தவிர வேணுமோ? தாம்வந்தணைத்துத் தந்தோளில்மாலை என்மார்பிலே கிடக்கப்பெறாவிட்டால், ஸத்தாதாரகமாக அத்தனையுந் தந்தாலா காதோ? தாமேவரவுமாம், அழைக்கவுமாம். பேறு அத்தலையாகவே என்றிருந்தபடி. (சேரிகையேறும்பழியாய் விளைந்தது) ஸந்நிவேச த்திலுள்ளாரெல்லாரும். "ஒருவிஷயத்துக்காக இப்படி துடிப்பதே; (என்தலையாலேபேறு)என் றிருப்பதே! என்று கையெடுத்துக் கூப்பி டும்படியாயிற்று.(சின்மொழிக்கே)இதுக்கெல்லாம் பருவமில்லைகிடீர். "சொல்" என்னச் சொல்லமாட்டாத பருவங்கிடீர். இவ்வளவன்று கிடீர் பழியின்கனம்.

இத்தால் ஆழ்வார்க்கு பக்த வ்யதிரேகத்தில் அங்கேஸம்பந்தமு ள்ளதாலொன்றாலேயாகிலும் தரிக்கவேண்டும்படி ஆற்றாமை மிக்க படிசொல்லிற்று. கக.

---

அரு||ன்றபடி. "புள்ளர்" என்ற ப்ரஸங்கத்திலே அருளிச்செய்கிறார் (பெரிய திருவடிமேலே) இத்யாதி. "அம்" என்ற விசேஷணத்துக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் - (போனஉயிரை) இத்யாதி. "புள்ளர்" என்ற விசேஷ ணத்தினாலே விசல்ய கரணியும், "துழாய்" என்கையாலே ஸந்தாந கரணி யும். இறை - அல்பமும், கூய் - அழைத்து, அருளார் - க்ருபைசெய்யார்; "அருளார்" என்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ப்ரணயித்வந் தவி ர்ந்தாலும்)என்று. "துழாய்அருளார்" என்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கி றார் (தாம்வந்தணைத்து) என்று. (அத்தனையும்) என்றது - அந்தத்திருத்துழா ய்மாத்ரமென்றபடி. "கூய்" என்றதுக்குத் தாத்பர்யம் (தாமேவரவுமாம்) என்று. சேரி - சேரியிலுள்ளார். கை - ஏறும் - கையெடுத்து; பழியாய் விளைந்தது - சொல்லுகிறபழியாயிற்றென்றபடி. (தாமேவரவுமாம்) என் றது - "புள்ளர்" என்றத்தைக்கொண்டு- (என்தலையாலேபேறென்றிருப்பது) என்றது - அவன்தானே ரக்ஷிக்கிறான் என்றிராதே நாமேநம்பேற்றைப்பெறு வோம் என்றிருப்பதே என்றபடி.

[காரிகையார் நிறைகாப்பவர் யாரென்று - கார்கொண்டு இன்னே மாரி கையேறி யறையிடுங்காலத்தும்-சாரிகைப்புள்ளர். அந்தண்ணந்துழாய் இறை

கூயருளார், என்சின்மொழிக்கு - சேரிகையேறும் பழியாய்விளைந்தது-வாழி] என்றந்வயம் - ''வாழியரோ'' என்று தாயார் பெண்ணி னிவ்வவஸாதம் நீங்கி ஜீவித்திடுக என்று ரக்ஷையிடுகிறாள். கக.

[அப்புஅரும்பதம்.]

பத்தொன்பதாம்பாட்டு.—(காரிகையார் நிறைகாப்பவர்யார்). காரிகையாருடைய நிறையை, ஆர்காப்பார்- எந்தபுருஷன் காக்கவல்லவனென்னுதல்' பித்ராதிகளாலுங் காக்கப்போகாதென்கை. அன்றியே, காரிகையாரிலே ஸ்த்ரீத்வத்தை யார்காப்பார் - எந்தஸ்த்ரீதான் காக்கவல்லள் என்னுதல். ஒருஸ்த்ரீயுந் தந்தாம் ஸ்த்ரீத்வத்தை யடக்கமாட்டாள் என்கை.(கறுத்துக்கொடு). கறுப்பு - சீற்றமாதல். நிறமாதல். சாரிகை - வட்டமாகசஞ்சரிக்கை. அப்படிப்பட்டவனுங் கூடவிருக்கை யென்றபடி. இவனையிட்டு நிரூபிக்கவேண்டுவானென்னென்ன, அருளிச்செய்கிறார் (ஆஶ்ரிதரை)இத்யாதி. ஸந்தாநகரணி-திருவடி, விசல்யகரணி-திருத்துழாய். இறை-சேஷியாதல்; அல்பமாதல். (ஸத்தாதாரகமான அத்தனையும்) ஸத்தைக்கு தாரகமான திருத்துழாயத்தனையும். (ஸந்நிவேசத்திலுள்ளார்) முன்னே தோற்றுகிறவர்கள். (சேரி) சேரியிலுள்ளாரென்றபடி - கையேறி - கையெடுத்து.

[என் சின்மொழிக்கு காரிகையார் இத்யாதி அறையிடுங்காலத்து சாரிகைப்புள்ளார் இத்யாதி இறைகூயருளார் - சேரிகையேனும் பழியாய் விளைந்தது - வாழியரோ] என்றந்வயம். கக.

[வேறொரு அரும்பதம்.]

பத்தொன்பதாம்பாட்டு.—(காரிகையார் இத்யாதி).''இவள்'' என்றது-தோழியை, காரிகையாருடைய நிறையைக் காப்பவர் யார் என்று - ப்ரதமம். (நாங்கள்)இத்யாதி.யோஜநாந்தரம்(பெண் இத்யாதி). கறுத்துக்கொண்டு-சீறிக்கொண்டு, என்றதாய், ''எறி''என்றது-ஊசியென்றாய், மழைக்கூந்தலாய்க்கண்ணுங் கண்ணீருமாய் மின்கொடிகளா யிருக்கும் தோழிமாரும், ''பழியாய் விளைந்தது'' என்று. கோஷிக்கிற தாய்மாருமாகக் கிடக்கிற நாயகியை எதிரிட்டுப் போர்செய்யவரும்போது அணிக்கணியுமாய் ஸேநாமுகத்திலே வருமாபோலே மேலே ஏறிவந்ததென்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார், (அதி)இத்யாதி. காலத்துஎன்னாதே, ''காலத்தும்'' என்று சகாரத்தாலே, மிகவும் பாதகமான காலம் என்று தோற்றுமென்று அத்தை உபபாதிக்கிறார் (இது) இத்யாதி வாக்யபஞ்சகத்தாலே. ''சொல்லிற்றறிவான்'' என்றது - (க) ''𑌅𑌨𑍍𑌤𑌰𑍇𑌣𑌾𑌞𑍍𑌜𑌲𑌿𑌂 𑌬𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌨𑌾𑌤𑍍 - அந்தரேணாஞ்சலிம்பத்வா லக்ஷ்மணஸ்ய ப்ரஸாதநாத்'' என்றிப்படி சொன்னதெல்லாம் செய்யத்தக்க விவேகியாகையாலே அத்தனை க்ரூரமன்றென்கை. அசேதநமாகையாலே பாதிக்கவேண்டாவென்றாலுங் கேளாதென்றபடி. தாத்பர்யாந்தரம் (ஆஶ்ரிதரை)

(க) ஸ்ரீராமா-கிஷ்கி-௩௨-௧௭.

இத்யாதி. "புள்" என்றத்தைப்பற்ற - (ஸந்தாபகரணீ) என்றது. "துழாய்" என்றத்தைப்பற்ற (விசல்யகரணி) என்றது. கொடுவந்து சேர்க்குமவராகையாலும் ஹ்ருத்யத்தில் வ்யதையைப் போக்குகையாலும் இப்படி யருளிச்செய்தாரென்று கண்டுகொள்வது. இறை-ஸ்வாமியென்று அர்த்த மருளிச்செய்கிறார்(ப்ரணயித்வம்)இத்யாதி. அல்பமென்று அர்த்தாந்தரம் (தாம்) இத்யாதி. சேரி - கிட்டவிருந்த சேரியிலுள்ளார் என்றும், கையேறுகை - கையெடுத்துக் கூப்பிடுகை என்றும் விவக்ஷித்துஅருளிச்செய்கிறார். (ஸந்நிவேசத்தில்) இத்யாதி. ௧௯.

தாத்பர்யம்:—வர்ஷா காலத்தில் நாயகன் வாராமையால் விரஹபாதை ஸஹியாமல் நாயகியும், அவள் துக்கத்தைக்கண்ட தோழிமாரும் மோஹித்துக்கிடக்க, அப்போது தாயானவள் காலத்தினுடையவும் நாயகனுடையவும் கொடுமையைச் சொல்லி முறையிடுகிறாள்.

ஸ்த்ரீகள் லஜ்ஜையினால் தங்கள் விரஹவேதனையை யடக்கிக்கொண்டு ஒருவர்க்கும் தெரியாமல் ஸஞ்சரித்திருந்தார்களே ; நாமிப்போது புறப்பட்டோம். நம்முடைய விஜ்ரும்பணத்தைக்கண்டு இக்காலத்தில் தங்கள் மானத்தை யார்காப்பாற்றிக்கொள்ளுகிறார்களோ பார்ப்போம் என்று கறுவிக்கொண்டு கறுத்துத் திரள் திரளாக மின்னலு மிடியுமாய் ஆகாசத்தில் மேகங்கள் கனவர்ஷங்களை வர்ஷித்துக் கொண்டு பெண்களை மானபங்கம் செய்கைக்காக ஸஞ்சரிக்கத் தொடங்கிற்று. இப்போதாகிலும் அந்த ஸர்வேஶ்வரன் வந்து இவளை யணைக்கலாகாதா ; அது செய்யாவிடிலும், இவளையாவது அழைத்துக்கொள்ளலாகாதா ; அதில்லாமற்போனாலும் தாம் சாத்தியருளின திருத்துழாய் மாலையைக்கொடுத்தாவது இவள் பாதையை சமிப்பிக்கலாகாதா ; இதொன்றும் செய்யாததினால் இவள் அதிப்ரவணையாய்த்துடிப்பதைக்கண்டு ஊரார் இவ்வறியாப் பெண்மேல் பழிசொல்லி இரைக்கிறார்களே. இவளுக்கு இவ்வேதனை சீக்கிரத்தில் நீங்கவேணும் என்று மங்களாசாஸநம் பண்ணுகிறாள்.



சின்மொழிநோயோ கழிபெருந்தெய்வம்,இந்நோயினதென்
றின்மொழிகேட்கு மிளந்தெய்வமன்றிது, வேலநில்நீ
என்மொழிகேண்மி னென்னம்மனைமீருலகேழுமுண்டான்
சொன்மொழி,மாலையந்தண்ணந்துழாய்கொண்டுசூட்டுமினே.

அர்த்தம்.—சின்மொழி - சிறிய (அக்ஷரமான) சொல்லையுடைய இவளுடைய, நோய் - வ்யாதி, கழி - மிகவும், பெரும் — பெரியனான, தெய்வம் - ஸர்வேஶ்வரனால் வந்தது. இந்நோய் - இந்த வ்யாதியானது, இனது என்று - இந்தக்ஷுத்ரதேவதையால் வந்தது என்கிற, இன்மொழி-இல்லாத (அஸத்யமான) வசநத்தை, கேட்கும் - கேட்டு ஸந்தோஷிக்கும், இளந்தெய்வம் - க்ஷுத்ரதேவதையினால், இது - இந்த நோய், அன்று - உண்டானதன்று.

வேல - வேலனே ! நீ - நீ, நில் - தூரமாக நில். என் அம்மனைமீர் - என் தாய்மார்களே ! என் மொழி - என் சொல்லை, கேண்மின் - கேளுங்கோள், உலகு ஏழும் - லோகங்களேழையும், உண்டான் - அமுது செய்தவனுடைய. மொழி - திருநாமத்தை, சொல் - அநுஸந்தியுங்கோள். அம் - அழகிய. தண் - குளிர்ந்த, துழாய் - திருத்துழாயாலே கட்டப்பட்ட, மாலை - மாலையை, கொண்டு - ஸம்பாதித்துக்கொண்டுவந்து, சூட்டுமின் - சூட்டுங்கோள். ௨௦.

[ பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம். ]

அவ.—இருபதாம்பாட்டு.—துறை: வெறிவிலக்கு. மேகஸந்தர்சநத்திலே தோழியுந்தானும் மோஹித்துக்கிடக்க, இத்தசையைக் கண்டு சோகித்திருக்கிற திருத்தாயார்முன்னே தேவதாந்தர ஸ்பர்சமுடையார் புகுந்து பரிஹாரத்திலே ப்ரவ்ருத்தராக, அபிஜாதையுமாய் இவள் ப்ரபாவத்தையு மறிந்திருப்பாளொருதோழி கருமுகமாலையை 'நீர்கொடுக்க' என்று நெருப்பிலே இடுவாரைப் போலே 'இவளுக்குப் பரிஹாரம்' என்றுதொடங்கி விநாசத்தை உத்பாதியாநின்றிகோள்' என்று அத்தை நிஷேதித்துக்கொண்டு இவளுடைய நோயையும் இந்நோய்க்கு நிதாநத்தையும், இதுக்குப் பரிஹாரத்தையுஞ் சொல்லுகிறாள்.

வ்யா.—(சின்மொழி) சொல்லிற்றுச் சொல்லமாட்டாத வளவு. சப்தாவசேஷை என்னவுமாம். அங்ஙனேயாகில், இத்தசை கூடினபடி எங்ஙனேயென்னில்; (க) "பால்யாத்ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:" - பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:" போலே. "சின்மொழி" என்றது - முக்தை. இம்முக்தையை விதக்தையாக்கும்போது, ஒருவிதக்தன் வேண்டாவோ? என்கிறது. ஸத்தாமாத்ரமென்னும்படியான இவளை உண்டாக்கும்போது ஒரு ஸர்வசக்தி வேண்டாவோ? (நோய் ஓ) பரிஹாரத்துக்குப் புகுந்தவள், நோயைக்கொண்டு கிடக்கப்பெறாதே இந்நோய்க்குப் பரிஹாரம்சொல்லவிருப்பதே! என்கிறாள். இவள்பரு

---

அரு|| இருபதாம்பாட்டு,—(சின்மொழி) நீர்கொடுக்க- செவ்விபெறுத்த. "சின்மொழி" என்றதுக்கு இரண்டுபொருள். அதாவது - பால்யத்தாலே முக்தமொழியையுடையவள் என்னுதல்; ஆர்த்தியாலே க்ஷீணமானமொழியையுடையவள் என்னுதல்- முந்தினவர்த்தத்தை அருளிச்செய்கிறார் (அங்ஙனேயாகில்) என்று. (அங்ஙனேயாகில்) சொல்லிற்றுச் சொல்லமாட்டாத பருவமாகில் என்றபடி. (இத்தசை) என்றது - தன்தசையைத் தான் வாய்விட்டுச் சொல்லமாட்டாதபடி பகவத் விஷயத்தில் அவகாஹநங்கூடினபடி எங்ஙனே; என்றபடி. இரண்டா மர்த்தத்திலே அருளிச்செய்கிறார் (ஸத்தாமாத்ரம்) இத்யாதி. (ஸர்வசக்திவேண்டாவோ) என்றது - "உலகேழுமுண்டான்" என்றத்தைப்பற்ற. "ஓ" என்கிற சப்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பரிஹாரத்துக்கு) இத்யாதி. அதவா - 'சின்மொழி"

---

(க) ஸ்ரீராமா-பால-கஅ-கூஎ.

வ்யா||வமளவன்று கிடீர் இந்நோய், கைக்கூலி கொடுத்துக்கொள்ள வேண்டும் நோய்.பகவத்விஶ்லேஷத்தில் தரியாமைஸ்வரூபமாயிருந்த படி.(கழிபெருந்தெய்வம்)கழிய-மிக்க.தெய்வம்-அவ்வருகில்லாததெய்வம். (க) "పతింవిశ్వస్య - பதிம்விஶ்வஸ்ய" (உ) పతింపతీనామ్-பதிம் பதீநாம்" என்றும், (ங) "తమీశ్వరాణాం పరమంమహేశ్వరమ్- தமீஶ்வராணும் பரமம் மஹேஶ்வரம்" என்றும், (ச) "అవిజ్ఞాతంవిజానతామ్-அவிஜ்ஞாதம் விஜாநதாம்" என்றும் (ரு) "యతోవాచోనివర్తన్తే - யதோவாசோநிவர்த்தந்தே" என்றும் உபபாதிக்கிற ப்ரமாணங்களுக்கும்அவ்வருகாயிருக்கை.(இந்நோய்இனதென்று) இந்நோயும் இந்நோய்க்கு நிதாநமும் இன்னதென்று. (இன்மொழி) அர்த்த ரஹிதமானமொழி. (கேட்கு மிளந்தெய்வமன்றிது) தனக்கில்லாதத்தை யுண்டாக்கிச் சொல்லப்புக்கால் கேட்டுக்கொண்டாடுந் தெய்வமன்றிது. கைக்கூலிகொடுத்துக் கவிபாடுவித்துக்கொள்ளும் தேவதைகளன்று. (இன்மொழி) வாசகத்துக்கு வாச்யம் போராது, புறம்பு; பகவத் விஷயத்தில் வந்தால், வாச்யத்துக்குத் தக்கவாசக சப்தம் போராது. (வேலநில் நீ) தன் கார்யத்தை நிஷேதிக்கப்புக்கவாறே "பெற்றதுடலாக க்ரஹிப்போம்" என்று பதறினுன். இங்குப் புகுராதே கொள் (சு) "எங்கள்குழுவினில் புகுதலொட்டோம்" என்கிறுள்.

---

அரு||என்றதின் முந்தின வர்த்தத்தைக் கடாக்ஷித்து-"ஓ"என்றதுக்குத் தாத்பர்யாந்தர மருளிச்செய்கிறுர். (இவள் பருவமளவு) இத்யாதி. முந்தின வர்த்தவிவரணம் (கைக்கூலி) இத்யாதி. (இவள் பருவமளவன்று கிடீரிவள்நோய்) என்றத்தால் பலிதம். (பகவத்விஶ்லேஷத்தில்) இத்யாதி. (அவ்வருகில்லாத) இத்யாதி - பூர்வவாக்ய விவரணம். "கழிபெருந்தெய்வம்" என்றதுக்கு - இரண்டுபொருள். அதாவது - "கழி" என்று-மிகுதியாய், மிகவும் பெருந்தெய்வம், என்னுதல்; அதவா - வாக்குக்கு அவிஷயமாயிருக்கிற பெரியதெய்வ மென்னுதல். "அவிஜ்ஞாதம்" என்றுதொடங்கி அருளிச்செய்த ஶ்ருதி த்வயமும் இரண்டாமர்த்தத்துக்கு ப்ரமாணம். இன்மொழியினுடைய நோய் கழிபெருந்தெய்வ மடியாகவந்தது; ஆகையாலே, மற்று இந்நோயும் இந்நோய்க்கு நிதாநமும் இன்னதென்று சொல்லுகிற இன்மொழி கேட்கும் இளந்தெய்வமடியாக வந்ததன்று. இன்மொழி - இல்லாதமொழி; அதாவது-அர்த்தரஹிதமான மொழி என்றபடி. "இன்மொழி" என்றதுக்கும் "கழிமிக்கபெருந்தெய்வம்" என்றதுக்கும் கூட்டித்தாத்பர்ய மருளிச்செய்கிறுர் (வாசகத்துக்கு வாச்யம் போராது புறம்பு) என்று. "வேல" என்றதுக்கு - வேலையுடையவன் என்றபடி. ஸ்வாபதேசம் - (எங்கள் குழுவினில் புகுதலொட்டோம் என்கிறுள்) என்றது. "வேல" என்றதுக்குத் தாத்பர்யம்

---

(க) புருஷஸூ. உ. (உ) (ங) (ச)
(ரு) தைத்திரீ - ஆநந்த - உ. (சு) திருப்பல் - ங.

வ்யா||(க)"கூராராழி வெண்சங்கேந்தி" என்று சொல்லுகிறபடியே
கையுந்திருவாழியுமாகக் காணவேண்டியிருக்கிறவிடத்தே நீ கையும்
வேலுமாகவந்து தோற்றுவதே. (என்மொழிகேண்மின் என்னம்ம
னைமீர்)"அம்மனை மீர்!" என்று ஸம்போதித்து, நான் சொல்லுகிற
வார்த்தையைக்கேளுங்கோள் என்கிறாள்.(உ)"[illegible]·புத்ர
கா இதிஹோவாச". சிஷ்யர்களைப் புத்ரர்களைச் சொல்லுமாபோலன்
றியே "அம்மனைமீர்" என்பானென்னென்னில், இவ்வர்த்தமிவர்
களுக்கு அபூர்வமில்லாமை.தாங்களிவ்வர்த்தத்திலே தேசிகராயிருக்க
ச்செய்தே, வ்யதிரேகத்தில் இவள்கலங்கினகலக்கங்கண்டு கலங்கின
படி. (உலகேழு மித்யாதி) ப்ரளயாத் யாபத்துவந்தால் ஜகத்தை வயி
ற்றிலேவைத்து ரக்ஷிக்கும் ஸர்வேஶ்வரனுடைய திருநாமத்தைச்
சொல்லு. ஜகத்துக்காகவந்த நோயைப் பரிஹரிக்குமவன் இவளு
டைய நோயைப் பரிஹரிக்கவே,ஜகத்தடையப் பரிஹரித்ததாமிறே
ஜகத்துக்காக உண்டானநோய் இவளொருத்திக்குமே யுண்டானபடி
யாலே. (மாலையந்தண்ணந்துழாய் கொண்டு சூட்டுமினே) அவன்
தோளில் விட்ட அழகிய திருத்துழாயைக்கொண்டு இவள்மேல் ஸ்பர்
சிப்பது. "சொன்மொழி" என்று உள்ளே உபஜீவிக்கும் மருந்து
ம், "தண்ணந்துழாய் கொண்டு சூட்டுமின்" என்று மேற்பூசும் மரு
ந்தும். தேவதாந்தர ஸ்பர்சமும்தத்ஸம்பந்தி ஸ்பர்சமும் இவர்க்குஸத்
தயாபாதகமாயிருந்தபடியும், பகவத் ஸ்பர்சமும்பாகவதஸ்பர்சமும்
ஸத்தயாதாரகமா யிருந்தபடியும் சொல்லுகிறது. உ௦.

அரு||(கூராராழி) இத்யாதி. "கேளுங்கோள்" என்று - தாய்மார்க்குபதேசிக்
கலாமோ? என்ன, (புத்ரகா இதிஹோவாச) என்று. புத்ரகா: - என்றதுபோ
லே ஸம்போதியாதே, "அம்மனைமீர்" என்பானென்னென்ன; 'அருளிச்செ
ய்கிறார்' (இவ்வர்த்த மிவர்களுக்கு) என்று. அபூர்வமில்லாவிட்டால் கூசாத்ர
பரிஹாரத்திலே. இழிவானென்னென்ன அருளிச்செய்கிறார் (தாங்கள்) இத்
யாதி "బహూనామనుగ్రహో న్యాయ్యః - பஹூநா மநுக்ரஹோந்யாய்ய:."
என்கிறபடியே ஜகத்துக் காபத்துவந்தால் ரக்ஷிக்கிறவன் ஒருத்தியுடைய
ஆபத்துக்கு உதவி ரக்ஷிக்கக்கூடுமோவென்ன, அருளிச்செய்கிறார். (ஜகத்
துக்காகவந்த) என்று. "அந்தண்ணந்துழாய்" என்கையாலே, (மேல்பூசமரு
ந்து) என்றது.

= ["சின்மொழி - என்று தொடங்கி, வேலனில் நீ என்னம்மனை மீர் என்
மொழிகேண்மின் உலகேழுமுண்டான் மொழியைச் சொல் - அந்தண்ணந்
துழாய் மாலைகொண்டு சூட்டுமின்] என்றத்வயம் - சொல்என்றது ஜாத்யேக
வசநம். உ௦.

(க) திருவாய் ௬ - ௩ - க. (உ)

[அப்பு அரும்பதம்.]

இருபதாம்பாட்டு,—(இன்மொழி) அபிஜாதை-ப்ரபந்நை - நீர்கொடுக்க_ செவ்விபெறுத்த. நோய் - பக்தி. நிதாநம், பரிஹாரம் - திருநாமமும் மாலையும். இன்மொழி-அதிபாலையென்னுதல், வார்த்தை மாத்ர முண்டென் னும்படி ஸத்தை யழிந்தவள் என்னுதல். (அங்ஙனேயாகில்) அதிபாலையாகில் இரண்டாவதத்தைப் பற்ற வருளிச்செய்கிறார் (ஸத்தாமாத்ரம்) இத்யாதி. (ஸர்வசக்தி) என்றது - "கழிபெருந்தெய்வம்" என்றத்தைப்பற்ற. "ஓ" இதுக்குப்பரிஹாரம் பண்ணுவதே! என்றீடுபாடாதல்; பருவத்தளவன்றியே அதிகமாவதே! என்று, கேதமாதல். "நோய்" என்றத்தைப்பற்ற வருளிச் செய்கிறார் (கைக்கூலி) இத்யாதி-ஸாதநாநுஷ்டாநம் பண்ணைப் பெறவே ண்டுகை. இந்தபக்தி உபாயமாகாதோவென்ன; அருளிச்செய்கிறார் (பகவ த்விஸ்லேஷத்தில்) இத்யாதி. கழிபெருந்தெய்வம் - ஸர்வஸ்மாத்பரன் என் னுதல், வாங்மநஸ்ஸுக்களுக்கு அவ்வருகான தெய்வம் என்னுதல், இவை இரண்டுக்கு மநுகுணமாக ப்ரமாணமருளிச்செய்கிறார் (பதிம்விஸ்வஸ்ய) இத்யாதி. தெய்வமடியாக வந்தநோயென்றபடி. நோயல்லாதத்தை "நோய்" என்றும், நிதாநமல்லாதத்தை "நிதாநம்" என்றும் சொல்லுகிற, இன்மொ ழி - அர்த்தமில்லாத சப்தத்தைக் கேட்டுக்கொண் டிருக்கும் க்ஷுத்ரதேவ தை யன்று-தன்னடியாகவந்ததல்லாதத்தைத் தன்னடியாகவந்த தென்றாலும் கேட்டிருக்கும் தெய்வ மன்று. என்றபடி. இது இளந்தெய்வமன்று, இந்த நோய் இளந்தெய்வமடியாகவந்த நோயன்று. "இந்நோய், இன்னதென்றின் மொழி" என்று கீழேகூட்டுதல். "இன்மொழி யிளந்தெய்வம்" என்றுமேலே கூட்டுதல். இத்தை யருளிச்செய்கிறார் (வாசகத்துக்கு) இத்யாதி. வேல - வேலன் - தேவலகன்-தேவதையைப் பூஜிக்கிறவன். இப்படி வயஸ்ஸால் அதி கரைச்சொன்ன விடமுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (புத்ராஇதி) என்று. ப்ரஹ்மா ஒரு வ்யாஜத்தாலே பித்ருக்களை சபிக்க, அந்த சாபமோ க்ஷகம் "சுக்ரனிடத்தில் அத்யயநம் பண்ணினால் போம்" என்கையாலே, அவர் களங்கேவர, வயஸ்ஸாலே இளைய சுக்ரன் வயோதிகரான பித்ருக்களுக்கு அத்யயநம் பண்ணுவித்தானென்றபடி. ஆனால் "புத்ரகா:" என்னாமல், "அம் மனைமீர்" என்று வினவுவா னென்னென்று சங்காபிப்ராயம்; அவர்கள் அஜ்ஞராகையாலே, "புத்ரகா:" என்றான். இக்கிவர்கள் ஸர்வஜ்ஞராகை யாலே பூஜ்யமாகச் சொல்லுகிறார்களென்று உத்தரம். ஸர்வஜ்ஞரானால் இவ ர்கள் சொல்லும்படி இருப்பானென்னென்ன, அருளிச்செய்கிறார் (தாங் கள்) இத்யாதி. (சொல்மொழி) மொழியைச்சொல்லு - "உலகேழுமுண் டான்" என்று விசேஷிப்பானென்; வேறொரு அபதாநமாகாதோவென்ன, அருளிச்செய்கிறார் (ஜகத்துக்காகவந்த) இத்யாதி. இவளைப்பரிஹரிக்கவே ஜகத்தைப் பரிஹரித்தாற் போலே யாருமோவென்ன, அருளிச் செய்கிறார் (இவளுடைய நோய்) இத்யாதி, ஜகத்துக்குண்டான நோய் இவளொருத்தி

க்கு முண்டாகையாலே, இவள்நோயைப்பரிஹரிதால் ஜத்தடையப்பரிஹரித் ததாகும் என்றபடி. அவன் திருநாமமே பரிஹாரமாக வமையுமென்று தாத்பர்யம். ௨௦.

[வேறொரு அரும்பதம்.]

இருபதாம் பாட்டு:—(சின் மொழி) இத்யாதி. கீழ்ப்பாட்டில், திருத்தாயார், "பழியாய் விளைந்ததென் சின்மொழிக்கு" என்று கொண்டு சோகிக்க. சேரியிலுள்ளாரெல்லாரும் திரண்டு "இதென்" என்று திருத்தாயாருங் கலங்கும்படி கதறிக்கொண்டு கிடக்க, தேவதாந்தரபரருமிது கேட்டுப்பரிஹரிக்க உத்யோகித்து நிற்க, பெண்ணிடத்தில் பரிவாலே தாய் அதுக்கிசைந்தமை தோற்ற இருக்கும்படியை யெல்லாம் இவ்வாரவாரத்திலே மோஹம் தெளிந்ததோழி, அந்த தேவதாந்தரத்தை விலக்குகிறாள் என்ற ஸங்கதி திருவுள்ளம் பற்றி துறை இன்னதென்கிறார் (துறை) இத்யாதி. வெறி-தேவதாந்தரபஜநம். அந்த ஸங்கதியை ஸூசிப்பியா நின்றுகொண்டு அவதாரிகை யருளிச் செய்கிறார் (மேக) இத்யாதி. "ஒருதோழி" என்றவநந்தரம் எழுந்திருந்து என்று சேஷம். நீர்கொடுக்க - நீரைத்தெளித்துச்செவ்விபெறுத்த என்கை. நோய் - பக்தி - நிதாநம் - பகவான். பரிஹாரம் - திருநாமமும், மாலையும். "சின்மொழி" என்று-சின்ன மொழியையுடையவள் என்று சப்தார்த்தமாய். பலிதார்த்தம்(சொல்லிற்று) இத்யாதி. சிறுகினவளாய் மொழிமாத்ரமேயானவளென்றுசப்தார்த்தமாக்கித்தாத்பர்யாந்தரம்(சப்த)இத்யாதி. முந்தினவர்த்தத்திலே சங்கித்துப் பரிஹரிக்கிறார் (அங்ஙனேயாகில்)இத்யாதி. அங்ஙனேயாகில் - அபலையாகில், "ஸஹஸ்நிக்த்தः" என்ற விடத்தில், ஸஹதராம் ஸ்நேஹமாவது-தொட்டில் பருவத்திலும் பிரியமாட்டாதஸ்நேஹம்என்றபடி. பால்யமேபிடித்து இப்படிப்ரேம முண்டானாலும் அத்தையிட்டு விசேஷித்ததுக்கு ப்ரக்ருதோபயோகமென் என்ன, அத்தையர்யாப தேசத்திலும் ஸ்வாப தேசத்திலும் அருளிச் செய்கிறார் (இம்முக்தையை) இத்யாதி வாக்யத்வயத்தாலே. "சப்தாவசேஷை" என்னும் பக்ஷாநுகுணமாகத் தாத்பர்யம் (ஸத்தாமாத்ரம்) இத்யாதி.ஹர்ஷஸூசகம் என்றும், சோகஸூசகம் என்றும் விவக்ஷித்து பலிதார்த்தங்களை யருளிச்செய்கிறார் (பரிஹாரத்துக்கு) இத்யாதி வாக்யத்வயத்தாலே. புகுந்தவள் - தோழி (சொல்ல விருப்பதே) என்றது வேலன்வந்து புகுந்து பரிஹரிக்க உத்யோகித்தபடியாலே அத்தைப்பரிஹரிக்கவேண்டி நானுங்கூடச்சொல்ல வேண்டிற்றித்தனை போக்கி நோயாகில் நம்முடைய க்ருஷிபலமாய் வந்ததன்றோ என்று ஸந்தோஷிக்கிறாள் என்றபடி. "ஹர்ஷஹேதுவான ப்ரேமத்தை "நோய்" என்னப் போமோ" என்ன அருளிச் செய்கிறார் (கைக் கூலி) இத்யாதி. ஆனால் இப்படிப்பட்ட ப்ரீதி, ஸாதந மாகாதோ? என்ன, அருளிச்செய்கிறார் (பகவத்)இத்யாதி. "பெருந்தெய்வங்கள்" என்று பேர்பெற்றவையெல்லாம் கழியும்படியான தெய்வம்; ஸர்வஸ்மாத்பரனென்று அர்த்தமாகவுமாம். ப்ரமாணங்களும் சொல்மாட்

டாதே கழியும்படியான பெருமையையுடைய தெய்வம் என்று நிரவதிகமஹி
மாவானவன் என்று சப்தார்த்தமாக்கிச் சொன்ன வர்த்தங்களுக்குக்ரமேண
ப்ரமாணங்கள் (பதிம்) இத்யாதி. "இந்நோய்" என்று ஏதச்சப்தத்தாலே
நோயின் ஸ்வரூபத்தைச் சொல்லியிருக்க, "இனது" என்ற பதத்துக்குப்ர
யோஜநமில்லாமையால் நிதாந விசேஷத்தைச்சொல்லுமென்று அர்த்தமரு
ளிச் செய்கிறார் (இந்நோயும்) இத்யாதி. "அர்த்தரஹிதம்" என்றது - தன்
னால் வந்த நோயாகிற அர்த்தமாகாதிருக்கை. "'இந்நோய் இனது' என்று
வேலன் சொல்லைக் கேட்கும் தாய் இனியமொழியை யுடைத்தாயிருக்கும்
இளந்தெய்வமன்று' என்று அர்த்தம் திருவுள்ளம்பற்றி அருளிச் செய்கிறார்
(கைக்கூலி) இத்யாதி. இல்லாமொழி என்று அர்த்தமாய் "இளந்தெய்வம்"
என்றத்தோடு கூட்டி மூன்றாந்தாத்பர்யம் (வாசகத்துக்கு) இத்யாதி. தேவல
கனை வேலுடையவனாக ஸம்போதித்ததுக்குபாவம் (கூரார்) இத்யாதி. கௌ
ரவ்யருக்குபதேசிப்பதுண்டோ வென்ன(புத்ரகா:) இத்யாதி. ப்ரஹ்மா, ஒரு
வ்யாஜத்தாலே பித்ருக்களை சபிக்க அந்தசாபம் சுக்ரனிடத்திலே அத்யயநம்
பண்ணினால் போம் என்கையாலே, அவர்கள் அங்கேவர, அப்போது வயஸ்
ஸாலே, இளைய சுக்ரன் வயஸ்ஸாலே அதிகரான பித்ருக்களுக்கு அத்யயநம்
பண்ணுவித்தபோது, "புத்ரகா:" என்று ஸம்போதித்தானென்று கருத்து.
ஆனால் அந்த சுக்ரனைப்போலே "புத்ரகா:" என்று ஸம்போதிக்கலாமே,
கௌரவம் தோற்றச்சொல்லுவானென்னென்று சங்கித்துப் பரிஹரிக்கிறார்
(சிஷ்யர்கள்) இத்யாதி. அங்குபுத்ரராகையாலே அப்படி ஸம்போதித்தான்;
இங்கு "அம்மனை மீர்" என்று, "சாரிகைப் புள்ளரந்தண்ணந்துழாயிறைகூ
யருளார்" என்று பகவத்விச்லேஷமென்றறிந்திருக்கச்செய்தே பெண்ணிடத்
திலே ப்ரேமபாரவச்யத்தாலே எத்தைச்செய்தால் தீருமோ? என்றிருப்பாரா
கையாலே கௌரவந்தோற்றச்சொன்னாள் என்று கருத்து. "உலகேழுமு
ண்டான் மொழி சொல்" என்று அந்வயித்து அர்த்தமருளிச் செய்கிறார்
(ப்ரளய) இத்யாதி. அபதாநாந்தரமில்லையோ? இப்படி விசேஷிப்பானென்
னென்ன, (ஜகத்துக்கு) இத்யாதி. இவள் நோயைப்பரிஹரிக்கவே ஜகத்தின்
நோவு பரிஹரித்ததாமோ வென்ன (ஜகத்துக்காக உண்டான) இத்யாதி.
"ஸ்பர்சிப்பது" என்ற வநந்தரம் செய்யுங்கோள் என்று சேஷம். ஒன்று
போராதோ? இரண்டு பரிஹாரம் சொல்லுவானென்னென்ன, (சொன்மொ
ழி) இத்யாதி. ஸ்வாபதேசம் (தேவதாந்தர)இத்யாதி. ௨௦.

தாத்பர்யம் :—நாயகியினுடைய வேதனையை சமிப்பிக்கைக்காகச் சில
தேவதாந்தரபரர் வந்து இவள் தாய்மார்க்கு தேவதாந்தர பஜநம்பண்ணச்
சொல்ல, அதைக்கேட்ட தாய்மார் அதைச் செய்ய யத்நிக்கும்போது, மோ
ஹித்துக்கிடந்த ஸகிகளில் ஒருத்தி மோஹந்தெளிந்து எழுந்திருந்து இவர்
கள் வ்யாபாரங்களைக்கண்டு நிஷேதிக்கிறாள்.

ஓ தாய்மார்களே! இப்பெண்ணுக்கு வந்த நோய் இன்ன தென்றும்,
அதற்குக் காரணமின்ன தென்றும்; அதற்கு மருந்து இன்ன தென்று மறியா

மல் என்செய்யத் தொடங்கினீர்கள். இந்நோய்க்கு, ஒருவர் ஏறிட்டுச்செய்யும் ஸ்தோத்ரத்தைக் கேட்டு மதித்திருக்கும் வேலன் முதலிய க்ஷுத்ர தேவதைகள் காரணமன்று. பராத்பரனான ஸர்வேஶ்வரனே இதற்குக் காரணம். ஆகையால், அவைகளைப்பூஜிப்பதில் ப்ரயோஜநமில்லை என்கிறாள், அப்போது, இவள் நம்மை நிஷேதிக்கிறாள். இப்போது நமக்ககப்பட்டதை எடுத்துக்கொள்வோமென்று வேலன் உள்புகுர, ஓ வேலனே! சக்ராயுதனான எம்பெருமானை ஸேவிக்க இருக்கிற எங்கள் கோஷ்டியில் வேலாயுதத்தைப் பிடித்துக்கொண்டு நீ இங்குப் புகுராதே என்று நிஷேதித்து தாய்மாரைக்குறித்து, நான் சொல்லு முபாயத்தைக்கேளுங்கோள். ஸர்வேஶ்வரனுடைய திருநாமத்தை இவளிடம் அநுஸந்தித்து அவனணிந்த திருத்துழாய் மாலையைச் சூட்டுங்கோள். இவள் நோய்க்கு இதே மருந்து என்று சொல்லுகிறாள். ௨௰.

சூட்டுநன்மாலைகள் தூயனவேந்தி, விண்ணோர்கள்நன்னீ
ராட்டியந்தூபந்தராநிற்கவே யங்கு, ஓர்மாயையினால்
ஈட்டியவெண்ணெய் தொடுவுண்ணப் போந்திமிலேற்றுவன் கூன்
கோட்டிடையாடினை கூத்து, அடலாயர்தங் கொம்பினுக்கே. ௨௧.

அர்த்தம்.—அங்கு-அந்த நித்யவிபூதியில், தூயன-பரிசுத்தமாய், சூட்டு-திருமுடியில் சூட்டத்தக்க பூஷணத்தையும், நல் - விலக்ஷணமான, மாலைகள்-மாலைகளையும், ஏந்தி-தரித்துக்கொண்டு, விண்ணோர்கள்-நித்யஸூரிகள்-நல்-பரிசுத்தமான, நீர் - தீர்த்தத்தினால், ஆட்டி - திருமஞ்சனம் செய்து, அம்-அழகிய, தூபம் - தூபத்தை, தராநிற்கவே-ஸமர்ப்பிக்கச்செய்தே, ஓர் - அத்விதீயமான, மாயையினால் - ஸங்கல்பத்தினாலே, ஈட்டிய - சேர்க்கப்பட்ட, வெண்ணெய் - நவநீதத்தை, தொடு - களவுசெய்து, உண்ண - அமுது செய்ய, போந்து - எழுந்தருளி, இமில் - பலிஷ்டமான, ஏறு - எருதுகளுடைய, வல் - வலிய, கூன் - வளைந்த, கோடு - கொம்புகளின், இடை - நடுவில், அடல் - பலவான்களான, ஆயர்தம் - இடையர்களுடைய, கொம்பினுக்கு - நப்பின்னைப்பிராட்டிக்காக, கூத்தாடினை - நர்த்தநம் செய்தாய். ௨௧.

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—இருபத்தோராம்பாட்டு,—கீழ்ச்சொன்ன பகவத்ப்ரபாவம் இருவரு மறிந்திலர்கள். எங்ஙனேயென்னில் சொன்ன உக்தி செவி

அரு|| இருபத்தோராம் பாட்டு :—(சூட்டுநன் மாலைகள்). கீழிற்பாட்டிலே தோழியானவள் "உலகேழு முண்டான் சொல்மொழி மாலையந்தண்ணந்துழாய்கொண்டு சூட்டுமின்" என்று சொன்ன மாத்ரமாய் பரிஹரியாதிருக்க இப்பாட்டிலே யுண்டாக்கக் கூடுமோ வென்ன (கீழ்ச்சொன்ன) இத்யாதி. (சொன்ன விருவரும்) என்றது - தாயாருந் தோழியும். அதாவது-தாயார் கலங்கி யிருந்தாள், தோழி அவன் திருநாமங்களைச்சொல்லி அலன் சாத்தின

ப்படுவதற்குமுன்னே உணருகையினாலே (க)."உயர்வற உயர்நல முடையவன்" என்று, (உ) "உரவிநேர் டினைந்திருந்தேங்கிய வெளிவுளத்திறம்" என்னும்படியாலே போஹித்தபோ தறியாதே கிடக்கவும். உணர்ந்தாராகில் தம்முடைய பாழியான க்ருஷ்ணாவதாரத்திலே மண்டுமித்தனை.

வ்யா:—(சூட்டு)சிரோபூஷணமாயிருப்பதொன்றுக்குப்பேர். ஆஶ்ரிதன்காலாவிட்டாலும் (௩)"గృహీత్వా శిరసా స్వయమ్-க்ருஹீத்வா சிரஸா ஸ்வயம" என்னும்படியாலே ஏற்பது தன் தலையாலேயாயிருக்கை. பிள்ளை யுறங்காவில்லிதாஸர் பொன்னாய்ச்சியார்க்கருளிச் செய்தவார்த்தை, (௪)" "అశ్నామి-அஶ்நாமி" என்னுமாபோலே." (நன்மாலைகள்) இவனுதரிக்குமென்று எருக்கும்தும்பையுமாகத் தேடியிடுமளவன்றிக்கே இங்குத்தைக்கு ஸத்ருசமாய் ஸ்ப்ருஹணீயமா யிருக்கும் மாலைகள். ஈரங்கொல்லியைக்கொன்று திருப்பரியட்டஞ் சாத்தி, ஸ்ரீமாலாகாரர் க்ருஹத்திலே எழுந்தருளித் திருப்பள்ளித் தாமஞ் சாத்தி, சாந்து சாத்தவபேக்ஷிதமான தசையிலே கூனி சாந்துகொண்டு போகா நிற்க "ஏடீ! சாந்து கொண்டுவா" என்ன, பெண்டாட்டியாகையாலே மறுக்க மாட்டாதே "இடைப்பிள்ளைகளுக்கு முடைநாற்றத்தோடே கூடினவடிவுகளுக்கேதேனும் வழக்கன்ன சாந்தையிட்டு மருட்டுகிறோம்" என்று தண்ணிய சாந்தைக்கொடுக்க, முன்கையை நீட்டி மோந்து பார்த்து(௫)"సుగన్ధమేతత్-ஸுகந்தமேதத்" இது அரு||மாலையைச்சாத்துங்கோள்" என்றான். இந்த உக்தி செவிப்பட்டவாறேதெளிந்தாள். ஆகையாலே தோழியும் பகவத்வைபவமறியாளென்றபடி. உணர்ந்தால் க்ருஷ்ணாவதாரத்திலே வரவேண்டுவானென்னென்ன (உயர்வற) இத்யாதி. தம்முடைய பாழியான - தமக்கு ப்ரக்ருதியான, ஸ்வபாவமான என்றபடி. இந்த பாட்டுக்கு அந்யாபதேசமில்லை. " சூட்டுநன் மாலைகள் " என்றது க்கு இரண்டுபொருள். முந்தினது (ஆஶ்ரிதன்) இத்யாதி. இரண்டாமர்த்தம் ஈஶ்வரனாலே சூட்டுமதான விலக்ஷணமான மாலைகளென்றபடி. అహోభిర్దినైస్సర్వాన్ ప్రీణాతి భగవాన్ హరిః ।విధిప్రయుక్తాంపూజాంచ గృహీత్వా శిరసా స్వయమ్॥ அஹோபிர்தினைஸ்ஸர்வாந் ப்ரீணாதி பகவாந்ஹரி: ।விதிப்ரயுக்தாம்பூஜாம்சக்ருஹீத்வாசிரஸாஸ்வயம்"(பிள்ளை யுறங்காவில்லிதாஸர்)என்கிற ஐதிஹ்யம் ஸங்கிதத்தம். ஆஶ்ரிதாபிட்டத்தை விரும்பி ஸ்வீகரிக்குமென்றதுக்கு ப்ரமாணாந்தரம்.(அச்நாமி) இத்யாதி. சூட்டுநன் மாலை - சிரஸ்ஸாலே சூடுகைக்குத் தகுதியானநன் மாலைகள். அங்குச் சாத்துகைக்குஸத்ருசமா யிருக்கவேணுமோவென்ன "ఆవయోర్గాత్రసదృశమ్ - ஆவயோர்காத்ரஸத்ருசம்" என்றதிறே என்னப்பார்த்து அதுக்கு உபோத்காதம் அருளிச்செய்கிறார் ஈரங்கொல்லியை) இத்யாதி. " ஆவயோர்காத்ரஸத்ருசம் ;' என்றதிலே தாத்பர்யம்

(க) திருவாய்-க-க-க. (உ) திருவாய்-க-௬-க.
(௩)
(௪) கீதை.௯-உ௬. (௫) விஷ்ணுபு-௫-௨0-௬,

வ்யா|| உனக்காயிருந்ததென்ன, அதுக்கு மேல்தரமாயிருப்பதொரு சாந்தைக்காட்ட, "రాజార్హం - ராஜார்ஹம்" இதுஉங்களுயனுர்க்காயிருந்தது; அதுக்குமேல்தரமாயிருப்பதொருசாந்தைக்காட்ட "రుచిరం-ருசிரம்" நிறமழகிதாயிருந்தது. கந்தத்தாலே நன்றுமது நிற மழகிதென்கை. அதுக்குறுப்பன்றிறே, "రుచిరాననే-ருசிராநநே" இடைப்பிள்ளைகள்சாந்தின் வாசியறியார்களென்றிருந்தோம். இதிலிவர்கள் வாசியறிந்தபடி யென்னென்று ஹ்ருதயத்தில் கிடந்தப்ரியம் முகத்திலே தோற்றி யிருந்தபடி. ஒரு சாந்திடவேணுமோ ? ஒரு முக மிருந்தபடி யென்னென்றேத்துகிறன். கம்ஸனுக்கு வைத்த சாந்திடுகைக்காக, "ఆవయోర్గాత్రసదృశం దీయతామనులేపనం- ஆவயோர்காத்ர ஸத்ருசந்தீயதாமநுலேபநம்" நற்சரக்குப் பரிமாறுகிற நீ, உடம்பின் வாசியறியவேண்டாவோ? அண்ணருடம்புக்கும் நம்முடம்புக்கும் ஸத்ருசமான சாந்து நீயே அறிந்துதா. (தூயன) அநந்யப்ரயோஜநரிடுமதா யிருக்கை. (க) "கெண்டையொண்கண்" இத்யாதி. (ஏந்தி) தன்னை அங்குற்றைக்குறுப்பாக்கி யிருக்குமதுக்கு மேற்படவில்லை யாயிருக்கை. அங்குற்றைக்கு இஷ்ட விநியோகார்ஹத்வமேஸ்வரூப மென்கிறபடி. (உ) "மஞ்சளுஞ் செங்கழுநீரும்வாசிகையும்" என்னுமாபோலே. (விண்ணோர்களித்யாதி) மண்ணோர்களிட்டதைக் கொள்ளுமவன் விண்ணோர்களிட்டால் சொல்லவேண்டாவிறே. ப்ரயோஜநத்துக்காக வன்றியிலே லோகம் வாழப்பண்ணும் திருமஞ்சனம். (அந்தூபந் தாராநிற்கவே யங்கு) முறை மாறவேண்டாதே, முதுகு நோவ வேண்டாதே, தானே தாரக

அரு|| நிறமுண்டானல் நல்லதன்றோ வென்ன (கந்தத்தாலே) இத்யாதி. அதுக்கு - நன்மைக்கு "ருசிராநநே" என்றதுக்கு இரண்டு பொருள். முந்தினத்தை அருளிச்செய்கிறர் (இடைப்பிள்ளைகள்) என்று. இரண்டாமர்த்தம் (ஒருசாந்திடவேணுமோ) என்று. அப்படி அநந்ய ப்ரயோஜநரிடுவர்களோ வென்ன- (கெண்டை) இத்யாதி. பரிமாருதே-ஏந்திக்கொண்டு நிற்கிறதென்னென்ன (தன்னை) இத்யாதி. இத்தால் தாத்பர்யம் (அங்குற்றைக்கு) இத்யாதி. "வைத்தேன்" என்றதிலேநோக்கு. நன்மாலைகள் சாத்துகைக்காகநீராட்டுவரென்றதுக்கு ஸம்வாதமாக அருளிச்செய்கிறர் "மஞ்சளுஞ் செங்கழுநீரும்வாசிகையும்நாறுசாந்து மஞ்சனமுங்கொண்டு வைத்தேன் இவைசாத்துகைக்காக நீராடவாராய்" என்றாரிறே. அப்படி சூட்டுநன்மாலைகளேந்தி அவை சாத்துகைக்காக நன்னீராட்டுவரென்றபடி. "நன்னீர்" என்கிற விடத்தில் நன்மைக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறர் (ப்ரயோஜநத்துக்காக வன்றியிலே) என்று. "தூபந்தாராநிற்க" என்கிற வர்த்தமாநத்துக்குத் தாத்பர்யம் (முறைமாற

(க) திருமொழி-கக-க-கூ. (உ) பெரியாழ்வார்திரு-உ-ச-ச.

வ்யா||போஷகபோக்யமாயிருக்கை. (க)"నమేస్నానమ్--நமேஸ்நாநம்"(ஓர்மாயையினால்)அத்விதீயமான ஆஶ்சர்யம். அவ்விடமங்ஙனே செல்லாநிற்கச்செய்தே, "திருவாய்ப் பாடியிலே அநுகூலர்பக்கலிலே வெண்ணெ யுண்டாயிருந்தது" என்று நாரதாதிகள்சொல்ல, அங்கு தூபங்கொடுக்கிற புகையிலே தன்னைமறைத்து (உ)"సదాపశ్యన్తి-ஸதாபச்யந்தி" என்றிருக்கிறவர்களைக் கண்ணில் மணற்றூவினபடி. (மாயை) (ஈ)"మాయావయునంజ్ఞానమ్-மாயாவயுநம்ஜ்ஞாநம்"என்கிறபடியேஇச்சை (ஈட்டிய வெண்ணெய் தொடு வுண்ணப்போந்து) சிரகாலங்கூட ஸம்பாதித்த வெண்ணெயைக் க்ருத்ரிமத்தாலே புஜிக்கப் போந்து. இவன்கையிலே சிலவரிடிலும் அநபிமதமாயிருந்தபடி. இவர் தாமங்குங்கூட நின்றுஇங்குங்கூடப் போந்தார்போலே காணும். ஆழ்வார்க்கு பரத்வத்தோடு அவதாரத்தோடு வாசியறநிலமாயிருந்தபடி. (ச)"అథప ఞ్చవటీంగచ్ఛన్ - அதபஞ்சவடீக்கச்சந்" என்னுமாபோலே வெண்ணெய்க்குப் போந்தஇடத்தே ஸ்த்ரீரத்நத்தை லபித்தபடி. விறகுக்குப்போந்த விடத்தே விற்பிடி மாணிக்கம் பெற்றபடி. (இமிலேற்றித்யாதி)கருத்தை யுடைத்தான எருத்தினுடைய வலிதாய் வளைந்திருந்துள்ள கொம்பிலே விழுந்தான், அநந்தரம் "நப்பின்னைப் பிராட்டியை அணைக்கப் புகுகிறோம்" என்னுமத்தாலே. அவன் நின்றபடி

---

அரு||இத்யாதி. ஸ்வார்த்தமாகவன்றிக்கே பரார்த்தமாகப்பண்ணுந் திருமஞ்சனமென்றதுக்கு ஸம்வாதமாக அருளிச்செய்கிறார் (நமேஸ்நாநம்) இத்யாதி. "నమేస్నానంబహుమతం వస్త్రాణ్యాభరణానిచ। తంవినాకైకయీపుత్రం భరతంధర్మచారిణ-நமேஸ்நாநம்பஹுமதம்வஸ்த்ராண் யாபரணாநிச। தம்விநாகைகயீ புத்ரம்பரதம் தர்மசாரிணம்". அதவா-நித்யஸூரிகளிப்படிசெய்யாநின்றால் அவற்றையெல்லாம் விட்டு இவ்விபூதியிலே வருவானென்னென்ன் (நமேஸ்நாநம்) இத்யாதி. அதாவது-லீலாவிபூதியிலுள்ளாருடைய இழவை யநுஸந்தித்தால் அவற்றில் நெஞ்சு செல்லாதென்றபடி என்னவுமாம். "மாயையினால்" என்றதற்கு இரண்டுபொருள். ஆஶ்சர்யமாதல், இச்சையாதல். "தொடுவெண்ணெயுண்ணப் போந்த" என்கையாலே இட்டாலும் அநபிமதமாயிருக்குமென்றபடி. முந்தின வர்த்தத்திலே நோக்கு(சிரகாலம்)இத்யாதி. நித்யவிபூதியில் பரிமாற்றத்தையுஞ்சொல்லி இங்கவன் வந்தபடியுஞ்சொன்னவித்தால் பலித்ததாத்பர்யம்(ஆழ்வாருக்கு)இத்யாதி. மேலுக்கவதாரிகை(அதபஞ்சவடீம்)இத்யாதி. అథపఞ్చవటీంగచ్ఛన్నన్తరారఘునన్దనః। ఆససాదమహాకాయంగృధ్రంభీమపరాక్రమమ్। அதபஞ்சவடீம் கச்சந்நந்தராரகு நந்தநః। ஆஸஸாதமஹாகாயம் க்ருத்ரம் பீமபராக்ரமம்" என்று பஞ்சவடிக்குப் போகிறவர் நடுவே ஜடாயு மஹாராஜரோடே கூடினாற் போலே வெண்ணெய்களவுகாண வந்து நப்பின்னைப்

---

(க) ஸ்ரீராமா-யுத்த-கஉ௬-கூ. (உ) ருக்வே.
(ஈ) வேதநிக.  (ச) ஸ்ரீராமா-ஆர-க௬-க.

வ்யா[[உத்தேஸ்யமாகையாலே "கூத்து" என்கிறார். (அடலாயர் தங்கொம்பினுக்கே) (க) "కృష్ణాశ్రయాః కృష్ణబలాః కృష్ణనాథాశ్చ పాణ్డవాః క்ருஷ்ணாஸ்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாஸ்ச பாண்டவா:" என்று இவன் பிறந்தபின்பு யுத்தோந்முகராயிருந்தபடி. இவனைக்கண்டு வைத்துக் கடுக நீராட்டிக்கொடாதே நடுவே எருத்தைநிறுத்துவதே? (தங்கொம்பினுக்கே) அக்கொம்போடே பொரலாமாகில் இக்கொம்புகளோடே பொருதல் என்றேயவேணும் என்று பொருதான். கருமாறிப்பாய்ந்தாலும் பேற்றுக்குத்தக்கது போராதாயிருக்கிறபடி (உ) "జనకానాం కులే కీర్తిమాహరిష్యతి మే సుతా. ஜநகாநாம்குலேகீர்திமாஹரிஷ்யதிமேஸுதா" என்னும்படியே அக்குலத்தை யெல்லாமுண்டாக்கப்பிறந்தபடி. உக.

அரு|| பிராட்டியைப்பெற்றான் என்றபடி. நீராட்டிக்கொடாதே-தாரைவார்த்துக்கொடாதே. அடலாயரென்று பஹுவசநமாக வருளிச்செய்ததுக்கும், கொம்பினுக்கு என்று ஏகவசநமாக அருளிச்செய்ததுக்கும் ஸம்வாதம் (ஜநகாநாம்) இத்யாதி.

சூட்டுநன் மாலைகள் என்று தொடங்கி அடலாயர்தம் கொம்பினுக்கு கோட்டிடை கூத்தாடினை என்று க்ரியை. (உக)

[அப்பு அரும்பதம்.]

இருபத்தோராம் பாட்டு :—(சூட்டு) இருவரும்-தோழியும் தாய்மாரும். அறிந்திலர்கள்-பகவத் ப்ரபாவ மறிந்திலர்கள். அறியாமை-தாங்கள் ப்ரஸங்கிக்கவே உணருமென்றறியாமை; சொல்லுகை - சூட்டுங்கோ என்கை. வடதளசாயிப்ரஸங்கத்திலே உணர்ந்தால் அவனை யனுபவியாமல் க்ருஷ்ணாவதாரத்திலே இழிவானென்னென்ன அருளிச்செய்கிறார் (உயர்வற) இத்யாதி-ஈஸ்வரனை அறிந்தார் க்ருஷ்ணாவதாரமொழிய மீண்டார் ரென்றபடி. பாழி-இழியுந்துறை-இவனைந்தினத்தை ஸர்வாதிகன் சிரஸ்ஸிலே வைக்கக்கூடுமோ வென்ன அருளிச்செய்கிறார் (ஆஸ்ரிதன்) இத்யாதி. சிரஸாவஹிக்குமென்னுமதுக்கு ஸம்வாதமாக வருளிச் செய்கிறார் (பிள்ளை யுறங்காவில்லி தாஸர்) இத்யாதி. வார்த்தையாவது - "இவன் காலாலே இட்டத்தை சிரஸாவஹிக்கக் கூடுமோ" என்று பொன்னாச்சியார் கேட்க "அம்மாமி" என்று இவன் பக்தியாலே இட்டதை புஜிக்குமென்னுமாபோலே இவனிடத்தில் வ்யாமோஹத்தாலே காலாலே இட்டதையும் சிரஸாவஹிக்கவுங் கூடுங்காண் என்றருளிச் செய்த வார்த்தை. சூட்டும் - சூட்டப்படுமதாய். நன்மாலைகளென்று கூட்டியருளிச் செய்கிறார் (இவனுதரிக்கும்) இத்யாதி. அழகிதானால் கொள்ள வொண்ணாதோ வென்ன அருளிச்செய்கிறார் (கந்தத்தால்) இத்யாதி. கந்தமில்லாதபோது நிறங்கொண்டு ப்ரயோஜநமில்லை என்கை. ஆனால் நிறமும் உத்தேஸ்யமன்றோ வென்ன அருளிச்செய்கிறார் (அதுக்குறுப்பன்றிறே) என்று. கந்தமுண்டானபோதிறே

(க) (உ) ஸ்ரீ ராமா-பால-சுஎ-உக.

நிறமும் விரும்பப்படுவதென்கை - “ருசிராநநே” முகமிருந்தபடியாதல் கொண்டாடுகிறாளாதல் ; நீராடுவதற்கு முன்னேந்தினது எப்படியிருக்கிற தென்ன அருளிச்செய்கிறார் (மஞ்சனும்) இத்யாதி. “கல் நீர்” என்றதைப்பற்ற அருளிச்செய்கிறார் (ப்ரயோஜநத்துக்கு) இத்யாதி. “தராநிற்க” என்கிற வர்த்தமாநத்தைப்பற்ற இங்குற்றையில் வ்யாவ்ருத்தி அருளிச்செய்கிறார் (முறைமாறு) இத்யாதி. “உன்முறை என்முறை” என்று செய்கையன்றிக்கே. திருமஞ்சனம் பரார்த்தமாயிருக்குமென்னுமதுக்கு ப்ரமாணமருளிச்செய்கிறார் (நமேஸ்நாநம்) என்று. திருப்பாற் கடலிலே நாரதன் சொன்னத்தை தர்ம்யைக்யத்தாலே இங்கேயுஞ் சொல்லுகிறது. மாயை-அவர்களை மறைத்த ஆஸ்சர்யமென்னுதல்; வஞ்சநமென்னுதல். தொடு-களவு. இத்தையருளிச்செய்கிறார் (இவன் கையில்) இத்யாதி. பஞ்சவடியிலே வாஸார்த்தமாகப் போகப் பெரிய உடையாரைலபித்தாற்போலே. அடல்-மிடுக்கு. காயிகமாதல், மாநஸமான வன்மையாதல், இத்தை யருளிச்செய்கிறார் (அவனைக்கண்டு) இத்யாதி. நீராட்டி-தாரைவார்த்து. என்றேய்தல்-என்தேய்தல். கருமாறிப்பாய்கை- மேலைக்காஞ்சியிலே யொரு குளத்திலே வசிகளை நட்டு அதிலேபடாதே மதிளிலே உயர நின்று குதிக்கை. அதருமை என்றபடி. “ஆயர்” என்ற பகுவசநத்தையும் “கொம்பு” என்ற ஏகவசநத்தையும் பற்ற அருளிச்செய்கிறார் (ஜநகாநாம்) இத்யாதி. (உக)

[வேறொரு அரும்பதம்.]

இருபத்தோராம் பாட்டு:—(சூட்டு) இத்யாதி. கீழ், பிராட்டி தசையிலே இருந்து மோஹித்துக்கிடந்த ஆழ்வார் இப்பாட்டிலே பரமபதத்திலே பரிமாற்றத்தையும், இங்கு க்ருஷ்ணாவதார சேஷ்டிதத்தையும் அநுஸந்தித்துப் பேசுகிறபடி யென்னென்ன, ஸங்கதியருளிச் செய்கிறார் (கீழ்) இத்யாதி. இருவரும்-தோழியும் தாய்மாரும். அறிந்திலர்கள் - எம்பெருமான் தன்ப்ரபாவத்தாலே தானே உணர்த்தினத்தை அறியார்களென்கை. அவதாரங்கள் பலவுண்டாயிருக்க க்ருஷ்ணாவதாரத்தை அநுபவிப்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (உயர்வற) இத்யாதி. பாழி - இழியுந்துறை. சாத்தினமாலை என்றேதே “சூட்டு” என்பானென்னென்ன (சிரோ) இத்யாதி-சிரோபூஷணமானமாலைகளென்று விசேஷிக்கவேணுமோ ! தோளின் மாலைகளென்றாலாகாதோ வென்ன (ஆஸ்ரிதன்) இத்யாதி, இப்படி ஆதரத்தாலே தலையாலே தரிப்பனென்றதுக்கு ஸம்வாதம் (பிள்ளை) இத்யாதி. “போலே” என்றவநந்தரம் என்று என்று கூட்டுவது, “அவன் காலாலிட்டத்தைத் தலையாலே கொள்வனென்னக்கூடுமோ” என்று பொன் நாய்ச்சியார் கேட்க “పత్రంపుష్పం ఫలంతోయంయో మేభక్త్యాప్రయచ్ఛతి। తదహంభక్త్యుపహృతమశ్నామిప్రయతాత్మనా - பத்ரம் புஷ்பம் பலம் தோயம்யோ மேபக்த்யாப்ரயச்சதி, தத்ஹம் பக்த்யுபஹ்ருதமச்நாமிப்ரயதாத்மநா” என்று ஆஸ்ரிதன் பக்த்யா பத்ராதிகளை

விட்டால் அவனும்ப்ரீத்யா எல்லாவற்றையு முண்பனென்றனிறே. அப்படிப் பட்டவன் சிரஸாவஹிக்கச்சொல்ல வேணுமோ? என்றுபரிஹரித்தாரென்கை. "விண்ணோர்கள் நன்னீராட்டி" என்று - மேலேயிருக்கையாலே, பூசுஞ்சாந்தையும் 'வான்பட்டாடை' முதலானவை எல்லாவற்றையும் சந்தியிருக்குமது ஸித்தமாகையாலே "நன்மாலைகள்" என்றது உபலக்ஷண மென்று கருதி அவற்றில் இவனுக்குகப்புண்டென்னுமது தோன்ற அருளிச்செய்கிறார் (சாங்கொல்லியை) இத்யாதி. மேலே "ராஜார்ஹம்" என்றும், "ஆவயோர்காத்ரஸத்ருசம்" என்றும் இருக்கையாலே "ஸுகந்தம்" என்றதும் ஒருத்தர்க்கர்ஹமென்று சொல்லவேண்டுகையாலே ஔபாதிககந்தவத்தானது ஔபாதிகஜீவனம் பண்ணுமுனக்கே அர்ஹமென்றானென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (இது) இத்யாதி. முகத்திலே தோற்றினபடியைச்சொல்ல வேணுமோவென்ன (ஒருசாந்து) இத்யாதி. "கம்ஸனுக்கு" என்றது - செருக்கனன்றிக்கோ ஸிகனாய் போகத்திலொருப்பட்ட கம்ஸனுக்கென்றபடி. "அறிந்துதா" என்றவநந்தரம் உகந்துசாத்தினானிறே என்றுசேஷம். தூய்மை- பாவசுத்தி என்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார் (அநந்ய) இத்யாதி. ஸம்வாதம்(கெண்டை) இத்யாதி. "தொண்டரிட்டபூந்துளவின் வாசம்" என்றதிலே நோக்கு. குட்டிஎன்னாதே - "ஏந்தின" என்றதுக்குபாவம் (தன்னை) இத்யாதி. அலங்காரோபகரணங்கள் மாத்ரமன்றிக்கே திருமஞ்சனோபகரணத்ரவ்யங்களுமேந்தினமை விவக்ஷிதமென்று அவைதன்னை அருளிச்செய்கிறார் (மஞ்சனும்) இத்யாதி. மண்ணோர்கள் - மாலாகாரப்ரப்ருதிகள், நீரென்னாதே "நல்நீர்" என்றதுக்குபாவம் (ப்ரயோஜநத்துக்கு) இத்யாதி. "தராநிற்க" என்றவர்த்தமாந நிர்த்தேசத்தாலே பலிதம் (முறை) இத்யாதி. "உன்முறையென்முறை" என்றிறே அங்குற்றைப்பரிமாற்றமென்றபடி. எம்பெருமானுடைய நீராட்டம் லோகம்வாழப்பண்ணு மென்றதுக்குப்ரமாணம் (நமே ஸ்நாநம்)என்றது. பரதாதிகளெல்லாரும் வாழும்படியாக. "பஹுமதம்" என்றனிறே என்கை. ஆச்சர்யந்தானேதென்ன (அவ்விடம்)இத்யாதி. "நாரதாதிகள்" என்றது-கோட்சொல்லுவாரென்றபடி. யோஜநாந்தரம்(மாயா)இத்யாதி. க்ருத்ரிமத்தாலேஎன்றுவிசேஷிப்பானென்னென்ன (இவன்)இத்யாதி. வ்யாக்யாதாக்கடுபடுகிறார்(இவர்தாம்)இத்யாதி. மேலுக்கவதாரிகை(அத)இத்யாதி. பஞ்சவடியிலேவாஸார்த்தமாகப் போகச்செய்தே பெரியவுடையாரைலபித்தாற்போலே என்கை. "கூன்" என்றதுக்கு அர்த்தம்-(வளைந்து) என்றது. "அடல்" என்று காயிகபலமென்றருளிச்செய்கிறார்(க்ருஷ்ண)இத்யாதி. மனத்தில் வன்மைஎன்று விவக்ஷித்த "அடல்" என்றதுக்கர்த்தம்(இவனை)இத்யாதி. நீராட்டி- நீர்வார்த்து. என்றேய்தல்-என்குறைதல். கருமாறிப்பாய்கையாவது-மேலைக்காஞ்சியிலே யொருகுளத்திலே இரண்டுவெசிகளைநட்டு அதிலேபடாதேகுதிக்கை. அது அருமையென்றபடி. ஆயர்என்னாதே. "தம்" என்று விசேஷிக்கையாலே இவனுக்குண்டான ஏற்றமவர்களுக்குண்டா மென்னுமது தோற்றவருளிச்செய்கிறார் (ஜநகாநாம்) இத்யாதி. (உக)

தாத்பர்யம்.—இப்பாசுரத்திலாழ்வார், கீழ்ப்பாசுரத்தில் ஸுஹ்ருத்துக்கள் உச்சரித்த பகவந்நாமத்தைக்கேட்டு மோஹந்தெளிந்து தாமானதன்மையிலேயிருந்துக்ருஷ்ணாவதாரத்திலே ஈடுபடுகிறார்.

வைகுந்த மாநகரத்தில் நித்யஸூரிகள் உன்னை திவ்யஸிம்மாஸநத்திலெழுந்தருளப்பண்ணித் திருமஞ்சனம் செய்வித்து, அநந்தரம் வஸ்த்ரமால்யாபரணாதிகளை ஸமர்ப்பித்து தூபம்ஸமர்ப்பிக்கும் போது, அப்புகையிலவர்களுக்குக்காணாமல் ஒளிந்தோடிவந்து, திருவாய்ப்பாடியில் கோபிமார் கடைந்துதிரட்டிவைத்தவெண்ணெயை அமுதுசெய்கைக்காக க்ருஷ்ணாவதாரம் செய்தநீ, நப்பின்னைப்பிராட்டியைப் புணருகைக்காக, கோபர்களிட்ட ஏழெருதுகளுடன் பொருது அவற்றின் கொம்புகளிலகப்படாதபடி அக்கொம்புகளின் நடுவே கூத்தாடினாற் போல் ஸஞ்சரித்தாய். இதென்னஆஶ்சர்யம் என்று ஈடுபடுகிறார். (உக)

கொம்பார் தழைகைசிறுநா ணெறிவிலம், வேட்டைகொண்டாட்
டம்பார்களிறு வினவுவதையர், புள்ளூருங்கள்வர்
தம்பாரகத் தென்றுமாடாதனதம் மிற்கூடாதன
வம்பார்வினாச்சொல்லவோ, எம்மைவைத்ததிவ்வான்புனத்தே.உஉ

அர்த்தம்.—கொம்பு - கொம்பிலே, ஆர்-நிறைந்த, தழை - தழையானது, கை - கையிலேயிருந்தது. சிறு - சிறிய, நாண் - நாணியினுடைய, எறிவு - தழும்பை, இலம் - காண்கிறிலோம். ஐயர் - பூஜ்யரானநீர், கொண்டாட்டு-கொண்டாடுகை, வேட்டை - வேட்டையாயிருந்தது. வினவுவது - கேட்பது, அம்பு - பாணங்களினாலே, ஆர் - பூர்ணமான, களிறு-ஆனையாயிருந்தது. புள்-கருத்மானை, ஊரும் - நடத்துகிற, கள்வர்தம் - வஞ்சகனான ஸர்வேஶ்வரனுடைய, பாரகத்து-லீலா விபூதியில், என்றும்-எக்காலத்திலும், ஆடாதன-(இச்செயல்கள்) நடமாடாதன வாயிருந்தன. தம்மில் - தமக்குள், கூடாதன, (ஒன்றுக்கொன்று) சேராதனவாயிருந்தன. இ - இந்த, வான் - பெரிய, புனத்து - கழனியில், எம்மை - எங்களை, வைத்தது, நியமித்து வைத்தது, வம்பார் - வம்பினாலேபூர்ணமான, வினா - கேள்விக்கு, சொல்லவோ - உத்தரம் சொல்லுகைக்காகவோ ? (உஉ)

## [ பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம். ]

அவ. —இருபத்திரண்டாம்பாட்டு-உங்களைப்புனங்காக்க இங்ஙன்

---

அரு||இருபத்திரண்டாம்பாட்டு.—(கொம்பார்தழைகை) வேட்டைகொண்டாடிக்கொண்டு அம்புபட்ட ஆனையைவினவிக் கொண்டுவருகிற நாயகனுடைய ஹார்தபாவம் (உங்களை) இத்யாதி. இவர்களோடே ஸம்ஶ்லேஷிக்க வரு

கொண்டு வந்துவைத்த தார்மிகராரோ வென்கிறான். அபிமதவிஷய மிருந்தவிடத்தே "தண்ணீர்" என்று கொண்டுபுகுவாரைப்போலே கையிலேதழையை முறித்துப்பிடித்து இவர்களிருந்தவிடத்தே சென்று "இங்ஙனேயோரானை போந்ததோ" என்று கேட்க, அவர்கள் "நாங்கள் புனங்காக்கவிருக்கிறோமோ? உமக்குமறுமாற்றஞ் சொல்ல இருக்கிறோமோ? என்சொன்னீரானீர்" என்கிறார்கள். தழைகொண்டு போகிறதென் னென்னில், ஆஶ்ரயத்தையிழந்ததளிர் வாடுமாபோலே காண் உன்னைப்பிரிந்து நான்பட்டதென்று தன்தசையை அவர்களுக்கு அறிவித்துக்கொண்டு செல்லுகிறபடி. இவனுடையகரஸ்பர்சத்தாலே இது சதசாகமாகப்பணைத்த படியைக்கண்டு "உம்முடைய ஆற்றாமையறிவிக்கவந்தீராகில் கொம்பிலேநிற்கச் செய்தே காட்டாவிட்ட தென்" என்கிறாள். பிறந்தவிடத்தைவிட்டு உம்முடைய பாடுவந்தார்க்கு முண்டோ வாட்டம். உம்மைப்பிரிந்து பிறந்தவிடத்தே யிருப்பார்க்கன்றோ வாட்டமுள்ளதென்கிறான்.

வ்யா.—(கொம்பார்தழைகை) தழைக்கையைக்காட்டி ஜயிக்குமிடத்தே வில்லைக்காட்டி ஜயிக்க வொண்ணாதிறே. (சிறுநாணெறிவிலம்) கையிலேவிற்பிடித்ததழும்பு கண்டிலோம் "நாண்" என்று

---

அரு||கிறவன் தழையைக்கொண்டு ஆனையை வினவிக்கொண்டுவரவேணுமோ வென்ன (அபிமத) இத்யாதி. "கொம்பார்தழைகை" என்று விசேஷிக்கிறதுக்கு ப்ரயோஜநம் (இவனுடைய) இத்யாதி. "இவனுடைய கரஸ்பர்சத்தாலே இது சததசாகமாகப்பணைத்த படியைக்கண்டு" என்று தொடங்கி அருளிச்செய்த வாக்யத்துக்குத் தாத்பர்யம்-கொம்பிலேநிற்கிறதிற் காட்டிலும் இவனுடையகரஸ்பர்சத்தாலே இத்தசாகையானது சதசாகமாகப்பணைத்தபடியைக்கண்டு, ஆஶ்ரயத்தை யிழந்ததளிர்வாடுமாபோலேகாண் உன்னைப்பிரிந்த நான்பட்டதென்று உம்முடைய வாற்றாமையறிவிக்க வந்தீர்கீர்; கொம்பிலே நிற்கச்செய்தேகாட்டா விட்டதென்னென்று வ்யங்க்யோக்தியாகச் சொல்லுகிறாளென்றபடி, இத்தால், கொம்பிலிருக்கிறதோடு கையிலிருந்ததோடு ஒருவாசியற்றிருக்கிறதென்றபடி. தங்களுக்குள்ளோடுகிற பாவத்தை அருளிச்செய்கிறார் (பிறந்த விடத்தைவிட்டு) என்று. அதவா - கொம்பை விட்டுநம்முடையகையிலே இருந்ததுக்கொழிய கொம்பிலேயிருந்ததுக்கு வாட்டமுண்டோ வென்ன (பிறந்தவிடத்தை) இத்யாதி என்னவுமாம். வேட்டைக்குப் போகிறவன் வில்லைக் கொண்டு போகாதே தழையைக்கொண்டு போகிறதென்னென்ன (தழைக்கையைக்காட்டி) என்று, அதாவது - வேட்டைக்கென்று நாட்டுக்கு பரிஹாரமித்தனை யொழிய ஹார்தபாவம் - தன்னுடைய ஆற்றாமைக்குத்ருஷ்டாந்ததயாவிறே. கையில் விற்கண்டிலோமென்றதே (விற்பிடித்ததழும்பு கண்டிலோம்) என்பானென்னென்ன (நாணென்று வில்லுக்கு தர்மம்) என்று.

வ்யா||வில்லுக்குதர்மம். தர்மமாகிறது - தர்மியை யொழிந்தன்றிறே இருப்பது,உம்முடைய கையில் வில்லு கண்டிலோமேஎன்கிறார்கள். "இதிறேவில்" என்று தழையைக்காட்டினான். (வேட்டைகொண் டாட்டு) வில்லிதுவாயிருந்தது, நீர்புக்கவிடமெங்கும் கொண்டாடு கிறது வேட்டையாயிருந்தது, இது ஒருசேர்த்தி யிருந்தபடியே! என்கிறார்கள் - "வில்இதுவாகில் அம்பு எங்குற்று" என்ன, இலக் கான ஆனையிலேபட்டு உள்ளேகுளித்ததென்கிறான். (அம்பார் களிறு வினவுவதையர்) ஐயர் சொற்சேர்த்தியான வார்த்தைகளைச் சொல்லாநின்றீர்,பெருமுதலியாயிருந்தீரோ என்கிறார்கள் (புள்ளோருங் கள்வர்) ஸர்வாதிகர். - (தம்பாரகத் தென்றுமாடாதன) இவருடைய லீலாவிபூதிக்குள்ளே நடையாடாதனவா யிருந்தது. நித்யவிபூதியி லுண்டோ? இல்லையோ? என்றறியமாட்டுகிறிலோம். (தம்மிற் கூடாதன) இரண்டிடத்திலுமில்லையே யாகிலும் இன்று தொடங்கி இத்தை வார்த்தையாகக் கொண்டாமோ வென்னில், இருவர்கூடநி ரூபித்தால் சேருகிறதில்லை. தமக்கும் தம்முடைய வார்த்தைக்கு மொருசேர்த்தியில்லை. ஸதாகாரையான ப்ரதீதியும் அஸதாகாரை யானப்ரதீதியு மொழிய "ஸதஸத்விலக்ஷணம்" என்று தனக்கென்ன ஒன்றைமாயாவாதி சொல்லுமாபோலே லீலாவிபூதியிலும் நித்யவி பூதியிலுமின்றியே உமக்கென்ன வொன்று எங்ஙனே ஸம்பாதித்த படி யென்கிறார்கள். (வம்பார்வினுச் சொல்லவோ எம்மைவைத்தது) புதுமைமிக்கிருந்துள்ளப்ரஶ்நத்துக்கு ப்ரதிவசநம் பண்ணவோ? எங்களைவைத்தது. புதுமைமிக்கிருந்துள்ள வார்த்தைக்கு ப்ரஶ்நம்

அரு||(சிறுநாணெறிவிலம்-)சிறுநாணுண்டு-வில்நாண்,எறிவுண்டு - அத்தாலுண் டான தழும்பு, இலம்-கண்டிலோம், என்று சப்தார்த்தம்-அதவா. "சிறுநா ணெறிவிலம்" என்றதுக்கு இரண்டுபொருள். முந்தினது (கையிலே) இத் யாதி. இரண்டாவது (நாண்) இத்யாதி. புள்ளோருங் கள்வர்தம் பாரகத்து-ஸர் வாதிகரான இவருடைய லீலாவிபூதிக்குள், என்றும், ஒருகாலும், ஆடாதன- நடையாடாதனவாயிருந்த தென்றபடி. (இத்தை வார்த்தையாகக் கொண்டா லோ வென்னில்) என்றது-கையிலே தழையைக்கொண்டு வேட்டைகொண் டாடுகிறோமென்று சொன்னத்தை வார்த்தையாகக் கொண்டாலோ வென்ற படி. "தம்மிற்கூடாதன" என்றதுக்கு இரண்டுபொருள். இருவர்கூடி நிரூபித் தால்சேருகிறதில்லை யென்னுதல்.தம்முடைய உக்திக்குமநுஷ்டானத்துக்கு மொரு சேர்த்தியில்லை யென்னுதல். அதாவது - தமக்கு நம்பக்கலாற்றாமை யதிசயித்திருக்க வேட்டையென்பது,ஆனையைவினவுவது,இவையொன்றுஞ் சேராதென்றபடி. (வம்பார்வினு-) "வம்பு என்று-புதுமையாய், புதுமைமிக்கி ருந்துள்ள, வினு-ப்ரச்நத்துக்கு,ப்ரதி,சொல்லவோ-ப்ரதிவசநம் பண்ணவோ.

வ்யா|| பண்ணவோ? எங்களை வைத்தது என்னவுமாம். (இவ்வான் புனத்தே)இதுக்கவஸரமுண்டோ? இப்பரம்பு நோக்கவே போராதோ பணியென்கிறார்கள்.

ஸ்வாபதேசம்:—எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுணங்களிலே ஈடுபட்ட ஆழ்வாருடைய ஸ்வரூபரூபகுணங்களைக்கண்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் வார்த்தைக்கு ஆழ்வார்வார்த்தை. (௨௨)

அரு|| இரண்டாமர்த்தத்துக்கு, வம்பார்ந்திருந்துள்ள வார்த்தைக்கு விஞ்சொல்லவோ-ப்ரச்நம் பண்ணவோ வென்றபடி. எம்மைவைத்தது-எங்களைவைத்ததென்றபடி. "வான்புனத்து" என்று பெரியபுனத்தைச் சொல்லுகையாலே, இப்பரப்பு நோக்குகைக் கவஸரம் போருமித்தனை யொழிய உம்மோடு ப்ரதிவசநஞ் சொல்லுகைக்கு அவஸரமுண்டோ வென்றபடி.

கையிலே கொம்பார்தழை, கொண்டாடுகிறது வேட்டை, ஐயர் வினவுவது அம்பார்களிறு, இது புள்ளருநங்கள்வர்தம்பாரகத் தென்று மாடாதன, தம்மில் கூடாதன, ஆகையாலே இவ்வான்புனத்தே எம்மைவைத்தது வம்பார் விஞ்சொல்லவோ இத்யந்வயம்.

"எம்மைவைத்ததிவ்வான் புனத்து" என்கையாலே (எம்பெருமானுடைய) இத்யாதி. (ஆழ்வாருடைய ஸ்வரூபரூபகுணங்களை) என்றது-அர்த்தஸித்தம். (௨௨.)

[அப்பு அரும்பதம்.]

இருபத்திரண்டாம் பாட்டு.—(கொம்பார்) வேட்டைவ்யாஜத்தாலே அபிமதவிஷயத்தைத் தேடிப்போகிற தனக்கு அவர்களங்கேயிருக்கையாலே இவர்களைவைத்ததார்மிகரார் என்றபடி. பிரிந்ததன்றோ வாடுவது; கொம்பிலேயிருந்தால் வாடுமோவென்று அவனுக்கபிப்ராயமாக அருளிச்செய்கிறார் (பிறந்த விடத்தைவிட்டு) இத்யாதி. வில்லைக்கொண்டு போகாதே தழையைக்கொண்டு போவானென்னென்ன, அருளிச்செய்கிறார் (தழை) இத்யாதி. கொம்பார் தழை-கொம்பிலேயார்ந்து மிகவும் தழைத்திருக்கிறதழை, கை-கையது-கையிலேவாடியிருக்கிறதென்று அவனுக்கபிப்ராயம் (நாணெறிவிலம், "நாண்" என்று - நாணியாய், எறிவு-தழும்பாய், அதில்லையென்றபடி. "நாண்" என்றால் - வில்லைக்காட்டுமோவென்ன, அருளிச்செய்கிறார் (நாணென்று) இத்யாதி. தழையைவில்லென்பது, ஆனைவேட்டை யென்பது, இதொருசேரச்சேர்த்தியிருந்தபடி யென்னென்று வ்யங்க்யம். அம்பார்களிறு-அம்புகளிற்றிலேயார்ந்தது. தம்மிற்கூடாதான. தம்மில்-ஒருவர்க்கொருவர் விசாரிக்கக்கூடாதென்னுதல், தமக்குந் தம்முடைய வார்த்தைக்குங்கூடாதென்னுதல். இத்தையருளிச்செய்கிறார் (தமக்கும்) இத்யாதி. தழைகொண்டிருக்கிற தமக்கும்-ஆனைவேட்டையென்கிற தம்முடையவார்த்தைக்கு மொருசேர்த்தியில்லையென்றபடி. ஸதாகாரை-ஸத்தாயிருக்கும்; அஸதாகாரை - அஸத்தாயிருக்கு

மென்றிரண்டிலே ஒன்றைச்சொல்லுமதன்றிக்கே - ஸதஸத்விலக்ஷணம். ஸத்துமன்று, அஸத்துமன்று, வேறேயொன்றென்னும் மாயாவாதி; நீருமப்படியே சொல்லுகிறீரென்றபடி. வம்பார்தல் - விரைவுக்காதல், சொல்லுக்காதல் விசேஷணம். (உஉ)

[வேறொரு அரும்பதம்.]

இருபத்திரண்டாம் பாட்டு :—(கொம்பார்) இத்யாதி. "கயலோநுமகண்கள்" என்கிறபாட்டிலே களிறு வினவவந்த பாகவதராகிற நாயகன் கலந்து பிரிந்தஸமநந்தரம் "பலபலவூழிகள்" என்றிரவு நெடுகி நோவுபட்ட நாயகியை ஸர்வேஶ்வரனாகிற நாயகன் வந்து கலந்து அந்தஇரவில் பிரியவே, போனவழியில் தேர்க்காலைக்கண்டு தரிக்குந்தசையிலே, வரவைக்குறித்துப்போன வர்ஷாகாலம்வரவே, காலத்தை மயக்கித் தோழி தேற்ற, அத்தையழிக்கும்படி வர்ஷம்மிகுகையாலே தோழியும் நாயகியும் மோஹிக்க, திருத்தாயார் "சேரிபழிவிளைந்தது" என்கிறவளவிலே, வேலன் நோய்பரிஹரிக்கப்புக, அத்தைத்தோழிவிலக்கினவளவிலே, பரமபதத்திலிருந்துவந்து ஆயர்தங்கொம்புக்குதவ வந்தபடியை அறிவிப்பிக்க, தெளிவுபிறந்து அந்த க்ருஷ்ணாவதார சேஷ்டிதத்திலே ஈடுபட்டிருக்குமாழ்வார் ப்ராணிஸம்ஶயங்களை நோக்க வல்லராக எம்பெருமான் ஸங்கல்பித்தபடியை பாகவதராகிற நாயகன் வந்து ஆழ்வார் வைபவத்திலே ஈடுபட்டத்தைக் கண்டு ஆழ்வாராகிற தலைமகள் பேசுகிற பாசுரமாயிருக்கிறதென்று ஸங்கதியுட்கொண்டு,(க)தென்னாய்வடவாநாய்(உ) "திருவேங்கடத்தென்னானை" என்கிற ஆனையை வினவவந்த வ்யாஜேநவந்த நாயகன் புனங்காக்கவைத்த புருஷோத்தமனைக்கொண்டாடிக்கொண்டு ஆழ்வாரைப்பிரியில் வாடும்படியானஸ்வபாவத்தை முன்னிட்டுக்கொண்டுவந்தபடியைக்கண்டு சொல்லுகிறதென்று அவதாரிகை அருளிச்செய்கிறார் (உங்களை)இத்யாதி. வாக்ய ஷட்கத்தாலே. (தார்மிகரோ) என்றது-கையில் தழையைக்காட்டினத்தாலேதானே வாட்டம் ஸூசிதமாய் இவர்களைக்கண்டமட்டிலே விடாய்கெட்டபடியாலே ஸூசிதம்.இப்படிவாட்டமுடையவன்களிறு வினவுக்கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (அபிமத) இத்யாதி. தன்வாட்டங்காட்டினால் இவர்களுடனே விடாய் தீர்க்கை வேண்டியிருக்கக் களிறு வினவும்படி இவர்களாறியிருப்பாரென்னென்ன,தாங்களவனைப்பிரிந்து வாடியிருந்தார்களித்தனை; "அவனுக்கு வாட்டமில்லை" என்றிருந்தார்களென்று பரிஹாரமுட்கொண்டு அபிப்ராயத்தை அருளிச்செய்கிறார் (இவனுடைய) இத்யாதி. ஆக பாகவதர் பரஸ்பரம் "உம்மைப்பிரியில் பரஸ்பரம் வாடினோம்" என்பர்களென்று பலிதம். வேட்டைக்குவருமவன் வில்லுங்கையுமாயன்றோ வருவது, தழையுங்கையுமாய் வரக்கூடுமோ வென்ன (தழை) இத்யாதி. இத்தால் வாட்டத்தைக் காட்டி. வசீகரிக்கும் விஷயத்துக்கு வீரங்காட்டக்கூடாதிறே என்றபடி. சிறுநாணியினுடைய எறிவாலுண்டான தழும்பு இலம்-கண்டிலம் என்று கூட்டி அருளிச்செய்கிறார் (கையில்) இத்யாதி. "வில்"

(க) திருநெடுந்தாண்டகம். ௩0. (உ) திருவாய் ௩-௬-௨.

என்னாதே நானெனச்சொல்லுவானென்னென்ன (நான்) இத்யாதி. மேலுக்கவ தாரிகை (இதிறே) இத்யாதி. "காட்டினன்" என்றது-வளைத்துப் பிடித்துக் காட்டினனென்கை. தழையை வில்லாக்கி யானையைத்தேடி வேட்டையாடு வது விருத்தமாயிருந்ததென்கிறான் என்றருளிச்செய்கிறார் (வில்) இத்யாதி. களிறு என்னாதே "அம்பார்" என்று விசேஷித்ததுக்கு ப்ரஸ்நப்ரதிவசந முகேந தாத்பர்யமருளிச்செய்கிறார் (வில்லிது வாகில்) இத்யாதி. குளித்த தென்றது - ப்ரவேசித்ததென்றபடி. தழையில் அம்பு புறப்படுவதும், அது ஆனையில்குளித்தமையும் அத்யந்தம் சேராச் சேர்த்தி என்றருளிச்செய்கிறார் (ஐயர்சேரா) இத்யாதி. புள்ளூர்கையால் ஸர்வாதிகராய், ஸர்வஸ்வாபஹரண ம் பண்ணவல்லக்ருத்ரிமருடைய விபூதியான பூமியில். அவன் விருத்தம் விபூதியிலெங்குங்கண்டதில்லை. இந்தவசீகரண ஸாதநமான க்ருத்ரிமங்களென் று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (ஸர்வ) இத்யாதி வாக்யத்ரயத்தாலே, தம்மில்-நிருபிக்கிறதம்மிலே, என்றொருதாத்பர்ய மருளிச்செய்து, சொல்லுகிற தம்மி ல் என்று அர்த்தாந்தர மருளிச்செய்கிறார் (தமக்கும்) இத்யாதி. முந்தினவர்த் தத்தை விவரிக்கிறார் (ஸதாகாரையான) இத்யாதி. வம்பு-புதுமையாய், ஆர் தல்-மிகுதியாய், வினா-ப்ரச்நமாய், அதுக்கிரண்டர்த்த மருளிச்செய்கிறார் (புதுமை) இத்யாதி வாக்யத்வயத்தாலே- "வம்பார்" என்றது வினவுகைக்கு விசேஷணமென்று முந்தினது; சொல்லுக்கு விசேஷணமென்று இரண்டா வது. வார்த்தைக்கு - நாங்கள் சொல்லுகிற வார்த்தை கேட்கைக்கு. ப்ரச்நம் பண்ணவோ-நீப்ரஸ்நம் பண்ணவோவென்று கூட்டுவது. கீழ்ப்பாட்டையுங் கடாக்ஷித்துப் பாட்டுக்கு ஸ்வாபதேசம்(எம்பெருமானுடைய)இத்யாதி. "வார் த்தைக்கு" என்றது - ஆழ்வார் படியிலே ஈடுபட்டிருக்கச்செய்தே அதுக்கு ட்படாதே ஆழ்வாரைக்குறித்து வேங்கடத்தானையே வினவுகிறவார்த்தைக்கு என்றபடி. "ஆழ்வார் வார்த்தை" என்றது-நீங்கள் பகவத்விஷயமெல்லா ம றிந்தீர்களாயிருந்துவைத்து நம்மிடத்து லீபடுவது, பகவத் விஷயத்தைக் கேட்பது முதலான தெல்லாம் புதுமையாயிருந்ததென்று சொல்லி, கேவலம் பகவத் விஷயமறியாத ஸம்ஸாரிகளைத் திருத்தவைத்தானீஸ்வரன் என்கிற ஸ்ரீஸூக்தி என்றபடி. (உஉ)

தாத்பர்யம்.—இப்பாசுரத்தில், ஸர்வேஸ்வரனுடைய ஸ்வரூப ரூபாதிக ளி லீடுபட்ட பாகவதர், "ஸர்வேஸ்வரனுடைய குணசேஷ்டிதாதிகளை அரு ளிச்செய்யவேணும்" என்று ஆழ்வாரைக்கேட்க, "ஸர்வஜ்ஞர்களான உங்களு க்கு நானெத்தைச் சொல்லுவது" என்றருளிச்செய்த பாசுரத்தை, புனங்காத் திருந்த நாயகியிடம்சென்று "இங்கோரானை போயிற்றா" என்று கேட்ட நாயகனைக்குறித்துச் சொன்ன நாயகியின் பாசுரத்தாலே அருளிச்செய்கிறார்.

நாயகன்-கையிலே தழைகளை முறித்துப் பிடித்துக்கொண்டு தன் விரஹ வேதனையை நாயகிக்கு அறிவிப்பதாகப் போகையில், அங்கோர்புனத்தில் தெய்வயோகத்தினால் நாயகியைக்கண்டு விடாய்தீர்ந்து அவர்களுடன் ஸல்

லாபிக்கக்கருதி "இங்கோரானை பாணத்தினாலடிபட்டுப் போயிற்று" என்று வினவினான், நீர் வேட்டையாட வந்தீராகில் கையில் வில்லைக்காணோம். தழையைப் பிடித்து நின்றீர். இப்படி யஸம்பத்தமான நடத்தை இந்த லீலா விபூதியி லிதுவரையி லெங்கும் காணவில்லை. இப்படி யஸம்பத்த வசநங்களுக் குத்தரம் சொல்லுகைக்கன்று எங்களைப் பெரியோர்கள் இப்புனத்திலே காவலாகவைத்தது; உமக்கு பதில்சொல்ல எங்களுக்குப் பொழுதில்லை. போம் என்கிறார்கள். (உஉ)

புனமோபுனத்தயலே வழிபோகுமருவினையேன்,
மனமோமகளிர்நுங் காவல்சொல்லீர், புண்டரீகத்தங்கேழ்
வனமோரனையகண்ணான் கண்ணன்வானாடமருந்தெய்வத்
தினமோரனையீர்களாய், இவையோநும்மியல்வுகளே. (உ௩)

அர்த்தம்.—அம் - அழகிய, கேழ் - நிறமுடைய, புண்டரீகம் - தாமரைப்பூவினுடைய, ஓர் - விலக்ஷணமான, வனம் - காட்டோடு, அனைய - ஒத்திருக்கிற, கண்ணான் - கண்ணையுடைய, கண்ணன் - ஸ்ரீக்ருஷ்ணனுடைய, வான் - போக்யமான, நாடு - பரமபதத்தில், அமரும் - அமர்ந்து வாஸஞ்செய்கிற, தெய்வத்து - நித்யஸூரிகளுடைய, இனம்-ஸமூஹத்தோடு, ஓர் அனையீர்களாய் - ஒருவகை ஒப்பாயிருக்கிற, மகளிர் - ஓ பெண்களே! நும்காவல் - உங்களுக்குக் காவலில் வைக்கவேண்டியது, புனமோ-கொல்லையா; புனத்து-கொல்லையினுடைய, அயல், பக்கத்தில், வழி-வழியிலே, போகும், போகிற, அருவினையேன் - க்ரூரமான பாபத்தையுடைய என்னுடைய, மனமோ - மனஸ்ஸா; சொல்லீர் - சொல்லுங்கோள், நும் இயல்வு - உங்களுடைய ஸ்வபாவம், இவையோ - இதுவா. (உ௩)

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—இருபத்துமூன்றாம்பாட்டு.— இவனைநோக்கி இவர்கள் சிலவாசோக்திசொல்ல, இவன் தானு மிவர்களைச் சிலவாசோக்திகள் சொல்லுகிறான்.

வ்யா.—(புனமோ) பாவியேன்! சேதநனாய்க் கெட்டேனே! என்கிறான். இதுக்குள்ளே நின்றேனாகில் முழுநோக்குப் பெறலாயிற்றிறே. இங்குற்றை அபாங்கவீக்ஷணந்தானு மொன்றுக்காகவிறே. (புனத்தயலே வழிபோகும்) புனத்துக்குள்ளே புகுந்தோமோ? நாங்

அரு||இருபத்துமூன்றாம்பாட்டு.—(புனமோ) (இவனைநோக்கி) இத்யாதி கீழிற்பாட்டிலே. வாசோக்திகள் - வார்த்தைகள். (பாவியேன் - சேதநனாய்க்கெட்டேனே என்கிறான்) என்றதுக்குத்தாத்பர்யம் - புனமாயிருந்தால் பூர்ணமாகக்கடாக்ஷிப்பர்கள், சேதநனாகையாலே இதுக்கின்றிக்கே இருந்தேனென்று தன்னை வெறுக்கிறானென்றபடி என்று. இவனைக்கடாக்ஷிக்கவில்லையோ வென்ன அருளிச்செய்கிறார் (இங்குற்றை அபாங்க) இத்யாதி. (ஒன்றுக்காகவிறே) என்றது-தன்னை யீடுபடுத்துகைக்காக வென்றபடி. (புனத்துக்குள்ளே

வ்யா||கள்; உங்கள் புனத்துக்கு வேலியில்லையோ? ஸம்பந்தஸம்பந்தத்தை யிட்டுத் தொடருகிறீரோ? எங்கேனும் போகிலும் புனத்தருகல்லது வழியில்லையிறே இவனுக்கு. (வழிபோகும்) நாங்கள் வழியன்றோ போகிறது? வழிபோவார்க்குக் காட்டிலும் முள்ளிலும் புகலாமோ? இவர்களை யொழிந்தவிடம் காடுமுள்ளுமாயிருக்கிறபடி. (அருவினையேன் மனமோ) எங்கேனும் போகிலும் புனத்தயலே வழிபோகவேண்டும் பாபத்தைப் பண்ணினேன். பிள்ளை திருநறையூ ரரையர் "உகந்தருளின தேசமெல்லாங் கிடக்கத் திருநகரியருகே போகவேண்டும்பாபமுண்டாவதே." இது பாபமானால் இதுக்கெதிர்த்தட்டான பகவத்விஷயம் புண்யம், பகவத்விஷயத்தை ஸமாஶ்ரயித்துக்கொண்டை மேலே காற்றடிக்கத் திரியப்பெறாதே, மீளவொண்ணாதே பாகவத ஸம்ச்லேஷத்திலே இழிவதே, என்று. (நுங்காவல்) புனமோ மனமோ உங்களுக்குக்காவல். (மகளிர்) ஒருவனை பாதிக்கைக்கு உங்களுக்குக் கிடக்கிற ஜாக கண்ட்யம்! (சொல்லீர்) சிறையிட்டவர் ஜீவநமிடாரோ? தன்னை அநாதரியா நிற்கச்செய்தேயும் "சொல்லீர்" என்கிறான்; ஆசாதிசயமிருந்தபடி. (புண்டரீகத்தங்கேழ்த்யாதி) (க) "తస్యయథా కప్యాసం పుణ్డరీక మేవమక్షిణీ - தஸ்யயதா கப்யாஸம் புண்டரீக மேவமக்ஷிணீ" என்னும்படி. (அங்கேழ்) அழகிய

---

அரு||புகுந்தோமோ நாங்கள்) என்றது புனத்துக்குள்ளே புகுந்தோமோ என்னுடைய மநஸ்ஸைக் காவலிடுகைக் கென்றபடி. புனத்துக்குள்ளே புகுரப்போகாதோமென்ன அருளிச்செய்கிறார் (உங்கள் புனத்துக்கு வேலியில்லையோ) என்று. "புனத்தயல்" என்கையாலே, (ஸம்பந்த ஸம்பந்தத்தை யிட்டு) என்கிறார். அந்தப் புனத்தினருகில் வழியொழிய வேறுவழியில்லையோ வென்ன அருளிச்செய்கிறார் (எங்கேனும் போகிலும்) என்று. "அருவினையேன்" என்றதுக்கு ஸ்வாபதேச மருளிச்செய்கிறார் (பிள்ளை திருநறையூரரையர்) என்று. இதுக்குத் தாத்பர்யம் (பாபமானால்) இத்யாதி. பாபமானாலிதுக்கெதிர்த்தட்டான பகவத்விஷயம் புண்யமென்றத்தை விவரிக்கிறார் (பகவத்விஷயத்தை ஸமாஶ்ரயித்து) என்று. (கொண்டைமேலே காற்றடிக்க) என்றது-தலைமேலே காற்றடிக்க என்றதாய், ஸுகத்திலேயென்றபடி. இத்தால் பகவத்விஷயத்தைப்பற்றியும் ஐஶ்வர்யாதி புருஷார்த்தங்களைக் கொள்ளுவர்கள்; பாகவதர்களைப் பற்றினவர்களுக்கு மீளவும் யோக்யதையில்லை யாகையாலே ஈடுபடுவர்களென்றபடி. ஆகையாலே அத்தைப்புண்யமென்றதும் இத்தைப்பாபமென்றதும் வ்யங்க்யமென்றபடி. "என்று" என்றது-இப்படி தாத்பர்யமென்றபடி, சிறையிடுகை-மநஸ்ஸைக் காவலிடுகை. மகளிர்-ஸம்போதநம். "மகளிர்" என்ற பஹுவசநத்துக்குத் தாத்பர்யம் (ஒருவனை பாதிக்கைக்கு) என்று. அவர்கள் வார்த்தை சொல்லுகை-ஜீவநமிடுகை. மகளிர் நுங்காவல்புனமோ புனத்தய

(க) சாந்தோக்யம் க-௬-எ.

வ்பா||நிறத்தையுடைய தாமரைக்காடுபோலே யானகண்."ஓர்" என்றது-ஒருவகைக் கொப்பென்றபடி. அத்விதீயமான தாமரைக்காடுபோலே என்றுமாம். "ஓர்" என்றது-அவ்யயமாகவுமாம். (கண்ணன்) நீர்மை. "புண்டரீக" இத்யாதியால் வடிவழகு சொல்கிற்று. (வானுடமருந்தெய்வத்தினை மோரனையீர்களாய்) பரமபதத்தை (க) "ஸதாபஶ்யந்தி-ஸதாபச்யந்தி" என்னும்படியே நித்யவாஸம் பண்ணுகிறவர்க ளெல்லாருங் கூடினால் இத்தலைக் கொருவகைக் கொப்பாயிருந்தபடி. ஸம்ஸார போக மொருவர்க்கும் போராதே அருட்டுப் பருட்டாயிருக்கையாலே இங்குத் தனியல்ல தில்லை. அங்கெல்லாரும் புஜித்தாலும் ஆள்தேட்டமா யிருக்கையாலே இனமாயிருக்கும். (அனையீர்களாய்) (இவையோ வித்யாதி) இவையோ உங்களுடைய ஸ்வபாவங்கள்? என்னெஞ்சை வளைக்கையும் ஜீவனமிடா தொழிகையும். (இவையோ) கிட்டினவரைக் கீழ்ச்சினையறுத்துக்கொண்டு அவர்களை யநாதரிக்குமாபோலே நெஞ்சை அபஹரித்து முகங்கொடாதே யிருக்கிறபடி.

ஸ்வாபதேசம்:—ஆழ்வார் நித்யவிபூதியிலே ப்ரவணராயிருக்கிற விருப்பைக்கண்டு இவர்பக்கலிலே ப்ரவணரான வைஷ்ணவர்கள் வார்த்தை. (உந)

---

அரு||லே வழிபோகுமருவினையேன் மனமோசொல்லீர். நெஞ்சையு மபஹரித்து வார்த்தையுஞ் சொல்லாமையாலே சொல்லுகிறான். இனமாயிருக்கைக்கு ஹேதுவேதென்ன(ஸம்ஸாரபோகம்)இத்யாதி. [புண்டரீகத்தஞ் சேழ்வனமோ ரனையகண்ணன் கண்ணன் வானுடமருந்தெய்வத்தினை மோரனையீர்களாய் நும்மியல்வுக ளிவையோ]என்றந்வயம்."பூண்டரீகம் அத்து அம் சேழ் வனம்" என்று பதவிபாகமாய் "அத்து" என்றது அவ்யயமாய், தாமரையினுடைய அழகிய நிறத்தையுடைத்தான வனமென்றபடி. வனமென்றது-காடு -

இவர்பக்கலிலே ப்ரவணரான ஸ்ரீவைஷ்ணவர்கள் "எங்களைக் கடாக்ஷித்து ஒரு ஸ்ரீஸூக்தியருளிச்செய்ய லாகாதோ?" என்றருளிச்செய்கிறாரென்றபடி. (உந)

[அப்பு அரும்பதம்.]

இருபத்து மூன்றும்பாட்டு.—(புனமோ) வாசோக்தி - வ்யங்க்யோக்தி. இவர்சொன்னது கீழிற்பாட்டிலே. நுங்காவல் புனமோ மனமோ வென்கை. ப்ரீதி கர்ப்பமானவார்த்தை யாகையாலே,"புனம்" என்றத்தைப்பற்றவருளிச்செய்கிறார் (பாவியேன்) இத்யாதி. அப்பமாகிலுங் கடாக்ஷமுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (இங்குற்றை) இத்யாதி. ஒன்றுக்காக-ஈடுபடுத்துகைக்கொழிய, அநுபவத்திலில்லை யென்றபடி. கர்த்தவ்ய பூமி வேறேயொன்றானால் புனத்தருகே போகவேண்டுவா னென்னென்ன, அருளிச்செய்கிறார் (எங்கேனும் போகில்) இத்யாதி. கீழ்வாக்ய விவரணம் (பகவத்விஷயத்தை)

---

(க) ருக்வேதர்.

இத்யாதி. புண்யசப்தத்தாலே புண்யபலமாய், அத்தாலே ஸுகமாய், அத்தாலே (கொண்டையிலே காற்றடிக்க) என்கிறது. இத்தால், இப்போது மீளுகை இஷ்டமாகையாலே மீள யோக்யமான பகவத்விஷயம் புண்யமாய், மீள யோக்யதையில்லாத பாகவதவிஷயம் அநிஷ்டாவஹ மாகையாலே பாப மென்கிறது. சொல்லீர் - சொல்லுங்கோள். அநாதரிக்கிறவர்கள் சொல்லுவர்களோவென்ன அருளிச்செய்கிறார் (கன்னே) இத்யாதி. அன்றியே. சொல்லுகிறீரில்லையென்று அர்த்தமாக்கி அருளிச்செய்கிறார் (கிட்டிநுரை) இத்யாதி. முகங்காட்டாதே-முகம்பார்த்து வார்த்தைசொல்லாதே. (தெய்வத்தினத்துக் கொப்பு) என்கையாலே-(நித்யவிபூதியிலே ப்ரவணர்) என்கிறது. "அங்கேழ்புண்டரீகவனமோரனைய கண்ணான் கண்ணன்வானாடு" என்று தொடங்கி "ஓரனையீர்களா யிருக்கிற மகளிர்நுங் காவல் புனமோ மனமோ நும்மியல்வுகள் சொல்லீர்" என்று க்ரியை. (உரு)

[வேறொரு அரும்பதம்.]

இருபத்து மூன்றாம்பாட்டு.—(புனமோ) இத்யாதி கீழ்ப்பாட்டுக்கு மிதுக்கும் ஸங்கதி உக்தி ப்ரத்யுக்தி ரூபமென்று அருளிச்செய்கிறார் (இவனே) இத்யாதி. (வாசோக்தி) என்றது - "நெஞ்சிலே ப்ரேமம் பூர்ணமாயிருக்கச் செய்தே விநைச் சொல்லவோ வைத்தது" என்று நைரபேக்ஷ்யந் தோற்றச் சொல்லுகை; வாசா புலப்படு மித்தனையொழிய நெஞ்சிலே தோற்றுவது ப்ரேமமே யாகையாலே வாசோக்தி என்றபடி. "அருவினையேன் நுங் காவல் புனமோ" என்றர்வயமுட்கொண்டு ஹார்தபாவ மருளிச்செய்கிறார் (பாவியேன்) இத்யாதி. இத்தால் கையுந்தழையுமாய் வந்துகளிறு வினவினதுங் கார்யஹானியாய் விடுவதே! இப்புனத்திலே. (க) "ఆసామహో చరణరేణు జుషామహం స్యాం బృన్దావనే కిమపి గుల్మలతౌషధీనామ్-ஆஸாமஹோ சரணரேணு ஜுஷாமஹம் ஸ்யாம் ப்ருந்தாவநே கிமபி குல்மலதௌஷதீநாம்" என்கிறபடியே யாகப் பெறாதே போனோமே என்று கருத்து. கெட்டதென்னென்ன (இதுக்கு) இத்யாதி. கீழே கையுந் தழையுமாய் வந்தத்தைக்கண்டிருக்க முழுநோக்கில்லாதே போவானென்னென்ன, "அது கடைக்கண்பார்வை" என்ன, "இதுதான் போராதோ" என்ன; "அது மனத்தைக் காவலிடுகைக் கித்தனையாகையாலே ப்ரயோஜந மில்லையே" என்றருளிச் செய்கிறார் (இங்குற்றை) இத்யாதி. ஆக, தன்னுடைய நிரபேக்ஷதை தோற்றச்சொன்ன பாவத்தை அருளிச்செய்கிறார் (புனத்துக்குள்ளே) இத்யாதி. வழிபோவாரைக் கடைக்கணித்துமனத்தைக் காவலிடச்சொன்னாரென்றபடி. தழையுங்கையுமாய் வந்தபோதே புனத்துக்குள் புகுரத்தட்டுண்டோவென்ன (உங்கள்) இத்யாதி. வேலியிருக்கப் புகுரக்கூடாதே என்று கருத்து, வேலியருகுதான்வர ப்ரஸக்தியென்னென்று கடைக்கணித்தோமென்ன, (ஸம்பந்த) இத்யாதி. தொடாததடி நான் பார்த்துப் போகலாகாதோவென்ன (எங்கேனும்) இத்யாதி. அநந்யகதியிறே இவனென்கை. போகுமென்னுதே "வழி" என்று விசேஷித்ததுக்கு பாவம்

(க) ஸ்ரீபாகவதம் - க0.

(நாங்கள்) இத்யாதி. வேறேவழி தானுமில்லையோ வென்ன அருளிச்செய்கிறார் (இவர்களை) இத்யாதி. இது உட்கருத்து. இப்போது "அருவினையேன்" என்றதுக்குக் கருத்து (எங்கேனும்) இத்யாதி. வேட்டையாட வந்தானும் வழியுங் கொண்டுவிட வேணுமோ என்று கருத்து. இந்நைரபேக்ஷ்யத்தோற்றச் சொல்லுகிறபடி. இவர்கள் பக்கல் ப்ராவண்யமாகிற பாபமடியாக வழி கொண்டுவந்து விட்டதென்று கருத்து. இவ்வர்த்தத்தோற்ற ஐதிஹ்ய மருளிச்செய்கிறார்(பிள்ளை)இத்யாதி. "தென்னுருயுடையானுய்" இத்யாதி நாலுதிக்கிலு மானைகளிருக்க அத்தை வ்யாஜீகரித்துப் போகத் தேடுமவர்களுக்கு ஆழ்வார் திருநகரியி லகப்பட்டு மீளமாட்டாதே இருப்பதே! என்று கருத்து. பிள்ளை யுறங்காவில்லிதாஸர்க்கு விலக்ஷணமான பாவத்தை வியாரிக்கிறார் (இது)இத்யாதி.புண்யம்-புண்யபலமான ஸாக்ஷிமென்றபடி. பஹுவசநத்தாலே ஆழ்வார்கள்பதின்மரும்விவக்ஷித ரென்றருளிச்செய்கிறார (ஒருவனை)இத்யாதி. "சொல்லீர்" சொல்லாதே போனீரென்றுக்கி ஒருதாத்பர்ய மருளிச்செய்து-சொல்லவேணுமென்று ப்ரார்த்தனையாக்கி அருளிச்செய்கிறார் (புண்ணை) இத்யாதி. ஓரனையவென்றும் ஓர் புண்டரீகமென்றுங் கூட்டு. அர்த்தத்வயம் (ஒருவகைக்கு) இத்யாதி. இனமாயிருப்பர்களோ வென்ன (ஸம்ஸார) இத்யாதி. "ஜீவகம்" என்றது - சொல்லீரென்ற சொல்லு. விவரணம் (கிட்டிலுரை) இத்யாதி. "தெய்வந்தினமோ ரனையீர்கள்" என்றத்தை உட்கொண்டு ஸ்வாபதேசம் (ஆழ்வார்) இத்யாதி. (உ௩)

தாத்பர்யம்.—இப்பாட்டில், ஆழ்வாருடைய இழப்பி லீடுபட்ட ஸ்ரீ வைஷ்ணவர்கள் பாசுரத்தை,கீழ்ப்பாட்டில் தன்னைக்குறித்துச்சில பரிஹாஸ வசநங்களைச்சொன்ன நாயகியைக்குறித்து நாயகன் சில சொல்லுகிற பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

ஓ பெண்களே! இப்புனத்தைக்காக்கவன்றோ பெரியோர்கள் உங்களை இங்குவைத்தது; அது கிடக்க, உங்கள் கொல்லைக்குள் வாராமல் அதின் வெளியருகே வழி போக்கனான என் மனஸ்ஸை நீங்களபஹரித்து மீளவொட்டாமல் நிர்ப்பந்திக்கிறீர்கள். இது உங்களுக்கு தர்மமோ? அதிஸுந்தரமான கமலங்களெல்லாம் சேர்ந்தாலும் தன்கண்ணுக்கொப்பாகாத கண்ணழகையுடைய கண்ணனெழுந்தருளி யிருக்கிற திருநாட்டிலே அவனைத் திரளதிரளாக நின்றநுபவித்து ஆநந்திக்கிற நித்யஸூரிகளுடைய ஸகலாநந்தங்களும் உங்களுடைய ஆநந்தத்துக்கொப்பாகாதபடி நிரதிசயாநந்த யுக்தரான நீங்கள் நிர்தயரைப்போல் உங்களழகிலீடுபட்ட என்றுடனொருவார்த்தையும் சொல்லாமல் வருத்த முறுத்துவது யுக்தமோ, நீங்களே யோசித்துச் சொல்லுங்கோள். (உ௩)

இயல்வாயினவஞ்சநோய் கொண்டுலாவும், ஒரோகுடங்கைக்
கயல்பாய்வனபெருநீர்க்கண்கள் தம்மொடும், குன்றமொன்றால்
புயல்வாயினநிரைகாத்த புள்ளூர்திகள்ளூருந்துழாய்க் [கே.
கொயல்வாய்மலர்மேல், மனத்தொடென்னாங் கொலெங்கோல்வளைக்

அர்த்தம்.—இயல்வாயின - ஸ்வபாவ ஸித்தமாய், வஞ்சம் - (ஸர்வேஸ்வரன்) வஞ்சிக்கையினாலுண்டான, நோய் - நோவை, கொண்டு - உடைத்தாய்க்கொண்டு, உலாவும் - ஸஞ்சரிக்குமவளாய், பெருநீர் - பெரிய ஜலத்தில், பாய்வன - துள்ளிப்பாயாநின்றனவான, கயல் - மத்ஸ்யம்போன்றனவாய், ஒரோகுடங்கை - ஒருசிறுங்கையளவான, கண்கள்தம்மொடும் - கண்களோடு கூடினவளாய், ஒருகுன்றால் - ஒரு (கோவர்த்தன) மலையினால், புயல்வாய் - மழையில், இனநிரை - கோஸமூஹங்களை, காத்த - ரக்ஷித்தவனாய், புள் - கருத்மானை, ஊர்தி-வாஹநமாகஉடைத்துமவனான ப்ரியபதியினுடைய, கள் - மது, ஊரும் - பெருகுகிற, கொயல்வாய் - வட்டமாயிருக்கிற, துழாய் மலர்மேல் - திருத்துழாய் மலராலே கட்டப்பட்டமாலைமேலே, மனத்தொடு - (அபிநிவிஷ்டமான) மனஸ்ஸோடும் கூடினவளாய், எம் - எங்கள்பெண்ணாய், கோல் - அழகிய, வளைக்கு - கங்கணங்களையுடையவளான இவளுக்கு, என்னாங்கொல் - ஏதாய்விளையுமோ? (உச)

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—இருபத்து நாலாம்பாட்டு.—இவளுடைய அதிமாத்ர ப்ராவண்யத்தைக்கண்ட திருத்தாயார் இது என்னாய் முடிகிறதோ? என்கிறாள்.

வ்யா.—(இயல்வாயின) ஸ்வபாவமாயுள்ளன. (க) "அறியாக்காலத்துள்ளே யடிமைக்கணன்புசெய்வித்து" (உ) "பால்யாத்ப்ரப்ருதி ஸுஸ்நிக்தः" பால்யாத்ப்ரப்ருதி ஸுஸ்நிக்தः" என்னுமாபோலே. (வஞ்சநோய்) ஸர்வேஸ்வரனாலே வஞ்சிதமான நோய். (ங) "ஊரும் நாடுமுலகமுந் தன்னைப்போல்" (ச) "மரங்களு மிரங்கும்வகை" என்று சொல்லுகிறபடியே தன்னைக்கண்டார் தன்னைப்போலே யாம்படி வஞ்சித்துக்கொண்டு என்றும். (நோய்கொண்டுலாவும்) நோய்நடத்த நடந்தபடி.

அரு || இருபத்துநாலாம் பாட்டு.—(இயல்வாயின) "இயல்வாயின" என்றது நோய்க்கு விசேஷணம், "இயல்வாயின" என்று பஹுவசநத்திலே தாத்பர்யமில்லை; ஸ்வபாவமாயிருந்த வென்றபடி. அப்படி ஸ்வபாவமாயிருக்குமோ வென்ன அருளிச்செய்கிறார் (அறியாக்காலத்துள்ளே) என்றி. அதாவது - ஸர்வேஸ்வரன் தன்னுடைய வடிவழகாலே இவளை வஞ்சித்து இதர விஷய ப்ராவண்யத்தைப் போக்கி பக்தியாகிற நோயையுண்டாக்கினானென்றபடி. "நோய் நடத்த நடந்தாள்" என்றதுக்கு ஸம்வாதமாக

(க) திருவாய் - உ - ங - ங. (உ) ஸ்ரீராமா - பால - கஅ - உஎ.
(ங) திருவாய் - சு - எ - உ. (ச) திருவாய் - சு - ரு - க.

வ்யா||(க)[వృతఃప్రకృతిభిర్నిత్యం ప్రయాతిసరయూంనదీం-வ்ருதஃ ப்ரக்ருதிபிர் நித்யம் ப்ரயாதி ஸரயூம் நதீம்] ப்ரக்ருதி வர்க்கத்தால் சூழப்பட்டுப் போனபடி. பெருமாளைப் பிரிந்து மித்ரவர்க்கம் ஸேவிக்கப்போகி றுனேறு வென்னில், கால் நடை கொடாமையாலே தாங்கிக்கொண்டு போனபடி. (உ) [అత్యన్తసుఖసంవృద్ధః - அத்யந்தஸுகஸம்வ்ருத்தஃ] சக்ரவர்த்தி அறுபதினுயிரம் ஸம்வத்ஸரம் மலடு நின்று பெற்றவனு கையாலே அவன் கொண்டாடினஸுகமிறே உம்முடையஸுகம்; நீர்கொண்டாடப்பட்ட ஸுகமிறே இவனுடையஸுகம். [సుకుమారః-ஸுகுமாரஃ] உம்முடைய கண்ணாலே பார்க்கவும் பொறாத ஸௌகுமார்யம். [సుఖోచితః - ஸுகோசிதஃ] உம்மோடு கலவிக்குசிதனைத்த னை யல்லது பிரிவுக்குசிதனன்றிறே. [కథన్ను-கதந்நு]தன்படியேயெ ன்று நினைக்கிறுர் - பிரிவில்லாமையாலே தமக்கு நீர்குளிருகிறபடி. யாலே சுடுமென்றறியாதே குளிருமென்றஞ்சுகிறுர். [అపరరాత్రేషు- அபராத்ரேஷு] அகாலத்திலே போவானென்னென்னில், புதிசாக வைதவ்யம் வந்தவர்கள் ஆள்கிளம்புவதற்கு முன்னே மனிதர் முகத்திலே விழியாமேபோமாபோலே “கைகேயி மகன்” என்று ம் “இவனுலேயிறே இப்படி புகுந்தது” என்றும் சொல்லுமதற்க ஞ்சி. [సరయూమవగాహతే-ஸரயூமவகாஹதே] நீரிலே முழுகினுல் தட வியெடுக்க வேண்டும்படி. (ஓரோகுடங்கை) சிறுமை சொல்லிற் றன்று; போக்தாக்களுக் களவுபட்டிருக்கை. (கயல்பாய்வன) பிள் ளும் மௌக்த்யமும். (பாய்வனபெருநீர்) ஏகார்ணவம் ப்ரவஹித்தா ற்போலே யிருக்கை. (கயல்பாய்வன பெருநீர்) ஒருகடலிலே ஒரு கயல் இடம்வலங்கொண்டாற்போலே. (கண்கள் தம்மொடும்) பாஹ

---

அரு||அருளிச்செய்கிறுர் (வ்ருதஃப்ரக்ருதிபிர்நித்யம்) என்று. “త్యక్త్వా రాజ్యఞ్చ మానఞ్చ భోగాంశ్చ వివిధాన్ బహూన్। తపస్వీ నియతాహారశ్శేతే శేతే మహీతలే॥ సోఽపి వేలామిమాం నూనమభిషేకార్థముద్యతః - த்யக்த்வா ராஜ்யஞ்ச மானஞ்ச போகாம்ச் சவிவிதாந் பஹூந்। தபஸ்வீநியதாஹாரஶ்சேதே சேதே மஹீதலே ॥ ஸோபிவே லாமிமாம் நூநமபிஷேகார்த்தமுத்யதஃ” (வ்ருதஃ ப்ரக்ருதிபிஃ) இத்யாதி. ஸரயூ நதியைக்குறித்துப் போய்ச் மேலில் ஶ்லோகம் (அத்யந்த) இத்யாதி. ஸரயூ நதியைக்குறித்துப் போய்ச் செய்கிறதென்னென்ன, அருளிச்செய்கிறுர் ப்ரஸங்காத் (அத்யந்தஸுகஸம் வ்ருத்தஃ) என்று. இத்தஶ்லோகங்கள் பெருமாளும் பிராட்டியுந்தாமுமாக அநு ஷ்டானத்துக் கெழுந்தருளினபோது ஜலமதிசீதமாயிருக்கையாலே பரதாழ் வான் விஷயமாக இளையபெருமாள் பெருமாளுக்கு விண்ணப்பஞ் செய்தவை. பிள்-சலியாமை. மௌக்த்யம்-அழகு. ஓரோகுடங்கைக் கயல்பாய்வன பெருநீர்க்கண்கள்தம்மொடும் - ஒருசிறுங்கைபோலே பெருத்து நீண்ட கயலானது கசத்திலே பாயுமாபோலே கண்ணீர் வெள்ளத்திலே யலமரு

---

(க) ஶ்ரீராமா - ஆர - கசு - உக.    (உ) ஶ்ரீராமா - ஆர - சஎ - கூ.

வ்யாக்யகாரணங்களிங்கே ப்ரவணமானபடிசொல்லிற்று.(குன்றமொன்ருல்)ரக்ஷிக்குமிடத்தில் எடுத்தது பரிகரமாயிருந்தபடி.(புயல்வாய் புயலிடத்து. திருவாய்ப்பாடியில் வர்ஷம் "திமழை" என்றே தோற்றியிருக்கிறபடி. (இனநிரைகாத்த)ரக்ஷிக்குமிடத்தில் ரக்ஷகாந்தர்ப்பாவமே வேண்டுவது. ஜ்ஞாநாஜ்ஞாநங்கள் பாராதே ரக்ஷிக்கும். (க) " [illegible] - க்ருதாநுகாராநிவகோபிராஜ்ஞேவ " பசுக்களசுக்காட்டும்படியிறே இடையருடைய ஸ்வபாவம். அவர்களையுங் கூடரக்ஷித்தபடி. (புள்ளூர்தி) ஸர்வாதிகன். (கள்ளூருந்துழாய்) மதுஸ்யந்தியான திருத்துழாய். திருவடிதோளிலே அலையவிட்டதிருத்துழாய் மாலையோடேகூட அணைக்கவாசைப்படுகிருள், இவனும் விரும்புந்தாராகையாலே. (உ)[[illegible] - பதிஸம்மாநிதா ஸீதா] பெருமாள், சக்ரவர்த்திபாடு ஸுமந்த்ரனழைக்க எழுந்தருளுகிறபோது,தொடர்ந்து பின்னே புறப்பட்ட பிராட்டிக்குத்திருத்தோளில் மாலையைவாங்கி யிட்டு 'நாம் வருமளவும்வ்ருத்தகீர்த்தநம் பண்ணியிரு' என்று பழையவர்கள் நிர்வாஹம். "மாலையையிட்டுத் திருவடிகளைப் பிடித்துக் கொண்டு எழுந்தருளினார்" என்று பட்டர். [[illegible] - அஸிதேக்ஷணா] இவர்தோளில் மாலையிட்டதுக்கு இவள் கண்ணாலே மாலையிட்டபடி.(கொயல்வாய்மலர்மேல்)வட்டமாய்ச் செவ்வியையுடைத்தானமாலையிலே மனமாயிற்று. (எங்கோல்வளைக்கே)

அரு||கிற கண்களோடு மென்று சப்தார்த்தம். "ஒன்ருல்' என்றதுக்கு தாத்பர்யம் (எடுத்தது) இத்யாதி. புயல்வாய்-வர்ஷத்தில், அதாவது - வர்ஷத்திலே நோவுபடாதபடி என்றபடி. மழையாகிலபேக்ஷித மன்றோ? காக்க வேண்டுகிறதென்னென்ன, (திருவாய்ப்பாடியில்) இச்யாதி. இனநிரை-கோஸமூஹம். "நிரைகாத்த' என்று அசேதநத்தைரக்ஷித்தவென்றத்தாலே' தாத்பர்யம்(ரக்ஷிக்குமிடத்தில்) இத்யாதி. "ரக்ஷகாந்தர்ப்பாவம்" என்றது - ரக்ஷகனுடைய வ்யாபாராந்தர்ப்பாவ மென்றபடி. இடையரைச் சொல்லாதே பசுக்களை ரக்ஷித்ததைச் சொல்லுவானென்னென்ன, (க்ருதாநுகாராந்) இத்யாதி. அதாவது - இடையரைச் சொல்லாதே பசுக்களைச் சொல்லுவானென்னென்ன என்கிற சங்கைக்குப் பரிஹாரத்வய மருளிச்செய்கிருர் (ரக்ஷிக்குமிடத்தில்) இத்யாதி வாக்யத்வயத்தாலே பென்னவுமாம், முந்தினதே ஸ்வரஸம், "திருத்துழாயை யாசைப்படுகிற தென்னென்ன அருளிச்செய்கிருர் (இவனும் விரும்புந் தாராகையாலே)என்று.இவனும்-ஈஶ்வரனும். அப்படியாசைப்பட்டாலவன் கொடுக்குமோவென்ன அருளிச்செய்கிருர் (பதிஸம்மாநிதா) என்று. மாலையையிட்டுத் திருவடிகளைப் பிடித்துக்கொண்டு எழுந்தருளினு ரென்று பட்டர் நிர்வாஹம், அதவா "அவன் தான் விரும்பும்" என்றதுக்கு நியாமகமேதென்ன (பதிஸம்மாநிதா) இத்யாதி, அதாவது - சானுகந்த தாகை

(க) (உ)ஸ்ரீராமா - அயோ - கஎ - உக.

வ்யாளென்னைய் முடியப்புகுகிறதென்றறிகிறிலேன். (மலர்மேல்மனத்தொடு) அந்தஃகரணம் ப்ரவணமானபடி.

ஸ்வாபதேசம்.—இப்பாட்டில், ஸம்ஸாரத்துக் கிவருளரென்றிருக்க, இவருக்கு பகவத் விஷயத்திலுண்டான அதிமாத்ர ப்ராவண்யத்தைக்கண்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் "இவர்படியு மிப்படியாவது இதென்னைய் முடியக்கடவது" என்றிருக்கிறபடி. (உச)

---

அருளியாலேயிறே பிராட்டிக்குக் கொடுத்தாரென்றபடி. "கோல்வளைக்கு' என்றது அழகியவளையை யுடைய இவளுக்கு என்றபடி.

[இயல்வாயின வஞ்சநோய்கொண்டுலாவா நிற்பாளாய் - ஒரோகுடங்கைக்கயல்பாய்வன பெருநீர்க்கண்கள் தம்மொடுங் கூடியிருப்பாளாய்-குன்றமொன்றால் புயல்வாய் இனநிரைகாத்த புள்ளூர்திகள்ளூருந்துழாய்க் கொயல்வாய்மலர்மேல்மனத்தை யுடையளா யிருக்கிற எங்கோல்வளைக் கென்னாங்கொல்] இத்யந்வயஃ (உச)

## அப்பு அரும்பதம்.

இருபத்து நாலாம் பாட்டு :—(இயல்வாயின) பக்தியாகிற நோய் ஸ்வபாவமாயிருக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (அறியாக்காலத்து) இத்யாதி. வஞ்சநோய் - அவனாலே வஞ்சிக்கப்பட்ட நோயென்னுதல், இவராலே வஞ்சிக்கப்பட்ட நோயென்னுதல். அவன் வஞ்சிக்கை - தன்வடிவழகைக்காட்டிப் பிறர்க்காகாதபடி வஞ்சிக்கை. இப்படி நோய் நடத்த நடந்த பேருண்டோவென்ன அருளிச் செய்கிறார் (வ்ருத்தஃ ப்ரக்ருதிபிஃ) இத்யாதி. ஸநாநார்த்தமாகப் போனானென்று மதுக்கு ப்ரமாணம் இளைய பெருமாள் வசநத்தை யருளிச்செய்கிறார் (அத்யந்த) இத்யாதி. "கயல்" என்கையாலே (பின்னும் மௌக்த்யமும்) அழகியதுமாய், சலநமுமின்றிக்கே யிருக்கை-கண்கள் பரப்பற்றிருக்கை யென்றபடி, பாய்வன பெருநீர் - பெருநீர் பாய்கிறதென்னுதல்; பெருநீரிலே கயல்பாய்கிறது - குதிக்கிறது என்னுதல். கண்ணோடேகூட மநஸ்ஸும் போயிற்றென்கிறார் (பாஹ்யகரண) இத்யாதி. (சொல்லிற்று) மநஸ்ஸும் போனபடி சொல்லிற்று என்று பூரிப்பது. வர்ஷமென்றால் காலவர்ஷத்தைக்காட்டுமோ வென்ன அருளிச்செய்கிறார் (திருவாய்ப்பாடி) இத்யாதி. பசுக்களோபாதி இடையரு மஜ்ஞரோவென்ன அருளிச்செய்கிறார் (க்ருதாநுகாரரா) இத்யாதி. திருத்துழாய்மாலையோடே கூட அணைக்கவேண்டுவா னென்னென்ன (இவனும்) இத்யாதி. ஈஶ்வரனு மதுக்காசைப்பட் டிருக்குமென்றபடி. அவனுமாக விரும்பி இவளுக்குமபேக்ஷிதமாயிருக்குமென்னு மதுக்கு ஸம்வாதமாக வருளிச்செய்கிறார் (பதிஸம்மாநிதா) இத்யாதி.

[ஒரோகுடங்கை என்று தொடங்கி கண்கள் தம்மொடும் மனத்தொடும் இயல்வாயினவஞ்சநோய் கொண்டுலாவும் எங்கோல்வளைக் கென்னாங்கொல்] என்றந்வயம். (உச)

## வேறொரு அரும்பதம்.

இருபத்து நாலாம்பாட்டு :—(இயல்வு) இத்யாதி. கீழ்ப்பாட்டிலே, பாகவதர் ப்ராப்யபூதரென்கையாலே அவர்களுந் தாமுமாய் ப்ரேமகர்ப்போக்திகள் சொல்லிக்கொண்டிருக்கச் செய்தே “புண்டரீகத்தடங்கேழ் வனமோராயை கண்ணன்” என்று வடிவழகையும் ஸௌலப்யத்தையுஞ் சொல்லி, “இப்படிப்பட்டவனுடையவான்” என்று சொன்னத்தைக்கேட்டு ஆழ்வார்க்கவ்விஷயத்தில் மிகவும் ப்ராவண்யம் பிறந்தபடியைக்கண்டு, இங்குள்ள ப்ரியபரரான பாகவதராகிற தாயார் விசாரப்படுகிறாளென்று ஸங்கதியுட்கொண்டு தாத்பர்ய மருளிச்செய்கிறார். (இவளுடைய) இத்யாதி. “அதிமாத்ர ப்ராவண்யம்” என்றது - ப்ராப்யபூதரான பாகவதரையும் மறந்து எம்பெருமானை இப்போதே பெறவேணு மென்கிற பகவத்விஷய பக்தி யென்கை. நோய் ஸ்வாபாவிகமென்னு மதுக்கு, ப்ரமாணத்ருஷ்டாந்தங்களருளிச் செய்கிறார் (அறியா) இத்யாதி. (வஞ்சித்துக்கொண்டு) என்றது - வசீகரித்துக்கொண்டென்றபடி - நோய் நடத்த நடந்த பேருண்டோ வென்ன அருளிச்செய்கிறார் (வ்ரதஃ) இத்யாதி. “நோய்கொண்டுலாவும் கண்ணுங்கொல்” என்று - நொந்தாற்போலே சொன்ன பேருண்டோ வென்ன, இளையபெருமாள் பரதாழ்வான் பக்கல்பரிவாலே - “கதம் வபாராஷ்ரேகூஷ ஸரயூமவகாஹதே”. என்றாற்போலே சொல்லுகிறாளென்றருளிச்செய்கிறார் (அத்யந்த) இத்யாதி, ஒரோசிறுங்கைபோல்வனகயல் போல்வனவாய் பாய்வன பெருநீரை யுடைத்தான கண்களென்று சப்தார்த்தமாய், தாத்பர்யங்களை அருளிச்செய்கிறார் (சிறுமை) இத்யாதி. “கயல்” என்றதால் பலிதம் (பிள்ளும்) இத்யாதி. பிள்ளுதல் - சலமற்றிருக்கை, மௌக்த்யம் - அழகு. பெருநீரில் பாய்வன கயல் போல்வன என்றர்த்தாந்தரம் (ஒரு) இத்யாதி. “ஒன்றால்” என்று - அநாதரம் தோற்றச்சொன்னதுக்கு பாவம் (ரக்ஷிக்கும்) இத்யாதி. மழை லோகத்துக்கு அநுகூலமன்றோ வென்ன (வர்ஷம் இத்யாதி). கோப கோபீ ஜநங்களைச் சொல்லாமல் கோஸமூஹத்தைச் சொன்னதுக்குக் கீழொரு தாத்பர்ய மருளிச்செய்து, தாத்பர்யாந்தர மருளிச்செய்கிறார் (க்ருதார்த்த காராக்) இத்யாதி. இந்த பசுக்கள் இவர்களைப்பார்த்தால் வஸிஷ்டட துல்யங்களென்னும்படியாகையால் இவற்றைச் சொல்லவே அவர்களு மர்த்தஸித்த மென்றிரண்டாம் தாத்பர்யம். ஸமபிவ்யாஹா[illegible] மருளிச்செய்கிறார் (திருவடி இத்யாதி). (க) “హారోఽపి నార్పితః కణ్ఠే స్పర్శసంరోధభీరుణా - ஹாரோபிநார்ப்பித: கண்டேஸ்பர்சஸம்ரோதபீருணா” இத்யாதி. இவளுமிவனு மாசைப்பட்ட மாலையாகையாலே இருவரும் அத்தோடே யாயிற்று அணைவது என்று கருத்து. எம்பெருமான் தனக்கு ஸர்வஸ்வமாயிருப்பது மாலே யென்றும், அத்தைக் கொடுத்து இவளாசையைத் தீர்க்கவேண்டும்படி இவன் விரும்பி யிருப்ப னென்றும் தாத்பர்ய மாகையால் அத்தை ஸம்வாத

(க)

ளுகேந த்ருடீகரிக்கிறுர் (பதி) இத்யாதி. பதியானவன் பார்வைக்கு ஸம்மாநம் பண்ணுகைக்கு உசிதமென்னென்னில், ஸ்வதந்த்ரனுக்கு னென்ன வொண்ணுது; ஜநகமஹாராஜ புத்ரியாகையாலே; இனி ஸ்வபாவத்துக்குறி த்துப்பரதந்த்ரமாயிருக்கை யென்ன வொண்ணுது; ஐடாஜடைத்த வரவிட்ட படியாலே; இனி உசித மென்னென்னில், தனக்கபிமதமான பாலை இவளுக் குதாரகமாகக் கொடுக்கு மித்தனை என்று எடுத்த ப்ரமாணத்துக்கு பாவமரு ளிச்செய்கிறுர் (பெருமாள்) இத்யாதி. அபிமதமான மாலையைக் கொடுக்கை யவ்வளவே யன்றிக்கே கழித்த மாலையை இட்டதென்று உபராக்ஷமையு மும் பண்ணிப்போனுரென்று பட்டர் நிர்வஹித்தாரென்றருளிச்செய்கிருர். (மாலையை) இத்யாதி. கொயல்வாய் - குவிந்திருக்கும் வாயென்ருய், அத் யந்தம்விகஸியாத மலரென்ருய் பாவம். (வட்டமாய்) இத்யாதி ஸம்ஸாரத் துக்கு-லீலாவிபூதிக்கு. இவருளர் - நிவர்த்தகரொருத்தருளர்.

[ஒரோ குடங்கைஎன்று தொடங்கி மனத்தொடுமியல் வாயினவஞ்சநோ ய்கொண்டுலாவும் எங்கோல் வளைக்கென்னுங்கொல்] என்றந்வயம். (உச)

தாத்பர்யம்.—இப்பாசுரத்தில், கீழ்பாகவதர் பரமபதத்தைப்ரஸ்தாபிக்க, அதைக்கேட்டு ஆழ்வாருடையதிருவுள்ளம் அங்கேசென்றுமக்நமானபடியைக் கண்டு, "இவர்ஸம்ஸாரிகளைத்திருத்துவரென்றிருந்தோம், இவர்பகவத்விஷய த்தில் ப்ரவணராய் விட்டார் என்று அன்பாநுஸந்தித்தபாசுரத்தை, நாயக னிடத்தில் ப்ரவணையானநாயகியைக்கண்டு திருத்தாயார் சொல்லும் பாசுரத் தாலேயருளிச்செய்கிறுர்.

இவளுக்கு ஸ்வபாவஸித்தமானபக்தியானது, ஸர்வேஶ்வரன்தன்வடிவ ழகைக்காட்டினவாறே வ்ருத்தியடைந்து, அதினுல் இவள் நின்ற விடத்தில் நில்லாமல் திரியாநின்ருள். பெரியதடாகத்தில் இரண்டுமத்ஸ்யங்கள்கிடக்கு மாபோலே அழகிய இரண்டுகண்களும் சலநமற்று நீர்தளும்பிக்கொண்டிருக்கி றது. இந்த்ரன் கல்மழை பொழியும்போது கோகோபர்களுக்கொருதீங்குவா ராமல் கோவர்த்தநகிரியையெடுத்துக் காத்தஶ்ரீக்ருஷ்ணனுடைய திருத் தோளிலணிந்த மதுஸ்யந்தியான திருத்துழாயை இவளாசைப்படாநின்ருள். இவள்தசை இப்படியாயிருக்கது. இனிஇதென்னுய்விளையுமோதெரியவில்லையென் கிருள். (உச)

---

எங்கோல்வளை முதலாக் கண்ணன் மண்ணும் விண்ணுமளிக்கும்
செங்கோல்வளைவு விளைவிக்குமால், திறல்சேரமரர்
தங்கோனுடையதங்கோனும்பரெல்லாயவர்க்குந்தங்கோன்
நங்கோனுகக்குந்துழாய்,என்செய்யாதினி நானிலத்தே. உரு.

அர்த்தம்.—திறல்சேர்-பலமுடையரான, அமரர்தங்கோனுடைய - (இந் த்ராதி) தேவர்களுக்குஸ்வாமியானப்ரஹ்மாவுக்கும், தங்கோன - அஸாதாரண ஸ்வாமியானவனுய், உம்பர் - ஶ்ரேஷ்டரான, எல்லாயவர்க்கும் - மற்றுமுள் ளநித்யஸூரிகளுக்கும், தங்கோன் - அஸாதாரணஸ்வாமியானவனுய், நம்

கோன் - நமக்கு ஸ்வாமியான ஸர்வேஸ்வரன், உகக்கும் - ப்ரீதிசெய்கிற, துழாய் - திருத்துழாய், கண்ணன் - கண்ணனுடைய, மண்ணும் - பூமியையும், விண்ணும் - மேலுலகங்களையும், அளிக்கும் - ரக்ஷிக்கிற, செங்கோல் - ஆஜ்ஞைக்கு, எம் - எங்கள்பெண்ணின், கோல் - அழகிய, வளைமுதலா - கங்கணங்களையுடைய இவள்நிமித்தமாக, வளைவு - வணக்கத்தை, விளைவிக்கும் - பிறப்பியாநின்றது, இனி - இனிமேல், நால்நிலத்து - நாலுவகைப்பட்டபூமியில், என்செய்யாது - எதைச்செய்யாது, ஆல் - ஆஸ்சர்யம். (௨௫)

## [பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ—இருபத்தைந்தாம் பாட்டு.—"பகவத் ஸமாஸ்ரயணம் பண்ணினாரிப்பாடுபட்டாருண்டோ" என்கிறாள். (௧) "ஆரே துயருழந்தார் துன்புற்றார்" இத்யாதி.

வ்யா.—(எங்கோல்வளை முதலா) என்னுடையவளை நிமித்தமாக. (கண்ணனித்யாதி) ஸர்வேஸ்வரனுடைய மண்ணையும் விண்ணையும் ரக்ஷியாநின்ற வாஜ்ஞையை பக்ஷமாக்காநின்றது (நங்கோனுகக்குந் துழாய்); ஸம்ஸாரத்தில் அபலையான விவளைப்பெற்றால்.(என்செய்யாது)! ஸர்வேஸ்வரன்தானே உபயவிபூதியையும் ரக்ஷிக்கக்கடவ ஆஜ்ஞையை பக்ஷமாக்காநின்றான்; என்னுடையவளை நிமித்தமாக இவனே யழிக்கத் தொடங்கினால் வேறு ரக்ஷிப்பாரா ரென்றுமாம்.(திறல்சேரித்யாதி) மிடுக்கையுடைய இந்த்ராதி தேவதைகளுக்கு நாதனான

அரு || இருபத்தைந்தாம் பாட்டு.—(எங்கோல்வளை) இந்தப் பாட்டு நாயகி வார்த்தையாதல், தோழிவார்த்தையாதல். "என்னுடையவளை நிமித்தமாக" என்கையாலே நாயகிவார்த்தையென்று தோற்றியிருக்கிறது. "ஸம்ஸாரத்திலே அபலையான விவளைப்பெற்றால்" என்கிற வாக்யத்தாலே தோழிவார்த்தையென்று தோற்றுகிறது. பகவத் ஸமாஸ்ரயணம் பண்ணினாரிப் பாடுபட்டாரோவென்ன (ஆரே துயருழந்தார்) என்று. [திறல்சேரமரர் தங்கோனுடைய தங்கோனும்பரெல்லாயவர்க்குந் தங்கோன்நங்கோனுகக்குந்துழாய் எங்கோல்வளை நிமித்தமாகக் கண்ணன் மண்ணும் விண்ணுமளிக்குஞ் செங்கோல்வளைவு விளைவிக்கும் - இப்படியான பின்பு நானிலத்தினியென் செய்யாது] என்றந்வயம் இத்தால், ஈஸ்வரனுடைய ரக்ஷகத்வமும் அஸத்ஸமமாம்படி திருத்துழாய்பாதியாநிற்கிறதென்றபடி. [திறல்சேரமரர்தங்கோனுடைய தங்கோனும்பரெல்லாயவர்க்குந் தங்கோனான கண்ணனானவன் என்னுடைய அழகியவளை நிமித்தமாக மண்ணும் விண்ணுமளிக்கும் செங்கோல்வளைவு விளைவிக்கும்; இப்படி தன் விபூதியை ரக்ஷிக்கக்கடவ ஆஜ்ஞையை பக்ஷமாக்காநின்றால் அவனுக்குந் திருத்துழாயானது இந்நாநிலத்தே இனியென் செய்யாது] என்று இரண்டாமர்த்தத்துக்கந்வயம். தோழி வார்த்தையான போது "எங்கோல்வளை" முதலாஎன்றதுக்கு சப்தார்த்தம்-என்னுடைய அழ

(௧) மூன்றாம்திரு ௨௭.

வ்யா|| ப்ரஹ்மாவுக்கும், நாதனானவன். (உம்பரித்யாதி) (க) மேலாத்தேவர்களான *அயர்வறுமமரர்களதிபதி. இத்தால் உபய விபூதி நாதனென்றபடி. (நங்கோன்) உபயவிபூதிக்கு நாதனானாற்போலேயன்றுகிடீர்எனக்கு நாதனாயிற்று. (உகக்குந்துழாய்). (உ) "தோளிணை மேலும்நன்பார்பின்மேலும்" இத்யாதி.

ஸ்வாபதேசம்.—ஆழ்வாருடைய தசையைக்கண்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸர்வேஶ்வரனுடைய ரக்ஷகத்வத்தையும் அதிசங்கை பண்ண வேண்டியிருக்கிறபடி சொல்லிற்று. (உரு)

அரு|| வளையை யுடையநாயகி நிமித்தமாகவென்றபடி. (உம்பரெல்லாயவர்க்கும்) உம்பர்-ச்ரேஷ்டரான, எல்லாயவர்க்கும்-ஆச்ரரான தேவர்களுக்கும் அவ்வருகாயிருக்கிற நித்யஸூரிகளென்றபடி. (உரு)

அப்பு அரும்பதம்.

இருபத்தைந்தாம் பாட்டு.—(எங்கோல்) திருத்துழாயானது ரக்ஷகாஜ்ஞையைக்கெடுக்கையாலே (இப்பாடுபட்டாருண்டோ) என்கிறது. ஆஶ்ரயித்தாரில் துக்கப்பட்டாரில்லையோ வென்ன அருளிச்செய்கிறார் (ஆரேதுயருழந்தார்) இத்யாதி. கோல்வளை - அழகியவளை. நிமித்தமாக - கொள்ளுகைக்காக, வளைவு-வளைகையை, விளைவிக்கும்-உண்டாக்கும். ஆஜ்ஞையைபக்நமாக்குமென்றபடி - ஆஜ்ஞையைத்திருத்துழாய் பக்நமாக்காநின்றதென்னுதல். அவன் தான் பக்நமாக்காநின்றா னென்னுதல். இத்தையருளிச் செய்கிறார் (ஸர்வேஶ்வரன்) இத்யாதி. "என்னுடையவளை" என்கையாலே நாயகிவார்த்தையும், "அபலை" என்கையாலே தாய் வார்த்தையுமாய்த் தோற்றுகிறது. [திறல் சேர் என்று தொடங்கி நங்கோனுக்குத் துழாய் எங்கோல்வளை முதலாக் கண்ணன் மண்ணும் விண்ணும் அளிக்கும் செங்கோல் வளைவுவிளைவிக்கும் இனிநானிலத்தே என் செய்யாது] ஆல் - ஆஶ்சர்யமென்று க்ரியையாதல். [நங்கோனான கண்ணன் அளிக்கும் செங்கோல்வளைவு விளைவிக்கும் - ஆனபின்பு அவனுக்குத்துழாயென் செய்யாது] என்று க்ரியையாதல்.

வேறொரு அரும்பதம்.

இருபத்தைந்தாம் பாட்டு:—(எங்கோல்) இத்யாதி. இப்பாட்டு திருத்தாயார் வார்த்தை யாகையாலே இப்பாட்டும் திருத்தாயார் வார்த்தை யென்றும், நாயிகா வார்த்தையென்றுமா மென்று விவக்ஷித்துப் பொதுவிலே அவதாரிகை (பதவத்) இத்யாதி. நாயிகாவார்த்தா பக்ஷத்திலே சப்தார்த்தம் (என்னுடைய) இத்யாதி. திருத்தாயார் வார்த்தாபக்ஷத்திலே அந்வயத்தை உட்கொண்டு தாத்பர்யம் (ஸர்வேஶ்வரனுடைய) இத்யாதி. (திறல்சேர்) இத்யாதி. துழாயானது, கண்ணனுடைய மண்ணும் இத்யாதி செங்கோலினுடைய வளைவை-வணக்கத்தை, விளைவிக்கும் - ஸம்பாதிக்கும். அதாவது (ந) "மலர்த்துழாய் மாட்டே நீ மனம் வைத்தாய் மாஞாலம் வருந்தாதே" என்

(க) திருவாய் - ரு - க - அ. (உ) திருவாய் - க - கூ - எ.
(ந) திருவாய் - ந - க - ச.

னும்படி தன்போக்யதையாலே அவனுடைய ரக்ஷண வ்யாபாரத்தை மறப்பிக்குமாகையாலே என்னுடைய அழகிய வளையை யுடைய பெண் நிமித்தமாக நானிலத்தே என்செய்யாது - எப்பாடு படுத்தாது என்றபடி திருத்தாயார் சொல்லுகிறுளென்று திருவுள்ளம். நாயிகாவார்த்தா பக்ஷத்திலே தாத்பர்யம் (ஸர்வேஶ்வரன் தானே) இத்யாதி. இப்பக்ஷத்திலே [திறல் இத்யாதி நங்கோனுயிருந்துள்ள கண்ணன் என்னுடைய அழகியவளை வாங்குகைக்காக, மண்ணும் இத்யாதி. விளைவிக்கும் இனி அவனுக்குந் துழாய் நானிலத்து] என்றந்வயம் என்று திருவுள்ளம். திருத்தாயார் வார்த்தை யென்னும் பக்ஷாநுகுணமாகஸ்வாபதேசம் (ஆழ்வார்) இத்யாதி. (௨௫)

தாத்பர்யம்.—இப்பாசுரத்தில், ஸர்வேஶ்வரனுடைய திருத்துழாய்மாலையிலீடுபட்ட ஆழ்வாரைக்குறித்து, ஶ்ரியஃபதியை யாஶ்ரயித்து இப்படியும் படுவார்களே என்றுபாகவத ருரைத்த பாசுரத்தை, நாயகியினவஸ்த்தையைக் கண்ட திருத்தாயார் பாசுரத்தாலே யருளிச்செய்கிறுர்.—

உபய விபூதிநாதனான எம்பெருமான் சாத்தியருளிய திருத்துழாய், அவன் என்பெண்ணை ரக்ஷிக்க யத்நித்தபோதிலும் அவனுடைய ரக்ஷண ப்ரயத்நம்தலைக்கட்டாமற்படி, உபயவிபூதி நிர்வஹண யோக்யமான அவனுடைய ஆஜ்ஞையையுமழித்து இவளை மிகவும் பாதிக்கத் தொடங்கிற்று. இனி இதுக்குஅஸாத்யமானவ்யாபாரமொன்று. மில்லை என்கிறுள். ௨௫.

நானிலம்வாய்க்கொண்டு நன்னீரறமென்று கோதுகொண்ட
வேனிலஞ் செல்வன் சுவைத்துமிழ்பாலை, கடந்த பொன்னே [பூங்
கானிலந்தோய்ந்து விண்ணோர் தொழுங் கண்ணன் வெஃகாவுதம்
தேனலஞ்சோலை யப்பாலது, எப்பாலைக்குஞ் சேமத்ததே. ௨௬.

அர்த்தம்.—பொன்னே - பொன்போன்றவளே ! வேனில் - உஷ்ணகிரணங்களையுடையவனாய், அம் - அழகிய, செல்வன் - ஶ்ரீமானானஸூர்யன், நால் நிலம் - நாலுவகைப்பட்டபூமியை, வாய்க்கொண்டு - வாயிலேபொகட்டுக்கொண்டு, நல் - ஸாரமான, நீர் - பசை, அற - அறும்படி, மென்று - சப்பி, கோது-கோதான அவற்றை. கொண்ட- (திரும்பியும்) வாயிலிட்டு கொண்டவனாய், சுவைத்து - உறிஞ்சி, உமிழ் - உமிழ்ந்த, பாலை-பாலைநிலமானது, கடந்த- தாண்டப்பட்டது. விண்ணோர் - தேவர்கள், நிலம் - பூமியில், கால்தோய்ந்து- கால்பாவிநின்று, தொழும்ஆஶ்ரயிக்கிற, கண்ணன்-கண்ணனெழுந்தருளியிருக்கிற, வெஃகா-திருவெஃகாவானது, உது - ஸமீபித்தது. அப்பாலது- அதற்கப்பால் காண்கிறது, அம்-அழகிய, பூ-புஷ்பங்களையுடையதாய், தேன் - தேனையுடையதான, நலம் -அழகிய, சோலை - தோப்பு, எப்பாலைக்கும் - எல்லா அவஸ்த்தைகளிலும், சேமத்தது - க்ஷேமகரமாயிருக்கும். ௨௬.

[பெரியவாச்சான்பிள்ளைவ்யாக்யாநம்.]

அவ.—இருபத்தாறும் பாட்டு,—புணர்ந்துடன்போக்கு. புணர்ந்துடன்போகிறானொரு தலைமகன் "பாலை நிலத்தைக் கடந்து குளிர்ந்த நிலத்தே புகுந்தோங்காண்" என்றுச்வஸிப்பிக்கிறான்,

வ்யா.—(நானிலம் வாய்க்கொண்டு) ஆதித்யனானவன் நாலு வகைப்பட்ட நிலத்தையும் வாயிலேகொண்டு. தமிழர் ஐந்தென்று சொல்லுவர்கள். ஆழ்வார்க்குமதுவேமதம். (நன்னீரித்யாதி) இதினுடைய ஸத்தையான நீருண்டி மென்று கோதாக்கி அக்கோதை வாயிலே கொண்ட ஆதித்யனானவன் தன்னுஷ்ண கிரணத்தாலே சுவைத்து ஆஶ்ரயம் பொறாமை யுமிழ்ந்தது பாலையாயிற்று. (கடந்த) ஸம்ஸாரத்தைக்கடந்த என்றபடி. (பொன்னே) ஸம்போதநம். உன்னோடுபோருகிறவெனக்கு "பாலை நிலம்" என்றறியவேணுமோ?வென்கிறான்-அஞ்சாதிருக்கைக்கும் அஸ்த்தாநேபயசங்கை பண்ணுகைக்கும் "பொன்னே" என்கிறது. உண்டென்ன உயிர்நிற்கும்படியும், அபஹரணத்தைக்குறித்தஞ்சி யிருக்கையும். (கால்நிலமித்யாதி) தேவர்கள் ஹவிஸ்ஸுக்கொள்ளுமிடத்தில் ஸம்ஸாரவெக்காயந்தட்டாமே ஒருயோஜநைக்கவ்வருகே நின்று பின்னையுமிதுபொறுக்கமாட்டாமை அவ்வருகே போய்ச்சர்த்தி பண்ணுவர்கள். இப்படியே அங்குற்றைங்குப் பரமபதம்; அங்ஙனிருக்கிற நித்யஸூரிகளானவர்கள் பூமியிலே இழிந்து திருவெஃகாவிலே தங்களுடைய அபிமத விஷயங்கிடக்கையாலே ப்ரதக்ஷிண நமஸ்காராதிகளைப் பண்ணாநிற்பர்கள். (கண்ணன்)ஸர்வேஶ்வரன். ஸ்நேஹமுள்ள விடத்தில் குற்றந்தோற்றாதிறே. (வெஃகாவுது) இப்படிப்பட்ட திருவெஃகாஎன்று காட்டாநின்றான் - "உது" என்று: அதூரவிப்ரக்ருஷ்டம், (க) "𑌏𑌷𑌾 𑌸𑌾 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇-ஏஷா ஸா த்ருச்யதே" இத்யாதி.

---

அரு॥ இருபத்தாறும் பாட்டு.—(நானிலம்) "நானிலம்" என்றது - குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல். (தமிழர் ஐந்தென்று சொல்லுவர்கள்) என்றது - பூமியை, பாலையோடே கூட்டி ஐந்து நிலமாகச் சொல்லுவர்களென்றபடி- பாலை நிலத்தையுந் தனியே யருளிச்செய்கையாலே ஆழ்வார்க்குமதுவே மதமென்றபடி. மென்று - பக்ஷித்து, சுவைத்து - சப்பி. உரிஞ்சி. வேனில் - உஷ்ணகிரணனை, அஞ்செல்வன் - ஸூர்யன் (ஆஶ்ரயம் பொறாமை) என்றது - ஸூர்யனும் தன்னுடைய வாய்பொறாமையென்றபடி - "பொன்னே" என்றதுக்கு போக்யதையைப்பற்ற ஒருதாத்பர்ய மருளிச்செய்து, தாத்பர்யாந்தரம் (அஞ்சாதிருக்கைக்கு) இத்யாதி. அஞ்சாதிருக்கைக்கு மென்கிற வாக்யத்வயத்துக்கும் விவரணம். மேல்வாக்யத்வயமும். இப்படிப்பட்டிருக்கிறபூமியுடைய தோஷம் நித்யஸூரிகளுக்குத்தெரியாதோவென்ன, ஸர்வேஶ்வரனிடத்தில் ஸ்நேஹத்தாலே தெரியாதென்கிறார் (ஸ்நேஹமுள்ளவிடத்திலே) என்று. கோதுகொண்ட - கோதாக்கின "அதூரவிப்ரக்ருஷ்டம்" என்றதுக்குத்த்ருஷ்டாந்தரம்-(ஏஷா) இத்யாதி. "𑌏𑌷𑌾 𑌸𑌾 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 [illegible]

---

(க) ஸ்ரீராம॥ - யுத்த. கஉகூ - ருரு.

வ்யா|| அவ்வருகு தோற்றுகிற தென்னென்பதென்ன (அப்பூந் தேனலஞ் சோலையப்பாலது) அழகிய பூவையுந் தேனையுமுடைய வழகியசோலை, அது-ஸந்நிவேசம். (எப்பாலைக்கும் சேமத்ததே) எல்லாவவஸ்தைக்குஞ் சேமமுடைத்து.

ஸ்வாபதேசம்.—இத்தால்; ஸம்ஸாரம்த்யாஜ்ய மென்னுமிடத்தையும் பகவத்விஷயம் ப்ராப்ய மென்னுமிடத்தையுமறிந்த இவர்க்கு ப்ராப்தி தசைதாழ்ந்தபடியாலேவந்த ஆற்றாமையைக்கண்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் "ஸம்ஸாரஞ் சென்றற்றதாகில், உகந்தருளினதேசங்களிங்கேயாகில், ப்ராப்திக்குள்ளே யன்றோ நீர்நிற்கிறது" என்றாற்ற வேண்டும்படியிருக்கிறது. உசு

---

அரு|| రాజధానీపితుర్మమ । అయోధ్యాంకురువైదేహి ప్రణామం పునరాగతా -
"ஏஷாஸாத்ருஶ்யதேயோத்யா ராஜதாநீபிதுர்மம | அயோத்யாம் குருவைதேஹிப்ரணாமம்புநராகதா."

[பொன்னே வேனிலஞ் செல்வன் நானிலம்வாய்க்கொண்டு நல்நீரறமென்று கோது கொண்ட சுவைத்துமிழ் பாலை கடந்த - கடந்தோம் - கால்நிலந் தோய்ந்தென்று தொடங்கி எப்பாலைக்குஞ் சேமத்தது] என்றந்வயம். உசு

அப்பு அரும்பதம்.

இருபத்தாறும்பாட்டு.—(நானிலம்)(க)"போக்கெல்லாம்பாலை புணர்தல் நறுங்குறிஞ்சி| ஆக்கஞ்சேர்ந்தூடலணிமருதம்| நோக்குங்கால்இல்லிருக்கை முல்லையிறங்கல் நறு நெய்தல்| சொல்லிருக்குமைம்பாலத்தொகை" என்று சொல்லுகிற ஐந்து நிலமென்றபடி. இதில் நாலையும் என்று-கோதையுமிழ்ந்த நிலம் பாலை நிலம். வேனில்-கிரணம். அஞ்செல்வன் - அழகிய ஆதித்யன். இங்கே ஸூரிகளுக்குத் தொழவாகக் கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (ஸ்நேஹமுள்ள) இத்யாதி. இப்படி ஊரைக்காட்டினாருண்டோ வென்ன, பெருமாள் பிராட்டிக்குக் காட்டினாரென்கிறார் (ஏஷாஸாத்ருஶ்யதே) இத்யாதி. மீண்டு எழுந்தருளும் போது திருவயோத்யையைக் காட்டினாரென்றபடி.

வேறொரு அரும்பதம்.

இருபத்தாறும் பாட்டு.—(நானிலம்) இத்யாதி. கீழே திருந்தாயார் "என்செய்யாதினி" என்று விசாரப்படும்படியான தசைபிறந்தவாறே ப்ராப்ய பூதரான பாகவதராகிற தலைமகன் உகந்தருளின நிலங்களை காட்டித் தேற்றப் பண்ணினபடி இப்பாட்டென்று ஸங்கதியுட்கொண்டு துறை இன்னதென்கிறார் (புணர்ந்து) இத்யாதி. போக்கென்றவநந்தரம் துறை யென்று சேஷம். துறையை விவரிக்கிறார் (புணர்ந்து) இத்யாதி. இத்தால் பாகவதருண்டாயிருக்கச் செய்தே ஸம்ஸார வெக்காயத்தட்டி ரவியாதிருக்குந் தசையிலே அவர்கள் பரமபோக்ய வஸ்து ஸந்நிஹிதமாய் போகஸ்தான மான திவ்ய தேசமும் கண்ணுக்குத் தோற்ற, "இங்கே அநுபவிப்போம்" என்று தேற்றினபடி சொல்லிற்றாயிற்று. குறிஞ்சி நிலத்திலே கூடி பாலை நிலத்திலே

---

(க)

நடந்த பாவையை மருத நிலத்தைக்காட்டித் தேற்றுகிறானென்று அங்யாபதேசத்துக்குக்கருத்து. வேனில் - கிரணங்களையுடையனாய், அம் - அழகிய, செல்வன் - ஸ்ரீமானான வாதித்யன். முல்லை, மருதம், நைதல், குறிஞ்சி, என்று சொல்லப்பட்ட நிலங்களை வாய்க்கொண்டு நீரறமென்று கோதாகக் கொண்டதாய், சுவைத்து- அதிலும் ஸாரமுண்டோவென்று பார்த்து, சக்கையாலே உமிழப்பட்ட நீரும் நிழலுமில்லாத பாலை நிலத்தைக் கடந்த பொன்னே! என்று ஸம்போதிக்கிறபடியை யுட்கொண்டருளிச்செய்கிறார் (ஆதித்யன்) இத்யாதி. "நானிலம்" என்று சொல்லி வேறேபாலையைத் தனித்துச் சொன்னதுக்குக் கவிஸமயத்தைக்காட்டுகிறார் (தமிழர்) இத்யாதி. "பேர்க்கெல்லாம் பாலை புணர்தல் நறுங்குறிஞ்சி ஆர்கஞ் சேர்ந்தூடலணிமருதம்|| நோக்குங்கால்இல்லிருக்கும் முல்லையிரங்கல்நறு நெய்தல்,சொல்லிருக்குமைம்பாலத்தொகை" என்று தமிழர்ஐந்தாகச் சொன்னாரென்கை. இதில், பாலை- நீரும் நிழலுமற்றவிடம். குறிஞ்சி - கூடுமிடம் - மருதம் - குளிர்ந்தநிலம், நெய்தல் - கேழம்பலதுரை - சப்தார்த்தங் காட்டுகிறார் (இதனுடைய) இத்யாதி. "நல்" என்றதினர்த்தம் (ஸத்தையான)என்றது - கூடவருமவளை ஸம்போதிக்க வேணுமோவென்ன அதுக்குபாவம்(உன்னோடு)இத்யாதி. ஆனால் பெண்ணே என்னலாமே என்ன, (அஞ்சாது) இத்யாதி. கிழ்வாச்ய விவரணம் (உண்டென்ன) இத்யாதி. காலானது நிலத்திலே பொருந்தும்படி பண்ணி என்று விவக்ஷித்து அது துஷ்கரமென்னுமதுதோற்ற தாத்பர்யமருளிச்செய்கிறார் (தேவர்கள்) இத்யாதி. "பரமபதம்" என்ற வநந்தரம் ப்லாக்யமென்று சேஷம். அந்த ஸூரிகளுக்கும் நிர்வாஹகனிங்கேவந்து கிடக்குமதெத்தாலே யென்னவருளிச்செய்கிறார் (ஸ்நேஹம்) இத்யாதி. பிராட்டிக்குப் பெருமாள் மீண்டெழுந்தருளும்போது திருவயோத்யையைக் காட்டினாற்போலே யென்கிறார் (ஏஷா)இத்யாதி, "ஹிமோபவனம்" என்றும் "திருத்தண்கா" என்றும் சொல்லப்பட்ட விளக்கொளி யெம்பெருமான் ஸந்நிதியைக்காட்டி "அதென்" என்று கேட்டாளாக வவதாரிகை யருளிச்செய்கிறார் (அவ்வருகு) இத்யாதி. "நலம்" என்றதினர்த்தம் (அழகிய) என்றது. ஸந்நிவேசம் - திருப்பதிகளுடைய சேர்த்தி யென்றபடி. சேமமுடைத்து - க்ஷேமமுண்டாக்குமத்தை யுடைத்தானது. உ௬.

தாத்பர்யம்.—இப்பாசுரத்தில்,கீழ்ஸம்ஸாரஸ்த்திதியாலும் பகவதலாபத்தாலும் அத்யந்தவ்யாகுலசித்தரான ஆழ்வாரை, பாகவதர் திவ்யதேசங்களைக்காட்டித்தேற்றின பாசுரத்தை, நீரும் நிழலுமில்லாத பாலை நிலத்தில் நடந்து இளைத்த நாயகியைக்குறித்து நாயகன் தேற்றுமுக்தியாலே அருளிச்செய்கிறார்.—

லோகோத்தரமான ரூப லாவண்யங்களையுடைய ஓ நாயகி! நீரும் நிழலுமற்று ஸூர்யனுடைய கிரணங்களினால் தபிக்கப்பட்ட கொடிய பூமியான

இப்பாலை நிலத்தை நாம் தாண்டிவந்து விட்டோம். இனிநீ ரமப்படவேண்டாம். இதோ அருகே திருவெஃகா காண்கிறது. அங்கு நித்யஸூரிகளும் ஸ்ரீவைகுண்டத்தில் நின்று மிறங்கிவந்து யதோக்தகாரியை நித்யஸேவை பண்ணுகிறார்கள். அதற்கப்பால் அழகிப்பூத்து ப்ரமஹரமான தோப்புக்களும் காண்கிறதுபாராய் என்கிறாள். (௨௬)

---

சேமம்செங்கோனருளேசெருவாரும்நட்பாகுவரென்று,
ஏமம்பெறவையஞ்சொல்லும்மெய்யே, பண்டெல்லாமறைகூய்
யாமங்கடோறெரிவீசும்நங்கண்ணன்தண்ணந்துழாய்த்
தாமம்புனைய, அவ்வாடையீதோவந்துதண்ணென்றதே. ௨௭.

அர்த்தம்.—பண்டு எல்லாம் - (இதற்கு)முன்பேல்லாம், அறைகூய்-அறை (வீரன் செய்யும் கூச்சல்) இட்டுக்கொண்டு, யாமங்கள்தோறு - யாமங்கள் தோறும், எரி - நெருப்பை, வீசும் - வீசாநின்ற, அவ்வாடை - அந்தவாடைக் காற்றானது, நம் - நம்முடைய, கண்ணன், ஸ்ரீக்ருஷ்ணன் சாத்தியருளிய, தண் - குளிர்ந்த, துழாய் - திருத்துழாயாலே கட்டப்பட்ட, தாமம் - மாலையை, புனைய - அணியவே, ஈதோ - இதோ, வந்து - வந்து, தண்ணென்றது - குளிர்ந்திருக்கிறது. செம் - அழகிய (வருத்த), கோன் - ஸ்வாமியான ஸ்ரிய:பதியினுடைய, அருளே - க்ருபையே, சேமம்-ரக்ஷகம். செருவாரும்-சத்ருக்களும், நட்பாகுவர் - ஸ்நேஹிப்பர்கள், என்று-என்று, ஏமம்பெற-ரக்ஷணமுண்டாம் படியாக, வையம் - உலகத்தாருடைய, சொல்லும்-உக்தியும் - மெய்யே - யதார்த்தமே. ௨௭.

## [பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—இருபத்தேழாம் பாட்டு.—நிருபாதிகசேஷியான ஸர்வேஸ்வரனுடைய க்ருபையே இவ்வாத்மாவுக்கு ரக்ஷை; இவன் கடாக்ஷித்தால் இவ்வருக்குண்டான ப்ரதிபந்தகங்களுந்தானே யநுகூலிக்கும். ராஜகுமாரன் தட்டியிலிருந்தபோது ப்ரதிகூலித்தவர்கள் அபிஷிக்தனானவாறே தாங்களே வந்து அநுஸரிக்குமாபோலேயும். பிராட்டியைத் தர்ஜநபர்த்ஸநங்கள் பண்ணின ஏகாக்ஷி ஏககர்ணிகள் எம்பெருமானுள னென்றறிந்தவாறே அநுகூலித்தாற்போலவும்.-

வ்யா.—(சேமம்செங்கோனருளே) இவ்வாத்மாவுக்கு வகுத்த சேஷியான ஸர்வேஸ்வரனுடையக்ருபையே இதுக்குரக்ஷை. அவனே இதுக்குரக்ஷயாமோபாதி, இவன் தானுந்தனக்கர்த்தாவஹனாயிருக்கும். எங்ஙனேயென்னில்; ஜகத்தையுண்டாக்குகையும், சேதநர்க்குகரணகளேபராதிகளைக் கொடுத்து பக்த்யாத் யுபாயங்களையுண்டாக்கித் திருமலை தொடக்கமாக உகந்தருளின தேசங்களிலே ஸந்நிஹிதனாய் நிற்கச்செய்தேயும் இத்தைக் காற்கடைக்கொண்டு

---

அரு || இருபத்தேழாம் பாட்டு.—(சேமஞ்செங்கோன்) "செங்கோன் - செல்வியகோன். "அருளே" என்கிற அவதாரணத்துக்கு இரண்டு பொருள்.

வ்யா|| தேஹாத்மாபி மாநம்பண்ணும்படியிறே தன்படியிருப்பது. "ममेदम्-மமேதம்" என்று தன்கழுத்திலே தாம்பையிட்டுக்கொள்ளு மளவில் அத்தையறுத்து விழவிடுமவனாயிறே யிருப்பது அவன் படி. இவன்சைதந்யம் தன்னை முடித்துக் கொள்ளுகைக் காயிருக்கும். அவன்சைதந்யம் (க) "உளன் கண்டாய் நன்னெஞ்சே" என்னும்படியே இவ்வளவி லிவனையெடுத்துக் கொள்ளுகைக் காயிருக்கும். தான் தனக்குத்தஞ் சமல்லாத வோபாதிபிறருந் தனக்குத்தஞ் சமன்று. (செங்கோன்) செவ்வியநிர்வாஹகன். (உ) "पतिं विश्वस्य- பதிம்விச்வஸ்ய" (ங) "यस्यास्मि - யஸ்யாஸ்மி" என்று சொல்ல லாம்படியிருக்கும். (அருளே) அவன் க்ருபையல்லதில்லை. (ச) "அவ்வருளல்லனவருளுமல்ல" இடையீடான பக்த்யாதி களும் வேண்டா. (செருவாரும் நட்பாகுவரென்று) சத்ருக்களும் பந்துக் களாவரென்று. சத்ருக்களுமேவுற்றுச்செய்வார்களென்றுமாம். த்யா ஜ்யமும்பகவத் கடாக்ஷத்தாலே உபாயஸஹகாரியாய் ஸ்வயந்த்யாஜ்ய மாயிருக்கும். (ஏமம்பெற) பழமைபெற, ரக்ஷைபெற வென்றுமாம். (வைம்சொல்லும்மெய்யே) லௌகிகமான பழஞ்சொல்லு ஸத்யமா யிருந்தது- "சாவாதிருந்தால் காண்பனசிலவுள" என்னுமாபோலே. (ரு) "कल्याणी - கல்யாணீ" இத்யாதி, பிராட்டி அசோகவநத்திலேயி

அரு|| அதாவது-உன்னுடையக்ருபை யொழியத்தானும் பிறருந்தஞ்சமல்ல வென்னுதல்; இடையீடான பக்த்யாதிகளும் வேண்டாவென்னுதல் "நட்பு" என்று பாந்தவத்தையும் ஸ்நேஹத்தையுஞ் சொல்லும். "பண்டெல்லாமெரி வீசுகிற காற்று இப்போது குளிர்ந்தது" என்றவித்தால் ஸ்வாபதேசம் (த்யா ஜ்யமும்) இத்யாதி. த்யாஜ்யமும் பகவத் கடாக்ஷத்தாலே உபாயஸஹகாரி யாய் ஸ்வயம் த்யாஜ்யமாயிருக்குமென்றது- த்யாஜ்யமான சரீரமும் பகவத் கடாக்ஷத்தாலே ஸாதந தசையில் உபாயஸஹகாரியாய், அநந்தரம் தன்ன டையே விட்டுப்போமென்றபடி. வாடைக்கு ஸ்வாபதேசம்-தேஹம். "செங் கோனருளே சேமம்- இவனருள் பெற்றவாறேவிரோதிகளும் ஸ்நிக்தராவர்" என்கிறலௌகிகோக்தி ஸத்யமென்கையாலே. (க) "अरिर्मित्रम्-அரிர்மித்ரம்"- என்கிறஶ்லோகமேஇவ்விடத்துக்குஉபயுக்தம் என்றுஸித்தவத்கரித்து, அப்படி லௌகி கோக்தி ஸத்யமென்றுசொன்ன பேருண்டோவென்ன (கல்யாணீ) இத் யாதி. அதாவது - "வையஞ்சொல்லும் மெய்யே" என்று பிராட்டியும்சொ ன்னாளென்றபடி. லௌகிகோக்திஸத்யமென்ற மாத்ரத்துக்கே. இஶ்லோகம்ஸ ம்வாதம்- "కల్యాణీబత గాథేయం లౌకికీ ప్రతిభాతి మా। ఏతి జీవన్తమానన్దో నరం వర్షశతాదపి கல்யாணீ பதகாதேயம்லௌகிகீப்ரதிபாதிமா | ஏதிஜீவந்தமாநந்தோநரம்வர்ஷ சதாதபி" ఆనన్దః జీవన్తమ్, ఏతి, ఇతి, లౌకికీ, ఇయమ్, కల్యాణీ, గాథా, మా, ప్రతిభాతి.

(க) முதல்திரு. கக. (உ) தைத்தி-நாராயண-கக.
(ங) யஜுர். அஷ்ட. ங-ப்ர. எ. (ச) திருவாய். க0 - ங.
(ரு) ஸ்ரீராமா. ஸுந்தர-ஙஉ-சு. (சு)

வ்யா||ருந்து "இனிமுடியவமையும்" என்றுநிஶ்சயிப்பது, "பெருமாளை க்காணலாமாகிலிருந்தாலாகாதோ" என்பதாமே அவ்வளவிலே திருவடி சென்று ராமகுணங்களைச் சொல்லி முகங்காட்டினவளவிலே "இங்ஙனேயுமொன்றுஸம்பவிப்பதே!" என்று ஹ்ருஷ்டையாய் "ஒருகாலத்திலே சோகித்தார் முடியாதிருந்தால் ஒருகாலத்திலே ஆநந்திக்கலாம்" என்று சொல்லுவது, இன்று வாடை குளிர்ந்தபடியாலே மெய்யாகக்கண்டோம்.

(பண்டெல்லாம்) சிறைக்கூடத்திலே பிறந்து வளர்ந்தாரைப் போலேஎன்றும் பிரிவேயாய் வாடையின்கையிலே நோவுபட்டபடி. (அறைகூய்) மஹாராஜர் பெருமாளை அண்டைகொண்டு வாலியை அறைகூவினாற்போலே இங்கு வாடைதனி வீரனானபடி. (யாமங்கடோறெரிவீசும்) பாதகத்வத்திலுறைப்பாலே ஸோமுகவ்யாக்ரமென்கிறபடியாலே வேறுபட்டுவருகிறபடி. (வீசும்) தன்மேல் விரஹாக்நிகதுவாமே கடக்க நின்றுவீசினபடி. லௌகிகாக்நிபோலே யன்றிறே நரகாக்நி. அத்தை நேரென்னலாம்படியிறே விரஹாக்நி. (நங்கண்ணன் தண்ணந்துழாய்இத்யாதி) (க) *துயிலமர்ந்தவேந்தின்பாடேநின்றும்ப்ரஸாதம் வந்ததுபோலேகாணும். அழகியதாய் ஶ்ரமஹரமான திருத்துழாய்மாலையை ஸ்பர்சிக்க. ஸர்வாங்கஸம்பந்தமாகக்கலக்கவேண்டா, ஸ்பர்சிக்கவேயமையும். (அவ்வாடை) முகத்தை மாறவைத்துச்சொல்லுகிறாள். முன்பு அப்படி தடிந்து போந்தவாடை. (ஈதோவந்து தண்ணென்றதே) இப்படி வந்து குளிராநின்றது, (ஈதோவந்து தண்ணென்றது வையஞ்செல்லும்மெய்யே. (உஎ)

---

அரு|| ஆநந்தஃ, ஜீவந்தம்- ஏதி-இதிலௌகிகீ-இயம்-கல்யாணீ - காதா - மா - ப்ரதிபாதி-மா - (ஸா) என்றது. மே - (மே) என்றபடி. இந்தஶ்லோகத்துக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பிராட்டி யசோகவநிகை) இத்யாதி. ஆநந்திக்கலாமென்று சொல்லுவதென்றது - சொல்லுகிற பழமொழியையென்றபடி. பண்டுஸம்ஶ்லேஷித்ததுமுண்டாயிருக்க "எல்லாம்" என்னக்கூடுமோ : வென்ன, (சிறைக்கூட்டத்திலே) இத்யாதி. கடக்கநின்று வீசத்தக்கதாக இத்தப்படி க்ரூரமாயிருக்குமோவென்ன (லௌகிக) இத்யாதி. (துயிலமர்ந்தவேந்தின்பாடே நின்றும் ப்ரஸாதம் வந்தது போலே காணும்) என்றது- வெஃகாவிலே கண்வளர்ந்தருளின ராஜாவினுடைய ஸந்நிதியினின்றும் திருத்துழாய் ப்ரஸாதமெதிரேவந்ததுபோலே காணுமென்றபடி. "அவ்வாடை" என்றதுக்கு இரண்டு தாத்பர்யம். முகத்தை மாறவைத்துச்சொல்லுகிறாளென்னுதல்; முன்புபாதகமான அவ்வாடைதானே என்னுதல். [பண்டெல்லாமறை கூய்யாமங்கடோறெரிவீசுமவ்வாடை கண்ணன் தண்ணந்துழாய்த்தாமம் புனைய ஈதோவந்து தண்ணென்றது. ஆகையாலே - சேமஞ்செங்கோனருளே செருவாரும் நட்பாகுவரென்று ஏமம் பெற வையஞ்சொல்லும் மெய்யே] இத்யந்வயஃ. உஎ

---

(க) திருநெடுந்தா. கரு.

## அப்பு அரும்பதம்.

இருபத்தேழாம் பாட்டு.— (சேமம்) வாடை-மாநஸஸம்ஶ்லேஷம். தண்ணென்றது" குளிர்ந்த தென்கையாலே-ஈஶ்வரனநுகூலித்தால் ப்ரதிகூலங்களும் அநுகூலங்களாமென்கிற லோகவார்த்தை மெய்யாகக் கொண்டோமென்று தாத்பர்யம். அவதாரணத்தைப் பற்றவருளிச்செய்கிறார் (அவன் க்ருபை) இத்யாதி. "செங்கோன்" என்கையாலே தானும் பிறரும் ரக்ஷகரல்லரென்கை. "அருள்" என்கையாலே உபாயாந்தரங்கள் ரக்ஷகமல்லவென்கிறார் (இடையீடு) இத்யாதி. இடையீடு - க்ருபையொழிய இவனிடுவிற்சில செய்கிற உபாயாந்தரங்கள். இங்கு சத்ருவென்கிறது — தேஹத்தை. அதுவுமநுகூலமாமோவென்ன அருளிச்செய்கிறார் (த்யாஜ்யமும்) இத்யாதி. தேஹமும் உபாயஸஹகாரியுமாய் ப்ராப்தி தசையில் ஸ்வயம் த்யாஜ்யமுமாயிருக்குமென்றபடி. ஸுகப்ராப்திக்கு ப்ரமாண மொழிய த்ருஷ்டாந்தித்தபேருண்டோவென்ன அருளிச்செய்கிறார் (கல்யாணீ) இத்யாதி. கோமுகவ்யாக்ரம் - பசுத்தோல்போர்த்துப் புலிபாச்சலாய் பாய்கை. கீழ்ப்பாட்டிலே திருவெஃகா ப்ரஸ்துதமாகையாலே திருத்துழாயை தம்முடைய மாநஸத்துக்கு விஷயமாக்க, அத்தாலே ப்ரஸாதம் வந்ததுபோலே என்கிறது. புணைய-ஸ்பர்சிக்க.

(உஎ.)

## வேறொரு அரும்பதம்.

இருபத்தேழாம் பாட்டு.—(சேமம்) இத்யாதி. கீழ்ப்பாட்டிலே பாகவதராகிற நாயகனோடுகூட ஸம்ஸாரமாகிற பாலை நிலத்திலே நடந்து வந்தபோது திருவெஃகாவும் திருத்தண்காவுமான திவ்யதேசங்களைக் காட்டித் தேற்றினவாறே, (க)* வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தாய், சொன்ன வண்ணஞ்செய்யுமவருடைய ப்ரஸாதம் வரப்பெற்று, அம்பூந்தேனிளஞ்சோலை கிட்டினதாகையாலே அங்கு நின்றும் வந்த குளிர்ந்த வாடையைக்கண்டு அந்த நாயகனுக்குத் தெரியச்சொல்லுகிறாளிப்பாட்டிலென்று ஸங்கதியிட்டுக்கொண்டு அவதாரிகை யருளிச்செய்கிறார் (நிருபாதிக) இத்யாதி. தட்டு - சிறை; (போலவும்) அநுகூலிக்குமென்று கீழோடந்வயம். "அருளே" என்றவவதாரணத்துக்கு வ்யாவர்த்யம் மூன்றுவகையாகக் காட்டுகிறார் (அவனே) இத்யாதி, (வேண்டா.) என்னுமளவும். தானும் பிறரும் ஸாதநாந்தரங்களும் வ்யாவர்த்யங்களென்று கருத்து. இவன் சேதநனாயிருக்கக்கழுத்திலே கயிற்றையேறிட்டுக்கொள்வதேயென்ன வருளிச்செய்கிறார் (இவன்) இத்யாதி. இரண்டாவது (தான்) இத்யாதி. மூன்றாவது (பிறர்) இத்யாதி. நட்பாகுவர் - ஸ்நேஹிப்பரென்று சப்தார்த்தமாய், பலிதார்த்தமிரண்டு விதமாக வருளிச்செய்கிறார் (சத்ருக்களும்) இத்யாதி வாக்யத்வயத்தாலே. (உ) "ஆக்கையின் வழியுழல்வேன்" என்னும்படி த்யாஜ்யமான தேஹமநுகூலிக்கும்படியென், அநுகூலமானால், (ங) "மங்கவொட்டு" என்று விடுவிக்கப் பார்த்திருப்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (த்யாஜ்யமான)

---

(க) திருநெடுந்தாண்டகம்-கஙு. (உ) திருவாய் ங - உ - க.

(ங.) திருவாய்மொழி - க0 - எ - க0

இத்யாதி. (க) "சிந்தையாலுஞ் சொல்லாலுஞ் செய்கையினாலும்" என்கிறபடியே அதிகாரபூர்த்தி ஸித்யர்த்தமாக ஸித்தோபாயத்துக் குடலாகை யாலே சொன்னதித்தனை; ஸ்வரூபேண விசாரித்தால் த்யாஜ்யமா மென்று கருத்து. எடுத்த ச்லோகத்துக்கு தாத்பர்ய மருளிச்செய்கிறார் (பிராட்டி) இத்யாதி. "சொல்வது" என்ற வநந்தரம் மெய்யாயிற்று என்று சொன்னாற்போலே என்று சேஷம். மேலுக்கவதாரிகை (இன்று) இத்யாதி. வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தின்பச்சல் நின்றும் திருமாலே ஸ்ரீ சடகோபனை யெதிர்கொண்டு வந்தாற்போலே இருந்ததென்று கீழ்ப்பாட்டோடுண்டான ஸங்கதியை ஸ்மரிப்பித்துக் கொண்டு ஈடுபடுகிறார் (நாயில்) இத்யாதி. இத்தால் "கண்ணன் வெஃகாவுது" என்றவுடனே "இவள் நங்கண்ணன்" என்று சொல்லும்போது இப்படியாகவேணுமென்று கருத்து. புனைதல்-சேர்கையாய் ஸ்பர்சிக்கவென்கை, அவ்வாடை யென்றதுக்குபாவாந்தரம் (முன்பு) இத்யாதி. (உஎ.)

தாத்பர்யம்.— இப்பாசுரத்தில், கீழ்பகவதலாபத்தால் நொந்த பவபயாபிதப்தரான ஆழ்வாரை பாகவதர் திருவெஃகாவையும் திருத்தண் காவையும் காட்டி ஆச்வஸிப்பித்த வளவில் அவற்றில் நெஞ்சூன்றி ஆச்வஸ்தராய் அருளிச்செய்த பாசுரத்தை, பாலைநிலத்தில் நடந்திளைத்த நாயகி மருதநிலத்தை யடைந்து ஸந்தோஷித்துரைத்த பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

நாம் திருவெஃகாவினருகே வந்து, அங்கெழுந்தருளியிருக்கிற கண்ணன் ப்ரஸாதித்தருளின அவன் சாத்திக்களைந்த திருத்துழாய் மாலையைச் சூடின வளவிலே, இதற்குமுன் நம்மேல் தீவீசின வாடையானது இப்போது ஸுககரமாய்க்குளிர்ந்து வீசத்தொடங்கிற்று. தெய்வமநுகூலித்தால் துக்ககரமானவை யெல்லாம் ஸுகஜநகங்களாகுமென்கிற உலகமொழியை இப்போது யதார்த்தமென்று நிச்சயிக்கிறோம். ஆகையால் நமக்கு ஜகத்பதியான ஸ்ரீமந்நாராயணனுடைய அநுக்ரஹமே ரக்ஷகம்; அதன்றிமற்று தேவதாந்தர ஸாதநாந்தரங்கள் ரக்ஷகமாகமாட்டா. (உஎ)

---

தண்ணந்துழாய்வளைகொள்வதுயாமிழப்போம், நடுவே
வண்ணந்துழாவியோர்வாடையுலாவும், வள்வாயலகால்
புண்ணந்துழாமேபொருநீர்த்திருவரங்காவருளாய்
எண்ணந்துழாவுமிடத்து, உளவோபண்டுமின்னன்னவே (உஅ)

அர்த்தம்.—தண் - குளிர்ந்த, அம் - அழகிய. துழாய் - திருத்துழாயானது, வளை வளையை, கொள்வது - அபஹரிப்பது (யுக்தந்தான்.) யாம் - நாம், இழப்போம் - இழப்பதும் யுக்தந்தான் - நடுவே - நடுவில், ஓர் - அத்விதீயமான, வாடை - வாடைக்காற்று, வண்ணம் - மேனியை, துழாவி - அபஹரித்து, உலாவும் - ஸஞ்சரியாநின்றது: புள் - பக்ஷியானது, வள் - வளைந்த, வாய் அலகால் - அலகுபோன்றவாயாலே, நந்து - சங்கத்தை, உழாமே-ஹி

---

(க) திருவாய் - சு - ரு - கக

ம்ஸியாமற்படி, பொரு - சண்டையிடுகிற, நீர் - ஜலத்தையுடைய, திருவரங்கா - ஸ்ரீரங்கத்துக்குஸ்வாமியானவனே! அருளாய் - அருளவேணும், எண்ணம் - மநஸ்ஸு, குழாவுமிடத்து - ஸங்கடப்படுகிறஸமயத்தில், இன்னன்ன இப்படி அருளாதஸ்வபாவம், பண்டும் - முன்னும், உளவோ-உண்டோ? (உஅ)

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—இருபத்தெட்டாம்பாட்டு.—கீழுண்டான மாநஸாநுஸந்தாநம் விஷயவைலக்ஷண்யத்தாலே அவ்வருகே ருசியைப்பிறப்பித்து, ருசியினுடைய அதிசயத்தாலே பாஹ்யஸம்ச்லேஷாபேக்ஷை பிறந்து, நினைத்தபடி பரிமாறப் பெறாமையாலே விச்லேஷமாகத்தலைக்கட்டிற்று. ஸம்ச்லேஷதசையில் அநுகூலித்தபதார்த்தங்களுமிப்போது ப்ரதிகூலிக்கத்தொடங்கிற்று. (க) "[illegible] தஸ்யைவகோபாயயதஃ ப்ரஸாதாயசஜாயதே" என்று யாதொருவிலே நிர்வாஹகனானவன் கோபித்தால், அவன் பரிகாரமு மப்படியே நிற்கும். திருவெஃகாவினின்றும் ப்ரஸாதம்வந்த தென்றபோது வாடையானது குளிர்ந்தது; அதுதானிப்போது சுடத்தொடங்கிற்று. சோறுங்கறியுஞ்சமைந்தபின்பு இடப்பற்றுதாற்போலே திருவெஃகாவினின்றும் ப்ரஸாதம் வந்ததென்ற அநந்தரத்திலே, உள்ளேபுக்கு அணைக்கப்பெறாமையால் வந்தவாற்றாமை.

வ்யா.—(தண்ணந்துழாயித்யாதி) இதில்சேதமில்லை; இது செய்யலாம். திருத்துழாய்க்குந்தனக்கும்பாத்யபாதகஸம்பந்தமுண்டாகையாலே. திருத்துழாயங்குற்றைக்ஸாதாரணபரிகாரமாகையாலும்தனக்குத்திருவடிகளிலேஸம்பந்தமுண்டாகையாலும்பாத்யபாதகபாவஸம்ப

அரு || இருபத்தெட்டாம்பாட்டு.—(தண்ணந்துழாய்) அணையப்பெறாமையால்வந்த ஆற்றாமையாலே முன்பநுகூலமான பதார்த்தங்களெல்லாம் ப்ரதிகூலமாகத்தோற்றிற் றென்றபடி. முன்பநுகூலித்தவைதானே இப்போது ப்ரதிகூலிக்கைக்கடியென்னென்ன, (தஸ்யைவ) இத்யாதி. (க) "[illegible] - தஸ்யைவ ப்ரீதயே பூத்வாபுநர்துக்காயஜாயதே" என்று பூர்வார்த்தம். ஆகையாலே (திருவெஃகாவில் நின்றும்) இத்யாதி. "கீழுண்டான" என்றவாக்யத்தை அந்யாபதேசஸமாதிக்குச் சேரவிவரிக்கிறார் (சோறும்) இத்யாதி. (இதில் சேதமில்லை) என்றது - திருத்துழாய் பாதிக்கிறத்தில் விரோதமில்லை; அது பொறுக்கலாமென்றபடி. பாத்ய பாதக பாவ ஸம்பந்தமுண்டானபடி யென்னென்ன அருளிச்செய்கிறார் (திருத்துழாய் அங்குத்தைக்கு) என்று. கீழ்வாக்யத்தால் பலித்த தாத்பர்யம். (தனக்கு) இத்யாதி. தண்ணந்துழாயானது வளையை அபஹரிக்கிறது, (யாமிழப்போம்) நாங்களும் வளையை யிழக்கக்கடவோம், இதில் விரோத

(க) ஸ்ரீவிஷ்ணுபு.

வ்யா||ந்தம் தனக்குபாதகமாயாகிலுந் திருத்துழாயோடே யொருஸம்பந்தமுண்டாக வமையும்போலேகாணும். ராஜாக்கள் முனிந்தால் அவன்பரிகாரமு மெதிரியாமாபோலே, ஸர்வேச்வரன்நெகிழ்ந்தபடியாலே அவனுடைய அஸாதாரணமான திருத்துழாயும் நலிகிறது. (நடுவே) பாத்யபாதகபாவஸம்பந்தமின்றியிலே யிருக்கநலிகிறதென். விபூதிஸாமாந்யத்தாலே நலிகிறதத்தனை. நாங்கள் குடிமக்களல்லோம்:(நடுவே) ஸ்வரூபப்ரயுக்தமன்று, ஔபாதிகம் என்றுமாம். வாடையைச்சொல்லுகையாலே பூதங்களில் ப்ரதாநத்தை எடுத்து ப்ராக்ருதிக்குபலக்ஷணமாகச்சொல்லிற்று. ப்ராக்ருதி ப்ரவாஹத்தாலே நித்யமாயிருக்க இத்தையுபாதி யென்னும்படி எங்ஙனேயென்னில், அந்தவத்தாகையாலே ஆதிமத்தென்று சொல்லுகிறோம். முகத்திலழுக்கைக்கழுவினால் அவ்வழுக்குப் போனத்தைக்கண்டு வந்தேறியென்று கொள்ளலாகாநின்றது. அழுக்கு இந்நாள் தொடங்கிபற்றிற்று என்றறியவேண்டுவதில்லையென்று. (வண்ணந்துழாவி) வருகிறபோதே கண்ணுற்கண்டாரை விழவிட்டுக்கொண்டு வாராநின்றது. கலந்துபெற்றநிறத்தையழித்துக்கொண்டு வாராநின்றது. (ஓர்வாடை) அத்விதீயம். தனிவீரனென்றுமாம். (உலாவும்) தனக்கெதிரில்லாமையாலே மதமுதிதமானகஜம் பாகனைவிழவிட்டுலாவுமாபோலேவாராநிற்கும். நிராஶ்ரயமாய் நில்லாதென்று இன்னிறம் நிற்குமாஶ்ரயத்தைக் கணிசித்து

---

அரு||மில்லை, ஸஹிக்கலாம்; அவைதான் நலியவேண்டுவானென்னென்ன (ராஜாக்கள்) இத்யாதி. வாடைக்குத்தீயத்வாகார முண்டேயென்ன (விபூதி ஸாமாந்யத்தாலே) என்று. இதுக்குத் தாத்பர்யம் - நாம் அந்தரங்கராகையாலே விபூதி ஸாமாந்யத்தாலே நலியும்படியான ஸாமாந்ய பரிகரமல்லோமென்றபடி. "நடுவே" என்றதுக்கு இரண்டுபொருள். அதாவது - ஒரு ஹேதுவறவென்னுதல், ஔபாதிகமாக வென்னுதல். (ஸ்வரூப) இத்யாதி. ஸ்வாபதேசே அருளிச்செய்கிறார் (வாடையைச் சொல்லுகையாலே) என்று. பூதங்களில் தாரகத்வத்தாலே வாயுப்ரதாநமாயிருக்குமென்றபடி. (கண்ணுற் கண்டாரை விழவிட்டுக்கொண்டு வாராநின்றது) என்றது - சரீரத்திலே தோற்றுகிற காந்தியை யபஹரித்துக்கொண்டு வாராநின்றதென்றபடி. அத்விதீயமான வாடையானது, வண்ணந்துழாவி - நிறத்தை அபஹரித்துக்கொண்டு, உலாவும் - உலாவாநிற்கிறது, என்று சப்தார்த்தம். நிறம் போனால் வரும் சேதமேதென்ன அருளிச்செய்கிறார் (கலந்து பெற்ற) என்று. அதாவது - கலந்து பெற்ற நிறமாகையாலே அத்தைக்கண்டு கொண்டாகிலும் தரிக்கலாம். அதில்லாதபடி அத்தையுமபஹரிக்கிறதென்றபடி. காந்தியானுமாஶ்ரயமின்றிக் கேயிராதென்று பார்த்து ஆஶ்ரயமான

வ்யா||லாவாநின்றது. அஸம்பாதமாக உலாவாநின்றது. இவளுடைய அவஸாதாதிசயத்தைக்கண்ட திருத்தாயார் பெரியபெருமாள் திருவடிகளிலே பொகட்டுக் கூப்பிடுகிறாள், நீயிங்குவந்து கிடக்கிறகிடைக்கும் இவளுடைய அவஸாதத்துக்கு மொருசேர்த்தி கண்டிலோம்.

(வள்வாயித்யாதி) "ஒருஸ்த்ரீகுற்றஞ்செய்தாள்" என்று பட்டருக்குவிண்ணப்பஞ்செய்து 'இவளைஹிம்ஸிக்க வேணும்" என்ன, "புறப்புள்ளஎல்லா வற்றையும் விட்டு இவ்வூரிலிருப்பே உத்தேஸ்யமாயிருக்கிற இவளை எத்தைச்சொல்லி நாம்நலிவது" என்றருளிச்செய்தார். வீரஸுந்தரனோடே எம்பார்விரோதித்திருக்க, அவ்வூரிலுள்ளாரொருவன் "அவனோடேஎதிரியாய்அவனுக்கஞ்சி எம்பார்திருவடிகளிலே வந்துசரணம்புக, ஸ்ரீபாதத்திலேவர்த்திக்கிறவர்கள், "அவனோடு பண்டேவிரோத முண்டாயிருக்கச்செய்தே இவனையுங் கைக்கொள்ளக்கடவதோ" என்ன, "நம்மை 'சரணம்' என்று புகுந்தவனை நாம் கைக்கொண்டால் சரணாகதிதர்மமே யெல்லாரையும் ரக்ஷிக்கவற்று காண்' என்றருளிச்செய்தார். வளைந்தவாயலகையுடைத்தான புள்ளானது, சங்கைஹிம்ஸியாதபடி தன்னுடைய நீர்த்திரையாகிற கையாலே எதிரியோடே பொருது சங்கை ரக்ஷிக்கும்படியான ஊரிலேயிருக்கிறவனே! (பொருநீர்) புள்ளானது ஆமிஷத்தைக்கணிசித்து நீர்க்கரையிலே யிருக்க, சங்கானது "நம்மை ஹிம்ஸிக்கப்போகிறது' என்றறியாதே "என்னைநீர்நோக்கவேணும்" என்று சொல்லாதிருக்க, தன்பக்கலிலே வர்த்திக்கிற வற்றுக்காக அவற்றினுடைய எதிரியானபுள்ளின் முகத்திலே தன்திரையாகிற கையாலேயுத்தம் பண்ணி "உள்ளேபோராய்" என்றுஅதனைப் பிடித்துக்கொண்டுபோகாநின்றது. இத்தால் செய்கிறது - அசேதநமானநீரானது தன்பக்கலிலே வர்த்திக்கிறவற்றை இப்படியே நோக்காநின்றால் பரமசேதநரான தேவரீருக்கு இவள் திறத்தென் செய்யவேண்டா. என்கிறது. சுத்தஸத்வமயமான ஆத்மாவைஜடமானஸம்ஸாரம் நலியாமேநோக்குகைக்கன்றோதேவரீரிங்குவந்து கிடக்கிறது. (திருவரங்கா அருளாய்)

---

அரு||சரீரத்தையு மபஹரிக்கவேணுமென்று லாவாநின்றதென்றபடி. அஸம்பாதமாக - அப்ரதிஹதமாக. "வள்வாயலகால்" இத்யாதிக்கவதாரிகை (இவளுடைய அவஸாத) இத்யாதி. புள் - புள்ளானது, நந்து - சங்கத்தை, வள் - வளைந்திருக்கிற, வாயலகாலே, உழாமே - ஹிம்ஸியாதபடி, பொருநீர்-அந்தப் புள்ளோடே யுத்தம் பண்ணுகிற நீரையுடைத்தான, திருவரங்கா என்று சப்தார்த்தம், கோயிலிலே யிருக்கிறவை வத்யங்களன்றென்றதுக்கு ஸம்வாதமாக ஐதிஹ்யம் (ஒருஸ்த்ரீ குற்றஞ்செய்தாள்) என்று. "நந்து" என்கையாலே (சுத்தஸத்வமயமான வாத்மாவை)என்றது."புள்' என்கையாலே-ஜடமான)

வ்யா|| 'அருளாய்' என்றபோதே அருளக்கண்டிலர் இப்படியருளாதொ
ழிவானென்னென்னில், ஈஶ்வரன், "கரணகளேபராதிகளுமக்குத்தந்
தோமாகில்; பக்த்யாத்யுபாயங்களைக்காட்டினோமாகில்; இதுக்கடியான
ப்ரமாணங்களைக்காட்டினோமாகில், அவற்றையநுஷ்டித்து நம்மை
வந்து கிட்டுகிறீர்" என்று கூறியிருக்க, "ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியான
நீயிவற்றை யெல்லா மிங்ஙனே பண்ணின யத்தனையல்லது வேறு
படப்பண்ணிற்றில்லையே, நானுண்டாயிருக்கக்கிட்டும் படியென்" என்
கிறார். பகவத்விஷயத்திலே இத்தனையவகாடரான இவர் இத்தனையஞ்
சுவானென்னென்னில், பகவத்ப்ரஸாதமடியாகவந்தஜ்ஞானமாகையா
லே த்யாஜ்யபூர்வகமாக ப்ராப்யத்தைக்காட்டிக்கொடுநின்றது; ப்ராப்
யத்திலேருசியும்மிகாநின்றது; ருச்யநுகுணமாகப்ராப்தியளவுஞ்செல்
லாமையாலே அதுக்கடியான விரோதிதர்சநத்தைப்பண்ணியஞ்சுகிறார்
ஸம்ஸாரத்தைப்பார்த்தால்பயப்படவேணும்; ஸர்வேஶ்வரனைப் பார்
த்தால் பயங்கெடவேணும். அவனைப்பார்த்துப்பயங்கெட்டிலனாகில்பக
வத்ப்ரபாவமறிந்திலனாம்; ஸம்ஸாரத்தைப்பார்த்து பயப்பட்டிலனா
கில் ஸம்ஸாரஸ்வபாவ மறிந்திலனாம். ஜ்ஞானகார்யமாவது ஆகா
ரத்ரயமுண்டாகை. ஸம்ஸார மித்யைகாணென்னுதல், ஔபாதிகங்
காணென்னுதல், ஜீவன்முக்திகாணென்று சொல்லும் க்ஷுத்ரவாதிகளு
க்கன்றோ இத்தைநினைத்தால் அஞ்சாதிருக்கலாவது. பகவத்ப்ரபாவ
த்தையுமறிந்து ஸம்ஸாரஸ்வபாவத்தையுமறிந்து ஸம்ஸாரபயபீதனா
யிருப்பானொருவனைப்பெற்றாலன்றோ ஸர்வேஶ்வரனுக்கு (க) "ஸுச:
மாசுச:" என்னலாவது. இப்படி "மாசுச:" என்றாலன்றோ இவ
னுக்கு (உ) "ஸ்திதோஸ்மி" என்னலாவது. (திருவரங்கா) நீயிங்
குவந்து கிடக்கிறது உன்னுடையகர்மபலாநுபவம் பண்ணவோ?
போகபூமிதேடியோ? ஒருகுறைவாளரில்லாமையோ? ருசியுடையா
ரில்லாமையோ? நீயருளாதொழிகிறதென்? (அருளாய்) (ங) "மயர்வற

---

அரு|| என்றது. அருளாய்-அருளவேணும். (வேறு படப்பண்ணிற்றிலையே) என்
றது - ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியாய் ஸ்வதந்த்ரனாகப் பண்ணிற்றில்லையே
என்றபடி. (நானுண்டாயிருக்கக்கிட்டும்படி) என்றது - அஜ்ஞனாய், அசக்த
னாய், அப்ராப்தனான நான், கிட்டும்படி யென்றபடி என்னவுமாம். பயப்
படுகிறதென், பகவத் குணாநுஸந்தாநத்தாலே நிர்ப்பயனாயிருக்கலாகாதோ
வென்ன (ஸம்ஸாரத்தைப்பார்த்தால்) இத்யாதி, இந்த ஆகாரத்ரயமுடை
யவனுக்குண்டான ஸௌகர்யத்தை அருளிச்செய்கிறார் (பகவத்ப்ரபாவத்
தையும்) இத்யாதி. குறைவாளரில்லாமையோ "ஸம்ஸாரத்தில்" இதி
சேஷ:. (ருசியுடையாரில்லாமையோ.) என்றது - இவர்க்குருசி யில்லாமை
யோ என்று தாத்பர்யம். மயர்வற மதிநலமருளினனே யென்ன (மயர்வற)

---

(க) கீதை கஅ - சா - சா　　(உ) கீதை - கஅ - எங.

(ங) திருவாய் - க - க - க

வ்யாபாரங்கலமருளினன்" என்றால் அதின்பலமான (௧)* "யாரானுமடி தொழுதெழப்பண்ண வேண்டாவோ? அறிவுகலங்கினுக்கிப்படி யருளாதொழிகையாகிறியோ? இப்போதுண்டானதத்தனையோ? (உளவோ பண்டுமின்னன்னவே) "ஆர்த்தர்க்குப்பண்டுதவினான்" என்னுமிடம் ப்ரஸித்தமன்றோ? த்ரௌபதிக்கு ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு ஸ்ரீப்ரஹ்லாதனுக்கு ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு காகத்துக்கு. (௨௮)

---

அரு|| இத்யாதி. (எண்ணந்துழாவுமிடத்து) எண்ணமென்று ஹ்ருதயமாய், ஹ்ருதயங்கலங்கி இப்படி துக்கப்படுகிறவர்களிடத்திலே, பண்டும் - பூர்வமும், இன்னன்ன - இப்படி நிர்த்தயமாயிருக்கிற வ்யாபாரங்கள் - உளவோ - உண்டோ - இல்லை யென்றபடி. அறிவுகலங்கி இப்படி யருளா தொழிகை ஆகிறியோ? அன்றே; இப்போதுண்டான தித்தனை யென்றபடி. "பண்டு மின்னன்னவே உளவோ" என்றது - பிரிநிலை ஏகாரமாக்கித் தாத்பர்யம். (ஆர்த்தர்க்கு) இத்யாதி. உதவின விடமுண்டோ வென்ன (த்ரௌபதிக்கு) இத்யாதி.

[தண்ணந்துழாய் வளைகொள்வது யாமிழப்போம் ஓர்வாடை நடுவே வண்ணந்துழாவி யுலாவும் புள் வள்வாயலகால் நந்தையுழாமே பொருநீர் திருவரங்காவருளாய் எண்ணந்துழாவு மிடத்து பண்டு மின்னன்ன உளவோ] இத்யந்வய: (௨௮)

## அப்பு அரும்பதம்.

இருபத்தெட்டாம் பாட்டு.—(தண்ணம்) மேலே வாடையையாதசமாகச் சொல்லுகையாலே "நடுவே" என்று அதுக்கு ப்ராப்தியில்லாமையைப் பற்ற. திருத்துழாய்க்கு ப்ராப்தியுண்டென்னுமத்தை அருளிச்செய்கிறார் (இதிலே சேதமில்லை) இத்யாதி. நடுவே யெள்பர்னென், விபூதித்வேந ஸம்பந்தமுண்டேயென்ன அருளிச்செய்கிறார் (விபூதி) இத்யாதி. நடுவே ஸம்பந்தமில்லாத நீ யென்னுதல், ஔபாதிகமான நீ யென்னுதல். வாயுவுக்கு ப்ராதாந்யம் தாரகத்வேந. கண்ணுற்கண்டது - நிறம். நிறம் பரிஹரித்த பின்பு முலாவவேண்டுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (நிராஸ்ரயம்) இத்யாதி. அஸம்பாதம் - தடையின்றிக்கே. "புள் நந்துழாமே பொருநீர்" என்று புள்ளானது, நந்தை-சங்கத்தை, பாதியாதபடி காவேரி ரக்ஷிக்கிறதென்கை. சரணாகதரை ரக்ஷிக்கவேணு மென்கைக்கு ஸம்வாதமாக ஐதிஹ்யத்வயம் (ஒருஸ்த்ரீ குற்றம்) இத்யாதி. தேசவாஸம் - சரணாகதி. உழாமே - ஹிம்ஸியாமே - வேறுபடப்பண்ணுகை - பக்த்யாத்யுபாயங்களை யநுஷ்டிக்கும்படி சக்தியை யுண்டாக்கிறையில்லை யென்றபடி. நானுண்டாயிருக்க - அஜ்ஞனாய் - அசக்தனாய் ப்ரக்ருதிவஸ்யனான நானுண்டாயிருக்க, எங்ஙனே யநுஷ்டிக்கும்படி யென்கை. அவதாரான - "அவனே உபாயம்" என்றறிந்து தத்ப்ரவணராய், தத்ப்ரபாவத்தை யறிந்தவிவரென்றபடி. "வா

---

௧) திருவாய் - ௧ - ௧ - ௧

டையுலாவும் அருளாய்" என்கையாலே ப்ரக்ருதியை நினைத்தஞ்சினமை தோற்றுகிறது, ஜ்ஞாநகார்ய மிதுவானால் அஜ்ஞாநகார்யமே தென்ன அருளிச்செய்கிறார் (ஸம்ஸாரம்) இத்யாதி. மித்யை - பௌத்தனுக்கு, ஔபாதிகம்-பாஸ்கரனுக்கு, ஜீவந்முக்தி - சங்கரனுக்கு. (அருளாய்) அருளுகிறாயில்லையென்றது கீழ்; இங்கு அருளவேணுமென்கிறார் (மயர்வற) இத்யாதி. எண்ணம் - அறிவு. துழாவுகை - கலங்குகை, இத்தையருளிச்செய்கிறார் (அறிவுகலங்கினார்க்கு) இத்யாதி. இன்னன்னது - இப்படிப்பட்டது. (பண்டுமுளவோ) இல்லையே. என்னைத்தோற்றியன்றோவென்றபடி. (உஅ)

## வேறொரு அரும்பதம்.

இருபத்தெட்டாம் பாட்டு.—(தண்ணம்) இத்யாதி. கீழ்கூடவந்த பாகவதரோடே திருத்துழாய் ப்ரஸாதம் பெற்றத்தாலே வாடை தண்ணென்றதென்று களித்த நாயகி "வண்ணந் துழாவியோர்வாடையுலாவும்" என்று பாதகமாக வருஸங்கதிக்கைக்கு ஸங்கதியருளிச்செய்கிறார் (கீழ்) இத்யாதி. (அவ்வருகே) "என்றது-அனைக்கவேணும் வினைவேணும்" என்றாற்போலேயாய் பரிமாற்றத்திலே என்கை. அநுகூலித்ததே ப்ரதிகூலிக்குமென்னு மதுக்குத்ருஷ்டாந்தம் (ததேவ) இத்யாதி, கர்மாநுகுணமாக ஒன்றுதானே கோபப்ரஸாதங்கள் பொருட்டானாற்போலே நானு மவன் ப்ரஸாதத்துக்கு இலக்காய் கோபத்துக்கு இலக்கானபடியாலே அவன் பரிகரமான வாடையு மப்படியாயிற்று என்றிவ்வாக்யத்துக்கு தாத்பர்யம். "நிற்கும்" என்றவநந்தரம் யாதோரளவிலே ப்ரஸாதம் பண்ணினால் அவன் பரிகரமுமப்படியே ப்ரஸாதத்தைப்பண்ணநிற்கும் என்று கூட்டிக்கொள்வது. கர்மாநுகுணமான ப்ரஸாதா ப்ரஸாதங்களுள்ள விடத்திலே அங்ஙனே யாகிலும், நிர்ஹேதுகமாக அநுக்ரஹித்தவன் ப்ரஸாதம் பண்ணி மீண்டு பண்ணுதொழிவனோ இப்படியாகைக்கென்ன அருளிச்செய்கிறார் (திருவெஃகா) இத்யாதிவாக்யத்தாலே. "ஆற்றாமை" என்றவநந்தரம்,இப்படியாக்கிற்றுஎன்று சேஷம். இவர்க்கிப்படி தோற்றிற்றித்தனை,அவன் கோபித்ததில்லை யென்று கருத்து. உள்ளே புகணைக்கை முதலானவை கிடையாமையாலே தம் தோளிலணிட்ட மாலையும் பாதகமாய்த் தோற்றுவது உசிதமென்று சொல்லிக்கொண்டு, வாடைபாதகமானது அநுசிதமென்று நோவுபடுகிறாரென்று தாத்பர்ய முட்கொண்டு ஹார்த்தபாவ மருளிச்செய்கிறார் ( இதில் ) இத்யாதி. ஈடுபாடு (தனக்கு) இத்யாதி. இட்டதோளில்மாலை பாதகமானால் கழித்துப்பொகடலாமே யென்ன, அப்படியாகிலும் அத்தைவிட மாட்டாளென்று கருத்து. வாடைதான் அவன்பரிகரமன்றோவென்ன "ஆம்" என்று அத்தையுட்கொண்டருளிச்செய்கிறார் ( விபூதி ) இத்யாதி. குடிமக்களெல்லாம் - நாட்டில் குடித்தனம் பண்ணுகிறவர்களெல்லோம்; அந்தஃபுரமென்றபடி. ஔபாதிகம் - ஆகந்துகமென்றபடி. "அந்தவத்தெல்லா மாதிமத்து" என்னக்கண்டதெங்ஙனே

யென்ன (முகத்தில்) இத்யாதி. கலந்து-மாநஸ ஸம்ச்லேஷம் பிறந்தவளவாக உலாவிறு லிவளுக்கென்னென்ன, நிறத்தை அழித்தபின் புலாவுகைக்கு ப்ரயோஜநத்தை அருளிச்செய்கிறார் (நிராஸ்ரய) இத்யாதி. தாத்பர்யாந்தரம் (அஸம்பாதம்) இத்யாதி. தடையற்றுத்திரிகிற தென்றபடி. “ஓர் வாடையுலாவும்” என்று சொல்லி நாயகி மோஹித்துக் கிடக்கத் திருத்தாயாரானவள் திருவரங்கத்திலே கொண்டுபோய் (க) உண்ணிலாவியில் சொர்ந்தவளை, (உ) கங்குலும் பகலில் கொடுபோய்க்கூப்பிட்டவோபாதி கூப்பிட்டாளாக அவதாரிகை அருளிச்செய்கிறார் (இவள்) இத்யாதி. திருத்தாயாருடைய உட்கருத்தை அருளிச்செய்கிறார் (நீ) இத்யாதி. புள்ளானது வளைந்தவாய்-அலகுபோன்றவாயாலே, நந்து-சங்கை, உழாமே- நலியாதபடி, பொராகிற்கிற நீரையுடைய திருவரங்கத்தையுடையவனே என்று சப்தார்த்தமாய், அத்தால் இவ்வூரிலுள்ளார்க்கு சரணாகதரக்ஷணம் பண்ணவேணு மென்றதுக்கு இரண்டைதிஹ்ய மருளிச்செய்கிறார் (ஒரு ஸ்த்ரீ) இத்யாதி. இந்த சப்தார்த்தம் தோற்ற வருளிச்செய்கிறார் (வளைந்த) இத்யாதி. இப்படி விசேஷித்ததுக்கு ஸ்வாபதேசம் (சுத்தஸத்வ) இத்யாதி. அருளாதேபோனீரென்று சப்தார்த்தமாய், இன்னாப்புத்தோன்ற ஸ்வாபதேசத்திலே தாத்பர்யமருளிச்செய்கிறார் (அருளாய்) இத்யாதி. (ங) “இமையோர்தலைவா மெய்ந்நின்று கேட்டருளாய்” என்று ப்ரார்த்தித்தபோதே செய்யக்காணாமையாலே இன்னாதாகிறாரென்று தாத்பர்யம். “கண்டிலர்” என்ற வநந்தரம், இன்னாதாகிறாரென்று சேஷம். உக்தார்த்தத்தை சங்காபரிஹாரமுகேந விவரிக்கிறார் (இப்படி) இத்யாதி. “செழுநீர்த்தடம்” என்கிற பாட்டுத் தொடங்கி பெண்ணுடை யுடுத்தபடியால் பலித்த பாரதந்த்ர்யஸ்வரூபத்தை நினைத்து (வேறுபடப்பண்ணிற்றில்லையே) என்றது. இத்தால் (ஆறு கவைத்தாயில்லையே-ஸ்வரூபஞ் ஞாநத்தை நன்றாகப் பிறப்பியாதே, ஜ்ஞாநசக்திகளையுங்கொடுத்து விடாதே போனீரித்தனையிறே யென்கை. நானுண்டாயிருக்க - என் ஸ்வரூப முண்டாயிருக்க, கட்டும்படி - உபாயாந்தரங்களை என்கழுத்திலே கட்டும்படி. (ச) “நபிபேதி குதஶ்சந - நபி பேதி குதஶ்சந” என்றிருக்க வேண்டியிருக்க, இன்னாதாம்படி அஞ்சுவானென்னென்று சங்கித்துப் பரிஹரிக்கிறார் (பகவத்) இத்யாதி வாக்ய சதுஷ்டயத்தாலே. விரோதி தர்சநத்தைப் பண்ணி அஞ்சுகிறதாகில் “நபி பேதிகுதச்சந” என்றதுக்கு வழியென்னென்னவருளிச்செய்கிறார் (ஸம்ஸாரத்தை) இத்யாதி வாக்ய ஷட்கத்தாலே. இப்படி பயாபயங்களிரண்டுமே மாறி மாறி வருமாகிலினி இவன் மார்விலே கைவைத்துறங்கவிரகில்லையே, கலங்கி ஸாதநாந்தரபராய்ப் போகாரோ வென்னவருளிச்செய்கிறார் (பகவத்) இத்யாதி. “ஸ்திதோஸ்மி” என்றது - (ரு) “சிற்றவேண்டா” என்கிறபடியே உபாயாந்தரங்களில் போகாதே நிலை நின்றதைச் சொல்

(க) திருவாய் - எ - க
(உ) திருவாய் - எ - உ
(ங) திருவிருத்தம் - க
(ச) தைத்திரீயம் - ஆநந்த
(ரு) திருவாய் - கூ - க - எ

லுகிறது. கீழெல்லா மின்னுப்பாகச்சொல்லி "அருளவேணும்" என்றுப்ரார்த்திக்கிறதுக்குத் தாத்பர்யாந்தர மருளிச்செய்கிறார் (மயர்வற) இத்யாதி. "எண்ணம்" இத்யாதிக்குபாவம், (அறிவு) இத்யாதி. எண்ண மானது-மனமானது, துழாவுமிடத்து-கலங்குமிடத்து, இன்னன்னவே - இப்படியருளாதிருக்குமவை, பண்டு முளவோ-இல்லையே யென்று சப்தார்த்தமாய் அத்தையருளிச்செய்கிறார் (ஆர்த்தருக்கு) இத்யாதி. (உஅ)

தாத்பர்யம்.—இப்பாசுரத்தில், கீழ்திருவெஃகாவிலெம்பெருமானுடைய ப்ரஸாதமானதிருத்துழாயை மாநஸமாக அநுபவித்து பாஹ்ய கரணங்களினாலே தழுவிக்கொள்ள யத்நிக்கும்போது அது கிடையாமையாலே அவஸந்நராய், அவன் விபூதியான பதார்த்த தர்சநாதிகளினால் நொந்துரைத்த பாசுரத்தை, ஸர்வேஶ்வரனாகிற நாயகனைக்குறித்துரைத்த நாயகியின் பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

உன்னுடைய ப்ரஸாதமான திருத்துழாயானது என்னைநலிந்து என்கையில் வளையைக்கழலப்பண்ணிற்று. அதப்படியிருக்க, வழிபோக்கனான வாயுவுங்கூட அந்தஃபுரமஹிஷியான என்னுடைய நிறத்தையுமழித்து என்னையும் முடிக்கத் தொடங்கிற்று. தன்கர்ப்பத்தையடைந்த மத்ஸ்யாதிகளை, மாம்ஸ பக்ஷணத்திற்காகவந்த கொக்கின் கையிலகப்படாமல் காத்த நீரையுடைய திருக்காவேரிசூழ்ந்த அரங்கமாநகரிலெழுந்தருளியிருக்கிற ஓஸ்வாமீ! உன்னைச்சேர்ந்தவைகளிப்படி யார்த்தரக்ஷணத்தில் தீக்ஷிதங்களாயிருக்க, நீயும் முன் த்ரௌபதீ கஜேந்த்ராத்யாபந்நரை ரக்ஷித்திருக்க, இப்போது துக்கார்த்தையான என்விஷயத்தில் க்ருபைசெய்யாமலிருக்கிறாய். இது இப்போது எனக்காகக்கொண்ட நவீநவ்ரதமாயிருக்கிறது. (உஅ)

---

இன்னன்னதூதெம்மையாளற்றப்பட்டிரந்தாளிவளென்று,
அன்னன்னசொல்லாப்பெடையொடும்போய்வரும், நீலமுண்ட
மின்னன்னமேனிப்பெருமானுலகிற்பெண்தூதுசெல்லா-
அன்னன்னநீர்மைகொலோ,குடிச்சீர்மையிலன்னங்களே.(உ௯)

அர்த்தம்.—குடி-குடிப்பிறப்பால்வந்த,சீர்மை,குணம்,இல்-இல்லாத,அன்னங்களே-ஓஹம்ஸங்களே! இவள்-இந்தப்பெண், ஆளற்றப்பட்டு-வேறு ஆளில்லாமையினால்,எம்மை-நம்மை,இன்னன்ன-இப்படிப்பட்ட, தூது- தூதாகவேணுமென்று, இரந்தாள்-யாசித்தாள், என்று என்றெண்ணி, அன்னன்ன-அப்படிப்பட்டவார்த்தைகளை, சொல்லா-சொல்லாதே, பெடையொடும்- பேடையுடன்,போய்வரும்-போய்வருகிறீகோள், நீலம்-நீலமேகத்தை,உண்ட-விழுங்கின, மின்னன்ன-மின்னோடொத்த, மேனி-திருமேனியையுடைய, பெருமான்-ஸர்வேஶ்வரனுடைய, உலகில்-லோகமான பரமபதத்தில், பெண்தூது-பெண் அனுப்பியதூது, செல்லா-கார்யகரமாகாது, (என்று),அன்னன்ன-அப்படிப்பட்ட,நீர்மைகொலோ-ஸ்யபாவத்தை உடைத்தாயிருக்கிறீர்களோ? (உ௯.

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—இருபத்தொன்பதாம்பாட்டு - "பொருநீர்த்திருவரங்கா வருளாய்" என்றவிடத்தில் "அருளுகிறேன்" என்னுதல் "அருளேன்" என்னுதல் சொல்லாதே பேசாதேயிருந்தபடியாலே வார்த்தை சொல்லுமிடத்திலே சிலவன்னங்களைத் தூதுவிடுகிறாள்.

வ்யா.—(இன்னன்னதூது) இப்படிப்பட்டதூது. தரித்திருந்துவிடுகிறதன்று, போகத்துக்கு விடுகிறதன்று, ஸத்தா தாரகமாக விடுகிறதூது-(க) "గతేహిం హరిశార్దూలపురం గమనాయతు। ప్రాణానామపి సందేహో మమ స్యాన్నాత్ర సంశయః-கதேஹிஹரிசார்தூல புராகமநாயது'ப்ராணாநாமபிஸந்தேஹோ மமஸ்யாந்நாத்ர ஸம்சய:" என்றுபிராட்டி திருவடிக்குத்தன் தசையை யருளிச்செய்தாற்போலே. (எம்மை) நானிருக்கிறபடியே அமைந்துகிடீரிருக்கிறது, தூதுபோவார்க்கு. ஒருஜந்த்ர வ்யாகரணபண்டிதனைத் தூதுபோக விடுமிடத்தே உங்களைப்போக விடும்படியான தசைகிடீர். (ஆளற்றப்பட்டு) ஆளறுதிப்பட்டு. உபய விபூதிநாதனுங்கூட ஆள்விடவிருக்குமவளிறே. மிதிலாமண்டலமும் ஶ்ரீகோஸலவளநாடுங் குறைவறுத்தாலும் பின்னையுங்குறை கிடந்ததுக்கொருமூலையிலே பத்துக்கோடிபேர் பிணையுண்ணும்படிக்கிடா

அரு || இருபத்தொன்பதாம் பாட்டு.—(இன்னன்ன தூது) "சொல்லாதே பேசாதே" என்றத்விருக்தியில் தாத்பர்யமில்லை-(வார்த்தை சொல்லுமிடத்திலே) என்றது - அர்ச்சைவார்த்தை சொல்லாமையாலே வார்த்தை சொல்லுகிற பரமபதத்திலே தூது விடுகிறாளென்றபடி. இன்னன்ன தூது- இப்படிப்பட்ட தூது. அதாவது - ஸத்தாதாரகமாக விடுகிறதூதென்றபடி. (ஸத்தாதாரகமாக விடுகிறது) என்றதுக்கு ஸம்வாதமாக அருளிச்செய்கிறார் (கதேஹி) என்று [ గతేహిం హరిశార్దూలపురం గమనాయతు" கதேஹிஹரிசார்தூலபுராகமநாயது] "గతే సతి మమ ప్రాణానామపి సందేహః అత్ర సంశయో నాస్తి கதேஸதிமமப்ராணாநாமபிஸந்தேஹ: அத்ரஸம்சயோநாஸ்தி", இத்தால் "ப்ராணாநாமபி" என்கையாலே, ப்ராணனை சேஷித்தது; அதுபோகாமே நான் தரித்திருக்கைக்குத் தூது போய்வா வென்றபடி. (ஸத்தாதாரகமாக விடுகிற தூது) என்ற வாக்யத்திலே விவக்ஷிதமான வர்த்தத்தை அருளிச்செய்கிறார் (நானிருக்கிறபடியே) என்று. (நானிருக்கிறபடியே யமைந்துகிடீரிருக்கிறது தூதுபோவார்க்கு) என்றது-என்னுடைய வஸ்தையைப் பார்த்தே போகவேணும்; அதுக்கு மேலே இரக்கிறேனென்றபடி. ஆளற்றப்பட்டு-தூது போகைக் காளில்லாமையாலே. (மிதிலாமண்டலமும் ஶ்ரீகோஸலவளநாடும் குறைவறுத்தாலும் பின்னையுங் குறைகிடந்ததுக்கு மூலையிலே பத்துக்கோடி பேர் பிணையுண்ணும்படிக்கிடாகப்பரிகரமுடையவளிறே) என்றது-ஜநகனுடைய தேசத்திலுள்ளாரும் சக்ரவர்த்திதேசத்திலுள்ளாரு மிவள் கார்யங்குறையச்

(க) ஶ்ரீராமா - ஸுந்தர. ௩௯. ௨௨.

வ்யா||கப்பரிகாமுடையவளிறேஇப்போது ஆளறுதிப்பட்டேனென்கிருள். (இரங்தாள்) அவன்தான செய்யக்கடவதை இவள்செய்தபடி. அத்தலையிட்டு விடக்கடவதன்றிறே இவள்தான் விடுகிறது. (இவள்) (க) "அப்ரமேயம்ஹிதத்தேஜ:-அப்ரமேயம்ஹீதத்தேஜஃ" என்னுமிவள்கிடீர் (அன்னன்னசொல்லா) அப்படிப்பட்டவை சொல்லா. நான் சொல்லிவிட்டவற்றைச் சொல்லி, தானும் வேண்டும் வார்த்தையிட்டுக்கொண்டு சொல்லுகிறதுமில்லை. "ஓலைபாதி-தூதுபாதி" என்று சொல்லுமது பொய்யாயிருந்தபடி. நிரபேக்ஷராயிருப்பார் ஸாபேக்ஷர்காரியஞ்செய்து தாங்கள் நிரபேக்ஷராயிருக்கவேண்டாவோ? (பெடையொடும்போய்வரும்) போம்போது அநுபாவ்யகுணங்களை யநுஸந்தித்துக்கொடுபோம்; வரும்போது அநுபூதகுணங்களை யநுஸந்தித்துக்கொடுவரும். அடிமைசெய்வார் மிதுநமாயிருந்திறே யடிமைசெய்வது. ஸ்ரீ ஸேநாபதியாழ்வார் ஸ்ரீஸுத்ரவதியாரோடே, பெரியதிருவடி ஸுகீர்த்தியோடே, அத்ரிபகவான் அநஸூயையோடே, (உ) "பாதேயம் புண்டரீகாக்ஷ நாமஸங்கீர்த்தநாம்ருதம்- பாதேயம் புண்டரீகாக்ஷ நாம ஸங்கீர்த்தநாம்ருதம்".

---

அரு||செய்யுமிடத்திலிவர்களால்செய்துதலைக்கட்டப்போகாததுக்குப் பிணையும் அநந்தபரிகரத்தையுடையவளென்றபடி. ஜநககுலஸுந்தரி யாகையாலே மிதிலாமண்டலத்துக்கும், ராமமஹிஷியாகையாலே கோஸலவளநாட்டுக்கும் நிர்வாஹகையாய், தாஞனவாகாரத்தாலே அநந்த பரிகரத்தை யுடையவளென்றபடி. விவரணம் (அத்தலையிட்டு) இத்யாதி. (அத்தலையிட்டு விடக்கடவதன்றிறே) என்றது - அவன் விடக்கடவதன்றிறே என்றபடி. (தானும் வேண்டும் வார்த்தையிட்டுக்கொண்டு சொல்லுகிறது மில்லை) என்றது - அர்த்தாத்ஸித்தம். (அன்னன்ன சொல்லா) என்றது. அப்படிப்பட்ட வார்த்தைகளைச்சொல்லாதே என்றபடி. (ஓலை பாதி தூது பாதி யென்று சொல்லுமது பொய்யா யிருந்தபடி.) என்றது - தூதுபோமவர்கள் ஓலையிலே எழுதினத்தைப் பற்றவும் தாங்கள் போஷித்துச் சொல்லுவர்கள்; அப்படிசொல்லுகிறது மில்லாதே போயிற்றென்றபடி. (பெடையொடும்) என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிரபேக்ஷராய்) இத்யாதி. பெடையொடும் போய்வரும் ஸ்வாபிமதவிஷயத்தோடே கூடகத்யாகதி பண்ணித்திரியுமென்று சப்தார்த்தம். பெடையொடும் போய்வருமென்றதுக்கு ஸ்வாபதேசம் (போம்போது அநுபாவ்ய) இத்யாதி. இத்தால்-மிதுநமாயிருந்தது போகார்த்தமன்று, பரஸ்பரம் குணாநுபவகைங்கர்யங்கள் பண்ணுகைக்கா யிருக்குமென்றபடி. பெடையோடே போகவேணுமோ வென்ன (ஸ்ரீஸேநாபதியாழ்வார்) இத்யாதி. அப்படிபோம்போதும் வரும்போதும் குணாநுபவமேதாரகமா யிருக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (பாதேயம்) என்று. (நீலதோயத

---

(க) ஸ்ரீராமா - ஆரண்ய - கூஎ - கச. (உ)

வ்யா॥ (நீலமுண்டமின்னன்ன) அக்குள்ளார்க்கு ஸர்வஸ்வதானம் பண்ணும்வடிவு. (க) "நீலதோயதமத்யஸ்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா"-நீலதோயதமத்யஸ்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா" பிரிந்தபோது (உ) "மின்னிலங்கு திருவுரு" என்னும்படியாய், கலந்தபோது (ங) "கருமுகிலொப்பர்" என்னும்படியாயிறே யிருப்பது. (பெண்தூது செல்லா) அங்கு ஆண்தூதோ செல்லுவது, அபலைகள் தூது செல்லாதோ? அபலைகள் தூது அங்குச்செல்லாதென்றிருந்திகோளோ? அபலையாயிருந்து வைத்துத் தூது விடுவாளென்று இருந்திர்களோ? உங்கள்பாடும் அவன்பாடுங் குற்றமென்; என்குற்றத்தாலேயிறே. (அன்னன்ன நீர்மைகொலோ) அப்படிப்பட்ட ஸ்வபாவங்களோ? (குடிச்சீர்மையிலன்னங்களே) உங்கள்பாடுகுற்றமுண்டோ? அவனொருகுடியிற் பிறவாதானொருவனுகையாலே கேட்டிலன். (நீலமுண்டமின்னன்ன மேனிப்பெருமான்) பிறர்க்காக உடம்பு படைத்திருக்குமவனன்றோ? நீங்கள் குடிப்பிறவாதாராகையாலே சொல்லிற்றிலிகோளென்றும்.

ஸ்வாபதேசம்.—பகவத்விஸ்லேஷத்திலிவருடைய வாற்றாமையிருந்தபடி. ப்ராப்திக்கு ஸஹகாரிகளாயிருந்தவர்களையுங் கூட இன்னாதாக வேண்டும்படியான தசையைச்சொல்லுகிறது. (உகூ)

அரு||மத்யஸ்தா ) என்றதினுடைய அர்த்தத்வயத்தையுங் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் (பிரிந்தபோது மின்னிலங்கு ) என்று. "நீலதோயதః மத்யஸ்தః யஸ்யாஸ்ஸா நீலதோயதமத்யஸ்தாః" என்றபோது சிவப்பு விஞ்சியிருக்கும். "நீலதோயதஸ்யமத்யே திஷ்டதீதி நீலதோயதமத்யஸ்தா" என்றபோது கறுப்புவிஞ்சியிருக்கும். ஆகையாலே "மின்னிலங்கு திருவுரு" என்றும் "கருமுகிலொப்பர்" என்றுமருளிச்செய்கிறார்(ஆண்தூதோ செல்லுவது, அபலைதூது செல்லாதோ) என்றது-புருஷனுக்குத்தூது போகலாமொழிய ஸ்த்ரீநிமித்தமாகத் தூது போகலாகாதோ வென்றபடி. (உங்கள் பாடு மவன்பாடுங் குற்றமென் ? என்குற்றத்தாலேயிறே) என்றது - உங்களுக்கும் தோஷமில்லை,அவனுக்கும்தோஷமில்லை, ஸ்த்ரீயாய்ப்பிறந்த வென் தோஷமென்றபடி. "குடிச்சீர்மையிலன்னங்கள்" என்றதுக்கு இரண்டுபொருள். அதாவது-அது குடிபிறப்பால் வந்தசீர்மையை யுடைத்தான அன்னங்களொன்றுதல்; இந்த வர்த்தத்தில் உங்களுக்கு தோஷமில்லை,அவன் குடிப்பிறவாதானொருவனுகையாலே கேட்டிலனென்றபடி. இரண்டாவதை அருளிச்செய்கிறார் (நீங்கள்குடிப்பிறவாதாராகையாலே சொல்லிற்றிலிகோள்)என்று. இந்த வர்த்தத்தில்,ஈஸ்வரனுக்குக் குற்றமில்லை,உங்கள் குற்றமென்று கருத்து. "அங்கு ஆண்தூதோசெல்லுவது"என்றுதொடங்கி யருளிச்செய்ததெல்லாம்தாத்பர்யார்த்தம். சப்தார்த்தமாவது-பெண்தூது செல்லா அன்னன்ன நீர்மைகொலோ - பெண் பிறந்தார் தூது செல்லக்கடவோமல்லோமென்கிற ஸ்வபாவத்தை யுடையனவாயிருக்கிறனவோ என்று.

(க)நாராயணம். (உ)திருநெடுந்தா - உரு.
(ங)திருநெடுந்தா - உச.

அரு||[குடிச்சீர்மையி லன்னங்களே இவளாளற்றப்பட்டு எம்மைஇன்னன்ன தூது இரந்தாளென்று அன்னன்ன சொல்லாதே பெடையொடும் போய் வரும். ஆகையாலே - மின்னன்னமேனிப் பெருமானுலகில் பெண்தூது செல்லாவன்னன்ன நீர்மைகொலோ] என்றந்வயம். (௨௯)

## அப்பு அரும்பதம்.

இருபத்தொன்பதாம்பாட்டு.—(இன்னன்ன) ஸத்தைக்காக விட்டவிடமுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (கதே) இத்யாதி. பிணையுண்கை - கைங்கர்யத்திலே அவஸரப்ரதீக்ஷராயிருக்கை. இவள் -அவனுக்கும் தேஜஸ்கரையானவிவள். "பெடையொடும்" என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (நிரபேக்ஷர்) இத்யாதி. (போய்வரும்) சொல்லுகிறதில்லை. கூடிப்போக வேண்டுவாளென்னென்ன அருளிச்செய்கிறார் (அடிமை) இத்யாதி. போம்போது மவன் குணங்களே தாரகமென்று அருளிச்செய்கிறார் (பாதேயம்) இத்யாதி. "நீலதோயதமத்யஸ்தா - நீலதோயதமத்யஸ்தா" "நீலதோயதமத்யஸ்தா யஸ்யாஸ்ஸா - நீலதோயதமத்யஸதசயஸ்யாஸ்ஸா" என்றும்- நீலதோயதமத்யேதிஷ்டதீதி நீலதோயதமத்யஸ்தா - நீலதோயதமத்யேதிஷ்டதீதி நீலதோயதமத்யஸ்த்தா" என்றுஞ் சொல்லுகிற வ்யுத்பத்தி த்வயத்தையும் பற்றவருளிச்செய்கிறார் (பிரிந்தபோது) இத்யாதி - பெண்தூதுசெல்லா-செல்லாது- கார்யகரமாகாதென்றிருந்திகோளோ? பெண்ணுக்குத் தூதுசெல்லத்தகாதென்றிருந்திகோளோ? அவன் தூதுவிடுகை யொழியப் பெண்தூதுவிடவொண்ணாதென்றிருந்திகோளோ? என்று மூன்றுவிதமாக்கி யருளிச்செய்கிறார் (அங்கு ஆண்) இத்யாதி. குடிச்சீர்மையிலே-குடிஸ்வபாவத்தை யுடையராகையாலே யென்னுதல்; குடிஸ்வபாவமில்லாமையாலே யென்னுதல். பெருமானுலகு - பரமபதம். அன்னம்கொண்டாடுகைக்கு விஷயமானபோது மூர்த்தினது. அவன் கொண்டாடுகைக்கு விஷயமானபோது இரண்டாவது. இத்தை யருளிச்செய்கிறார் (நீலமுண்ட) இத்யாதி.

[இவள் ஆளற்றப்பட்டு எம்மை யின்னன்ன தூதிரந்தாளென்று அன்னன்னசொல்லாதே பெடையொடும் போய்வரும். அன்னங்களே செல்லா அன்னன்ன நீர்மைகொலோ சொல்லாதே யிருக்கிறது] என்றந்வயம். (௨௯)

## வேறொரு அரும்பதம்.

இருபத்தொன்பதாம்பாட்டு.—(இன்னன்ன) இத்யாதி. சொன்ன வண்ணஞ்செய்தவரே பேசாதிருந்தார், இனிநாம் பேசுகையாவதென்னென்று பெரியபெருமாள் திருத்தாயார்க்கு மறுமாற்றஞ் சொல்லாமை யாலே, (க) "ஹம்ஸ- கோஸி" என்றுகேட்கு மவனிருக்கும் பரமபதத்திலே அன்னங்களைத்தானே தூது விடுகிறாளென்று "உலகில்" என்றபதத்தில் நோக்காக வருளிச்செய்கிறார் (பொருநீர்) இத்யாதி, "பேசாதே" என்றது - வெறுமனே என்றபடி. (இப்படிப்பட்டது) என்றத்தைவ்யாவர்த்ய பூர்வகமாக

(க)

விவரிக்கிறார் (தரித்து) இத்யாதி வாக்யத்வயத்தாலே - இளையபெருமாளும் மஹாராஜரும் கூடவிருந்த படியாலே, (க) "[illegible]-கிஷ் கார்யம்ஸீதயாமம" என்றவர், விட்ட தூதையும், (உ) "அலற்றுவன் தழுவுவன்" என்றுரைசைப்பட்டுக் கிடையாதே (௩) அஞ்சிறைய மடநாரையில் விட்ட தூதையும் வ்யாவர்த்திக்கபடி. ஸத்தாதாரகமாகத் தூதுவிட்டபேருண்டோவென்ன (கதே) இத்யாதி. "எம்மை" என்றதுக்கு-அஜ்ஞர்களுமாய், அசக்தர்களுமா யிருந்த நம்மை யென்று. அன்னங்களுஞ்சொல்லிக்கொண்டு, அதுக்கிப்படிப்பட்ட நாமும் தூது போய்க் கார்யஞ்செய்ய வேண்டிற்று இவள் தசையென்று தாத்பர்ய மருளிச்செய்கிறார் (நான்) இத்யாதி. "போவார்க்கு" என்று சொன்ன வசநம் என்று சொல்லும்படியாவதே இவள் தசையென்று கூட்டிக்கொள்வது. விவரணம் (ஒரு) இத்யாதி. "கிடீர்" என்ற வசநம், என் தசையென்று நம்மை யிரக்கும்படியாவதே என்னும் பாவத்தாலே எம்மையென்கிறதென்று கூட்டுவது. பிணையுண்ணும்படி - கைங்கர்யத்துக்கு அவஸரப்ரதீக்ஷராயிருக்கும்படி. "சொல்லா" என்றது - சொல்லாதே என்று தாத்பர்ய மருளிச்செய்கிறார் (நான்) இத்யாதி வாக்யத்வயத்தாலே. "பெடையொடும்" என்றதுக்குபாவம் (நிரபேக்ஷர்) இத்யாதி. பரார்த்தமாகில் பெடையோடே போவானென்னென்ன (அடிமை) இத்யாதி. "போம்போது அநுபாவ்யகுணாநுஸந்தாநத்தாலே போம்" என்றதுக்குப்ரமாணம் (பாதேயம்) இத்யாதி. நீலம்-நீலதோயதத்தை, உண்ட-விழுங்கின, மின்னுக்கு, அன்ன-ஸத்ருசமான, மேனியென்றும், நீலமேகத்தாலே யுண்ணப்பட்ட மின்னென்றும் சப்தார்த்தமாய், இப்படியிருக்கு மென்றதுக்குப்ரமாணம் (நீலதோயத) இத்யாதி. "నీలతోయదమధ్యస్థో యస్యాస్సా-நீலதோயதோமத்யஸ்த்தோயஸ்யாஸ்ஸா" என்றும் "నీలతోయదస్యమధ్యస్థా - நீலதோயதஸ்யமத்யஸ்த்தா" என்றும் விவக்ஷிதம், மின்ஸ்தாநமான ஆபரணத்தை ப்ரதாநமாகச்சொல்லுவானென், திருமேனிப்புகரை ப்ரதாநமாகச் சொல்லவொண்ணாதோ வென்றும், நீலத்தை ப்ரதாநமாகச்சொல்லுவானென்னென்றும்வருகிற சங்கையிலே அருளிச்செய்கிறார் (பிரிந்த) இத்யாதி. இத்தால் தன்னைப்பிரிந்து அடியிட்டவருகுபோகிறபோது ஆபரணங்களைப்புகரமுட்டாக்கிட்டிருக்கும்படி கண்டவளாகையாலே அதுவேநெஞ்சில் கிடந்து அத்தையிட்டு விசேஷித்து அவனை வெறுக்கிறாளென்றும், வருகிறபோது கிட்டவந்து கலந்ததிருமேனிப்புகர் நெஞ்சிலிருக்கையாலே அவனிடத்திலே குற்றமில்லையென்று அன்னங்களை வெறுக்கிறாளென்றும் தாத்பர்யம் சொல்லிற்றாயிற்று. "அன்னன்ன நீர்மைகொலோ" என்று ஸம்சயித்ததுக்கு அநேககோடி தோற்ற வேண்டுகையாலே அவன்மேல் குற்றமோ? உங்கள்மேல் குற்றமோ? என்மேல் குற்றமோ? என்று த்ரிவிதமாக ஸம்சயகோடிகளைக்காட்டி "பெண்" என்ற பதத்தாலே பலிதமான ஸ்வகததோஷத்திலே குற்றமெ

---

(க) ஸ்ரீராமா - யுத்த - ௯க - ௬ (உ) திருவாய் - க - ௩ - ௪0.
(௩) திருவாய் - க - ௪.

ன்று நிர்ணயம் பிறக்கும்படி கருத்தருளிச்செய்கிறார் (அங்கு) இத்யாதி வாக்யங்களாலே. இப்பக்ஷத்திலே "குடிச்சீர்மையில்" என்றதுக்கு குடிச்சீர்மை யுடையவன்னங்களென்று சப்தார்த்தங்கண்டு கொள்வது. குடிச்சீர்மை யில்லையாகையாலே என்று சப்தார்த்தமாய், அதுதானுமவனுக்கில்லாமை யாலே யென்றும் உங்களுக்கில்லாமையாலே என்று மிரண்டு விதமாக. மூந்தினது அவனிடத்திலே குற்றமென்று நிர்ணயம் பிறந்ததாக, இரண்டாம் தாத்பர்யம்(உங்கள்) இத்யாதி. என்னிடத்திலு மவனிடத்திலும் குற்றமில்லை, உங்களிடத்திலே குற்றமென்று நிர்ணயம் பிறக்கும்படிமூன்றும்தாத்பர்யமருளிச் செய்கிறார் (நீலமுண்ட) இத்யாதி. இப்போது நீலமானது உண்ட மின் என்று சப்தார்த்தமாய், அவன் கிட்டவரும் ஸ்வபாவ னென்று கருத்து-மூன்றும் தாத்பர்யாநுகுணமாக ஸ்வாபதேசம் (பகவத்) இத்யாதி. (௨௯)

தாத்பர்யம்,—இப்பாசுரத்தில்,கீழ்நாயகியின்தசையைத்திருத்தாயார்திருவரங்களிடம் சென்றறிவிக்கிலும் அங்கொரு ப்ரத்யுத்தரம் கிடையாமையைக்கண்டு, அர்ச்சாவதாரமாகையால் இவர்வார்த்தை சொல்லவில்லை, இனிநம்தசையைப் பரமபத நாதனுக்கறிவிப்போமென்று அங்குகண்ட ஹம்ஸபக்ஷிகளைத்தூதுவிட, அவைகள் போய் சொல்லாமல் தங்கள் கார்யத்திலாஸக்தங்களாயிருப்பதைகண்டு அவற்றை வெறுக்கிறாள்.

ஓ ஹம்ஸங்களே! நான் அந்தக்ருஷ்ணனுடைய விரஹத்தினால் மிகவும் நொந்து, இனிஅவன்முகத்தில் விழித்தாகிலும் சிறிதுநாள்பிழைப்போமென்று பார்த்து உங்களைவிடவேறொருவரில்லாமையால் உங்களை அவனிடம் தூது போகச்சொன்னேன். என்தசையைப்பார்த்து நான்சொல்லுவதற்குமுன்னமே சென்று அவன் ஹ்ருதயத்திற்படும்படி சொல்லவேண்டியிருக்க, நான்சொன்னபின்புங்கூடச்சென்றறியாமல்தன்ஸ்த்ரீகளுடன்போவது வருவதாய்ஸஞ்சரித்திருக்கிறீர்கள்.நீலமேகத்தில்மின்னினாற்போல் அத்யுஜ்வலமானதிருவாபரணங்களையுடைய நீலமேக ஶ்யாமனாய் பரமபோக்யனான அந்தப்ரியபதி எழுந்தருளியிருக்குமிடத்திற்கு நீங்களே ஸ்வயம்ப்ரயோஜநமாகப்போகவேண்டியிருக்க அப்படி ஆதாகப்போகாமைக்குக்காரணமென்ன வென்றுபார்த்தால், ஒருபெண்ணுக்காகத்தூது போகத்தகாதென்று நீங்கள்நினைத்ததாகத் தோற்றுகிறது. நீங்கள் மஹாகுலத்திற் பிறவாமையால் அவ்வளவு பெருந்தன்மை உங்களுக்கு இல்லாமற் போய்விட்டது. ௨௯.

---

அன்னஞ் செல்வீரும் வண்டானஞ்செல்வீருந்தொழுதிரந்தேன்,
முன்னஞ் செல்வீர்கள் மறவேல்மினோ, கண்ணன் வைகுந்தனோ
டென்னெஞ்சினாரைக் கண்டாலென்னைச் சொல்லியவரிடைநீர்
இன்னஞ்செல்லீரோ, இதுவோதகவென்றிசைமின்களே. (௩௦)

அர்த்தம்—அன்னம் செல்வீரும் - ஹம்ஸங்களாய்ப் போவாரையும், வண்டானம் செல்வீரும்-குருகுகளாய்ப் போவாரையும்,தொழுது- ஆஶ்ரயித்து, இரந்தேன் - யாசித்தேன், முன்னம்-முன்னடியாக,செல்வீர்கள் - போகிற நீங்கள், மறவேல்மினோ-மறவாதே கொள்ளுங்கோள்.கண்ணன்- ஸுலபனாய், வைகுந்தனோடு-பரமபதத்திலெழுந்தருளியிருக்கிறஸர்வேஶ்வரனோடு, (கூட ஸஞ்சரிக்கிற), என்னெஞ்சினாரை- என்மனஸ்ஸை,கண்டால், பார்த்தால், என்னை - (இத்தசையையடைந்த) என்னை, சொல்லி-அறிவித்து, அவரிடை- அந்த ஆழ்வாராகிற நாயகியிடம், இன்னம் - இன்னமும், செல்லீரோ-போகமாட்டீர்களோ? இதுவோதகவு - இதுவா (உம்முடைய) ஸ்வபாவம், என்று இசைமின்கள் - என்று சொல்லுங்கோள். ௩௰.

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—முப்பதாம் பாட்டு :—சிலரைத் தூது போகவிட்டால் அவர்கள் வருமளவுஞ்செல்ல வாறியிருந்து சூது சதுரங்கம் பொருது போதுபோக்கும் விஷயமல்லாமையாலே கண்ணால் கண்டாரையெல்லாம் போகவிடுகிறாள். (௧) "యాం కపీనాం సహస్రాణి సుబహూన్యయుతాని చ। దిక్షు సర్వాసు మార్గన్తే సేయమాసాదితా మయా- யாம்கபீநாம் ஸஹஸ்ராணி ஸுபஹூந்யயுதாநிச | திக்ஷு ஸர்வாஸு மார்க்கந்தே ஸேயமாஸாதிதாமயா" என்று முதலிகளெல்லாருங்கூட புஜித்தாலும் புஜித்து முடியவொண்ணாத ப்ரீதியிலே தனியேயகப்பட்டேன் என்று. முதலிகளெல்லாருங்கூட மதுவநத்திலே புகுந்தபோது ததிமுகப்ரப்ருதிகள் நலிய, (௨) "అహం వాప్యయిష్యామి యుష్మాకం పరిపన్థినః - அஹம் வாரயிஷ்யாமி யுஷ்மாகம்பரிபந்திந:" என்று உங்களுக்கு விரோதியானவர்களை நான் போக்குகிறேன்; நீங்கள் அமுது செய்யுங்கோள் என்ன, இப்படி மதுவநமழிந்தபடியை மஹாராஜர்கேட்டு "இது வெறுமனாகமாட்டாது, பிராட்டியைக்கண்டார்கள்" என்று நிஶ்சயித்து, அப்போதவருக்குண்டான ப்ரீதிப்ரகர்ஷத்தாலே வாலானது வளர்ந்து ருஶ்யமூகபர்வதத்திலே சென்றணைந்தது. "அம்மதுவநமென்றாகில் ராஜபுத்ரர்கள் முதுகோடேபோம்" என்று பட்டர்.

அரு || முப்பதாம் பாட்டு.—(அன்னஞ் செல்வீர் அநேகம் பேரைத் தூதுவிடுகிறதற்கு ஸம்வாதம் (யாம்கபீநாம்) இத்யாதி. "ஸேயமாஸாதிதாமயா" என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (முதலிகளெல்லாருங்கூட புஜித்தாலும்) என்று. அதாவது - தேடிவந்த எல்லாருமாகப் பிராட்டியைக்கண்டு அந்த ப்ரீதியை யநுபவிக்க வேண்டியிருக்க பிராட்டியைக்கண்ட ப்ரீதியிலே தனியேயகப்பட்டேனென்றிருக்கிறவன் ; அநந்தரம் முதலிகளெல்லாரோடுங்கூட மதுவநத்திலே புகுந்த ஹர்ஷத்துச்குப் போக்கு விட்டிருந்தானென்றபடி. இதெல்லாம் ப்ராஸங்கிகமாக வருளிச் செய்தாரத்தனை.

(௧) ஸ்ரீராமா, ஸுந்தர. ௩௰-௨. (௨) ஸ்ரீராமா, ஸுந்தர. ௬௨-௨.

வ்யா.— ( அன்னஞ்செல்வீரும் வண்டானஞ் செல்வீரும் ) அன்னமாய்ச்செல்வீரும் வண்டானமாய்ச் செல்வீரும். (தொழுதிரந்தேன்) ஐந்த்ரவ்யாகரண பண்டிதன் ஸ்வதஸ்ஸர்வஜ்ஞன் போகக்கடவத்தை உங்களை இரவாநின்றேனென்தசை. உத்யோகமும்மிகையென்றிருக்குமளவுக்கு அவ்வருகுஞ் சொன்னபடி. கிடாம்பியாச்சானோடே நம்பி திருவழுதி நாடுதாஸரும் மற்றும் நம்முதலிகளுமிருந்து (௧)అన్యత్పూర్ణాత్ -அந்யத்பூர்ணாத்" என்கிற ஶ்லோகத்தைக் கேளாநிற்க "அந்யத்" என்கிறது-ஒருகாலமையுமென்கிறதோ? என்ன, "அரைக்காலமையும்" என்று கிடாம்பியாச்சான் நியமித்தான். (௨) కృతాపరాధస్య హి తే నాన్యత్పశ్యామ్యహం క్షమమ్ । అన్తరేణాఞ్జలిం బద్ధ్వా లక్ష్మణస్య ప్రసాదనాత్ - க்ருதாபராதஸ்யஹிதே நாந்யத்பச்யாம்யஹம்க்ஷமம்| அந்தரேணாஞ்ஜலிம் பத்வா லக்ஷ்மணஸ்யப்ரஸாதநாத்." தீரக்கழியவபராதம் பண்ணினவுமக்கு இளையபெருமாள் ப்ரஸாதிக்கும்போது ஓரஞ்சலி சேராமற்போகாதென்று திருவடி மஹாராஜர்க்குச் சொன்னாற்போலே "அஞ்சலிக்கவ்வருகில்லை" என்றிருக்க இரப்பதுஞ் செய்தேன். தொழுகையுமிரக்கையுந் தன்னதேயாயிருந்தபடி. (௩) " ఉవాచచ - உவாசச. (முன்னஞ் செல்வீர்கள் மறவே

அரு|| "அன்னஞ்செல்வீரும் வண்டானஞ் செல்வீரும்" என்ற பதத்தையுங் கூட்டித் தாத்பர்யம் ( ஐந்த்ரவ்யாகரண ) இத்யாதி. ஸ்வதஸ்ஸர்வஜ்ஞன் - க்ருஷ்ணன். (உத்யோகம் மிகையென்றிருக்குமளவுக்கவ்வருகுஞ் சொன்னபடி) என்றது. தொழக்கடவோமென்ற உத்யோகமும் மிகையாயிருக்க, தொழுகையுஞ் செய்து—இரப்பதுஞ்செய்தேனென்றபடி. "உத்யோகமாத்ரமே யமையும்" என்றதுக்கு ஸம்வாதமாக அருளிச்செய்கிறார் (கிடாம்பியாச்சான்) என்று. இது பாகவத விஷயத்திலும் ஸமாநம். ஒருகாலமையுமென்றதோ வென்ன அரைக்காலமையு மென்றது - ஒருகால் பண்ணினால் போருமென்று சொல்லுகிறதோ வென்ன ஒருகால்தானும் பண்ணவேண்டா; உத்யோக மாத்ரமே யமையுமென்று அருளிச்செய்தாரென்றபடி, (தொழுகையு மிரக்கையுந் தன்னதேயாயிருந்தபடி) என்றது - தொழுவானுமிரப்பானு மவனாயிருக்கத் தன்னதா யிருந்ததென்றபடி. "இரப்புத் தான் மிகையாயிருக்கும்" என்றதுக்கு ஸம்வாதமாக அருளிச்செய்கிறார் (உவாசச) என்று. விபீஷணாழ்வான் வந்ததேயன்றிக்கே "உவாசச" என்கையாலே பெருமாள் திருவுள்ளத்திலே "உவாச" என்றதும் மிகையாயிருந்ததென்றபடி. "ఆజగామ ముహూర్తేన యత్ర రామస్సలక్ష్మణః । ఉవాచచ మహాప్రాజ్ఞస్స్వరేణ మహతా మహాన్ - ஆஜகாமமுஹூர்த்தேந யத்ர ராமஸ்ஸலக்ஷ்

(௧) பார, உத்யோ-௮௯-௧௭. (௨) ஸ்ரீராமா-கிஷ்கி. ௩௨-௧௭.
(௩) ஸ்ரீராமா, யுத்த. ௧௭-௧௧.

வ்யா|| ஸ்மினோ) முற்படப்போமவர்கள் மறவாதே கொள்ளுங்கோ ளென்கிறாள். அங்கே புக்கவாறே. (க) "అహమన్నమ్ - அஹமந்நம்" என்று மறவாதேகொள்ளுங்கோள். அவன் வருகையிலுண்டான த்வரையாலே மறவாதே யென்றால் மறவாதொழிவர்களோ வென்னில், (தொழுதிரந்தேன் மறவேல்மினோ) என்று உருக்கிவிடுகிறாள். "பிரியேன், பிரியில் தரியேன்" என்றவர்போய் மறந்தார். (உ) [பேதை] பிரிவிலும்கலவியிலேயும் ஒருவகையோவென்றிருக்கும் பருவம். [நின்னை] உன்னைப் பிரிகைக்குச் சேதநனன்றோ நான். "பிரியேன்" என்றபோதே - பிரிந்தானாயிருக்கிறது காணுமிவளுக்கு, என்றேய வென்னில், பிரிவைப்ரஸங்கித்தபோதே பிரிந்தானுமத்தனையிறே. அவரைத் தொடர்ந்துபோன நெஞ்சும் மறந்தது; முன்னம் போவார்க்கெல்லாம் மறப்பேயோ உள்ளதென்றிருக்கிறாள். அவரங்குத்தைக்குப் பரிவராய் அலைந்த பரியட்டமுந் தாமுமாய்த் திரிகிறாரிறே. (ங) "నిశామతిష్ఠత్పరితోస్య కేవలామ్ - நிசாமதிஷ்டத்பரிதோஸ்ய கேவலாம்" என்று பெருமாள் ஸ்ரீகுஹப்பெருமாள் பரிஸரத்தே கண்வளர்ந்தருளுகிற விடத்திலே, ஜங்கமமான மதிள்போலே கையும் வில்லுமாய் இளையபெருமாள் திரிகிறபடியைக் கண்டு ஸ்ரீகுஹப்பெருமாள் (ச) "ఇయం తాత సుఖా శయ్యా త్వదర్థ ముపకల్పితా - இயந்தாதஸுகா சய்யா த்வதர்த்த முபகல்பிதா" என்று உமக்குத்தகுதியாம்படி பெருமாள் திருவடிகளிலே தளிரமேல படுக்கை படுத்தேன் கண்வளரீரென்ன, (ரு) [కథం దాశరథౌ భూమౌ శయానే - கத

அரு||மணே: | உவாசசமஹாப்ராஜ்ஞஸ் ஸ்வரேணமஹதாமஹாந்" (அஹமந்நம்) என்றது. "అహమన్నాదః - அஹமந்நாத:" என்னு மளவுக்கும் தாத்பர்யமாய் அவனை யநுபவித்து மறவாதே கொள்ளுங்கோளென்றபடி. (அஹமந்நம்) என்றது - சாடு. (அவன் வருகையிலுண்டான த்வரையாலே) என்றது—அவன் வரவேணுமென்கிற அபிநிவேசத்தாலே யென்றபடி. அப்படி முன்னே போனவர்களிவ்விடத்தை மறந்தாரோ வென்ன, ஈஸ்வரனுமவனைத் தொடர்ந்துபோன நெஞ்சும் மறந்த தென்கிறார் (பிரியேன் பிரியிற் றரியேன் என்றவர்போய் மறந்தார்) என்று. அப்படி சொன்னாரோவென்ன அருளிச்செய்கிறார் (பேதை நின்னை) என்று. ஆக மறக்கைக்குஹேது அவன் வைலக்ஷண்யத்தாலும் தேசஸ்வபாவத்தாலு மென்று ஹேதுவிரண்டாயிற்று. முந்தினது (அங்கேபுக்கவாறே) இத்யாதி. இரண்டாவது (பிரியேன் பிரியிற்றரியேன்) இத்யாதிகள். "நெஞ்சினார்" என்று. ரேபாந்த ப்ரயோகத்துக்குத் தாத்பர்யம் (அவரங்குத்தைக்கு) என்றது. ஆராலு மவரை ஒருகால் கண்டால் பரிவராயிருப்பரென்று அருளிச்செய்கிறார் (நிசாமதிஷ்

(க) தைத்தரீயம்.
(உ) திருமொழி. ௯ ௩ ௩.
(ங) ஸ்ரீராமா-அயோ. ௮௭-௨௨.
(ச) ஸ்ரீராமா, அயோ. ௫௧-௨.
(ரு) ஸ்ரீராமா. அயோ. ௫௧-௯.

வ்யா|| ந்தாசரதௌபூமௌசயாநே' ] என்று அறுபதினாயிரம் ஸம்வத்ஸரம்மலடுநின்றுபெற்ற பிள்ளை ஸுகுமாரமானவடிவைக்கொண்டு தரைக்கிடைகிடக்கக்கண்ணுறங்குமோ? [ சயாநேஸஹஸீதயா - சயாநேஸஹஸீதயா ] இவர் வஸிஷ்டசிஷ்யராகையாலே இக்கிடைகிடக்கவும் பொறுக்கும். படிகடந்து புறப்பட்டறியாத செல்வப் பெண்பிள்ளைதரைக்கிடைகிடப்பதே ; [ ... - சக்யாநித்ராமயால ப்தும் ] என்கண்தன்னில் நித்ரை குடிபுகுகிறதில்லைகாணும். (க) " ... - யத்ரலக்ஷ்மண: " என்று ஒருதம்பியன்றோ தொடர்ந்து போர்தானும் ; இளையபெருமாளையுங்கூட அசிர்ந்து இவரிட்ட வடிவிலே யிட்டு ஸ்ரீகுஹப்பெருமாள் திரியாநிற்க, (க) ... - அதந்த்ரி பிர்ஜ்ஞாதி பிராத்த கார்முகை: " என்று இவர் தம்மையுங்கூட அசிர்த்துக்கொண்டு இங்குள்ளாரடையக்காத்தபடி.

(கண்ணனித்யாதி) நெஞ்சு க்ருஷ்ணன்மாயையையநுஸந்தித்தவழியாலே பரமபதத்தேறப்போயிற்று. (என்னெஞ்சினார்) பண்டுபோலன்றியிலே அவனாலே கொண்டாடப்பட்டவாறே சொல்லுகிறாள். அவர்தானித்தலையை யழிக்க நினைத்தாராகையாலே ப்ரதாந பரிகரமான நெஞ்சைப் படையறுத்துக்கொள்கைக்காகக் கொண்டாடாநிற்குமிறே. (கண்டால்) காண்கை தானரிதாயிருந்தபடி. அவரைக்காணலாம். இவரைக் காணவரிதிறே. கண்டால் நாவிலும் பல்லிலும் நீரின்றியேயிருந்து "என்செய்கிறாள்" என்று தாமாகவினவுமவரன்றிறே. (என்னைச்சொல்லி) "இன்னாளை யறிகையில்லையோ " என்று சொல்லி. (௨) "... - அப்ரமேயம் ஹிதத்தேஜ: " என்னுமவள் கிடரிப்படி சொல்லுகிறாள். (அவரிடை) அன்றுபாடோடிக்கிடந்த கிடையறிந்தீரே ? (நீர்) " இப்போதே கொண்டுவருகிறேன் " என்று கண்ணுங்கண்ணநீருமாய்ப் போகும்படி யறிவீரே. (இன்னஞ் செல்லீரோ) தூது

---

அரு|| டத்பரிதஃ)என்று. நித்ரைகுடிபுகுகிறதில்லை காணு மென்றருளிச்செய்த இளையபெருமாளையு மதிசங்கைபண்ணி நோக்கினபடியை,அருளிச்செய்கிறார் (யத்ர லக்ஷ்மண:) என்று, " கண்ணன் வைகுந்தன் " என்கையாலே க்ருஷ்ணனுடைய ஆஶ்சர்ய குணசேஷ்டிதங்களை யநுஸரித்தது. அநந்தரம் பரத்வத்திலே மநஸ்ஸு ப்ரவணமாயிற்றென்றபடி. "என்னைச்சொல்லி" என்றதுக்கவதாரிகை (கண்டால் நாவிலும்) என்று. " நீரின்றியேயிருந்து " என்றது —நெஞ்சுக்கு விசேஷணம். வ்யாக்யாதாவினீடுபாடு. (அப்ரமேயம்) இத்யாதி. அவரிடை - அந்த நாயகியிடத்தில். இன்னஞ்செல்லீரோ - இன்னம் போகீரோ. " இன்னம் " என்றதுக்கு இரண்டு தாத்பர்யம், அதாவது-

---

(க) ஸ்ரீராமா-அயோ. அஎ-உ௫.          (௨) ஸ்ரீராமா-ஆர. ௯௭-௪அ.

வ்யா|| போந்த உமக்குத் தூதுவந்தபின்பும் போகிறீரோ? (௧) "நகால ஸ்த்ர வை ப்ரபு: - நகாலஸ்தத்ரவைப்ரபு:" என்றிருந்தீரோ? அவ்விடங் காலக்ருத பரிணாமமுள்ள தேசமென்று அறிந்திலீரோ? பகலுமிரவுமாயிருக்குங்காணு மங்கு; அது தன்னிலும் (௨) ஒருபகலாயிரமூழியா யன்றோ செல்லுகிறது. (இதுவோதகவு) ப்ராணயித்வமில்லையாகிலும் மாந்ருசம்ஸ்யம்வேணுமே? (௩) "ஆந்ருசம்ஸ்யம் பரோ தர்ம ஸ்த்வத்த ஏவமயா ச்ருத: - ஆந்ருசம்ஸ்யம்பரோதர்ம ஸ்த்வத்த ஏவமயாச்ருத:" (இசைமின்களே) மனிச்சடித்துச்சொல்லாதே போராதே சொல்லி யவன் ஸ்வரூபத்தை யழித்தே போருங்கோளென்கிறாள். அழிக்கையாவது - ஓராண்பிள்ளையாய்ச் சொல்லுகிற தல்ல, ஒரு பெண்டாட்டியாய்ச் சொல்லுகிற தல்ல; உன்னை எத்தைச்சொல்லுவதென்கையிறே மகஸ்ஸுக்கானபோது; அவனுக்கானபோது சொல்லுகைதானே மிகை. (௩௰)

---

அரு|| உமக்குத் தூதுவந்தபின்பு மென்னுதல். அதிக்ரமித்தகாலம் போராதோ? இன்னம் போகிறீரோவென்னுதல். அப்படி காலமதிக்ரமித்ததோ வென்ன அருளிச்செய்கிறார் (நகாலஸ்தத்ரவைப்ரபு:) என்று. "அன்னஞ்செல்வீரும்" என்று தொடங்கி "அவரிடை நீரின்னஞ் செல்லீரோ" என்று மகஸ்ஸைக்குறித்துச் சொல்லி; அத்தைவிட்டு "இதுவோதகவு" என்று ஈச்வரனோடே சொல்லுங்கோளென்று சொல்லுகிறாளாதல் இந்த வர்த்தத்திலே அருளிச்செய்கிறார் (ப்ரணயித்வமில்லை யாகிலும்) என்று. "இன்னஞ் செல்லீரோ - இதுவோதகவு என்றிசைமின்கள்" என்று மகஸ்ஸோடே சொல்லுங்கோ ளென்று சொல்லுகிறாளாதல். மகஸ்ஸு நபும்ஸகலிங்க மாகையைக் கொண்டு (ஓராண்பிள்ளையாய்) இத்யாதி. இந்த பக்ஷத்தில் "தகவு" என்று ஸ்வபாவமாய் ஸ்த்ரீ பும் விலக்ஷணமான நபும்ஸகத்வமுமக்கு ஸ்வபாவமானபின் பெத்தைச் சொல்லுவதென்றபடி. குணவ்யஸநியாகையாலே சொல்லுகை தான் மிகை யென்றபடி. "நியமஸ்ய ப்ரவ்ருத்தஸ்ய ... மஹத்ஸு ... - நியமப்ரவ்ருத்த"

---

(௧) பார-மோக்ஷ. உ௫-௩.                (௨) திருவாய். ௬௦-௩ ௧.

(௩) ஸ்ரீராமா-ஸுந்தர. ௩அ-௪௧.

அரு|| டேது தலாங்குளித்ரவாந் சரைஸ்ஸூர்ணு விஷூதீ:பரந்தப: । மஹத் தநுஸ்ஸஜ்ஜமுபோஹ்ய லக்ஷ்மணோ நிசாமதிஷ்டத்பரி தோஸ்ய கேவலாம்" "கேவலாம்" என்றது. ராத்ரியெல்லா மென்றபடி. "తత స్త్వహంచో త్తమబాణచాపధృత్ స్థితో ऽభవం స్తత్రసయత్రలక్ష్మణః । అతన్ద్రిభిర్జ్ఞాతిభిరాత్తకార్ముకై ర్మహేన్ద్రకల్పం పరిపాలయం స్తదా-ததஸ்த்வஹஞ் சோத்தமபாணசாப த்ருத்ஸ்திதோ பவம்ஸ்தத் ரஸபத்ரலக்ஷ்மண:। அதந்த்ரிபிர்ஜ்ஞாதிபிராத்தகார் முகைர் மஹேந்த்ரகல்பம்பரிபாலயம்ஸதா" "கதம்தாசரதௌ பூமௌ சயாநே ஸஹஸீதயா, சக்யா நித்ராமயாலப்தும் ஜீவிதம் வாஸுகாநிவா" (௩௰)

[அப்பு அரும்பதம்.]

முப்பதாம்பாட்டு.—(அன்னம்) இப்படிகண்ணுறக்கண்டதெல்லாம் தூது விட்ட விடமுண்டோ வென்ன அதுக்கு ப்ரமாணங் காட்டாநின்று கொண்டு "மயாஸேயமாஸாதிதா" என்கிற பதங்களை யுட்கொண்டு மதுவந மழிந்ததுக்குத் தாத்பர்ய மருளிச் செய்கிறார், (யாம்கடீநாம்) இத்யாதி. வண்டானம் - குருகு. வண்டானம், கொய்யடிநாரை யென்று அதிலே ஒருநாரை விசேஷம். ஸர்வஜ்ஞன் - க்ருஷ்ணன். இவர்கள் போனவிடத்தே அசேதநங்களை விடும்படியாயிற்று என் தசையென்றபடி. (அவ்வருகு) உத்யோகத்துக்குமேல். தொழுகையு மிரக்கையு மதிகமென்றபடி. (உத்யோகம் போரும்) என்றதுக்கு ஸம்வாத மருளிச்செய்கிறார் (கிடாம் பியாச்சான்) இத்யாதி. அரைக்கால் - உத்யோகமாத்ரம். தொழுகை அதிக மென்றதுக்கு ஸம்வாதமாக வருளிச்செய்கிறார் (க்ருதாபராதஸ்ய) இத்யாதி. தொழுகைக்கு மேலேயிரந்தவிடமுண்டோ வென்ன அருளிச்செய்கிறார் (உவாசச) என்று. மறக்கைக்கு ஹேது வேதென்ன அருளிச்செய்கிறார் (அங்கே புக்கவாறே) இத்யாதி. மறந்தபேருண்டோவென்ன (பிரியேன்) இத்யாதி. அவன் தான் பிரியேனென்றானோ வென்ன அருளிச்செய்கிறார் (பேதை) இத்யாதி. முற்படப் போவார் மறப்பரென்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன அருளிச்செய்கிறார் (அவரைத் தொடர்ந்து) இத்யாதி. ரேபாந்தத்தைப்பற்றவருளிச்செய்கிறார் (அவரங்கு) இத்யாதி. இன்று போன நெஞ்சு அந்தரங்கமாய்ப் பரியக்கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (நிசாமதிஷ்டத்) இத்யாதி. மாயை - ஆஸ்சர்யகுணம். "என்னெஞ்சம்" என்று மமகாரந்தோற்றச்சொல்லலாமோவென்ன அருளிச்செய்கிறார் (பண்டுபோல்) இத்யாதி. படையறுக்கை - எதிரியைத்தன்வசமாக்குகை. இன்னம் - தூது வந்தபின்பு மென்னுதல்; நான் சொன்னபின்பு மென்னுதல்; இத்தை யருளிச்செய்கிறார் (நகால:) இத்யாதி. "வைகுந்தனோடு" என்கையாலே யவன் பரமாக்கி யருளிச்செய்கிறார் (ப்ரணயித்வம்) இத்யாதி. இசையின்கள்- இசையுங்கோளென்றாய், சொல்லுங்கோளென்றபடி, மனிச்சடித்து - பெள

ருஷமடித்து, ஸௌஜந்யத்தாலே யென்றபடி. மநஸ்ஸாக்ஷபும்ஸகமாகையா லேஆணுமன்றுபெண்ணுமன்று என்கிறது.(ஓராண்பிள்ளையாய்)இத்யாதி.(௩0)

[வேறொரு அரும்பதம்.]

முப்பதாம் பாட்டு.—(அன்னமித்யாதி) கீழே அன்னங்களைத் தூதுவிட்டது போராதோ? மீளவும் சிலவன்னங்களையும் வண்டானங்களையும் விடவேணுமோ வென்ன வருளிச்செய்கிறார் (சிலரை) இத்யாதி. கண்ணால் கண்ட திர்யக்குக்களைப் போகவிட்டால் அவற்றுக்கு இருவரையும் சேர்க்கவேணுமென்று நினைவுண்டோவென்ன, ஸ்ரீராமாயணத்தில் திர்யகாதிகளெல்லாம் இருவரையுஞ் சேர்க்கையிலே உகப்புண்டாகச்சொல்லி யிருக்கையாலே இவற்றுக்கும் அது கூடுமென்று பரிஹாரமுட்கொண்டு அவர்களுகந்த ப்ரகாரத்தை விஸ்த்ரேணவருளிச்செய்கிறார் (யாம்கண்டோம்) இத்யாதி. பிராட்டியைக்கண்ட திருவடிக்கும், "கண்டேன்"என்ற வார்த்தை கேட்ட முதலிகளுக்கும், அது தானுங்கேளாதே ஊஹித்து நிஶ்சயித்தவர்க்கு மத்தனை ஹர்ஷமுண்டாகச் சொன்னால் இப்படிப்பட்டவள் தானே தூதுபோகச்சொன்னால் போகை ஸ்வயம் ப்ரயோஜநமாயிராதோ வென்றுகருத்து. வண்டானமாய் - குருகாய்; கொய்யடி நாரை, என்றுமாம் " செல்வீரும் " என்றது - செல்லுகிற உங்களையு மென்றபடி. ஐந்த்ரவ்யாகரணபண்டிதன் - திருவடி. ஸ்வதஸ்ஸர்வஜ்ஞன் - க்ருஷ்ணன். தூதக்ருத்யம் ஹீநக்ருத்யமன்றோ வென்றிருயாதபடி மஹாபுருஷர்கள் செய்தார்களிறே, என்றிவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம். இத்தா ஓத்க்ருஷ்டர் செய்யுமதுக் கிரக்கவேண்டாதிருக்க இரந்தது ஆற்றாமையாலே இத்தனை யென்று சொல்லிற்றாயிற்று. உம்முடைய தசையைக் கண்டால் நாங்கள் போய் செய்யவேணுமென்றிருக்கும் விஷயத்திலே இரப்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (உத்யோகம்) இத்யாதி. நானே இரந்தேனோ? என் தசை இப்படி இரக்கப்பண்ணிற்றென்று கருத்து. உத்யோகம் மிகை யென்னுமதுக்கு ஸம்வாதம் (இடாம்பியாச்சான்) இத்யாதி. అన్యత్పూర్ణాదపాం కుమ్భాదన్యత్పాదావనేజనాత్ । అన్యత్కుశలసంప్రశ్నాన్న చేచ్ఛతి జనార్దనః - அந்யத்பூர்ணாதபாம் கும்பா தந்யத்பாதாவநேஜநாத் | அந்யத்குசலஸம்ப்ரச்நாந்நசேச்சதிஜநார்தந: " என்கிற ஶ்லோகத்திலே மூன்று அந்யத்பதங்களும் சகாரமுமிருக்கையால் " இச்சதி " என்கிற க்ரியைக்கு ஆவ்ருத்தி பண்ணி அர்த்தமிராதபோது ஒவ்வொன்றே போருமென்று தோற்றுகிற்க சகாரமெத்தை ஸமுச்சயிப்பிக்கிறதென்று விசாரிக்கையில், பூர்ண கும்பாதிகள் நாலும் புந: புந: வேண்டியதில்லை யென்று மத்தை ஸமுச்சயிப்பிக்குமோவென்று கேட்டார்களாக, அந"கும்பாத்" என்கிற ஏகவசநமப்ய மாயிருக்க சகாரத்துக்கு மறுப்ரயோஜந மென்ன வொன்றுமென்று நிஷேதித்து, சகாரம்ப்ராதாந்ய த்யோதகமாய், " ஆதனுக்கு " என்கிற கிளையின் றிக்கே தலைக்காகவைத்தவன்னலிர்க் குடத்தைக்கண்டும், எனக்காகக்கால்சுரூவவைத்த தன்னலிக்குனி அம் காலம் தெளிக்கில் அத்தைக்கண்டும், நாட்டாரைவினவுமாபோலே "நன்றாயிருக்கிறீரோ" என்று வாய்கேட்டமாத்ரத்திலே

வயிறு நிறைந்ததென்றும் இருக்கும்விஷயம் பகவத்விஷயம். அது தானபடி யானால் இந்தத் தநீயரான தூதர்க்குக் கேட்கவேண்டாவிறே என்று திருவுள்ளம். (அரைக்கால்) என்றது - அவனுக்கென்கிற நினைவின்றிக்கே எதிர்கொண்டு போகை என்றபடி. இத்தால் அவனுக் கென்கிற உத்யோகமும் மிகை என்றதாயிற்று. இருந்ததே அதிகமாயிருக்கத் தொழுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (க்ருதே) இத்யாதி. இத்தால் ஶ்ரேஷ்டராயுள்ள உங்களைத் தூது போகச் சொல்லுகை அபராதமாகிலும் அது பொறுத்தருளவேணு மென்றதாயிற்று. " இரப்பதும் " என்ற - சகாரம் தொழுவது மென்றத்தை ஸமுச்சயிப்பிக்கிறது. (க) 𑌲𑍋𑌕𑌨𑌾𑌥𑌃 𑌪𑍁𑌰𑌾 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌸𑍁𑌗𑍍𑌰𑍀𑌵𑌂 𑌨𑌾𑌥𑌮𑌿𑌚𑍍𑌛𑌤𑌿 லோகநாத: புரா பூத்வா ஸுக்ரீவம் நாதமிச்சதி" என்று பிராட்டிக்காகக் கடற்கரை அநுவிதாநம் பண்ணியிருக்க; இப்போது தட்டுமாறிற்றென்று வ்யாக்யாதா ஈடுபடுகிறார் (தொழுகையும்) இத்யாதி. இரண்டுஞ் செய்தவிடமுண்டோவென்ன ப்ரமாணம், (உவர்சச) என்று. உறக்கி - த்ருடம் பண்ணி. போனால் மறந்த பேருண்டோவென்னவருளிச்செய்கிறார் (பிரியேன்) இத்யாதி. ப்ரமாணம் (பேதை) என்று. அதுக்கர்த்தம் (பிரிவும்) இத்யாதி. பின்னையுந் தூதுபோய் மறந்தாருண்டோ வென்ன (அவனை) இத்யாதி. நெஞ்சென்னாதே " நெஞ்சினார் " என்ற பூஜ்யோக்திக்கு பாவம் (அவர்) இத்யாதி. அங்கே பரிவார்பலருமில்லையோ? இவர் பரிந்து திரியவேணுமோவென்ன,, ஒருவரையொருவ ரதிசங்கை பண்ணித்திரியும் விஷயமன்றோ வென்றத்தைக் காட்டுகிறார் (நிசாம்) இத்யாதி. (காத்தபடி) என்னுமளவும். " வைகுந்தனோடு " என்று அவரை அப்ரதாநமாக, நெஞ்சினாரை ப்ரதாநமாகச் சொல்லுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (பண்டு) இத்யாதி. கொண்டாடத் தான் ஹேதுவென்னென்னில் (அவன் தான்) இத்யாதி. (உ) 𑌸𑌦𑌾 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿- ஸதாபச்யந்தி " என்று காட்சிகொடுத்து ஓலக்கமிருக்குமவராகையாலும், கண்டவிடமெங்கு மதிசங்கைபண்ணி யோடித்திரியுமவராகையாலும் இருவர்க்கும் வாசியுண்டென்கிறார் (அவரை) இத்யாதி. (உ 𑌅𑌵𑌾𑌕𑍍𑌯𑌨𑌾𑌦𑌰𑌃 அவாக்யநாதர: " என்கிற ஶ்ருதியை உட்கொண்டு வைகுந்தனுரைக் கண்டாலென்று கூட்டி பாவமருளிச்செய்கிறார் (நாவிலும்) இத்யாதி வ்யாக்யாதாவினீடுபாடு (அப்ரமேயம்) இத்யாதி. " இன்னம் " என்று காலத்தைச் சொன்னதுக்கு பாவம், (நகால:) இத்யாதி. " ஓ " என்ற விஷாத தாத்பர்யம் (அவ்விடம்) இத்யாதி. வாக்யத்ரயத்தாலே " 𑌮𑌨𑌃 - மந: " என்று நபும்ஸகலிங்கமாகையாலே அத்தையுட்கொண்டு விவரிக்கிறார் (அழிக்கையாவது) இத்யாதி.

(௩௦)

தாத்பர்யம்.—கீழ் சில ஹம்ஸங்களைத் தூதனுப்பின விடத்தில் அவை போய்த் தன் தசையை யறிவியாமையாலே அவற்றைவிட்டு, தம் கண்ணிற்றோற்றின வேறு சில ஹம்ஸங்களையும் குருகுகளையும் பார்த்துச் சொல்லுகிறாள்.

---

(க) ஸ்ரீராமா-கிஷ்கி. ச-கஅ. (உ) சாந்தோக்யம். ௩-கசு.

வ்யா|| புபுக்ஷஸீதாம்' திருவடி. இவள் தாபங்கண்டு பிராட்டியென்றறி ந்தாற்போலே யறிதல் ஒழிதல் செய்யு மித்தனையிறே. கர்மம் அநுபவ விநாஶ்யமாயிருக்கும். இது அநுபவிக்க வநுபவிக்க வர்த்தியா நிற்கும். பகவத்ருசியடியாக வருகிறதாகை யாகையாலே. பகவத்ருசி மாறு வது ஸைதந்யமில்லை யாதல், விலக்ஷணமன்றியிலே யொழிதல் செய் யவிறே. ஹேயப்ரத்யநீகரான தமக்குந்தம்மை யுகந்தாருடைய ஹேய த்தையும் போக்கிக்கொண் டருளவேண்டாவோ? ப்ராணயித்வம் வேண்டாவாகில் ஸ்வரூபமும் வேண்டாவோ? ஆபந்நிமித்தமாக ரக்ஷிக்குமாகில் இங்குண்டான ஸாதநஸம்பத்தியும் பொய்யாகிறதோ? தாமிரங்காதொழிகைக்குப் பாதந்த்ரரோ? எங்களுக்குப் புறப்படில் குற்றம், தங்களுக்குப் புறப்படாதொழியிற் குற்றம். வரில் எங்கள் சேஷத்வமழியும், வாராதொழியில் தம்முடைய சேஷித்வமழியும். சேஷியைக்குறித்து சேஷபூதனதிசயத்தை விளைக்கக்கடவனிறே. பூர்ணவிஷயத்துக் கதிசயத்தை நினைக்கையாவது ஸ்வாதந்த்ரத்துக் காகப் புறப்படாதொழியுமது. (௧) "[illegible] - ஸைதரம் யங்கேஹவித்யதே" என்னும்படியே. பெருமாள் தோள்வலியை நினை த்தபடியாலே ஸர்ப்பத்தின்வாயிலே புக்காற்போலே ராவணஸந்நிதி யிலேயிருந்து (௨) "[illegible] - த்வம்நீசசசவத்ஸ்ம்ருதః" என்று சசத்தோடொன்றோடு வாசியென்னென்று சொல்லக்கடவ வவ ளிப்போது ஸர்வேச்வரனுடைய ரக்ஷையை அதிசங்கைபண்ணவே ண்டும்படி காணும் ஸ்வரூபவிபர்யாஸமிருந்தபடி. இவனுக்கவன்பக்

---

அரு|| ளிச்செய்கிறார் (கர்மமநுபவவிநாச்யமாய்) என்று. பகவத்ருசி தனக்கொ ருமுடிவில்லையோவென்ன அருளிச்செய்கிறார் (பகவத்ருசிமாறுவது) என்று. "ஸ்வரூபமும் வேண்டாவோ" என்றது-க்ருபை நிரூபகமாகையாலே க்ருபை யில்லாதபோது ஸ்வரூபமில்லாமையாலே ஸ்வரூபம்வேண்டாவோ வென்ற படி. அங்குண்டான ஸாதநஸம்பத்தி - ஈச்வரனுக்குண்டான ரக்ஷணஸாதந மான க்ருபையைச்சொல்லுகிறது. அதவா - "ஆபந்நிமித்தமாக" என்ற வாக்யத்துக்குத் தாத்பர்யம், அங்கு ப்ரளயத்திலே ஆபந்நரானதுவே ஹேது வாக ரக்ஷிக்குமாகில் அங்கு ரக்ஷணத்துக்குண்டான ஸாதநஸம்பத்தி, இங் கும் "வழாநெடுந்துன்பத்தள்" என்று ஆபந்நையாகையாலே இங்குமந்த ஸாதநஸம்பத்தி பொய்யாகிறதோ? என்றபடி. "இரங்கார்" என்ற ப்ரஸங் கத்திலே தாத்பர்யங்கள் (தாமிரங்காதொழிகைக்கு) இத்யாதி. புறப்படுகை குற்றமானபடி யென்னென்ன, அருளிச்செய்கிறார் (சேஷியைக்குறித்து) என்று. ஸர்ப்பத்தின்வாயிலே புக்காற்போலே ராவணன் ஸந்நிதியிலேயிருந்து பெருமாள் தோள்வலியை நினைத்தபடியாலே (த்வம்நீசசசவத்ஸ்ம்ருதః) என் றந்வயித்துக்கொள்வது. "ஸ்வரூபவிபர்யாஸம்" என்றது-(௩) [illegible]

---

(௧)
(௨) ஸ்ரீராமா-ஸுந்தர. ௨௨-௧௯.
(௩) ஸ்ரீராமா-ஸுந்தர. ௩௮-௩௭.

வ்யா||கல் குணஜ்ஞாநமேகாணு முள்ளது, ஸ்வரூபஜ்ஞாநமில்லை. ஸ்வரூபஜ்ஞாநமுண்டாகில் அத்தலைபட்டது மறியாளோ? அத்தலை (க) "नैव दंशान्न मशकान् - நைவதம்சாந்நமசகாந்" ஆயிறே கிடக்கிறது. (௩) "त्वद्गतेनान्तरात्मना" த்வத்கதேநாந்தராத்மநா" என்னும்படியே குளப்படி கலங்கிறுற்போலன்றிறே கடல்கலங்கும்படி. அத்தலை (உ) "ऊर्ध्वं मासान्न जीविष्ये - ஊர்த்வம்மாஸாந்நஜீவிஷ்யே" என்றிருந்தால், இத்தலை (௩) "न जीवेयं क्षणमपि - நஜீவேயம்க்ஷணமபி" என்றிறேயிருப்பது. இரண்டுதலையு மந்யோந்ய மபேக்ஷிதமாயிறே யிருப்பது. (௪) [இன்றாக நாளையேயாக இத்யாதி] [நின்னருளென்பாலதே] உன்க்ருபையென்பக்கலதே, அதில் ஸந்தேஹமில்லை. [நன்றாக நானுன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே] சேஷபூதனாய் உன்னையொழிய ஸ்த்திதியில்லாமையாலே, உனக்கு சேஷபூதனையொழிய சேஷித்வமில்லாமையாலே இரண்டுக்கு மடி இதுதானேயென்கிறது. நாரங்களையொழிந்த நாராயணனில்லாமையாலே. நாராயணனென்று ஸ்வரூபத்தையும் குணத்தையுஞ் சொல்லுகிறது. குறைவாளனையொழிய நிறைவாளனாகமாட்டான். சேஷபூதனையொழிய சேஷியாகமாட்டான். (இரங்கார்) வாராதொழிந்தால் பூசுவனவும் புலர்த்துவனவு மிட்டிக்கவேணுமோ? (அம்மனே) புலியென்னுமாபோலே. (௫) "सुहृदं सर्वभूतानाम् - ஸுஹ்ருதம்ஸர்வபூதாநாம்" என்கிற தத்வத்தை "அம்மே" என்றஞ்சவேண்டும்படி இவனுக்குப்பிறந்த ஸ்வரூபாந்யதாபாவம் (௬) "आनन्दं ब्रह्मणो विद्वान् न बिभेति कुतश्चन - ஆநந்தம்ப்ரஹ்மணோவித்வாந் நபிபேதிகுதச்சந" என்று புத்திபூர்வம் பண்ணின பாபத்துக்கு மஞ்சவேண்டாதபடியிருக்க ப்ரஹ்மத்தினுடைய வாநந்தத்தை யறிந்தவனுக்கு ப்ரஹ்மந் தன்னையே யறியச்செய்தேயு மஞ்சவேண்டும்படியிற்ற இவள்தசை. "ஓ" என்று

[illegible] - மமைவதுஷ்க்ருதம்கிஞ்சித்" என்றிருக்கக் கடவஸ்வரூப விபர்யாஸமென்றபடி, "குணஜ்ஞாநமேயுள்ளது ஸ்வரூபஜ்ஞாநமில்லை" என்றது- "இரங்கார்" என்றுசொல்லுகிற தித்தலையொழிய அவனுடையவ்யஸநத்தை யறியாளென்றபடி. விஸ்லேஷத்தி லவனப்படி வ்யஸநப்படுமோவென்ன (நைவதம்சாந்) இத்யாதி. "இரண்டுதலையு மந்யோந்யாபேக்ஷிதமாயிறே இருப்பது" என்றது - சேஷசேஷிகளுக்கு ஒருவரைப்பிரிந்தால் ஒருவர்க்கு ஸ்வரூபமில்லையென்றபடி. அப்படியிருக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (இன்றாக நாளையேயாக) இத்யாதியால். இதுக்குப் பொருளருளிச்செய்கிறார் (நின்னருளென்பாலதே) என்று. (நாரணன்) என்று ஸ்வரூபத்தையுங் குணத்தையும் சொல்லுகிறது) என்றது-சேதநனுக்கு ஈஶ்வரன் விஸ்லேஷித்தால் ஸத்தை

(க) ஸ்ரீராமா-ஸுந்தர. ௩௬-௪௨.
(உ) ஸ்ரீராமா-ஸுந்தர. ௬௫-௨௫.
(௩) ஸ்ரீராமா-ஸுந்தர. ௬௬-௧௦.
(௪) நான்முகன் திரு. எ.
(௫)
(௬) தைத்திரீயம்-ஆநந்த. ௨-௯.

(தீர்க்கயாமா) இத்யாதி. ஒருயாமம் முன்னும்பின்னும் ஸந்த்யையாகையாலே ராத்ரியை த்ரியாமையென்கிறது. ஊழியானது ராத்ரியென்று பேரிட்டுக்கொண்டு நெடுகின செப்படியிருக்கிறதென்ன அருளிச்செய்கிறார் (வருகிறபோது) இத்யாதி. (க) "ஸம்வர்த்த: ப்ரளய: கல்ப: - ஸம்வர்த்த: ப்ரளய:கல்ப:" என்று நிகண்டு. இவை ப்ரளயத்துக்குப்பேர். பெருகாநின்றதென்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (த்யமாநமநா:) இத்யாதி. அவர்களையும் மூலப்ரக்ருதி பத்தரையும். (கர்மம்) இத்யாதி, து:கம்கர்மபடி யாகவன்றோ? நெடுந்துன்பமென்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (பகவத்) இத்யாதி. (துன்பத்தள்) என்று துக்கத்தையிட்டு நிரூபித்தவிட முண்டோவென்ன (துக்கேஷ்வநுத்விக்நமநா:) என்று. துன்பத்தள் என்றத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (ஹேயப்ரத்யநீக)இத்யாதி. "இரங்கார்" என்றத்தைப்பற்றவருளிச்செய்கிறார் (ப்ரணயித்வம்) இத்யாதி. "மாடமிடித்த" என்றத்தைப் பற்ற வருளிச்செய்கிறார் (ஆபந்நிமித்தம்) இத்யாதி. ஸாதநஸம்பத்தி-ஆற்றுமை. "பிரானார்" என்றத்தைப் பற்ற வருளிச்செய்கிறார் (தாமிரங்காதொழிகைக்கு) இத்யாதி. ஸ்வதந்த்ரனானால் அவனவன்டையிலே போகிறதற்கென்னென்ன அருளிச்செய்கிறார், (எங்களுக்கு) இத்யாதி. புறப்படா திருக்கை குற்றமில்லாத மாத்ரமின்றியே சேஷிக்கதிசயமென்கிறார் (சேஷியைக்குறித்து) இத்யாதி. அதிசயத்தைவிளைத்த விடமுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (வைதர்ம்யம்) இத்யாதி. உம்மைப்பிரிந்திருக்கும் வைதர்ம்யமில்லை. கூடவருகையே அதிசயமென்றபடி. இதிலே அதிசயமாத்ரங் கொள்வது. ஸ்வரக்ஷணத்தி லிழியாமை அதிசயமானால் "இரங்கார்" என்று வெறுப்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (பெருமாள்) இத்யாதி. ரக்ஷகத்வ ஸ்வரூபத்தையும் ப்ரணயித்வஸ்வரூபத்தையும் மாறுகைக விபர்யாஸம். அன்றிக்கே. (க) "த்வத்ஸத்ருசம்பவேத் - தத்தஸ்யஸத்ருசம்பவேத்" என்றிருக்கிற தன்னுடைய அத்யவஸாய ஸ்வரூபம் மாறுகைஎன்னவுமாம். தன் ஸ்வரூபமறியாவிட்டால் அவன்ஸ்வரூப மறியாளோவென்ன அருளிச்செய்கிறார்(இவளுக்கவன்) இத்யாதி. குணஜ்ஞானம்-க்ருபாகுணஜ்ஞானம் மனஸ்ஸாக அவளிடத்திலேயானாலும் கடித்ததுமோர்ந்ததும் தெரியாதே யிருக்கக்கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (குளப்படி) இத்யாதி. இருவரும் ஜீவியாம லிருக்கவேண்டுவா னென்னென்ன அருளிச்செய்கிறார் (இரண்டுதலையும்) இத்யாதி. ஒன்றைவிட்டொன்று தரியாமைக்கு ஹேது ப்ரமாணமருளிச்செய்கிறார் (இன்றாக நாளையேயாக) இத்யாதி, "நாராயணன்" என்று சேஷித்வஸ்வரூபத்தையும் வாத்ஸல்யாதிகுணத்தையுஞ் சொல்லுகிறதென்றபடி. நாரங்களையொழிந்தால் வரும் ஹாநியேதென்ன அருளிச்செய்கிறார் (குறைவாளனே) இத்யாதி. இரங்கார் இரங்குகிறதில்லையெனலுதல். ஈடுபடுகிறு ரில்லையென்னுதல். இத்தையருளிச்செய்கிறார் (வாராதொழிந்தால்) இத்யாதி. புலர்த்துகை-சந்தனத்தை யுலரவிட்டுத் திமிர்ந்துபோகுகை. ஸர்வபூத ஸுஹ்ருத்தானவனைக் குறித்துபயப்படவேணுமோவென்ன அருளிச்செய்கிறார் (ஸுஹ்ருதம்) இத்யாதி. மட்டைத்தெங்கு இலையெல்லாமவெட்டித் தலை மட்டையாயிருக்கை. கொடுமைகள்- "கொடுமைகள் கண்டோம்; நீர்மையெங்கும் கண்டிலோம்" என்றெம்பார். "கொடுமையாலே செய்தான்" என்றுநம்பி. "இரங்காரம்மனோ" என்றதென்; ஒருத்திக்கிரங்கிறு ரில்லையோவென்ன, "கொடுமைகள்" என்றுபிந்நக்ரியை.

௩௯.

[வேறொரு அரும்பதம்.]

முப்பத்தாரும்பாட்டு- (தூழா) இத்யாதி. ஸ்வாபதேசத்தில் ஸங்கதி அருளிச்செய்து அந்யாபதேசத்தில் திருத்தாயார் வார்த்தையாக ஸங்கதி யருளிச்செய்கிறார் (ஏவைஷ்வ) இத்யாதி. வாடையென்றது-கீழ்ப்பாட்டில். பனிவாடையென்றத்தைப்பற்ற. விவரணம் (ஸத்தை) இத்யாதி. பதார்த்தங்களை-ஆஸ்ரயஸம்ஹாதுக்களானவைகள், என்று பேரையுடைத்தானவைகளையென்று சப்தார்த்தம் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (வருகிற) இத்யாதி. பேராவென்றதே "ஏழா", என்றதுக்கு பாவம் (மலையாளர்) இத்யாதி. "ஊழி" என்றால் கல்பவாசியித்தனையன்றோ? அது ஸ்வேதவராஹகல்ப மென்னுமாபோலே யாகாதே ப்ரளயகாலத்தைச் சொல்லுமென்னு மதுக்கு நிகண்டுவைக் காட்டிக்கொண்டு தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஸம்வர்த்த:) இத்யாதி. "நெடு" என்று விசேஷித்ததுக்கு வ்யாவர்த்யபூர்வகம் பாவமருளிச்செய்கிறார் (த்யமாந) இத்யாதி. ஏதச்சப்த தாத்பர்யம் (ஸீதா) இத்யாதி. அவர்கள் - அசிதவிசேஷிதரான பத்தாத்மாக்கள். இவளென்றதுக்கு வ்யாவர்த்யபூர்வகம் தாத்பர்ய மருளிச்செய்து "எங்கு" என்றதுக்கு வ்யாவர்த்யபூர்வகம் பாவமருளிச்செய்கிறார் (அங்கு) இத்யாதி வாக்ய ஷட்கத்தாலே. "துன்பத்தன்" என்று நிரூபகஞ் சொல்லுகைக்கு இப்படி து:கப்பட்டபேருண்டோவென்ன (துக்கோ) இத்யாதி. தாபங்கண்டாலறிதல் (காணவிட்டால் அறியா தொழிதலென்கை. துன்பத்துக்கு நெடுமை இன்னதென்கிறார் (கர்மம்) இத்யாதி வாக்யத்வயத்தாலே. "கர்மம்" என்றது கர்மக்ருதத்துக்கமென்றபடி. உழவாதிருக்கைக்குத்தாத்பர்ய(பகவத்) இத்யாதி. "துன்பத்தவ்" என்றத்தைக் கடாக்ஷித்து "இரங்கார்" என்றதுக்கு பாவமருளிச்செய்து "பிரானார்" என்றத்தைக் கடாக்ஷித்துத் தாத்பர்யாந்தரமருளிச்செய்கிறார் (ப்ரணயித்வம்) இத்யாதி, "இலங்கைக்குழாநெடுமோடமிடித்த" என்றத்தைப்பற்ற மூன்றாம்தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஆபத்து) இத்யாதி. "ஸாதநஸம்பத்தி" என்றது "ஊழாநெடுந்துன்பத்தன்" என்கிற வாபத்தென்றபடி. "இரங்கார்" என்ற பஹுவசநத்தாலே பலித்த ஸ்வாதந்த்ர்யத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (தாம்) இத்யாதி. ஸ்வதந்த்ர ரிரங்காதொழிந்தால் அத்தைக் கொடுமையென்னக்கூடுமோ? பாரதந்த்ரர்க்கிறே குற்றங்கள் சொல்லுவாரென்ன வருளிச்செய்கிறார் (எங்களுக்கு) இத்யாதி. குற்றமானவளவேயோ? ஸ்வரூபமுங் கிடையா தொழியுமென்கிறார் (ஊரில்) இத்யாதி. சேஷத்வமழியும்படி யென்னென்ன (சேஷிவை) இத்யாதி. வாக்யத்வயத்தாலே. ஸ்வரக்ஷணத்தைப் பாராதொழிகை அத்தலைக் கதிசயத்தை விளைக்கை யென்கைக்கு ப்ரமாணம் (வைதர்ம்யம்) இத்யாதி. இப்படிக்கத்தலைக் கதிசயத்தைவிளைக்கை ஸ்வரூபமானால் "இரங்கார்" என்றும் "கொடுமையன்" என்றும் சொல்லுகை சேருமோவென்ன (பெருமாள்) இத்யாதி. இப்படி

ஸ்வரூபவிபர்யாஸம் பிறந்தால் அவளை இரங்காரென்ன ப்ரஸக்தியுண்டோவெ ன்ன வருளிச்செய்கிறார் (இவளுக்கு) இத்யாதி. குணஜ்ஞாநம்-க்ருபாவிஷய ஜ்ஞாநம். ஸ்வரூபஜ்ஞாநமென்றது—(௧) "மேத்ருஸ்யஸத்ருசம்பவேத் - தத்தஸ்ய ஸத்ருசம்பவேத்" என்றிருக்கை. (௨)"உன்மனத்தாலென்னினைந்திருந்தாய்" என்றத்தை யென்றபடி. தன்படி தானறிந்தால் அவன்படியு மறியலாயிருக்கு மென்கிறார் (ஸ்வரூப) இத்யாதி. அத்தலைப்பட்ட தென்னென்ன (அத்தலை) இத்யாதி. கடித்ததும் மோந்தது மறியாதிருக்கும்படி இத்தனைபடவேண்டு வானென்னென்ன வருளிச்செய்கிறார் (குளப்படி) இத்யாதி வாக்யத்ரயத்தாலே 'க்ஷணமபிநஜீவேயம்" என்னப்போமோ? இத்தலையொழியஜீவிக்கப்போகாதோவென்ன வருளிச்செய்கிறார் (இரண்டு) இத்யாதி. அந்யோந்ய ஸாபேக்ஷங்கள் ஜீவநங்களென்றதுக்கு ப்ரமாணம் (இன்றாக) இத்யாதி (சேஷியாக மாட்டான்) என்னுமளவும். ப்ரஸக்தாநு ப்ரஸக்தசங்கா பரிஹாரங்களைப் பண்ணி ப்ரக்ருதத்திலே இரங்காதேபோன தென்னென்ன அருளிச்செய்கைக்காக ப்ரதீகம் (இரங்கார்) என்று. அன்றிக்கே, இரங்கார் க்ருபைபண்ணு ரென்று கீழருளிச்செய்தது கடுப்படுகையாக அர்த்தாந்தரமென்னவுமாம். புலத்துகை. சந்தநம்பூசித் திமிர்ந்து உலரப்பண்ணுகை. இரங்காரென்னவே அஞ்சி "அம்ம" என்கிறாளென்றதுக்கு த்ருஷ்டாந்தம் (புலி) இத்யாதி. இவளுக்கு-நாயகிக்கு. ஸ்வரூபாநுரூபம்-ஆநந்த ப்ரசுரையாயிருக்கை தவிர்ந்து துன்பத்தையனுபவிக்கும்படியிருக்கை. இத்தை விவரிக்கிறார் (ஆநந்தம்) இத்யாதி. மட்டை - தெங்கினிலையெல்லாங் கழித்து தலைமட்டையாகவைத்த தென்னை மரம். இப்பெண்பிள்ளை வாயழகை யழித்ததுக்கு த்ருஷ்டாந்தமென்று நிர்வாஹாந்தரம் (இதுவும்) இத்யாதி. இதுவும்- இத்தலங்கையும். ௩௪.

தாத்பர்யம்.—பகவதநுபவ யோக்யமான தசாவிபாகம் பிறந்தவளவிலும் ஸர்வேஶ்வரன்வந் துதவாமையாலே பிறந்த ஆழ்வாருடைய தளர்த்தியைக்கண்டு ஸர்வேஶ்வரனை நித்யனாகநினைத்துரைந்த பாகவதர் பாசுரத்தை, நாயகனுடைய விரஹத்தினால் இருளிலே நோவுபடுகிற நாயகியைக் கண்டு நாயகனைவெறுக்கிற திருத்தாயார் பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

தானாசைப்பட்ட ஸர்வேஶ்வரனணிந்த திருத்துழாயைப் பெறாமல் இந்நாயகி நோவுபட, இதற்குமேல் இரவும்வந்து ஒருபதார்த்தத்தையும் காணவொட்டாமல் காடாந்தகாரமயமாய்ச் சுற்றிக்கொண்டு பெரிய கல்பம்போல் வளராநின்றுகொண்டு இவளை பாதிக்கத்தொடங்கிற்று. முன்னொரு பிராட்டிக்காக இலங்கையையழித்து அவள் துன்பத்தைப்போக்கின ஸர்வேஶ்வரன் இப்போ இவள் பெருந்துன்பத்தையும்போக்கி யுதவுவானென்றிருந்தோம். அவனிப்போ இவளுக்குதவாமல் நிர்த்தயனாய்விட்டான். இனி நாமென்செய்வோம் என்கிறாள்.

(௧) ஸ்ரீராமா-ஸுந்த்ர-௩௭-௩௨. (௨) திருவாய்-௨-௭-௨

கொடுங்காற்சிலையர்நிரைகோளுழவர்கொலையில்வெய்ய,
கடுங்காலிளைஞர்துடிபடுகவ்வைத்து, அருவினையேன்
நெடுங்காலமுங்கண்ணன்நீண்மலர்ப்பாதம்பரவிப்பெற்ற
தொடுங்காலொசியுமிடை, இளமான்சென்றசூழ்கடமே. (௩௭)

அர்த்தம்.—அருவினையேன் க்ரூரமான பாபத்தையுடைய நான், - - நெடுங்காலமும் - வெகுகாலமாக, கண்ணன் - க்ருஷ்ணனுடைய நீள் - நீண்டதாய், மலர் - புஷ்பம்போன்றதான, பாதம் - திருவடிகளை, பரவி - ஸ்தோத்ரம்பண்ணி, பெற்ற - பெறப்பட்டவளாய், தொடுங்கால் - தொட்டமாத்ரத்திலே, ஒசியும் - துவளும்படியான, இடை - இடையையுடையவளாய், இளமான் - இளம்பருவமான மான்போன்றவளான இப்பெண், சென்ற - போன, சூழ் - (வெம்மையால்) சூழப்பட்ட, கடம் - வழியானது; கொடும் (முனிவினால்) வளைந்திருக்கிற, கால் - காலையுடைய சிலையர் - வில்லையுடையராய் நிரை - பசுக்களை, கோள் - அபஹரிக்கும், உழவர் - கர்ஷகர்களாய், கொலையில் - ஹிம்ஸையில், வெய்ய - க்ரூரர்களாய், கடுங்கால் - கடுமையையுடைய (சீக்ரமாகப்போகத்தக்க) காலையுடையவர்களாய், இளைஞர் - இளம்பருவத்தையுடையவர்களான வேடர்களுடைய, துடி - உடுக்கையில் நின்றும், படும் - உண்டான, கவ்வைத்து - சப்தத்தையுடைத்தானது. (௩௭)

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம்]

அவ.—முப்பத்தேழாம்பாட்டு—கலந்து பிரிந்தாளொரு தலைமகள் பிரிவாற்றாமையாலே புறப்பட்டு க்ரூரமானகாட்டிலே துஷ்டம்ருகங்களும் மநுஷ்யரும் துர்க்கஸ்திகளும் துர்க்கதிகளுமான தேசத்திலே போகத் திருத்தாயாரிவளைப் படுக்கையிற் காணாமையாலே "எல்லாப்படிகளாலும் பொல்லாதாயிருக்கிறதேசத்திலே புறப்பட்டுப் போனவிவளென் செய்கிறாளோ"வென்று இவள் போனவழியைப்பார்த்து மோஹிக்கிறாள். திருக்கோளூரிற் புகுகிற பெண்பிள்ளையுடைய திருத்தாயாரைப்போலே யோரிடத்தாக நிஸ்சயிக்க வொண்ணாமையாலே எல்லாப்படிகளாலும் சோகிக்கிறாள்.

வ்யா - (கொடுங்காற்சிலையர் (௧) యోధానామక్లికల్పానాం పేశలానాం మహేష్వాసాం - யோதாநாமக்லிகல்பாநாம்பேசலாநாம்மஹேஷ்வாஸாநாம்"

அரு.—முப்பத்தேழாம்பாட்டு (கொடுங்கால்சிலையர்) యోధానామక్లికల్పానాం పేశలానాం మహేష్వాసానాం। సంపూర్ణకృతవిద్యానాం గుహాకేసరిణామివ- யோதாநாமக்லிகல்பாநாம் பேசலாநாம்மஹேஷ்வாஸாநாம்। ஸம்பூர்ணக்ருதவித்யாநாம் குஹாகேஸரிணாமிவ" என்று திருவயோத்யையிலுண்டான படரை (భటై) வர்ணித்தாற்போலே "கொடுங்கால்சிலையர்" என்று தொடங்கி வேடரை வர்ணிக்கிறார். கொடுங்கால்சிலையரென்றதற்கு இரண்டுபொருள், அதாவது-வளைந்தகாலையுடைய சிலையரென்னுதல், க்ரூரமானகாலையுடைய சிலையரென்னுதல். கோடின-வளைந்த - கோடினகாலையுடைத்தாகைக்கு ஹேதுவேதென்ன (ஹிம்

வ்யா॥ கோலினைகாலையுடைய சிலையர். ஹிம்ஸையில் த்வரையாலே எப்போதும் நாணியேறிட்டு வளைந்தபடியேயிறே யிருப்பது. கொடுமையென்றுமாம். கால் - நாணி. வில்லுக்குக் கொடுமையாவது- தான்சென்று கலிசையன்றிக்கே ஆளிட்டு கலிஸாக (சிலையர்) நிரூபகம். உண்ணும்போதும், ஸ்வஸ்த்ரீயோடநுபவிக்கும்போதும் கையும் வில்லுமாயிருக்கிறபடி. (க) எப்போதுங் கைகழலா நேமியானோடே பழகினவளிறே இவள். அவனுக்குக் கையுந் திருவாழியும் நிரூபகமாயிறே இருப்பது. அதுபிறர்க்கு தாரகமாயிறே யிருப்பது. இது பிறர்க்கு அநர்த்தமாயிருக்குமிறே. (உ) "నాహరయతిసన్త్రాసంబాహూ రామస్యసంశ్రితా-நாஹாரயதிஸந்த்ராஸம் பாஹூராமஸ்யஸம்ஶ்ரிதா" என்னும்படியே அவன் கையும் வில்லும் நினைத்தார் பயங்கெட்டிருக்குமாபோலே யிருக்கிறதன்றிறே யிங்கு. (நிரைகோளுழவர்) பராபகாரமான கோக்ரஹணம்பண்ணுகையே ஸ்வயங்க்ருஷியாயிருக்குமவர்கள். (௩) "గోబ్రాహ్మణహితాయచ - கோப்ராஹ்மண ஹிதாயச" என்று ஸாதுஸம்ரக்ஷணம் பண்ணினவரோடே பழகினவளிறே இவள். (கொலையில்வெய்ய) கொல்லுமிடத்திலே வெவ்வியராயிருக்கை. அர்த்தார்த்தமாகவாதல், எதிரியன்றுதலன்றிக்கே துடிப்புக்காண்கையே ப்ரயோஜநமாகக் கொல்லுகை. சாவக்கொல்லாதேகிடந் துழைக்கும்படி கொல்லுகை. (௪) இடையனெறிந்த மரமாக்குகை. அவர் பிறரைக்கொல்லுமிடத்திலும் அவர்களுக்கும் ஹிதரூபமாக

---

அரு॥ ஸையில்த்வரையாலே' என்று. இரண்டாமர்த்தத்துக்கு "கால்" என்றது-நாண். கொடுமையையுடைத்தமாய், நாணியையுமுடைய சிலையரென்று இரண்டாமர்த்தம். ஆளிட்டுகலிகை - அம்பாலேகலிகை. கைகழலாநேமியானோடே பழகினவள் காதுகரான வேடர் வர்த்திக்கிறகாட்டிலே போனாளென்று பயப்படுகிறாளென்றபடி. (நிரைகோளுழவர்) "நிரை" என்று பசுநிரையாய், "கொள்கை" அபஹரிக்கையாய், பசுக்களை அபஹரிக்கையே க்ருஷியாக வுடையவரென்று சப்தார்த்தம். "உழவு" என்று க்ருஷியாய், "உழவர்" என்று கர்ஷகரென்றபடி. க்ரௌர்யமேதென்ன அருளிச்செய்கிறார் (அர்த்தார்த்தமாகவாதல்) என்று. ஆள்கலம்பாராத தேளென்னுமாபோலே துடிப்புக்காண்கையே ப்ரயோஜநமாயிருக்குமென்றபடி. அதவா. சாவக்கொல்லாதே கிடந்துழைக்கும்படி கொல்லுகையென்றுமாம். பெருமாள் தாம் பிறரை ஹிம்ஸிக்கவில்லையோவென்ன அருளிச்செய்கிறார் (அவர் பிறரைக் கொல்லுமிடத்திலும்) என்று. (௫) "రామబాణాసనక్షిప్తమావహత్పరమాంగతిమ్- ராமபாணாஸநக்ஷிப்தமாவஹத்பரமாம்கதிம்" என்று சொல்லுகிறபடியே ஹிதரூபமாகவி

---

(க) பெரியதிருவந்தாதி ௮௭.

(உ)

(௩)

(௪) திருமொழி-௧௧-௮-௯.

(ரு)

(௬)

வ்யா||ஸித்தே சொல்லுவது. பின்னையும்(க)"[illegible] - ஸஞ்ஜாதபாஷ்பஃபரவீரஹந்தா ராமேமாமு ஹூர்த்தம்விமநாபபூவ" என்று கண்ணுங் கண்ணநீருமாயிறே யிருப்பது. (கடுங்காலிளைஞர்) பாஹூம்ஸைபண்ணவென்றால் பத்துப்புக்கு பத்துமீள வல்லராயிருக்கை. இவர்களொரு க்ரியைசெய்யவேண்டாதே காணவேபயாவஹமாயிருக்கும் பருவம். ரஸாயநஸேவை பண்ணினாரைப்போலே இளகின பருவமாயிருக்கை. (துடிபடுங் கவ்வைத்து) துடியினுடைய ஓசையையுடைத்து. இத்வசியு முள்ளவிடத்தே போகிறது - இருந்தால் தாயினுடைய ஹிதவசநங் கேட்கவேணுமென்று. இத்வகி யுள்ளவிடத்துப்போனாலழியு முடம்பையிறேயழிப்பது; இங்கு நித்யமான வாத்மாவையழிக்கும்

(அருவினையேன்) அவன் வேண்டியிராமையில்லை, இவனுக்கு ருசியில்லாமையில்லை, கிட்டாதொழிகிறது காண்கிற வென்னுடைய பாக்யஹாநியிறே. (உ) "[illegible] - மத்பாபமேவாத்ரநிமித்தமாஸீத்" (நெடுங்கால மித்யாதி) ஆஸ்ரயத்தினளவன்றுகிடீர். ஸக்ருத் ப்ரபத்தியும் பொறுத்தைக்கிடீர் நான் தீர்க்ககாலமுபாஸித்தது. தேவகியாரைப்போலே அநந்தவ்ரதமநுஷ்டித்துக்கிடீர். தன்னையுமறியாதே தன்னைப் பெறப்பட்ட வருமையையுமறியாதேகிடீர் போயிற்று. (ங) "[illegible] - மஹாதாபஸாராமமஹாதாசாபிகர்மணு" என்று ஸ்ரீ கௌஸல்யார் சொல்லுமாபோலே. (நீண்மலர்ப்பாதம்) ஆஸ்ரித ரிருந்தவிடத்தளவுஞ்

---

அரு||றேசொல்லுவதென்றபடி. (கடுங்காலிளைஞர்) "கடுங்கால்" கால்வேகத்தையுடையராய், "இளைஞர்" யௌவநத்தையுடையவர்கள். (பத்துப்புக்குப்பத்து மீளவல்லராயிருக்கை) என்றது - ஒருநாளே பதின்காதவழிபோய் பதின்காதவழி மீளவல்லராயிருக்கை யென்றபடி. "துடி" என்று வாத்யவிசேஷமாய், இப்படியிருக்கிற வேடருடைய துடியினுடைய ஓசையுடைத்தான சூழ்கடமென்றபடி, இப்படி க்ரூரமானகாட்டிலே எதுக்காகப் போனுளென்ன அருளிச்செய்கிறார் (இத்வகியுள்ளவிடத்திலே) என்று. இத்தால் காட்டிலேபோனுல் சரீரநாசமாத்ரம், இங்கிருந்தால் தாயார் ஹிதவசநத்தாலே ஆத்மநாசமாமென்று அதுக்காகப் போனுளென்றபடி. (ஆஸ்ரயத்தினளவல்லகிடீர்) என்றது - ஆஸ்ரயணீய வஸ்துவினளவல்லகிடீ ரென்றபடி. இந்தவாக்யத்தை விவரிக்கிறார் (ஸக்ருத்ப்ரபத்தியும் பொறுத்தை) என்று. "தொடுங்காலொசியு மிடை" என்றத்தையும் "நெடுங்காலமும் - கண்ணன்நீண்மலர்ப்பாதம் பரவிப்பெற்ற" என்றத்தையும் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் (தன்னையுமறியாதே) என்று. "மலர்" என்று செவ்வியைச் சொல்லுகையாலே ஈச்வரனுக்குத் தன்

---

(க)

(உ)

(ங) ஸ்ரீராமா - ஆரண்ய - ௬௩ - ௩.

வ்யா|| செல்லத்தானேவளரும்படி ஸாலபமான திருவடிகள். அது தா
னும் கல்பேறாயிருந்தபடி. (மலர்) செவ்வி (பாவிப்பெற்ற)ஸ்தோத்ர
வாதங்களைப் பண்ணிப்பெற்று நிதியெடுத்தாற்போலே. (கொடுங்கா
லொசியுமிடை) தொடக்கரியாகிருக்கிறபடி. நாயகனும் சீர்மையை
யறிந்து நுடங்கியாதே பார்த்திருக்குமத்தனை. (க) "ஒசிந்த நுண்ணி
டைமேல் கையைவைத்து நொந்துநொந்து" இடையுண்டோ? இல்லை
யோ? என்று ஸம்சயிக்கவேண்டியிருக்கிறபடி. மேலுங் கீழும் பார்த்
தால் இடையுமுண்டென்றநுமித்துக்கொள்ளுமத்தனை. இடைக்கு
தாரகமாகக் கையைவைத்தால் கைதானும் மலையைவைத்தாற்போ
லேயிறே யிருப்பது. (இளமான்சென்ற இவ்வழிபோக்குமித்தனையும்
பொறுக்கப்பெறுகிறார் (சூழ்கடம்) க்ரூரமாய்ப் பரந்திருந்துள்ளகாடு.

---

அரு|| பேறாயிருக்குமென்றபடி. ஒன்றும்பொறாதே யிருக்குமோவென்ன அரு
ளிச்செய்கிறார் (ஒசிந்த நுண்ணிடை) என்று. "நுண்ணிடை" என்றதுக்குத் தா
த்பர்யம் (இடையுண்டோவில்லையோ) என்று. "கையைவைத்து நொந்துநொ
ந்து" என்றதுக்குத் தாத்பர்யம் (இடைக்குதாரகமாக) என்று. "அருவினையே
ன்" என்று தொடங்கி, இளமான்சென்ற சூழ்கடம், 'கொடுங்கால்சிலையரென்று
தொடங்கி, அடிபடுக்கவ்வைத்து என்று அந்வயம். இத்தால் "இப்படி க்ரூர
மானகாட்டிலேபோனாள், என்னவாகப்புகுகிறதோ" என்று பயப்படுகிறா
ளென்றபடி. "గజంవావీక్ష్య - கஜம்வாவீக்ஷ்ய" இத்யாதி. "నమో బ్రహ్మ
ణ్యదేవాయగోబ్రాహ్మణహితాయచ। జగద్ధితాయకృష్ణాయగోవిన్దాయనమోనమః - நமோ
ப்ரஹ்மண்யதேவாயகோப்ராஹ்மணஹிதாயச| ஜகத்திதாயக்ருஷ்ணாய கோவி
ந்தாயநமோநமः" "నమన్ధరాయాః - நமந்தராயாः" இத்யாதி. "మహాతాప
సారామమహాతాపిక ర్మణా। రాజ్ఞాదశరథేనత్వంలబ్ధోమృతమివామరైః - மஹாதாப
ஸாராமமஹாதாச. பிகர்மணா| ராஜ்ஞாதசரதேநத்வம்லப்தோம்ருதமிவாமரைः"

[அப்பு அரும்பதம்.]

முப்பத்தேழாம்பாட்டு-(கொடுங்கால்) இப்படிசோகிக்கவேண்டுவானென்
னென்ன அருளிச்செய்கிறார் (திருக்கோணூர்) இத்யாதி. திருவயோத்யை
காக்கும் காவல்காரர் எதிரிகளுக்கு பயங்கரராயிருக்குமாபோலே காட்டி
லுள்ளாரிருக்கும்படியைப்பற்ற வருளிச்செய்கிறார் (யோதாகாம்) இத்யாதி.
வில்லுக்குக் கொடுமையுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (வில்லுக்கு) இ
த்யாதி. ஆளிட்டு - அம்பிட்டு. "'சிலையர்" என்று பயப்படவேண்டுவானெ
ன்னென்ன அருளிச்செய்கிறார் (எப்போதுங் கைகழலா) இத்யாதி. தாரக
மாயிருக்கிற வாயுதங்களோடே யிருக்கிறவரோடே பழகினவளாகையாலே
இவர்கள் யாதகரென்றறியாம லிருக்கிறாளோவென்று தாயார் பயப்படுகிறா
ளென்று தாத்பர்யம். இந்ந்யாயம் முற்றக்கண்டுகொள்வது. நிரை - பசு.
பத்துப்புக்கு-பதின்காதம்போய் பதின்காதம் மீளவல்லராகை. கவ்வை-ஆர

---

(க) திருவாய்-ளு-எ-அ.

காரம், ஹிதவசநங்கேளாதே போனைக்கு இக்கு பாஸுரத்தைச்சொன்ன அருளிச்செய்கிறார் (சுவறி) இத்யாதி. சுவறிக்கவொட்டாமையாலே ஆத்மா அழியுமென்றபடி. ஆஸ்ரயத்தின்-ஆஸ்ரயணீயத்தின். "தொடுங்காலொசியும்" என்றத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (தன்னையுமறியாதே) இத்யாதி. அது தானும் வருகை தானும் [நெடுங்காலம் என்று தொடங்கி சூழ்கடம்கவ்வைத்து அருவினையேன்] என்று கிரியை. (௩௬)

[வேறொரு அநுப்பதம்.]

முப்பத்தேழாம்பாட்டு.—(கொடும்) இத்யாதி. கீழ் நாயகியின் கையிலும் இராவின் கையிலு மகப்பட்டு "நெடுந்துன்பத்தள்" என்றுசொல்லும்படி யிருந்தவளிவ்வளவாதமே கைகொடுக்கப் புறப்பட்டுப்போக அத்தைச்சொல்லிக் கூப்பிடுகிறாளென்று லங்கதி யருளிச்செய்கிறார் (கலந்து) இத்யாதி. இயற்கையில் புணர்ச்சியைச் சொல்லுகிறது. அன்றிக்கே, "இரங்காரம்மனோ" என்று வெறுத்து வழாநெடுந்துன்பத்தளான தசையைக்கண்டு நொந்து நோவுபொறுக்கமாட்டாதே வந்து கலந்து மீளவும்பிரிய, அது பொறுக்கமாட்டாதே தாயுறங்கவிட்டு நடந்த நாயகியென்று சொல்லவுமாம். "கொடும்" என்றத்தாலே பலிதம் (துஷ்டம்ருகங்களும் துர்க்கதிகளும்) என்றது, கதிகள்-வழிகள் "அருவினையேன்" என்றதின்பலிதம் (சோகிக்கிறாள்) என்றது. இவள் செல்லுவது ஏவ்யதேசமாயிராதோ? காட்டிலேபோனாளோ சோகிக்கைக் கென்ன வருளிச்செய்கிறார் (திருக்கோளூர்) இத்யாதி. காட்டில் வெங்கள மென்கிறவிடத்திலும்போகலாமேயென்று விசாரித்துச் சோகிக்கிறாளென்கை. கோடின-வளைந்த. ஆளிட்டு-அம்பிட்டு. இத்தால், தன்கைநோகாதே ஆளிட்டு கலியவேணுமென்று கொடுமைஸூசிதமாகிறது. வில்லிகளைக்கண்டால் இவளஞ்சி பிற்காலித்துவராளோ? இதுக்குப் பயப்படவேணுமோவென்ன வருளிச் செய்கிறார் (எப்போதுங்கைகழலா) இத்யாதி. இத்தால் இந்நாயகி இவர்களை ரக்ஷகரென்று ப்ரமித்துக் கிட்டில் செய்வதென்னென்று திருத்தாயார் பயப் படுகிறாளென்று கருத்து. பத்துப்புக்கு- பதின்காதம்போய், துடி - வாத்யமாய், படுகை-உண்டாகையாய், கவ்வை - ஆரவாரமாய், தாத்பர்ய மருளிச் செய்கிறார் (துடி) இத்யாதி வாக்யசதுஷ்டயத்தாலே. கீழ்வாக்ய விவரணம் (ஸக்ருத்) இத்யாதி. அநந்தவ்ரதம்-சாடு. "தொடுங்காலொசியும்" என்றதுக் கும் "நெடுங்காலம்" இத்யாதிக்கு முட்கருத் தருளிச்செய்கிறார் (தன்னை) இத்யாதி. இளமைக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (இடை) இத்யாதி.

[நெடுங்காலம் இத்யாதி சூழ்கடம்கொடுங்கால் இத்யாதி, கவ்வைத்து அருவினையேன்] என்றந்வயம். (௩௭)

தாத்பர்யம்.—இதில், ஆழ்வார்க்குப்பிறந்த ஜ்ஞாநபக்தி வைராக்யங்களைக் கண்டு, இவர்க்கு இஸ்ஸம்ஸாரத்திலிருப்பு துஸ்ஸஹமாயிருக்குமென் றுவைரத் தபாசுரத்தைத் தன்னுடன் படுத்திருந்த பெண்ணைப் படுக்கையில்காணாமல்,

இவள் காட்டேறப்போனுளென்று நிஸ்சயித்துரைத்த திருத்தாயார்வார்த்தையினை லருளிச்செய்கிருர்.

இவளுக்காக நானனேகம் நோன்புநோற்றுப்பெற்றேன். இவளோ, அவயவங்களைத்தொடில் வாடிப்போம்படியான மென்மேனியாள். தனியே யோசிடத்திற்கும்போக வல்லமையற்றவள். இவள் இப்போது போனவழியோ பெருங்காடு, ஸூர்யகிரணங்களினல் தபித்துக்கிடக்கும், அங்கு அநேக துஷ்டம்ருகங்களை யடிக்கைக்கும் போகிறவர்களை வழிபறிக்கைக்கும் வேடர்கள் சீக்ரமாயோடிவந்து வில்லைவளைத்துக்கொண்டு அம்புங்கையுமாய் பயங்கரமாக ஸஞ்சரிப்பார்கள். அவர்களின் பறையிசைலியைக்கேட்டு இவளென்னசெய்யப்போகிருளோ தெரியவில்லை. இதற்கெல்லாம் என்னுடைய பாபமே மூலமாயிருக்கிறதென்கிருள். ௬௭

---

கடமாயினகள்கழித்துத், தன்கால்வன்மையால்பலநாள்
தடமாயினபுக்குநீர்நிலைநின்றதவமிதுகொல்,
குடமாடியிம்மண்ணும்விண்ணுங்குலுங்கவுலகளந்த
நடமாடியபெருமான், உருவொத்தனநீலங்களே. ௬௮.

அர்த்தம்.—நீலங்கள் - கருநெய்தல்கள், இம்மண்ணும்-இந்தபூலோகமும், விண்ணும் - ஊர்த்வலோகமும், குலுங்க - ஆஸ்சர்யப்பட்டு அசையும்படியாக, குடமாடி - (க்ருஷ்ணுவதாரத்தில்) குடக்கூத்தாடியும், உலகு - லோகங்களை, அளந்து-(த்ரிவிக்ரமாவதாரத்தில்) ஆக்ரமித்தும், நடமாடிய - ஸஞ்சரித்த, பெருமான் - ஸர்வேஸ்வரனுடைய, உரு - திருமேனியோடு, ஒத்தன-ஸாம்யமுடைத்தாயிருக்கின்றன. இது - இதற்குக்காரணம், கடமாயினகள் - தேவருணம் பித்ருருணம் ருஷிருணம் என்கிற மூன்றுருணங்களையும்,கழித்து-நிறைவேற்றி, தன்-தன்னுடைய, கால்வன்மையால்-காலினுரத்தினல்,பலநாள்-அநேககாலம், தடமாயின - தடாகங்களென்று பேர்பெற்றவைகளில், புக்கு - ப்ரவேசித்து, நீர் - ஜலத்தில், நிலைநின்ற - சிரகாலவாஸம்பண்ணின, தவங்கொல் - தபஸ்ஸாயிருக்கலாம்,

## [பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—முப்பத்தெட்டாம்பாட்டு.—யோகிகள் யோகாப்யாஸம் பண்ணும்போது யோகம் ஸாத்மிக்கைக்காக லோகயாத்ரையிலே யொன்றுவர்கள். அதுபோலே இவரும் பகவதநுபவம் ஸாத்மிக்கைக்காக லோகங்களில் பதார்த்தங்களிலே கண்வைத்தார். அவையும் பகவத்விஷயத்துக்கு ஸ்மாரகமாய் நலிகிறபடி. மயர்வறமதிநலம் பெற்றவராகையாலே, நம்மை லோகயாத்ரையினின்றும் வேதயாத்ரையிலே மூட்டுந்தனை யருமைபோரும் ஆழ்வார்களை வேதயாத்ரா

வ்யா||யிலே நின்றும் லோகயாத்ரையிலே மூட்டுகை. நம்மை ஸம்ஸாரத்திலுண்டான ருசிவாஸநையைத் தவிர்த்து பகவத்விஷயத்திலே யுண்டாக்குகைக்குள்ள வருமைபோரும் ஆழ்வார்கள் பகவத்விஷயத்தில் ருசி வாஸநையைத்தவிர்த்து ஸம்ஸாரத்திலே யுண்டாக்குகைக்கு. இரண்டு மெம்பாரருளிச்செய்தார்.

வ்யா.—(கடமாயினகள்கழித்து) (௧) "𑌋𑌣𑌾𑌨𑌿𑌤𑍍𑌰𑍀𑌣𑍍𑌯𑌪𑌾𑌕𑍃𑌤𑍍𑌯 - ருணாநித்ரீண்யபாக்ருத்ய" என்கிறபடியே (௨) "𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑍇𑌣𑌋𑌷𑌿𑌭𑍍𑌯𑌃 𑌯𑌜𑍍𑌞𑍇𑌨𑌦𑍇𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌜𑌯𑌾𑌪𑌿𑌤𑍃𑌭𑍍𑌯𑌃 - ப்ரஹ்மசர்யேணருஷிப்ய: யஜ்ஞேந தேவேப்ய: ப்ரஜயாபித்ருப்ய:" என்று சொல்லுகிறபடியே. உஷ்ணகாலத்திலே உஷ்ணமான தேசங்களிலே சரீரக்லேசங்களாலே சொல்லுகிற ருணத்ரயத்தையு மிறுத்து. (தன்கால்வன்மை யித்யாதி) தன்னுடைய யத்நத்தாலேயாதல், தபோபலத்தாலேயாதல், ஸத்தையைநோக்கியிட்டு வைத்து, சீதகாலத்திலே கடலோடு குளப்படியோடு வாசியறத் தீர்த்ததேசங்களெல்லாம் புக்குக் கழுத்துமட்டு நீரிலே நின்று தபஸ்ஸு பண்ணின அந்தபலத்தாலே வந்ததோ உங்களுக்கிப்பரமஸாம்யாபத்தி?

(குடமாடி.) மன்றிலே தன்னழகைச் சூறைகொள்ளும்படிக்கிடாகநின்று குடக்கூத்தையாடி இடையர்க்குண்டான செருக்குக்குத் தலைச்சாவி வெட்டினபடி. (இம்மண்ணுமித்யாதி) ஒருதெருவிலேயாதல் சிலர்க்காதல் தன்னைக்கொடுக்குமதன்றிக்கே லோகமாக வாழும்படி கூத்தாடினபடி. (குலுங்க) ஸம்ஹாரகாரணன் க்ருத்யமாகிலிறே லோகம் நடுங்கிற்றென்னலாவது; அங்ஙனன்றிக்கே, லோகமடையவச்செயலுக்கு நெஞ்சுளுக்கினபடி. (உலகளந்து நடமாடிய) இந்த்ரன்தானிழந்த பூமியைக்கொண்டுபோக, மஹாபலி தன்னதல்

அரு.—முப்பத்தெட்டாம்பாட்டு-(கடமாயினகள்) "உருவொத்தனநீலங்கள்" என்கிறத்திலே நோக்காக அவதாரிகை (யோகிகள்) இத்யாதி. ஒன்றுவர்கள்-கண்வைப்பார்கள். "நம்மை லோகயாத்ரையில்நின்றும்" என்று தொடங்கி யருளிச்செய்தத்தை விவரிக்கிறார் (நம்மை ஸம்ஸாரத்திலுண்டான) என்று. இப்படி எம்பாரருளிச்செய்வரென்றபடி. "-கடமாயினகள் கழித்து" என்றதுக்கு இரண்டுபொருள். அதாவது "ருணநித்ரீண்யபாக்ருத்ய" என்கிற ருணங்களைக்கழித்தென்னுதல்; அதவா-உஷ்ணகாலத்திலே என்று தொடங்கி அருளிச்செய்கிறாராதல். (தடமாயினபுக்கு) "தடாகங்கள்" என்று பேர்பெற்றவை யெல்லாவற்றிலும் புக்கு. அதாவது தடங்களோடு குளப்படியோடு வாசியறத் தீர்த்தங்களெல்லாவற்றிலும் புக்கென்றபடி. "குலுங்க" என்று பயத்தைச்சொல்லிற்றேயாகிலும் இவ்விடத்திலே பயத்தைச்சொல்லுகிறதன்று; ஈடுபாட்டைச்சொல்லுகிறது; இத்தை யருளிச்செய்கிறார் (ஸம்ஹாரகாரணன் க்ருத்யமாகில்) என்று ஸம்ஹாரகாரணனென்றது ருத்ரனை.

(௧)                    (௨)

வ்யாஸாதத்தைத்தனதென்று ப்ரமித்து "அத்தைக்கொடுத்தோம்" என்று ஔதார்யத்தாலே நினைத்துப்போக, இவர் திருவுலகளந்தருளினபொழுதை யநுஸந்தித்தேயாக வநுபவித்தார். (உருவொத்தன நீலங்களே) இப்படி ஸர்வதாஸத்ருசமான வடிவை நீலங்கள் பெறுகைக்கடி-கடமாயினகள் கழித்துத் தன்கால்வன்மையால் பலநாள் தடமாயின புக்கு நீர்நிலைநின்ற தபஸ்ஸோ! இவர்க்கு பகவத்விஸ்லேஷத்தில் லோகயாத்ரை யநுஸந்திக்கப்புக்கால் அதுவும் பகவத்விஷயத்துக்கு ஸ்மாரகமாய் நலியும்படியிறே பிறந்த ஜ்ஞாநவைசத்யம். அத்தைச் சொல்லுகிறது. ௩அ

---

அரு||[நீலங்கள்குடமாடி இம்மண்ணும்விண்ணுங்குலுங்க உலகளந்த நடமாடிய பெருமானுடைய உருவொத்தன, அவை ஸாம்யத்தைப்பெறுகைக் கடி-கடமாயினகள்கழித்துத் தன்கால்வன்மையால் பலநாள் தடமாயினபுக்கு நீர்நிலைநின்ற தவமிதுகொல்] என்றந்வயம். ௩அ

[அப்பு அருப்பதம்.]

மூப்பத்தெட்டாம்பாட்டு (கடமாயின) "நீலங்கள்" என்கையாலே லோகயாத்ரையிலே கண்வைக்கை. "உருவொத்தன" என்கையாலே ஸ்மாரகமாய் நலிகிறபடி. ஸாத்மிக்கைக்காக லோகயாத்ரையிலே கண்வைத்தவர் அது நிலமல்லாமையாலே லோகயாத்ரையிலே நிற்கை யருமையென்னுமத்தை யருளிச்செய்கிறார் (நம்மை) இத்யாதி. (கடமாயினகள்கழித்து) கடமாயின - உபாஸநாங்கமான ருணத்ரயமென்னுதல், ஸர்வாதிகமான தபஸ் சர்யாங்கமான ருணத்ரயமென்னுதல். அதாவது-உஷ்ணகால உஷ்ணதேச காயக்லேசமாகிற ருணத்ரயமென்றபடி. "கால்" என்றது சரீரமாய், சரீரயத்நத்தாலே என்னுதல். "கால்" என்று காற்றாய், அத்தாலசைவாய், "தப ஆலோசநே" என்கிற வ்யுத்பத்தியாலே தபஸ்ஸாதல். ஸம்ஹாரகாலத்தில் ருத்ரனுடைகை யஸஹ்யமாயிருக்கும். ௩அ

[வேறொரு அரும்பதம்.]

மூப்பத்தெட்டாம்பாட்டு (கடமாயின) இத்யாதி. கீழே "இளமான்செ-ன்றசூழ்கடமே" என்று திருத்தாயார் தேடிக் காணாதேயிருந்தபின்பு இவள் போனகாடு தடங்களும் அதில் புஷ்பங்களுமாயிருக்க, அவற்றில் நீலங்களைக் கண்டு ஸர்வேச்வரன் திருமேனிக்குப் போலியாகையாலே அதிலே கண்வைத்ததாலே பிராட்டி பாசுரமென்று அந்யாபதேசஸங்கதி யுட்கொண்டு ஸ்வாபதேசபாவ மருளிச்செய்கிறார் (யோகிகள்) இத்யாதி. "யோகம்ஸாத்மிக்கைக்காக" என்றது-சிரகாலவாஸிதமான லோகயாத்ரையிலே நின்று சரீரதாரணாதிகளைப் பண்ணினால் பின்னையும் யோகமப்யஸிக்கலாமென்கை. "அநுபவம்ஸாத்மிக்க" என்றது- உத்கடாநுபவம்வந்தாலப்போதே காணவேணும் என்றபிநிவேசம் மிகுந்து அதப்போதே கிடையாமையாலே அதுலோ

சத்தாரைப்போலே மறந்திருந்தால் அபிநிவேசமாறும் அந்தர மருடலிப் போம் என்று விசாரித்து நினைக்கலாறுமென்கை. "கண்வைத்தார்" என்ற அர்த்தஸித்தம். இங்ஙனன்றிக்கில் - நடந்துசென்றவள் நடந்தே நீலங்களைப்பார்த்து நில்லாளிறே. லோகயாத்ரையிலே தபஸ்விகளுக்கும் நீலங்களுக்கும் பொருவிலேயாயிருக்கிறதென்று விவக்ஷித்து "கடம்" என்றது கடமென்று யருளிச்செய்கிறார் (நுணுகு) இத்யாதி. "கடம்" என்றது - காடாய், அதுபொல்லாநிலமாய், நீலங்கள் ஜலபூமியிலே இராமையைப்பற்ற வருளிச்செய்கிறார் (உஷ்ணை) இத்யாதி. பாலைநிலத்தைச் சொன்னது உபலக்ஷணமாய் "இசை" என்றத்தாலே காலப்ரயுக்தமான உஷ்ணமும் பசியடியான உஷ்ணமுமில்லை நீலங்களுக்கென்று கருத்து. "கால்" என்று சரீரத்துக் குபலக்ஷணமாக்கியும் "கால்" என்று காற்றாய், அதனாலுண்டான வன்மையாவது வாயுபக்ஷணமும் மென்றும் விவக்ஷித்து சப்த ஸ்லேஷையு முட்கொண்டு பாவமருளிச்செய்கிறார். (தன்கால்) இத்யாதி. இதுவென்றதினர்த்தம் (இப்பரமஸாம்யாபத்தி) என்றது. கூறை-கொள்கை, கொள்ளைபிடிகை. குறுங்குதல் - தலை குறுக்குதலாய், வ்யாவர்த்யபூர்வகம், தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸம்ஹாரா) இத்யாதி. நெஞ்சுளுக்கை-சுடுபடுகை. "கடமாடிய" என்றதுக்கு பாவம் (இந்த்ரன்) இத்யாதி. ருஅ

தாத்பர்யம்.—இதிலாழ்வார், ஸர்வேஸ்வரன் ஆஸ்ரிதர்க்கு ஸாரூப்யப்ரதானம் பண்ணுமவனாகையால் நமக்கும் ஸாரூப்யத்தை யளிக்குமென்றநுஸந்தித்துரைத்தபாசுரத்தை, கருநெய்தல்களில் ஸர்வேஸ்வரனான நாயகன் போலியைக்கண்டுரைத்த நாயகியின் பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

நாயகியானவள், ராத்ரியில் சந்த்ரகிரணங்களினால் மலர்ந்திருக்கிற கருநெய்தல் புஷ்பங்களைக்கண்டு, இவற்றினின்னிறம், க்ருஷ்ணாவதாரத்திலும் வாமநாவதாரத்திலும் அத்யாஸ்சர்ய கரங்களுமாய் அதிமாநுஷங்களுமான சேஷ்டிதங்களை யாசரித்த எம்பெருமானுடைய திருமேனியோடொத்திருந்தது. இவை அவன் நிறத்தைப்பெறுகைக்குக்காரணம்-இவைகள் ஸாங்கமாக கர்மயோகங்களை யநுஷ்ட்டித்து அநந்தரம், வெய்யிற்காலங்களில் மலைத்தாழ்வரைகளிலும், குளிர்காலங்களில் தடாகங்களிலும் நின்று சிரகாலமாகப்பண்ணின தபஸ்ஸாயிருக்கலாமோ என்று ஊஹிக்கிறாள். (ருஅ)

நீலத்தடவரைமேற்புண்டரீகநெடுந்தடங்கள்
போலப்,பொலிந்தெமக்கெல்லாவிடத்தவும்,பொங்குமுந்நீர்
ஞாலப்பிரான் விசும்புக்கும்பிரான் மற்றும்நல்லோர்பிரான்
கோலங்கரியபிரான்,எம்பிரான்கண்ணின்கோலங்களே. ருகூ.

அர்த்தம்.—பொங்கு - கிளர்த்தியையுடைய, முந்நீர் - ஆற்றுநீர் ஊற்றுநீர், மழைநீர் என்கிற மூன்றுவிதமான நீரையுடைய, ஞாலம் - பூமிக்கு, பிரான் - உபகாரகனாய், விசும்புக்கு மேலுலகத்திலுள்ளார்க்கும், பிரான்-

உபகாரகனாய், மற்றும் - இன்னும், நல்லோர்கள் - குணாநுபவபரரான நித்ய முக்தர்களுக்கு, பிரான் - உபகாரகனாய், கரிய - நீலவர்ணத்தையுடைய, கோலம் - திருமேனியையுமுடைய, பிரான் - உபகாரகனாய், எம்பிரான் - எமக்குபகாரகனான எம்பெருமானுடைய, கண்ணின் - கண்களினுடைய, கோலங்கள் - அழகுகள், நீலம் - நீலரத்நமயமாய், தடம் - பெருத்த, வரைமேல்- பர்வதத்தின்மேலே, புண்டரீகம் - தாமரைகளையுடைய, நெடும் - விசாலமான, தடங்கள்போல - தடாகங்கள்போலே, பொலிந்து-ஸௌந்தர்ய பூர்ணமாய், எமக்கு - நமக்கு, எல்லாவிடத்தவும் - ஸமஸ்தப்ரதேசங்களிலும், (ப்ரகாசியாநின்றன.) (௩௯)

## [பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—முப்பத்தொன்பதாம்பாட்டு.—கீழ்ப்பாட்டிலநுஸந்தித்த நீலங்கள், தனக்குப்போலியான திருமேனியிலேகொண்டுபோய் மூட்டிற்று; திருமேனி தனக்குப்பகைத்தொடையான திருக்கண்களிலே மூட்டிற்று. திருக்கண்கள் தனக்கவ்வருகுபோகவொட்டாதே நலிகிறபடி சொல்லுகிறது. (க) "గృహీత్వా ప్రేక్షమాణా-க்ருஹீத்வாப்ரேக்ஷமாணா" இத்யாதி-

வ்யா - (நீலத்தடவரைமேல்) (உ) "பச்சைமாமலைபோல்மேனி" என்னுமாபோலே ஒரு நீலகிரிபோலே காணும் திருமேனியிருப்பது. (புண்டரீகஇத்யாதி) அதின்மேலே பூர்ணமாகத் தாமரைபூத்த பெரிய தடாகங்கள்போல மிகாநின்றன - உடம்பெல்லாம் கண்ணாயிருக்கிறபடி. அவ்வவயவமொழிய அவயவாந்தரத்தில் போகவொண்ணாதேயிருக்கிறபடி (௩) "తస్య యథా కప్యాసం పుండరీకమేవమక్షిణీ-தஸ்யயதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ" என்று உபநிஷத்துக்களிற் சொல்லுகிறதாமரை. (எமக்கெல்லாவிடத்தவும்) கந்தவ்யபூமியில்லாதபடிக் கீடாகத் திருக்கண்கள் தொடர்ந்தபடி. கண்ணைச்செம்புளித்தவாறே கண்ணுக்குள்ளே தோற்றினபடி. புறம்பெங்குந் தோற்

அரு.—முப்பத்தொன்பதாம்பாட்டு.—(நீலத்தடவரை)பகைத்தொடை-பரபாகம். நீலங்கள் திருமேனியிலேமூட்ட, திருமேனி திருக்கண்களிலே மூட்ட, இப்படி ஒன்றொன்றிலே மூட்டிற்றென்கைக்கு ஸம்வாதமாக அருளிச்செய்கிறார் (க்ருஹீத்வாப்ரேக்ஷமாணா) இத்யாதி. அதாவது - பிராட்டி திருவாழிமோதிரத்தைவாங்கி அவ்வழியாலே யதுசாத்தின திருவிரல்களை நினைத்து, அவ்வழியாலே பெருமாளோடே ஸம்ஶ்லேஷித்ததாக நினைத்தாளிறே. "உடம்பெல்லாம்கண்ணாய்" என்கிறவிடத்திலே (௪) "కృపయా పర్యాకరిష్యమాణే సకలాంగమ్ - க்ருபயாபரயா கரிஷ்யமாணே ஸகலாங்கம்" என்ற ஶ்லோகமநுஸந்தேயம். பொலிந்து-ஸம்ருத்தமாய். "கண்களே எங்குமொக்கத் தோன்றுகின்றன" என்கையாலே(அவ்வவயவமொழிய அவயவாந்தரத்தி

(க) ஸ்ரீராமா-ஸுந்தர ௩௬-௪.　(உ) திருமாலை-உ.
(௩) சாந்தோக்யம்-௧௬-௭.　(௪) ஸ்ரீரங்கராஜஸ்தவம்-௩-௯௮.

வ்பா!!பித்து என்னைத் தோற்பிக்கவந்தபடி. (க)“ சூழவுந்தாமரை நாண்மலர்போல் வந்து தோன்றுங்கண்டீர்” (உ) “கருமாணிக்க மலை” இத்யாதி.

(பொங்குமுந்நீர் ஞாலப்பிரான்) பொங்காநின்று மூன்றுவகைப்பட்ட நீரையுடைத்தான கடல்சூழ்ந்த பூமிக்கெல்லா முபகாரகன். ப்ரளயாத்யாபத்திலே ரக்ஷித்தவன். (விசும்புக்கும் பிரான்) இவர்களுக்கு ஜநகனை ப்ரஹ்மாதிகளுக்கும்நிர்வாஹகனானவன்.(மற்றும்நல்லோர்பிரான்) நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனானவன். (கோலங்கரியபிரான்) இக்கண்ணுக்கு வளைத்துக்கொடுக்குமுடம்பு. நித்யஸூரிகளுக்கு முற்றூட்டாக வநுபவிக்கக்கொடுக்கிற உடம்பு. இவ்வடிவைக்காட்டியிறே யவர்களைப் பிச்சேறப்பண்ணுவது. (எம்பிரான்) அவர்களுக்கெல்லாம் நாயகனானாற்போலே எனக்கும் நாயகனானபடி. (கண்ணின்கோலங்களே) எனக்குபகாரகனானவனுடைய விலக்ஷணமான திருக்கண்கள். நீலத்தடவரைமேற் புண்டரீகநெடுந்தடங்கள்போலப் பொலிந்தெமக்கெல்லாவிடத்தவும். ௩௧

அரு!!ல் போகவொண்ணாதே யிருக்கிறபடி) என்கிறார். “எல்லாவிடத்தவும்” என்றது-உள்ளும் புறம்புமென்றபடி. (கருமாணிக்கமலையித்யாதி) என்றது-“கருமாணிக்கமலைமேல் மணித்தடந் தாமரைக்காடுகள்போல்” என்றருளிச்செய்தாற்போலே என்றபடி. செய்த உபகாரமேதென்ன அருளிச்செய்கிறார் (ப்ரளயாத்யாபத்திலே ரக்ஷித்தவன்) என்று. “கோலம்” என்று விக்ரஹமாய், “கரியகோலம்” என்று கறுத்திருந்துள்ள விக்ரஹத்தைச் சொல்லுகிறது. “இக்கண்ணுக்குவளைத்துக்கொடுக்குமுடம்பு” என்றது-இக்கண் இப்படி படுத்துகைக்கு,கண்ணுக்கு விதேயமாக்கிக்கொடுத்த உடம்பென்றபடி. கோலமான கண்களென்றதாய், (விலக்ஷணமானதிருக்கண்கள்) என்றபடி.

பொங்குமுந்நீர் ஞாலப்பிரான், விசும்புக்கும் பிரான் மற்றும்நல்லோர் பிரான் கோலங்கரியபிரான் எம்பிரான் கண்ணின் கோலங்கள் நீலத்தடவரைமேல் புண்டரீக நெடுந்தடங்கள்போலப் பொலிந்தெமக் கெல்லாவிடத்தவும் என்றந்வயம். ௩௧.

[அப்பு அரும்பதம்.]

முப்பத்தொன்பதாம்பாட்டு - (நீல) இப்படி ஒன்று ஒன்றிலே மூட்டியநுபவித்தவிடமுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (க்ருஹீத்வா) இத்யாதி. எல்லாவிடத்தவும் - பார்த்தபார்த்தவிடமெங்கு மென்னுதல், மநஸ்ஸுக்குள்ளுமென்னுதல். “எமக்கு” என்றதைப்பற்ற வருளிச்செய்கிறார் (புறம்பெங்கும்) இத்யாதி. எங்கும்தோற்றும் என்னுமதுக்கும், மலைமேல் தாமரை என்னுமதுக்கும் ப்ரமாணமருளிச்செய்கிறார் (சூழவுந்தாமரை) இத்யாதி. கண்ணுக்கு வளைக்கை - கண்ணை யநுபவிக்கைக்கு போக்தாக்களை வசீகரிக்கை. (௩௧)

(க) திருவாய்-எ-எ-க. (உ) திருவாய்-அ-௯-க.

[வேறொரு அரும்பதம்.]

முப்பத்தொன்பதாம்பாட்டு - (நீல) இத்யாதி. பகைத்தொடை - பரபாகம், ஒன்று ஒன்றிலே மூட்டுமென்றதுக்கு ஸம்வாதம் (க்ருஹீத்வா) இத்யாதி. திருவாழிமோதிரங்கண்ட உடனே பிராட்டி திருவிரலைநினைப்பது, திருக்கைகளைநினைப்பது, அது திருத்தோளிலேமூட்ட, அது திருமேனியை நினைப்பிக்க இப்படியாளுற்போலே என்று கருத்து. "பொலிந்து" என்றதுக்குத் தாத்பர்யம் (உடம்பு) இத்யாதி. இது உருவெளிப்பாடென்னுமதுக்கு ஸம்வாதம் (சூழவும்) இத்யாதி. வர்ணாந்தரத்துக்கு த்ருஷ்டாந்தம் (கரு) இத்யாதி. (௩௯)

தாத்பர்யம்.—கீழிற்பாட்டில் எம்பெருமானுடைய திருமேனி ஸௌந்தர்யத்தை ஸ்மரிக்கும்போது அத்துடன்கூட திருக்கண்களும் ஸ்ம்ருதமாய், அவ்வழகிலீடுபட்டுளாத்த பாசுரத்தை, நாயகனுடைய உருவெளிப்பாட்டைத் தோழிகளுக்குரைக்கிற நாயகியின் பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

அதிஸுந்தரமான கரிய திருமேனியையும் அதினிடையில் பூத்ததாமரைபோன்ற திருக்கண்களையு முடையனாய் தன்கடாக்ஷத்தினால் உபயவிபூதியிலுள்ள ஸகலப்ராணிகளையு முகப்பிக்குமவனான எம்பெருமானுடைய திருக்கண்ணழகானது, இந்த்ரநீலமணிமயமான பெரியபர்வதத்தின்மேலே பரந்து கமலப்பூக்களையுடைய தடாகங்களைப்போல் எனக்குக்கண்ட விடமெல்லாம் தோற்றுநின்றதென்கிறாள். (௩௯)



கோலப்பகற்களிறொன் றுகற்புய்யக்,குழாம்விரிந்த
நீலக்கங்குற்களிறெல்லாம்நிறைந்தன,நேரிழையீர்
ஞாலப்பொன்மாதின்மணாளன் றுழாய்நங்கள்சூழ்குழற்கே
ஏலப்புனைந்தென் னைமார்,எம்மைநோக்குவதென்றுகொலோ. ௪0.

அர்த்தம்.—கோலம் - அழகிய, பகல் - ஸூர்யனாகிற, ஒன்று களிறு - ஒருயானை, கல் - அஸ்தமயபர்வதத்தில், புய்ய - புக, குழாம் - கூட்டமாக, விரிந்த - பரந்த, நீலம் - நீலவர்ணத்தையுடைய, கங்குல்-ராத்ரியாகிற, களிறெல்லாம் - யானைகளெல்லாம், நிறைந்தன - நிறைந்தனகள், நேர் - தகுதியான, இழையீர் - ஆபரணங்களையுடையவர்களே! ஞாலம்- பூதேவிக்கும், பொன்மாது—ஸ்ரீதேவிக்கும், மணாளன் - பர்த்தாவான ஸ்ரிய:பதியுடைய, துழாய் - திருத்துழாயை, நங்கள் - நம்முடைய, சூழ் - நிபிடமான, குழற்கே - மயிர்முடிகளிலே, ஏல - முற்பட, புனைந்து - முடித்து, என்னைமார் - எம் அன்னைமார், எம்மை - நம்மை, நோக்குவது - காப்பது, என்று கொல் - எப்போதாக. (௪0)

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—நாற்பதாம்பாட்டு,—ஸர்வாதிகனைக் கவிபாடின விவளுக்கு ஒருபகலைக் கவிபாடும்படி பிறந்த தசையைச்சொல்லுகிறது.

அரு.—நாற்பதாம்பாட்டு.— (கோலப்பகல்களிறொன்று) "கோலப்பகல்களிறு" என்று வர்ணிக்கையாலே (பகலைக் கவிபாடும்படி பிறந்ததசை) என்றரு

வ்யா (கோலப்பகல்களி றொன்று கற்பய்ப) தர்சநீயமாய் அத்விதீயமான பகற்களிறுகல்விலேசேர - அஸ்தமயபர்வதத்தேப்புக. தர்சநீயமான பகலென்பானென்னென்னில், இந்த்ரியங்கள் தனித் தனியே ஸ்வவிஷயங்களை க்ரஹிக்கையாலே தரித்திருக்கலாம். (சூழாம்விரிந்தவித்யாதி) ராஜாக்கள்போகப் பள்ளிகள்வந்து புகுருமா போலே ஆதித்ய னஸ்தமித்தவாறே ராத்ரியானது குழாங்குழா மாகவந்து விஸ்த்ருதமானபடி. இந்த்ரியங்களெல்லாமொக்க உபரத மாய் ஏகவிஷயத்தையே காணுமாகையாலே அலாபதசையில் ரா த்ரிபாதகமாகிறபடி. (நீலக்கங்குலித்யாதி)கறுத்த ராத்ரியான களிறு களெல்லாங் கையுமணியும் வகுத்தன. ராத்ரியை பகுவசநமாகச் சொல்லுவானென்னென்னில், கல்பங்களேழுழிக ளென்னுமாபோலே.

(நேரிழையீர்) இவ்வாளைக்காலிலே துகைபுண்கைக்கு நாஞோர பலையிறே. ஊராரிவளைத் தரிப்பிக்கைக்காகத் தாங்களொப்பனை யோடே யிருப்பர்களிறே. (ஞாலப்பொன் மாதின்மணாளன்) அவன் தனியிருந்தன்றுகிடீர் நானிந்நோவுபடுகிறது; ஸ்லாக்யமான ஸ்ரீ பூமிப்பிராட்டியுந் தானுங்கூட விருக்கிறவிருப்பிலே. நிதியுடையார் எல்லாவிநியோகமுங் கொள்ளுகிறோமென்று அஞ்சாதிருக்குமாபோ லே இவளுக்கு மிவளுண்டென்றுசொல்லி யஞ்சாதிருக்கலாயிறே யிருப்பது. (மாதின் மணாளன்) இவளுடைய போக்யதையாலே பிச்சே றியிறே யிருப்பது. இவள்பக்க லிவனுக்குண்டான வ்யாமோஹ மித் தனையுந் தனக் குறுப்பென்றிருக்கிறாள். (துழாயித்யாதி) அவனு டைய ப்ரஹ்மசர்யத்தேகூடின மாலையின்றிக்கே அவனு மவளுமா ய்த் துகைத்தமாலையை யாசைப்படுகிறாள், ராஜகுமாரன் புழுகுநெய் யிலே பூவைத்தேய்த்துச் சூடுமாபோலே. இவன்தான் (க) "ஸர்வ்வக ஸ்ஸர்வரஸ: - ஸர்வகந்தஸ்ஸர்வரஸ:" என்னுந் தத்வமிறே. (உ) வாச ஞ்செய் பூங்குழலாள்" என்று அங்குத்தைக்கும் வாசங்கொடுக்கும் படியிறே இவளிருப்பது. அப்படிப்பட்ட மிதுநமாயிருக்கிற விருப் பிலே சூடித்துகைத்தத்தையிறே இவளாசைப்படுகிறது. (நங்கள் சூழ்குழற்கேயேலப்புனைந்து)பின்னையும்பரிஹாரமிதல்லதில்லையிறே

அருளிச்செய்கிறார். பகலென்று ஆதித்யனைச்சொல்லுகிறது. ஸமூஹமாய்க் கொண்டு விஸ்த்ருதமானகறுத்தராத்ரியானகளிறுகளெல்லாம் நிறைந்தன-கை யுமணியும் வகுத்தன-ஒருராத்ரியை பஹுவசநமாகச் சொல்லுகிறது-"ஓரிர வேழூழி" என்று ஒன்றே அநேகமாகத் தோற்றுகையாலே சொல்லுகிறாெ ன்றபடி. "நேரிழையீர்"என்று வினவவந்தவர்களை ஸம்போதிக்கிறாள். இவள் து:கப்பட்டிருக்க வினவவந்தவர்கள் அலங்கரித்துக்கொண்டு வரக்கூடுமோ வென்ன அருளிச்செய்கிறார் (ஊராரிவளைத்தரிப்பிக்கைக்காக) என்று;

(க) சாந்தோக்யம். ௩-கச.                    (உ) திருவாய்-கO-கூ-உ.

வ்யா|| ஏல-ஏற்கவே. அத்தை ஸத்தை யழிவதற்குமுன்னே புனைந்து. (என்னையார்) விலக்குந்தாய்மாரை யிட்டிறே பரிஹாரந் தேடுகிறது. வழியடிக்காரரைத் தண்ணீர்வேண்டுமோபோலே. (எம்மைநோக்குவ தென்றுகொலோ) இப்படி நமக்கு ரக்ஷைபெறுவதென்றோ? (௪௰)

---

அரு|| "ஏற்கவே" என்கையாலே, பின்னையும் பரிஹாரமிதல்லதில்லை. ஆகையாலே ஸத்தையழிவதற்கு முன்னே புனைந்தென்றபடி.

[நேரிழையுயிர் கோலப்பகற்களிறொன்று கற்புய்யக்குழாம்விரிந்தநீலக்கங்குல் களிறெல்லாம் நிறைந்தன ஞாலப்பொன்மாதின் மணாளன்துழாய் நங்கள் சூழ்குழற்கே ஏலப்புனைந் தென்னைமார் எம்மை நோக்குவதென்று கொலோ] என்றந்வயம். (௪௰)

[அப்பு அரும்பதம்.]

நாற்பதாம்பாட்டு - (கோல) பகலாகிற ஆனை அஸ்தமயபர்வதத்திலே புக. "கல்" என்று பர்வதமாய், புய்ய-புக என்றபடி-இவள் நோவுபட இவர்கள் பூணுவார்களோவென்ன அருளிச்செய்கிறார் (ஊரார்) இத்யாதி. "பொன்" என்றத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (நிதியுடையார்) இத்யாதி. புழுகுஸ்தானம் இருவர்சேர்த்தியும். (௪௰)

[வேறொரு அரும்பதம்.]

நாற்பதாம்பாட்டு (கோல) இத்யாதி. கீழ்ப்பாட்டிலே நோவுபட்டுக் கண்ணிலே துவக்குண்ணச்செய்தேயும் அவனுடைய ஸர்வோபகாரங்களைச்சொல்லிக் கவிபாடினபடியை நாட்டார் கேட்டுவந்து புகுந்து நிற்கச்செய்தே ஸூர்யனு மஸ்தமிக்கும்போதாய்விழ, அத்தைக்கண்டஞ்சி அவர்களோடே தாய்மார் நோக்கவல்லார்களோ வென்று தன்னுசையாலேசொல்லும் பாசுரமென்று ஸங்கதியுட்கொண்டு, "கோலப்பகல்" என்று வர்ணித்ததுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (ஸர்வாதிக) இத்யாதி. பகலை-ஸூர்யனை, ஏகவிஷயம்-தான் நினைத்தவிஷயம். பஹுவசநமென்றது. "நிறைந்தன" என்றத்தைப்பற்ற, உபாலம்போக்தியாகத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (இவ்வானை) இத்யாதி. இவள் வெறுக்கும்படி யவர்கள் பூண்டுவருவா னென்னென்ன வருளிச்செய்கிறார் (ஊரார்) இத்யாதி. "பொன்" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம். (நிதி) இத்யாதி. ப்ராப்யதயாசேர்த்தியை அநுபவிக்கிறாளென்று தாத்பர்யாந்தரம் (அவனுடைய) இத்யாதி. (௪0)

தாத்பர்யம்.— கீழ்ப்பாசுரத்தில் பகவத் ஸௌந்தர்யத்தை மாநஸமாக அநுபவித்த ஆழ்வார், பின்பந்த ஸௌந்தர்யத்தை ப்ரத்யக்ஷமாக அநுபவிக்கப் பெறாமையாலே முன்புள்ள மாநஸாநுபவமும் போய்த்தளர்ந்து, அருகிருக்கிற இப்பாகவதர்கள் நம்மைக்கொண்டுபோ யவன் திருவடிகளிலெப்போது சேர்ப்பர்களோ வென்றுரைத்த பாசுரத்தை, விரஹிணியான நாயகி, நாயகனுடன் சேரவேணுமென்றபிப்ராயத்தாலுரைத்த பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்,

ஓஸகிகளே! என்னைத்தேற்றுகைக்காக நீங்களலங்கரித்து வந்தீர்கள். இதனால் எனக்குத்தேற்றம் பிறக்கவில்லை. எனக்கு ஆஶ்வாஸகரமான பகலும் போய் அஸ்தமித்துவிட்டது. கண்டவிட மெங்கும் இரவானது அனேகவடிவுகொண்டு தோற்றி நலியத்தொடங்கிற்று. இந்த ஸமயத்தில் என் ப்ராணன் தரிக்கும்படி, ஸ்ரீபூமிதேவிக்கு வல்லபனுடைய வணிந்த திருத்துழாயை என் குழல்மேல் சூட்டி என்தாய்மார்கள் என்னை யவன் ஸந்நிதியிலேகொண்டு எப்போது விட்டு ரக்ஷிப்பார்களோ தெரியவில்லை. ௬௦.



என்றும்புன்வாடையிதுகண்டறிதும், இவ்வாறுவெம்மை
ஒன்றுமுருவுஞ்சுவடுந்தெரியிலம்,ஓங்கசுரர்
பொன்றும்வகைபுள்ளையூர்வானருளருளாதவிந்நாள்
மன்றில்நிறைபழிதூற்றி, நின்றெம்மைவன் காற்றடுமே. (௬௧)

அர்த்தம்.—என்றும் - எப்போதும், இது - இந்த, புன்வாடை - மந்தமாருதத்தை, கண்டறிதும் - அநுபவித்தறிவோம். இவ்வாறு - இவ்விதமான, வெம்மை - கொடுமையையுடைய, உருவும் - ரூபத்தையும், சுவடும் - ப்ரகாரத்தையுமுடைய, ஒன்றும்-ஒருவஸ்துவையும், தெரியிலம்-அறிய மாட்டோம். ஓங்கு - வ்ருத்தியடைந்த, அசுரர் - அஸுரர்கள், பொன்றும்வகை - நசிக்கும்படி, புள்ளை - கருத்மானை, ஊர்வான் - நடத்துமவனான எம்பெருமான், அருள் அருளாத - க்ருபைபண்ணாத, இந்நாள் - இந்த தினங்களில், மன்றில்-வெளியில், நிறை - பூர்ணமான, பழி - அபவாதத்தை, தூற்றி - வ்யாபிக்கச்செய்து, நின்று - சலியாமலிருந்து, வன் - க்ரூரமான, காற்று-காற்றானது, எம்மை-நம்மை, அடும் - பாதிக்கிறது. (௬௧)

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—நாற்பத்தோராம்பாட்டு. "எம்மைநோக்குவ தென்றுகொலோ" என்று நமக்கு ரக்ஷகராவாராரோவென்றிருந்த விவளுக்கொருகாற்று வந்து ரக்ஷிக்கிறபடி, ஸத்தாதாரகமாகிறவை பாதகமாகிறபடி.

வ்யா.—(என்றும் புன்வாடையிதுகண்டறிதும்) சிறைக்கூடத்திலே பிறந்து வளர்ந்தாரைப்போலே காற்றுக்குடல்கொடுத்துப்போந்தபடி. புன்வாடை - மந்தமாருதம். (இதுகண்டறிதும்); இப்படியொத்ததொன்று கண்டறியோம். போனத்தை "இது" என்று சொல்லுவானென்னென்னில், ஸர்வதா ஸாத்ருஶ்யமுண்டாயிருக்குமவை

அரு.—நாற்பத்தோராம்பாட்டு.— (என்றும் புன்வாடை) "ஒருகாற்று வந்து ரக்ஷிக்கிறபடி" என்றது விபரீதோக்தியாய், பாதிக்கிறபடி என்றபடி. "ஸத்தாதாரகம்" என்கிறது, காற்று ப்ராணனாகையாலே. முன்பெல்லாம் நாயக ஸம்ஶ்லேஷமும் உண்டாயிருக்க, "என்றும்" என்கிறதென்னென்ன அருளிச்செய்கிறார் (சிறைக்கூடத்திலே) இத்யாதி, "என்றும்புன்வாடைஇது

வ்யா|| யெல்லாவற்றிலும் தத்தத் வ்யவஹாரயோக்யதையு முண்டா கையாலே: ஜாதியைச்சொன்ன வத்தனையொழிய வ்யக்தியைச் சொல்லிற்றன்று. (இவ்வாறித்யாதி) இப்படிப்பட்ட வெவ்விய ஸ்வபாவத்தையுடைத்தாயிருப்பதுமொன்றுங் காண்கிறிலோம்.

(ஓங்கசுரரித்யாதி) பிரிவாற்றாமை மெலிந்திருக்கிறவர்களன்றியிலே, சேஷபூதரா யொசிந்திருக்கிறவர்களன்றியிலே, "மமேதம்" என்று ரஜஸ்தமஸ்ஸுக்களாலே ப்ரசுரமான வடிவையுடையராயிருக்கிற அஸுரர் பொன்றும்படி பெரிய திருவடியைநடத்துகிற ஸர்வேஶ்வரனுடைய வருள் மறுத்த விந்நாள், திருவடியுடைய திருக்குளம்பாலே யஸுரரைத் துகைத்தாற்போலே இவ் வாடையை யும் துகைக்கக்காணும் நினைக்கிறது. ( அருளருளாதவிந்நாள் ) தாய்முலைப்பால் மறுத்த விந்நாள். ( மன்றில்நிறைபித்யாதி ) இவளங்கே பெறுகைக் கன்றியிலே பழிசுமக்கைக் குறுப்பாயிற்று. லோகமடங்க "ஒருத்தி பிரிந்தவளவிலே ஒருகாற்றுக்கிடைபட்டுத் துடிப்பதே" என்று பழிசொல்லும்படியாயிற்று. (நிறைபழி) தன்னளவிலேயன்றியிலே "இவள்காற்றிலே யிடைபட,வாராதொழிவதே" என்று நாயகனுக்கும் பழியானபடி. (நின்றெம்மை வன்காற்றடுமே) ஒருகால் நலிந்து போகிறதில்லை. (எம்மை) இக்காற்றுக்குத்தடவிப் பிடிக்க வேண்டும்படி ஆஶ்ரயம் காணவொண்ணாத வென்னை. வலிதான காற்று ஸத்தையை முடியாநின்றது. (வன்காற்று) நீர்மை கலவாத காற்று. (அடுமே) "ஸ்த்ரீவதமிறே" என்று பார்க்கிறதில்லை.

---

அரு||கண்டறிதும்"-எல்லாக்காலத்திலும் மந்தமாய் நலிந்துபோருகிற விந்த வாடையைக்கண்டறிவுதோம். "இவ்வாறு வெம்மை யொன்று முருவுஞ் சுவடுந் தெரியிலம்" - இப்படிப்பட்ட வாடையினுடைய க்ரௌர்யத்தினுடைய ஸ்வரூபமும் அதுக் கடியாகஸூசகமும் ஒருப்ரகாரத்தினாலுங் கண்டறிகிறிலோ மென்று சப்தார்த்தம் "இவ்வாறு" என்றது - இப்படிப்பட்ட வாடையினுடைய என்றபடி. சுவடு - ஸூசகம். உரு-ஸ்வபாவம். "இது கண்டறிதும்" என்றது-இப்படிப்பட்ட வாடையைக்கண்டறிவோமென்றபடி.

" ஓங்க சுரர் " என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் (பிரிவாற்றாமை) இத்யாதி. ஒங்கசுரர் பொன்றும்வகை புள்ளையூர்வான்"என்றதுக்குத் தாத்பர்யம் திருவடியுடைய திருக்குளம்பாலே என்று. மன்றில்-நாலுபேரிருந்த விடத்திலே. தூற்றி-தூற்றிவைத்தென்றபடி. ( இவளங்கே பெறுகைக் கன்றியிலே ) என்றது-நாயகனைப் பெறுகைக்கன்றியிலே என்றபடி.

ஸ்வாபதேசம்.—இத்தால், நெடுநாள்பொருந்திப் போந்த ஸம்ஸாரந்தானே பகவத்ப்ராவண்ய முறைக்க வுறைக்க இதில் பொருந்தாதபடியான நிலைபிறந்தபடி சொல்லுகிறது. (சக)

அரு|| [ஓங்கசுரர் பொன்றும் வகை புள்ளைபூர்வான் அருளருளாத விந்நாள் மன்றில் நிறைபழிதூற்றி நின்றெம்மை வன்காற்றடும். ஆகையாலே என்றும் புன்வாடை இதுகண்டறிது மிவ்வாறு வெம்மை யொன்று முருவுஞ் சுவடுந் தெரியிலம்] என்றந்வயம். (சக)

[அப்பு அரும்பதம்.]

நாற்பத்தோராம்பாட்டு.—(என்றும்) ப்ராணஸாம்ய முண்டாகையாலே வாயுவை "ஸத்தாதாரகம்" என்கிறது. "தெரியிலம்" என்றத்தைப்பற்ற (கண்டறியோம்) என்கிறது. "என்றும்" என்றுபோனத்தை "இது" என்னக்கூடுமோவென்று சங்காபிப்ராயம் - முன்னே கண்டதெல்லையும் பிற்காலத்திலே ஜாதிஸாமாந்யத்தைப்பற்ற இந்தநிலவென்னுமாபோலே, என்று."இவ்வாறுவெம்மை ஒன்று முருவுஞ்சுவடுந்தெரியிலம்" - இப்படிப்பட்ட வெம்மையுடைய வுருவும் அதுக்கு ஸூசகமான சுவடும் ஒன்றுமறிகிறில மென்றபடி. சுவடு - அடையாளம். இந்த வபதாந மிப்போது சொல்லுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (திருவடியுடைய)இத்யாதி, துகைக்கை-நாயகனோடே ஸம்ஶ்லேஷிப்பிக்கை. வன்காற்று - காயிகமான வன்மையாதல், மாநஸமான வன்மையாதல். இத்தை யருளிச்செய்கிறார் (நீர்மைகலவாத) இத்யாதி. வன்காற்றடுஞ் சுவடும் தெரியில மென்று க்ரியை. சக.

[வேறொரு அரும்பதம்.]

நாற்பத்தோராம்பாட்டு.—(என்றும்)இத்யாதி. கீழ்ப்பாட்டில் ராத்ரி வ்யஸநத்தோடே நொந்தவளவிலே காற்று பாதிக்கப்பொறுக்கமாட்டாதே ஈடுபடுகிறாளென்று ஸங்கதியை ஸூசிப்பிக்கிறார் (எம்மை) இத்யாதி. ரக்ஷிக்கிறபடி - பூாதிக்கிறபடி யென்கை. ப்ராண ஸஜாதீய மாகையாலே அத்தைப்போலே சரீரஸத்தாதாரகமான தென்றபடி. "கண்டறிதும்" என்ற பூதநிர்த்தேசமே அமைந்திருக்க "என்றும்" என்றதுக்குபாவம் (சிறை) இத்யாதி. இத்தால், விஶ்லேஷமே அநாதியாக விருக்க இப்போது பாதகமாகையாலே ஸம்ஶ்லேஷ முண்டென்று சொல்லலா மித்தனை. இத்தால், ஸர்வகாலமும் ஸம்ஸாரத்தோடே இருந்துவிட்டோமென்றதாயிற்று. "இது கண்டறிதும்" என்றதுக்கு இந்தவாடை பாதிக்கிறபடி அநுபவித் தறிவோமென்றர்த்தமாகையாலே, வேறுபாதிக்கிறத்தைக் கண்டறியோமென்று பலிக்கையாலே அருளிச்செய்கிறார் (இப்படி) இத்யாதி. அப்போது பாதிக்கிற காற்றேயன்றோ விதென்னலாம், அதிதங்களையு மிதென்னலாமோவென்று சங்கித்து இரண்டுவிதமாகப் பரிஹரிக்கிறார் (போனத்தை) இத்யாதி. இவ்வாறு வெம்மை யுடைய வுருவும் சுவடுமுடைய அக்ந்யாதிகளை யறியோமென்று

சப்ரார்த்தமாய் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (இப்படி) இத்யாதி. "ஓங்கு" என்று விசேஷித்ததுக்கு வ்யாவர்த்யங்காட்டிக்கொண்டு அர்த்தமருளிச்செய்கிறார் (பிரிவு) இத்யாதி. "புள்ளையூர்வான்" என்று விசேஷிக்கைக்கு ப்ரக்ருதோபயோகம் காட்டுகிறார் (திருவடி) இத்யாதி. மன்று - நாற்சந்தியாய் நாலுபேர் கூடினவிடமெல்லாமென்றாய்த் தாத்பர்யம் (லோகம்) இத்யாதி. நீர்மை-தயையாய், அதில்லாமை வன்மையென்று தாத்பர்யாந்தரம்-(நீர்மை) இத்யாதி. ஸ்வாபதேசம். (இத்தால்) இத்யாதி,

[ஓங்கு இத்யாதி காற்றடு மாகையாலே என்றும் இந்தபுன்வாடையைக்கண்டறிது மிவ்வாறுவெம்மையுருவுஞ் சுவுடுமொன்றுந் தெரியிலம்] என்றந்வயம். (சுக)

தாத்பர்யம்.—இதில், பகவத் விஸ்லேஷம் பிறந்த தமக்கு ஸம்ஸாரமஸஹ்யமானபடியை, வாடையிலகப்பட்டு நலிவுபட்ட நாயகியின் வார்த்தையாலே யருளிச்செய்கிறார்.

ஓஸகிகளே! நான் நாயகனைப்பிரிந்து வெருகாலமாய் விரஹபாதையை அநுபவிக்கும்போதெல்லாம் என்மேல் மந்தமாருதம்வந்துவீச, அதினுடைய ஸ்வரூபஸ்வபாவங்களை இதுவரையில்நன்றாயறிவேன். ஆனால், ஆச்ரிதரக்ஷணார்த்தமாக சத்ருக்களை ஸம்ஹரிக்கப் பெரிய திருவடிமேலேறியுலாவுகிற பரமகாருணிகனான வெம்பெருமானுடைய அநுக்ரஹத்துக்குங் கூட விஷயமல்லாதவளாய், அவனிடத்தி லன்புடையளான என்மேல் இப்போது வீசி, என்னை ஊரெங்கும்பழிக்கும்படி வதையப்பண்ணும்படியான இம்மாருதத்தின் க்ரௌர்ய ஸ்வபாவத்தை இதுவரையி லனுபவித்தறிய மாட்டேன். இதிப்போதெனக்கு மிகவு மஸஹ்யமாயிருக்கிறது. (சுக)

---

வன்காற்றறையவொருங்கேமறிந்து கிடந்தலர்ந்த,
மென்காற்கமலத்தடம்போற் பொலிந்தன, மண்ணும் விண்ணும்
என்காற்களவின்மைகாண்மினென்பாளொத்துவானிமிர்ந்த
* தன்பாற்பணிந்த வென்பால், எம்பிரானதடங்கண்களே. (சஉ)

அர்த்தம்.—மண்ணும் - பூலோகமும், விண்ணும் - ஊர்த்வலோகமும், என்காற்கு - என்னுடைய திருவடிக்கு, அளவின்மை - தகுதியல்லாமையை, காண்மின்-பாருங்கோள், என்பானொத்து - என்றுசொல்லுமாபோலே, வான்-ஆகாசத்திலே, நிமிர்ந்த, வளர்ந்த, தன் - பால் தன்னிடத்தில் பணிந்த - வணங்கின, என்பால் - என்னிடத்தில், (உண்டான), எம்பிரான-ஸர்வேச்வரனுடைய, தடம் - விசாலங்களான, கண்கள்-நேத்ரங்கள், வன் - க்ரூரமான, காற்று-வாயு, அறைய - வீச, ஒருங்கே - ஒருபக்கத்தில், மறிந்து கிடந்து-மடிந்திருந்து, அலர்ந்த-விகஸித்த, மென்-ம்ருதுவான, கால்-கொடியையுடைய, கமலம் - தாமரைகளையுடைய, தடம்போல் - தடாகங்களைப்போல, பொலிந்தன-ஸௌந்தர்யபூர்ணமாயிருக்கின்றன. (சஉ)

---

* தன்கால் என்று பாடாந்தரம்.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—நாற்பத்திரண்டாம்பாட்டு-"வாடையின்கீழ் ஜீவிக்கை யரிது; இனிமுடியுமத்தனை" என்று வார்த்தை சொன்னவாறே குளிரநோக்கினான்.

வ்யா.—(வன்காற்றித்யாதி) மென்கால் கமலமாவது- ம்ருதுவானகாற்றுங் கூடப்பொறுதபடியான மெல்லிய தாளை யுடைத்தான கமலமாவது; இதிலே வன்காற்றுவது - அதுதான் கண்பாராதே யறைவது. (ஒருங்கே) ஏகதோமுகமாக. (மறிந்து கிடந்தலர்ந்த) மற்றையருகே புரியில் தர்மிலோபம் வருமென்னும்படியாவது. இத்தால், ஸம்ஸாரிகளிலே யொருவன் ஓரடிவாநின்றால் அவன்பக்கல் வைத்த கடாக்ஷத்தைமாறிப் பெரியபிராட்டியார் பக்கலிலே வைக்க வென்றாலு மதுதானு மரிதாம்படியாயிருக்கை. (௧) "எங்கும்பக்கம் நோக்கறியான்" என்னக்கடவதிறே. (மென்கால்கமலம்) (௨) "ப்ரக்ருத்யாதர்மஶீலஸ்ய - ப்ரக்ருத்யாதர்மசீலஸ்ய" என்னக்கடவதிறே. "இதொருகடல் இடைச்சுவராய்க்கிடவாநின்றது; இத்தைக்கடந்தவ்வருகுப்பட்டோமாம் விரகென்" என்று பெருமாள் முதலிகளை யடையக்கேட்க, ஸ்ரீவிபீஷணாழ்வான் தானணித்தாகக்கைக்கண்ட உபாயமாகையாலும், "ஸர்வஹிதங்களுக்கும் ஸாதநம்சரணாகதி" என்றத்யவஸித்திருக்கை யாலும்,பல (த்ருவ) வ்யாப்தியுள்ளதிதுக்கே யாகையாலும், பெருமாளுக்கு இந்தக்கடலைச் சரணம் புகவடுக்கும்"

அரு.—நாற்பத்திரண்டாம்பாட்டு.— (வன்காற்று)(வார்த்தை சொன்னவாறே குளிரநோக்கினான்)என்றவநந்தரம்.அந்த நோக்கிலே ஈடுபட்டுச் சொல்லுகிறாள் என்று சேஷம்.

"மென்கால் கமலம்" என்று தொடங்கி யருளிச்செய்ததுக்குத் தாத்பர்யம் - கமலமோ அதிமார்த்தவம், காற்றோ வன்காற்று, அதுக்குமேலே அறைகிறது, ஆகையாலே ஒருமுகமாகச் சாய்ந்து கிடந்தலர்ந்த தென்றபடி. (மற்றையருகே புரியில் என்றது - மற்றையருகே சாயில் என்றபடி. "வன்காற்றறைய"இத்யாதிக்குஸ்வாபதேசம் (இத்தால் ஸம்ஸாரிகளிலே ஒருவன்)இத்யாதி."மென்காற்கமலம்"என்றது-கடாக்ஷத்துக்கு மூலமாய் க்ருபாகார்யமான சித்தமார்த்தவம். அப்படி யிருக்குமோ வென்ன (எங்கும்) இத்யாதி. அப்படி திருவுள்ளம் ம்ருதுவாயிருக்குமோ வென்ன அருளிச்செய்கிறார்(ப்ரக்ருத்யாதர்மசீலஸ்ய என்னக்கடவதிறே) என்று. ப்ரஸங்காத் இந்தக்ரந்தத்துக்குக் கீழிற்க்ரந்தமான "ஸமுத்ரம் ராகவோராஜா" என்கிற ஶ்லோகத்துக்கு அர்த்தமருளிச்செய்வதாக அவதாரிகை அருளிச்செய்கிறார்(இதொருகடலிடைச்சுவராய்)என்று.ஹிதங்களுக்கும்-நன்மைகளுக்கும்."ராஜா" என்றத்

(௧) திருவாய். ௨-௩-௨. (௨) ஸ்ரீராமா-யுத்த. ௧௯-௩௪.

வ்யா||என்றான். (க)[సముద్రమ్ - ஸமுத்ரம்] பெரியவர்களை வசீகரிக்கு முபாயமிது வல்லதில்லை. [రాఘవో రాజా-ராகவோராஜா] ஒருகுடிப்பிறப்புமின்றிக்கே அளவுடையாருமன்றிக்கே யிருப்பார்க்கு மிதுபலிக்குமானால் இவையுடையார்க்குச் சொல்லவேணுமோ? [శరణం గన్తు మర్హతి - சரணம் கந்து மர்ஹதி] வஸிஷ்ட்ட சிஷ்யர்கள் பக்கலிலே இது பலிக்கக்கண்டபடியாலே அறிவில்லாதகடலின்பக்கலிலேயுமது பலிக்குமென்றிருக்கிறான். (உ)"సాదేవేస్మిన్ ప్రయుజ్యతామ్. ஸாதேவேஸ்மிந்ப்ரயுஜ்யதாம்";"எருது கெடுத்தார்க்கு மேழேகடுக்காய்" என்று. (மென்கால்கமலம்) காற்றுத்தானும் வேண்டாவாயிற்று தன்காலின்மென்மை. (௩) [మిత్రభావేన - மித்ரபாவேந] அவன்பக்கல் பாவ(భావ)மேயமையும்; அவனைவிடில் என்னையிழக்குமத்தனை என்றாரிறே. அவன்பக்கல்கிடையாததொன்றைவேணுமென்றால் துராராதனுமித்தனையிறே. இவன்பக்கல்பெற்றது கொள்ளுமித்தனையிறே. இவனாற் செய்யமுடியாததொன்றைச்சொல்லுகையாவது கைவிடநினைத்துச் சொல்லிற்றுமித்தனையிறே. (௪) [ఆర్తోవాయది వా దృప్తః- ஆர்த்தோவா

---

அரு||தைக்கொண்டு(அளவுடையாருமன்றிக்கே)என்றது. ப்ரபத்திக்குவிஷயநியமமுண்டிறே, க்ஷுத்ரவிஷயத்திலும் பலிக்குமோவென்ன அருளிச்செய்கிறார்(வஸிஷ்ட்ட சிஷ்யர்கள் பக்கலிலே) இத்யாதி. (இதுபலிக்கக்கண்டபடியாலே)என்றது-பெருமாள்பக்கலிலேதாம்பண்ணின இந்தப்ரபத்திதமக்குபலிக்கக்கண்டபடியாலேயென்றபடி. தனக்குசரணாகதி பலித்தமையைக்கொண்டுசொல்லுகிறானத்தனையொழிய வஸ்துதஸ்ஸரணாகதிக்குவிஷயம், ஈஸ்வரனே என்று விவக்ஷித்து இதுக்குப்ரமாணம் (ஸாதேவேஸ்மிந்ப்ரயுஜ்யதாம்) என்று. "అహమస్మ్యపరాధానా మాలయోऽకించనోऽగతిః । త్వమేవోపాయభూతో మే భవేతి ప్రార్థనామతిః। శరణాగతిరిత్యుక్తా సాదేవేస్మిన్ప్రయుజ్యతామ్- அஹமஸ்ம்யபராதாநாமாலயோகிஞ்சநோகதிः। த்வமேவோபாய பூதோமே பவேதி ப்ரார்த்தநாமதிः|| சரணாகதிரித்யுக்தாஸா தேவேஸ்மிந்ப்ரயுஜ்யதாம்", தமக்கு பலிக்கையாலே பெருமாளுக்கும் பலிக்குமென்றுபதேசித்தானென்றதுக்குஸம்வாதமாக ஐதிஹ்யமருளிச் செய்கிறார் (எருதுகெடுத்தார்க்கு மேழேகடுக்காய்)என்று. (காற்றுத்தானும் வேண்டாவாயிற்று தன்தாளின் மென்மை) என்றதுக்கு ஸ்வாபதேசம் - ஆபிமுக்யஸூசகமான ஆர்த்தப்ரபத்தியும் வேண்டாவென்றபடி. இப்படி மாநஸப்ரபத்தியும் வேண்டாவோ வென்ன அருளிச்செய்கிறார் (மித்ரபாவேந) என்று. இவனுடைய ஆர்த்தியும் த்ருப்தியும் க்ருபைக்கு ஹேதுவன்று, மித்ரபாவமே அமையுமென்றபடி. "பலிக்குமென்று இருக்கிறான் எருதுகெடுத்தார்க்குமேழேகடுக்காயென்று" என்று கூட்டுவது. இத்தை அருளிச்செய்கிறார்(ஆர்த்தோவாயதிவாத்ருப்தः)என்று.

---

(க) ஸ்ரீராமா. யுத்த-௧௧-௩௧.
(உ)
(௩) ஸ்ரீராமா. யுத்த-௧௮-௩-
(௪) ஸ்ரீராமா யுத்த. ௧௮-௨௮.

வ்யா|| யதிவா த்ருப்த:] (க) "ராகவம் ஶரணம் கத: - ராகவம்சரணம்கத:" என்ற உக்தி திருச்செவிபட்டபோதே இவன் நெஞ்சில் தளர்த்தியைத் திருவுள்ளம்பற்றினார் பெருமாள்; "உக்தியே இவன்பக்கலுள்ளது, நினைவு வேறொருபடி" என்றறிந்த முதலிகள் ராமபக்தியாலே "நினைவொன்றாய்ச் செயலொன்றாயிருக்கிறவன் வத்யன்" என்றேயிருந்தார்கள். ஆர்த்தனாகையாவது - இத்தலையைப்பெறில் ஜீவித்தும் பெறாவிடில் முடியும்படியுமாயிருக்கை. த்ருப்த (த்ருஷ்ட) னாகையாவது - நெஞ்சின்றிக்கேயிருக்கச்செய்தே நம்முடைய அநுகூலபாஷணங்களைப் பிறரநுகரிக்குமாபோலே நெஞ்சிலின்றிக்கேயிருக்கச்செருக்காலே சொல்லுகை. ஆர்த்தனாகவுமாம், த்ருப்தனாகவுமாம், ஆர்த்தியோபாதி த்ருப்திக்கும் பலைக்யமுண்டாம்படி எங்ஙனேயென்னில், இவனைப்பார்க்குமன்றிது விசாரிக்கவேணுமே; சரண்யனுக்கு வேண்டுவது சொல்லுகிறதிறே இதில். ஆர்த்தியோபாதி த்ருப்தியுமிதுக்குப் பரிகரமாம்படியெங்ஙனேயென்னில்; ஆர்த்திபரிகரமான விடத்திலே-இதுவும் பலவ்யாப்தமாகக்கண்டு போருகிறது; ஆகையாலே ஆகிஞ்சந்யமேயாயிற்று அதுக்குப்பரிகரம், த்ரு(த்ரு)ப்தனுக்கு, இதுக்குப்பரிகரமான வார்த்தியுங் கூடவில்லையாயிருந்தது; இனிநாமேயாகாதேயுளோம்' என்று அதுக்கு மவனிரங்குமென்று பரிகரமாகத்தட்டில்லை. [பரேஷாம் ஶரணாகத: - பரேஷாம்சரணா

அரு|| "ஆர்த்தோவா த்ருப்தோவா" என்றவிகல்பத்துக்குக் கருத்தென்னென்ன அருளிச்செய்கிறார் (ராகவம்சரணம்கத: என்ற உக்தி) இத்யாதி. இத்தால் பெருமாளபிப்ராயத்தாலே ஆர்த்தன்; முதலிகளபிப்ராயத்தாலே த்ருப்தன் என்றபடி. (நம்முடைய அநுகூலபாஷணங்களைப்பிறர் அநுகரிக்குமாபோலே) என்றது - நாம், திருநாமங்களைச் சொன்னால், அவற்றைச்சிலர் ஆக்ஷேபித்துச் சொல்லுமா போலே என்றபடி. ஆர்த்திக்கும் த்ருப்திக்கும் பலமொத்திருக்கிறபடி எங்ஙனே என்கிற சங்கையைப் பரிஹரிக்கிறார், (இவனைப்பார்க்கு மன்றிது விசாரிக்கவேணுமே) என்று, அதாவது - அதிகாரிஸ்வரூபஞ் சொல்லுகிறதன்றே, சரண்யவைபவஞ் சொல்லுகிறதாகையாலே கூடுமென்னுதல். ஆர்த்தியோபாதி த்ருப்தியும் பரிகரமென்னுமத்தை இரண்டுவழியாலே பரிஹரிக்கிறார் (ஆர்த்தியோபாதி) இத்யாதி; - அதாவது - ஆர்த்திபரிகரமாமிடத்திலே இந்த த்ருப்தியும் (உ) -இதி இயந்தி - என்றும்" (ங) "துஷ்டசித்தைரபிஸ்ம்ருத: - துஷ்டசித்தைரபிஸ்ம்ருத:" என்றும் பலவ்யாப்தமாகக் கண்டுபோயிருக்கிறதாகையாலே கூடுமென்னுதல். த்ருப்தனுக்கு ஆகிஞ்சந்யமுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (த்ருப்தனுக்கு இதுக்குப் பரிகரமான ஆர்த்தியுங் கூட), என்று. (அதுக்குமவனிரங்கும்) என்றது- அந்த

(க) ஸ்ரீராமா. யுத்த-கஎ-கசா. (உ)
(ங)

வ்யா|| கத:, அரி:] சத்ருக்களிலேவைத்துக்கொண்டு சரணுகதனுன சத்ரு. அதாவது-உக்திமாத்ரமேயாய் கார்யத்தில் சாத்ரவமே முடிய நடவாநிற்கை. அன்றிக்கே,(க)"கொன்றேன்...அன்றேவந்தடைந்தேன்" என்னுமாபோலே கொன்றகறைகழுவாதேவந்து புகுருகை. [𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑍍 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌵𑍍𑌯𑌃 - ப்ராணுன்பரித்யஜ்யரக்ஷிதவ்யஃ] அவர்கள் பக்கலிலே வாசியுண்டானுலும் ரக்ஷிக்கு மிடத்திலிருவரையு மொக்க ப்ராணன்களை யழிய மாறி ரக்ஷிக்கப்படும். "𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑌪𑌿 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 - ப்ராணுநபி பரித்யஜ்ய" என்றுமொழிந்தது - அவன் செய்ததுக்கு ப்ராணனை யழிய மாறி ரக்ஷிக்குமதுவும் போராதென்று நினைத்திருந்தபடியாலே. [𑌕𑍃𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 - க்ருதாத்மநா] இவனுடைய ரக்ஷணத்துக்காகச்செய்த தொன்றன்று. தன்னுடைய ஸ்வரூபஸித்திக்காக. ஒருவனேடேயொன்றை யப்யஸித்து சிக்ஷிதமநாவாயிருக்கு மவனுக்கித்தனைசெய்ய வேண்டிவரும். (மென்கால் கமலத்தடம்போல் பொலிந்தன எம்பிரான தடங்கண்கள்).

எப்படிப்பட்டவனுடைய வென்றுல், (மண்ணும் விண்ணு மித்யாதி)பூம்யந்தரிக்ஷாதிகளடையவென்னுடைய காலுக் களவுபோராதே யிருக்கிறபடி பாருங்கோளென்பாரைப்போலே யாயிற்று ஆகாசாவகாசத்தை யடையத் தன்திருமேனியாலே நிரப்பிற்று. பரப்பையுடைத்தான பூமியும் எல்லார்க்கு மவகாசப்ரதாநம் பண்ணுகிறவாகாசமும் என்காலுக்களவுபோராதிருக்கிறபடியைப் பாருங்கோளென்பாரைப்போலேயாயிற்று அளந்துகொண்டது. நானளக்கப்புகாநின்றேன், உங்கள் தலையிலே என்காலை வைக்கப்புகாநின்றேன்" என்னில்; (உ) "𑌨𑌨𑍍𑌮𑍇𑌯𑌮𑍍 - நந்மேயம்" என்று "ஒட்டோம்" என்றுணையிடுவர்களிறே; அதுக்காக "இதோ ராஸ்சர்யம் பாருங்கோள்"என்பாரைப்போலேயாயிற்று அளந்தது. இப்போ தவ் வபதாநத்தைச்

அரு|| த்ருப்திக்கு மவனிரக்குமென்றபடி. பரேஷாம்மத்யேசரணுகதனுன சத்ரு வென்னுதல்; "𑌪𑌰𑍇𑌷𑌾𑌮𑌪𑌿 𑌶𑌰𑌣𑌾𑌗𑌤𑌃-பரேஷாமரிஃ சரணுகதஃ" என்றதாய், பிறரை ஹிம்ஸித்துக்கொண்டே சரணுகதனுன என்னுதல். (ஒருவனேடேயொன்றை அப்யஸித்து சிக்ஷிதமநாவாயிருக்குமவனுக்கு)என்றது-ஒருஆசார்யன் ஸந்நிதியிலே சரணுகதி தர்மத்தை யப்யஸித்து சிக்ஷிதமநாவாயிருக்குமவனுக்கென்றபடி. (மென்கால்கமலத்தடம்போல் பொலிந்தன எம்பிரான தடங்கண்கள்) என்றது - அந்வயம் காட்டினபடி.

கீழருளிச்செய்தத்தையே விவரிக்கிருர் (பரப்பையுடைத்தான பூமியும்) என்று. மண்ணும் விண்ணும்-பூம்யந்தரிக்ஷாதிகளை "என்காற்களவின்மைகாண்மின்:" என்னுடையகாலுக்களவுபோராதே யிருக்கிறபடியைக் காணுங்கோள்"

(க, திருமொழி. க கூ-ரு.

(உ) ஸ்ரீராமா யுத்த-ருசு-கக.

வ்யா|| சொல்லவேண்டுவானென்னென்னில், இத்தலையிலாபிமுக்யமின்றிக்கேயிருக்கத்தானேயவதரித்துவந்துமேல்விழுந்து எல்லார்தலையிலும் திருவடிகளைவைக்குமவனிறே இவர்கள் பேற்றுக்குத்தான் க்ருஷிபண்ணுமவனாயிற்று. இத்தால், "மென்கால் கமலம்" என்றத்தை நினைக்கிறது. (வான்நிமிர்ந்த தன்கால் பணிந்தவென்பால்) இத்தால் - இந்த வானுகூல்யத்துக்கடியான மூல ஸுக்ருதமுந் தானே யென்கிறது. தான் முற்பட வணங்கிப்பின்னை யித்தலையைவணங்குவித்தான். முற் றீமைசெய்தான் தானேயென்கை. தான் முற்பட்டுவனையநுகூலிக்கும்படி பண்ணிப் பின்னை "நீ யநுகூலித்தாய்" என்று இவன் தலையிலேயேறிட்டு இரங்குமவனாயிற்று. (தன்பால் பணிந்த) என்கையாலே "வன்காற்றறைய" என்கிறத்தை நினைக்கிறது. (என்பால்) என்கையிலே. "ஒருங்கேமறிந்து கிடந்தலர்ந்த" என்றத்தை நினைக்கிறது.(எம்பிரானதடங்கண்களே) இவன் பேற்றுக்குத்தான் வருந்தினானாயிராதே. இத்தால்-பேறுதன்னதென்று தோற்றும்படியாயிற்று திருக்கண்களில் விகாஸம். ௪௨.

---

அரு|| "என்பாலொத்து" - என்பாளைப்போலே - "வான்" - ஆகாசாவகாசத்தை, "நிமிர்ந்த" - அளந்த- "தன்பால்" தன்னிடத்திலே, "பணிந்தவென்பால்" - வணங்கின வென்னிடத்திலே, (மென்கால் கமலமென்றத்தை நினைக்கிறது) என்றது - இவனுடைய வாபிமுக்யம் வேண்டாதபடியான அவனுடைய உபாயபாவத்தை நினைக்கிற தென்றபடி.

[மண்ணும் விண்ணுமென் காற்கள வின்மைகாண்மி னென்பா லொத்து வான் நிமிர்ந்த தன்பால் பணிந்த வென்பாலெம்பிரான தடங்கண்களே வன் காற்றறைய வொருங்கே மறிந்து கிடந்தலர்ந்த மென்கால்கமலத்தடம்போல் பொலிந்தன.]என்றந்வயம்.— "ప్రకృత్యాధర్మశీలస్య రాఘవస్యాప్యరోచత-ப்ரக்ருத்யா தர்மசீலஸ்ய ராகவஸ்யாப்யரோசத" என்றது-பெருமாளுக்கு மிஷ்டமாயிற் றென்றபடி. "సముద్రంరాఘవోరాజా శరణంగన్తుమర్హతి । ఖాదిత స్సగరేణాయ మప్రమేయోమహోదధిః - ஸமுத்ரம்ராகவோராஜா சரணம்கந்துமர்ஹதி | காதிதஸ்ஸகரேணாயம ப்ரமேயோ மஹோததிஃ'. "మిత్రభావేన - மித்ரபாவேந" இத்யாதி. ௪௨.

[அப்பு அரும்பதம்.]

நாற்பத்திரண்டாம்பாட்டு.—(வன்)(நோக்கினான்)நோக்கிலேயீடுபட்டுக் கொண்டாடுகிறாளென்று பூரிப்பது. தார்ஷ்டாந்திக ஸ்வபாவத்தைத்ருஷ்டாந்தத்திலே காட்ட வேண்டுகையாலே த்ருஷ்டாந்தத்தை சிக்ஷிக்கிறார்(மென்கால் கமலமாவது) என்று தொடங்கி. மென்கால் கமலமென்றது - ஆபிமுக்யஸூசகமான மாநஸப்ரபத்தியும் பொறாத பகவானுடைய ஸௌஹார்த்தம்-

ஸௌஹ்ருத்பாவமென்றபடி. வன்காற்றுவது - பூர்ணப்ரபத்தி. அறைகை - ஆர்த்தப்ரபத்தி; ஒருங்கே-சேதநன் பக்கலிலே ஒருபடிப் படக்கடாக்ஷிக்கை; மறிந்து - இவனையொழிய வேறுபாராதே; கிடந்தலர்ந்த. "மென்கால் கமலம்" என்கைக்கு ஸ்வாபாவிகமான ஸௌஹ்ருத்பாவத்தை யுடையனாயிருப்பரோவென்ன அருளிச்செய்கிறார் (ப்ரக்ருத்யா) இத்யாதி. இப்ப்ரலோகத்திலே பெருமாளுக்கும் ருசிக்கக்கடவ தென்றுவர, எதுருசிக்கக் கடவதென்ன; இன்னதென்கைக்காக இதுக்குக் கீழ்ப்ரலோகத்துக் கவதாரிகையருளிச்செய்கிறார் (இதொருகடல்) இத்யாதி. "ராஜா" என்கையாலே அளவுடைமை, அசேதநமானகடலைச் சரணம்புகுந்தால் பலிக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (வஸிஷ்டசிஷ்யர்கள்) இத்யாதி. சிஷ்யரென்றது - சரணாகதி தர்மஜ்ஞரென்றபடி. சரணாகதிதர்மத்தைப்பார்த்தால் அசேதநத்திலும் பலிக்கு மென்றிருக்கிறானென்றபடி. ப்ரபாவத்தைப் பற்றச் சொன்னானாகில், சரணாகதிக்கு விஷயந்தானேதென்ன அருளிச்செய்கிறார் (ஸாதேவேஸ் மின் ப்ரயுஜ்யதாம்) என்று. தனக்குப்பலித்தது கொண்டு சொன்னதுக்கு த்ருஷ்டாந்த மருளிச்செய்கிறார் (எருதுகெடுத்தார்க்கும்) இத்யாதி. அதாவது - எருது கெடுத்தவன். "அதுகாண்கைக்கு பாயமேது" என்று ஒருவனைக் கேட்க, அவன்பரிஹாஸத்துக்கு "ஏழு, கடுக்காயைத்தின்று" என்ன; அவனும் மெய்யென்று அத்தைத்தின்று குளக்கரையிலேயிருக்க, அங்கே யாத்ருச்சிகமாக எருதும்வர. அத்தை யோட்டிக்கொண்டு, க்ருஹத்திலேவந்த வளவிலே ஒருமலடி "எனக்கும் பரிஹாரம் சொல்" என்ன, "நானறியேன், எனக்குச் சொன்ன வனைக்கேள்" என்ன, அவளு மங்கேபோய்க்கேட்க, அவனு மெருதுகண்டபடியாலே "ஈனுப்பெண்டிர்க்கு மேழே கடுக்காய்" என்ன, அவளுமப்படியே செய்ய; அவள்வயிற்றிலவையெல்லாம்போய் கர்ப்பமுண்டாயிற்றென்கை. திரியவும் ஸ்வாபதேச மருளிச்செய்கைக்காகப்பதோபாதாநம்பண்ணுகிறார் (மென்கால் கமலம்) என்று. ஆபிமுக்யஸௌசகமானமாநஸப்ரபத்தியும் வேண்டா, தானே செய்யுமென்றபடி. மாநஸப்ரபத்தியும் வேண்டாவோவென்ன அருளிச்செய்கிறார் (மித்ரபாவேந) என்று. பாவம் - ஸாக்ஷாத் மித்ரத்வம் வேண்டா, மித்ரன்போலேபாவிக்க வமையுமென்றபடி. மித்ரபாவமேயமையு மென்னுவிட்டால்வரும்விரோதமேதென்ன அருளிச்செய்கிறார் (அவன் பக்கற்கிடையாது) இத்யாதி, பெற்றது கொள்ளுகிறதென், அதிகாரியாக்கி யங்கீகரித்தாலோவென்ன அருளிச்செய்கிறார் (இவனாற்செய்ய) இத்யாதி. இத்தாலிவனுடைய பக்தியுங்கொண்டு ப்ரயோஜந மில்லை, மித்ரபாவமே போருமென்னு மதுக்குப்ரமாண மெடுத்து வ்யாக்யாநம் பண்ணுகிறார் (ஆர்த்தோவா) என்றுதொடங்கி. த்ருப்திக்கெல்லாமுக்திமாத்ரமேயாகையாலே மித்ரபாவமே போருமென்றபடி. விகல்பிக்க வேண்டுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (ராகவம் சரணம்) இத்யாதி. பெருமாள்

நினைவாலே ஆர்த்தியும், முதலிகள் நினைவாலே த்ருப்தியு மென்றபடி. இரண்டுக்கு மெல்லையைக் காட்டுகிறார் (ஆர்த்தனுகையாவது)இத்யாதி. இதில்-இம்லோகத்தில். இதுக்குப்பரிகாரம் - பலத்துக்கு ஸாதநம். ஆர்த்தப்ரபத்தியோபாதி த்ருப்தப்ரபத்தியும் ஸாதநமாம்ப்ரகார மென்னென்ன அருளிச்செய்கிறார் (ஆகிஞ்சந்யம்)இத்யாதி. ப்ரபத்திக்குப்பரிகரமான வாகிஞ்சந்ய ரூபமானவார்த்தியும் த்ருப்தனுக் கில்லாமையாலே அவனே இரங்குமென்றபடி. இரங்கும் பரிகரமான உக்தியை த்ருப்தியாகச் சொல்லுகையாலே இதுக்கெதிர்த்தட்டான வாகிஞ்சந்யத்தை ஆர்த்தி சப்தத்தாலே சொல்லுகிறது இங்கு.பரிகரம்-உபகரணம். ஆர்த்தியுங் கூட - ஆகிஞ்சந்யமுங் கூட. "பரேக்ஷாமரிச்சரணாகதஃ" என்றந்வயித்தருளிச் செய்கிறார் (அன்றிக்கே) இத்யாதி. இருவரையும் - ஆர்த்தரையும் த்ருப்தரையும். சப்தார்த்த மருளிச்செய்கிறார் (பரப்பை யுடைத்தான) இத்யாதி. "பணிந்த" என்ற ஸ்வகர்த்ருத்வத்தைப் பரிஹரிக்கிறார் (இத்தால்) இத்யாதி.

[மண்ணும் விண்ணும் என்று தொடங்கி வான்நிமிர்ந்த வெம்பிரான தடங்கண்கள் தன்பால் பணிந்த•வென்பால்வன்காற்றுத் தொடங்கி. தடம்போல்பொலிந்தன) என்றந்வயம். சஉ.

[வேறொரு அரும்பதம்.]

நாற்பத்திரண்டாம்பாட்டு.—(வன்காற்று) இத்யாதி. கீழ் "வன்காற்றடும்" என்றத்தையும், இதில் " என்பால் தடங்கண்கள் பொலிந்தன " என்றத்தையும் கடாக்ஷித்தவதாரிகை (வாடையின்) இத்யாதி."நோக்கினன்" என்ற வநந்தரம் அதிலீடுபட்டு அத்தை யருளிச்செய்கிறாரென்று சேஷம்.(க) " ఈశ్వరస్య చ సౌహార్దం యదృచ్ఛాసుకృతంతథా । విష్ణోఃకటాక్షః - ஈஶ்வரஸ்ய சஸௌஹார்தம் யத்ருச்சா ஸுக்ருதம்ததா | விஷ்ணோ: கடாக்ஷஃ" என்கிறபடியே ஸஹஜ ஸௌஹார்த்தத்துக்கொருஹேது வேண்டாமையாலே அதுக்கு த்ருஷ்டாந்தமாக மென்கால்கமலத்தை சிக்ஷிக்கிறார் (மென்கால்) இத்யாதி. காற்றுவதென்றது - காற்றறைகையாவதென்றபடி.(புரியில்)-திரும்பினால். தர்மிலோபமென்றது. - கமலமழிகை - த்ருஷ்டாந்தத்தில் சிக்ஷிதமானவர்த்தத்தை தார்ஷ்டாந்திகத்திலே ஏறிட்டுக் காட்டுகிறார் ( இத்தால் ) இத்யாதி. காற்றறைய அத்தாலே மறிந்து கிடக்கும்போது கமலங்களுக்கு மென்மை ஸித்தமாயிருக்க மென்காலென்று விசேஷித்ததுக்குத்தாத்பர்யம் அதிமார்த்தவமென்று விவக்ஷித்து அதுதன்னை தார்ஷ்டாந்திகத்திலே காட்டுகிறார் (ப்ரக்ருத்யா) இத்யாதி. தர்மமென்றது - மார்த்தவம். "రాఘవస్యాప్యరోచత - ராகவஸ்யாப்யரோசத" என்றெடுத்த ஶ்லோகத்திலிருக்கையாலே அதுருசித்ததென்று ப்ரஸங்கம். யத்வா - இதுகீழே விபீஷணாழ்வான் சொன்ன சரண வரணமென்று நினைத்ததுக்கடி யிட்டருளுகிறார் (இதொரு) இத்யாதி. யத்வா - ஸம்ஸாரியோ ரடிவந்த மாத்ரத்திலே பக்கநோக்கறும்படி கடாக்ஷிக்கைக்குக் காரணமென்னென்ன , சரணாகதிப்ர

(க)

பாவம் அசேதநமுங் கார்யஞ்செய்யுமென்றிருக்கை யென்று அத்தை யருளிச்செய்கிறாரென்னவுமாம். "ராஜா" என்றத்தாலே அளவுடைமை அர்த்த ஸித்தம். ஸமுத்ர மறிவில்லாத தன்றோ? அங்கேபலிக்குமோவென்ன, சரணாகதிமாஹாத்ம்யத்தாலே பலிக்குமென்றிருக்கிறானென்கிறார்(வஸிஷ்ட) இத்யாதி. ஆனால் அது பலியாமல் போவானென்னென்ன விஷய தோஷத்தாலே என்று விவக்ஷித்து, இதுக்குவிஷயம் ஸ்ரீமந்நாராயணனென்றத்தைக்காட்டுகிறார் (ஸாதேவே) இத்யாதி. ஆனால் விஷயநியமம் வேணுமென்றறியாதே ஸ்ரீவிபீஷணாழ்வானுபதேசிப்பானென்னென்ன (எருது) இத்யாதி. தைவாத் பலித்தாலாகாதோ வென்றுபதேசித்தானித்தனை யென்கை. ப்ரஸக்தாநுப்ரஸக்தமான வர்த்தவர்ணநாநந்தரம் "மென்கால்" என்றவருடைய உட்கருத்தை யருளிச்செய்கிறார்(காற்று)இத்யாதி.காற்று ஸ்த்தானே(ஸ்தானே) ப்ரபத்தியாய், அதுதானும் வேண்டா, ஆபிமுக்யமே போருமென்று இருப்பனெம்பெருமானென்கிறதுக்கு ஸம்வாதம் (மித்ரபாவேந) என்றது. "ஸத்யஜாமி-நத்யஜாமி" என்னாதே "ஸத்யஜேயஸ்-நத்யஜேயம்" என்று, விருத்தமபுருஷனைச்சொன்ன விதுக்கு சக்யார்த்தத்திலே அநுஶிஷ்டமான விடுவென்று விடமாட்டேனென்று சப்தார்த்தமாய்பாவமருளிச்செய்கிறார்(அவனை) இத்யாதி. மித்ரபாவமே அமையு மென்னுவிட்டால் வருமநர்த்த மருளிச்செய்கிறார் (அவனித்யாதி.) ஆனால் மித்ரபாவந்தான் வேணுமோவென்ன (இவன்) இத்யாதி. பெற்றது கொள்ளுகிறதென்; பின்னை சில செய்யச்சொல்ல வொண்ணுமோ வென்ன துராராதனுமளவன்றிக்கே கைவிடு மவனுமாவனென்று பாதகாந்தர மருளிச்செய்கிறார் (இவனால்) இத்யாதி. இவனுடைய வார்த்தியும் த்ருப்தியுங்கொண்டு ப்ரயோஜநமில்லை; மித்ரபாவமே அமையுமென்றதுக்கு ப்ரமாண மெடுத்து வ்யாக்யாநஞ் செய்தருளுகிறார் (ஆர்த்த) இத்யாதி; ஓரதிகாரியிடத்தி லார்த்தியும் த்ருப்தியுங்கூடுமோ விகல் பிக்கைக்கென்ன, கருத்தருளிச்செய்கிறார் (ராகவம்) இத்யாதிவாக்யத்வயத்தாலே. இரண்டுக்கும் எல்லைநிலம் காட்டுகிறார் (ஆர்த்தன்) இத்யாதி. யத்வா - சப்தார்த்தம் (ஆர்த்தன்) இத்யாதி, ரக்ஷண ரூபம் பலம் ஆர்த்தனுக்கும் த்ருப்தனுக்கு மொக்கச் சொல்லக்கூடுமோவென்று சங்கித்து, இந்த ப்ரபத்தியை இச்சேதநன் ஸாதநமாகப் பண்ணுமன்று பலத்திலேவைஷம்யம் சொல்லலா மித்தனை; ஸித்தோபாயத்துக்கு வேண்டுமதிகாரி விசேஷணங்களைச் சொல்லவந்த தாசையாலே பலம்துல்யமாகலா மென்று பரிஹரிக்கிறார் (ஆர்த்தியோபாதி) இத்யாதி வாக்யத்ரயத்தாலே. யத்வா-அதிகாரிவிசேஷணந் தானானுமிரண்டுக்கும் தௌல்யமுண்டோ வென்று சங்கித்துப்பரிஹரிக்கிறார் (ஆர்த்தியோபாதி) இத்யாதி. ஆகிஞ்சந்யம். த்ருப்தனுக்குண்டாகிறவழி தன்னை சரண்யபுததியாலே உபபாதிக்கிறார் (த்ருப்தனுக்கு) இத்யாதி. "த்ருப்தோவா - அரிః ரக்ஷிதவ்யః" என்றவம் சத்துக்கு அநுகுணமாக விவரித்து,

"ஆர்த்தோ வா. அரிஃ ரக்ஷிதவ்யஃ" என்ற வசனத்துக்கநுகுணமாக வருளிச் செய்கிறார் (அன்றிக்கே) இத்யாதி. அன்றிக்கே என்றது - "வா" என்ற விகல் பாந்தரத்யோதகம்- க்ருதமாய் - நிருத்தப்பட்டதான, ஆத்மாவை-மநஸ்ஸை, உடையவனாலே என்று சப்தார்த்தம் விவக்ஷித்து உட்கருத்தருளிச்செய் கிறார் (இவனுடைய) இத்யாதி. ஒருவன் - ஓராசார்யன். அந்வயங்காட்டி மேலுக்கவதாரிப்பிக்கிறார் (மென்கால்) இத்யாதி. த்ருஷ்டாந்த தார்ஷ்டா ந்திகங்களுக்குள்ள சேர்த்தியை இசைவித்துக்காட்டுகிறார் (இத்தால்) இத் யாதி. "தடம்" என்று விசேஷிப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (இவன் பேற்றுக்கு) இத்யாதி.　　　　சஉ

தாத்பர்யம்.—இப்படி ஆர்த்தரான தம்முடையபடியைக்கண்டு ஆழ்வார் த்தியெல்லாம் திரும்படி ஸர்வேஸ்வரன் பூர்ணகடாக்ஷம் பண்ணினதாக பா வித்து அத்திருக்கண்களினழகை வர்ணிக்கிறபாசுரத்தை, நாயகன் கண்ணழ கிலீடுபட்டு வாழ்ந்த நாயகியின் பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

த்ரிவிக்ரமாவதாரம் பண்ணி ஸகலலோகங்களையும் தன்திருவடிக் கீழி ட்டுக்கொண்ட எம்பெருமானுடைய திருவடிகளில்சரணம்புகுந்த என்விஷய மாக அவனுடைய குளிர்ந்த திருவுள்ளத்திற் பிறந்த க்ருபையினாலேவுண்டு அவ்வழியாலேவந்து என்மேல்விழுந்து என்னை ஹடாத்தாகவிஷயீகரித்த குளி ர்ந்தழகியவான பரந்த திருக்கண்கள், பெருங்காற்றினாலொருபக்கத்திலொ துக்கப்பட்ட இளங்கொடிமேல்பூத்த தாமரைப்பூக்களையுடைய தடாகங்கள் போல் அதிஸுந்தரமாக என்கண் முன்னே தோற்றுகின்றன.　　　　சஉ.

---

கண்ணும்செந்தாமரை கையுமவையடியோ வவையே,
வண்ணங்கரியதோர் மால்வரைபோன்று, மதிவிகற்பால்
விண்ணுங்கடந்தும்பரப்பால் மிக்குமற்றெப்பால்யவர்க்கும்
எண்ணுமிடத்ததுவோ, எம்பிரானதெழில்நிறமே.　　　　(சங)

அர்த்தம்.—கண்ணும் - திருக்கண்களும், செந்தாமரை - சிவந்தவர்ண த்தையுடைய தாமரைப்பூப்போலிருந்தன; கையும் - திருக்கைகளும், அ வை-அத்தாமரை போன்றன; அடி - திருவடிகளும், அவையே - அத்தாமரை போன்றனவே. வண்ணம் - திருமேனியானது, கரியது - கறுத்தும், ஓர் - அத் விதியமும், மால் - பெரியதுமான, வரைபோன்று-பர்வதம் போன்றது. எம்பி ரானது - நமக்குபகாரகனான ஸர்வேஸ்வரனுடைய,எழில் - ஸௌந்தர்யத்தி னுடைய, நிறம் - சோபையானது, மதிவிகற்பால் - புத்திபேதங்களினாலே, விண்ணும் - ஸ்வர்க்கவாஸிகளையும், கடந்து - தாண்டி, உம்பர் - மேலுண்டா ன ப்ரஹ்மாதிகளுக்கும், அப்பால் - மேலே, மிக்கு - அதிசயித்துப்போய், மற்று - இன்னும், எப்பால் - (தங்கள் ஜ்ஞாநத்தினால்) எங்கும் வ்யாபித்தவர் களான, யவர்க்கும் - நித்ய ஸூரிகளுக்குங்கூட, எண்ணும் - நினைக்கைக் கும், இடத்ததுவோ - விஷயமா.　　　　சங.

## [பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

வ்யா॥ நாற்பத்து மூன்றாம்பாட்டு.— (கண்ணுஞ்செந்தாமரை) "எம்பிரானை தடங்கண்கள்" என்று கண்ணழகை யநுபவித்தார்; அவ்வழகுதான் அவயவாந்தரத்திலே மூட்டிற்று. (கண்ணுஞ்செந் தாமரை) என்று - மற்றையழகுகளோடே யொருகால்சேர்த்தநுப விக்கிறார். முற்படக் குமிழிநீருண்டார்; இப்போதாயிற்று வாத் ஸல்யமும் செவ்வியும அநுபவிக்கிறது. (கையுமவை) கண்ணிட்டுக் கொடுக்க அணைத்தகை. (க) "సంస్పృశ్యాకృష్య చ ప్రీత్యా సుగాఢం పరిషస్వజే - ஸம்ஸ்ப்ருஶ்யா க்ருஷ்யசப்ரீத்யா ஸுகாடம்பரிஷஸ்வஜே" என்று அக்ரூரனை யணைத்தாற்போலே. (அடியோவவையே) அணை த்தபோதை ஸுகஸ்பர்சத்தாலே துவண்டு விழுந்தவெல்லை. (உ) "పుణ్డరీకాక్ష నమః - புண்டரீகாக்ஷ நம:" இறே. கண்ணுக்குத்தோற்ற வர்கள் காலிலேவிழுமத்தனையிறே, (வண்ணமித்யாதி) எல்லையிலே கிடந்தவர்களுடைய ஜீவநம். "ப்ரஜைமுலையிலேவாய்வைத்துத் தாய் முகத்தைப்பார்க்குமாபோலே" என்று பிள்ளைப் பிள்ளையாழ்வான்.

விண்ணுங்கடந்தும்பரப்பால்மிக்குமற்றெப்பால் யவர்க்கும்மதி விகற்பால் எண்ணுமிடத்ததுவோ எம்பிரானதெழில்நிறமென் றவ்வயம். (மதிவிகற்பால்) புத்திபேதங்களால். (விண்ணுமித்யாதி) ஸம்ஸாரிகளுக்கவ்வருகாய், ஸர்வேஶ்வரன் பக்கலிலே உத்பத்திஸ்த்தா நத்தையுடையவனுமாய், அவனாலே லப்தஜ்ஞாநனுமா யிருந்துள்ள ப்ரஹ்மாதொடக்கமானார்; அதுக்கவ்வருகான முக்தர், நித்யர், இவ ர்களுக்கு மநோரதத்துக்கு நிலமோ? எனக்குபகாரகனான வவனு டைய வெழிலின் ப்ரகாரம். (எம்பிரான) தமக்கவ்வழகை யிறையி லியாக்கின உபகாரத்தைக் கொண்டாடுகிறார். (௩) "నక్రాహ్యః కేనచిత్ క్వచిత్ - நக்ராஹ்ய: கேநசித் க்வசித்" (௪) "యస్యామతం తస్య మతమ్-

அரு॥ நாற்பத்துமூன்றாம்பாட்டு.—(கண்ணுஞ்செந்தாமரை) கீழே "தடங்க ண்கள்" என்றது; இப்போது "செந்தாமரை" என்றுஉபமாநமுகேந வருளிச்செ ய்ததுக்குக் கருத்தென்னென்ன (முற்பட) இத்யாதி. (கண்ணிட்டுக்கொடுக்க) என்றது-கண்ணழகுவஶீகரித்துக்கொடுக்க என்றபடி. "கண்ணுஞ்செந்தாமரை அடி யோவவை" என்றுகூட்டித்தாத்பர்யம்(புண்டரீகாக்ஷ)இத்யாதி. ப்ராப்யத் தினுடைய எல்லை திருவடிகளாகில் பின்னைத்திருமேனியிலே போவானென் னென்ன ப்ரஜை) இத்யாதி. "வண்ணம்" என்று-விக்ரஹம்; அது நீலமான பெரிய திருமலைபோலே யிராநின்றது. (புத்திபேதங்களாலே) என்றது-புத்தி விசேஷங்களாலே என்றதாய்; அவரவர்களுடைய ஜ்ஞாநதாரதம்யங்களா லே என்றபடி. (இறையிலியாக்கின) முற்றூட்டாக்கின.

(க) விஷ்ணுபுரா. ரு - கஅ - உ. (உ) ஜிதந்-ஸ்தோத்ரம்-க.
(௩) (௪) கேநோபநிஷத். க - உ.

வ்யா|| யஸ்யாமதம் தஸ்யமதம்'' இத்யாதி (௧) "రూపసంహననం - ரூபஸம்ஹநநம்" ஸம்ஸ்த்தாநத்தை. "లక్ష్మీం - லக்ஷ்மீம்" ஸமுதாயசோபை இருந்தபடி. "సౌకుమార్యం - ஸௌகுமார்யம்" பிராட்டியுமிளைய பெருமாளுமடுத்துப்பார்க்கவும் பொறாதிருக்கை. "సువేషతాం - ஸுவேஷதாம்" தாபஸவேஷமிருந்தபடி. "దదృశుర్విస్మితాకారాః - தத்ருசுர்விஸ்மிதாகாரா:" விஸ்மிதாந்த:கரணராய்க்கொண்டு கண்டார்கள். "రామస్య వనవాసినః - ராமஸ்ய வநவாஸிந:" அயோத்யாவாஸிகளுக்குக் கிடையாதது கிடீர், நெடுங்காலம் சரகிலேநின்றுகிடந்தபலம் பெற்றார்களென்கிறான் ருஷி. ௪௩.

அநு|| [கண்ணுஞ் செந்தாமரை கையுமவை அடியோவவை வண்ணங்கரியதோர்மால்வரைபோன்று, இப்படியிருக்கிற எம்பிரானுடையஸௌந்தர்யப்ரகாரம் விண்ணுங்கடந்தும்பரப்பால்மிக்குமற்றெப்பால்யவர்க்கும் மதிவிகற்பாலெண்ணுமிடத்ததுவோ] என்றந்வயம்.* (திறம்) - ப்ரகாரம். "త్వాన్తరాత్మా మమచ యే చాన్యే దేహిసంజ్ఞితాః। సర్వేషాం సాక్షిభూతోऽసౌ న గ్రాహ్యః కేనచిత్ క్వచిత్ - தவாந்தராத்மா மமசயேசாந்யேதேஹிஸம்ஜ்ஞிதா:| ஸர்வேஷாம் ஸாக்ஷிபூதோ ஸௌநக்ராஹ்ய: கேநசித்க்வசித்" "సోऽప్యేనం ధ్వజవజ్రాబ్జకృతచిహ్నేన పాణినా। సంస్పృశ్యాకృష్య చ ప్రీత్యా సుగాఢం పరిషస్వజే - ஸோப்யேநம்த்வஜவஜ்ராப்ஜக்ருதசிஹ்நேநபாணிநா | ஸம்ஸ்ப்ருஶ்யாக்ருஷ்யசப்ரீத்யாஸுகாடம் பரிஷஸ்வஜே". ௪௩.

[அப்பு அரும்பதம்.]

நாற்பத்துமூன்றாம்பாட்டு.—(கண்ணும்) கீழேகண்டனையநுபவித்தவர், இதிலேயுமநுபவிப்பானென்னென்ன இரண்டுவிதமாகப்பரிஹரிக்கிறார் (கண்ணும்) இத்யாதி வாக்யத்வயத்தாலே. கண்ணிட்டு - திருக்கண்மலரழகாலே வசீகரித்து, கொடுக்க - கையிலேகாட்டிக்கொடுக்க. எல்லை - திருவடிகள். ஜீவநம் - திருமேனியையநுபவிக்கை. விண்ணுங்கடந்தும்பர் - ஸ்வர்க்கத்தைக்கடந்திருக்கிற ப்ரஹ்மாதிகள். ஒருத்தருக்கு மறியப்போகாதென்னு மதுக்குப்ரமாணத்வய மருளிச்செய்கிறார். (நக்ராஹ்ய: கேநசித்) இத்யாதி. அப்படியழகாயிருக்குமோ வென்ன ஶ்லோகமெடுத்து வ்யாக்யாநம் பண்ணுகிறார் (ரூபஸம்ஹநநம்) இத்யாதி. ௪௩.

[வேறொரு அரும்பதம்.]

நாற்பத்து மூன்றாம்பாட்டு.—(கண்ணும்) இத்யாதி. கீழில் கண்டதை அநுபவித்தவர் இதிலேயும் அநுபவிப்பானென்னென்ன, த்விவிதமாகப்பரிஹரிக்கிறார் (கண்ணும்) இத்யாதி. வாக்யத்வயத்தாலே. (கண்ணிட்டுக்கொடுக்க) என்றது - கண்ணழகாலே வசீகரித்துக் கையிலேகொடுக்கவென்றபடி. (போலே) என்றவநந்தரம் அணைத்தகை என்று சேஷம். கண்ணும் அடியிலே விழப்பண்ணுமென்கிறார் (புண்டரீகாக்ஷ) இத்யாதி. "போன்று" என்றவநந்தரம்

(௧) ஸ்ரீராமா-ஆரண்ய. ௧ - ௧௩.

"உளது" என்று மூலத்திலே கூட்டிக்கொள்வ தென்று திருவுள்ளம்பற்றி அடியைச்சொன்னவநந்தரம் திருமேனியைச் சொன்னதுக்கு பாவம் (எல்லையிலே) இத்யாதி. ஜீவநம்-விக்ரஹாநுபவம், "விண்ணும்" என்ற சகாரத்தாலே மண்ணில் வாசி தோற்றுமென்று அத்தைக்காட்டிக் கொண்டு பாவமருளிச் செய்கிறார் (ஸம்ஸாரிகளுக்கு) இத்யாதி. ஸ்வர்க்கஸ்த்தரையும் விஞ்சி பரப்பாலே சதுர்த்தசபுவநங்களில் விஸ்த்ருதி யுடையவனுகையாலே ஜ்ஞாநம் மிக்கிருக்கிற வனுக்கும், மற்றுஅதுக்கு மவ்வருகான எப்பால்-எப்படிப்பட்ட விடத்தி லுள்ள,யாவர்க்கும் - எந்தவதிசயமுள்ளார்க்குமென்று சப்தார்த்தம். இறையிலியாக்கின - ஸர்வமாந்யமாக வநுபவிக்கக்கொடுத்த. ஒருவராலும் பரிச்சேதிக்கப்போகாதென்றதுக்குப்ரமாணத்வயமருளிச்செய்கிறார் (நக்ராஹ்யஃ) இத்யாதி. ஸர்வமாந்யமாக வநுபவிக்கச் சொல்லிகொடுத்தாரோ வென்ன (ரூப) இத்யாதி. சரு.

தாத்பர்யம்.—கீழ், தம்மைக்கடாக்ஷித்த எம்பெருமானுடைய திருக்கண்களை யநுபவிக்கும்போது இதராவயவங்களும் திருமேனியும் அருகு நின்று தோற்றத்தொடங்கிற்று. இதில் அவற்றையும் அநுபவித்தருளிச்செய்கிறார்.

திருக்கண்களைப் போலவே திருவடிகளும் திருக்கைகளுங்கூட ம்ருதுவாய் குளிர்ந்த செந்தாமரைப்பூப்போலே கரியதிருமேனிக்குப்பரபாக மாகச் சிவந்து விளங்காநின்றன. திருமேனியானது, பெரிய ஓரஞ்சநமலைபோல் ஸ்நிக்த்தமாய்ப் ப்ரகாசியாநின்றது. இவ்வவயவ சோபையுந்திருமேனியினெழிலும், ஜ்ஞாநாதிகரான ப்ரஹ்மாதிகளுக் கேயன்றிக்கே ஸர்வஜ்ஞரான நித்யஸூரிகளுக்குங்கூட இவ்வளவென்று பரிச்சேதித்தநுபவிக்க முடியாததாய் அபரிச்சிந்நமாயிருக்கிறது. பகவந்நிர்ஹேதுக க்ருபையினால் இவ்வபரிச்சிந்நமானவற்றை உள்ளபடி யறிந்தநுபவித்தேன். சச.

நிறமுயர்கோலமும் பேருமுருவு மிவையிவையென்று,
அறமுயல்ஞானச்சமயிகள்பேசிலும், அங்கங்கெல்லாம்
உறவுயர்ஞானச்சுடர்விளக்காய்நின்ற தன்றியொன்றும்
பெறமுயன்றாரில்லையால், எம்பிரானை பெருமையையே. (சச)

அர்த்தம்.—நிறம் - (திருமேனியின்) ஸௌந்தர்யத்தாலே, உயர் - அதிசயித்த, கோலமும் - அலங்காரங்களும், பேரும் - திருநாமங்களும், உருவும் - திவ்யமங்கள விக்ரஹங்களும், இவைஇவை என்று - இப்படிப்பட்டவை இப்படிப்பட்டவை என்று, அறம் - தர்மத்திலே, முயல் - யத்நமுடையவர்களாய், ஞாநம்-பக்தியை யுடையவர்களான, சமயிகள்-வைதிகஸித்தாந்தநிஷ்ட்டர்கள், பேசிலும் - உபதேசிக்கிலும், அங்கங்கெல்லாம் - அவ்வவஸௌந்தர்யாதிகளில், உற - கிட்ட, உயர் - சிறந்த, ஞானம் - ஜ்ஞாநமாகிற, சுடர் - உஜ்வலமான, விளக்காய்-தீபத்தையுடையவர்களாய், (ஜ்ஞாநாதிகர்களாய்)

நின்றதன்றி - இருப்பதொழிய, எம்பிரானை - எம்பெருமானுடைய, பெருமையை - மாஹாத்ம்யத்தை, ஒன்றும் - ஒருவகையாலும், பெற - அடைவதற்கு, முயன்றாரில்லை - உத்யோகித்தார்களில்லை. சச.

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—நாற்பத்து நாலாம்பாட்டு.—மநோரதத்துக்கு எட்டாதென்றீர்; அவ்விஷயமெட்டாதோவென்ன அவனருளாலே காணலாமன்றி காணலாமென்கிறார்.

வ்யா.—(நிறமித்யாதி) இவனைப்பற்றித் தான் நிறம்பெறும்படியான ஒப்பனையும். (க) "ஆயதா: - ஆயதா:" திருவடி வந்த கார்யத்தை மறந்து கவிபாடத்தொடங்கினான்; வந்த கார்யம் முடிந்ததென்றறிந்தானத் தோள்களைக் கண்டபோதே. "ஆயதா:-ஆயதா:" ஆஜாநுபாஹு. திருமுழந்தாளளவும் நீண்டு பின்னையும் முடியாதிருக்கை. "பாஹவ: - பாஹவ:" (உ) "ராமஸ்ய தக்ஷிணோ பாஹு: - ராமஸ்யதக்ஷிணோபாஹு:" என்கிறபடியே "ஸர்வபூஷணபூஷார்ஹா: - ஸர்வபூஷணபூஷார்ஹா:" அழகிழந்து கிடக்கிற ஆபரணங்களை யலங்கரியாதொழிகிறதென்? "கிமர்த்தம் நவிபூஷிதா: - கிமர்த்தம் நவிபூஷிதா:" இவ்வாபரணங்களினெழிலைக்கழற்றியிட்டு வைக்கிறதென்? ராஜாக்கள் வெற்றிலை விலக்குதல், பால்குடியோமென்னுதல் செய்வார்கள், "இன்ன கோட்டை யழித்தாலன்றி" என்று திரிவாரைப்போலே. ஒன்று மறியாதே காட்டிலே திரியக்கடவ குரங்குகளு மநுபவிக்கும்படி பெருக்காறு

அரு|| நாற்பத்துநாலாம்பாட்டு.—(நிறமுயர்.) "எம்பிரானை" என்கையாலே (அவனருளாலே காணலாமன்று காணலாம்) என்றது. நிறமுயர்கோலம்-திருமேனியில் நிறத்தாலேயுயரா நின்றுள்ள கோலமென்றபடி. ஒப்பனையு மிவனைப்பற்றி நிறம் பெறுமென்றதுக்கு ஸம்வாதமாக அருளிச்செய்கிறார் (ஆயதா:) என்று. "ஆயதாஶ்ச ஸுவ்ருத்தாஶ்ச - ஆயதாஶ்சஸுவ்ருத்தாஶ்ச" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருவடிவந்தகார்யத்தைமறந்து) என்று. "பரிகோபமா: - பரிகோபமா:" என்றதுக்குத் தாத்பர்யம் (வந்தகார்யம்) என்று. "பாஹவ:" என்ற பஹுவசநத்துக்குத் தாத்பர்யம் (ராமஸ்யதக்ஷிணோபாஹு:) என்று. அதாவது - இளையபெருமாள் இவர்க்கவயவபூதராகையாலே இளையபெருமாள் தோளையுங்கூட்டி யருளிச்செய்கிறாரென்றபடி. ஸர்வபூஷணங்களையும் பூஷிக்க அர்ஹங்களென்கிற வர்த்தத்தை அருளிச்செய்கிறார் (அழகழிந்து கிடக்கிற) என்று. அதாவது-ஆபரணங்கள் திருத்தோள்களோடே கூடியிருந்தாலழகுபெற்றிருக்கும், பிரிந்திருந்தாலழகழிந்து கிடக்குமென்றபடி. (கிமர்த்தம் நவிபூஷிதா:) என்றதுக்கு இரண்டு தாத்பர்யம். ராஜாக்கள் வெற்றிலை விலக்குதல், பால்குடியோமென்னுதல் செய்வார்கள், இன்ன கோட்டையழித்தாலன்றி என்றிருக்குமாபோலே, ருஷிகள் விரோதிகளைப் போக்கினாலொழிய

(க) ஸ்ரீராமா-கிஷ்கிந்தா. ரு - கரு. (உ) ஸ்ரீராமா-யுத்த. உஅ-உரு.

வ்யா.—போலே இவ்வெறும் புறத்திலழகைக்கொள்ளை யூட்டிக்கொள்ளுகிறதென்?(பேரும்)இவ்வழகுக்கு வாசகமானதிருநாமமும். திருமலைநம்பி அந்திமதசையிலே கணியனூர்ச்சிறியாத்தானை "பிள்ளைதமக்குத்தஞ்சமாக நினைத்திருக்குந் திருநாமமென், அத்தைச்சொல்லவேணும்" என்ன, "இவர்முன்னே நாமத்தைச்சொல்லுவது" என்றுகூசியிராநிற்க, "தாசரதீ!பேசாதிருக்குமவஸ்த்தையன்றுகாணிது" என்ன "நாராயணாதி நாமங்களுஞ் சொல்லிப் போருவர்; ஆகிலும் விரும்பியிருப்பது 'அழகிய மணவாளப்பெருமாள்' என்னும் திருநாமத்தை" என்ன, "பர்த்ருநாமத்தோபாதியாயிராநின்றது; ஆகிலும்பிள்ளைநினைத்திருந்தது போக்கித்தஞ்சமில்லை" என்று "அழகிய மணவாளப்பெருமாளேசரணம்" என்று திருநாட்டுக்கு நடந்தார். கூரத்தாழ்வானோபாதியாகையாலே பட்டரைப் பிள்ளையென்பர். ஆச்சிமகன் அந்திமதசையிலே தன்னை யறியாதேகிடக்க, பட்ட ரெழுந்தருளிச் செவியிலேயூதினாற்போலே "அழகியமணவாளப்பெருமாளே சரணம்" என்ன, பூர்வவாஸநையாலே யறிவுகுடிபுகுந்து அத்திருநாமத்தைச் சொல்லித் திருநாட்டுக்கு நடந்தார். (உருவும்) ஆளவந்தார் மகனார் சொட்டைநம்பி யந்திமதசையிலே முதலிகளடையப்புக்கிருந்து "நீர் நினைத்துக்கிடக்கிறதென்" என்ன, "ஸ்ரீவைகுண்டத்திலே சென்றால் நம்பெருமாளுடைய குளிர்ந்தமுகம்போலே ஸ்ரீவைகுண்டநாதன் முகம் குளிர்ந்திருந்ததில்லையாகில் முறித்துக்கொண் டிங்கே ற

---

அரு|| ஆபரணங்களையணியவொண்ணாதென்று இருக்கிறதோ வென்னுதல், அதவா-திர்யக்கான என்னை வசீகரிக்கைக்கு ஆபரணங்களாலே ஆச்சாதியாதே அழகெல்லாங்காட்டவேணுமென்றோ வென்னுதல்; இவ்விரண்டையுமருளிச்செய்கிறார் (ராஜாக்கள்) இத்யாதி. (க) "மகரநெடுங்குழைக்காதர்" என்னுமாபோலே இவ்வழகுக்கு வாசகமான திருநாமமும். திருநாமம் ஆகர்ஷகமுமாய்த் தஞ்சமுமாயிருக்கு மென்கைக்காக ஐதிஹ்யங்களை யருளிச்செய்கிறார் ( திருமலைநம்பி ) என்று. ( பர்த்ருநாமக்ரஹணத்தோபாதியாயிராநின்றது) என்றது - இவர் பஞ்சமோபாய நிஷ்ட்டராகையாலே ஆசார்யன் திருநாமமானால் நன்றாயிருக்கும், பர்த்ருநாமக்ரஹணத் தோபாதி, இது நமக்குச்சார்யமன்று, ஆகிலும் பட்டரநுஸந்திக்கிறதாகையாலே உத்தேச்யமென்று அழகியமணவாளப் பெருமாளே சரணமென்று திருநாட்டுக்கெழுந்தருளினாரென்றபடி. பட்டரைப் பிள்ளையென்கிறதென்னென்ன அருளிச்செய்கிறார் (கூரத்தாழ்வானோபாதியாகையாலே) என்று. அதாவது-தாம் பட்டர்க்குக் கூரத்தாழ்வானோபாதியாகையாலே பிள்ளை யென்கிறாரென்றபடி. விக்ரஹமாகர்ஷகமாயிருக்கு மென்கைக்கு ஐதிஹ்யங்களை அருளிச்செய்கிறார். (ஆளவந்தார் மகனார்) என்று. சேலையைக்கடுக்கி-திருப்பரி வட்டத்தைக்

---

(க) திருவாய். எ - ரு - க0.

வ்யா.—ஓடிப்போருமித்தனையென்று கிடக்கிறேன்'' என்றார்.பட்டர் பெருமாள்பாடே புக்கிருக்க,பெருமாள் திருமஞ்சனத்துக்கேறி யருளுகிறவர் பட்டரைக்கண்டு "உனக்குவேண்டுவதென்'' என்று கேட்டருள, "சேலையைக்கடுக்கி திருவரையையுந் துடைப்பற்றையுமொருகால் காட்டியருளவேணும்'' என்றார்; பெருமாள் "அஞ்சினையோ'' என்று கேட்டருள, * "நாயன்றே! பரமபதமென் சிறுமுறிப்படி யழியும். உம்முடைய குளிர்ந்த திருமுகமும் திருநாமத்தழும்பு மிழக்கிறேனாகக் கருதி அஞ்சாநின்றேன்'' என்றார். (உருவும்) வடிவழகும், (இவையிவையென்று) இதோரொப்பனையே! இதொருதிருநாமமே! இதோரழகே! யென்று. (அறமுயல்) அறத்திலே முயலாநின்றுள்ள. (ஞானச்சமயிகள்) தஹரவித்யை, சாண்டில்யவித்யை, ஸத்வித்யை, இவற்றாலே யகவரதபாவனைபண்ணி பக்திநிஷ்டராய் அந்த ஸ்நேஹத்தாலே ஒரொன்றே அநுபவித்து அதுக்கவ்வருகு போகமாட்டாதே யிருக்கு மவர்கள். (பேசிலும்) சொல்லப்புக்கார்களாகிலும்.

(அங்கங்கெல்லாம்) அவ்வொப்பனையிலுந் திருநாமத்திலும் வடிவிலும். (உற) கிட்ட. (உயர்ஞானச்சுடர்விளக்காய் நின்றதன்றி) மிக்கஞாந ப்ரகாசத்தையுடையரான மாத்ரமன்றி. (எம்பிரானபெருமையை ஒன்றும்பெற முயன்றாரில்லையால்) தன்னருளாலேயெனக்குவிஷயமாக்கின உபகாரகனுடையபெருமையை ஒருத்தருங்கிட்டும்படி முயன்றாரில்லை யென்றந்வயம். சச.

அரு||சழற்றி. துடைப்புற்றை-திருத்துடைகளை.(வேணும்)என்றவநந்தரம் அப்படி காட்டியருளக்கண்டு நடுங்கியிருக்க அவ்வளவிலே என்றுசேஷம்.(பெருமாளஞ்சினையோவென்றுகேட்டருள) அதாவது - பெருமாளை ஏகாந்தஸேவை ஸேவித்தால் சீக்ரமேபரமபதத்துக்குப்போவர்களென்று ப்ரஸித்தியுண்டு.அத்தாலே பரமபதத்துக்குப் போகிறோமென் றஞ்சினையோவென்று கேட்டருளவென்றபடி. சிறுமுறிப்படியழியும் கிள்ளாக்குச்செல்லும். "அறமுயல்ஞானச் சமயிகள்பேசிலும்"-தர்மமார்க்கத்தாலேமுயன்று பெற்றஜ்ஞாநத்தையுடைய சமயிகளுண்டு-தஹரசாண்டில்யாதிவித்யாநிஷ்டர், அவர்கள் தம்முடைய ஸ்நேஹத்தாலே ஓரோ ஒன்றை யநுபவித்துச்சொல்லப் புக்கார்களாகிலுமென்றுபொருள். (கிட்டும்படிமுயன்றாரில்லை)என்றது-ஸ்வயத்நத்தாலே கிட்டினாரில்லையென்றபடி. இத்தால், ஒவ்வோரழகுமுதலானவையிப்படி இருக்குமென்று ஜ்ஞாநத்தாலே அறிந்துபோகிறதொழிய ஸ்வயத்நத்தாலே ஸாக்ஷாத்கரிக்கப்போகா தென்றபடி.

[நிறமுயர்கோலமும் பேருமுருவு மிவையிவை யென்றறமுயல் ஞானச்

* நாயிந்தே என்று பாடாந்தரம்.

அரு|| சமயிகள் பேசிலுமங்கங்செல்லா முறவுயர் ஞானச்சுடர் விளக்காய் நின்றதன்றி எம்பிரானை பெருமையை ஒன்றும் பெறமுயன்றாரில்லை] என்றந்வயம். ஆல்-அசை. சசு.

[அப்பு அரும்பதம்.]

நாற்பத்துநாலாம்பாட்டு.—(நிறம்) "எம்பிரானை பெருமை" என்கையாலே (அவன் காட்டக்காணலாம்)என்கிறது. கோலங்கள் அவனைப்பற்றி நிறம் பெறுமென்கைக்கு ப்ரமாணமருளிச்செய்கிறார் (ஆயதாஸ்ச) இத்யாதி. ஸர்வ பூஷணபூஷயிது மர்ஹா: என்கிற வ்யுத்பத்தியைப் பற்றச் சொல்லுகிறது (அழகழிந்து)இத்யாதி. "பரிகோபமா:" என்றத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (வந்தகார்யம்) இத்யாதி. பஹுவசநஞ் சொல்லுவானென்னென்ன, இளையபெருமாளையுங்கூட்டி என்கிறார்(ராமஸ்ய)இத்யாதி. (எழில்) இத்யாதி-ஆபரணங்களைச்சாத்திக்கொண்டு அதுக்கழகுகொடாமேகழற்றுகிறதென் என்றபடி. "கிமர்த்தம்" என்கிறதற்குத்தாத்பர்ய த்வயமருளிச்செய்கிறார் (ராஜாக்கள்)இத்யாதி வாக்யத்வயத்தாலே, ராவணவதம்பண்ணுமளவுமோ? எங்களையநுபவிப்பிக்கைக்காகவோ? எனுநிமித்தமாகப் பூணுதிருக்கிறதென்றபடி. திருநாமம் போக்யமாயிருக்குமென்னுமதுக்கு ஸம்வாதத்வயமருளிச்செய்கிறார்(திருமலைநம்பி)இத்யாதி. பெரியதிருமலைநம்பிகுமாரரானபிள்ளைதிருமலைநம்பி. சிறியாத்தான்-பட்டர் ஸ்ரீபாதத்திலே. அவர்க்கு தாஸ்யநாமம் "தாசரதி" என்று. நம்பெருமாளென்று உபசாரமாகச் சொல்லுகையன்றிக்கே பர்த்தாவின் பேரைச்சொல்லுமாபோலே அழகியமணவாளப் பெருமாளென்று ஸாக்ஷாத்பேரைச் சொல்லுகை. விக்ரஹமும் போக்யமாயிருக்குமென்னுமதுக்கு ஸம்வாதத்வய மருளிச்செய்கிறார் (ஆளவந்தார்) இத்யாதி. ஏகாந்தத்திலே திருவரை ஸேவித்தவர்கள் பரமபதத்துக்குப் போவர்களென்றைதிஹ்யமுண்டாகையாலே அத்தைப்பற்ற பயப்பட்டாயோவென்று பெருமாளுக்குக் கருத்தாக ஆதுவிதேசமென்று பயப்படவில்லை, அதுநானிட்டவழக்கு, உம்மையிழக்கிறேனோவென்றஞ்சினேனென்றபடி. தஹரவித்யை-தஹராகாசஸ்த்தனானவந்தர்யாமியை உபாஸிக்கை. அவர்களும் ஜ்ஞாநத்தாலே காண்கையொழியக் கிட்டியநுபவிக்கமாட்டாரென்றபடி. சசு.

[வேறொரு அரும்பதம்.]

நாற்பத்துநாலாம்பாட்டு.—(நிறம்) இத்யாதி. "காணலாம்" என்ற வநந்தரம் இப்படி முயன்றாரில்லை என்று சேஷம். நிறமுயரும்படியான கோலமென்று சப்தார்த்தமாய் தாத்பர்ய மருளிச்செய்கிறார் ( இவனை ) இத்யாதி. இவனைப்பற்றிக் கோலம்வருமென்றதுக்கு ப்ரமாணம் ( ஆயதாஸ்ச ) இத்யாதி. பா (஭ா) வாந்தரம் ( வந்த ) இத்யாதி. பெருமாளுக்கிரண்டு தோளன்றோ? பஹுவசநம் சேரும்படி யென்னென்ன(ராமஸ்ய) இத்யாதி. "கிமர்த்தம்" என்றதுக்கு இரண்டாம் பா (஭ா) வம் (ராஜாக்கள்) இத்யாதி. மூன்றாம் பா (஭ா) வம் (ஒன்றும்) இத்யாதி. "பேரும்" என்ற ச (ச) காரத்தாலே

போக்யதாதிசயம் தோன்றுமென்னுமதுக்கு ஸம்வாதத்வயம் (திருமலை) இத்யாதி. பெரிய திருமலைநம்பி குமாரர் பிள்ளை திருமலைநம்பி. நடக்தாரென்றத்வயம். சிறியாத்தான் - பட்டர்திருவடிகள். பிள்ளையென்பது- பட்டரை. "உருவும்" என்ற ச (ச) காரத்தால் தோற்றின போக்யதையைத் திருவுள்ளம்பற்றி இரண்டு ஸம்வாதம் (ஆளவந்தார்) இத்யாதி. ஏகாந்தத்தில் திருவாயை ஸேவித்தால் பரமபதம் தப்பாதென்று ஐதிஹ்யமுண்டாகையாலே, "நீர், பேறுகிடைக்குமோ? கிடையாதோ? வென்றஞ்சி ஸேவிக்கவேணுமென்கிறீரோ?" என்று பெருமாள் கேட்டருளினபடியை அருளிச்செய்கிறார் (பெருமாள்) இத்யாதி. சச.

தாத்பர்யம்.—இப்பாசுரத்தில், எம்பெருமானுடைய ஸௌந்தர்யாதிகள் நினைக்கவரிதானாற் போலே ஸாக்ஷாத்கரிக்கவு மரிதென்கிறார்.

ஸாங்கமாய் யதாவிதி கர்மாநுஷ்டானம் பண்ணி நிர்மலாந்தஃகரணராய் பக்தியோகத்தி லிழிந்த மஹான்களுங்கூட, ஆபரணத்துக் கழகு கொடுக்கும்படியான திவ்யவிக்ரஹத்தையும், அத்திருமேனியோடு சேர்ந்து விளங்குகிற ஆபரணங்களையும், இவைகளுக்கு வாசகமான திருநாமங்களையும் தங்கள் தங்கள் ஜ்ஞாநாநு குணமாக வறிந்திடுபட்டுப் பின்புள்ளார்க்கவற்றை உபதேசித்தார்களேயாகிலும், அவர்களும் அவ்விஷயங்களைச் சிறிது விசதமாக அறிந்தார்களேயல்லது, அவர்களுக்குங்கூட அவன்க்ருபையல்லது கிட்டி ஸாக்ஷாத்கரித்தநுபவிக்கப்போகாது. சச.

பெருங்கேழலார்தம் பெருங்கண்மலர்ப்புண்டரீகம், நம்மேல்
ஒருங்கேபிறழவைத்தா ரிவ்வகாலம், ஒருவர்நம்போல்
வருங்கேழ்பவருளரேதொல்லை *யாழியஞ்சூழ்பிறப்பும்
மருங்கேவரப்பெறுமே, சொல்லுவாழிமடநெஞ்சமே, சடு.

அர்த்தம்.—பெரும்கேழலார் - பெரியவடிவுடைய வராஹநாயனார், தம்-தம்முடைய, மலர் - விகஸித்த, புண்டரீகம் - தாமரைப்பூப்போன்ற, பெரும் - விசாலமான, கண் - திருக்கண்களை, நம்மேல் - நம் மேலே, ஒருங்கே - முழுதும், பிறழ - சேர, வைத்தார் - வைத்தார். இவ்வகாலம் - இவ்வகாலத்திலே, ஒருவர் - யாராவதொருத்தர், நம்போல்-நம்மைப்போலே, வரும்-வரப்பட்ட, கேழ்பவர் - நன்மையையுடையவர், உளரோ - உண்டோ ? தொல்லை - அநாதியாய், ஆழி - ஸமுத்ரம்போல் தாண்டத்தகாததாய், அம் - அழகிதாய் (க்ரூரமாய்), சூழ்-சுற்றிக்கொண்டிருக்கிற, பிறப்பும் - ஜந்மமும், மருங்கே - பக்கத்திலாவது, (என்ஸம்பந்தமுடையார்க்கும்), வரப்பெறுமே-வருமோ? மடம் - விதேயமான, நெஞ்சமே - ஓமநஸ்ஸே! சொல்லு - சொல், வாழி - வாழக்கடவாய்.

---

* வாழியம் என்றபாடமும் அதுக்கநுகுணமாக,"பழையதாய் ஸ்வரூபப்ரயுக்தமான வாழ்வையுடையோமானோம். வாழ்வென்று அநுபவத்தைநினைக்கிறது"என்றும் ஸ்வாபதேச உரையில் காண்கிறது.

## [பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

வ்யா.—நாற்பத்தைந்தாம்பாட்டு.—(பெருங்கேழலார்) ரக்ஷ்யத்தினளவன்றிறே ரக்ஷகனுடைய பாரிப்பிருக்கிறபடி. (க) "[மாகடம்பில்நீர்வாரா]ஏறுமழுக்கெல்லா மேறும்படியாக விருக்கை.[பன்றியாம்தேசு] (உ) "[illegible]-ஆத்மாநம் மாநுஷம் மந்யே" என்று கேழலான தேஜஸ்ஸுக்கு ஸ்ரீவைகுண்டநாதனுயிருக்கும் தேஜஸ்ஸு போராதிருக்கை. (ங) "என்கண்பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதியை ஈசன்வானவர்க் கென்பனென்றாலது தேசமோ." தன்னை யறியாதார்க்கு முகங் கொடுத்தவனுக்கு, தன்படி யறியுமவர்களுக்குத் தான் முகங்கொடுத்தானென்றிதோ ரேற்றமோ? (பெருங்கேழலார்)(ச)"சிலம்பினிடை" இத்யாதி. (தம்பெருங்கண்மலர்) பெருங்கேழலாரென்ற உடம்படையக் கண்ணாயிருக்கை. கடல்போலேபெருத்து அதுநிறையத் தாமரை பூத்தாற்போலே யிருக்கை. (ரு) "[illegible]-மஹாவராஹஸ்ஸ்புடபத்மலோசந:".(தம்பெருங்கண்மலர்)இப்ப்ரளயங்கொண்ட பூமியையெடுத்துப் பிராட்டிக்குக் கார்யம்செய்தானாய் ஸ்ரீபூமிப்பிராட்டியைக்குளிரநோக்கிக்கொண்டிருக்கிறவிருப்பு.(நம்மேல்)அவள் ப்ரஜையான நம்மேல். (ஒருங்கே) ஸ்ரீ பூமிப்பிராட்டி பக்கலிலும் பாலி பாயாதபடி. (பிறழவைத்தார்) மிகவைத்தார். தம்மால் தரிக்கப்போகிறதில்லை.

---

அரு|| நாற்பத்தைந்தாம்பாட்டு.—(பெருங்கேழலார்) இப்படி ஈஸ்வரன் தமக்குத்தன்படியைப் ப்ரகாசிப்பித்தபடியை யநுஸந்தித்து ஹ்ருஷ்டரானவளவிலே,"ஸம்ஸாரார்ணவ மத்யஸ்தரான நமக்குபகரித்தானென்று ஹ்ருஷ்டராகாநின்றீர், ஸம்ஸாரத்தினின்று முத்தீர்ணரானவர்களைப்பெறக்கடவ பேறனது நமக்கு நிலைநிற்கக்கூடுமோ"என்று திருவுள்ளத்துக்குக் கருத்தாக, அவனுடைய பூர்ணகடாக்ஷம் பெற்ற நமக்குக் குறையில்லை காணென்று அருளிச்செய்கிறார் (பெருங்கேழலார்) இத்யாதி. பெருமைக்குத் தாத்பர்யம், (ரக்ஷ்யத்தி னளவன்றிக்கே) இத்யாதி. "கேழல்" என்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (மாகடம்பில் நீர்வாரா) என்று. இந்தச்சக்தைக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஏறுமழுக்கெல்லாம்) என்று. "பன்றியாம்தேசு" என்றதுக்குத் தாத்பர்யம் (ஆத்மாநம்) இத்யாதி. பன்றியான தேஜஸ்ஸுக்கு ஸ்ரீவைகுண்ட நாதனுயிருக்கும் தேஜஸ்ஸொவ்வா தென்கைக்கு ஸம்வாதமாக அருளிச்செய்கிறார் (என்கண் பாசம்வைத்த) என்று. இதுக்குப் பொருள் (தன்னை யறியாதார்க்கு) என்று. "பெருங்கேழல்" என்றதுக்கு ப்ரமாணம் (சிலம்பினிடை)இத்யாதி. "பெருங்கேழலார்தம் பெருங்கண் மலர்ப்புண்டரீகம்" என்ற பதத்வயத்துக்கும் ஸம்வாதமாக அருளிச்செய்கிறார் (மஹாவராஹஸ்ஸ்புடபத்மலோசந:) என்று. ஒருங்கே, ஒருமைப்பட.

---

(க) நாய்ச்சியார்திரு - ௧௧-அ. (உ) ஸ்ரீராமா-யுத்த - ௧௨௦ - ௧௨.
(ங) திருவாய் - ௩-௩-௪. (ச) திருமொழி - ௪-௪-அ.
(ரு) ஸ்ரீவிஷ்ணு பு. ௧-௪-௨௬.

வ்யா॥ (இவ்வகாலம்) சருகாய்க்கிடக்கும் மரங்களுமொரோகாலத்தே தளிரும் முறியுமாய்நிற்கு மதுபோலே.

(ஒருவர் நம்போல்வருங் கேழ்பவருளரே) ஆரேனு மொருவர் நம்மைப்போலேவரும் நன்மையுடையாருண்டோ? ஸர்வேச்வரனுக்கு சேஷத்வரஸமில்லாமையாலே யில்லை; முக்தரும், நித்யரும் அவ்வருகிலுள்ளாராகையாலே அவர்களுக்கில்லை; பத்தர் விஷயப்ரவணராகையாலே அவர்களுக்கில்லை;(௧) ‹‹నజీవేయం క్షణమపి వినా తామసితేక్షణాం- நஜீவேயம் க்ஷணமபிவிநாதாமஸிதேக்ஷணாம்'' என்கிற வைலக்ஷண்யத்தையுடையாராகையாலே பிராட்டிமார்க்கில்லை; இவரைப்போலே தாழ்நின்று இப்பேறுபெற்றாரில்லை யென்றபடி. (தொல்லையித்யாதி) பழையதாய் ஸம்ருத்தமாய்ப் பொல்லாதாய்ப் போக்கற வளைப்பதான ஜந்மம் என்னோடு ஸம்பந்தமுடையார்பக்கல் கிட்டப்பெறுமே? (௨) ‹‹మదన్వయానాం - மதந்வயாநாம்.'' (சொல்லுவாழி மடநெஞ்சமே) கண்டதெல்லாம் நாக்கு நீட்டித்திரிந்த நீ சொல்லாய். (௩) ‘‘வைமுந்த மன்னாள் குழல்வாய்விரைபோல் விண்டுகள்வாரும் மலருளவோ'' என்னுமாபோலே. மடநெஞ்சமே! எனக்கு பவ்யமான நீ வாழ்வாயாக. ௪௫.

அரு॥ ஒருவர்க்குமில்லையோ வென்ன அருளிச்செய்கிறார் (ஸர்வேச்வரனுக்கு) என்று. சேஷத்வரஸம் நித்யர்முக்தர் பிராட்டிமார்க் கெல்லார்க்கு முண்டாயிருக்க இவரைப்போலேயிருக்க இல்லையென்கிறதுக்குக்கருத்தென்னென்ன அருளிச்செய்கிறார் (தாழநின்று இப்பேறு பெற்றாரில்லை) என்று. தொல்லை-பழமையாய்,ஆழி-ஸமுத்ரமாய்,‘‘அம்'' என்றது-விபரீதலக்ஷணையாலே பொல்லாதாய்,சூழ்-போக்கறவளைப்பதான. போக்கற-போக்கறும்படி, வளைப்பதான-வளைத்துக் கொள்ளுகிற.(மதந்வயாநாம்) என்றது. ‹‹మాతా పితా యువతయః-மாதா பிதாயுவதய:'' என்றுதொடங்கி ஆளவந்தார் தம்முடைய திருவம்ஶ்யருக்கு ஆழ்வார்திருவடிகளே ஸமஸ்தப்ராப்யமு மென்றருளிச் செய்தாற்போலே ஆழ்வாரும் தம்முடைய ஸம்பந்தமுடையார் பக்கலிலே ஜந்மங்கிட்டப் பெறுமென்கிறா ரென்றபடி. தம்முடைய வைலக்ஷண்யத்தை (௩) ‘‘மாருமோர் நூம் வியலிடத்து'' என்று தலைமகளுக்குச்சொன்ன ஸ்ரீவைஷ்ணவர்கள் சொன்னாற்போலே இப்போது தாமானதன்மையிலே நம்போல் வருங்கேழ்பவருளரே என்றபடி. மடமென்றதுக்கு இரண்டுபொருள். சாபல்யமாதல், பவ்யதையாதல்.

[பெருங்கேழலார்தம் பெருங்கண்மலர்ப்புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழவைத்தாரிவ்வகாலமொருவர்நம்போல் வருங்கேழ்பவருளரே இப்படியாகையாலே தொல்லையாழியம் சூழ்பிறப்பும் மருங்கேவரப் பெறுமே மடநெஞ்சமே சொல்லுவாழி] என்றந்வயம். ‘‘கேழ்பு'' என்று நன்மையைச் சொல்லுகிறது. ‹‹తతస్సముత్ క్షిప్య ధరాం స్వదంష్ట్రయా మహావరాహస్స్ఫుటపద్మలోచనః । రసాతలాదుత్పలపత్రసన్నిభస్స ముద్ధితో నీలమహాచలో మహాన్ - ததஸ்ஸமுத்

---

(௧) ஸ்ரீராமா-ஸுந்தர - ௬௬-௧௦. (௨) ஸ்தோத்ரரத்நம் - ௫.
(௩) திருவிருத்தம் - ௫௫.

அரு||க்ஷிப்ய தராம்ஸ்வதம்ஷ்ட்ரயா மஹாவாராஹஸ்ஸ் புடபத்மலோசநः |
ரஸாதலாதுத்பலபத்ரஸந்நிபஸ்ஸமுத்த்திதோ நீலமஹாசலோ மஹாந் ".
"மாதாபிதா" இத்யாதி. சரு.

[அப்பு அரும்பதம்.]

நாற்பத்தைந்தாம்பாட்டு.—(பெருங்கேழலார்) இத்யாதி. *கீழ்ப்பாட்டில் ஸ்வயத்நஸாத்யமல்லாத ஸர்வேஶ்வரனை அவனருளாலே தாங்கிட்டப்பெற்றேனென்கிறார். அத்தாலுண்டான ஹர்ஷப்ரகர்ஷத்தாலே தம்முடைய ஸம்பந்திஸம்பந்திகளையும் ஸம்ஸாரம் கிட்டவற்றோ வென்று களிக்கிறாரென்றவதாரிகைகண்டு கொள்வது."கேழல்"என்றதனைப்பற்றவருளிச்செய்கிறார் (மாசுடம்பு)இத்யாதி. ஆஶ்ரிதார்த்தமாகக் கொள்ளுகையே தேஜஸ்ஸு; அது தேஜஸ்ஸன்றுஎன்கைக்குப்ப்ரமாணமருளிச்செய்கிறார் (என்கண்பாசம்) இத்யாதி. வடிவுபெருத்திருக்குமோ வென்னவருளிச்செய்கிறார் (சிலம்பினிடை) இத்யாதி. வடிவுங்கண்ணும் பெருத்திருக்கு மதுக்கு ப்ரமாண மருளிச்செய்கிறார் (மஹாவராஹ) இத்யாதி. (பாவிபாய்கை). விழுக்காட்டில் விழுகை. "கேழ்".என்று அழகாய் அத்தால் நன்மையைச் சொல்லுகிறது.(தாழநிர்கை) ப்ரச்ருதியோடே யிருக்கை. "அம்" என்று விபரீதலக்ஷணையாய்ப் பொல்லாதாயென்கிறது. இப்படி யென்னுடையவர்க்கென்ற பேருண்டோ வென்ன வருளிச்செய்கிறார் (மதந்வயாநாம்) என்று. சரு.

[வேறொரு அரும்பதம்.]

நாற்பத்தைந்தாம்பாட்டு.—(பெரும்)*ஸ்வலாபாநுஸந்தாநத்தாலே"நம்முடைய ஸம்பந்திஸம்பந்திகளும் விசேஷகடாக்ஷவிஷயீக்ருதரானார்; இனி எனக்கொப்பாருண்டோ? என்னை ஸம்ஸாரதுரிதம் மேலிடுமோ?" வென்று களிக்கிறாரென்று ஸங்கதிகண்டு கொள்வதென்று திருவுள்ளம்பற்றி பெருமை- பாரிப்பில்பெருமையாக்கி பாவமருளிச்செய்கிறார்(ரக்ஷயத்தின்)இத்யாதி. அந்தப்பாரிப்பை ப்ரமாண பூர்வமுபபாதிக்கிறார் (மாசு) இத்யாதி. உடம்புக்கு மாசு நிரூபகமாகச் சொன்னதுக்கு பாவம்(ஏறும்)இத்யாதி. (மங்யேஎன்று) என்ற வந்தரம் சொல்லுமோ பாதிஎன்று சேஷம். (போராது) என்றதுக்கு ப்ரமாணம் (என்கண்) இத்யாதி. எடுத்தபாசுரத்துக்கர்த்தம் (தன்னை) இத்யாதி. முன்னே பாரிப்பின் பெருமையாக்கி, இப்போது வடிவில் பெருமை என்றர்த்தாந்தரம் விவக்ஷித்து அதுக்குப் ப்ரமாணம் (சிலம்பு) இத்யாதி. (பெருத்து) என்றவநந்தரம், இருந்த திருமேனியிலே என்று சேஷம். அநுபவத்தாலே

* அப்பு அரும்பதத்தில் "கீழ்ப்பாட்டில்" இத்யாதி "ஹர்ஷப்ரகர்ஷத்தாலே" இத்யந்தமான பங்க்தியும் அதுக்குமேல் "விசேஷகடாக்ஷவிஷயீக்ருதரானா வெனக்கொப்பாருண்டோ" என்றும் வேறொரு அரும்பதத்தினுதியில் பாடமும், "தம்முடைய ஸம்பந்தி ஸம்பந்திகளையும்" என்கிற பங்க்திக்குப் பூர்வம் "ஸ்வலாபாநுஸந்தாநத்தால்" என்கிறபங்க்தி மாத்ரமே அப்பு அரும்பதத்தினுதியில் பாடமும் சிலஶ்ரீகோசங்களில் காண்கிறது.

பெருத்தகண்ணென்றர்த்தாந்தரம் (இப்ப்ரளயம்) இத்யாதி. (மலர்) என்றதுக்கு பாவமென்னவுமாம். உட்கருத்து(தம்மால்)இத்யாதி.கேழ்பவர் கீர்த்தியுடையாரென்று விவக்ஷிந்தத் தாத்பர்யம் (ஆரேனும்) இத்யாதி. (அவ்வருகுள்ளார்) . என்றது - கேவலம் கடாக்ஷாதிநிவேசயாகவைக்கவேண்டுவதில்லையாகையாலேயென்கை. (வைலக்ஷண்யத்தை) என்றது- தாங்களவனைக்கடாக்ஷித்து ஸத்தைபெறப்பண்ணும் படியான வேற்றத்தையென்றபடி. தாழநின்று-சடகோபமென்று பேர்பெற்று அடிவிடாதே நின்று. ஆழி-ஸமுத்ரமாய், அத்தால் பலிதம் (ஸம்ருத்தமாய்) என்றது. "அம்" என்று அழகாய், நல்லபாம்பு என்னுமாபோலே க்ரூரமென்றருளிச்செய்கிறார் (பொல்லாதாய்) என்று. என்னுடையார்க்கெல்லாமென்ற பேருண்டோ வென்ன (மதர்வயா நாம்) என்று. வண்டுகளைக்கேட்டாற்போலே நெஞ்சைக் கேட்கிறாரென்றருளிச்செய்கிறார் (வைகுந்தம்) இத்யாதி. கண்டயலரெங்குந் திரிந்தவண்டுகளைப்போலே நின்றவிடத்தே நில்லாதே திரிந்தபடியாலே மடப்பம்பிறந்த நெஞ்சமேயென்று கீழருளிச்செய்தது தாத்பர்யாந்தரம் (எனக்கு) இத்யாதி. சரு.

தாத்பர்யம்.—ஸர்வேஶ்வரன் தன்னுடைய வைபவத்தை ஆழ்வாருக்குப் ப்ரகாசிப்பித்தருள, அதை யநுஸந்தித்து ஸந்துஷ்டரான ஆழ்வாரைக்கண்டு, நம்மை ஸம்ஸாரார்ணவத்தில் நின்றும் உத்தரிப்பித்தவன்றன்றோ நீரிப்படி ஸந்தோஷிக்க வேண்டுவதென்று ஆழ்வாருடைய திருவுள்ளம் ப்ரஸந்நம்பண்ண, அவன் நம்மைப் பூர்ணமாகக் கடாக்ஷித்த பின்பும் நமக்கொரு குறை வுண்டோவென்று அருளிச்செய்கிறார்.

பூர்வம் ப்ரளயகாலத்தில் மஹாஸமுத்ரத்தில் மூழ்கிக் கிடந்த பூமியை உத்தரிப்பிக்கைக்காக மஹாவராஹாவதாரமெடுத்து, அடியிலிருந்த பூமியை உத்தரிப்பித்து அந்த ஸந்தோஷத்தினால் மலர்ந்த திருக்கண்மலர்களையுடையனான ஸர்வேஶ்வரன், இப்போது நம்மை இஸ்ஸம்ஸாரத்தில் நின்று முத்தரிப்பிக்கைக்காகத் தன்னுடைய குளிர்ந்த திருக்கண்களால் நம்முடைய ஶ்ரமமெல்லா மாறும்படி பூர்ணமாகக் கடாக்ஷித்தான். இனி நமக்காவது நம்மைச் சேர்ந்தவர்களுக்காவது துஸ்தரமாய் அதிக்ரூரமான இஸ்ஸம்ஸாரத்தில் ஜந்மம் கிடையாது. ஸ்வதஸ்ஸித்தமான பகவத் கைங்கர்யமும் அணித்தாயிற்று. ஆகையால் நம்மோடொத்த பாக்யவான்களொருவருமில்லை. இதிலுனக்கேதாகிலும் ஸம்சயமிருந்தால் சொல்லிக் காண். இனிநீ வாழக்கடவாய் என்று ஹ்ருதயத்தைக் குறித்தருளிச்செய்கிறார். சரு.



மடநெஞ்சமென்றும் தமதென்றும்,ஓர்கருமங்கருதி
விடநெஞ்சையுற்றார் விடவோவமையும், அப்பொன்பெயரோன்
தடநெஞ்சங்கீண்டபிரானார் தமதடிக்கீழ்விடப்போய்த்
திடநெஞ்சமாய், எம்மைநீத்தின்றுதாறும்திரிகின்றதே. சசு.

அர்த்தம்.—அப்பொன் பெயரோன் - அந்த ஹிரண்யனுடைய, தடம் - விசாலமான, நெஞ்சம் - மார்வை, கீண்ட - பிளந்த, பிரானார்தமது - உபகா

ரகனான ஸர்வேஶ்வரனுடைய, அடிக்கீழ்-திருவடிகளை உத்தேசித்து, விட-(மநஸ்ஸை) அனுப்பினவளவில், போய் - (அங்கே) சென்று, திடம் - த்ருடமான, நெஞ்சமாய் - அத்யவஸாயத்தை உடைத்தானதாய்க்கொண்டு, எம்மை-நம்மை, நீத்து - விட்டு விட்டு, இன்றுதாறும் - இதுவரையிலும், திரிகின்றது - ஸஞ்சரியாநின்றது. (ஆகையால்), நெஞ்சம் - மநஸ்ஸானது, மடம் என்றும் - (நமக்கு) விதேயமென்றும், தமது என்றும் - நம்முடைய கரணமென்றும் (எண்ணி), ஓர் கருமம் - ஒருகார்யத்தை, கருதி - (செய்ய) நினைத்து, நெஞ்சை - மநஸ்ஸை, விட - (தூதாக) விடுகைக்கு, உற்றார் - விஶ்வஸித்தவர்கள், விட - (அந்தக் கார்யத்தை) விட்டுவிட, அமையும்-தகும். ருகூ.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—நாற்பத்தாறும்பாட்டு.—"வாழிமடநெஞ்சமே" என்று நெஞ்சை ஸ்துதித்தவாறே "என்னை இப்படி ஸ்துதிக்கிறதென், நானென்செய்தேன்" என்ன, "இந்நாள்வரைபந்தஹேதுவாய்ப் போந்த நீ அவனுடைய கடாக்ஷத்துக்கு இலக்காக்கி ஸஹகரித்திலையோ! உன்னாலேயன்றோ நானிதுபெற்றது" என்று கொண்டாடினார்கீழ்; கொண்டாடின வநந்தரம், ஸ்வப்நம்போலே முன்புற்றையநுபவம் மாநஸமாய் பாஹ்ய ஸம்ஶ்லேஷாபேக்ஷைபிறந்து அது கைவாராமையாலே கலங்கி இவர்படுகிற வ்யஸநத்தைக்கண்டு, திருவுள்ளம், "நானிக்குற்றைச்செய்யவேண்டுவதென்" என்ன, "அப்பொன்பெயரோன் தடநெஞ்சங் கீண்ட பிரானார் தமதடிக்கீழ்ப் போய் என்தசையை யறிவி" என்று திருவுள்ளத்தைத் தூதுவிட்டார்; அது மீண்டு வாராமையாலே நோவுபடுகிறார். "பெருங்கேழலார்" என்று ஶ்ரீவராஹமான வவதாரத்தை யாசைப்பட்டு ஶ்ரீந்ருஸிம்ஹமான விடத்தே தூது விடுவானென்னென்னில், இரண்டவதாரமும் ஆஶ்ரிதார்த்த மாகையாலே விடுகிறார் "மடநெஞ்சம் என்று கீழே" ஸர்வேஶ்வரன்மேல்விழுவதுக்கு "அல்லேன்" என்றதாபிமுக்யத்தைப்பண்ணி அதுக்குடன்பட்டதென்று நெஞ்சைக்கொண்டாடினார்; இப்போதந்நெஞ்சை இன்னாதாகிறார்; இப்போதின்னாதாகிறதென், அப்போது கொண்டாடுகிறதென்னென்னில், ஆசைகளாபுரளும்படி அதுக்குத்தானேக்ருஷியைப்பண்ணி அவ்வாசைக்கிரையிட்டு இனி ப்ராப்தியாலல்லது நடவாத ஸமயத்திலே அதுக்குத்தான் ஸஹகரியாதே தன்னைக்கொண்டகல

அரு.—நாற்பத்தாறும்பாட்டு.—(மடநெஞ்சமென்றும்) (தானே க்ருஷியைப்பண்ணி) என்றது - ஸர்வேஶ்வரன் வந்து மேல்விழ "அல்லேன்" என்றதே ஆபிமுக்யத்தைப்பண்ணி என்றபடி. (அவ்வாசைக்கிரையிட்டு) என்றது-ஆசையாலே படுகிறபாடைக்கு என்னை விஷயமாக்கி என்றபடி. (தன்னை

நின்றதென்னென்று இன்னாதாகிறார். இது ஸஹகரிக்கை யாவதென்னென்னில், பக்தஹேதுவான வோபாதி மோக்ஷஹேது வுமிறே. (க)" [Sanskrit] - ராக்ஷதர்மேணபலேநசைவ" என்கிறபடியே ப்ராப்தியளவுஞ் செல்லத் தான் முகங்காட்டி "நீபட்டதென்" என்ன வேணுமிறே. அவனே உபாயமென்கிறது ப்ராப்தாப்ராப்த விவேகம் பண்ணி நிஷ்கர்ஷித்துச் சொல்லுகிறவார்த்தையிறே. அவனே உபாயமாகச் செய்தேயு மித்தலையாலேயும் வருவன சிலவாலயுண்டிறே; அவைதான் தனித்துப் பேற்றுக்குடலாகமாட்டாமையாலே யொன்றாகச் சொல்லுகிற வத்தனையிறே. இத்தலையாலே வருமவைதானெவையென்னில், பேற்றுக்கு சேதநன்தானுளனாகவேணுமே; தானுளனென்று உபாயத்தி லந்வயியா னிறே; புருஷார்த்தத்தையறிந்து ருசித்து ஸஹகரிக்கைக்கு நெஞ்சு வேணுமே; சத்ருசங்கள் சில உண்டிறே இத்தலையாலேவருவன. இவைதானுண்டாகநிற்கச்செய்தேயும் கரணசரீரத்தில் நிவேசியாதே ஸந்நிதிமாத்ரத்தாலே உபகாரகங்களாய் நிற்கக்கடவது. அவனேஉபாயமுமாய் அவன் ஸித்த ஸ்வரூபனுமா யிருக்கச்செய்தே ஸம்ஸாரமுமநுவர்த்திக்கிறஹேது-சத்ருசங்களில்லாமையிறே. ஆக, இப்படி ப்ராப்தியளவும் நின்று முகங்காட்டித்தரிப்பிக்க வேண்டியிருக்க அது செய்யாமையாலே நெஞ்சை யின்னாதாகிறார்.

வ்யா - (மடநெஞ்சமென்றும் தமதென்றும்) நாட்டிலே இங்ஙனேயிருப்பதொரு ப்ரமமுண்டு. தந்தாம் நெஞ்சு தந்தாமுக்கு பவ்யமாயிருக்குமென்றும், இச்சேதநன் தன்புருஷார்த்தத்தைஸாதித்துக்கொள்ளுகைக்குறுப்பாகஸர்வேஶ்வரனிவனோடே கையடைப்பாக்கி

அரு||க்கொண்ட கலநின்றது) என்றது. தூதுபோய்த் திரும்பிவாராதே என்றபடி. (உ) "[Sanskrit]-மந ஏவமநுஷ்யாணாம்" என்கிறஶ்லோகத்தையுட்கொண்டு அருளிச்செய்கிறார் (பந்தஹேது) இத்யாதி. ஈஶ்வரனன்றோ உபாயம்; மநஸ்ஸை மோக்ஷஹேதுவென்கிறதென்னென்ன, அருளிச்செய்கிறார் (அவனே உபாயமென்கிறது) என்று. (ஒன்றாகச்சொல்லுகிற வத்தனையிறே) என்றது. ஈஶ்வரனொருத்தனையே உபாயமாகச்சொல்லுகிற வத்தனை யென்றபடி. (சத்ருசங்கள் சிலவுண்டிறே) என்றது - உபாயாந்தரத்யாகம், ஆநுகூல்யஸங்கல்பம், அத்யவஸாயம் இவை தொடக்கமானவை. (கரணசரீரத்திலே) உபாயத்திலே என்றபடி. அவனே ஸித்தோபாயமாயிருக்க இவை வேண்டுவா னென்னென்ன (அவனே உபாயமுமாய்) என்று.

தம்முடைய நெஞ்சு" என்று மமகாரம் பண்ணலாமோ வென்ன அருளிச்செய்கிறார் (இச்சேதநன் தன்புருஷார்த்தத்தை) என்று. இத்தைவிவரிக்கிறார்

(க) (உ) ஸ்ரீ விஷ்ணு பு. -சு-எ-உஅ.

வ்யா||வைக்கையாலே இத்தை "தம்மது" என்று மிருப்பர்களிறே. இ ஶ்ஶரீரத்தைக் கொடுத்தவோபாதி சரீரைகதேசமான நெஞ்சையும் புருஷார்த்தத்தையறிந்து ருசிபண்ணுகைக்காகக்கொடுத்துவைத்தான் ஆனபின்பு இவனுக்கு "என்னது" என்கைக்குத்தட்டில்லையிறே. பவ்யராயிருப்பார்க்கு, எதிர்த்தலை நோவுபடாநின்றால் ஒக்கநின்று முகங்காட்டி "நீபட்டதென், நான்பட்டதென்" என்னவேணுமிறே. சேஷபூதன் சேஷிக்கதிசயத்தைப் பண்ணவேணும்; அவையிரண்டு மில்லையாயிற்றே இதுக்கு. (ஓர்கருமமித்யாதி) ஒருப்ரயோஜநத்தைக் குறித்து நெஞ்சை யேவுகையிலே துணிந்தவர்கள் அக்கார்யந்தன்னையே விட்டுப்பிடிக்கவமையும். இதுசெய்வதென்கிறதன்று; அக்கார்யந்தன்னை விட்டுப்பிடிக்க வமையு மென்கிறது.

என்றான், விடத்தேடுகிற தென்னென்ன.

(அப்பொன் பெயரோன்)இத்யாதி. பவ்யமுமாய் சேஷமுமாயிருக்கிறவிது செய்து திரிகிறகார்ய மிதுவன்றே? (அப்பொன்பெயரோன் தடநெஞ்சங்கீண்ட பிரானார் தமதடிக்கீழ்விட) கார்யங்கொள்ளவொண்ணுதகோரிடத்திலேதான்விட்டேனோ? நமக்குக் கார்யஞ்செய்து உபகரித்துநிற்கிறவன்பக்கலிலேயன்றோவிட்டது? ஆஶ்ரிதரிலே யொருவர்க்குச்செய்ததுதமக்குச்செய்ததாகவிருக்கிறார்.(அப்பொன் பெயரோன்) தன்வயிற்றிலேபிறந்த ப்ரஜைவாயாலேதிருநாமத்தைச் சொல்ல, அவனை சத்ருக்கள்செய்யுமத்தைச்செய்து நலியக்கோலின க்ரௌர்யத்தை நினைத்து "அப்பொன்பெயரோன்" என்கிறார். (க) [பள்ளியிலோதிவந்த] பள்ளியோதும் பருவத்தி லேதேனுஞ்சொல் லிலும் * கொதுகுலமாயிறே யிருப்பது. [தன்சிறுவன்] ஆரேனும் பிள்ளைகள் சொல்லிலு மினிதாயிருக்கும் பருவத்திலே தன்வயிற்றிலேபிறந்தவனுமிறே. [வாயிலோராயிரநாம மொள்ளியவாகிப்போத]

அரு||(இச்சரீரத்தைக்கொடுத்தவோபாதி) என்று. மடநெஞ்சம்" என்றதைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் (பவ்யராயிருப்பார்க்கு) என்று தமது" என்றத்தைக்கடாக்ஷித்தருளிச்செய்கிறார்(சேஷபூதன் சேஷிக்கதிசயத்தை) என்று. ஓர்கருமங்கருதி-ஒருப்ரயோஜநத்தைக்குறித்து.விடநெஞ்சையுற்றார்-நெஞ்சை விட உற்றாரென்றதாய் நெஞ்சைப் போகவிடுகையிலே துணிந்தவர்கள். விடவோவமையும். அக்கார்யந்தன்னை விட்டுவிடவமையுமென்றுசப்தார்த்தம். இத்தால், நெஞ்சைப்போகவிட்டு அதுகார்யஞ் செய்யாமையாலே துஃகப்படுவதிற்காட்டில் அந்தப்ரயோஜநத்திலே நிஸ்ப்ருஹராயிருக்கை யமையுமென்றதாயிற்று. (என்றான் விடவேண்டுகிற தென்னென்ன) என்றது- கார்யம் விடவேண்டுகிற தென்னென்ன என்றபடி. (இதுசெய்வதென்கிறதன்று)என்றது- மநஸ்ஸு சொன்னகார்யஞ் செய்கிற தல்லாமையாலே என்றபடி.

"திடநெஞ்சமாய் எம்மை நீத்தின்று தாறுந்திரிகின்றது" என்று-அத்யந்தம் கடிநமாய்த்திரும்பிவாராதே அவ்விடத்திலேவர்த்திக்கையாலே. "பொன் பெயரோன்" என்றுதொடங்கி மேல்பாட்டெல்லாம் கடாக்ஷித்துக்ஷேபோக்தி

(க) திருமொழி, உ-ரு-அ. * கொதுகுலம்-மழலைகொஞ்சுதல்.

வ்யா|| சத்ருவைச் சொல்லினுங் காலிலே விழவேண்டும்படி வார்த்தையை யாயிற்றுச் சொல்லிற்று. அப்பருவத்திலவன் சொன்னவார்த்தையாகையாலே ஒன்றையே குவாலாகச் சொல்லுகிறார். [ ஒன்றுமோர்பொறுப்பிலனாகி ] அஸஹ்யாபசாரமாயிற்று. நிருபாதிக பந்தமுண்டாயிருக்க அவற்றையுங் காற்கடைகொண்டு சத்ருக்கள் செய்யுமத்தைச் செய்தான். [பிள்ளையைச்சீறி] திருநாமஞ்சொன்னதுவே ஹேதுவாக இவனைப் "புத்ரனன்று" என்று கைவிட்டான். இவர் அவனோடு தமக்கொரு ஸம்பந்தஞ்சொல்லுகிறார். (தடநெஞ்சம்) தேவதைக ளுடையவரத்தை பூட்டியாகவிட்டுத் திருவுகிருக்கிளை பொருந்தபடி வளர்ந்த பெரியமார்வை. (கீண்ட) நரஸிம்ஹத்தினுடைய சீற்றத்தைக்கண்டவாறே அவன் சரீரமுருகிற்று, அநாயாஸேந கிழித்துப் பொகட்டான். (பிரானார்) தமப்பன் பகையாக வந்துதவினவன் தானகலகிற்கையாலே வந்த வாற்றாமைக்கு ஆள் விட்டால் பொறுத்திரானிறே. அவன்தெளிவுக் குதவினவனிக்கலக்கத்துக் குதவாமை யில்லையிறே, அவனாலும் பக்தியோகிலும் (க) "[illegible] - மத்தஸ்ஸர்வ மஹம்ஸர்வம்" என்கிற தெளிவோடேகூடி யிருக்குமிறே. (தமதடிக்கீழ்விட) அவன் திருவடிகளிலேவிட. (போய்த்தடநெஞ்சமாய்) போகிறபோது இத்தலையிலாற்றாமை கண்டு, கண்ணுங் கண்ணநீருமாய் இத்தலைப்படமாட்டாதோ வென்னும்படியிறே போனபடி; அங்கே புக்கவாறே அவன் ஸ்வபாவத்தைபஜித்தது, பிராட்டியுடைய விரண்டாம் பிரிவுபோலே. அவன் தான்போகிறபோதும் இவனகலகின்றால் தாழானன்றிறே போகவிட்டது. அவன் ஸ்வபாவத்தை பஜித்ததென்று கொடுமை சொல்லுகிற விதுக்கு. கீழ் உபகாரகனென்றத்தோடு சேர்த்தியான்

---

அரு|| யாக அருளிச்செய்கிறார் (அப்பருவத்தில் அவன்சொன்னவை யாகையாலே) என்று. "பிள்ளையை" என்று தமக்குப்புத்ரனாக அருளிச்செய்கிறாரென்றபடி. ப்ரஹ்லாதனுக்கு பக்தியில்லையோ வென்ன (அவனாலும் பக்தியோகிலும்) என்று. (இத்தலைப்பட மாட்டாதோ என்னும்படியிறே) என்றது-என்னைக்கண்டதுஃகாதிசயத்தாலே திரும்பி வரமாட்டாதே நடுவே எழுந்து போகிறதோ வென்னும்படியிறே போம்போது போனபடி என்றபடி. (பிராட்டியுடைய விரண்டாம் பிரிவுபோலே) என்றது-இலங்கையிலே இருக்கும் போது துஃகப்பட்டிருந்தாள். இரண்டாம் பிரிவிலே வால்மீகி யாஶ்ரமத்திலே அநேககாலந் தரித்திருந்தாளென்றபடி. "பொன்பெயரோன் தடநெஞ்சங்கீண்ட பிரானார்" என்று - கீழுபகாரக னென்று சொல்லிவைத்து, இங்கே அவன் ஸ்வபாவத்தை பஜித்ததென்று கொடுமையைச் சொல்லுகிறபடி.

---

(க) ஸ்ரீவிஷ்ணு புராணம். க-கூ-அரு.

வ்யா|| னென்னில், அவ்வுபகாரத்தைப் பற்றச்சொல்லிற்று அது, இவ்வாற்றாமையிலே முகங்காட்டாமையைப் பற்றச் சொல்லிற்றிது. (எம்மைநீத்து) என்னை அற ஸங்யஸித்து. (இன்றித்யாதி) தாமல்லது தஞ்சமில்லாதாரைப்பொகட்டுப் போந்தோமென்னு மநுதாபத்தோடே யோரிடத்திலே விழுந்து கிடக்கலிதென்று கேட்கப்பெற்றோமாகிலு மாமிறே. தான்நினைத்தபடி இன்றளவும் ஸஞ்சரியாநின்றது.

அரு|| யெங்ஙனே யென்னிலென்றபடி. இன்று தாறும்-இன்றளவும். "தாறு" என்று அளவைச்சொல்லுமோ வென்னில், (க) "தாறுபாறுபரிமாணந்தனை யளவு" என்று தமிழன் சொன்னாளிறே.

[அப்பொன் பெயரோன் தடநெஞ்சங்கீண்டபிராளுர் தமதடிக்கீழ்விடப் போய்த்திட நெஞ்சமா யெம்மை நீத்தின்றுதாறுந்திரிகின்றது, ஆகையாலே மடநெஞ்சமென்றும் நமதென்றுமோர் கருமங்கருதி நெஞ்சைவிட உற்றார் விடவமையும்] என்றந்வயம். "த்வம மமாத்மஜவிலாஸகாமீ గచ్ఛ త్వమవ్యగ్ర మనా మహాత్మా । సలక్ష్మణో రాఘవమిష్టచేష్టో రరక్షధర్మేణబలేనచైవ - த்வம்மத்தமாத்மஜவிலாஸகாமீ கச்சத்வமவ்யக்ரமநாமஹாத்மா| ஸலக்ஷ்மணேந ராகவமிஷ்டசேஷ்டோ ரக்ஷதர்மேணபலேநசைவ" || మత్తస్సర్వ మహంసర్వం మయిసర్వంస నాతనే। అహమేవావ్యయోనిత్యః పరమాత్మా త్మసంశ్రయః - అవ్యయః అనన్తః ఆత్మసంస్థితః పరమాత్మా అహమేవేత్యన్వయః - "மத்தஸ்ஸர்வ மஹம்ஸர்வம் மயிஸர்வம்ஸநாதநே| அஹமேவாவ்யயோநித்யஃபரமாத்மாத்ஸம்ஶ்ரயஃ" அவ்யயஃ அநந்தஃ. ஆத்மஸம்ஸ்திதஃ. பரமாத்மா. அஹமேவேத்யந்வயஃ, "ஆத்மஸம்ஸ்திதஃ." என்றது தனக்குத்தானே ஆதாரமென்றபடி. சகூ.

[அப்பு அரும்பதம்]

நாற்பத்தாறும்பாட்டு.— (மடம்) நமக்குக் கார்யஞ்செய்யாமையாலே நெஞ்சைக்கொண்டு கொள்ளுங்கார்யங்களை விடவமையு மென்றின்றாகிறார். (அதுக்கு) - ஆசைக்கு, நெஞ்சுக்ருஷிபண்ணுகை - ஸஹகரிக்கை. (இளையிட்டு)-அநுபவத்தைக்கொடுத்து. (ப்ராப்தியாலல்லது)-கிட்டினாலல்லது, செல்லாதஸமயத்திலே போயிற்றென்றபடி. மோக்ஷஹேதுவான ப்ராவண்யாதிகளையுண்டாக்கிற்றே, இனிச் செய்யவேண்டுவ தென்னென்ன அருளிச்செய்கிறார் "ரக்ஷதர்மேண" என்று. இளையபெருமாள் தத்தத்காலங்களிலே உசிதோபசாரஞ்செய்தாற்போலே நெஞ்சுமெல்லா வவஸ்தையிலும் கூடியிருக்க வேணுமென்றபடி. ஈஶ்வரனே மோக்ஷஹேதுவாயிருக்க நெஞ்சாகிறபடி எப்படியென்ன வருளிச்செய்கிறார் (அவனையுபாயம்) இத்யாதி வாக்யத்வயத்தாலே. பரம்பரயா நெஞ்சுங் காரணமென்றபடி. ஆனாலவன்நிரபேக்ஷோபாயமானபடி எப்படியென்ன வருளிச்செய்கிறார் (அவைதான்) இத்யாதி. கரணம்-உபாயம், ஸந்நிதி - தோற்றரவாய்க் கூடநிற்கை. இவை யுபகாரகமென்கைக்கு ஜ்ஞாபகமேதென்னவருளிச் செய்கிறார் ( அவனே யுபாயமு

மாய்) இத்யாதி. நெஞ்சைத் தம்மதென்னலாமோவென்ன வருளிச்செய்கிறார் (இச்சரீரத்தை) இத்யாதி. எதிர்த்தலை-நெஞ்சுக்காஸ்ரயமான விஷயம். தம்மதென்றத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (சேஷபூதன்) இத்யாதி. (அவையிரண்டு) பவ்யதையும், சேஷத்வமும். மூலத்திலே செய்யக்கடவர்களென்று தோற்றுகையாலே, (தத்கார்யத்தைவிட்டுப்பிடிக்கவமையும்) என்று. ஈவியக்கோவினுமென்ன அருளிச்செய்கிறார் (பள்ளியிலோதி) இத்யாதி. ஒன்றன்றே சொன்னது; ஆயிரமென்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (அப்பருவத்தில்) இத்யாதி. அவனுக்குச்செய்தது தம்மதாகையாலே "பிராஞர்" என்கிறது. அவனுக்குச் செய்தால் தமக்குச்செய்யுமோ வென்ன வருளிச்செய்கிறார் (தமப்பன்பணையாக) இத்யாதி. (இச்சிலப்பட) என்று-வ்யஸநத்தைக்கண்டுபோய்த்திரும்பமாட்டாதே நடுவே யிட்டுபட்டு விடுமென்றபடி. பிராட்டி வால்மீகி யாஸ்ரமத்திலே தரித்திருந்தாற்போலே இதுவும் பிரிந்து போய்த் தரித்திருக்கதென்றபடி, அவன் ஸ்வபாவத்தை யறிந்து நெஞ்சுக்கு அவன்தானறியாமை தோற்றப்போகுமோவென்ன அருளிச்செய்கிறார் (அவன்தான்) இத்யாதி. [அப்பெரும்பெயரோன் தொடங்கி நிற்கின்றது விடவோவமையும்] என்றந்வயம். சசு.

[வேறொரு அரும்பதம்.]

நாற்பத்தாறாம்பாட்டு. (மடவித்யாதி) கீழ்ப்பாட்டிலே "ஒருவர் நம்போல் வருந்தேழ்பவருளரோ" என்று ஸந்தோஷித்தவர் இப்பாட்டிலே "விடவோவமையும்" என்று நெஞ்சை வெறுக்கிறபடி யெங்ஙனே யென்னும் சங்கையிலே ப்ரஸ்நப்ரதிவசநரூபேண ஸங்கதி அருளிச்செய்கிறார் (வாழி) இத்யாதி. இதுபெற்றது - இந்த பெருங்கேழலார்கடாக்ஷம் பெற்றது. அது கைவாராமையால் கடாக்ஷ பலமான ப்ராப்தி கிடையாமையால். (ஆசைப்பட்டு) என்றது - அவன்கடாக்ஷிக்க அவ்வவதாரத்தை ஸாக்ஷாத்கரித்தநுபவிக்கக்கோலி யென்கை. ப்ரஸக்த சங்காபரிஹாராநந்தரம் நோவுபடுகிறபடி தான் இன்னபடியென்று காட்டுகிறார் (கீழ்) இத்யாதி. விளம்பித்ததென்று நோவுபடலாமித்தனை போசகி அத்தை வெறுக்கலாமோ வென்ற சங்கையை அநுவதித்து, பேறு அத்தாலேயாகையாலே வெறுக்க லாமென்று மீளவும் விஸ்தரிக்கிறார் (ஒப்போது) இத்யாதி. (த்ருஷியைப்பண்ணி)- ப்ராவண்யாதிகளைப் பிறப்பித்து. (இரையிட்டு)-விஷயத்தைக்காட்டி, (ஸஹகரியாதே) என்றது - அவன் வரவு தாழ்த்தானென்றால் அவனை விட்டு என்னோடே ஒரு மிடறுயிராதே என்றபடி. தன்னோடேகூடுகை (க) "ശ്രേഷ്ഠസ്യ സദൃശംഭവേത് - தத்தஸ்யஸத்ருசம்பவேத்" என்றுறியிருக்கதாகையால் அது நிரபேக்ஷோபாயத்துக்குடலாய் அத்தாலே பேறு ஸித்திக்குமென்று விவக்ஷித்து அது தன்னை சங்கித்து த்ருடீகரிக்கிறார் (இது) இத்யாதி. தத்தத்சாநுகுணமாயிருந்து அநுகூலித்ததேயருளென்றென்று காட்டுகிறார் (ராக்ஷ)

---

(க) ஸ்ரீராமா-ஸுந்த்ர-௯௯-௩௦.

இத்யாதி. இளையபெருமாள் பிராட்டியைப் பிரிந்த தசையிலே தத்தத்தசாநுகுணமான தர்மங்களாலே ரக்ஷித்தாற்போலே என்றபடி. (நீபட்டதென்) இத்யாதி - இப்படி ப்ராப்தியளவும் அத்யவஸித்திருக்கவேணுமோ? ஸக்ருத் ப்ரபத்தியன்றோ வேண்டுவது? என்றபடி. ஸித்தோபாயத்துக்கு இது அநபேக்ஷிதமன்றோ வென்ன வருளிச்செய்கிறார் (அவனே) இத்யாதி வாக்ய ஸப்தகத்தாலே. இத்தலையிலுஞ் சிலவுண்டாகி லுபாயநைரபேக்ஷ்யம் ஜீவிக்குமோ வென்ன வருளிச்செய்கிறார் (இவைதான்) இத்யாதி. கரணசரீரத்தில்-உபாயகோடியில். (ஸந்நிதி மாத்ரத்தாலே)-கிட்டவிருந்த மாத்ரத்தாலே. உபகரித்தபடி தானெப்படியென்ன அருளிச்செய்கிறார் (அவனே, இத்யாதி. நிகமிக்கிறார் (ஆக) இத்யாதி. "என்றும்"என்று சொன்னதுக்கு வெறுக்கையிலே தாத்பர்யமென்னுமது தோன்றபாவம் (நாட்டில்) இத்யாதி.சப்தார்த்தகதநமுகேந விவரணம். (தந்தாம்) இத்யாதி. அவன் கையடைப்பாக்கினத்தைத்தம்மதென்னலாமோவென்ன (இச்சரீரத்தை) இத்யாதி. ஆனவிவ்வர்த்தத்தை"என்று மிருப்பர்கள்" என்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (பவ்ய) இத்யாதி. அவைபவ்யதையும் சேஷத்வமும். கார்யத்திலே போகவிடவமையும் என்று தோற்றுகிறவர்த்தாந்தரத்தை நிஷேதிக்கிறார் (இது) இத்யாதி. "அப்பொன்பெயரோன்" என்ற தச்சப்தத்துக்கு க்ரௌர்யாதிசயே தாத்பர்யமென்று காட்டாநின்றுகொண்டு அதுக்குப்ரமாணங்காட்டி அதுக்கர்த்த மருளிச்செய்கிறார் பவ்யம்) இத்யாதி. (ஸம்பந்தஞ்சொல்லுகிறார்) என்னுமளவும் (பொறுத்திரான்), ஆறியிரானென்கை. போகிறதுக்குமுன்பு திடமன்றோவென்ன வருளிச்செய்கிறார் (போகிற) இத்யாதி. (இத்தலைப்படுகை). மீளவருகை. போனபின்பு திடமாகைக்குக்காரண மென்னென்னவருளிச்செய்கிறார் (அங்கே) இத்யாதி. (பிரிவுபோலே) என்றது பிரிவில், அவன் திடமாயிருந்தாற்போலே யென்கை. தாறுமென்றதி னர்த்தம் (அளவும்) என்றது. சகூ.

தாத்பர்யம்.—கீழ்ப்பாசுரத்தில் ஆழ்வாருடைய உபதேசத்தைக் கேட்டு ஆழ்வாருடைய திருவுள்ளம் பலப்ராப்தியில் நிர்ப்பரமாய்க்கொண்டு ஸர்வேஶ்வரனை யநுபவிக்க, அம்மாநஸாநுபவம் விஞ்சி ப்ரத்யக்ஷமாக அநுபவிக்கக்கோலி அது கிடையாமையாலே தளர்ந்துரைத்த பாசுரத்தை, நாயகனிடம் நெஞ்சைத் தூதுவிட்ட நாயகியின் பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

நமக்குபகாரணமாக ஸர்வேஶ்வரனால் கற்பிக்கப்பட்ட இம்மநஸ்ஸு நமக்கடங்கி நம்முடைய ஸுகதுக்கங்களுக்குதவிசெய்யுமென்று கருதி, தன்னுடைய தர்சநமாத்ரத்தில் சத்ருக்கள் மாயும்படி அவர்களுக்குஅதிபயங்கரமான நரஸிம்ஹனை யவதரித்து ஹிரண்யன் மார்பைப்பிளந்து தன்னடியானான ப்ரஹ்லாதாழ்வானை ரக்ஷித்த பரமோபகாரனிடத்தில் என்னவஸ்தையைச்சொல்லி என்னைக்கடாக்ஷிக்கும்படி பண்ணவேணுமென்று என்னெஞ்சை யவனிடம்தூதனுப்பினேன்; அதங்கேசென்று குணாநுபவம்பண்ணிக்கொண்டு, உத்

தேசித்துப்போன என்னுடைய கார்யத்தையும் மறந்துவிட்டு ஸுகமே யிருந்துவிட்டது, ஆகையால், ஓஜநங்களே? என்னைப்போல் நீங்களும் மகஸ்ஸை நம்பி ஒருகார்யம் செய்ய யத்நித்துப் பின்பு அம்மநஸ்ஸையு மிழந்து கிடக்க வேண்டா; இதைக்காட்டிலும் நீங்கள் யத்நித்த கார்யத்தை முயலாதொழிவதே நலம். சுசு.

---

திரிகின்றதுவடமாருதம் திங்கள்வெந்தீமுகந்து
சொரிகின்றதுஅதுவுமது, கண்ணன் விண் ணூர்தொழவே
சரிகின்றது சங்கம்தண்ணந்துழாய்க்குவண்ணம்பயலை
விரிகின்றது முழுமெய்யும்,என்னாங்கொலென் மெல்லியற்கே. சஎ.

அர்த்தம்.—வடமாருதம் - வாடைக்காற்றானது, திரிகின்றது-ஸஞ்சரியாநின்றது. திங்கள்-சந்த்ரனானவன், வெம் - கொடிதான, தீ - நெருப்பை, முகந்து - நிறைய அள்ளிக்கொண்டுவந்து, சொரிகின்றது - பொழியா நின்றான். அதுவும் - அதுபோன்ற கோகிலாலாபம் முதலிய பாதக பதார்த்தமும், அது-அந்த சந்த்ரன்போலவே பாதிக்கத்தொடங்கிற்று. கண்ணன் - ஸ்ரீக்ருஷ்ணனுடைய, விண் - பரமாகாசத்திலுள்ள, ஊர் - வாஸஸ்த்தாநமான ஸ்ரீவைகுண்டத்தை, தொழ - ஆஸ்ரயிக்க (ஸேவிக்க நினைத்து), சங்கம் - வளை, சரிகின்றது - கழலாநின்றது. தண் - குளிர்ந்த, அம் - அழகியதான, துழாய்க்கு - திருத்துழாயில் (ஆசையினால்), வண்ணம் - ஸ்வாபாவிகமான நிறமானது, பயலை - வெண்மையைக்கொண்டு, (விவர்ணமாய்) முழுமெய்யும்-சரீரம் முழுதலும், விரிகின்றது - வ்யாபியாநின்றது. என் மெல்லியற்கு - ம்ருது ஸ்வபாவையான என்பெண்ணுக்கு, என் ஆங்கொல் - (இனி) எதாய் விளையக்கடவதோ? சஎ.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—நாற்பத்தேழாம்பாட்டு.—கலந்து பிரிந்து பிரிவாற்றாமை நோவுபடுகிற தலைமகளைக் கண்ட திருத்தாயார், பாதகங்களின் பெருமையையு மிவள் மார்த்தவத்தையு மநுஸந்தித்து என்னாய்விளையக்கடவதோ வென்கிறாள்.

வ்யா.—(திரிகின்றது வடமாருதம்) வாடையானது, மத்தகஜம் ஆளைக் கணிசித்துலாவுமாபோலே யுலாவாநின்றது. நாயகனுடைய தண்ணளியற்ற ஸமயம்பார்த்து நலிவதாகத்திரியா நின்றது. அன்றிக்கே, வாடையாகிறது குளிரக்கடவதிறே; அந்தசைத்யத்தை மாறுடிச்சுடாநின்றது. (திங்களித்யாதி) இதினுடைய ஸ்வபாவம்

---

அரு.—நாற்பத்தேழாம்பாட்டு.—(திரிகின்றது) இதுக்கு மூன்று பொருள். அதாவது - ஆளைக் கணிசித்து உலாவுமாபோலே உலாவாநின்ற தென்னுதல், நாயகனுடைய தண்ணளியற்ற ஸமயம்பார்த்து நலிவதாகத்திரியா நின்ற தென்னுதல், அதவா-திரிகின்ற தென்றது-மாறாட்டமாய்,சைத்யத்தை

வ்யா|| அந்யதாபவித்தவாறே "நாம்தாம் பேசாதிருக்கிறதென்" என்றுசந்த்ரன் நெருப்பைமுகந்து சொரியத் தொடங்கினான். (வெம்தீ) நெருப்புங்காற்றுங்கூடிற்றுக்காணும். நெருப்பு சுடுமாபோலன்றிறே நீர்கொதித்தாற் சுடுவது. (முகந்துசொரிகின்றது) அங்குக்குறைவற்றுக்கிடக்கிறது. வாடையோபாதியும் சந்த்ரனோபாதியும்பிரிந்தார்க்கு பாதகமானவை சில உண்டிறே, ஒருகடலோசை, அன்றில், தென்றல், விடைமணிக்குழலிசை, குயில், என்றாற்போலே; இவற்றிலே யொன்றுப்ரஸித்தமானத்தை (அதுவுமது) என்கிறது. அதினுடைய பாதகத்வத்தி லுறைப்புத்தன்வாயாற்சொல்ல மாட்டாமையாலே அதுவுமப்படியே யென்கிறாள். அன்றிக்கே "திரிகின்றது" என்றதுக்கு ஸஞ்சரிக்கிற தென்று பொருளானபோது "அதுவுமது" என்றது- அவ்வாடையும் சந்த்ரனோபாதி நெருப்பை முகந்து சொரியா நின்றதென்கை.

(கண்ணனித்யாதி) புறம்பே சிலர் பாதகராகாநின்றார்களென்று சொல்ல வேணுமோ? நங்கைப்பட்டவை நலிகிறபடி கண்டால். அவதரித்து ஸுலபனான இதுதான் காதாசித்கமாகையாலே என்றுமொக்க ஓரிருப்பேயாய்க் காட்சி கொடுக்கிற அவ்விருப்பிலே காணவேணு மென்றாசைப்பட்டாயிற்று கையில் வளைகழலுகிறது. (கண்ணன் விண்ணூர்) (க) రాఘవస్యనివేశనే - ராகவஸ்யநிவேசநே" என்னுமாபோலே. (தண்ணந்துழாயித்யாதி) அவையானால் கொண்டிட்டவையிறே; ஸ்வாபாவிகமான நிறமும் வேறுபடாநின்றது. (தண்ணந்துழாய்க்கு) (உ) పతిసమ్మానితా - பதிஸம்மாநிதா" என்று அவன் தோளின்மாலையை வாங்கியிட்டுக் கொண்டாடும்படி நினைத்தாயிற்று உடம்பு வெளுக்கிறது. (வண்ணமித்யாதி) ஸ்வாபாவிகமான நிறமானது

---

அரு|| மாறுடிச்சுடாநின்ற தென்னுதல். "வெம்" என்றதுக்கு தாத்பர்யம்அருளிச்செய்கிறார். (நெருப்புச்சுடுமா போலன்றிறே) என்று. "அதுவும்" என்று கடலோசை தொடக்கமானவற்றில் ப்ரஸித்தமானத்தை ஒன்றைச் சொல்லி அது" என்று - அப்படி சந்த்ரனைப்போலே பாதிக்கிற தென்னுதல். அதவா "அதுவும்" என்று வடமாருதமென்றத்தைப் பராமர்சித்து, அந்தவடமாருதமும், அது - அந்தசந்த்ரனோபாதி, நெருப்பைமுகந்து சொரியா நின்றதென்னுதல்.

"சங்கம்" என்றது - ஜாத்யேகவசநமாய், சங்கங்களென்றபடி. (நங்கைப்பட்டவை) என்றது-சங்கங்கள். கண்ணனுடைய விண்ணூரென்கையாலே "ராகவஸ்யநிவேசநே" என்னுமாபோலே அவனையிட்டே அவனூருத்தேஶ்யமென்றபடி. "வண்ணம்பயலை முழுமெய்யும் விரிகின்றது" என்று அந்வயமாய்,

---

(க) ஸ்ரீராமா-ஸுந்தர-௩௩-கஅ (உ) ஸ்ரீராமா. அயோத்யா-கசு-உக

வ்ய|| பயலையாய்க்கொண்டு உடம்படையைப் பரவாநின்றது. (என்றுங் கொலித்யாதி) ஒருவருடையும் வைவர்ணயமும் வேண்டாதபடி ம்ருது ஸ்வபாவையாயிருக்கிற விவளுக்கு அதுக்குமேலே இவையுமானாலே லென்னாய் விளையக்கடவதோ ?

ஸ்வாபதேசம். இத்தால், ஆழ்வாருடைய ப்ரக்ருத்யா உண்டான மார்த்தவத்தையு மாற்றாமையையும் இவராசைப்பட்டது அந்தரங்க வ்ருத்திகளாகையாலே அதுபெறாமையால் வருமாற்றாமை பாடாற்ற லாமதல்லவென்று மிடத்தையுங்கண்டவர்கள் "இனியிவரைக்கிடைக்கமாட்டாமோ" என்னும்படியான தம்தசையைப் பார்ஸ்வஸ்தர் பாசுரத்தாலே தாமநுபவிக்கிறார். சஎ,

---

அரு|| ஸ்வாபாவிகமான நிறமானது பயலையாய்க்கொண்டு சரீரமெங்கும் பரவாநின்றதென்று சப்தார்த்தம். அடைவே அந்வயம். "సమా ద్వాదశ తత్రాహం రాఘవస్య నివేశనే। భుఞ్జానా మానుషాన్ భోగాన్ సర్వకామసమృద్ధినీ - ஸமா த்வாதசதத்ராஹம் ராகவஸ்யநிவேசநே| புஞ்ஜாநா மாநுஷாந் போகாந்ஸர்வகாமஸம்ருத்திநீ" "సతీ సర్వాణి తాసీతా భర్తార మనిరీక్షణా। అద్వారమనువ్రాజ మఙ్గళా స్వభివధ్నుషీ - பதிஸம்மாநிதாஸீதா பர்த்தார மஸிதேக்ஷணா ஆத்வாரமநுவ்ராஜ மங்களாந்ய பிதத்ருஷீ". சஎ.

[அப்பு அரும்பதம்.]

நாற்பத்தேழாம்பாட்டு.—(திரிகின்றது)- ஸஞ்சரியா நின்றதென்றுதல், திரிகையாய், திரிந்ததென்னுமா போலே ஸ்வபாவம் மாறுகிறதென்றுதல். "வெந்தீ" என்று விசேஷிப்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (நெருப்பு) இத்யாதி. இப்படி திரளீராகில், "அதுவும்" என்று ஏகவசநமாகச் சொல்லுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (இவற்றில்) இத்யாதி. அவதரித்தவிடத்தைவிட்டு-"விண்ணூர்" என்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (அவதரித்த) இத்யாதி, வண்ணம் பயலையாய்க்கொண்டு மெய்முழுதும் விரிகின்றது என்றந்வயம். (சஎ.)

[வேறொரு அரும்பதம்.]

நாற்பத்தேழாம்பாட்டு.—(திரிகின்றது) இத்யாதி. "கலந்து" என்றது- "பெருஞ்சேழலார்" என்கிறபடி சொல்லப்பட்ட மாநஸாநுபவத்தை. (பிரிந்து) என்றது-கீழ்ப்பாட்டில் பாஹ்ய ஸம்ஸ்லேஷாபேக்ஷையாய்ப் பிறந்த அப்ராப்தியை. "திரிகை" ஸஞ்சரிக்கையாய் அத்தையருளிச்செய்து, (க) "திரிந்தாகிலும்" என்றவிடத்திற்போலே திரும்புதலர்த்தமாக்கி அருளிச்செய்கிறார் (அன்றிக்கே) இத்யாதி. (கைப்பட்டவை,- கையில் சங்குகள். "விண்ணூர்" என்னவேயமைந்திருக்க "கண்ணன் விண்ணூர்" என்று விசேஷித்தது - ஆதராதிசய ஸூசகமென்று த்ருஷ்டாந்தங்காட்டுகிறார் (ராகவஸ்ய) இத்யாதி. அவை-வளைகள். ம்ருதுஸ்வபாவை-க்ஷண விரஹாஸஹிஷ்ணு. (சஎ)

---

(க) கண்ணிநுண் சிறுத்தாம்பு. ௬

தாத்பர்யம்.—பகவதலாபத்தினாலும் பாதகமான லௌகிக பதார்த்த தர்சனத்தினாலும் நொந்த ஆழ்வாருடைய ப்ரக்ருதியைக்கண்டு அருகிருந்த பாகவதருரைத்த பாசுரத்தை, நாயகனைப்பிரிந்து பாதைபடுகிற நாயகியைக் கண்டு திருத்தாயாருரைத்த பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

நாயகனுபேக்ஷித்த ஸமய மறிந்து வந்து மந்தமாருதம், பூர்ணிமா சந்த்ரன், வஸந்தகாலம் முதலியவைகள் பாதிக்க அவற்றின்கையி லகப்பட்டு இவள்நலிவுபடாநின்றாள் இத்தேசத்திலுள்ளஅவதாரங்கள் காதாசித்கங்களென்றெண்ணி நித்யமான பரமபதத்திலே சென்று அங்கு ஸர்வேச்வரனை யநுபவிக்க ஆசைப்பட்டு அதேசிந்தையாய் இளைத்தாள். இவள்கைவளையும்கழன்றுவிட்டது. அவனுடைய அழகியதிருத்துழாயை யாசைப்பட்டுத் தன்னுடைய அழகிய நிறத்தை யிழந்து விவர்ணையானாள். இப்படியானால் இவளுக்கு இனி மற்றக்காலமெல்லாம் என்னமாகக் கழியப்போகிறதோ தெரியவில்லை

---

மெல்லியலாக்கைக்கிரிமி, குருவில்மிளிர்தந்தாங்கே
செல்லியசெல்கைத்துலகையென்காணும்,என்னுலுந்தன்னைச்
சொல்லியசூழல்திருமாலவன்கவியாதுகற்றேன்
பல்லியின்சொல்லும்சொல்லாக்,கொள்வதோவுண்டுபண்டுபண்டே.

அர்த்தம்.—மெல்லியல் - ம்ருதுவான, ஆக்கை - சரீரத்தை யுடையதாய், குருவில் - புண்ணில் (புண்போன்ற ஸம்ஸாரத்தில்), மிளிர்தந்து-பிறந்து, ஆங்கே - அவ்விடத்திலே, செல்லிய - நடக்கக்கடவதான, செல்கைத்து - வ்யாபாரத்தை யுடைத்தான, கிரிமி - புழு, உலகை - லோகவ்யாபாரத்தை, என் காணும் - என்ன அறியும்? என்னாலும் - அஸமர்த்தனான என்னைக்கொண்டு, தன்னை - அமித வைபவனான தன்னை, சொல்லிய - ப்ரதிபாதித்துக்கொண்டவனாய், சூழல் - ஆஶ்சர்யபூதனான், திருமாலவன் - ஶ்ரிய:பதி விஷயமான, கவி - ஸ்தோத்ரங்களை, ஆது - ஏல்லாவற்றையும், கற்றேன் - (அவனிடத்தில் நின்றும்) அப்யஸித்தேன்.பண்டு பண்டு-அநாதியாக, பல்லியின் - பல்லியினுடைய, சொல்லும் - சொல்லையும், சொல்லாக் கொள்வது - (இஷ்டாநிஷ்ட ஸூசகமான) சொல்லாக அங்கீகரிப்பது, உண்டு - சிஷ்டாசார ஸித்தமாயிருக்கிறது. ௪அ.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ—நாற்பத்தெட்டாம்பாட்டு.—"இஸ்ஸம்ஸாரத்தில்நம்மை வைத்தவிதுக்குஹேது வேதோ? என்றிறே இவர்நொந்தது; இவர்க்கிவ்விருப்பு நிலங்கொதிப்பது - ஸ்வார்த்தமாக விருக்கிறோமென்றிருக்கிலிறே; அங்ஙனன்றிக்கே, "நமக்காக விருக்கிறீர்" என்னுமிடத்தை யறிவிக்கவே இவரைத் தரிப்பிக்கலாம். மேல் இவர்

---

அரு.—நாற்பத்தெட்டாம்பாட்டு.— (மெல்லியலாக்கை) கீழ்ப்பாட்டிற் காற்றுமுதலானவை. பாதிக்கிற தென்ற வித்தால் ஸ்வாபதேசம் (இஸ்ஸம்

வ்யா|| போய்ப்பெறவிருக்கிற ஸ்வரூபமுமிதுவேயிறே யென்றுபார்த்து "வாரீர்! நீ நமக்கு இங்கொருஸம்பந்தமுண்டாயிருக்கிறீரல்லீர், நமக்காகவிருக்கிறீரத்தனை, நாமும் ரஸித்து நம்முடையாரும் ரஸிக்கும்படியாக, உம்மைக்கொண்டு நஞ்சிலவ்ருத்தங்களை வெளியிடப் பார்த்து, அதுக்காக வைத்தோமித்தனைகாணும்" என்றீச்வரனறிவிக்க, ஆனால் தட்டென்? நம்ஸ்வரூபத்தோடு சேர்ந்ததுவுமாய் நாம் பெறவிருக்கிறது மிதுவாகில் குறையென்?" என்று விஷயீகரித்த படியைக்கண்டு விஸ்மிதராய், அவ்விஷயீகாரத்தைப் பேசுகிறார்.

வ்யா.—(மெல்லிய லாக்கை யித்யாதி) இவனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளிலே என்னுடைய ஜ்ஞாநத்துக்கு விஷயமாவதேகதேசங்கிடீர்; நானறிவதொன்றில்லை யென்னும்படியிருக்கிற வென்னைக்கொண்டுகிடீரித்தைத் தலைக்கட்டிற்றென்கிறார். (மெல்லியலாக்கைக்கிருமி) ம்ருதுஸ்வபாவமான சரீரத்தையுடைய க்ரிமியானது. இமையோடிமை பொருந்தும் போதைக் காற்றுப்படப் பொறாதே முடியும் படியான ம்ருதுவான சரீரத்தையுடைய, ஒன்றாகவெண்ணப்படாத க்ஷுத்ர ஜந்துவானது. (குருவில்மிளிர்தந்து) க்ரந்தியிலே மிளிர்ந்து. உத்பத்தியும் விநாசமுமொழிய நடுவுபட்டதொரு காலமின்றிக்கே தோற்றிமாயும்படியா யிருக்கையாலே மிளிர்ந்தென்கிறது. பஞ்சாக்நி வித்யையிற் சொல்லுகிறபடியே புருஷார்த்தோபயோகியாயிருப்பதொரு சரீரத்தைப்பரிக்ரஹிக்கிலிறே பிறந்ததென்னலாவது. (ஆங்கே) அந்தக்ரந்தியிலே. (செல்லிய செல்கைத்து) செல்லுகிற செல்கையையுடைத்து - நடக்கிற யாத்ரையையுடைத்

அரு|| ஸாரத்தில்) இத்யாதி. (பெறவிருக்கிறஸ்வரூபமிதுவே) என்றது. (௧)ஹாவு ஹாவு ஹாவு-ஏதத்ஸாமகாயந்நாஸ்தே' என்று ஸ்தோத்ரம் பண்ணிக்கொண்டிருக்கிறதென்றபடி. (நம்) இத்யாதி - சிலவ்ருத்தங்களை ப்ரபந்தமுகேந வெளியிடப்பார்த்தென்றபடி. (நம்ஸ்வரூபத்தோடே) என்றது - பாரதந்த்ர்ய ஸ்வரூபத்தோடே என்றபடி.

"மெல்லியலாக்கை" என்று தொடங்கி "உலகையென் காணும்" என்னுமளவுக்கும் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (இவனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளிலே) என்று. "என்னுந்தன்னைச்சொல்லிய" என்றுதொடங்கி மேலுக்கெல்லாம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (நானறிவதொன்றில்லையென்னும்படி) என்று. குருவில் - புண்ணில். மிளிர்தந்து தோற்றி. உத்பவித்தென்றபடி. பிறந்தென்னாதே 'மிளிர்தந்து' என்கிறதென்னென்ன அருளிச்செய்கிறார் (உத்பத்தியும் விநாசமுமொழிய) என்று. "ஆங்கேசெல்லிய செல்கைத்து" என்கையாலே உத்பத்திஜீவநம் முதலானவை யெல்லாம் அந்தக்ரந்திக்

(௧) தைத்திரீயம்-ப்ருகு-௧௦.

வ்யா|| தானது. உத்பத்தியும் ஜீவநமும் நடுவுபட்டநாளில் பரிபவமும் விநாசமும் இவை யடங்கவங்கேயாயிருக்குமிறே. அங்கே யிறே யழகு சென்டேறுகிறது. "நெற்காய்க்கும் மரமேது" என்றிருப்பா ரைப்போலே அக்ராந்திக் கவ்வருகறியாத விது. (உலகை யென் காணும்) லோகவ்ருத்தாந்தத்திலென் னறியவற்று? இதுகிடீர்நான் தன்னளவிலே நின்றநிலே.

(என்னும்) இப்படி அஜ்ஞாநசக்திகளுக்கு எல்லைநிலமான வென்னைக்கொண்டு. (தன்னை) "உலகையென் காணும்" என்கிற லோக வ்ருத்தாந்தத்திலேதானென்றை என்னைக் கொண்டு சொல் லிவைத்தானே? (க) "யதோ வாசோ நிவர்த்தந்தே-யதோவாசோநிவர்த்தந்தே" என்றும்ஸ்ருதிஸ்ம்ருத்யாதிகள் நமக்கு நிலமன்றென்றுமீண்டதன்னை. (சொல்லிய) சொல்லிவைப்பதாகக் கணிசித்திருந்தானாய், இதெவ்வள வாய்த்தலைக்கட்டுமோவென்றுஇருக்கிறதோ? சொல்லியற்றதாயிற்று. இப்படிச்சொல்லிவைக்கைக்கு ஹேதுவென்னென்னில் (சூழல்) ஆஸ் சர்யசக்தியுக்தனாகையாலே. (திருமால்) இந்தவாஸ்சர்ய சக்திதான் புறம்புகிடவாதே இவ்வாஸ்ரயத்திலே கிடக்கவேண்டுவானென்னெ ன்னில், ஸ்ரிய:பதியாகையாலே. (திருமாலவன் கவி) அவளுமவ னுமானசேர்த்திக்குத்தகுதியானகவி. இத்தால், ஸ்ரீராமாயணத் தில் வ்யாவ்ருத்தி சொல்லுகிறது. (உ) "ஸீதாயாஶ்சரிதம் மஹத் - ஸீதாயாஸ் சரிதம் மஹத்" என்று தொடங்கச்செய்தே அவளையொழியத்தனி யேயிருந்திறே கேட்டது. "யாதுகற்றேன்" என்னுதல், "ஆது கற்றேன்" என்னுதல். "அவன்கவி ஆது கற்றேன்" என்னுதல். "யாதொன்று நான் கற்றது, அது திருமாலவன்கவி" என்னுதல். (கற்றேன்) (௩) "என்முன்சொல்லும்" என்கிறபடியே அவன் முன்னே சந்தையிட நான் பின்னே சொன்னேனித்தனை. ஆனாலு

அருளுள்ளே என்றதா யிற்றென்றபடி. இப்படியிருக்கிற க்ரியையானது லோகயாத்ரையை என்னவறியு மென்றபடி.

"சொல்லிய" என்று பூதமாயருளிச்செய்கையாலே சொல்லி வைப்ப தாக உத்யோகித்தமாத்ரமன்றிக்கே சொல்லிவைத்தா னென்றபடி. சொ ல்லிய - சொல்லிவைத்த. சொல்லிய சூழல் திருமாலவன்கவி - சொல்லி வைத்த ஆஸ்சர்யசக்தியுக்தனஸ்ரிய:பதியானவன் கவி யென்றுபொருள். "யாதுகற்றேன்" என்றபோது. யாதொன்று நான் கற்றது, அது திரு மாலவன்கவி என்று பொருள். "ஆதுகற்றேன்" என்றபோது, திருமாலவன் கவியை ஸமஸ்தமும்கற்றே னென்று பொருள். (ஆனாலு மிது தலைக்கட்டினபடி யெங்ஙனே யென்ன) என்றது-அவன் சொல்லிவைத்

(க) தைத்திரீயம். ஆநந்த-௯. (உ) ஸ்ரீராமா, பால-௪-எ.
(௩) திருவாய். எ-௯-உ.

வ்யா|| இது தலைக்கட்டினபடி யெங்ஙனேயென்ன,(பல்லியின் சொல்லு மித்யாதி ) அல்பஜ்ஞராயிருப்பார் ஒன்றைத் தொடங்கினால் ஜ்ஞாநாதிகராயிருப்பா ரத்தை நன்றாக்கித் தலைக்கட்டிக் கொள்ளக்கடவதாயிருப்ப தொன்றுண்டிறே. பல்லியானது ஓரர்த்த ப்ரத்யாயக மில்லாதபடி தன்னுடைய ப்ரீத்யப்ரீதிகளாலே "நத்துநத்து" என்ன அத்தை ஜ்ஞாநவான்களாயிருப்பார் தந்தாமுடைய லாபாலாபங்களுக்குடலாக்கிக் கொள்ளாநிற்பர்களே; அப்படியே நான்எனக்கு ப்ரதிபந்தங்களைச் சொல்ல அத்தைத்தனக்கிடாம்படி நன்றாக்கித்தலைக்கட்டிக் கொண்டான்' ( பண்டுபண்டே ) பழையதாக இப்படிப் போருவதொரு மர்யாதையுண்டிறே. அத்தையிப்போது என்பக்கலிலே கைகாணும்படி பண்ணினான். ௪அ.

---

அரு|| தாலும் அஜ்ஞாநசக்திகளுக் கெல்லை நிலமானவிவர் தலைக்கட்டினபடி எங்ஙனே என்றபடி. பல்லியின்-பல்லியினுடைய, சொல்லும், வார்த்தையையும், சொல்லாக்கொள்வதோ உண்டு, சொல்லாகக்கொள்வ தொன்றுண்டு,அதுதந்தாமுடைய நன்மைக்கு ஸூசகமாக லோகத்திலே கொண்டு போருகிற விதுண்டு.

[குருவில் மிளிர்தந்து ஆங்கேசெல்விய செல்கையுடைய மெல்லியலாக்கைக்கிரிமியுலகையென்காணும். அந்தக்ரிமிபோலே அஜ்ஞாநசக்திகளுக்கு எல்லைநிலமான என்னாலுந்தன்னைச் சொல்லிய சூழல் திருமாலவனுடைய கவி யாது கற்றேன். இப்படியிருக்கிற நீசத்தைத்தலைக்கட்டினபடி யெங்ஙனேயென்ன, பல்லியின் சொல்லும் சொல்லாக்கொள்வதோ உண்டு பண்டுபண்டே].என்றந்வயம். "செல்கைத்து"என்றது. செல்கையையுடையது என்றபடி."என்னாலும்"என்றது-என்னைக்கொண்டேஎன்றபடி."కావ్యం రామాయణం కృత్స్నం సీతాయాశ్చరితం మహత్ । పౌలస్త్యవధమిత్యేవచ చారచరితవ్రతః-காவ்யம் ராமாயணம்க்ருத்ஸ்நம் ஸீதாயாஶ்சரிதம்மஹத் । பௌலஸ்த்யவதமித்யேவ சகாரசரிதவ்ரதః" ௪அ.

[அப்பு அரும்பதம்.]

நாற்பத்தெட்டாம்பாட்டு. (மெல்லியல்) போய்ப்பெறவிருக்கிறது- அங்கும் "ஹாவுஹாவு"- என்றுபாடுகை. கிரிமி உலகையென்காணும்" என்றத்தைப்பற்றவருளிச்செய்கிறார் ( இவனுடைய ) இத்யாதி. என்னாலுந்தன்னைச் சொல்லிய" என்றத்தைப் பற்றவருளிச் செய்கிறார் (மானறிவது) இத்யாதி. பிறந்த தென்றுமல் நீர்க்குமிழிபோலே"மிளிர்தந்து" என்பானென்னென்னவருளிச்செய்கிறார் (உத்பத்தியும்) இத்யாதிவாக்யத்வயத்தாலே. தாத்பர்யத்வயம் - கீழிரண்டினுடைய விவரணமாய்;அது என்றத்தையருளிச்செய்கிறார் (அவன் கவி) இத்யாதி-(ஆது) அவன் விஷயமானகவியெல்லாமென்றபடி, யாது என்றத்தைப்பற்ற வருளிச் செய்கிறார் (யாதொன்று) இத்யாதி.

தான்கற்றதெல்லாமவன் விஷயமென்றபடி. நீர் சொன்னது அவன் கவியான தெப்படியென்ன அருளிச்செய்கிறார் (அல்பஜ்ஞராய்) இத்யாதி. பல்லியின் சொல்லையும் சொல்லாகக்கொள்வது கண்டு. சஅ.

[வேறொரு அரும்பதம்]

நாற்பத்தெட்டாம்பாட்டு (மெல்லியல்) இத்யாதி. கீழே "என்னுங்கொல்" என்னும்படி நொந்த விவர் "கவியாது கற்றேன்" என்று ஹர்ஷிக்கும் படிக்கு ஸ்வாபதேசஸங்கதி அருளிச்செய்கிறார் (இஸ்ஸம்ஸாரத்தில்) இத்யாதி. (ஸ்வரூபம்) என்றது-(க)"ஹாவு-ஹாவு" "ஹாவு-ஹாவு"- என்று ஸ்துதிக்கும்படியான வாக்வ்ருத்தி யென்றபடி. பாட்டுக்குத் தொகுத்தபாவம் (இவனுடைய)இத்யாதி. க்ரந்தியிலே - புண்ணிலே. மேலேபோட்டே சேர்த்துத்தாத்பர்யாந்தரம் (அவனும்) இத்யாதி, தலைக்கட்டின படி - ஹர்ஷத்துக்குடலாகத் தலைக்கட்டினபடி. சஅ.

தாத்பர்யம்.—ஆழ்வாருடைய ஆர்த்தியை சமிப்பிக்கைக்காக ஸர்வேஸ்வரன்வந்து, "உம்மையிட்டு நம்விஷயமாகப்ரபந்தநிர்மாணம்பண்ணி அத்தைக்கொண்டு லோகத்தை வாழ்விக்கவேணு மென்கைக்காக நாமேயும்மை இந்த லோகத்தில் சிலநாள் இருக்கும்படி ஸங்கல்பித்தோம்" என்று சொல்ல, இப்படி ஸர்வேஸ்வரன் நம்மை விஷயீகரித்தா னென்று ஹ்ருஷ்டரா யருளிச்செய்கிறார்.

அத்யல்பமான ஜீவிதகாலத்தையுடையதாய், இமையோடிமை யசக்கும்போது அக்காற்றையும் பொறாத அதிக்ஷுத்ர சரீரத்தையுடையதான புழு, ஜந்மமரணந்தப்ப வேறொருலோகடவடிக்கையை யறியாதாற்போலே அத்யந்தமல்பஜ்ஞனை வென்னைக்கொண்டு, ஸர்வஜ்ஞரான நித்யஸூரிகளுக்கும் கூடவாங்மநஸ்ஸுக்களுக் கவிஷயமான கல்யாண குணாகரனான ஸர்வேஸ்வரன் தன்னுடைய ஆஸ்சர்யசக்தியினால் தன்னைப்பாடுவித்துக்கொண்டான். அதாவது - விசேஷகசூந்யமான பல்லி ஏதோ ஒருவிதமாகச் சப்திக்க அந்த சப்தத்தை ஜ்ஞாநவான்கள் சுபாசுபஸூசகமாகக் கொள்ளுமாபோலே, எனக்குத் தோற்றின ஏதோ ஒன்றை நான் சொல்ல, அதையெல்லாம் ஸ்ரீய:பதியான தனக்குத் தகுதியான கவியாக்கிக்கொண்டான். சஅ.



பண்டும்பலபலவீங்கிருள்காண்டும், இப்பாயிருள்போல்
கண்டுமறிவதுங்கேட்பதும்யாமிலம், காளவண்ண
வண்டுண்துழாய்ப்பெருமான்மதுசூதனன் தாமோதரன்
உண்டுமுமிழ்ந்துங்கடாய,மண்ணேரன்னவொண்ணுதலே. சகூ.

அர்த்தம்.—காளம் - கறுத்த, வண்ணம் - வர்ணத்தையுடைய, வண்டு - வண்டுகள், உண் - (மது) பாநம் பண்ணுகிற, துழாய்-திருத்துழாயையுடைய, பெருமான் - உபகாரகனாய், மதுசூதனன்-மதுவென்கிற அஸுரனை ஸம்ஹரித்

(க) தைத்திரீயம். ப்ருகு கo.

தவனாய், தாமோதரன் - (யசோதைப் பிராட்டிகட்டின) கயிற்றை (கயிற்றின் தழும்பை) உதரத்திலுடையவனான ஸர்வேஸ்வரன், உண்டும் - (ப்ரளயகாலத்தில்) விழுங்கியும், உமிழ்ந்தும்-(ஸ்ருஷ்டிகாலத்தில்) வெளிப்படுத்தியும், கடாய - நடத்தின (ரக்ஷித்த), மண்-பூமியுடைய, நேர் - அழக்கு, அன்ன-ஒப்பானவளாய், ஒண் - அழகிய, நுதலே - நெற்றியை யுடையவளே ! பண்டும்-முன்னமும், பலபல - அநேகவிதமான, வீங்கு - வ்ருத்தியடைகிற, இருள் - அந்தகாரத்தை, காண்டும் - கண்டறிவோம், இ - இந்த, பாய்-பரவும், இருள்போல் - அந்தகாரத்தைப்போல், யாம் - நாம், கண்டும் - பார்த்தும், அறிவதும் இலம் - அறிந்துமிலோம். கேட்பதும் இலம் - கேட்டுமிலோம்.

[பெரிய வாச்சான்பிள்ளைவ்யாக்யாநம்.]

அவ.—நாற்பத்தொன்பதாம்பாட்டு.—“ஸர்வேஸ்வரன் நம்மை விசேஷகடாக்ஷம் பண்ணிற்றிலனே ?” என்றாறியிருந்தார் முன்பு; அவன் விசேஷகடாக்ஷம் பண்ணினானென்று தோற்றினபின்பு அது காதாசித்கமாய், அநுபவ விச்சேதத்தைப் பண்ணுமதானஸம்ஸாரத்திலே நம்மைவைப்பதே! யென்னு மாற்றாமை ஒருபிராட்டிதசையை விளைத்தது. கலந்து பிரிந்து பிரிவாற்றாத நல்மகள்தான் ராத்ரிவ்யஸநத்தாலே நோவுபடுகிறபடியைத்தானே சொல்லுகிறாளாதல் ; அன்றிக்கே தோழிவார்த்தையாதல்.

வ்யா.—(பண்டும் பலபல வீங்கிருள்காண்டும்) இதுக்கு முன்பெல்லாம் ராத்ரிவ்யஸநத்திலே யலைந்துபோந்தா ளொருத்திகாணுமிவள்தான். ஸ்ரீமார்க்கண்டேய பகவான் அநேகம் ப்ரளயங்களை நீஞ்சிக் கரைகண்டாற்போலே, இதுக்குமுன்பு அநேகராத்ரிவ்யஸநங்களுமநுபவித்து அவற்றுக்கொரு அவஸாநமுங்கண்டு போந்தோமிறே. (வீங்கிருள் காண்டும்) முன்புமநேகம் வளர்ந்தவிருள் கண்டு போந்தோம். (இப்பாயிருளித்யாதி.) அவ்வளர்த்தியோடே இப்படிபரந்தவிருள்போலே இருப்பதொன்று கண்டறியோம். இவ்விருளைத்

---

அரு.—நாற்பத்தொன்பதாம்பாட்டு.—(பண்டும் பலபல.) (பண்ணிற்றிலனே) என்றது-ஸ்வரத்திலேயாய், பண்ணினானென்றாறி யிருந்தார் முன்பென்றபடி. “என்னாலும் தன்னைச்சொல்லிய.” என்றத்தைக்கொண்டு (அவன் விசேஷகடாக்ஷம்பண்ணினானென்று தோற்றினபின்பு என்றது. (தானே சொல்லுகிறாளாதல்) என்றது-தானே தோழியைக்குறித்துச் சொல்லுகிறாளாதலென்றபடி.

(இதற்குமுன் பெல்லாம் ராத்ரிவ்யஸநத்தாலே அலைந்து போந்தாளொருத்திகாணுமிவள் தான்) என்று வ்யாக்யாதா அருளிச்செய்கிறார். காண்டும்-வீங்கிருள்-வளர்ந்தவிருள். (அவ்வளர்த்தியோடே) என்றது-வீங்கென்று சொன்ன வளர்த்தியோடே என்றபடி. “பாயிருள்” என்றதுக்குத் தாத்பர்யம்

ள்யா|| தப்பி யொதுங்க ஒருநிழலில்லாதபடி ப்ரளயம் வந்தாற்போலேகண்ட விடமெங்குந் தானே போந்தது. இவ்விருள்போலே இருப்பதொன்றும் நாமுமிதுக்குமுன்புகண்டறியோம். நம்மோடு ஸஹோதரிகளாய் ராத்ரிவ்யஸநத்துக்குடல் கொடுத்துப் போந்த ஸ்ரீஜநகராஜன் திருமகளைப்போலேயிருப்பார்தா மிப்படியிருப்பதொன் றநுபவித்துப் போந்ததாகக் கேட்டறிவது மில்லை. முன்புஸம்ஸாரியாய் நின்ற நிலையிலே கண்டநுபவித்தனவும் அநேகம் ராத்ரிகளுள. ஜ்ஞாநம்பிறந்த பின்புமநேகம் ராத்ரிகளுக்கலைந்து போந்தது. இவ்விசேஷகடாக்ஷம் பண்ணினபின்புற்றை பாதகத்வம் முன்பில்லையிறே.

(காளவண்ணன்) இவ்விருள் பாதகமாம்படி பண்ணிற்று ஓரிருளையிட்டுக்காணும். (க)*இருளன்னமா மேனியைக்காட்டியாயிற்று. போக யோக்யமான காலத்திலே அவ்விருளோடு போலியான வடிவைக்கொண்டு வந்தணையாமை யாயிற்று இதுபாதகமாகைக்கடி. (வண்டுண்துழாய்) ஒப்பனையால் வந்தவழகைச் சொல்லுகிறது. (மதுசூதனன்) இவற்றால் வந்தபோக்யதையையநுபவிப்பார்க்கு வரும் விரோதியை அம்மதுவைப் போக்கினாற்போலே போக்குமவன். (தாமோதரன்) உகப்பார்க்குக் கட்டிவைக்கலாம்படி பவ்யனாயிருக்குமவன். (உண்டுமித்யாதி) உண்பது உமிழ்வதாய்க்கொண்டு நடத்துகிற. (மண்ணேரன்ன) அவனுக்கு ரக்ஷ்யமாமிடத்து பூமியோடு நேரொத்த. இது தலைமகள் வார்த்தையானபோது, பூமி ப்ரளயத்தில் கரைந்து போகாதே கிடந்தவோபாதி இந்த்ராத்ரி வ்யஸநத்தைத் தப்பி என் ஸத்தைகிடந்தது உன் ஸந்நிதியாகையிறே. தோழிவார்த்தை யானபோது, தன்னுடைமையை யழியக்கொடுப்பா னொருவனன்று காணவன்; தான்படாததுபட்டு நோக்குமவன்காண்; ப்ரளயத்தில் பூமியையழியவிட்டிராதவோபாதி உன்னை ராத்ரிவ்யஸநத்தில் விட்டிரான்காண். (ஒண்ணுதலே) அவனுடைமை யென்கைக்கொரு த்ருஷ்டாந்தஞ்சொன்னோ மித்தனையன்றோ? உனக்கொப்போ அம்மண்? அவனுக் காகர்ஷகமானவடிவழகுள்ளதுனக்கன்றோ? சகூ.

அரு|| அருளிச்செய்கிறார் (இவ்விருளைத்தப்பியொதுங்க) என்று, ஸ்வாபதேசம் (முன்பு ஸம்ஸாரியாய் நின்றநிலையிலே) என்று. கண்டறிவுதோம் என்று சேஷம் ஜ்ஞாநம்பிறந்த பின்பு-மயர்வற மதிநலமருளப்பெற்றபின்பு. (இவ்விசேஷகடாக்ஷம்) என்றது - கீழிற்பாட்டில் பண்ணின விசேஷ கடாக்ஷமென்றபடி.

தாத்பர்யாந்தரம் (போகயோக்யமான) இத்யாதி, (இது தலைமகள் வார்த்தையானபோது) என்றது-"மண்ணேரன்ன" என்றுஸம்போதித்த இந்தவார்த்தை யென்றபடி.

---

(க) பெரியதிருவந்தாதி, உசு.

அரு|| [காளவண்ணனாய் வண்டுண்டுழாய்ப் பெருமான் மதுசூதனன் தாமோதரனுண்டுமிழ்ந்துங்கடாயமண்ணேரன்னவொண்ணுதலேயாம் பல பலவீங்கிருள் காண்டும் இப்பாயிருள்போல் கண்டுமறிவதுமிலம் கேட்பதுமி லம்] என்றந்வயம். சகூ.

[அப்பு அரும்பதம்.]

நாற்பத்தொன்பதாம் பாட்டு. (பண்டும்) பண்ணிற்றிலனோ - பண்ணி னானன்றோ? என்றுறியிருக்கை கீழிற் பாட்டிலே. முன்பும் ராத்ரிகளுண்டே, இப்போதநீவபாதை யேதென்ன வருளிச்செய்கிறார் (முன்பு ஸம்ஸாரியா ய்) இத்யாதி, காளம் - கறப்பு. இருள் பாதகமாகைக்குத்திரு மேனி ஹேது வானபடி யென்னென்னவருளிச் செய்கிறார் (போக யோக்யமான) இத்யாதி. தலைமகள் வார்த்தை-பூமிகரையாதே தாரகமானாற்போலேநீயும் நோவுபடா தே தரித்திருக்கையாலே யன்றோ உன்னைக் கண்டு நான் ஸத்தை பெற்ற தென்றபடி.

[காளவண்ணந்தொடங்கி ஒண் ணுதலே யாங்கண்டறிவதும் கேட்டறிவ துமிலம்] என்றந்வயம். சகூ.

[வேறொரு அரும்பதம்.]

நாற்பத்தொன்பதாம்பாட்டு.—(பண்டும்), இத்யாதி. கீழ் "திருமாலவன் கவியாது கற்றேன்" என்று களித்தவர் இங்கே ராத்ரிவ்யஸநத்துக்குப்பாசு ரமிடும்படிஎங்ஙனேயென்னவருளிச்செய்கிறார் ( ஸர்வேஶ்வரன் ) இத்யா தி, விசேஷகடாக்ஷம்-கவிசொல்ல வல்லராம்படி பண்ணினகடாக்ஷம். "காண்டு ம்" என்ற பூதநிர்த்தேச மமைந்திருக்க, "பண்டும்" என்றதுக்கு பஹுகாலமெ ன்று தோற்றுகை தாத்பர்யமென்றிடுகிறார் ( இதுக்கு ) இத்யாதி. பல என்னவமைந்திருக்க "பலபல" என்று மீளிசையாகச்சொன்னதுக்கு பாவம் (ஶ்ரீமார்க்கண்டேய) இத்யாதி. "வீங்கு" என்றதுக்குக் கருத்து (முன்பு) இத் யாதி. பேரிருளென்னுதே. "பாய்" என்றதுக்குக்கருத்து ( நம்மோடு ) இத்யாதி. பத்துமாஸமென்றளவு பட்டது அக்காலமென்று கருத்து. ஸ்வா பதேச தாத்பர்யம் (முன்பு) இத்யாதி. "காணும்" என்றவநந்தரம் வசீகரித்த தென்று கூட்டுவது. இவற்றால்-நிறத்தாலு மொப்பனையாலும். "கடாய" என் றதினர்த்தம். (நடத்துகிற) என்றது. தோழிவார்த்தையென்றபக்ஷத்திலே அர்த்தம் ( அவனுக்கு ) இத்யாதி. தலைமகள் வார்த்தையானபோது-என்ஸ த்தை, "மண் நேரன்ன-மண்ணோடொத்தது, என்றந்வயம். சகூ.

தாத்பர்யம்.—ஸர்வேஶ்வரன் தம்மிடத்தில் விசேஷகடாக்ஷம் பண்ணின தை யநுஸந்தித்த வநந்தரம், தமக்கு இஸ்ஸம்ஸாரத்திலுண்டான ஸ்த்திதியை யநுஸந்தித்து அத்யந்த வ்யாகுல சித்தராய், ப்ரியவிரஹகிந்நையான ஒருபி ராட்டியின் தன்மையை பஜித்து, அப்பிராட்டி தோழிக்குரைத்த பாசுரத்தா லே யருளிச்செய்கிறார்.

ஓஸகி! நாயகன் பிரிந்தபிறகு நாம், நம்மை பாதிக்கைக்காக காடாந்தகாரமாய் அநேகம் வடிவுகொண்டு வந்து நலியத்தொடங்கின அநேகம் ராத்ரியைப்பார்த்திருக்கிறோம். ஆயினும், இப்போது நம்மையெங்கேனும் போய் ஒதுங்கிப்பிழைக்க வொண்ணாமல் இவ்விபூதியடங்கலும் மறையும்படி இருளைப்பரப்பிக்கொண்டு வந்து நலிகிற இக்காளராத்ரி போலொத்ததை ஒருகாலும் பார்த்தது மில்லை, கேட்டது மில்லை. இப்படிப்பட்ட ஸங்கடஸமயத்தில், மதுபானம்பண்ணி மேனியிட்டுத்திரிகிற வண்டுகள் மொய்த்ததிருத்துழாய் மாலையைச் சூடின பரமபோக்யனாய், ஆஶ்ரிதவிரோதி நிரஸந சீலனாய், ஆஶ்ரிதர்க்கத்யந்த ஸுலபனான ஸர்வேஶ்வரனை யடைந்து இப்பூமி ப்ரளயாதயாபத்துக்களில் அழியாமல் ஸுரக்ஷித மாயிருந்தாற்போல் உன்னுடைய ஸந்நிதாநபலத்தினால் நான் இப்போது ஜீவித்திருக்கிறேன். உன்னுடைய அழகிய முகத்தை இந்தஸமயம் காணேனாகில் முடிந்தே விடும் தசையாயிருக்கிறது. ௪௧

---

ஒண்ணுதல்மாமையொளிபயவாமை, விரைந்துநந்தேர்
நண்ணுதல்வேண்டும்வலவகடாகின்று, தேன்நவின்ற
விண்முதல் நாயகன்நீண்முடிவெண்முத்தவாசிகைத்தாய்
மண்முதல்சேர்வுற்று. அருவிசெய்யாநிற்கும்மாமலைக்கே. ௫௦.

அர்த்தம்.—வலவ - பலிஷ்டனான ஸாரதியே! ஒண் - அழகிய, நுதல் - நெற்றியையுடைத்தான நாயகியினுடைய, மாமை - நிறத்தின், ஒளி - காந்தி, பயவாமை - விவர்ணமாவதற்கு முன்னமே, தேன் - தேனை, நவின்ற - சொல்லப்பட்டவனாய், விண்முதல் - பரமாகாசமுதலிய விபூதிக்கு, நாயகன் - ஸ்வாமியானவனுடைய, நீள் - நீண்ட, முடி - கிரீடத்திலுள்ள, வெண் - ஸ்வச்சமான, முத்தம் - முத்தினுடைய, வாசிகைத்தாய் - ஒழுங்கையுடையதாய், மண்முதல் - (தனக்கு) முதலான பூமியை, சேர்வுற்று - சேரும்படியான, அருவி - ஆறுகளை, செய்யாநிற்கும் - ப்ரவஹிப்பியாநிற்கிற, மா - பெரிய, மலைக்கு - திருமலையைக்குறித்து, விரைந்து - சீக்ரமாக, நம்தேர் - நம்முடையதேரை, கடாகின்று - நடத்திக்கொண்டு, நண்ணுதல் வேண்டும் - கிட்டவேண்டும்.

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—ஐம்பதாம்பாட்டு இதுக்குமுன்பு இங்ஙனிருப்பதொரு ராத்ரிவ்யஸநமநுபவித்தறியோமென்னும்படி அவஸாதம் மிக்கவாறே. (க) போ³த⁴யந்த꞉ பரஸ்பரம். போதயந்த: பரஸ்பரம்பண்ணி, இவளையாஶ்வஸிப்பிக்கைக்காகத் தலைமகன் வருகிறான். வினைமுற்றி மீண்ட தலைமகன், பதினாலாண்டு போனவழியை ஸ்ரீபரதாழ்வான் ப்ரக்ருதியையறிகையாலே பெருமாளொருபகலே மீண்டாற்போலே த்வரி

அரு || ஐம்பதாம் பாட்டு.—(ஒண்ணுதல்) இந்தப்பாட்டில் தலைமகனென்று ஸ்ரீவைஷ்ணவர்களைச் சொல்லுகிறது. (வினைமுற்றி) என்றது - சத்ருக்களை

---

(க) கீதை. ௧௦ - ௯.

வ்யா|| த்து வருகிறானாயிருக்கிறது. தலைமகன் ஸாரதியைப்பார்த்துச் சொல்லுகிறான்.

வ்யா.—( ஒண்ணுதல் மாமையொளிபயவாமை ) ஒள்ளிய நுதலையுடைய விவளுடையமாமை. ஒளியுண்டு-நிறத்தில்புகர், அதுபயப்பதற்கு முன்பே-அது விவர்ணமாவதற்கு முன்பே. (ஒண்ணுதல் மாமை) பத்துமாஸம் பெருமாளும் பிராட்டியும் பிரிந்தவோபாதியிறே இவர்கள் பிரிவும். பிரிந்து போனநாளைக்குப் பாதேயமிருக்கிறபடி. ( க ) "சந்த்ரகாந்தாநநாம்ஸுப்ரூம்" சந்த்ரகாந்தா நநாம்ஸுப்ரூம்" என்றாரிறே பெருமாள். இவ்வழகிழந்தா லாறியிருக்கவொண்ணாதென்கையும், விவர்ணமானால் நம்மாலும் மீட்கவொண்ணாதென்கையும். (விரைந்து நந்தேர்நண்ணுதல் வேண்டும்) த்வரித்துக்கொண்டு நம்முடைய தேரானது கிட்டவேணும். அவள்தான் வைவர்ண்யத்தாலே நமக்குப்பழியிடுவதற்கு முன்பேநீத்வராயாலே அப்பழியைத்துடைத்துத் தரவேணும். (வலவ) இங்கும் ஸாரதித்வகையதுபோலே காணும்கார்யம். (கடாகின்று நண்ணுதல்வேண்டும்) நடத்தாநின்று கொண்டு நந்தேர்கிட்டவேணும்.

(தேன்நவின்ற வித்யாதி) நடத்துகிற உனக்குமங்கே போகப்புக்கால் ப்ரயோஜந முண்டாம்படி காண்தேசமிருப்ப தென்கிறான். "தேன்நவின்ற மாமலைக்கே" என்னுதல், "தேன்நவின்ற விண்முதல் நாயகன்" என்னுதல். தேனுண்டு-வண்டுகள், மதுபாநமத்தமாய்க்

---

அரு|| ஜயித்தென்றபடி. பத்துமாஸம் பெருமாளும் பிராட்டியும் பிரிந்தாற்போலேயிறே இவர்கள் பிரிவம்; ஆகையாலே நாயகனுக்கு (பிரிந்துபோன நாளைக்குப்பாதேயமிருக்கும்படி) என்றது-நாயகனிவளுடையஅழகையேதாரகமாகவநுஸந்தித்துக்கொண்டு இருந்தானென்றபடி. இப்படி நாயகி யழகையநுஸந்தித்து தரித்தபேருண்டோவென்ன அருளிச்செய்கிறார் (சந்த்ரகாந்தாநநாம்ஸுப்ரூம், என்றாரிறேபெருமாள்) என்று. "ஒண்ணுதல்" என்கிறவித்தால் பலித்ததென்னென்ன அருளிச்செய்கிறார்(இவ்வழகிழந்தால்)என்று. நாயகன்தனக்காறியிருக்கவொண்ணாதென்கையுமென்றபடி. "நண்ணுதல் வேண்டும்"-கிட்டவேண்டும். வலவ-தேரை நடத்த வல்லவனே!. "இங்கும்" என்றது - பாரதஸமரத்திலேயன்றிக்கேயிங்குமென்றபடி. "கடாகின்று"-நடத்தாநின்றுகொண்டு.

"தேன் நவின்ற" என்றது - திருமலைக்கு விசேஷணமானபோது "தேன்" என்று - வண்டாய், நவிலுகை - சப்திக்கையாய், வண்டுகளானவை மதுபாந மத்தமாய்க்கொண்டு பாடாநின்றுள்ள திருமலையென்று பொருள். இந்த வர்த்தத்தை அருளிச்செய்கிறார் (தேனுண்டுவண்டுகள்) என்று.

---

(க)

வ்யா|| கொண்டுபோடுகிற அவற்றினுடைய பாட்டேயாயிருக்கிற திருமலை யென்னுதல், அன்றிக்கே (க) விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:" என்கிறபடியே தேனுகச்சொல்லப்பட்ட விண்முதல்நாயகனென்னுதல். (விண்முதல்நாயகன்) விண்ணுக்கு-பரமபதத்துக்கு, ப்ரதாநனை நாயகனென்னுதல், அன்றிக்கே விண்முதலான விபூதிகளுக்கெல்லாம் நாயகனென்னுதல். (நீண்முடியித்யாதி) பிரிந்தநாளில் ப்ரமமெல்லாமாறும்படியாய்காண்தேசமிருப்பது. ஸ்ரீவைகுண்டநாதனுடைய நீண்முடியுண்டு-திருவபிஷேகம், அதில் வெண்முத்து வாசிகையுண்டு-வெளுத்தமுத்தொழுங்கு, அத்தன்மையதாய். அதின்படியையுடைத்தாய்-திருமலை வ்ருத்தாந்தத்துக்கு ஸ்ரீவைகுண்டத்திற்படியைத்ருஷ்டாந்தமாகச் சொல்லலாம்படியாயிற்று இவர்க்குக்கண்ணுற்காண்கிற விடத்திலுமவ்விடம் விசதமாயிருக்கிறபடி. பர்வதத்துக்கு அக்நிமத்தையை ஸாதியாநின்றால் மஹாநஸாதிகள் வ்யாப்திக்ரஹண பூமியாயிருக்குமாபோலே. இங்குற்றை சீலம்தரைகாணவொண்ணுதபடி யாயிருக்கையாலே இவ்விடம் நிலமன்றிறே. ஸத்கார்யவாதமாகையாலே இச்சீலமங்கேயுமுண்டென்று ப்ரமாணங்கள் சொல்ல விஸ்வஸிக்கு மித்தனையிறே; கண்ணாலே கண்டநுபவிக்கலாவதிங்கேயிறே. (மண்முதல் சேர்வுற்று) பூமியளவும் வந்துகிட்டி. (அருவிசெய்யாநிற்கும் மாமலைக்கே) வழியில் ப்ரமமடங்கலுந் தீருகிறதிறே அங்கே புக்கவாறே. (உ)*குளிரருவி வேங்கடமிறே. விண்முதல் நாயகன்நீண் முடிவெண்

அரு|| அதவா:—"தேன் நவின்ற" என்றது - ஈஸ்வரனுக்கு விசேஷணமானபோது, தேனென்று - மதுவாய், நவிலுகை - சொல்லுகையாய், (க) "விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:" என்கிறபடியே தேனுகச்சொல்லப்பட்ட விண்முதல் நாயகனென்று பொருள். வாசிகை யென்று - முத்தொழுங்காய், வாசிகைத்தாயென்றது - வாசிகையினுடைய ஸ்வபாவமுடைத்தாயென்றபடி. திருமலையருவிக்கு லீலாவிபூதியிலே த்ருஷ்டாந்தஞ் சொல்லாதே நித்ய விபூதியிலே த்ருஷ்டாந்தம் சொல்லுகிறதென்னென்ன, இரண்டு பரிஹாரமருளிச்செய்கிறார் (திருமலை வ்ருத்தாந்தத்துக்கு) என்று. மஹாநஸஸ்தாநம்-பரமபதம். இரண்டாம் பரிஹாரம் (இங்குற்றை சீலம்). இதுக்குத் தாத்பர்யம் - இங்குற்றைசீலம் கண்ணாலே கண்டநுபவிக்கிறதாகையாலே இதினுடைய ஸ்வரூபம் நன்றாகக்காண வொண்ணுதாயிருக்கும்; பரமபதத்தில் ஸௌசீல்யம் ப்ரமாணத்தாலேகற்கிறதாகையாலே இதினுடைய ஸ்வரூபம் நன்றாகத்தெரியும்; ஆகையாலேபரமபதத்திற்படியையே த்ருஷ்டாந்தமாக்கியருளிச்செய்கிறாரென்றபடி. "மண் முதல் சேர்வுற்று"

(க) நாராயணஸூ. (உ) நாய்ச்சியார்திரு - அ - ரு,

வ்யாபிமுத்தவாசிகைத்தாய் மண்முதல்சேர் வுற்றருவிகள் ப்ரவஹியா நின்றுள்ள மாமலைக்கேவிரைந்து நந்தேர் நண்ணுதல் வேண்டும்.

ஸ்வாபதேசம்.—இத்தால், ஆழ்வாருடைய ஆற்றாமையைக்கண்ட பாகவதர்களிவரை யாஶ்வஸிப்பிக்கைக்காக வருகிறபடியைச் சொல்லுகிறது. திருமலையிலே நிற்கிறவன் சிலத்திலே யகப்பட்டுத் திருவருவிகளின்நடுவேபெருமாளைக் கைப்பிடித்தபின், பிராட்டி ஸ்ரீமிதிலையை நினையாதாற்போலே திருநகரியையும் மறந்து ஆழ்வாரெழுந்தருளியிருந்தவிருப்பையநுபவிக்கவேணுமென்று அநுகூலரடையத்வரித்துக்கொண்டு வருகிறபடியைச் சொல்லுகிறது. ருய.

அரு|| மண்ணென்று - பூமியாய், முதலென்று - மலையடியாய், பூமி ப்ரதேசமானமலையடியிலே சேரவந்து. உற்று - கிட்டி.

[ஒண்ணுதல்மாமை ஒளிபயவாமை, தேன் நவின்றவிண் முதல் நாயகன் நீண்முடிவெண்முத்தவாசிகைத்தாய் மண் முதல் சேர்வுற்று அருவிசெய்யா நிற்கும் மாமலைக்கு வலவவிரைந்து கடாகின்று நந்தேர் நண்ணுதல் வேண்டும்]என்றந்வயம்."ஆழ்வாருடைய வாற்றாமையைக்கண்ட" என்று தொடங்கியருளிச்செய்த வாக்யத்தை, ஆழ்வார் திருநகரியைவிட்டுத் திருமலையிலேயிருக்கிறத்துக்கு ஹேதுவையு மருளிச்செய்துகொண்டு விவரிக்கிறார் (திருமலையிலே நிற்கிறவன் சிலத்திலே) என்று. ருய.

[அப்பு அரும்பதம்.]

ஐம்பதாம்பாட்டு. (ஒண்) வினைமேல் பிரிவாகப் பிரிந்தவன்,வினைமுற்றிவினையை ஜயித்து. பிரிந்ததசையிலே (ஒண்ணுதல்) என்பானென் னென்ன அருளிச்செய்கிறார் (முத்துமாஸம்) இத்யாதி: இவனும் முகத்தை நினைத்திருந்தானென்றபடி. அவள்தாம் தாரகமாக நினைத்திருந்தாரோவென்ன அருளிச்செய்கிறார் (சந்த்ரகாந்த) இத்யாதி. பலிதமருளிச்செய்கிறார் (இவ்வழி) இத்யாதி. வலவன் - ஸாரதி. திருமலைக்கு த்ருஷ்டாந்த மிங்கேயிட்டுச் சொல்லாமல் அங்கேயிட்டுச் சொல்லுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (திருமலை) இத்யாதி. அந்த ப்ரத்யக்ஷமிங்கு முண்டேயென்ன அருளிச்செய்கிறார் (இங்குற்றை சிலம்) இத்யாதி. ஆனாலங்குசிலகுணமில்லையோவென்ன அருளிச்செய்கிறார் (ஸத்கார்யவாதம்) இத்யாதி. ஸத்கார்யவாதமாவது - உண்மை சொல்லுகிற சாஸ்த்ரம். ருய.

[வேறொரு அரும்பதம்.]

ஐம்பதாம்பாட்டு.—(ஒண்ணுதல்) இத்யாதி. எம்பெருமானாகிற ப்ரதாநநாயகனைப்பிரிந்து ராத்ரி வ்யஸநம் மிகுத்திருக்கும் நாயகியை, உசாத்துணையாய்ரக்ஷகரானபாகவதர் பரமத நிரஸநார்த்தமாக வ்யாபரித்தவர் தலைக்கட்டினவாறே தன்னெஞ்சாகிற ஸாரதியை த்வரிப்பித்துக்கொண்டுவந்து ஆஶ்வஸிப்பிக்கிறாரென்றுஸங்கதியருளிச்செய்கிறார்(இதுக்கு) இத்யாதி வாக்யத்ர

யத்தாலே. தலைமகன்-யுத்தார்த்தமாகப் பிரிந்தநாயகன். (வினைமுற்றி)-யுத்தம் ஸாந்தமாயென்றபடி.பிரிந்தஸமயத்திலே"ஒண்ணுதல்" என்னக் கூடுமோவென்ன.(பத்துமாஸம்)இத்யாதி.முன்பிருந்த முகவிகாஸம் இவன்மனத்திலிருந்த தென்றபடி. பிரிந்தஸமயத்திலுமிப்படி நினைத்துச்சொன்னபேருண்டோவென்ன(சந்த்ர)இத்யாதி. பலித்தவர்த்தம்(ஒவ்வழகு)இத்யாதி. (என்கையும்) என்ற வாந்தரம் பலிதமென்று சேஷம். உம்மைக்கண்டபோதே போனநிறமும் வந்துசேரும், இத்தனைத்வரிப்பானென்னென்ன (அவள்தான்) இத்யாதி. "இங்கும்" என்றது - பாரதஸமரத்தில் போலே என்றபடி. அதைவே விவரிக்கிறார் (தேனுண்டு) இத்யாதி. "ஶ்ரீவைகுண்டநாதனுடைய" என்ன வேணுமோ? திருவேங்கடமுடையா னென்னலாமே யென்ன (திருமலை) இத்யாதி. திருவேங்கடமுடையானும் விலக்ஷணவிஷயமாயன்றோவிருக்கிறாரென்ன (இங்குற்றை) இத்யாதி. அங்கும் சிலருண்டோவென்ன, (ஸத்கார்ய) இத்யாதி. திருமலையடிவாரத்தில் ஆழ்வார் தீர்த்தத்திலே எழுந்தருளியிருக்கு மாழ்வாரை ஸேவிக்கப்போகிற ப்ரஜைகளின்படி ஸ்வாபதேச மென்று யோஜநாந்தரம் (திருமலை) இத்யாதி. ருO.

தாத்பர்யம் — ஸர்வேஶ்வரனுடைய விரஹம் ஆழ்வார்க்கு அஸஹ்ய மானவாறே இவரைத் தேற்றுகைக்காக இவரெழுந்தருளியிருக்கு மிடத்தைக் குறித்து சிலபாகவதர்கள் வருகைக்கு அத்யவஸிதத ப்ரகாரத்தை, நாயகியைப்பிரிந்து யுத்தத்துக்குப் போனநாயகன் சத்ருக்களை ஜயித்து, பின்பு நாயகியை நினைத்து,இந்தவிரஹதசையில் என்படுகிறாளோ வென்னும் பரபரப்பையுடையனாய், அவளிருக்கு மிடத்தை நோக்கி சீக்ரமாகத் தேரைநடத்தவேணுமென்று ஸாரதியைக் குறித்துரைத்த பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

ஓஸாரதியே! நான் நாயகியைப்பிரிந்து வெகுநேரமாச்சுது. என்விரஹத்தினால் அந்நெற்றியழகியாள் சரீரம்வெளுத்து விவர்ணையாய் விடுவள். நான் தாமஸித்துப்போனால், அவளும் அவள் தோழிகளும், உன்னாலன்றோ இவ்வுடம்பிப்படி வெளுத்ததென்று என்மேல் பழிசொல்லுவர்கள். எனக்கப்படி லோகாபவாதம் வாராதபடி, பரமபோக்யனாய் உபயவிபூதிக்கும் நிர்வாஹகனான ஸர்வேஶ்வரனுடைய ஆதிராஜ்யஸூசகமான திருவபிஷேகத்தி லிழைத்த முத்துக்களைப்போல் அதிஸ்வச்சமான ப்ரவாஹம் முடிதொடங்கி அடியளவும் செல்லாநின்ற மலையருவிகளையுடைய திருமலையாகிற அவளிருக்கும் திவ்ய தேசத்தைக்குறித்து அதிசீக்ரமாக நந்தேரை நீநடத்த வேண்டும். ருO.

---

மலைகொண்டுமத்தாவரவாற்சுழற்றிய மாயப்பிரான்,
அலைகண்டுகொண்டவமுதங்கொள்ளாதுகடல், பரதர்
விலைகொண்டுதந்த சங்கமிவை வேரித்துழாய்துணையாத்
துலைகொண்டுதாயங்கிளர்ந்து, கொள்வானொத்தழைக்கின்றதே. ருக.

அர்த்தம்.—கடல் - ஸமுத்ரமானது, மலை - மந்தர பர்வதத்தை, மத்தா-மத்தாக, கொண்டு - செய்துகொண்டு, அரவால் - வாஸுகியாகிற ஸர்ப்பத்தினால், சுழற்றிய - கடைந்த, மாயம் - ஆஶ்சர்யபூதனாய், பிரான் - உபகாரகனான ஸர்வேஶ்வரன், அலைகண்டு - அலையெழும்பும்படி பண்ணி, கொண்ட - (தன்னிடத்தில் நின்றும்) எடுத்த, அமுதம் - அம்ருதத்தை, கொள்ளாது - வாங்கமாட்டாதே, பரதர் - முத்து வ்யாபாரிகள், விலைகொண்டு - க்ரயம் வாங்கிக்கொண்டு, தந்த - கொடுத்த, இவைசங்கம் - இந்த சங்குகளை (வளைகளை), வேரி - பரிமளத்தையுடைய, துழாய் - திருத்துழாயை, துணையா - ஸஹாயமாகக்கொண்டு, துலைகொண்டு - முடிக்க வழிதேடிக்கொண்டு, தாயம்-ஜ்ஞாதியின் பாகத்தில், (பாகம் வாங்கவந்த ஜ்ஞாதியைப்போலே) கொள்வானொத்து - வாங்குவது போல், கிளர்ந்து - அபிவ்ருத்தமாய், அழைக்கின்றது-சப்தியாநின்றது.                    ௬௧.

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—ஐம்பத்தோராம்பாட்டு —இவன் வந்து கிட்டுவதற்கு முன்னே கடலோசைவந்து செவிப்பட்டு பாதகமாகிற படியைச் சொல்லுகிறது. பதினாலாண்டு கூடிப்போனவழியை யொருபகலேவாராநிற்கச் செய்தே க்ரமப்ராப்தி பற்றாமை நடுவே திருவடியை வரக்காட்டினாரிறே. அப்படியே இங்கோராள்வாராவிட்டால் கண்டதெல்லாம் பாதகமாமிறே. (க) “सङ्गत्या भरतश्श्रीमान् राज्येनार्थी स्वयंभवेत् - ஸங்கத்யா பரதஶ்ஶ்ரீமாந் ராஜ்யேநார்த்தீ ஸ்வயம்பவேத்” ஐயர் நியமிக்க ஆச்சியுடைய வரவ்யாஜத்தாலே நாம் ராஜ்யத்தைத் தனக்கேகொடுத்துப் போரச்செய்தேயும்நம்மைப் பின்தொடர்ந்து வந்து, “சொன்னநாள் எல்லைகழிந்தாற்பின்னையொருக்ஷணம்நான் தாழ்க்கில்

அ௫ || ஐம்பத்தோராம்பாட்டு.— (மலைகொண்டுமத்தா) பெருமாள் திருவடியைவரக்காட்டும்போது எத்தைச்சொல்லி வரக்காட்டினாரென்ன அருளிச்செய்கிறார் (सङ्गत्या भरतश्श्रीमान्-ஸங்கத்யா பரதஶ்ஶ்ரீமாந்)என்று. இதுக்கு வித்வான்கள் மேலெழ ஒருபொருள் சொல்லுவர்கள், அதாவதென்னென்னில், ஶ்ரீமானான பரதன் ராஜ்யத்திலுண்டான ஸங்கத்தாலே (ராஜ்யேந) ராஜ்யத்தாலே அர்த்தியாயிருக்கக்கடவரென்று. இதுக்குத்தாத்பர்யம் - பரதாழ்வான் ராஜ்யத்திலே பரிசயம் பண்ணிக்கொண்டிருக்கையாலே அதிலேஸ்ப்ருஹை பிறக்கக்கூடும்; ஆகையாலே யௌவராஜ்யம் வேணுமென்று அதிலே அபேக்ஷை யுடையராயிருந்தக்கால், நாமங்குப்போகாதே இங்கேயிருக்கப்பார்த்து வாருமென்று பெருமாள் திருவடியை முன்னேவரவிட்டாரென்று. இது பெருமாள் ப்ரக்ருதிக்குச் சேராதென்று நம்மாசார்களிப்படி நிர்வஹிப்பர்களென்று (ஐயர் நியமிக்க, ஆச்சியுடையவ்யாஜத்தாலே) என்று. இந்த நிர்வாஹத்திலே சப்தார்த்தம்-ஶ்ரீமானான பரதன் இன்று

(க) ஶ்ரீராமா - யுத்த - ௧௨௮ - ௧௭.

வ்யா|| தன்னைக்கிடையாது" என்னும்படி நம்நெஞ்சிலேபடுத்திப்போ னான். இன்று நாம் சென்றுகிட்டினால் பதினாலாண்டுபிரிந்து கண்ட ஹர்ஷத்தாலே "நீமுடிசூடு" என்றால் "அல்லேன்" என்னாதே அத்தை யிசையப்பெறுவதுகாண். ஐயர்நம்மைமுடிசூட்டப்பாரித்து ப் பெறாதேயொழிந்த விழவு நாம் பிள்ளையை முடிசூட்டிக் கண்டு தீரப்பெறுவதுகாண். (க) "ஶநைர்ஜகாம ஸாபேக்ஷ:-சனைர்ஜகாம ஸாபேக்ஷ:" என்கிறத்தை "ஸாபேக்ஷ:-ஸாபேக்ஷ:" என்று திருத்தி, கீழ்விழியாலே பார்த்துப்போனானென்று பொருள்சொன்னபடியை பட்டர் கேட்ட ருளி, "அதுவேண்டாகாண், கிடந்த பாடந்தனக்கேபொருள்சொல் லலாங்காணென்று, இவ்வுபகரணங்களைக்கொண்டு நாம் பிள்ளையை முடிசூட்டிக் காணப்பெற்றிலோமென்னு மபேக்ஷையோடே போ னானென்கிறதுகாண்" என்றருளிச்செய்தார். அத்தலைமகன்வந்து கிட் டுவதற்குமுன்னேயிறே.

வ்யா.—(மலைகொண்டுமத்தா) அசல (அசல) பதார்த்தத்தை ஸ்வ புத்யதீநமாகத்திரியும்படி பண்ணினான். (அரவால்) அதி ம்ருதுவான வாஸுகியைக் கயிறாகக்கொண்டான். (சுழற்றிய) வைத்தநேர்ப்பமிரு ந்தபடி. அம்ருதமெழுமளவுஞ் செல்லத்தானே திரியும்படி; குசவன்

அரு|| நாம்சென்று கிட்டினால் "ஸங்கத்யா" நம்மோடேகூடினஹர்ஷத்தாலே "நீதானே முடி சூடவேணும்" என்றால், "அல்லேன்" என்னாதே, "ராஜ்யேநார்த்தீ ஸ்வயம்பவேத் - ராஜ்யேநார்த்தீஸ்வயம்பவேத்" ராஜ்யத்தைப்பரிக்ரஹிக்கக்கட வன், ஆகையாலே "நாம் வருகிறோம்" என்று முன்னேவரவிட்டானென்ற படி. வித்வான்களபடி நிர்வஹிக்க நம்மாசார்யர்களிப்படி நிர்வஹிக்கைக் கடியென்னென்ன, (க) "ஶநைர்ஜகாமஸாபேக்ஷ: - சைனர்ஜகாமஸாபேக்ஷ:" என்று இந்த ஶ்லோகத்துக்கும் சில ஆசார்யர்கள் "ஸாபேக்ஷ:" என்றத் தை "ஸாபேக்ஷ: - ஸாபேக்ஷ:" என்றுபாடமாக்கி; வநவாஸத்துக்கெழுந்தரு ளும்போது இந்தராஜ்யத்திலே யபேக்ஷையுடையராயெழுந்தருளினாரென்று; இத்தை பட்டர் கேட்டருளி, பெருமாள் ப்ரக்ருதிக்குச் சேரநிர்வஹித்தருளு கிறார் (அது வேண்டாகாண்) என்று. இத்தால் வநவாஸத்துக்கெழுந்தருளு கிறபோதும் ஸ்ரீபரதாழ்வானை முடி சூட்டிக் காணப்பெற்றிலோமென்று அபேக்ஷையோடே எழுந்தருளுகையாலே "ஸங்கத்யாபரதஶ்ஶ்ரீமாந்" என்ற துக்கு ஆசார்யர்களருளிச்செய்ததே அர்த்தமாகவேணுமென்றபடி. (கீழ்விழி யாலே பார்த்துப்போனார்) என்றது - தமக்கதிலுண்டான வபேக்ஷை தோற் றக் கடைக்கண்ணாலே பார்த்துக்கொண்டுபோனாரென்றபடி. (இவ்வுபகரணங் களைக்கொண்டு) என்றது - தம்முடைய திருவபிஷேகத்துக்கு ஸம்பாதித்த உபகரணங்களைக்கொண்டென்றபடி. (அத்தலைமகன்) என்றது, ஸர்வேஶ்வ ரன் என்றபடி.

(க) ஸ்ரீராமா - அயோத்யா - கக - ருக.

வ்யா|| திரிகையொருகால் திரித்துவிட்டால்சிறிதுபோதுதிரியுமாபோலே. ஸர்வசக்தி திரித்ததாகையாலே கார்யம்முடியுந்தனையுந்திரிந்தது. இத்தால், ஸகல பதார்த்தங்களினுடைய ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகள் ஸ்வபுத்யதீநமென்றபடி. (மாயப்பிரான்) ஆஸ்சர்யமான குணசேஷ்டிதங்களையுடையவன். (௧)[மாயிருங்குன்றமித்யாதி.] சாத்தின திருமாலையுந்திருப்பரிவட்டமுமலைய நின்று கடைந்தபடி, [பிரான்] எனக்கவ்வடிவழகையுபகரித்த உபகாரகன். இவருடைய அம்ருதமிருக்கிறபடி. (அலைகண்டித்யாதி) தன்னைக்கீழ்மண்கொண்டு மேல் மண்ணெறியும்படி நெஞ்சிலே மந்தரத்தைநட்டு உலக்கையைவிடுநகங்கட்டி நற்ஜீவனை வாங்கிக்கொண்டவன்பாடு சென்று அத்தை மீட்டுக்கொள்ளமாட்டாது. (௨)"கடலே கடலே உன்னைக்கடைந்து கலக்குறுத்து" என்கிற அவன் பாடுபோகமாட்டாது.

(பரதரித்யாதி) வளைவிற்கும் செட்டிகள் பக்கலிலே விலைக்குக்கொண்ட சங்கங்களை வாங்கிக்கொள்ளப் பாராநின்றது. நாங்கள் தன்பாடே சென்றோமோ? தன்னை நெருக்கிக்கொண்டோமோ? (வேரித்துழாய் துணையா) நறு நாற்றத்தை யுடைத்தான திருத்துழாயைத் தனக்குக் கூட்டுப்படையாகக்கொண்டு. அங்குநின்றுமிலையமுதுகொண்டுவந்து காணும் நலிகிறது. சக்ரவர்த்தித் திருமகனை யண்டைகொண்டு மஹாராஜர் வாலியை யறைகூவினாற்போலே திருத்துழாயை யண்டைகொண்டு நலியத்தொடங்கிற்று, (௩) "𑌤𑍇𑌨𑌨𑌾𑌦𑍇𑌨𑌮𑌹𑌤𑌾- தேநநாதேநமஹதா" [மஹதா] மஹாராஜர் மிடற்றில் தசைப்புக்கு உரமுண்டென்று தோற்றும்படி யிருக்கை. [𑌨𑌿𑌰𑍍𑌜𑌗𑌾𑌮-நிர்ஜகாம] புறப்பட்டான். [𑌹𑌰𑍀𑌶𑍍𑌵𑌰𑌃- ஹரீஸ்வர:] பண்டுசில ரறைகூவஇருந்தறியாதவன் [𑌅𑌨𑌮𑌾𑌨𑍍𑌯- அநமாந்ய] ஆண்களோடே கலக்கவேண்டாவோ?

---

அரு|| கடல் கடைகிறபோதப்படி யாஸ்சர்யமாயிருந்ததோ வென்ன அருளிச்செய்கிறார் (மாயிருங்குன்றம் இத்யாதி) என்று. இதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (சாத்தின திருமாலையும்) என்று. "அலைகண்டு கொண்ட வமுதங்கொள்ளாது"- "அலைகண்டு" அலையும்படி பண்ணி-அதுகீழ் மண்கொண்டுமேல் மண்ணெறியும்படி பண்ணி, "கொண்ட" - அவன் பக்கல் நின்றும் வாங்கிக்கொண்ட, "அமுதங்கொள்ளாது"-அவன் பக்கல் நின்றும் மீண்டு வாங்கிக்கொள்ளமாட்டாதென்று சப்தார்த்தம்.

"பரதர்" என்று - சங்கங்கள் விற்கிற செட்டிகளாய் அவர்விலை [illegible]டு - விலைவாங்கிக்கொண்டு, தந்த - கொடுத்த, இவைசங்கம் - இந்தச்சங்குகளை, அப்படி மஹாராஜர் அறைகூவினரோ வென்ன அருளிச்செய்கிறார் (தேநநாதேந) என்று. (ஆண்களோடேகலக்க வேண்

---

(௧) திருமொழி - ௫ - ௭ - ௪. (௨) நாய்ச்சியார்திரு - ௧௦ - ௯.

(௩) ஸ்ரீராமா - பால - ௧ - ௪௮.

வ்யா||யாகநினைக்கிறது. (க) "நஞ்சுசோர்வதோர்வெஞ்சினவரவம்வெருவிவந்துநின்சரணெனை"; கையிலுள்ளதுப்ராதிகூல்யத்துக்குப்பரிகாரமாயிருக்க, "சரணம்" என்ற உக்திமாத்ரமேயிறே யதின்பக்கலுள்ளது. [வெருவிவந்து] அவ்வுக்திதானும் போழ்க்கனிறேயார்த்தியில்லாமையாலே; சத்ருபயத்தாலே வந்த வித்தனையிறே. [నార్చనౌ స్తుతౌ నచ । సామర్థ్యవాన్ - நார்ச்சநாதௌஸ்துதௌநச | ஸாமர்த்யவாந்] எனக்கென்றுமெல்லாம்செய்யவல்லேன்; உனக்கென்றுமொருதுரும்பு நறுக்குகைக்கு சக்தியில்லை. ஒன்றுஞ் செய்யவேண்டாதபடி நிரபேக்ஷனாயிருந்தாய்நீ; ஒன்றுஞ் செய்கைக்குச்சக்தியின்றிக்கேயிருந்தேன் நான். உனக்கென்றுமெல்லாஞ்செய்யவல்லையாகில் நமக்கென்றுமொன்றுஞ் செய்யமாட்டாயாகில், ஆனுலினி நம்மைச் செய்யச்சொல்லுகிறதென்னென்ன [కృపామాత్రమనోవృత్తిః - க்ருபாமாத்ரமநோவ்ருத்திః] இனி க்ருபைபண்ணவேண்டியிருந்தது; அது தனக்கநுதாபம்வேணும்; க்ருபைக்குப் பரிகரமான அநுதாபமென்பக்கலின்றிக்கே யிருந்தது. இனி இவ்வநுதாபத்தால் கொள்ளுங்கார்யத்தையும் க்ருபையையே கொண்டு கொள்ளப்பார்த்தருளவேணும் (உ) [బలిభుజి శిశుపాలే - பலிபுஜிசிசுபாலே இத்யாதி.] காகமானல் (ங) "సతం నిపతితమ్ - ஸதம்நிபதிதம்" என்று ஆர்த்தியோடே பூமியிலேவந்து விழுந்தமையுண்டு. சிசுபாலனுல் திருநாமங்களைச் சொல்லி த்வங்கரித்தமையுண்டு; இப்படி யவர்கள் பக்கலிலே அல்பகுணமாரோபிக்கையாலே அவர்கள் பக்கல் உன்னுடைய க்ருபைமுடங்க பட்டது. என்பக்கலங்ஙன்பழியிடலாவதொன்றில்லாமையாலே உன் க்ருபைக்குத்தான்நினைத்தபடி யழகுசெண்டேறலாமிறே என்பக்கல்,

(விடுத்ததிருவருளால்) அவர்தந்தவருளாலே. இத்தலையிலுள்ளதொன்றும் பாராதே தம்பேறாக அவர்பண்ணினவருளாலே. (விடுத்த) - வாவிட்ட - தந்த. (உயலிடம் பெற்றுய்ந்தம்) "இவனுக்கு

அரு|| என்று. "நஞ்சுசோர்வதோர்" என்கையாலே - (கையிலுள்ளது ப்ராதிகூல்யத்துக்குப் பரிகரமாயிருக்க) என்றருளிச்செய்தார். "சரண்" என்கையாலே ஸாமர்த்யமுமில்லை யென்கையால், என்னுடைய வ்யாபாரங்களிலே சக்தனல்லெனென்று தோற்றுகிறது. அப்படி யநுதாபமின்றிக்கேயிருந்தவர்களையும் ரக்ஷிக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (பலிபுஜிசிசுபாலே இத்யாதி) என்று. இந்த க்ரந்தத்துக்குப்பொருள் (காகமானல்) என்று. "కృపామాత్రమనోవృత్తిః - க்ருபாமாத்ரமநோவ்ருத்திః" என்கிற ஶ்லோகமேதஞ்சமென்றபடி.

(க) திருமொழி - ரு - அ - ச. (உ) ஸ்ரீரங்கராஜஸ்தவம்-உ-கூஎ.
(ங) ஸ்ரீராமா. ஸுந்தர. ஙஅ - ஙச.

வ்யா|| ஜீவிக்கைக்கோரவகாசமில்லை;இவளுஜ்ஜீவித்தாளாகக்காணமாட்டோம்"என்றிறேதோழியிருந்தது.உஜ்ஜீவிக்கைக்கோரவகாசமுண்டாயிற்று. அது தான் மேல்வரக்கடவதென்று பார்த்திருக்கையன்றிக்கே, பெற்றுய்வதும்செய்தோம். அவன் ஸ்வபாவத்தைத் தோழியறிந்திருக்கையாலே"அவனையுமிழந்தோம்,இவளையுமிழந்தோம்" என்றிறேயிருந்தாள்; எல்லாருமுஜ்ஜீவித்தோங்காண்.(அஞ்சல்) அஞ்சாதேகொள். (அம்தோழி) என்னுடையபேறேயுனக்குப்பேறாக இருக்குமவளிறே நீ. (க) "ஏகம் து:கம் ஸுகம் சநௌ - ஏகம்து: கம்ஸுகஞ்சநௌ" என்கிறபடியே "தோழி"என்றபோதே இவ்வளவில்லையோ? "அந்தோழி" என்றதால் பெற்றதென்னென்னில், தந்தாம் ப்ரயோஜநமுமித்தலையில் ப்ரயோஜநமும் வேண்டியிருப்பாருமுண்டு; ஸ்வப்ரயோஜநத்தைப்பாராதே இத்தலையில் ப்ரயோஜநமே ப்ரயோஜநமாயிருக்கை "அம்" என்கிறவிசேஷணத்தால். (உ) "ஸுஹ்ருத்வாம்ஷ்வத்விதா: ஸுஹ்ருதோவாபயத்விதா:" என்னக்கடவதிறே. நம்மைக்கண்ட காட்சியிலே ஜ்யேஷ்டனை எதிரியாக்கி அவனினும் நம்மையந்தரங்கராக்கிக்கார்யங்கொள்ளுந்தனை ஸௌஹார்த்தமுள்ளது உமக்கேகாணுமென்கிறார். என்னுடையபேறே யுனக்குப்பேறாய், என்னுடைய இழவேயுனக்கிழவென்றிருக்கையாலே என்னுடைய விழவை நினைத்தஞ்சுகிறியிறே; இனியஞ்சாதேகொள்.

(ஓர் தண்தென்றல்வந்து) தென்றலெல்லாம் பாதகமாயேயிறே யிதுக்கு முன்போந்தது. இப்போது குளிர்ந்ததொருதென்றல் வந்ததென்கிறாள். தென்றல் குளிருவது ஸம்ஶ்லேஷம் வ்ருத்தமானாலிறே. ஸம்ஶ்லேஷம் வ்ருத்தமென்னுமிடத்தை அக்ராம்யமாகச்சொல்லுகிறாள். அவளுமதத்தை ஸங்கேத ப்ரக்ரியையாலேயறிந்து அயலறியிற் செய்வதென்னென்று துணுக்கென்ன, (அயலிடையாருமறிந்திலர்) அயலிடத்தொருவருமறிந்தாரில்லை யென்கிறாள்.

அரு|| "உய்ந்தம்" என்கிற பஹுவசநத்தாலே ஸர்வேஶ்வரனும் நானுமுஜ்ஜீவித்தோமென்றபடி. (எல்லாரும்) என்றது - ஸர்வேஶ்வரனுந் தானுமென்றபடி, (இவ்வளவில்லையோ) என்றது - இவளுடையபேறே தன் பேறாக இருக்கிறபடியைச் சொல்லாதோவென்றபடி. இப்படி யிருக்கிறவர்களுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (ஸுஹ்ருதோவாபயத்விதா: என்னக்கடவதிறே) என்று. இதுக்குத்தாத்பர்யமருளிச்செய்கிறார் (நம்மைக் கண்ட காட்சியிலே)என்று. இந்த ஶ்லோகம் மஹாராஜரைக் குறித்துப்பெருமாளருளிச்செய்தது.

(ஸங்கேதப்ரக்ரியையாலே) என்றது - ஸம்ஜ்ஞைகளாலே என்றபடி.

(க) ஸ்ரீராமா - கிஷ்கி. ௫-௧௮. (உ) ஸ்ரீராமா - யுத்த. ௧௮-௩௩.

வ்யா|| மேற்செய்ததென்னென்றுகேட்க, (அம்பூந்துழாயினின்தேன்) அழகிய பூந்தாரையுடைய திருத்துழாயினினியதேன் துளிகளை. (புயலுடை நீர்மையினால்) குளிர்ந்த மேகத்தினுடைய ஸ்வபாவத்தாலே, ஒருவராபேக்ஷியாதிருக்கவுந் தூபகரித்தபடிக்குச்சொல்லுகிறது. (தடவிற்றென் புலன்கலனே) புலன்களையும் கலன்களையும், - எல்லாவிந்த்ரியங்களையும், எல்லாவாபரணங்களையும். இந்த்ரியங்கள் விடாய்தீரவும் ஆபரணங்கள் கழலாதபடியும் தடவிற்றுப்போலேகாணும். இத்தால் ஸம்ஶ்லேஷம் வ்ருத்தமானபடியைத் தோழிக்குச்சொன்னபடியிறே.

ஸ்வாபதேசம். குணஜ்ஞானத்தாலே தரித்தபடியைச் சொன்னபடி. (க) "ఆనన్దం బ్రహ్మణో విద్వాన్ న బిభేతి కుతశ్చన- ஆநந்தம்ப்ரஹ்மணோ வித்வாந்நபிபேதிகுதச்சந." ருசா.

அரு|| [வியலிடமுண்ட பிரானார் விடுத்த திருவருளாலுயலிடம் பெற்றுய்ந்தம் அம்தோழியஞ்சல், பயப்படாமைக்கு ஹேதுவேதென்ன, புயலுடை நீர்மையினாலோர் தண்தென்றல்வந்து அம்பூந்துழாயினின் தேனைக்கொண்டுபுலன்கலன்தடவிற்று] என்றந்வயம். "మూఢో యమల్పమతిరల్పవిచేష్టితో యం క్లిష్టం మనో స్య విషయైరనుప్రసక్తి। ఇత్థం కృపాం కురు మయి ప్రణతేఖిలేశ త్వాం స్తోతుమప్యజభవోపి హి దేవ నేశః॥ மூடோயமல்பமதிரல்பவிசேஷ்டிதோயம் க்லிஷ்டம்மநோஸ்யவிஷயைரநுப்ரஸங்கி| இத்தம்க்ருபாம்குருமயி ப்ரணதேகிலேச த்வாம்ஸ்தோதுமப்யஜபவோபிஹிதேவநேச:" "బలిభుజి శిశుపాలే తాదృగాగస్కృతే వా గుణలవసహవాసాత్ త్వత్క్షమా సఙ్కుచన్తీ। మయి గుణపరమాణావత్ర చిన్త్యా న భిక్షే విహరతు వరదా సౌ సర్వతాసార్వభౌమీ- பலிபுஜி சிசுபாலேதாத்ருகாகஸ்கரேவா குணலவஸஹவாஸாத் த்வத்க்ஷமாஸங்குசந்தீ| மயிகுணபரமாணாதந்தசிந்தாநபிக்ஷே விஹரது வரதாஸௌஸர்வதாஸார்வபௌமீ" "నసర్వే భ్రాతరస్తాత భవన్తి భరతోపమాః। మద్విధా వా పితుః పుత్రాః సుహృదో వా భవద్విధాః- நஸர்வேப்ராதரஸ்தாதபவந்திபரதோபமா:| மத்விதாவாபிது: புத்ராஸ்ஸுஹ்ருதோவாபவத்விதா:" ருசா.

[அப்பு அரும்பதம்.]

ஐம்பத்தாறும் பாட்டு.—(வியலிடம்) அங்கு பூமிக்கெல்லாம் வரக்கொள்ளச்செய்தான்; இங்கத்தனையில்லையேயென்ன அருளிச்செய்கிறார் (அப்போது) இத்யாதி. அவனருள்ஸஹகாரியை யபேக்ஷித்திராதென்னுமதுக்கு ஸம்வாதமாக அருளிச்செய்கிறார் (எம்பெருமானார்) இத்யாதி. எம்பெருமானார் கோஷ்டியிலே அவர்பராக்காயிருக்க முதலிகள் தங்களிலே உஜ்ஜீவநஹேதுவேதென்று விசாரியாநிற்க, நம்பியருளிச்செய்த ஶ்லோகத்தைப்பூர்வபக்ஷித்துக்காளியன் சொன்ன ஶ்லோகத்தை ஸித்தாந்திக்கைக்காக எம்பெருமானாருக்கு விரோதமருளிச்செய்கிறார் (அதொண்ணாது காண்) இத்யாதி. ஆனால் ப்ரமாணம் வேண்டாவோவென்ன அருளிச்செய்கிறார் (நந்தலையில்)

(க) தைத்திரீயம். ஆநந்த - க.

இத்யாதி. ஆனாலுமாபிமுக்யாதிகள் வேண்டியன்றோவிருப்பதென்ன அருளிச்செய்கிறார் (இத்தலையாலே) இத்யாதி. அப்ரதிஷேதத்திலே புகுமென்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன வருளிச்செய்கிறார் (நீயுபாயம்) இத்யாதி ஸ்வீகாரத்தையும் தள்ளி யவனை உபாயமாகவேண்டுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (இவன்பக்கலிலே) இத்யாதி. ப்ராதிகூல்ய நிவ்ருத்தியில்லையாகச்சொல்லியிருக்க இங்குண்டென்னக்கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (க்ருபைபண்ண) இத்யாதி. உக்திமாத்ரத்திலே ரக்ஷித்தவிடமுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (நஞ்சு சோர்வதோர்) இத்யாதி. ப்ராதிகூல்யம்-நஞ்சு அநுதாபமின்றியிலேயிருக்க க்ருபைபண்ணவேணுமென்றபேருண்டோவென்ன அருளிச்செய்கிறார் (பலிபுஜிசுபாலே) இத்யாதி. விடுந்து-விடுத்தவென்று வல்லொற்று. "உய்ந்தம்" என்றுபஹுவசநமாகச்சொல்லுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (அவன் ஸ்வபாவத்தை) இத்யாதி. இப்படி பாரார்த்தமாயிருந்த விடமுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (ஸஹ்ருதோவா) இத்யாதி. அக்ராம்யம்-மறைக்கை. குணஜ்ஞாநத்தாலே தரிக்கலாமோ வென்னவருளிச்செய்கிறார் (ஆநந்தம்) இத்யாதி. [புயலுடை நீர்மையினுக்கு ஓர்தண்தென்றல்வந்து அம்பூந்துழாயினின்தேன் வன்புலன்கலன் தடவிற்று அயலிடையாருமறிந்திலர், வியலிடந்தொடங்கி அந்தோழி அஞ்சல்] என்றந்வயம். ௫௬.

[வேறொரு அரும்பதம்.]

ஐம்பத்தாறாம் பாட்டு.—(வியல்) இத்யாதி. (௧) "எம்மின் முன்னவனுக்குமாய்வர்" என்று மோஹித்துக்கிடக்கிற தோழிமாரறியாதிருக்க வண்டுகள் கொண்டுவந்துசேர்க்க ப்ரவ்ருத்தமான ஸம்ஶ்லேஷரஸத்தால் குழலில் மலர் விகஸித்து மதுஸ்யந்தியாகாநிற்க அத்தைக்கண்டு கடகநாயகன் தலைமகனைக் கொண்டுநிற்க, இதொன்றுமறியாததோழி யுணர்ந்து இத்தெளிவைக்கண்டு திடுக்கிட்டு அஞ்ச, அஞ்சாதபடி பிறந்த ஸம்ஶ்லேஷத்தை வெளிப்பித்து அவளைத்தெளியப்பண்ணுகிறாள் என்று ஸங்கதியுட்கொண்டு அவதாரிகையருளிச்செய்கிறார் (கலந்து) இத்யாதி. "இதுவாய்" என்றது - விரஹதசையிலேதேறியிருக்குமளவாயிருந்ததென்றபடி. (ஜீவிக்கையென்றொருபொருளில்லை). "நோய்க்காடேறுது" என்கிற லோகந்யாயத்தாலே. (யாத்ருச்சிகமாக) என்றது - தான் தூதுவிட்டது ஹேதுவாக நினையாமையாலே. பதாவதாரிகை யருளிச்செய்கிறார் (இது) இத்யாதி. ப்ரஸ்நத்துக் குத்தரமாம்படி தாத்பர்யமருளிச்செய்கிறார் (ப்ரளயத்தில்) இத்யாதி. ராத்ரிவ்யஸநாதிகளிலே நோவுபட்டிருக்க வாராதவன் யாத்ருச்சிகமாக வந்தானென்றால் புதுமையாயிருந்ததேயென்ன (ஆபத்தை) இத்யாதி. (௨) "தாயோதரனுண்டு முடிழ்ந்துங் கடாய மண்ணோரன்ன" என்ற பாசுரத்தையுட்கொண்டு அந்தவாபத்திவனுக்குண்டென்கிறார் (அப்போது) இத்யாதி. பாத்ரமாக. - விஷயமாக.

(௧) திருவாய் - ௯ - ௯ - ௫. (௨) திருவிருத்தம் - ௯௧.

து:காகுலனுகையேபோருமோ? ஸஹகாரிவேண்டாவோவென்ன (அவர்) இத்யாதி. அவராருள் ஸஹகாரியை அபேக்ஷியாதிருக்குமென்னுமதுக்கு ஐதிஹ்யமருளிச்செய்கிறார் (எம்பெருமானார்) இத்யாதி. எம்பெருமானார் கோஷ்டியிலே பராக்காயிருக்கும்போது முதலிகள் தங்களிலே தஞ்சமேதென்று விசாரிக்கும்போது, நம்பி ஒரு ஶ்லோகமருளிச்செய்ய, “இதில் ப்ரக்ருஷ்டமானநதியைப்பண்ணவேணு மென்றிருந்ததே, அதுவுமிவனால் செய்துமுடிக்கப்போகாது, காளியன் சொன்னாற்போலே அவன் க்ருபையொழிய நமக்கொன்றுமில்லை யென்றிருக்கையேஸித்தாந்தம்” என்றெம்பெருமானாருளிச்செய்தார் என்று தாத்பர்யம். காளியன்சொன்ன ஶ்லோகத்துக் கர்த்தமருளிச்செய்கிறார்(ஸோஹம்)இத்யாதி. உக்திமாத்ரத்திலே ப்ராதிகூல்ய நிவ்ருத்தியுண்டாய் ரக்ஷித்த விடமுண்டோவென்ன ஸாமுகன் வ்ருத்தாந்தத்தை அருளிச்செய்கிறார் (நஞ்சு) இத்யாதி. பாசுரார்த்தம்(கை) இத்யாதி. (பொழ்க்கன்) க்ருதக்ரியன். (சக்ரு)-பெரிய திருவடி. “ அர்ச்சநாதௌ” என்றதுக்கு வ்யாவர்த்ய பூர்வகம் பாவம் (உனக்கென்றால்) இத்யாதி. மாத்ரபதத்துக்கு வ்யாவர்த்யம் காட்டுகிறார் (அது தனக்கு) இத்யாதி. அநுதாபமின்றியிலேயிருக்கும்போதும் க்ருபைபண்ணவேணுமென்ற பேருண்டோவென்ன வருளிச்செய்கிறார் (பலிபுஜி) இத்யாதி. அருளுக்குத்திருவேதென்னவருளிச்செய்கிறார் (இத்தலை) இத்யாதி. “ விடுத்த ” என்று வல்லொற்று மெல்லொற்றாயிருக்குமென்று காட்டுகிறார் (விடுத்த) இத்யாதி. “ உய்ந்தம் ” என்ற பூதநிர்த்தேசதாத்பர்யம் (அது தான்) இத்யாதி. பஹுவசநதாத்பர்யம் (அவன்) இத்யாதி. “ ஜ்யேஷ்டனை ” வாலியை, “ அக்ராம்யமாக ” மறைத்தென்றபடி. மேகஸ்வபாவந் தன்னை யருளிச்செய்கிறார் (ஒருவர்) இத்யாதி, ஸ்வாபதேசம் (குண) இத்யாதி. ௫௬.

தாத்பர்யம்.—நாயகியனுப்பின தூதர்சென்று நாயகனைக்கொண்டு வந்து சேர்க்கச்சேர்ந்தமையையு மறியாமல் அதற்கு முன்னமே மோஹித்துக்கிடந்ததோழி, மோஹம் தெளிந்தெழுந்திருந்து முன்புள்ள நாயகியின் வ்யஸநத்தையே நினைத்து வ்யஸநப்படத்தொடங்க, அத்தோழியைக்குறித்து நாயகி தனக்குநாயகனோடுண்டான ஸம்ஶ்லேஷத்தை யறிவித்துத்தேற்றுகிறாள்.

ஓதோழி! நீயென் விரஹபாதையை நினைத்து வ்யஸநப்படவேண்டா; ப்ரளயத்தில் ஆபந்நயான பூமியைத்தன் வயிற்றில்வைத்து ரக்ஷித்தாற்போல் தம்மஹோபகாரகர்வந்து என்வ்யதைதீரும்படி யருளினானாகையால் அந்நாயகனும் நானும்முன்புள்ள ஸங்கடம் தீர்த்துபிழைத்தோமானோம். முன் பாதகமானதென்றலும் இப்போது அவனணிந்ததிருத்துழாயின் தேனைக்கொண்டுவந்து என்மேல் வர்ஷித்து என்தாபமெல்லாமாறும்படி என்னுடைய ஸகலேந்த்ரியங்களையும் ஸமஸ்தாபரணங்களையும் தடவிக்கொடுத்துக்களிப்பைவிளைத்தது. அவனருளினபடியை மற்றொருவருமறியார்கள், நீலோகாபவாதத்திற்கும் பயப்படவேண்டா வென்கிறாள். ௫௭.

புலக்குண்டலப்புண்டரீகத்தபோர்க்கெண்டை, வல்லியொன்றால்
விலக்குண்டுலாகின்றுவேல்விழிக்கின்றன, கண்ணன்கையால
மலக்குண்டமுதம்சுரந்தமறிகடல்போன்றவற்றால்
கலக்குண்டநான்றுகண்டார், எம்மையாருங்கழறலரே.　　ருஎ

அர்த்தம்.—புலம் - காணப்படுகிற, (விளங்காநின்ற), குண்டலம் - குண்டலங்களையுடைய, புண்டரீகத்த - தாமரைப்பூப்போன்ற முகத்திலுள்ள, போர் - யுத்தம் செய்கிற, கெண்டை - கண்களாகிற மத்ஸ்யங்களானவை, வல்லி ஒன்றால் - மூக்காகிறகொடியொன்றினால், விலக்குண்டு - விலக்கப்பட்டு, உலாகின்று - ஸஞ்சரியாநின்றுகொண்டு, வேல்-வேலாயுதம்போலே க்ரூரமாய், விழிக்கின்றன - பாராநின்றன. அவற்றால் - அச்செயல்களால், கண்ணன் - ஸ்ரீக்ருஷ்ணனுடைய, கையால் - ஸ்ரீஹஸ்தத்தினால், மலக்குண்டு - கலக்கப்பட்டு, அமுதம் - அம்ருதத்தை, சுரந்த - வெளிப்படுத்தின, மறி - அலையெறிகிற, கடல்போன்று - ஸமுத்ரம்போலே, கலக்குண்ட - வ்யாகுலம் செய்யப்பட்ட, நான்று - அக்காலத்திலே, கண்டார் - பார்த்தவர்கள், யாரும்-எவரும், எம்மை - என்னை, கழறலர்-நிர்ப்பந்தியார்கள்.　　ருஎ.

## [பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—ஐம்பத்தேழாம் பாட்டு.—ஸம்ஶ்லேஷித்து விஶ்லேஷமும் வ்ருத்தமாயிற்று. ஒரு கார்யபுத்யாபிரிந்தானேயாகிலும் (க) "நஜீவேயம் க்ஷணமபி - நஜீவேயம் க்ஷணமபி" என்னும்படியிறே தலைமகளுற்றாமையிருப்பது; அவனுடைய வாற்றாமையால் வந்ததளர்த்தியைக்கண்ட பாங்கனானவன், "லோகயாத்ரையிலொன்றுக்கீடுபடாத நீ ஒரு விஷயத்துக்காக இப்பாடுபடுமது தலைமைக்குப்போராதுகாண்" என்று திருத்தப்பார்க்க, "அவளுடையநோக்குக்கிலக்கானார் படுமதறியாமைகாண் நீ இப்படி சொல்லுகிறது; நீயுமவள்நோக்குக்கிலக்கானாயாகில் இப்படிசொல்லாய் காண்" என்று அவன் கழறினத்தை மறுத்து வார்த்தைசொல்லுகிறான். கழற்றெதிர் மறுத்தலென்று கிளவி.

வ்யா.—(புலக்குண்டல இத்யாதி) கெட்டேன், இவன் செய்வதென்னென்று அவன் புத்தியிலேபடுகைக்காக அவைதன்னைப்பேசுகிறான்

---

அரு || ஐம்பத்தேழாம்பாட்டு.—(புலக்குண்டல) பாங்கன் - தோழன். (அவன் கழறினத்தைமறுத்து வார்த்தை சொல்லுகிறான்) என்றது-அவன் சொன்னவார்த்தையை ப்ரதிக்ஷேபித்து வார்த்தை சொல்லுகிறானென்றபடி. ஒருத்தன்வேண்டாவென்று சொல்ல அத்தை ப்ரதிக்ஷேபித்து வார்த்தை சொல்லுகிறதுறை கிளவித்துறை என்றபடி.

(கெட்டேனிவன் செய்வதென்னென்று அவன் புத்தியிலே படுகைக்காக) என்றது-விஷயவைலக்ஷண்யம் படுத்தினவிவன் செய்வதென்னென்று

---

(க) ஸ்ரீராமா - ஸுந்தர - சுசு - ௪0.

வ்யா || ஸர்வேந்த்ரியாபஹாரக்ஷமமான குண்டலமுண்டு - கர்ணபூஷணம், அத்தையுடைத்தாயிருப்பதொரு தாமரைப்பூப்போலேயாயிற்று முகமிருப்பது. குண்டலமென்று வட்டணிப்பைச்சொல்வுமாம். "புல" என்றத்தைப்பொலமென்றாக்கி பொன்னாலே செய்தகுண்டலமென்றும் சொல்லுவர்கள். (புண்டரீகத்தபோர்க்கெண்டை) அத்தாமரைப்பூவின்மேலே சிலகெண்டைகள்பொருகிறாப்போலேயாயிற்றுக்கண்கள். அல்லாத அவயவங்களிற் காட்டில் காற்கட்டவற்றாயிறே முகமிருப்பது. அதில்ப்ராதாந்யமாயிறே கண்களிருப்பது. (வல்லியொன்றால்விலக்குண்டு) இரண்டு மத்தகஜங்தன்னிலேபொராநின்றால் நடுவேயொருகணையத்தைப் பொகட்டாற்போலேயாயிற்று மூக்கிருப்பது. (உலாகின்று) நடுவேயிது கிடக்கையாலே இரண்டுந் தன்னிலேவந்து கிட்டப்பெறாதே, அவ்வாசியையுமிங்கே யேறவைத்துக்கொண்டுலாவாநின்றது. ஈஶ்வரன்வைத்தமர்யாதையிற் செவ்விதாக நிற்கமாட்டாதுபோலேயிராநின்றன. (வேல்விழிக்கின்றன) வேலைவிட்டு மறுபாடுருவக்குத்தினாற்போலேயாயிற்று நோக்குக்களிருப்பது.

(கண்ணனித்யாதி) ஒருமஹாபாஹுவான க்ருஷ்ணன்கையாலே கடல்கீழ்மண்கொண்டுமேல்மண்ணெறியும்படி மறுகக்கடையுண்டு தன் ஸஞ்ஜீவனமான அம்ருதத்தைக்காட்டிக்கொடுத்த கிளர்ந்தகடல்போலேயாயிற்று இவன் காம்பீர்யமடைய விழுந்து நின்றபடி. "மறிகடல்போன்று" என்னுதல் "மறிகடல்போன்றவற்றால்" என்றுகண்களுக்கு விசேஷணமாதல். அவள் நோக்கினவாறே, இவனுமெதிரே நோக்குமிறே; அந்நோக்கிலேதானீடுபட்டுத்தன்னகவாயிலீடுபாடெல்லாந் தன் கண்ணுக்குள்ளே தோற்றும்படி நின்றாளாய், அவற்றை நினைக்கிறான். (அவற்றால்) அவைதானிப்போதும் வடிம்பிடுகிறபடி. (கலக்குண்டநான்றுகண்டார்) நான்கலங்கினவன்று

---

அரு|| அந்தத்தோழன்மநஸ்ஸிலேபடுகைக்காகவென்றபடி. "பொலம்" என்று-பொன்னுக்குப்பேர். "புண்டரீகத்த"-புண்டரீகத்திலே. "புண்டரீகத்த" "கெண்டை" "வல்லி" என்றுமூன்றுவமையால் முகத்தையுங்கண்களையும் மூக்கையுஞ்சொல்லுகிறது. (விலக்குண்டு) - தகையப்பட்டு. (அவ்வாசியையும்) என்றது - மூக்குக்கவ்வருகுவர மாட்டாதவாசியையும். (இங்கே யேறவைத்துக்கொண்டு) என்றது-கர்ண பர்யந்தமென்றபடி.

(மறிகடல்போன்று) என்றது - கண்ணுக்கு விசேஷணமான பக்ஷத்தில் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவள் நோக்கினவாறே இவனும் எதிரே நோக்குமிறே) என்று. "கலக்குண்டநான்று"-கலக்கினவன்று. "நான்று" என்றது-

வ்யா || கண்டார். (எம்மை யாருங்கழறலரே) என் ப்ராக்ருதியறியும் நீயேயன்றிக்கே இத்தனைபாவபந்தமில்லாத புறம்புள்ளாருமிப்படி கழறி வார்த்தைசொல்லார்கள்.

ஸ்வாபதேசம்.—இத்தால், ஆழ்வாருடைய ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயிலேயகப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களை பகவத்விஷயத்தைக்காட்டியும்மீட்கவொண்ணாதபடிசொல்லிற்று. அவர்கள் (க) "தேவுமற்றறியேன்" என்றிருக்குமவர்கள்போலே காணும்.(உ) "ஏஷ தர்ம: பரோ மத: - பவத: பரமோமத:" என்கிறபடியே அவருகந்ததென்றிறே பின்னை பகவத்விஷயத்தை விரும்புவது. ருஎ.

அரு || அன்று என்றபடி. (என்ப்ரக்ருதியறியும் நீயேயன்றிக்கே) என்றது. என்ப்ராக்ருதியறியும் நீ சொல்லாத மாத்ரமன்றிக்கே என்றபடி. ஆகையால் நீ இப்படி சொல்லுகிறது யுக்தமன்றென்றபடி. "மறிகடல் போன்று" என்றது-நாயகனுக்கு விசேஷணமானபோது மறிகடல்போலே என்று பொருள். கண்ணுக்கு விசேஷணமானபோது மறிகடல்போலேயிருக்கிற அவற்றுலென்றுபொருள்.

[புலக்குண்டலப்புண்டரீகத்தபோர்க்கெண்டையானது வல்லியொன்றால் விலக்குண்டுலாகின்று வேல்போலே விழிக்கின்றன, இப்படியிருக்கிற வற்றாலே கண்ணன்கையால் மலக்குண்டமுதஞ் சுரந்த மறிகடல்போலே கலக்குண்ட நான்று கண்டாரெம்மை யாருங்கழறலரே] என்றந்வயம். ருஎ.

[அப்பு அரும்பதம்]

ஐம்பத்தேழாம் பாட்டு.—(புல) பிரிந்தவனுக்காற்றாமை யுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (ஒரு கார்யபுத்யா) இத்யாதி. பொருள்மேல், வினைமேல் பிரிவென்கிறகார்யபுத்தி. "பாங்கன்" தோழன். "கழற்றெதிர்மறுக்கை"-இப்படி ஈடுபடவொண்ணாதென்று சொன்னத்தை மறுக்கை. "குண்டலப்புண்டரீகம்" - வட்டணித்த தாமரையாகவுமாம், "புலன்" - இந்த்ரியமாதல், பொன்னுதல். எல்லாவவயவங்களுமிருக்க இத்தைச்சொல்லுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (அல்லாத) இத்யாதி. (செவ்விதாக)சாடு. செவ்வியிலே - வைத்தமர்யாதையிலே என்றர்த்தம். செவியளவாகவென்று த்வநி. "அவளுடைய கண்களாலே கடல்போலேயவன் கலங்கினவன்று" என்று நாயகனுக்கு விசேஷணமாதல். கடல்போலே கலங்கி பிரங்கியிருக்கிற கண்ணென்று கண்ணுக்கு விசேஷணமாதல். அப்போது கண்ணுக்குக் கடலோட்டை ஸாம்யமெப்படி யென்ன அருளிச்செய்கிறார் (அவன்நோக்கின) இத்யாதி. [புலக்குண்டலம் தொடங்கிவேல்விழிக்கின்றன அவற்றால் கண்ணன்தொடங்கி ஆருங்கழறலரே] என்றந்வயம், ருஎ.

[வேறொரு அரும்பதம்.]

ஐம்பத்தேழாம் பாட்டு.—(புல) இத்யாதி. கீழேபகவத் ஸம்ஸ்லேஷம் ப்ரவ்ருத்தமாய், அது தானும் காஷ்டாபூமியான பாகவத பர்யந்தமாயதுப

(க) கண்ணிநுண் - உ. (உ) பாரதம்-ஸஹஸ்ரநாமாத்யாயம்.

வம்சென்றதாய், அநந்தரம் அந்தபாகவதனான நாயகன் கலந்து பிரிந்து நோவுபட, பார்ஶ்வஸ்த்தரான ஶ்ரீவைஷ்ணவர்கள் சொல்லி ப்ராவண்யத்தை அடக்கப்பார்க்க, “ஆழ்வாருடைய ஜ்ஞாநவைபவத்தில் ஈடுபட்டாலிப்படி சொல்லாய்” என்று சொல்லும் வழியாலே, தம்முடைய ஜ்ஞாநவிசேஷத்தை வெளியிடுகிறாரென்று ஸங்கதியுட்கொண்டு அந்யாபதேசத்தை அருளிச்செய்கிறார் (ஸம்ஶ்லேஷித்து) இத்யாதி. “ஸம்ஶ்லேஷித்து” என்றது - பாகவதராகிற நாயகர் ஸம்ஶ்லேஷித்தென்றபடி. “கார்யபுத்யா” என்றது - அவருக்கு விஷயமன்றோவென்று பகவத்விஷயத்தில் கைங்கர்யமாகிற புத்யாவென்றபடி. “பாங்கன்” - தோழன். துறையருளிச்செய்கிறார் (கழற்றெதிர்) இத்யாதி. “கழறினனுக்கெதிராகப்புரிந்துசொல்லுவது” என்கிற தமிழர் துறையென்றபடி. புலப்பட்ட குண்டலமென்று சப்தார்த்தம். பாவமருளிச்செய்கிறார் (ஸர்வ) இத்யாதி. “புண்டரீகத்த” என்று-மூற்றுவமையாலே முகத்தைச்சொல்லுமென்கிறார் (அத்தைத்) இத்யாதி. “பொல” என்றுக்கி - பொலவென்று பாடமாக்கி, வல்லியாலென்னுதே “ஒன்றால்” என்றத்தால் வந்த உந்நஸத்வத்தை அருளிச்செய்கிறார், (இரண்டு) இத்யாதி. “அவ்வாசியையும்” நாஸாஸேத்வதிக்ரமணம் பண்ணலாகாதென்கிற விசேஷத்தையும். “இங்கேயேற” - புலக்குண்டலங்களிருந்த விடத்திலேயாம்படி. (செவ்விதாக) சாடு. செவ்வையாக - கோணமலென்றும், செவியளவாகவென்றும். “இவன்” இந்த ஶ்ரீவைஷ்ணவனாகிற நாயகன். “அவற்றால்” என்ற அநுவாதத்துக்கு பாவமருளிச்செய்கிறார் (அவை) இத்யாதிவாக்யத்வயத்தாலே, “ஶ்ரீவைஷ்ணவஶ்ரீ” - ஜ்ஞாநவைபவம். மற்றறியார்களாகில் கார்யபுத்யாபிரிகைக்கு ப்ரஸக்தியென்னென்ன வருளிச்செய்கிறார் (பகவத்) இத்யாதி. ௫௭.

தாத்பர்யம் — கீழ்நாயகியுடன் ஸம்ஶ்லேஷித்த நாயகன் கார்யப்பாட்டாலே விஶ்லேஷித்து, அவ்விஶ்லேஷத்தை ஸஹியாமல் பாதைப்படுவதைக் கண்டு “நீ இப்படிப்படுவது யுக்தமன்று” என்று தோழனுபதேசிக்க, அவனை மறுத்து நாயகன் சொல்லுகிறான்,

ஓ தோழனே! நீ அவள் முகத்தழகையும் கண்ணழகையும் பார்த்தறியாய்; அவளுடையமுகமோ அதிஸுந்தரமாய் அதிம்ருதுவாய் பரிமளோத்தரமான தாமரைபுஷ்பம்போல் ஸர்வேந்த்ரியங்களுக்கு மாகர்ஷகமாயிருக்கும். அம்முகத்தில் கொடிபோன்ற நாஸிகையாகிற அணையையிட்டு விலக்கப்பட்டும் பரஸ்பரயுத்தோந்முகமாயுமிருக்கிற மத்ஸ்யங்கள்போன்ற இரண்டுநேத்ரங்களும் காதுகள்வரையில் நீண்டு மலர்ந்து விழிக்கும்போது வேலூன்றினாற் போலிருக்கும்; அம்ருதமெடுக்கைக்காக க்ஷீராப்தியைக்கண்ணன் மந்தரத்தையிட்டுக் கலக்கினாற்போல் இக்கண்கள் என்னை இப்போது கலக்காநின்றது. அதின் ஸ்வரூபமறிந்தவர்கள் உன்னைப்போலிப்படி என்னை நிர்ப்பந்திக்கமாட்டார்கள். ௫௮.

கழறலமொன்றேநிலமுழுதாயிற்று, ஒருகழல்போய்
நிழறரவெல்லாவிசும்புந்நிறைந்தது, நீண்டவண்டத்
துழறலர்ஞானச்சுடர்விளக்காயுயர்ந்தோரையில்லா
அழறலர்தாமரைக்கண்ணன், என்னோவிங்களக்கின்றதே. ருஅ.

அர்த்தம்.—ஒன்று - ஒற்றையான, கழல்தலமே - திருவடியே, நிலம் முழுது - பூமியடங்கலும், ஆயிற்று - வ்யாபித்தது. ஒருகழல் - மற்றொரு திருவடி, போய் - வளர்ந்து, நிழல்தர - நிழலைக்கொடுக்க, எல்லாவிசும்பும் - ஆகாசம் முழுவதும், நிறைந்தது - பூர்ணமாய் வ்யாபித்தது. நீண்ட - விசாலமான, அண்டத்து - அண்டத்தில், உழறு - சுற்றிஸஞ்சரிப்பதாய், அலர் - மலர்ந்த, ஞானம் - ஜ்ஞாநமாகிற, சுடர் - தேஜஸ்ஸையுடைய, விளக்காய் - தீபம்போலே ஸ்வயம் ப்ரகாசனாய், உயர்ந்தோரை இல்லா - தன்னைக் காட்டிலும் மேலானாரை இல்லாதவனாய், அழறு - சேற்றில், அலர் - விகஸியாநின்ற, தாமரை - தாமரஸபுஷ்பம் போன்ற, கண்ணன் - திருக்கண்களையுடைய ஸர்வேஶ்வரன், இங்கு - இவ்விடத்தில், அளக்கின்றது - அளப்பது, என்னோ - எதையோ? ருஅ.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—ஐம்பத்தெட்டாம் பாட்டு.—கீழ்ப்பிறந்தவவஸாதமெல்லாம் நீங்கும்படிக்கீடாக ஆஶ்ரிதாநாஶ்ரிதவிபாகமின்றி எல்லார் தலையிலும் பொருந்தும்படியான திருவடிகளைக் காட்டி "ஆனபின்பு நமக்காகாதாரில்லை காணும்" என்றுஶ்வஸிப்பித்து, இப்படியெல்லாம் செய்யச்செய்தேயும் ஒன்றுஞ்செய்யாதானாய் அவன் நிற்கிற படியைக்கண்டு அத்தைப்பேசுகிறார்.

வ்யா.—(கழறலமொன்றே நிலமுழுதாயிற்று) மஹாபலிபக்கலில் நின்றும் திருக்கையிலே நீர் விழுந்தபோதே ஒருதிருவடிகளே பூமிப்பரப்படங்கலும் போய் விளாக்கொலைகொண்டது. (கழறலம்)- கழல்தலம்-பாததலம். (ஒன்றே) அவன் நினைவும் வேண்டாதே திருவடிகள் தானே எங்குமொக்கப்பரந்தது. (ஒருகழலித்யாதி) மற்றையொருதிருவடிகளும்போய். (நிழறரவெல்லாவிசும்பும் நிறைந்தது) அவதரித்து மீண்டும்போய், (க) தன்னுடைச்சோதியிலே புக்காலும் அவனொருவனுளனென்று விஶ்ரம்பித்துத் தன்னிழலிலே யொதுங்கலாம்படி யாகாசாவகாசமுள்ளிட எங்கும்போய்ப் பரம்பிற்று. (நிழறர) - நிழல்தர என்றபடி. பள்ளமுள்ளவிடமெங்கும் வெள்ளம் பாயுமாபோலே வெளியுள்ள விடமெங்கும் போய் வ்யாபித்தது. (உ) [ वासुदेवतरुच्छाया - வாஸுதேவதருச்சாயா ]

அரு ‖ ஐம்பத் தெட்டாம்பாட்டு.—(கழறலம்) "நிழறர" நிழல்தருகைக்காக, எல்லார்க்கு மொதுங்கும்படி நிழலாயிருக்கு மென்கைக்கு ஸம்வாதமாக பலப்ரமாணங்கள் (வாஸுதேவ தருச்சாயா) என்று தொடங்கி.

(க) திருவாய் - ௩-௧0-ரு. (உ)

வ்யா||எங்குமொக்கவ்யாப்தமாயிருப்பதொரு வ்ருக்ஷத்தினுடையநிழலாயிற்று [నాతిశీతా-நாதிசீதா இத்யாதி] மிக வெப்பதும் செய்யாது, மிகவவ்வலிடுவதுஞ்செய்யாது, நரகமாகிற பெருநெருப்பையும் விலக்கவற்று. [సాకిమర్థంన సేవ్యతే-ஸாகிமர்த்தம் நஸேவ்யதே [இந்நிழலுக்குப் புறம்பாயிருப்பதொரு நிழலுண்டாய் அங்கேயொதுங்கவோ? இது நன்றல்லவென்னவோ? இதினுள்ளேயிருந்தே அநிச்சையைச் சொல்லுமிந்தநிலை. (௧) "திருமாலிருஞ்சோலையெந்தாய்—உன்பாத நிழலல்லால் மற்றோரிருப்பிடம் நானெங்குங்காண்கின்றிலேன்" ஆஸ்ரிதரக்ஷகனுமாய், ஆஸ்ரிதவிரோதி நிரஸநகனுமாயிருக்கையாலே உன் திருவடிகளின் நிழலொழிய வேறெனக்கொதுங்கலாவதொரு நிழல் கண்டிலேன். (௨) "నివాసవృక్షస్సాధూనామ్-நிவாஸவ்ருக்ஷஸ்ஸாதூநாம்" வாலிக்கு "ஸுக்ரீவனோடு நீவிரோதிக்கை கார்யமல்லகாண். அங்கதப்பெருமாள் காட்டிலே விளையாடப்போனவிடத்திலே, அவனுக்கோரபாஸ்ரயமுண்டாகக் கேட்டுவந்து சொன்னான் காண்" என்ன, "அபாஸ்ரயமாகிறவர்தாமார்" என்ன, "பெருமாள்" என்றாள். "ஆனால் அவர் பின்னை நமக்கபாஸ்ரயமாக மாட்டாரோ?" என்னச்சொல்லுகிறாள். [నివాసవృక్షస్సాధూనామ్-நிவாஸவ்ருக்ஷஸ்ஸாதூநாம்] இந்நிழலிலேயொதுங்குவோமென்பார்க்கு நிழலாய் காணிருப்பது. பூவாயும் பழமாயும் நிழலாயும் தான் வெய்யிலைச்சுமந்தும் பிறர்க்கு இடங்கொடுத்தும் தன் கீழேயிருந்து தன்னை யழியச்செய்ய நினைப்பார்க்கு பலப்ரதமாயும் இவையெல்லாமுண்டிறேயிதுக்கு; "நான் தானவர்க்கே தேனிமநிஷ்டமுண்டோ? செய்தது; நமக்கொதுங்க நிழலாகத்தட்டென்" என்ன [ఆపన్నానామ్ - ஆபந்நாநாம்] ஒதுங்கோமென்னுமைபோராதுகாண். ஆபந்நராகவும் வேணுங்காண், "நான் தானுபந்நனன்றோ; உடன்பிறந்தவன் சத்ருவாம்படியன்றோ நம்முடையநிலை" என்ன [ఆర్తానామ్-ஆர்தாநாம்] ஆபந்நராயிருக்கவேயமையாதுகாண்; ஆபத்தை யிசையவும்வேணுங் காண். நமக்கொருரக்ஷகன் வேணுமென்றிருக்கவேணுங்காணென்ன. "இவரவனுக்கே புகலாய் நின்றானாகில் நமக்குமிப்படியிருப்பானொரு அபாஸ்ரயத்தைத் தேடிக்கொள்ளுகிறோம்" என்ன [యశసశ్చైకభాజనమ్ - யசஸச்சைகபாஜநம்] இனி இங்ஙனிருப்பதொரு நிழலில்லை கா

அரு||(நிவாஸவ்ருக்ஷஸ்ஸாதூநாம்) என்றது—தாராவாலியைக்குறித்துச்சொல்லுகிற வார்த்தை. (ஒதுங்கோமென்னுமை) என்றது - ஒதுங்கவில்லையென்று சொல்லாமைபோராதென்றபடி. அதவா-ஒதுங்குவோமென்றமாத்ரம்போரா

(௧) பெரியாழ்வார் திரு - ௫-௩-௪. (௨) ஸ்ரீராமா-கிஷ்கிந்தா-௧௫-௧௯.

வ்யா||ணைதுங்க. நாலுவகையாலே மூன்றதிகாரிகளை ஸ்ரீகீதையிலே சொல்லிற்றிறே. அவர்களைச்சொல்லுகிறதிதில், ஒருஸ்த்ரீ வசநமாயிருக்கவிதுக்கு இத்தனை கருத்துண்டாகவற்றோவென்னில், (க) வேதோபப்ருஹ்மணார்த்தமாகப்ரவ்ருத்தமான ப்ரபந்தமாகையாலே, கோல்விழுக்காட்டாலேயவைவயும்ஸம்பவிக்குமிறே. (உ) "ఏకభక్తిర్విశిష్యతే-ஏகபக்திர்விசிஷ்யதே" என்கிறஜ்ஞாநியைச் சொல்லுகிறதாய், முந்துற ஸம்ஸாரத்திலே நொந்து ப்ராக்ருதிஸம்பந்தத்தை யறுத்துக்கொள்ள வேணுமென்றிருக்கிற ஆத்மப்ராப்திகாமனையாய் அநந்தரம் ப்ரஷ்டைஸ்வர்யகாமனையாய் இது ப்ரதமமாக ஐஸ்வர்யத்தைப்பெறவிருக்குமவனுக்கு முபலக்ஷணமாயிருக்கிறது.

(நீண்டவித்யாதி) பரப்பையுடைத்தான அண்டத்தையடையப் புக்குழறுகையாலே விகஸிதமாயிருந்துள்ளஜ்ஞாநமாகிற ப்ரகாசரூபமாகிற தீபத்தையுடையனாய், எல்லார்தலைமேலேயும் திருவடிகளை வைத்து, இதுதன்பேறாய், அத்தால்வந்த அலப்யலாபத்தாலே ஸஹஜஸார்வஜ்ஞமும் விகஸிதமாயிற்று, (உயர்ந்தோரையில்லா) ப்ரஹ்மாதிகளும் திருவடிகளின்கீழேயகப்படுகையாலே "நான்" என்பாரில்லையாயிற்றே. (அழறலர்தாமரைக்கண்ணன்) அழற்றிலே நின்றலர்ந்த தாமரைப்பூப்போலே யிருந்துள்ள திருக்கண்களையுடையவன். (௩) "తస్యయథాకప్యాసం పుణ్డరీకమేవమక్షిణీ - தஸ்யயதாகப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ" என்னக்கடவதிறே. (என்னோவிங்களக்கின்றதே) அளந்தால் வரும் விகாஸங்காணநின்றோமிறே. அளக்கைக்கோரவகாசம் காண்கிறிலோம், நின்றநிலையிலே நின்றானை "அளந்தார்" என்ன வொண்ணாதிறே. அடியாறியிடிலிறேயளந்ததாவது.

அரு||தென்றபடி, தாத்பர்யாந்தரமருளிச்செய்கிறார் (நாலுவகையாலே) என்று, (நாலுவகையாலே மூன்று அதிகாரிகளை) என்றது- ஆர்த்தனையும் அர்த்தார்த்தியையும் ஒன்றாகக்கூட்டி மூன்றதிகாரிகளாகச் சொன்னவர்களையென்றபடி. (ஒருஸ்த்ரீவசநமாயிருக்கிற) என்று - தாரையைச்சொல்லுகிறது. "ஸாதூநாம்" என்று - ஜ்ஞாநியைச்சொல்லுகிறது; "ஆபந்நாநாம்" என்று - கேவலரை; "ஆர்த்தாநாம்" என்று-த்விவிதமான ஐஶ்வர்யார்த்திகளைச் சொல்லுகிறது.

"என்னோ விங்களக்கின்றது" என்றதுக்கு இரண்டுபொருள், அதாவது.— அங்களந்தாற்போலே இங்களக்கைக்கு விஷயமுண்டோவென்னுதல்; இத்தால், அங்கு திருவுலகளந்தவற்றால் வந்த ஹர்ஷந்தோற்றவிருந்தாற்போலே இங்கப்படியளக்கைக்கு விஷயமின்றிக்கே யிருக்கச்செய்தேயும் அந்தஹர்ஷந்தோற்ற நின்றான், ஒருவன் வாத்ஸல்யமிருந்தபடியென்

(க) ஸ்ரீராமா. பால. ௬. ௯.  (உ) கீதை - எ - கஎ.
(௩) சாந்தோக்யம் - க - ௬ - எ.

வ்யா|| இவனிங்களந்தானாக ஒன்றுங்காண்கிறிலோ மீயென்னுதல்! அன்றிக்கே, நிர்ஹேதுகமாக எல்லார்தலையிலும் திருவடிகளைவைக்கச் செய்தே ஒன்றும்செய்யாதாற்போலே இன்னமும் பாரியாநின்றான்; என்செய்யாதானாய்த்தான் திருவுள்ளத்தாலிங்ஙன்பாரிக்கிறது. (என்னோவிங்களக்கின்றதே). கால்பெருத்துப் பொலிசிறுத்தாலு மளப்பாருண்டோ? ௫௮.

---

அரு|| னென்று ஈடுபடுகிறாரென்றதாயிற்று. அதவா-இங்களக்கின்றதென்னோ-எதானாலுமுண்டோவென்று; எல்லார் தலையிலும் திருவடிகளைவைக்கச்செய்தே ஒன்றும்செய்யாதாரைப்போலே இன்னமும் பாரியாநின்றானென்னுதல். (கால் பெருத்துப்பொலிசிறுத்தாலும்) என்றது - மரக்கால்பெருத்து நெல் அல்பமானால் அளப்பாருண்டோ? என்றபடி. இத்தால், ரக்ஷ்யவர்க்கம் சுருங்கி ரக்ஷகன்பாரிப்பேவிஞ்சியிருக்கிறதென்றபடி. அடைவேயந்வயம். "కోధర్మస్సర్వధర్మాణాం భవతః పరమోమతః । కింజపన్ముచ్యతేజన్తు ర్జన్మసంసారబన్ధనాత్ - கோதர்மஸ்ஸர்வதர்மாணாம் பவதஃபரமோமதஃ | கிம்ஜபந்முச்யதேஜந்துர் ஜந்மஸம்ஸாரபந்தநாத்." ௫௮.

[அப்பு அரும்பதம்]

ஐம்பத்தெட்டாம் பாட்டு.—(கழல்) "என்னோவிங்களக்கின்றது" என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (கீழ்ப்பிறந்த) இத்யாதி. திருவடிகள் நிழலாயிருக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (வாஸுதேவ) இத்யாதிப்ரமாணத்ரயத்தாலே. இஶ்ஶ்லோகத்துக்கு வாலிவிஷயமாகத்தாரைசொன்ன வர்த்தமன்றிக்கே ஶ்ரீகீதையிலர்த்தமுமுண்டென்கிறார் (நாலுவகையால்) இத்யாதி. ஜ்ஞாநி, கேவலன், ஐஶ்வர்யார்த்தி, என்கிற மூவரையும் "ஸாதூநாம், ஆபந்நாநாம், ஆர்த்தாநாம்" என்கிற மூன்றுபதத்தாலும் சொல்லுகிறதென்றபடி. எப்போதுமுள்ள ஜ்ஞாநத்துக்கு இப்போது விகாஸமேதென்ன வருளிச்செய்கிறார் (எல்லார் தலையிலும்) இத்யாதி. "இங்கென்னோவளக்கின்றது" இங்களக்கின்றதெங்கே - அளக்கிறதாகக்காணோமே என்னுதல், இங்களந்த பின்பு இனி எத்தை யளக்கப்போகிறது, விஷயமில்லையென்னுதல். முந்தினத்தை யருளிச்செய்கிறார் (அளந்தால்) இத்யாதி. ஆழ்வாரைக் கண்ட ப்ரீதி அளந்தவன்றையில் ப்ரீதிபோலேயிருந்ததென்றபடி. இரண்டாவதை யருளிச்செய்கிறார் (அன்றிக்கே) இத்யாதி. என்னைவிஷயீகரித்தபின்பும் வேறு விஷயமுண்டோ என்றபடி. கால் - மரக்கால். ௫௮.

[வேறொரு அரும்பதம்.]

ஐம்பத்தெட்டாம் பாட்டு.—(கழறலம்) இத்யாதி. "வியலிடம்" என்கிற பாட்டில் குணஜ்ஞாநத்தாலே தரிக்கையாகிற ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாகையாலே தானான தன்மைபிறந்து அந்தகுணந்தானும் ஸௌஶீல்யமாகையாலே அத்தை இப்பாட்டிலே அருளிச்செய்கிறாரென்று ஸங்

கதி யுட்கொண்டு அவதாரிகை அருளிச்செய்கிறார் (கீழ்) இத்யாதி. "அவஸாதமெல்லாம்" என்றது - இனி யிதுக்கவ்வருகில்லை யென்னும்படி *(௧) பண்டும் பலபலவில்பட்ட வ்யஸநமென்ன, (௨) "மலைகொண்டு" என்றதில் கடலோசையால் வந்த கார்ஶ்யமென்ன, (௩) வர்ஷாகாலத்தால்வந்த க்லேசமென்ன, (௪) வாராயின முலையாளில் மோஹமென்ன, (௫) வீசும் சிறகால் ஆதப்ரேஷணமென்ன, இவையெல்லாமென்றபடி. "விளாக்கொலைகொண்டது" - வ்யாபித்தது. ஒன்றென்றால் மற்றைத் திருவடிகளை வ்யாவர்த்திக்குமே, அவதாரணத்துக்குக் கருத்தென்னென்னில், (அவன்) இத்யாதி. "நிழல்தர" என்று விசேஷித்ததால் பலிதமருளிச்செய்கிறார் (அவதரித்து) இத்யாதி. விசும்புமென்னவமைத்திருக்க, "எல்லா" என்றதுக்கு பாவம் (பள்ளம்) இத்யாதி. அவன் நிழல்தருகைக்குத் தருவாவனோ வென்ன ஸம்வாதத்ரயமெடுத்து அவற்றுக்குத் தாத்பர்யங்களை யருளிச்செய்கிறார் (வாஸுதேவ) இத்யாதி (உபலக்ஷணமாயிருக்கிறது) என்னுமளவும். தாமோதரவென்றதே, "வாஸுதேவ" என்றதுக்குபாவம். (எங்கு மொக்க) இத்யாதி. "நரகாங்காரசமநீ" என்றதுக்கு அர்த்தம் (நரக) இத்யாதி. மரமெங்குமுள்ளதாகில் "நஸேவ்யதே" என்னக்கூடாதீ என்னவருளிச்செய்கிறார் (இதினுள்ளே) இத்யாதி.(௬) "தூதுசென்றாய்" இத்யாதியையுந் திருவுள்ளம்பற்றி அர்த்தமருளிச்செய்கிறார். (ஆஶ்ரித) இத்யாதி. "வாலிக்கு" - என்றதுக்கு - "சொல்லுகிறாள்" என்றத்தோடந்வயம். வாஸவ்ருக்ஷ: என்றதே "நி" என்கிற உபஸர்க்கத்தாலே தாரக போஷகபோக்யங்களுக்கவ்வருகுபோக வொட்டாதமர மென்று தோன்றுமென்று அவற்றையருளிச்செய்கிறார் (பூவாயும்) இத்யாதி. பூ-போக்யம், பழம் - தாரகம், நிழல் - போஷகம், வ்ருக்ஷபதத்தாலே பலித்ததென்னவுமாம். "அழியச்செய்கை" - கல்லையெறிகை, தார்ஷ்டாந்திகத்தில் - நீ யெனக்குப்பிள்ளையாகவேணும், யுத்தம் பண்ணி யெங்களை ரக்ஷிக்கவேணும்" என்றாலும் தன்னையழியமாறி ரக்ஷிக்கையைச்சொல்லுகிறது. கீழ் வாக்யத்தை விவரிக்கிறார் (நமக்கு) இத்யாதி. வாலிக்குத் தாரை உபதேசித்தபுடையாக வ்யாக்யாநஞ்செய்தருளி ஶ்ரீகீதையிலர்த்தமுமிதுக்குப்பொருளாமென்று யோஜநாந்தரமருளிச்செய்கிறார் (நாலு) இத்யாதி. "உழறுகையாலே" - வ்யாபிக்கையாலே. "அழற்றிலே" - சேற்றிலே.சாடு- (கால். இத்யாதி. கால்-மரக்கால் "பொலி"-அம்பாரம். (௫௮)

தாத்பர்யம்.—கீழ்பகவத் குணநுஸந்தாநமாகிற பகவத்ஸம்ஶ்லேஷத்தைப்பெற்று ஆற்றாமைநீங்கி தாமான தன்மையிலேயிருந்து அவனுடைய சீலாதி குணங்களைப் பேசுகிறாரிப்பாட்டில்.

த்ரிவிக்ரமாவதாரத்தில் ஆஶ்ரிதரென்றும் ஆநாஶ்ரிதரென்றும் பாராதே ஸகலப்ராணிகளையுமுஜ்ஜீவிப்பிக்கைக்காக அவர்கள் தலையிலே தன்திரு

(௧) திருவிருத்தம் - ௪௧. (௨) திருவிருத்தம் - ௫௧. (௩) திருவிருத்தம்-௫௨.
(௪) ,, ௫௩. (௫) ,, ௫௪.
(௬) பெரியாழ்வார் திரு - ௫ - ௩ - ௪.

வடி படும்படி ஓர்திருவடியினால் பூமியையளந்தான். இத்திருவடி சேஷியெ ன்றும் நாம்சேஷ பூதரென்றும் எல்லாருமறிகைக்காகவும் தன்திருவடிநிழற் கீழே ஸம்ஸாரதாபார்த்தரான இவர்களை அகப்படுத்தி ஆஸ்வஸிப்பிக்கைக்கா கவும் மற்றொருதிருவடியை ஆகாசத்திலே தூக்கி அவ்வாகாசத்தையளந்தா ன். இப்படிஸர்வஜ்ஞனாய் பராத்பரனான புண்டரீகாக்ஷன், இவ்விபூதியிலே சேர்ந்த வென்னையும் முன்னமே அளந்திருக்க இப்போது அத்த்ரிவிக்ரமாவ தாரத்தை எனக்கு ப்ரகாசிப்பித்தது மறுபடியும் எதை அளக்கைக்காகவோ தெரியவில்லை. ௫அ

---

அளப்பருந்தன்மையவ்வூழியங்கங்குல், அந்தண்ணந்துழாய்க்
குளப்பெருங்காதலில்நீளியவாயுள, ஓங்குமுந்நீர்
வளப்பெருநாடன்மதுசூதனனென்னும்வல்வினையேன்
தளப்பெருநீண்முறுவல், செய்யவாயதடமுலையே. ௫௯.

அர்த்தம்.—வல்-க்ரூரமான, வினையேன் - பாபத்தையுடையளான என்னு டைய பெண்ணாய், தளம் - முல்லையரும்பு போன்ற, பெரு - பெருமையு டைய, நீள் - அபரிச்சிந்நமான (போக்யதையையுடைய), முறுவல் - மந்தஸ் மிதத்தையுடையளாய், செய்ய - சிவந்த, வாய் - அதரத்தை யுடையளாய், தடம் - பரந்த, முலை - ஸ்தநங்களை யுடையளான இவள், அளப்ப - பரிச் சேதிக்க, அரும் - அரிதான, தன்மை-ஸ்வபாவத்தையுடைய, அவ்வூழி - அப் படிப்பட்ட கல்பத்தைக் காட்டிலும், அம் - அழகிதான, (க்ரூரமான), கங் குல்-ராத்ரியானது, அம்-அழகியதாய், தண்ணம்-குளிர்ந்ததுமான, துழாய் க்கு-திருத்துழாய்க்காக, உள - (என்) ஹ்ருதயத்திலுண்டான, பெரு-அதிகமா ன, காதலில் - ஆசையைக்காட்டிலும், நீளியவாய் - பெரிதாய், உள-இருக் கின்றது, (என்னும்-என்றுசொல்லாநிற்பள்.) ஓங்கு-வ்ருத்தியடைந்திருக்கிற, முந்நீர் - மூன்றுவிதமான ஜலத்தையுடையதாய், வளம் - செழுமையையுடை யதாய், பெரு - விசாலமான, நாடன் - நாட்டையுடையவன்; மதுசூதனன் - மதுவைஸம்ஹரித்தவன்; என்னும் - என்று சொல்லாநிற்பள்.— ௫௯,

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—ஐம்பத்தொன்பதாம் பாட்டு.— எட்டாநிலத்திலே ஸ்ரீ வைகுண்டத்திலே ஓலக்கங்கொடுத்திருக்கையன்றிக்கே அவதரி த்து இங்கேவந்து ஸுலபனானானென்றவாறே தாம்பெற்றாற்போலே யிருக்க ஹ்ருஷ்டரானார்; அங்கேயிருந்திழக்கையன்றிக்கே இங்கே வந்து கிட்டச்செய்தே பெறாவிட்டவாறேஅவஸந்நரானார்; அவ்வவஸா தமொரு பிராட்டி தசையைவிளைத்தது. கலந்துபிரிந்து பிரிவாற்றா த்தலைமகள் ஸம்பந்தமுண்டாயிருக்க போகயோக்யமான காலத்தில்

---

அரு|| ஐம்பத்தொன்பதாம்பாட்டு.— (அளப்பரும்) த்ரிவிக்ரமனாயவதரி த்து இங்கேவந்து ஸுலபனானானென்றவாறேதாம் பெற்றாற்போலே யிருக் கஹ்ருஷ்டரானார் - கீழிற்பாட்டிலென்றபடி. "ஓங்குமுந்நீர் வளப்பெரு நா டன்" என்றத்தைக் கடாக்ஷித்து (ஸம்பந்தமுண்டாயிருக்க) என்றருளிச்செய்

வ்யா|| வந்துதவக் காணமையாலே யிருள் பாதகமாகாநின்றதென்று சொல்லாநின்றாள். என்று அவள்பாசுரத்தைத் திருத்தாயார் சொல்லுகிறாளா யிருக்கிறது.

வ்யா.—(அளப்பருந்தன்மை யவ்வூழியங்கங்குல்) ஊழியாகிற ராத்ரிகளானவை, அளக்கவரியத்தை யளந்தவன் திருவடிகளாலுமளக்கப்போகிறதில்லை, அளக்கலாகில்வந்து தோற்றாதோ? அளக்கவரிதாகையை ஸ்வபாவமாகவுடையன். (ஊழியங்கங்குல்) ஊழியாகிறவாகாரமேகாணும் நிரூபகமாயிருக்கிறது. ஆனால் பரிச்சேதிக்க வொண்ணாத வற்றையுமொருபாசுரமிட்டுச் சொல்லவொண்ணாதோ? வென்ன,'அந்தண்ணந்துழாயித்யாதி) (க)*அதனில்பெரியவென்னவாவிறே; இதில் பெரிதென்னு மித்தனை. பகவத்தத்வத்தை விளாக்கொலை கொண்டதிறே இவரவா. பகவதாநந்தத்தைப் பரிச்சேதிக்கப் புக்கவேதம் பட்டது படுமித்தனை. இத்தைப்பரிச்சேதிக்கப் புக்காலும், (உ)“நேதிநேதி-நேதிநேதி” என்கிறபடியே இதன்று என்னுமித்தனைபோக்கி, இப்படியென்று பாசுரமிடவொண்ணாது. அந்தண்ணந்துழாயுண்டு-தோளிவிட்டமாலை:அதுக்கு என்னுள்ளத்திலேயுண்டாய் ஸர்வாதிகத்வத்தையும் விளாக்கொலை கொண்டகாதலிலும் பெருத்திருப்பனவாயுள்ளவை.

(ஓங்குமுந்நீர் வளப்பெருநாடன்மதுசூதனனென்னும்) அவனெல்லைக்குப் புறம்பேயிருந்து நோவுபடுகிறேனோ? அவன் அசக்தியாலே நோவுபடுகிறேனோ? கடல்சூழ்ந்திருப்பதாய் வளப்பத்தையுடைத் தாயிருந்துள்ள பெருநாட்டையுடையவன். (மதுசூதனன்) ரக்ஷ்யவர்க்கத்துக்குக் களையானமதுவை நிரஸித்தவன். ஸம்பந்தமில்லாமையோ? விரோதிநிரஸந ஸீலனல்லாமையோ? நானிங்ஙன்படுகிறது. (வல்வினையேன்) இவள்வடிவழகைப் பார்த்தாலிப்படிக்லேசப்படுகைக்கோரடியில்லை,அத்தலையித்தலையாய் அவன்படக்கடவதத்தையிவள்படாநின்றாளிதுக்கடி காண்கிற வென்பாபமிறே. (௩)மமைவ-மத்பாபமேவ” இவள்படுகிற வ்யஸநத்துக்கடி என் பாபமாகவேணுமென்கைக்கு ஹேதுவென்னென்னில்(தளப்பெருஇத்யாதி).

அருளிறார். “தளப்பெருநீள் முறுவல்” என்றத்தைக் கடாக்ஷித்து (போகயோக்யமானகாலத்தில் என்கிறார்.

(அளக்கவரிதாகையை ஸ்வபாவமாகவுடையன) என்றது - சப்தார்த்தம். “அந்தண்ணந்துழாய்க்குளப் பெருங்காதலில் நீளியவாயுள” அழகியகுளிர்ந்த திருத்துழாய்க்கு என்னுள்ளத்திலே வளருகிறகாதலிற்பற்றவும் நீளியவாயுள்ளன. இத்தைப்பரிச்சேதிக்கப் புக்காலுமென்றபடி.

(க) திருவாய் - ௧0 - ௧0 - ௧0. (உ) ப்ருஹதாரண்யம்-௪ - ௩. (௩)

வ்யா|| இவள் நோவுபடுகைக்கு இவள்வடிவிலேதேனும் குறியுண்டோ? வென்கிறாள். தளப்புஎன்றது-தள வென்றாய், முல்லையரும்புபோலே யிருப்பதாய், பெறுதற்கரிதாய், (க) "ப்ரீவ ஸேசாரயதீதி-புரேவமேசாரு ததீம்" என்கிறபடியே நாயகன்பெறப்ப்ரார்த்திக்குமதாய் 'நாயகன் புக்கவிடம் புக்குஅவன் நெஞ்சைவடிம்பிட வற்றாயிருந்துள்ள முறுவலையுடைய. நீள்முறுவ லென்று-நரஸிம்ஹத்தினுடைய அட்டஹாஸத்தைச் சொல்லுகிறதன்றிறே. ஒருஸ்த்ரீயினுடைய மந்தஸ்மிதத்தையிறே சொல்லுகிறது. ஆனால் இப்படி பொருளாகவேணுமிறே. எப்படியென்னில், அதினுடைய போக்யதையை நீண்மையென்கிறது. (செய்யவாயித்யாதி) அம்முறுவலுக்குப்பாபாகமான சிவந்த அதரத்தையுடையாளென்னுதல். அன்றிக்கே. மேல் "தடமுலை என்று முலைகளினுடைய சுற்றுடைமையைச் சொல்லுகையாலே, இது செவ்வையைச்சொல்லி நேரேவளர்ந்தமுலை களையுடையாளென்னுதல். (தடமுலையே) விரஹத்தாலே தலைச்சாவிவெட்டின பின்பு காணுமிவ்வளவு சொல்லலாகிறது. ஸர்வேஶ்வரன்வைத்த அவகாசம் போராதுபோலே யிராநின்றது.

[தளப்பெருநீண் முறுவல்செய்யவாய தடமுலையானவள் அளப்பருந்தன்மை யவ்வூழியங்கங்குலந்தண்ணந்துழாய்க் குளப்பெருங் காதலில் நீளியவாயுள என்னும்; அதுக்குமேலே ஓங்குமுந்நீர் வளப்பெருநாடன் மதுசூதனனென்னும் வல்வினையேன்] என்றந்வயம்.

ஸ்வாபதேசம்.—இத்தால், அநுபவயோக்யமான ஸம்பந்தமும்ஸ்வரூபஜ்ஞாநமு முண்டாயிருக்க போகயோக்யமான காலமும் போகத்துடனே செல்லப்பெறாமையாலே வந்தவாற்றாமையைப் பார்ஶ்வஸ்தர் சொல்லுகிறார்கள். ௫௯,

---

அரு|| "தளப்பெருநீண்முறுவல்" என்று அழகைச்சொல்லுகையாலே இவள் து:கப்படுகைக்கு போக்யதையில்லை என்றபடி. "நீண்முறுவல்" என்றுஸ்மிதத்தினுடைய பெருமையைச்சொல்லுகிறதன்று, போக்யதாதிசயஞ்சொல்லுகிறதென்கிறார் (நீண்முறுவலென்று) என்று. (அட்டஹாஸம்) என்றது - செருக்கரித்துக்கொண்டு சிரிக்கை. நீளியவாயுள என்னும்-என்று சொல்லும். அதுக்குமேலே ஓங்குமுந்நீர் வளப்பெருநாடன் மதுசூதனனென்று சொல்லும் இதுக்கடி என்பாபமென்றபடி. ௫௯.

[அப்பு அரும்பதம்.]

ஐம்பத்தொன்பதாம்பாட்டு.—(அளப்பு) அளக்கப்போகாமைக்கு ஜ்ஞாபகமேதென்ன அருளிச்செய்கிறார்(அளக்கவாகில்)இத்யாதி."பெரிய"என்பானென், இவநால் பரிச்சேதிக்கப் போகாதோ வென்ன அருளிச்செய்கிறார்

---

(க)

(பகவத்தத்வத்தை) இத்யாதி. பரிச்சேதித்தால் வரும் விரோத மேதென்ன வருளிச்செய்கிறார் (பகவதாநந்தத்தை) இத்யாதி. "நீளிய" என்றத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (இத்தை)இத்யாதி. குறி-பொல்லாக்குறி. (சாருதநீம்) அழகிய தந்தபங்க்தி. விஶ்லேஷ தசையிலே தடமுலையென்று பெருக்கச்சொல்லலாமோவென்ன அருளிச்செய்கிறார் (விரஹத்தால்) இத்யாதி. "என்னும்" என்கிறபதம் இரண்டிடத்திலு மந்வயிக்கிறது. "மதுசூதனன்" என்கையாலே ஸ்வரூபஜ்ஞாநம். ருக.

[வேறொரு அரும்பதம்.]

ஐம்பத்தொன்பதாம்பாட்டு.—(அளப்பரும்) இத்யாதி. கீழேதிருவுலகளந்தவன் ஸௌசீல்யகுணநுஸந்தாநத்தாலே தரித்துத் தாமான தன்மையோடே இருந்தவரை அந்தவிஷயந்தானே பெண்ணுடையுடுத்த,தத்தசாபத்திலே, அப்படிதிருத்தாயார் பேச்சாலே மேலிரண்டு பாட்டாலருளிச்செய்கிறொன்று ஸங்கதியுட்கொண் டவதாரிகை யருளிச்செய்கிறார் (எட்டா) இத்யாதி. மேலுக்கவதாரிகை (ஆனால்) இத்யாதி. எடுத்தபாசுரார்த்தம் (பகவத்) இத்யாதி. "இத்தை" இந்தவாநந்தத்தை. சப்தார்த்தம் (அந்தண்) இத்யாதி. "அளப்பரும்" என்றதினர்த்தம் (ஸர்வ) இத்யாதி. உட்கருத்தருளிச்செய்து வாக்யார்த்த மருளிச்செய்கிறார் (கடல்) இத்யாதி. பலிதார்த்தம். (ஸம்பந்தம்) இத்யாதி. "முறுவல்" இத்யாதியைக் கடாக்ஷித்து பாவமருளிச்செய்கிறார் (இவள்) இத்யாதி, பகரமிரண்டு மசையாய், சந்தஸ்ஸிலிட்ட வெழுத்தாக்கி யருளிச்செய்கிறார்(தளப்பு)இத்யாதி. "பெறுதற்கரிதாய்" என்றத்தை விவரிக்கிறார். (புரேவ) இத்யாதி. தநீ(दन्ती)-தந்தவதீ(दन्तवती). நீட்சிக்குபாவம் (நாயகன் புக்கவிடம்) இத்யாதி. "என்னும்" என்றத்தை-இரண்டிடத்திலுங் கூட்டி யந்வயங்காட்டுகிறார் (தளப்பு) இத்யாதி. ருக.

தாத்பர்யம்.—ஸர்வேஶ்வரன் சக்தனயிருந்தும் தமக்குவந்துதவாமையாலே பிறந்த ஆர்த்தியைக்கண்டு அருகிருந்த ஸ்ரீவைஷ்ணவர்களுரைத்த பாசுரத்தை, விரஹிணியான நாயகி இரவுக்கஞ்சினமையைத் திருத்தாயாருரைத்த பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

கல்புங்களுக்காகிலும் இவ்வளவுகாலமென் றோரளவுண்டு; இவளுக்கிப்போது பாதகமாகவந்துதித்த இவ்விரவு ஓரளவற்றதாய் நீண்டு வருத்தமுறுத்தத்தொடங்கிற்று, இதுவரையில், எம்பெருமான் சாத்தின திருத்துழாய்மாலை விஷயமாகஇவளுக்குண்டான அபிநிவேசமே அபரிச்சிந்நமாயிருக்கிறது, இனி இதுக்குமேலானதொன் றில்லை யென்றிருந்தோம். இவ்விரவு அதைக்காட்டிலும் பெரிதாய் நீண்டது.முல்லையரும்புபோன்ற இவளுடைய புன்சிரிப்பையும், பவளம்போன்ற அதரத்தையும், பரந்த ஸ்தநங்களையும் அழகழியப்பண்ணின அந்த ஸர்வேஶ்வரனையே மறுபடியும், "கடல்சூழ்ந்தபெருநாட்டுக்கு ஸ்வாமியானவனே! அதின் விரோதியைப்போக்கி ரக்ஷகனானவனே!" என்று எப்போதும் சொல்லிக்கூப்பிடாநின்றாள். அவன் வாராமல் இவளிப்படி துக்கிப்பது என் பாபபலமாயிருக்கிறது. ருக.

முலையோமுழுமுற்றும்போந்தில, மொய்பூங்குழல்குறிய
கலையோவரையில்லைநாவோகுழறும், கடல்மண்ணெல்லாம்
விலையோவெனமிளிருங்கணிவள்பரமேபெருமான்
மலையோ, திருவேங்கடமென்றுகற்கின்றவாசகமே. ௬௦.

அர்த்தம்.—முலையோ - ஸ்தநமோவென்றால், முழுமுற்றும் - கொஞ்சமும், போந்தில - உதிக்கவில்லை. மொய் - செறிந்தும், பூ - அழகியதுமான, குழல் - மயிர், குறிய - குறுகியிருந்தது. கலையோ - வஸ்த்ரமோ வென்றால், அரை இல்லை - அரையில் பொருந்த உடுக்கவில்லை. நாவோ - நாக்கோ வென்றால், குழறும் - திருந்த மற்றிருக்கும். கடல் - ஸமுத்ரத்தினால் சூழப்பட்ட, மண் எல்லாம்-பூமியெல்லாம், விலையோ என-(இக்கண்ணுக்கு) விலையாகுமோ வென்னும்படி, கண் - கண்ணானது, மிளிரும் - பெருத்து விளங்காநின்றது. பெருமான் - ஸர்வேஶ்வரனுடைய, மலையோ - திருமலையோவென்றால், திருவேங்கடம் - திருவேங்கடமலையாயிருக்கிறது, என்று - என்று, கற்கின்ற - அப்யஸிக்கிற, வாசகம் - உக்தி, இவள் பரமே - இப்படிப்பட்ட பருவத்தையுடைய இவளுக்கு பரமோ? ௬௦.

[பெரிய வாச்சான்பிள்ளைவ்யாக்யாநம்.]

அவ,—அறுபதாம்பாட்டு.—"தளப்பெருநீண்முறுவல் செய்யவாயதடமுலைவளப்பெருநாடன்மதுசூதனனென்னும்" என்றாளே, ப்ராப்தயௌவனையாய் பருவம் நிரம்பினவின்றிவளிதுசொல்லக்கேட்கவேணுமோ? பால்யமேபிடித்து இவளுக்கிதுவன்றோ யாத்ரையென்கிறாள்.

வ்யா.—(முலையோவித்யாதி) இவையெல்லாம் நிரம்பினால்சொல்லுகை ப்ராப்தமிறே. (முலையோ முழுமுற்றும்போந்தில) முலைகள் சமையவளர்ந்தனவில்லையென்று சொல்லுமளவல்ல, முலையெழுமெல்லாயின்னதென்று கொண்டைக்கோல்நாட்டிற்றுமில்லை.(மொய்பூங்குழல்குறிய) செறிந்தழகியதாயிருந்துள்ள குழல்களானவை (குறிய) நாயகன் பேணிச்சூழியஞ்சுற்றினால் இவள் வினைகேட்டாலே குலைத்தால் அதுக்கவன் கால்பிடிக்குமளவல்ல. (கலையோவரை

அரு || அறுபதாம் பாட்டு.—(முலையோ) "முழு" என்றும் "முற்றும்" என்றும் பர்யாய சப்தங்களாயிருக்க இந்த வீப்ஸைக்குத்தாத்பர்யமேதென்ன, பூர்ணமாக வளரவில்லையென்கிற மாத்ரமன்றிக்கே முலையெழுகைக்கு ஸூசகமுமில்லையென்றபடி. (சூழியஞ் சுற்றினால்) என்றது - கொண்டை முடித்தாலென்றபடி. (இவள் வினை கேட்டாலே குலைத்தால்) என்றது-இவள் நன்றாயிராதென்று அவிழ்த்துப்போகட்டாலென்றபடி. இத்தால், யௌவநம் குடிபுகுந்தால் அவன் கொண்டை முடித்தால் இவள் நன்றாயிருக்கிறதில்லையென்று அவிழ்த்துப்போகட்டால் அவன் வேண்டாவென்று காலைப்பிடிக்கும்

வ்யாப்தியில்லே) உடுக்குமிடமறியாள். (நாவோகுழறும்) தாய்மாருருச்சொல்லி அவ்யக்தமானவற்றை அவள்பக்கலிலேகேட்குமத்தனே. "ஐயர் ஆச்சி" என்று சிலவற்றைக்கற்பிப்பர்களிறே ; அவர்களுடையதெளிந்த சொற்களிற்காட்டி லிவளுடைய கலங்கின சொல்லே நன்றாயிருக்கும்.

(கடலித்யாதி) இவ்விடத்தை பட்டரருளிச்செய்யாநிற்க, "அல்லாத அவயவங்களினுடைய நிரம்பாமையைச் சொல்லிவைத்து இதினுடைய பெருமையைச்சொன்னால் விருபமாகாதோ?" என்று ஜீயர் கேட்க, "இதிலும் சிறுமையே காணுஞ்சொல்லுகிறது, இங்ஙனே சொல்லவாவது தானுமின்று, நாளை இது தானுஞ்சொல்லப்போகாது" என்றருளிச்செய்தார். கடல்சூழ்ந்த பூமிப்பரப் படங்கலும் விலையாகப்போகுமோவென்னும்படிக்கீடாகவாயிற்று கண்கள் மிளிருகிறபடி. (மிளிரும்) திரைமோதிக்கரையாலும் வழிபோகவொண்ணாதபடியாயிராநின்றது. களவுகலந்து நாயகனை யொதுக்கிப் பார்க்குமதன்றியிலே ஸர்வஸாதாரணமாக ஜநநியோடுகாந்தனோடு வாசியறப்பார்க்கிறவளாயிற்று. (இவள்பரமே) இவள் பருவத்துக்குத் தகுவதோ? இது; இவள்பரமல்ல; இணக்கத்தின்பொல்லாங்கு. (க) "சாய்விலாத குறுந்தலை" (பெருமான்மலையோ திருவேங்கடமென்று) பரவ்யூஹாதிகளைவிட்டுத் திருவேங்கடமுடையான் பக்கலிலேயாய் அவன் தன்னளவிலன்றிக்கே திருமலையே உத்தேச்யமென்று சொல்லுகிற பாசுரமிவள்பருவத்துக்குத் தகுவதோ? ஆநந்தகுணத்தைத் பேசப்புக்கவாறேவேதங்கள் நிலமல்லவென்று மீண்டது. இங்குத்தை சீலப்ராசுர்யம் நிலமல்லவென்கைக்கு நிலமல்லவிறே. அபரிச்சிந்நவஸ்துவை

---

அரு|| பருவமன்றிக்கே, பால்யமாகையாலே கொண்டைமுடிக்கைக்கும் நீளம் போராதென்றுகருத்து.

(இங்ஙன் சொல்லவாவது தானும் இன்று, நாளை இது தானுஞ்சொல்லப் போகாதென் றருளிச்செய்தார்) என்றது - இப்படி விசதமாகப் பார்க்கிறது இந்த பால்யத்திலித்தனை ; யௌவநங்குடி புகுந்தா லொதுக்கிப் பார்க்குமதொழிய இப்படி நன்றாகப்பாராள் ; ஆகையாலே இதுவும் பால்யத்துக்கே ஸூசகமென்றபடி. (களவுகலந்து) என்றது - யௌவநங்குடி புகுந்தென்றபடி. (இவள்பரமல்ல இணக்கத்தின் பொல்லாங்கு) என்றது - இவள் பருவத்துக்குத் தக்கதல்ல, ஸஹவாஸ தோஷத்தால் வந்ததென்றபடி. இணக்கு - ஸஹவாஸம். தோழிமாராலே வந்ததென்றபடி. ஸஹவாஸத்தாலே வந்ததென்கைக்கு ஸம்வாதமாகவருளிச்செய்கிறார் (சாய்விலாத குறுந்தலை) என்று. (அபரிச்சிந்நவஸ்து) என்றது - அர்ச்சாவதாரத்தில்ஸௌசீல்யம் அபரிச்

---

(க) பெரியாழ்வார் திரு. ௩ - ௩ - ௨.

வ்யா||ப்பேசப்புக்கிற அவைநிலமல்லவென்றுகைவாங்கிற்று. (கற்கின்றவாசகம்) சொல்லுகிறபாசுரமென்னுதல்; அன்றிக்கே, இவள் வாயாலே சொல்லும்படி கேட்கைக்காகவே தாங்களிவைதன்னைக் கற்பியா நிற்பார்களிறே. (௧) " இவள் வாயனகள்திருந்த " என்னக் கடவதிறே. "பெருமான் மலையோ திருவேங்கடமென்று கற்கின்றவாசகம் இவள் பரமே"என்னுதல். அன்றிக்கே, "பெருமான் மலையான திருவேங்கடமென்று கற்கின்றவாசகம், ஓ ! இவள் பரமே"என்னுதல். " ஓ " இதென்னவாஸ்சர்யம்.

ஸ்வாபதேசம்(௨) ஸாலாத்ப்ரப்ருதி ஸு ஸ்நிக்த: " என்றும் (௩) " அறியாக்காலத்துள்ளே " என்றும் சொல்லுகிறபடியே இவர்க்கு பகவத் விஷயத்திலுண்டான ப்ராவண்யம் ஸத்தாப்ரயுக்தமானபடி சொல்லுகிறது. ௬௦.

அரு||ஙிக்நமாகையாலே பரத்வம் பரிச்சிந்நமாயிருக்குமென்றபடி. தாங்களே கற்பித்தவற்றைச்சொன்னாலாஸ்சர்யப்படுகிறதென்னென்ன-தாங்கள் சொன்னது இவள் சொன்னாற்போலே இராமையாலே ஆஸ்சர்யப்படுகிறார்களென்கிறார் (இவள் வாயனகள் திருந்த என்னக்கடவதிறே) என்று. "வாயில் பல்லுமெழுந்தில" இத்யாதி. ௬௦.

[அப்பு அரும்பதம்.]

அறுபதாம் பாட்டு.—( முலையோ ) ( இவை ) முலை, தலையான விவை, பூர்ணமானால் திருநாமஞ் சொல்ல ப்ராப்தமென்றபடி. " முழுமுற்றும் " என்கிற மிமிசையாலே ஒன்றுமில்லை யென்கிறது. (வினைகேடு) - செயல்கேடாய், அழகில்லாமையாலே குலைக்கை. தலையிலேதான் மார்விலேதான் கட்டுகையாலே (உடுக்குமிடமறியாள்) என்கிறது.(இன்று நாளை) பால்யமான இன்றும் பரக்கப்பார்ப்பது ; யௌவநமான நாளை நாயகனை தன்னையும் கடைக்கண்ணாலே சிறுசப்பார்க்குமென்று பட்டர். களவுகலக்கை-யௌவநம்குடிபுகுருகை. இணக்கத்தாலே வந்தவிடமுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (சாய்விலாத குறுந்தலை) என்று. "இவள்பரமே" என்று சொல்லப்போகாதத்தைச் சொல்லுகிறாளென்கைக்கு இங்கதிசயமேதென்ன அருளிச்செய்கிறார் (ஆநந்தகுணத்தை) இத்யாதி. அபரிச்சிந்நவாக்யம் குறையாகையாலே தெரியாது. தாங்களேசொல்லாமல் இவளுக்குக் கற்பித்துக்கேட்க வேண்டுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (இவள் வாயனகள்) இத்யாதி. ௬௦.

[வேறொரு அரும்பதம்.]

அறுபதாம் பாட்டு,—(முலையோ) இத்யாதி. கீழே " தடமுலை " என்று பருவம் நிறைந்த பெண்ணின்படி சொன்னவள் இப்போது இளையபருவமாகச்சொல்லப்ரஸக்தியென்னென்னவருளிச்செய்கிறார் (தளப்பெரு) இத்யாதி.

(௧) திருவாய். ௬ - ரு - எ. (௨) ஸ்ரீராமா - பால. ௧அ - உஎ.
(௩) திருவாய். ௨ - ௩ - ௩.

எடுத்ததினர்த்தம் (ப்ராப்த) இத்யாதி. "ஓ" என்றதின்பாவம் (இவை) இத்யாதி. முலையோ வந்திலவென்னவமைந்திருக்க போந்திலாமையை முழுமுற்று மென்று மிகையாக விசேஷித்ததுக்கு பாவம் (முலைகள்) இத்யாதி. விவரணம் (முலையெழும்) இத்யாதி. "கொண்டைகோல்" அடையாள மென்றபடி. "வினைகேடு" - செயல்கேடாய் அழகில்லாமையாலே யென்கை. "ஓ" என்றுஆஶ்சர்யத்துக்கர்த்த மருளிச்செய்கிறார் (அவர்களுடைய) இத்யாதி. "இங்ஙன் சொல்லலாவது" என்றது - "கடல்மண்ணெல்லாம் விலை" என்று சொல்லலாவதென்றபடி. "மிளிரும்" என்கிறவர்த்தமானார்த்தத்தை யுட்கொண்டு லஜ்ஜையாலே ஸங்கோசித்தல், ஒப்பாகாதல் முதலானவை இல்லாதே மலரவிழிக்குமென்று பலிக்கையாலே அத்தை யருளிச்செய்கிறார் (திரை) இத்யாதி வாக்யத்வயத்தாலே. "இணக்கம்"- நாயகஸம்ஶ்லேஷம். ஸ்வாபதேசம் (பால்யாத்) இத்யாதி. ௬௦.

தாத்பர்யம்.—கீழ்ப்பாட்டில், யௌவநாவஸ்தையை ப்ராப்தையான இவள் ஸர்வேஶ்வரனையே கூப்பிடாநின்றாளென்றார். இதில் இப்படி கூப்பிடுவது இவளுக்கு பால்யந்தொடங்கி யுள்ளதாகையால் இது ஸ்வதஸ்ஸித்தமென்கிறார்.

நாயகன் கண்டு மோஹிக்கும்படியான ஸ்தநங்களின் சிறங்களும் காணவில்லை. மயிரும் கொண்டை முடிக்கும்படி வளரவில்லை. புடைவை யுடுக்கவுமறியாள். மாதாபிதாக்கள் கற்பிக்கும் வார்த்தையையும் குழறாமல் நேரே ஸ்பஷ்டமாகச் சொல்லவறியாள். ஸமுத்ராந்தமான பூலோகமெல்லாம் இவள் கண்ணுக்கொப்பாகாதபடி பரந்த கண்களினால் லஜ்ஜையறியாமல் மாதாபிதாக்களோடொப்பாக நாயகனையும் பாராநின்றாள். இப்படிப்பட்ட பால்யாவஸ்தையிலுங் கூட, எம்பெருமான் நித்யவாஸம் பண்ணுகிற திருவேங்கடமலையையே எப்போதும் அப்யஸியாநின்றாள். ஆகையால் இப்போதிவள் பகவந்நாமத்தை யநுஸந்திப்பது ஓராஶ்சர்யமன்று; ஸ்வபாவ ஸித்தமென்கிறார். ௬௦.



வாசகஞ்செய்வதுநம்பரமே, தொல்லைவானவர்தம்
நாயகன்நாயகரெல்லாந்தொழுமவன், ஞாலம்முற்றும்
வேயகமாயினுஞ்சோராவகையிரண்டேயடியால்
தாயவன், ஆய்க்குலமாய்வந்துதோன்றிற்று நம்மிறையே. ௬௧.

அர்த்தம்.—தொல்லை வானவர்தம் - அநாதியான தேவதைகளான நித்யஸூரிகளுக்கு, நாயகன் - ஸ்வாமியாய், நாயகரெல்லாம் - ப்ரஹ்மாதிகளெல்லாராலும், தொழுமவன் - ஆஶ்ரயிக்கப்படுமவனாய், ஞாலம் முற்றும் - பூமிமுழுதும், வேய் அகமாயினும் - மூங்கில் குத்தளவு இடமாகிலும், சோராவகை - விடாமற்படி, இரண்டே அடியால் - இரண்டடியாலேயே, தாயவன் - அளந்தவனாய், நம் இறை - நமக்கு ஸ்வாமியான ஶ்ரிய:பதி, ஆய்க்குலமாய் - இடைக்குலத்திலே, வந்து தோன்றிற்று - வந்தவதரித்தபடியை, வாசகம்செய்வது - சொல்வது, நம்பரமே - நமக்கு ஸாத்யமா? ௬௧.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ. — அறுபத்தோராம்பாட்டு. — "பெருமான் மலையோ திருவேங்கடமென்று கற்கின்ற வாசகம்" என்று இவள் சொன்ன வநந்தரம் திருத்தாயாரத்தை யநுபாஷிக்கையாலே அத்தைக்கேட்டுப் பிராட்டியானதசைபோய் தாமான தசையாம்படியாய்த் தரித்தார். இவர் தம்மைத்தாமுணர்ந்தால் இவர்க்குப்பாழி க்ருஷ்ணவதாரமிறே. அங்கேபுக்கு எத்திறமென்கிறார்.

வ்யா. —(வாசகஞ்செய்வது நம்பரமே) எத்திறமென்று மோஹித்துக்கிடக்குமிதுக்கு மேற்படப் பாசுரமிட்டுச்சொல்லுமது நம்மால் செய்யலாவதொன்றோ? என்றாள், பாசுரமிட்டுச் சொல்லவொண்ணாதொழிகிறதென்னென்னில், தொல்லைவானவருண்டு - (௧) "யத்ர ருஷய: ப்ரதமஜாயே புராணா:" யத்ராருஷய: ப்ரதமஜாயேபுராணா:" என்கிறவர்கள், அவர்களுக்கு நிர்வாஹகனானவன் (ஆய்க்குலமாய்வந்துதோன்றிற்று வாசகஞ்செய்வதுநம்பரமே) என்கிறார். வேதங்களோடு வைதிகபுருஷர்களோடுவாசியில்லையாயிற்று பாசுரமிட்டுச்சொல்லமாட்டாமைக்கு. வேதங்களும் ஆநந்த குணத்தைச் சொல்லப்புக்கமாத்ரத்திலேயிறே (௨) "யதோ வாசோ நிவர்தந்தே - யதோ வாசோநிவர்தந்தே" என்று மீண்டது. (௩) "தஸ்ய தீரா: பரிஜாநந்தி யோநிம் - தஸ்யதீரா: பரிஜாநந்தியோநிம்" [தஸ்யயோநிம்] அகர்மவச்யனாயிருக்கிறவன், பிறக்கைக்கு ஹேதுவானகர்மமின்றிக்கே யிருக்கவந்து பிறந்த நீர்மையை, தீமதாமக்ரேஸராராயிருக்குமவர்கள் அது தன்னிலிழிந்தறியப்போகாமையாலே அத்தைச்சூழ்ந்துவந்து ஆழங்காற்படாநிற்பர்கள். ஸர்வஜ்ஞனான தான் சொல்லிலும் (௪) "ஜந்ம கர்ம ச மே திவ்யம் - ஜந்மகர்மசமேதிவ்யம்" என்றும் (௫) "பரம் பாவம் - பரம்பாவம்" என்றும் சொல்லுமித்தனை. இவர்க்குத்தானே எத்திறமென்று மோஹித்துக்கிடக்கை ப்ரக்ருதியிறே. (தொல்லைவானவர் தம்நாயகன்) நித்யஸூரிகளுக்கு மவ்வருகானவன். (நாயகரெல்லாந்தொழுமவன்) இவ்வருகிலாக்கரான ப்ரஹ்மாதிகளும் "சதுர்தசபுவநத்துக்குங் கடவோம்"என்றிருக்குமபிமாநத்தைப்பொகட்டுவந்து தொழாநிற்பர்கள்; பிறவாதாரா யிருக்கிறவவர்களிறே

அரு || அறுபத்தோராம் பாட்டு. —(வாசகம்) பாழி - துறை.
(அவர்களுக்கு நிர்வாஹகனானவன்) என்று தொடங்கி (நம்பரமே என்கிறார்)என்றது-அந்வயங்காட்டினபடி. பரம்பாவம்-பரத்வம். கீழ்வாக்யத்துச்கு விவரணம் (மநுஷ்யர்கண்ணுக்குங்கூட) என்றுதொடங்கி யருளிச்செய்தது.

(௧) அச்சித்ரம். ௬௨.
(௨) தைத்திரீயம் - ஆநந்த - ௬.
(௩) புருஷஸூக்தம்.
(௪) கீதை. ௪ - ௯.
(௫) கீதை.

வ்யா|| பிறக்கிறார்வரானவந்து ஸ்தோத்ரம்பண்ணுகிறார்கள். மநுஷ்
யர் கண்ணுக்குங்கூடத்தோற்றாதவர்கள் ராவணாவதாரந்தரத்திலே
வந்து ஸ்தோத்ரம்பண்ணினார்கள்.

(ஞாலமித்யாதி) பூமிப்பரப்படைய ஒருகோல்குத்தும்விடாதே
இரண்டடியாலே யளந்துகொண்டவன். துர்யோதநாதிகள் "பாண்
டவர்களுக் கொருகோல்குத்துநிலமும் விடோம்" என்றபிமாநித்
தாற்போலே யாயிற்று இவனுமிந்த்ரனுக்காக மஹாபலிக்கொரு
கோல்குத்தும் விடேனென்றபடி. (இரண்டே அடியால் தாயவன்)
மூன்றடியையிரந்து ஓரடிக்கவனைச்சிறையிட்டுவைக்கைக்காக இர
ண்டடியாலே யளந்து கொண்டவன். (ஆய்க்குலமாய்வந்து தோன்
றிற்று) பூமிப்பரப்படையத் தன் திருவடிகளின்கீழேயிட்டுக்கொ
ண்டவன் தன் காலின்கீழேதுகையுண்டதொரு பதார்த்தத்துக்குத்
தான் புத்ரனுனவிது நம்மாலே பாசுரமிட்டுச்சொல்லலாவதொன்
றன்றே. (ஆய்க்குலமாய்) ஸம்ஸாரிகளிலே யொருவனுக்கு அல்பம்
விவேகமுண்டானால் (௧) "𑌬𑌾𑌲𑍍𑌯𑍇𑌨 𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌸𑍇𑌤𑍍 - பால்யேந திஷ்டாஸேத்"
என்று அபிஜநவித்யா வ்ருத்தாதிகளாய் வந்த அபிமாநத்தைப்போ
கடாநின்றானிறே. அல்பம் விவேகமுண்டாயிருக்கிற விவனைகப்பட
வித்தைப்போகடாநிற்க, ஸர்வஜ்ஞனான தான் பரத்வாதிகளையுங் கா
ற்கடைகொண்டு இக்குலாபிமாநத்துக்கவ்வருகு ஒன்றறியாதானாய்
வந்துபிறந்தான். (௨) "𑌜𑌜𑍍𑌞𑍇 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌸𑍍𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 - ஜஜ்ஞேவிஷ்ணுஸ்ஸநாத
நஃ" என்கிறபடியே தன்னைப்பற்றினாரும் பழையருமாய்ப்பிறவா
தாருமாயிருக்க அவன் வந்து பிறந்த விதுக்குப் பாசுரமிடப்போ
மோ? (வந்து தோன்றிற்று) (௩) "𑌆𑌵𑌿𑌰𑍍𑌭𑍂𑌤𑌂 - ஆவிர்ப்பூதம்" என்
னக்கடவதிறே. [இரண்டேயடியால்தாயவனாய் நம்மிறையாய் ஆய்க்
குலமாய் வந்து தோன்றிற்று வாசகஞ்செய்வது நம்பரமே] என்றந்
வயம்.

அரு|| "வேயகமாயினும்"-கோல்குத்தும். "சோராவகை"-விடாதே. "வேய்"
என்று மூங்கிற்கோலைச்சொல்லுகிறது. "ஆய்" என்றதுக்குத் தாத்பர்யமரு
ளிச்செய்கிறார் (ஸம்ஸாரிகளிலே ஒருவனுக்கு) என்று. (பால்யேநதிஷ்டா
ஸேத்) என்றது.—அபிஜநவித்யா வ்ருத்தாதிகளால்வந்த அபிமாநத்தை யறி
யாதிருக்கை. (தன்னைப்பற்றினாரும் பழையருமாய்ப் பிறவாதாருமாயிருக்க)
என்றது.—தன்னை யாச்ரயித்தவர்கள் ஸஹஜஜந்மரஹிதராயிருக்க அகர்ம
வச்யனான தான் பிறந்ததுக்கு ஒரு பாசுரமிட்டு வர்ணிக்கப்போமோவென்ற
படி.

[தொல்லைவானவர்தம்நாயகன் நாயகரெல்லாந்தொழுமவன் ஞாலமுற்
றும் வேயகமாயினுஞ் சோராவகையிரண்டேயடியால் தாயவனாய் நம்மிறை
ஆய்க்குலமாய்வத்தவதரிந்த இதுவாசகஞ்செய்வது நம்பரமே] என்றந்வயம்.

சுக.

(௧) ப்ருஹதாரண்யம். ௫ - ௫.
(௨) ஸ்ரீராமா-அயோ. ௧-௭.
(௩) ஸ்ரீவிஷ்ணு பு. ௫ - ௩ - ௨.

இறையோவிரக்கினுமீங்கோர்பெண்பால் எனவுமிரங்காது,
அறையோவெனநின்றதிருங்கருங்கடல், ஈங்கிவள்தன்
நிறையோவினியுன்றிருவருளாலன்றிக்காப்பரிதால்
முறையோ, அரவணைமேல்பள்ளிகொண்டமுகில்வண்ணனே. சூஉ.

அர்த்தம்.—கருங்கடல் - கரியநிறத்தையுடைய ஸமுத்ரமானது, இரக்கினும் - யாசித்தாலும், ஓர் - ஸஹாயமில்லாத, பெண்பால் எனவும் - பெண்ணென்றாலும், ஈங்கு - இவள் விஷயமாக, இறை - கொஞ்சமும், இரங்காது - தயை செய்கிறதில்லை. அறையோ என-அறைகூவுவாரைப்போலே, நின்று-ஸ்த்திரமாயிருந்து, அதிரும் - கோஷியாநின்றது; ஓ - இதென்ன கொடுமைதான். அரவணைமேல் - ஆதிசேஷனாகிற படுக்கையின்மேலே, பள்ளிகொண்ட - சயனித்த, முகில்வண்ணனே - மேகம்போன்ற நிறத்தையுடைய ஓ ஸ்வாமி! ஈங்கு - இவ்விடத்தில், இவள் தன் - இவளுடைய, நிறையோ - அடக்கமோ வென்றால், இனி - இனிமேல், உன் திருவருளாலன்றி - உன்னுடைய க்ருபையினாலல்லது (வேறொன்றால்), காப்பு அரிது - ரக்ஷிக்கை துர்லபம். முறையோ - (இது) க்ரமமா? சூஉ.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—அறுபத்திரண்டாம் பாட்டு.—(இறையோ) கீழ் க்ருஷ்ணாவதார ஸௌலப்யத்தையிறே யநுஸந்தித்தது; அந்த அவதார ஸமகாலத்திலே தாமுளராகப்பெறாமையாலே வந்த வாற்றாமையாலே, கலந்து பிரிந்தாளொரு பிராட்டி தசையை ப்ராப்தரானார். அவள் பிரிவாற்றாமைக்கு மேலே கடலோசையும் பாதகமாகாநின்றதென்று திருத்தாயார் சொல்லுகிறாளாயிருக்கிறது.

வ்யா.—(இரக்கினு மீங்கோர் பெண்பாலெனவு மிறையோவிரங்காது) காலிலே விழுந்து சரணம்புகச்செய்தேயும் "சரணம் புகுகைதான் மிகையாம்படிக் கீடாயிறே இவள் தசை" என்று தசையைக்காட்டச்செய்தேயும், "புறம்பொரு புகலில்லாதாளொரு அபலைகிடாய்" என்னச்செய்தேயும் ஏகதேசமுமிரங்குகிறதில்லை. பாதகர்க்கித்தலையி லெளிமையை யறிவித்தவளாய்விட்டது; "இத்தனை யெளிதாகில் நமக்கு நினைத்தபடி பாதிக்கலாமாகாதே" யென்று அதிலேயு முறைக்கைக்குடலாயிற்று. இதுதான் "சரணம்"என்றால்

---

அரு || அறுபத்திரண்டாம் பாட்டு.—(இறையோ) "இரக்கினும்"-சரணம்புகச்செய்தேயும்,"ஈங்கு" - இந்தத்தசையைக்காட்டச்செய்தேயும், "ஓர்பெண்பாலெனவும்"-ஓரபலைகிடாயென்னச்செய்தேயும், "இறையும்" - அத்யல்பமும்,"இரங்காது"-இரங்குகிறதில்லை. இவர்கள்"அபலை இரங்கவேணும்"என்று சொன்னவித்தால் பலித்ததென்னென்ன அருளிச்செய்கிறார் (பாதகர்க்கித்தலையி லெளிமையை யறிவித்தவளாய்விட்டது) என்று. "அறையோவென"-

இறையோவிரக்கினுமீங்கோர்பெண்பால் எனவுமிரங்காது,
அறையோவெனநின்றதிருங்கருங்கடல், ஈங்கிவள்தன்
நிறையோவினியுன்றிருவருளாலன்றிக்காப்பரிதால்
முறையோ, அரவணைமேல்பள்ளிகொண்டமுகில்வண்ணனே. ௬௨.

அர்த்தம்.—கருங்கடல் - கரியநிறத்தையுடைய ஸமுத்ரமானது, இரக்கினும் - யாசித்தாலும், ஓர் - ஸஹாயமில்லாத, பெண்பால் எனவும் - பெண் என்றாலும், ஈங்கு - இவள் விஷயமாக, இறை - கொஞ்சமும், இரங்காது - தயை செய்கிறதில்லை. அறையோ என-அறைகூவுவாரைப்போலே, நின்று-ஸ்திரமாயிருந்து, அதிரும் - கோஷியாநின்றது; ஓ - இதென்ன கொடுமைதான். அரவணைமேல் - ஆதிசேஷனாகிற படுக்கையின்மேலே, பள்ளிகொண்ட - சயனித்த, முகில்வண்ணனே - மேகம்போன்ற நிறத்தையுடைய ஓ ஸ்வாமி! ஈங்கு – இவ்விடத்தில், இவள் தன் - இவளுடைய, நிறையோ - அடக்கமோ வென்றால், இனி - இனிமேல், உன் திருவருளாலன்றி - உன்னுடைய க்ருபையினாலல்லது (வேறொன்றால்), காப்பு அரிது - ரக்ஷிக்கை துர்லபம். முறையோ - (இது) க்ரமமா? ௬௨.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—அறுபத்திரண்டாம் பாட்டு.—(இறையோ) கீழ் க்ருஷ்ணாவதார ஸௌலப்யத்தையிறே யநுஸந்தித்தது; அந்த அவதார ஸமகாலத்திலே தாமுளராகப்பெறாமையாலே வந்த வாற்றாமையாலே, கலந்து பிரிந்தாளொரு பிராட்டி தசையை ப்ராப்தரானார். அவள் பிரிவாற்றாமைக்கு மேலே கடலோசையும் பாதகமாகாநின்றதென்று திருத்தாயார் சொல்லுகிறாளாயிருக்கிறது.

வ்யா.—(இரக்கினு மீங்கோர் பெண்பாலெனவு மிறையோ விரங்காது) காலிலே விழுந்து சரணம்புகச்செய்தேயும் "சரணம் புகுகைதான் மிகையாம்படிக் கீடாயிறே இவள் தசை" என்று தசையைக்காட்டச்செய்தேயும், "புறம்பொரு புகலில்லாதாளொரு அபலைகிடாய்" என்னச்செய்தேயும் ஏகதேசமுமிரங்குகிறதில்லை. பாதகர்க்கித்தலையி லெளிமையை யறிவித்தவளவாய்விட்டது; "இத்தலை யெளிதாகில் நமக்கு நினைத்தபடி பாதிக்கலாமாகாதே" யென்று அதிலேயு முறைக்கைக்குடலாயிற்று. இதுதான் "சரணம்" என்றால்

---

அரு || அறுபத்திரண்டாம் பாட்டு.—(இறையோ) "இரக்கினும்"-சரணம்புகச்செய்தேயும், "ஈங்கு" -இந்தத்தசையைக்காட்டச்செய்தேயும், "ஓர்பெண்பாலெனவும்"-ஓரபலைகிடாயென்னச்செய்தேயும், "இறையும்" - அத்யல்பமும், "இரங்காது"-இரங்குகிறதில்லை. இவர்கள் "அபலை இரங்கவேணும்" என்று சொன்னவித்தால் பலித்ததென்னென்ன அருளிச்செய்கிறார் (பாதகர்க்கித்தலையி லெளிமையை யறிவித்தவளவாய்விட்டது) என்று. "அறையோவென"-

வ்யா||இரங்குமதன்றிக்கே அம்புக்குமுகங்காட்டுமதிறே. அது ஆர்த்திக்கிரங்குமதல்லவே அம்புக்கிரங்குமதிறே. தனக்குச்சரணமென்றாலிரங்குமதன்றே; தனக்கு மரணமானாலிரங்குமதிறே. (அறையோவெனநின்றதிருங்கருங்கடல்) "இங்ஙனேவெளியிலே புறப்பட்டாயோ? அறையோ வறை என்றறைகூறுவாரைப்போலே யிராநின்றது. (கருங்கடல்) அகவாயில் சீற்றமுடம்பிலே நிழலிட்டாற்போலே யிருக்கை. (க) "சிவப்புங்கறுப்புஞ்சினம்" என்னக்கடவதிறே.

(ஈங்கித்யாதி) இவ்வவஸ்த்தாபந்நையான விவளுடையவடக்கமானது. (உன் திருவருளாலன்றிக்காப்பரிதால்) உம்முடைய ப்ரணயித்வத்தால் நோக்குமெல்லை கழிந்ததிறே. ஸ்வரூபப்ரயுக்தமான க்ருபையாலே யல்லது நோக்கவொண்ணாதாய் வந்து விழுந்தது. ஊரார்சொல்லும் பழிக்கஞ்சி மீளுமெல்லையுங்கழிந்தது. (முறையோ) (௨) "தத்தஸ்யஸத்ருசம்பவேத் - தத்தஸ்யஸ்த்ருசம்பவேத்" என்றிருக்கும் நிலைகழிந்து கூப்பிட்டுப் பெறவேண்டும் தசையாய்வந்து விழுந்தது. (அரவணை யித்யாதி) செங்கற்சீரைகட்டிக் கூப்பிட்டாகிலும் பெறவேண்டும்படியாயிற்று வடிவழகும் படுக்கையும். (அரவணைமேல்) இவள் கடினஸ்த்தலத்திலே கிடக்க நீர்மெல்லிய படுக்கையைத் தேடிக்கிடக்கிறீரே. (முகில் வண்ணனே) இத்தை எம்பாரருளிச்செய்கிறபோது இயலைச்சொல்லுகிறவரைப்பார்த்து, "இவ்வளவில் முகங்காட்டாதே செங்கற்சீரை கட்டவிருக்கிறவர் முதலிகளாயிருப்பார், தலையிலே பிரம்புகள் விழிலும், 'முகில்வண்ணரே' என்னீர்" என்றருளிச்செய்தார். இருவருமானவன்று சேரநிற்கவும் பிரிந்தவன்று தாய்க்கூற்றிலே நிற்குமவரிறேயிவர்.

அரு||அறைகூவுவாரைப்போலே, "நின்று"-ஸ்வரூபமாயிருந்து, "அதிரும்" - கோஷியாநின்றது.

"நிறையோ" என்றது - அடக்கமானதென்றபடி. "முகில்வண்ணன்" என்றதுக்கு இரண்டுபொருள். அதாவது - வடிவழகைச் சொல்லுதல், அதவா - நீலமேகஶ்யாமனாயிருக்கிற விருப்பு பரத்வ ஸூசகமாகையாலே பரத்வத்தைச்சொல்லுதல். (தலையிலே பிரம்புகள் விழிலும்) என்றது - முதலிகளாயிருக்கச்செய்தே முகில்வண்ணனென்று ஏகவசநமாகச்சொன்னால் நம்மை ஏகவசநமாக உதாஸீநமாகச்சொல்லுகிறதென்னென்றபடி. ஆகையால், முகில்வண்ணனென்று ஏகவசநமாகச்சொல்லாதே வண்ணரென்று பூஜ்யமாகச்சொல்லீரென்றருளிச்செய்தாரென்றபடி. (பிரம்புகள் விழிலும்) என்றது - பிரம்புகள் விழிலும் விழுமென்றபடி. மிதுநமே உத்தேஶ்யமாயிருக்க எம்பார் பிராட்டி பக்ஷமாயிருந்து ஈஶ்வரனை வெறுக்கிறதென்னென்ன அருளிச்செய்கிறார் (இருவருமானவன்று) என்று.

(க) (௨) ஸ்ரீராமா-ஸுந்தர. ௬௬. ௩௦.

வ்யா|| ஸ்வாபதேசம்.—இப்பாட்டால், ஸ்வரூபத்தாலே பெறவிருக்கை யன்றிக்கே ஸ்வரூபத்தை யழித்தாகிலும் பெறவேண்டும்படியாற்றாமை கரைபுரண்டபடி சொல்லுகிறது. ௬௨.

---

அரு|| [கருங்கடலிரக்கினு மீங்கோர்பெண்பாலெனவு மிறையோ விரங்காது, அறையோவென நின்றதிரும் இனி ஈங்கிவள் தன்நிறையோ உன்றிருவருளாலன்றிக்காப்பரிது, அரவணைமேல் பள்ளிகொண்ட முகில்வண்ணனே முறையோ] என்றந்வயம். ௬௨.

[அப்பு அரும்பதம்.]

அறுபத்திரண்டாம் பாட்டு.—(இறையோ) (௧) "𑌮𑍇𑌤𑌰𑌣𑌂𑌵𑌾𑌸𑌾𑌗𑌰𑌸𑍍𑌯𑌮𑌰𑌣𑌂𑌵𑌾-மேதரணம்வாஸாகரஸ்ய மரணம்வா" என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (தனக்குச்சரணமென்றால்) இத்யாதி. கீழுக்கும் பலிதமாயிருக்கச்செய்தே மேலுக்கவதாரிகையருளிச்செய்கிறார் (ஊரார்) இத்யாதி. வெறுப்பாலே "பிரம்புவிழிலும், "முகில்வண்ணன்" என்று ஏகவசநமாகச்சொல்லாதே "முகில்வண்ணர்" என்று பூஜ்யமாகச்சொல்லுங்கோள்" என்றெம்பார். இவளோடேகூடி வெறுக்கலாமோவென்ன அருளிச்செய்கிறார் (இருவருமான) இத்யாதி. ௬௨.

[வேறொரு அரும்பதம்.]

அறுபத்திரண்டாம் பாட்டு.—(இறையோ) இத்யாதி. "ஈங்கு" என்றதின் தாத்பர்யம் (சரணம்புகுகைதான) இத்யாதி. "ஓர்" என்றத்தாலே புகலென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (பாதகர்க்கு) இத்யாதி. விவரணம் (இத்தனை) இத்யாதி. "இரங்கார்" என்று நிர்த்தரிக்கக்கூடுமோவென்ன (இதுதான்) இத்யாதி வாக்யபஞ்சகம், இனிக்கர்த்தம் "ஊரார்" இத்யாதி. "முகில்வண்ணனே"-என்று ஏகவசநமாகச்சொல்லாதே பூஜ்யமாக பஹுவசநமாகச்சொல்லும் என்றெம்பார் வெறுத்தாரென்கிறார் (இத்தை) இத்யாதி. மிதுநமுத்தேஶ்யமென்றிருக்கிறவரிப்படி வெறுக்கலாமோ வென்னவருளிச்செய்கிறார் (இருவருமான) இத்யாதி. ௬௨.

தாத்பர்யம்.—கிழநாஸந்தித்த க்ருஷ்ணாவதாரத்தை நேரே யநுபவிக்கப் பெறாமையாலே கலங்கி யோர் பிராட்டியவஸ்த்தையை யடைந்து, ஸம்ஸார கோலாஹலமாகிற கடலோசைக் காற்றமாட்டாத இவ்வாழ்வாராகிற நாயகியினுடைய அவஸ்த்தையை ஸுஹ்ருத்துக்களாகிற தோழிமார் சொல்லுகிறார்கள்.

இவளைப் பாதிக்கவொண்ணாதென்று கடலைச்சரணம் புகுந்தால் அது சரணாகதி தர்மமறியாதாகையால் கொஞ்சமுமிவள் விஷயத்தில் தயைபண்ணுகிறதில்லை. இவளோரபலை, இத்தனை பாதை பொறாளென்றாய், இதுவே நாம் நலிகைக்கு நல்லவிடமென்று பார்த்து ஜயகோஷம் பண்ணத்தொடங்கிற்று. இவளிப்படியிருக்க நீ ஸுகமாக அரவணைமேல் கண்வளராநின்றாய்,

---

(௧) ஸ்ரீராமா-யுத்த.௨௧-அ. "𑌅𑌦𑍍𑌯𑌮𑍇𑌮𑌰𑌣𑌂𑌵𑌾𑌪𑌿𑌤𑌰𑌣𑌂𑌸𑌾𑌗𑌰𑌸𑍍𑌯𑌵𑌾-அத்ய மே மரணம்வாபி தரணம் ஸாகரஸ்யவா" என்று இந்தஶ்லோகத்திலநுபூர்வி.

ஓ ஸ்வாமீ? இப்போது நீ இவளிடமருள்செய்து உன் வடிவழகைக்காட்டினு லல்லது இவள் ஜீவிக்க உபாயமில்லை. ஆகையால் ஒருகால் நீ வந்து தோற்ற வேணுமென்கிறார்கள். ௬௨.

வண்ணம்சிவந்துளவானாடமருங்குளிர்விழிய,
தண்மென்கமலத்தடம்போல்பொலிந்தன, தாமிவையோ
கண்ணன்திருமால்திருமுகந்தன்னொடும்காதல்செய்தேற்
கெண்ணம்புகுந்து,அடியேனொடிக்காலமிருக்கின்றவே. ௬௩.

அர்த்தம்.—வண்ணம் - நிறத்தினால், சிவந்துள - சிவந்திருப்பனவாய், வான் நாடு - பரமாகாசத்திலுள்ள நித்யஸூரிகள், அமரும் - தரிக்கும்படி, குளிர்-குளிர்ந்த, விழிய - கடாக்ஷங்களை யுடையனவாய், தண் - குளிர்ந்தும்-மெல்-ம்ருதுவுமாயிருப்பனவான,கமலம்-தாமரைகள்பூத்த,தடம்போல்,தடாகங்களைப்போலே, பொலிந்தன-ஸம்ருத்தமாயிருக்கின்றனவான, இவைதாம்-இக்கண்கள், திருமால் - ஶ்ரிய:பதியாய், கண்ணன்-ஆஶ்ரித பவ்யனான புருஷோத்தமனுடைய, திருமுகந்தன்னொடு-திருமுகமண்டலத்தோடு, (அதின் விஷயமாக), காதல்செய்தேற்கு - ஆசையையுடையவளான என்னுடைய, எண்ணம் - அபிஸந்திப்ரகாரம், புகுந்து - கைபுகுந்து (ஸ்வாதீநமாய்), அடியேனொடு - தாஸபூதையான என்னோடேகூட, இக்காலம் - இந்தகாலத்தில், இருக்கின்ற-இருக்கின்றன. ௬௩.

## [பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—அறுபத்து மூன்றாம்பாட்டு—"முறையோ" என்று கூப்பிட்டா லறியிரானிறே; வந்து குளிர நோக்குகிறான்.

வ்யா.—(வண்ணம்சிவந்துள) திருக்கண்களுக்குச் சிவப்பு பிறப்பே ஸ்வபாவமாயிருக்குமிறே.இப்போது "வண்ணஞ்சிவந்துள" என்கிறவித்தால் பூர்வாவஸ்த்தையிலும் வைவர்ண்யமத்தலையிலே யென்னுமிடந்தோற்றுகிறது.(க)"நஜீவேயம் க்ஷணமபி- நஜீவேயம் க்ஷணமபி" என்னு மாற்றாமையிலேற்ற மத்தலையிலேயிறே. ஆகையால் கண்ணும், காணாமையால் வந்த சிவப்பில். வைவர்ண்யம்தீர்ந்த திப்போதென்றுதோற்றும்படியிருக்கை. (வானாடமரும் குளிர்விழிய) த்ரிபாத்விபூதியாகக்கண்ணில் குமிழிக்கிழேயாயிற்று ஜீவித்துக்கிடப்பது. வானாடமரும்படியான குளிர்ந்த கடாக்ஷங்களையுடைய. அமருகையாவது-இத்தாலேயுண்டுடுத்துவர்த்திக்கை. தாரகபோஷகபோக்யமு

அரு|| அறுபத்துமூன்றாம்பாட்டு (வண்ணம்சிவந்துள) (கண்ணுங்காணாமையால் வந்த சிவப்பில் வைவர்ண்யந் தீர்ந்ததிப்போதென்று தோற்றும்படியிருக்கை) என்றது.—ஸர்வேஶ்வரனுடைய கண்ணானது இவ்வாழ்வாரைக் காணாமையால் ஸ்வாபாவிகமான சிவப்புக்குவந்த வைவர்ண்யந் தீர்ந்ததிப்போதென்று தோற்றும்படியிருக்கை யென்றபடி. அமருகை - தரிக்கை.

(க) ஸ்ரீராமா-ஸுந்தர ௬௬ - ௧௦.

வ்யா|| மெல்லா மிவையேயாயிருக்கை. (தண்ணித்யாதி) குளிர்ந்து ம்ருதுவா யிருப்பதொரு தாமரைப்பொய்கை பரப்புமாறப் பூத்தாற்போலே யாயிற்று திருக்கண்களிருப்பது.

(தாமிவையோ)(க)"தஸ்யயதா கப்யாஸம் புண்டரீக மேவமக்ஷிணீ- தஸ்யயதா கப்யாஸம் புண்டரீக மேவமக்ஷிணீ" என்று கேட்டார்வாய் கேட்டிருந்தோம். அவைதானிருக்கும்படியிதுவே ? (கண்ணன் திருமால்) திருமால் கண்ணன். ஸ்ரியஃபதியாகையாலே யாஸ்ரிதர்க்குக் கையாளானவன். (திருமுகந்தன்னொடுங் காதல் செய்தேற்கு) அழகிய திருமுகத்தோடே வந்து குளிர நோக்கவேணு மென்றாசைப்பட்டவெனக்கு. (எண்ணம்புகுந்து) நான் மநோரதித்தபடியே கைபுகுந்தென்னுதல் ; அன்றிக்கே, எண்ணம்புக்கென்றாய், என்னுடைய மநோரதத்தைத் தானேறிட்டுக்கொண்டு.(அடியேனொடு) (உ) "ஜிதம்- ஜிதம்" என்கிறார். அஹமர்த்தத்தினுடைய ஸ்வரூபந்தான் அடியேனென்றுபோலே காணுமிருப்பது. ஜீவஸ்வரூபபரமான வாக்யத்திற்படியேயிறே சொல்லுகிறது. அது ஜீவஸ்வரூப பரமோவென்றால் (ங) "ஓமித்யாத்மாநம் யுஞ்ஜீத- ஓமித்யாத்மாநம் யுஞ்ஜீத" என்றுமுண்டு; (ச)"ஓங்காரோபக வாந்விஷ்ணுঃ-ஓங்காரோபக வாந்விஷ்ணுঃ" என்றும் சொல்லாநின்றதிறே. (இக்காலம்) இப்பேற்றுக்கு வருமாறு முன்னாளறிந்திலேன்கிடீர். (இருக்கின்றவே) (ரு)"ந ச புநராவர்த்ததே- நசபுநராவர்த்ததே" என்னும் பேற்றைப் பெற்றோமென்று தோன்றியிராநின்றது. ஒருநாளு மினிப்பிரிகைக்கு ஸம்பாவனை யில்லையென்று தோற்றும்படியிரா நின்றது. ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமாகிலுமிவர்க்கு ஸமாநாகார மென்று தோற்றாதே, ப்ரத்யக்ஷமென்றிறே தோற்றுவது. சுங.

அரு||"அடியேன்"என்றதுக்கு இரண்டுபொருள்.அதாவது - கண்ணழகுக்குத் தோற்று அடியேனென்கிறாராதல், ஸ்வாபாவிகமான சேஷத்வத்தையிட்டுச் சொல்லுகிறாராதல். சேஷத்வமே ஸ்வரூபமென்று எந்த ப்ரமாணத்தையிட்டுக்கொண்டு அருளிச்செய்கிறாரென்ன அருளிச்செய்கிறார் (ஜீவஸ்வரூபபரமான வாக்யத்திற்படியேயிறே) என்று, ஜீவஸ்வரூபபரமான வாக்யமாவது ப்ரணவம். இத்தால், ப்ரணவம் ஜீவஸ்வரூபபரமாயும் ஈஸ்வரஸ்வரூபபரமாயுமிருக்கும், ஆகையால் ஜீவஸ்வரூபபரமான வாக்யத்திலென்னக் குறையில்லை. என்றபடி. "இவையோ" என்கைக்கு இவர்க்கு ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமொழிய ப்ரத்யக்ஷமாகவில்லையேயென்ன அருளிச்செய்கிறார்(ப்ரத்யக்ஷஸமாநாகாரமாகிலும்) என்று. "இருக்கின்றவே" என்ற அவதாரணத்துக்குத் தாத்பர்யம், "ந ச புநராவர்த்ததே" என்று. இந்த வாக்யத்தை விவரிக்கிறார் (ஒருநாளுமினி) என்று.

(க) சாந்தோக்யம் க-சு-எ. (உ) ஜிதஸ்தோ.
(ங) தைத்திரீயம் - நாராயணம்-ருக. (ச) (ரு) சாந்தோக்யம்-அ-கரு.

அரு||[சிவந்தவர்ணத்தையுடையனவாய், வாருடமரும்படியான குளிர்ந்த கடாக்ஷத்தையுடையனவாய், தண்மென்கமலத்தடம்போல் பொலிந்திருப்பன வான இந்தக் கண்களானவை. திருமால் கண்ணனுடைய திருமுகந்தன்னொடும்காதல்செய்த என்னுடைய எண்ணம் புகுந்தபடி அடியேனொடு இக்கால மிருக்கின்றது] என்றந்வயம். சுகூ.

[அப்பு அரும்பதம்.]

அறுபத்துமூன்றும்பாட்டு (வண்ணம்)(நோக்கினன்)—அக்கண்ணழகிலே ஈடுபடுகிருரென்று பூரிப்பது. (குமிழ்)—மதகு. "தடம்போல் பொலிந்தன தாம்" என்று விசேஷ்யமானகண்ணைச்சொல்லுகிறது முற்றுவமை. "அடியேன்" குணக்ருதமாதல், ஸ்வரூபப்ரயுக்தமாதல், இவற்றைவாக்யத்வயத்தாலே அருளிச்செய்கிருர்(ஜிதம்என்கிருர்) என்று. அஹமர்த்தஸ்வரூபம் தாஸ்யமெகைக்குப்ரமாணமேதென்ன அருளிச்செய்கிருர். (ஜீவஸ்வரூப)இத்யாதி. வாக்யம் - ப்ரணவம். "ராஜபுருஷ:" என்கிற சப்தப்ராதாந்யத்தாலே ஜீவபரமும், ராஜ்ஞ: புருஷ:, என்கிற அர்த்த ப்ராதாந்யத்தாலே பகவத் பரமுமாயிருக்குமென்றபடி. மாநஸத்தை "இருக்கின்றவே" என்று ப்ரத்யக்ஷமாகச் சொல்லும்படி யென்னென்ன அருளிச்செய்கிருர் (ப்ரத்யக்ஷஸமாநாகார) இத்யாதி. [தாமிவையோ இக்கால மிருக்கின்ற] என்றந்வயம். சுகூ.

[வேறொரு அரும்பதம்.]

அறுபத்து மூன்றும்பாட்டு (வண்ணம்) இத்யாதி. (குளிரநோக்கினன்) என்ற வநந்தரம் அத்தாலுரு வெளிப்பாடாய் அதைப்பேசி அநுபவிக்கிருரென்று கூட்டுவது. (அத்தலையிலே) என்றவநந்தரம், உண்டாயிற்றென்று சேஷம். ஹேதுவை அருளிச்செய்கிருர் (ஸஜீவேயம்) இத்யாதி. (குமிழ்)-மதகு. சப்தார்த்தம் (வாருடு) இத்யாதி "பொலிந்தன" என்றதின் தாத்பர்யம் (பரப்புமாற) என்றது. "தாம்" என்றது ஶ்ருதிப்ரஸித்தியை ஸூசிப்பிக்கிறதென் றருளிச்செய்கிருர் (தஸ்ய) இத்யாதி. (வாக்யத்திலே) என்றது-ப்ரணவத்திலே, சப்தத:ஜீவன் ப்ரதாநமாகத் தோற்றுகையாலே தத்பரமென்பதும், ஆர்த்தத: பகவத்ப்ராதாந்யபரமாகையாலே பகவத்பரமென்றுஞ்சொல்லலா மென்கிருர் (ஓம்) இத்யாதி. விவரணம்(ஒருநாளும்) இத்யாதி. "இருக்கின்றவே" என்கிற அவதாரணத்தாலே நிஶ்சிதமென்று தோற்றுகையாலே அருளிச்செய்கிருர் (ப்ரத்யக்ஷ) இத்யாதி. சுகூ.

தாத்பர்யம்.—கீழ், நாயகியினார்த்தியைச் சொல்லித் தோழிமார் முறையிட்டதைக்கேட்டு நாயகனை ஸர்வேஶ்வரன் வந்து ஆழ்வாராகிய நாயகியைக்குளிரக் கடாக்ஷிக்க, அக்கடாக்ஷத்தி லீடுபட்டு அருளிச்செய்கிருர்.

நானித்தனைகாலமாய், ஆஶ்ரிதஸுலபனை ஶ்ரிய:பதியினது திருமுக மண்டலத்தை ஸேவிக்க ஆசைப்பட்டிருக்க, ஆஶ்ரிதவத்ஸலனை அந்த ஸர்வேஶ்வரன், நித்யஸூரிகளுக்கெல்லாம் ஜீவநஹேதுவாய், தாமரைத்தடாகம்

போல் சைத்யமார்த்தவாதி ஸகலகுண பரிபூர்ணமாய், பரத்வஸூசகமாகச் சிவந்திருக்கிற தன்னுடைய திருக்கண்களினாலென்னை இப்போது குளிரக் கடாக்ஷித்து என்மநோரதத்தை நிறைவேற்றினான். சுங

இருக்கார்மொழியால்நெறியிழுக்காமை, உலகளந்த
திருத்தாளிணைநிலத்தேவர்வணங்குவர், யாமுமவா
ஒருக்காவினையொடுமெம்மொடும்நொந்துகனியின்மையில்
கருக்காய்கடிப்பவர்போல், திருநாமச்சொற்கற்றனமே. சுச

அர்த்தம்.—இருக்கு - ருக்வேதத்திலுள்ள, ஆர்-பூர்ணமான (பரதத்வஸ்வரூபத்தை விசதமாக ப்ரதிபாதிக்கிற), மொழியால்-புருஷஸூக்தத்தினால், நெறி - பகவதாராதநரூபமான பரமதர்மத்தை, இழுக்காமை - தவறாமல், நிலத்தேவர் - பூஸுரர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள், உலகு-லோகத்தை, அளந்த - ஆக்ரமித்த, திருத்தாளிணை - இணைந்ததிருவடிகளை, வணங்குவர்-ஆச்ரயிப்பர்கள். யாமும் - நாமும், அவா - ஆசையை, ஒருக்கா - (பகவத்விஷயத்தில்) சேரவொட்டாத, வினையொடும் - பாபத்தோடும், எம்மொடும் - எம்மோடும் (இவ்விரண்டு ஸ்வரூபத்தையும் பார்த்து), நொந்து - வருந்தி, கனி இன்மையில் - பழமில்லாததினால், கருக்காய் - செங்காயை, கடிப்பவர்போல்-தின்பவர்களைப்போலே, திருநாமச்சொல் - அர்த்தாநுஸந்தாநமில்லாத திருநாமத்தை, கற்றனம் - கற்றோம். சுச.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—அறுபத்து நாலாம்பாட்டு.—திருக்கண்களாலே குளிரக் கடாக்ஷித்தானென்றிறே கீழ்நின்றது. "அல்லாதார் மேல்வையாதே தம்மேல் விசேஷ கடாக்ஷம் பண்ணுகைக்கு நிபந்தநமென்" என்றாராய்ந்தார்; "அஹ்ருதயமாகத் திருநாமத்தைச் சொன்னோமென்ன அத்தாலே யாகாதே" என்கிறார்.

வ்யா.—(இருக்கார்மொழியால்) இருக்கிலார்ந்த மொழியாலே. ப்ரதிபத்தாக்களுடைய புத்தி விசேஷங்களாலே அரவயிறாகவும் பதறாகவும் பார்க்கலா யிருக்குமிடங்களுண்டாயிருக்குமாயிற்று. வேதங்களிலே அவன் விபூதியைப் பரக்கச்சொல்லாநின்றால் அதிலேகதேச பூதரானவர்கள் பக்கலிலே பரத்வப்ரதிபத்தியைப் பண்ணியும் ப்ரசம்ஸாபரமென்றும் சொல்லா நிற்பர்கள்; அவன்ஸ்வரூபரூபகுண விபூதிகளைப் பேசுகிறவிடத்தில் ஸ்வரூபரூபகுண

அரு|| அறுபத்து நாலாம்பாட்டு - (இருக்கார்) (இருக்கார் மொழியால்) ருக்வேதத்திலே ஶ்லாக்யதையேதென்ன, ஸாதாரண சப்தங்களாலே ஸர்வேச்வரனைச் சொல்லுகையன்றிக்கே நாராயணாத் யஸாதாரண சப்தங்களாலே ஸர்வேச்வரனைப்ரதிபாதிக்கை யென்று அருளிச்செய்கிறார் (ப்ரதிபத்தாக்களுடைய) என்று, இத்தைவிவரிக்கிறார் (அவன்விபூதியை) என்று.

வ்யா|| விபூதிகளில் ப்ரமிப்பார்க்கும் ப்ரமிக்கஅவகாசமில்லாதபடி பே சுகிறஅநந்யபரமான நாராயணாநுவாகாதிகளையாயிற்று அதிலார்ந்த மொழியாகச் சொல்லுகிறது. (க) "ஸர்வே வேதா யத்ரைகம்பவந்தி - ஸர்வேவே தாயத்ரைகம்பவந்தி" எல்லா வாக்யங்களுக்கு மொருவனே வாச்ய னாகையிறே யுக்தம். உத்க்ருஷ்டபதார்த்தங்களுக்கு வாசகமான சப்தங்களை இவ்வநுவாகத்திலே நின்றவன்பக்கலிலே ப்ரயோகிக் கையாலே எல்லாமவனையே சொல்லுகிறதாக வேணுமிறே. (நெறி யிழுக்காமை) பகவத்ஸமாராதநமாகிற வைதிகமர்யாதையைத் தப் பாமே. (உலகளந்ததிருத்தாளிணை) "இவை அறியவுமாம், அறியா தொழியவுமாம், என்னுடம்பை நான்விடேன்" என்று ஸ்வீகரிக்கும் ஸ்வபாவனாயுள்ளவனை. இவை அறியாதிருக்கச்செய்தே தானே எல் லை நடந்து மீட்டுக்கொண்டானிறே. (நிலத்தேவர்வணங்குவர்) ஸம் ஸாரத்திலே வர்த்தியாநிற்கச்செய்தே (உ) "விண்ணுளாரிலுஞ் சீரி யர்" என்னும்படியான பூஸுரரானவர்கள். (உலகளந்த திருத்தாளி ணை நெறியிழுக்காமை வணங்குவர்).

(யாமும்) அவர்களுடைய பரிகர மின்றிக்கேயிருக்கிற நானும், (அவா ஒருக்காவினையொடு மெம்மொடும் நொந்து) சப்தாதி விஷ யங்களிலே யுண்டான ஆவாவை பகவத்விஷயத்திலே யொருங்கப்ப ண்ணவொட்டாத பாபத்தோடும் அத்தை யநுஷ்டித்தவென்னோடும் கூடநொந்து-இப்படியேயிருப்பதொரு பாபமுண்டாவதே! இத்தை யநுஷ்டிக்கைக்கு நானொருவனுண்டாவதே! என்று நொந்து. (கனி யின்மையில்கருக்காய் கடிப்பவர்போல்) நெறியிழுக்காமைவணங்கும் படி யவர்கள் தன் பாகமெனக் கில்லையேயாகிலும், கனியில்லாமை யாலே கருக்காயை மெல்லுவாரைப்போலே - பழமில்லாமையாலே

அரு|| (ப்ரமிப்பார்க்கும் ப்ரமிக்க அவகாசமில்லாதபடி) என்றது-சிவசம்பு சப்தங்களாலே சொன்னால் ப்ரமிக்கலாம், அஸாதாரணமான நாராயண தி சப்தங்களாலே சொல்லுகையாலே ப்ரமிக்க அவகாசமில்லையென்றபடி. ஸாதாரண சப்தங்களும் ஸர்வேச்வரனையே சொல்லுமோ வென்ன (ஸர் வே வேதாயத்ரைகம்பவந்தி.) என்று. (உத்க்ருஷ்ட பதார்த்தங்களுக்கு வா சகமான சப்தங்களை இவ்வநுவாகத்திலே நின்ற அவன் பக்கலிலே ப்ரயோ கிக்கையாலே) என்றது - சிவசம்ப்வாதி சப்தங்களும் (௩) (ப்ரகரணாத்) கதி ஸாமாந்யந்யாயத்தாலே இந்த நாராயணாநுவாகத்திலே அவன் பக்கலிலே ப்ரயோகிக்கையாலே என்றபடி.

(அவர்களுடைய பரிகரமின்றிக்கே இருக்கிற நானும்) என்றது-அவர்க ளைப்போலே சாஸ்த்ரமர்யாதை தப்பாமேயாச்ரயிக்கும்படி அதிகாரமில்லா த நானுமென்றபடி. மெல்லுகை-பக்ஷிக்கை, கருக்காய்- பசுங்காய். இத்தால், பழமில்லாமையாலே காயைக் கடிப்பாரைப்போலே சாஸ்த்ரமர்யாதை தப்

(க) (உ) திருவிருத்தம். ௭௩. (௩) ப்ரஹ்மஸூத்ரம், க-௧-௧௧,

வ்யா|| பசுங்காயைக் கடிப்பாரைப்போலே. (திருநாமச் சொற்கற்றன மே)இதிலர்த்தாநு ஸந்தாந மெனக்கில்லை. இதில் நானுட்புகாதநிலை பார்க்கிறிலன், நிர்ஹேதுகமாகக் கடாக்ஷித்தானித்தனை. அன்றிக்கே, (அவா வித்யாதி) பகவத்விஷயத்தி லபிநிவேசத்தை யங்கு நின்றும் மீட்டு இதர விஷயங்களிலே மடைமாற வொட்டாத வினையுண்டு— பக்தி, அத்தோடும். இப்போது பகவதலாபத்தாலே படுகிற க்லேசத்துக்கு ஹேதுவாகையாலே பக்தியை வினையென்னலாமிறே. அநிஷ்டாவஹும் பாபமாமித்தனையிறே. இதில்லாதார் ருண்டுடுத்து ஸுகமேதிரியாநின்றார்களிறே.(கனியின்மையில்கருக்காய் கடிப்பவர் போல்) கனியில்லாமையாலே கருக்காயைக் கடிப்பாரோபாதி யாயிற்று இவருடைய வபிநிவேசத்துக்குத் திருநாமம். அவனைக் கண்ணாலே கண்டு கையாலே யணைக்கவாசைப்பட்டவர்க்கு அவன் பேரைக் கொண்டு என்றெய்வார்? அன்றிக்கே, "கனியின்மை" இத்யாதிக்கு இங்ஙனே பொருளாகவுமாம். மேல்கனியின்றிக்கேயொழியும்படி முன்பே கருக்காய் கடிப்பாரைப்போலே, நித்யஸூரிகளுக்கு போக்ய மன்றிக்கே யொழியும்படி இவ்வஸ்துவை நான் பேசியழித்தேனென்கிறாராகவுமாம். ௬௪.

அரு|| பாமே வணங்கும்படி அவர்களைப்போலே அதிகாரமில்லையேயாகிலும் திருநாமமாத்ரஞ் சொன்னேன்; இத்தைவ்யாஜமாக்கி நிர்ஹேதுகமாகக் கடாக்ஷித்தானென்றபடி.

[நிலத்தேவர் உலகளந்த திருத்தாளிணை இருக்கார்மொழியால் நெறியிழுக்காமை வணங்குவர். சதுர்த்தவர்ணத்வாத் இதுக்கதிகாரியாகாத நானும் அவா வொருக்காவினையொடு மெம்மொடும் நொந்து கனியின்மையில் கருக்காய் கடிப்பவர் போல் திருநாமச்சொல்கற்றனம், இம்மாத்ரங்கொண்டு நிர்ஹேதுகமாகக் கடாக்ஷித்தான்] என்றந்வயம். இம்மாத்ரங்கொண்டு நிர்ஹேதுகமாகக் கடாக்ஷித்தானென்றத்யாஹரித்துக்கொள்வது. ௬௪.

[அப்பு அரும்பதம்.]

அறுபத்துநாலாம்பாட்டு—(இருக்கார்) வேதத்திலே ஆராதமொழியுண்டோ? "ஆர்" என்று விசேஷிப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (ப்ரதிபத்தாக்கள்) இத்யாதி. ப்ரதிபத்தாக்கள்-ப்ரதிபத்திபண்ணுகிற ஸத்துக்கள். நாராயணநுவாக ப்ரதிபாத்யனே பரதத்வமென்னவேண்டுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (ஸர்வேவேதா:) இத்யாதி. ப்ரஹ்மாதிகளையும் சம்புசிவாதி சப்தங்களாலே உத்க்ருஷ்டர்களாகச் சொல்லுகிறதே யென்ன வருளிச்செய்கிறார் (உத்க்ருஷ்டபதார்த்த) இத்யாதி. (பரிகரமின்றிக்கே) ஸமாராதநோபகரணமான வேதஜ்ஞாநாதிகளின்றிக்கே. பக்தி அநிஷ்டமானபடி யெப்படியென்ன வருளிச்செய்கிறார் (இதில்லாதார்) இத்யாதி.

(என்றெய்வார்) என்செய்வார். பிற்பட்ட விரண்டுயோஜனைகளுக்கும் கீழ்ச் சொன்ன விவர்களைப்போலே "நெறியிழுக்காமை" என்று தெளிந்தாச்ரயிக் கையன்றிக்கே பக்திபரவசனாயநுபவிக்கப் பெறுமை யிழந்தேனென்றும், அவர்களநுபவிக்கும் விஷயத்தைக்கிட்டி அவத்யத்தை விளைத்தேனென்றும் விஷாதத்திலே தாத்பர்யம். ௬௪.

[வேறொரு அரும்பதம்.]

அறுபத்துநாலாம்பாட்டு (இருக்கார்) இத்யாதி. வேதங்களிலே ஆராத மொழி ஒன்றுண்டோ? விசேஷிப்பானென்னென்ன வருளிச்செய்கிறார். (ப்ர திபத்தாக்களுடைய) இத்யாதி. "அரைவயிறாகவும்" என்றத்தையும், "பத றாகவும்" என்றத்தையும் விவரிக்கிறார் (அவன்) இத்யாதி. நாராயணாநு வாக ப்ரதிபாத்யனே பரதத்வமென்னவேண்டுவானென்னென்ன வருளிச் செய்கிறார் (ஸர்வே) இத்யாதி. ப்ரஹ்மாதிகளையும் ஹிரண்யகர்ப்ப சம்பு சிவாதி சப்தங்களாலே உத்க்ருஷ்டர்களாகச் சொல்லுகிறதேயென்ன வருளிச்செய்கிறார் (உத்க்ருஷ்ட) இத்யாதி. உலகுபதிவாஸனை (இவை) இத்யாதி. சுமாரத்துக்குத் தாத்பர்யம். (அவர்களுடைய) இத்யாதி. திரு நாமங்கற்றனமேயென்றதே "சொல்" என்றதுக்குபாவம். (இதில்) இத் யாதி. அவாவை இதரவிஷயத்ருஷ்ணையாக்கி அருளிச்செய்து பகவத் விஷயத்ருஷ்ணைதானாக வருளிச்செய்கிறார் (அன்றிக்கே) இத்யாதி. ௬௪.

தாத்பர்யம்.—கீழ்ப்பாசுரத்தில் ஸர்வேச்வரன் தம்மைக் கடாக்ஷிக்கை க்குக் காரணமேதென்றாராய்ந்து, நானவன் திருநாமத்தைச் சொன்னதையே வ்யாஜமாக்கி நிர்ஹேதுகமாகக் கடாக்ஷித்தானென்றருளிச்செய்கிறார்.

தேவதாந்தர ஸாதாரணமான சம்புசிவாதி சப்தங்களைக்கொண்டு பரத் வஸ்வரூபத்தைச்சொல்லி மந்தமதிகளை ப்ரமிப்பிக்கிற மற்றவாக்யங்களைப் போலன்றிக்கே, அஸாதாரண நாமமான நாராயணநாமத்தைக் கொண்டு ஸுஸ்பஷ்டமாகப் பரத்வ ஸ்வரூபத்தை யறுதியிடுகிற புருஷஸூக்த மந்த்ரங் களினால் அர்த்தாநுஸந்தாந பூர்வகமாகக் குறைவற பகவச்சரணாரவிந்தத்தை ஸமாராதநம் பண்ணுகிற ஸ்ரீவைஷ்ணவர்களைப்போலே பகவத்ஸமாராதநோ பயோகியான, மந்த்ரம், அதினுடைய அர்த்தஜ்ஞாநம் முதலிய உபகரண மில்லாத நான், கேவலம் பக்திபரவசனாய்க்கொண்டு அவனுடைய திருநாம ங்களை அர்த்தாநுபவமு மின்றிக்கேசொல்ல, அவ்வவைகளையே வ்யாஜமாகக் கொண்டு நம்மைக்கடாக்ஷித்தான்.

கற்றுப்பிணைமலர்க்கண்ணின்குலம்வென்று, ஓரோகருமம்
உற்றுப்பயின்றுசெவியொடுசாவி, உலகமெல்லாம்
முற்றும்விழுங்கியுமிழ்ந்தபிரானார்திருவடிக்கீழ்
உற்றுமுறுது, மிளிர்ந்தகண்ணாயெம்மையுண்கின்றவே. ௬௫.

அர்த்தம்.—கன்று - இளம்பருவத்தையுடைய, பிணை - மான்பேடையி னுடைய, மலர் - மலர்ந்த, கண்ணின் - கண்களுடைய, குலம் - ஸமூஹத்தை,

வென்று - ஜயித்து, ஓரோகருமம் - ஒருகாரியத்தை, உற்று - அத்யவஸித்து, பயின்று - (அதைச்செய்ய) முயன்று, செவியொடு - காதுகளோடே, உசாவி - (அக்காரியத்தை)ஆலோசித்து, உலகமெல்லாம் - ஸகலலோகங்களையும், முற்றும்-ஸம்பூர்ணமாக, விழுங்கி - (ப்ரளயகாலத்தில்) உண்டு, உமிழ்ந்து-(ஸ்ருஷ்டிகாலத்தில்) வெளிப்படுத்தின, பிரானார் - உபகாரகரான ஸ்ரியஃபதியினுடைய, திருவடிக்கீழ் - ஸ்ரீபாதத்தின் கீழே, ( இருந்து ), உற்றும் - ( என்னிடத்தில் ) பொருந்தியும், உறாதும் - பொருந்தாததுமாய், மிளிர்ந்த - சேர்ந்திருக்கிற, கண்ணாய் - கண்என்று பேரை யுடையதாய்க் கொண்டு, எம்மை - நம்மை, உண்கின்ற - ( இரண்டு வஸ்துக்கள் ) க்ரஸியா ( நலியா ) நின்றன. சுரு.

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.— அறுபத்தைந்தாம்பாட்டு.— தலைமகள் நோக்கி லீடுபட்ட தலைமகன் அக்கண்கள் தனக்கு பாதகமாகிறபடியைப் பாங்கனுக்குச் சொல்லுகிறான்.

வ்யா (கற்றுப்பிணைமலர்) கன்றான மான். முக்தமான மானினுடைய கண். (மலர்க்கண்) மலர் போலேயிருக்கிற கண்ணென்னுதல்; விகஸிதமான கண்ணென்னுதல். (குலம் வென்று) அஜ்ஜாதியாக வென்று, (ஓரோகரும மித்யாதி) ஓரோகார்யத்திலேயுற்று-அதிலே நெருங்கி;அதைச்செவியோடே யுசாவி ஸர்வ விஷயமாயோரிடத்திலும் பற்றின்றிக்கேயிராமே யொன்றிலே துணிந்து: அதிலே நெருங்கி அத்தைத்தேசிக ரோடே(க)(போ⁴த⁴யந்த꞉ பரஸ்பரம்)போதயந்தஃபரஸ்பரம்பண்ணுவாரைப்போலே இவனையேஸவிசேஷமாகக் கடாக்ஷிப்பது ; *இவன் பார்த்தவாறே கண்ணை மாறவைப்பதானபோ திருந்தபடி. (உ) "யானோக்குங்காலை நிலநோக்கு நோக்காக்கால் தானோக்கி மெல்லநகும்" என்கிறபடியே.

---

அரு||அறுபத்தைந்தாம் பாட்டு.—(கற்றுப்பிணைமலர்) -கன்றான மானினுடைய மலர்போலே யிருக்கிற, கண்ணின்குலம் வென்று."ஓரோ கருமம் உற்று"-அத்யவஸித்து, "பயின்று"-அந்தக்கார்யத்திலே நெருங்கி, அதாவது-இவனையே ஸவிசேஷமாகக் கடாக்ஷித்ததென்றபடி. "செவியொடுசாவி" அத்தைச்செவியோடே விசாரித்து. அதாவது—இவன்பார்த்தவாறே கண்ணைமாறவைப்பதானபோது செவியோடே விசாரம் பண்ணினாற்போலே இருந்ததென்றபடி.இவன் பார்க்கும்போது நாயகி கண்ணைமாறவைக்கு மென்பதுக்கு ஸம்வாதமாக ஒருகுறள் அருளிச்செய்கிறார்,(யானோக்குங்காலை)என்று.இதுக்குப் பொருள்-நாயகனானவன்பார்க்கும்போது நிலம்நோக்கும் - பூமியைப்பார்த்துக் கொண்டிருக்கும், நோக்காக்கால்-நோக்காதபோது, தானோக்கி-தான்பார்த்து, மெல்ல நகும் - மந்தஹாஸத்தைப்பண்ணும்.

---

(க) கீதை-க0-கூ. (உ)

வ்யா||(உலகமெல்லாமித்யாதி) ஸர்வரக்ஷகனானவன் திருவடிகளிலே யிருந்து. அவனெல்லைக்குள்ளே யிருந்தாயிற்று பாதகமாகிறது. (உற்றுமுறுதுமிளிர்ந்த) மறுபாடுருவும்படி இவனை நோக்குவது, அந்நோக்கிலே பரவசனாய் இவன் பார்த்தவாறே அந்நோக்கை மாற வைப்பதாய்க்கொண்டு மிளிராநின்றுள்ள. (கண்ணுமெம்மை யுண்கின்றவே) கண்ணென்கிற வ்யபதேசத்தாலே யொருபாதக பதார்த்தமென்னை நலியாநின்றது.

ஸ்வாபதேசம்-இத்தால், ஆழ்வார்படியைக்கண்டவர்களிருக்கிற படியிறேயிது. "கற்றுப்பிணை மலர்க்கண்ணின்குலம்வென்று" என்கிற வித்தால்-கார்யபுத்தியில்லாத மௌக்த்யத்தை நினைக்கிறது. "ஓரோ கருமமுற்றுப்பயின்று" என்கிற வித்தால்—ப்ரபத்தியைச்சொன்னபடியிறே. இதுபின்னை ஜ்ஞாநகார்யமன்றோ? கீழ்ச்சொன்னமௌக்த்யமிதுக்குச் சேர்ந்தபடியெங்ஙனேயென்னில், அதில் கர்த்தவ்யதா புத்தியின்றிக்கே யிருக்கையை நினைக்கிறது. இது தன்னைச்செய்யாநிற்கச் செய்தே ஸாதநத்திலந்வயியாதே ஸ்வரூபத்திலே யந்தர்ப்பவித்திருக்குமிறே. "கண்ணுமித்யாதி" சொன்னபடியை யுடையராயிருக்கிற விருப்பு தான் கண்டாரை யீடுபடுத்துகிறபடியைச் சொல்லுகிறது. ௬௫

அரு||"திருவடிக்கீழ்" என்றது-திருவடிக்கீழேயிருந்தென்றபடி.

(கார்யபுத்தியில்லாத மௌக்த்யத்தை நினைக்கிறது) என்றது தம்முடைய ஜ்ஞாநத்திலுபாயத்வ புத்தியில்லாத மௌக்த்யத்தை நினைக்கிறது என்றபடி. "ஓரோகருமமுற்றுப்பயின்று" என்று - கார்யத்திலுண்டான அத்யவஸாயஞ்சொல்லுகையாலே - அத்யவஸாயாத்மகமான ப்ரபத்தியைச்சொல்லுகிறது. (அதில் கர்த்தவ்யதா புத்தியின்றிக்கேயிருக்கையை நினைக்கிறது) என்றது - ப்ரபத்தி ஜ்ஞாநகார்யமானாலும் மௌக்த்யத்தாலே அதில் அநுபாயத்வபுத்தியை நினைக்கிறதென்றபடி. ப்ரபத்திபண்ணாநிற்க உபாயமாகாதபடி யென்னென்ன அருளிச்செய்கிறார் (இது தன்னைச் செய்யாநிற்கச்செய்தே)என்று. (சொன்னபடியையுடையராயிருக்கிற விருப்புத்தான்) என்றது - எல்லாருடைய ஜ்ஞாநத்தையும் விளாக்கொலைகொள்ளும்படியான ஜ்ஞாநவைபவத்தையுடையராயிருக்கிற விருப்பு என்றபடி.

[ கற்றுப்பிணை மலர்க்கண்ணின் குலம் வென்றிருப்பதாய், ஓரோகருமமுற்றுப்பயின்று செவியொடுசாவினாற்போலே யிருப்பதாய், உலகமெல்லாம் முற்றும் விழுங்கி யுமிழ்ந்த பிரானார் திருவடிக்கீழேயிருந்து உற்றுமுறுதும் மிளிர்ந்தகண்ணு மெம்மை உண்கின்ற] என்று அந்வயம் ௬௫.

[அப்பு அரும்பதம்.]

அறுபத்தைந்தாம் பாட்டு.—(கற்றுப்பிணை.) மலர்பக்ஷத்தில் போக்யதையிலே. கண்செவியோடே உசாவுகையை உத்ப்ரேக்ஷிக்கிறார் (ஸர்வவிஷயமாய்) இத்யாதி. நாயகன் பார்த்தால் கண்ணைமாறவைக்குமென்னு மதுக்குக்குற ளருளிச்செய்கிறார் (யாரேனுக்குங்காலை) இத்யாதி. நாயகன்வார்த்தை. நான் பார்க்கும்போது நாணி பூமியைப்பார்க்கும்; நான்பாராதபோது என்னைப்பார்த்து மந்தஸ்மிதம் பண்ணுமென்றபடி. (அவனெல்லைக்குள்ளே) இத்யாதிக்கு - ரக்ஷகனெல்லையிலேயிருந்தால் பாதகமாகக்கூடாதென்று தாத்பர்யம்.“திருவடிக்கீழ் இருந்தென்று அத்யாஹாரியம்.(ஆழ்வார்படியை)-ஆழ்வார் ஜ்ஞாந வைபவத்தை, கண்டுபடுகை. ஸ்வாபதேசத்தைப்பதந்தோறுங் காட்டுகிறார் (கற்றுப்பிணைமலர்) இத்யாதி. (கார்யபுத்தி) கர்த்தவ்ய மென்கிறஸ்வகதத்தைக்கழிகை. (உற்றுப்பயின்று) என்று-அத்யவஸாயஞ்சொல்லுகையாலே ப்ரபத்தியைச் சொன்னபடி. கர்த்தவ்யமென்கிற புத்தியின்றிக்கே பண்ணினாலும் ஸ்வீகாரமுபாயமாகாதோ வென்னவருளிச்செய்கிறார் (இதுதன்னை) இத்யாதி. (சொன்னபடியை யுடையராய்) ப்ரபத்தி நிஷ்டராயிருக்கிற விருப்பு சுரு.

[வேறொரு அரும்பதம்.]

அறுபத்தைந்தாம் பாட்டு,—(கற்றுப்பிணை)இத்யாதி, கீழே அஹ்ருதயமாகத் திருநாமச்சொல்கற்றத்தாலே கண்ணனுடைய கண்ணிலே யகப்பட்ட வாழ்வார்கண்ணிலே யகப்பட்டாருடையபடி இப்பாட்டிலே சொல்லுகிறதென்று ஸங்கதியுட்கொண்டு அவதாரிகையருளிச் செய்கிறார் (தலைமகள்) இத்யாதி. (மலர்க்கண்)என்றதுக்கர்த்தாந்தரம்(விகஸிதமான) இத்யாதி.(நெருங்கி)என்றது-“பயின்று”என்றதினர்த்தம். பயின்றென்றும் உசாவி யென்றும் சொன்ன பதங்களின்வாஸனையையருளிச்செய்கிறார்(ஸர்வ)இத்யாதி“உற்றுமுறுதும்” என்றதைக்கடாக்ஷித்துவ்யாக்யாதா தாத்பர்ய மருளிச்செய்கிறார் (இவனை) இத்யாதி. மேலுக்கவதாரிகையென்றுமாம். (கண்ணைமாறவைக்கும்)என்றதுக்கு ஸம்வாதமாகக்குறளை அருளிச்செய்கிறார்(யாநோக்கும்)இத்யாதி. காலை-ஸமயத்திலே,நோக்காக்கால்-பாராதபோது,கீழ்வாக்ய விவரணம்(அவன்)இத்யாதி, “இருந்து” என்று “கீழ்” என்ற வநந்தரம் மூலத்திலே கூட்டுவதென்று திருவுள்ளம். கர்த்தவ்யதாபுத்தியில்லாவிட்டால் செய்வானென்னென்ன வருளிச்செய்கிறார் (இது) இத்யாதி. சுரு.

தாத்பர்யம்.— ஆழ்வாருடைய ஜ்ஞாநவைபவத்தி லீடுபட்ட அன்பர் பாசுரத்தை, நாயகியின் நோக்கிலகப்பட்டுரைத்த நாயகன்பேச்சா லருளிச்செய்கிறார்.

ஓதோழனே! ஏதோ இரண்டுவஸ்துக்கள் இரண்டு கண்களாய் வடிவெடுத்துக்கொண்டு என்முன்னே தோற்றி என்னைத் தன்னழகிலீடுபடுத்தி

மற்றொருகார்யத்திற்கு யோக்யதையற்றவனாய்ப் பண்ணுகிறது. இவையெப்படியிருக்கிறதென்றால்,—லோகத்திலதிஸுந்தரமென்றுபேர்பெற்ற மான்பேடைகளின் கண்ணழகுகளை யொன்றாகச்சேர்த்தாலும் தன்னழகுக்கு ஸாம்யம்போராதபடி அதிஸுந்தரமாயிருக்கிறது, நான் அந்யத்ருஷ்டியாயிருக்கும்போது என்னையேபார்த்தும், நான்திரும்பிப் பார்க்கும்போது, என்னைப்பார்க்கலாமா கூடாதாஎன்று செவியோடே ஆலோசிக்கப்போவதுபோல் என்னிடத்தில்நின்றும் திரும்பிச்செவியளவும்நீண்டுலாவாநின்றன. இவை, ஸகலஜகத்ரக்ஷகனான ப்ரியःபதியின் திருவடிக்கீழிருந்து அவனுடன் பழகியிருந்தும், அவனைப்போல் தானும் எனக்கு ரக்ஷகமாகவேண்டியிருக்க அதைத்தவிர்ந்து என்னைப் பாதிக்க முயன்றதே. இதுக்கு என்பாபமேயன்றோ காரணம் என்கிறான்.

௬௫.

உண்ணாதுறங்காதுணர்வுறுமெத்தனையோகியர்க்கும்,
எண்ணாய்மிளிருமியல்வினவாம், எரிநீர்வளிவான்
மண்ணாகியவெம்பெருமான்றனதுவைகுந்தமன்னாள்
கண்ணாயருவினையேன், உயிராயினகாவிகளே. ௬௬.

அர்த்தம்.—எரி - அக்நிக்கும், நீர் - ஜலத்துக்கும், வளி - காற்றுக்கும், வான் - ஆகாசத்திற்கும், மண் - பூமிக்கும் - ஆகிய- அந்தராத்மாவான, எம்பெருமான்தனது - எனக்குபகாரகனான ப்ரியःபதிக்கஸாதாரணமாகிய, வைகுந்தமன்னாள் - ஸ்ரீவைகுண்டம்போன்ற(போக்யதையுடையளான) இவளுடைய, கண்ணாய் - கண்களென்று பேராயுடையனவாய், அரு - க்ரூரமான, வினையேன் - பாபத்தையுடைய எனக்கு, உயிராயின - ப்ராணன்களான, காவிகள் - செங்கழுநீர்ப்புஷ்பங்களானவை, உண்ணாது - புஜியாமலும், உறங்காது - நித்ரைசெய்யாமலும், (இருந்து), உணர்வு - (ஆத்மயாதாத்ம்ய) ஜ்ஞாநத்தை, உறும் - அடைந்திருக்கிற, எத்தனையோகியர்க்கும் - எவ்வளவு பெரியோர்களான யோகாப்யாஸம்பண்ணுகிறவர்களுக்கும், எண்ணாய் - நினைக்கும்படி, மிளிரும் - ப்ரகாசிக்கிற, இயல்வினவாம் - ஸ்வபாவத்தை யுடையவைகளாயிராநின்றன.

௬௬.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—அறுபத்தாறும்பாட்டு.—தலைமகள் கண்ணழகிலே யீடுபட்ட தலைமகன் வார்த்தையிதுவும்.

வ்யா.—(உண்ணாதித்யாதி)ப்ராக்ருதபோகங்களால் தரியாதாராய், "ப்ராக்ருதிப்ராக்ருதங்கள் த்யாஜ்யம்" என்கிறபுத்தியே யன்றியே "உபாதேயமான வாத்மவஸ்து உத்தேஸ்யம்" என்னும் புத்தியையுடையராய், அவ்வாத்மவஸ்துதான் "ஸ்வதந்த்ரம்" என்றிருக்கையன்றிக்கே ஆத்மயாதாத்ம்ய ஜ்ஞாநபூர்வகமாக ஈஶ்வரஜ்ஞாநத்தையுடைய

வ்யா||ராய்“இது அவனுக்குப்ரகாரம்” என்றிருக்கும்படி பரமயோகம் கைவந்திருந்துள்ள அவர்களுக்கும். எண்ணாய்மிளிரும்யல்வினவாம்” அவர்களு மிக்கண்ணுக் கிலக்காஞராகிலவர்களுக்கு மபாஸ்ரயமான பரதத்வந்தன்னையுங் காற்கடைகொண்டு இத்தையே “அது அது” என்றெண்ணும்படி ப்ரகாசிக்கையே ஸ்வபாவமாயுள்ளன.

(எரி யித்யாதி)காரணமான பூத பஞ்சகங்களும் கார்யஜாதத்துக் கெல்லாமுபலக்ஷணம். அக்நி, நீர், காற்று, ஆகாசம், பூமி, இவை யடையத்தனக்கு விபூதியாகவுடையவன். (எம்பெருமான்) அவனுடைய விபூதியோகம் தமக்குப் பேறாயிருக்கிறபடி, அவனுடைய குணங்களோபாதி விபூதியோகமும் தமக் குத்தேஸ்யமாயிருக்கிற படி. (தனது வைகுந்தமன்னாள்) மானுவிபோலே ஆவதழிவதாம் விபூதிபோலன்றிக்கே, ஒருநாளுமழியாததாய், அவனுக்கஸாதாரணமாய், அந்தரங்கமாயிருக்கும் நித்யவிபூதியோடொத்துள்ளவள். அவனுடைய அழியாத விபூதியோடொத்திருக்கிறவள். (கண்ணாயித்யாதி) அப்படிப்பட்டவள் பக்கலிலேவந்தவாறே ப்ராதாந்யவயவமாய், என்பக்கலிலே வந்தவாறே, அச்சேத்யமாய் அதாஹ்யமாய் அழியாததாயிருந்துள்ள ஆத்மவஸ்துவாய், பாதகமாமிடத்தில் ஸ்வதந்த்ரமாய், கண்ணுக்கு விஷயமாய் நின்று பாதகமாகாநின்றன. (அருவினையேன்) ரக்ஷகமானவையே பாதகமாம்படியான பாபத்தைப்பண்ணினேன். (உயிராயினகாவிகளே; அவள் பக்கலிலேவந்தவாறே கண்ணாய், என்பக்கலிலேவந்தவாறே உயிராய், இவைதான் நிரூபித்தவாறேவடிவு சில காவிகளாயிராநின்றன. (உயிராயினகாவிகளே) உயிர்தான் கொண்டுநின்று பாதகமாமோ?

---

அரு|| அறுபத்தாறும்பாட்டு.— (உண்ணாதுறங்காது.) “உண்ணாது”- போகவிரோதி யென்று ப்ராக்ருதபதார்த்தங்களை புஜியாதேயிருப்பாராய், “உறங்காது” நித்ரையின்றிக்கே யிருப்பாராய், “உணர்வுறும்”-ஆத்மயாதாத்ம்யஜ்ஞாந பூர்வகமான ஈஸ்வர ஜ்ஞாநத்தையுடையாராய், “எத்தனை யோகியர்க்கும்” - ஈஸ்வரனுக்கு ப்ரகாரமாமென்றிருக்கும்படி யோகம் கைவந்திருக்கிறவர்களுக்கும். “எண்ணாய்” - எண்ணும்படி - “மிளிரும்” - ப்ரகாசிக்கையே, “இயல்வினவாம்”-ஸ்வபாவமாயுள்ளன.

“தனது” என்கையாலே (அஸாதாரணமாய்) என்கிறார். “காவிகளே” என்றதுக்குத்-தாத்பர்யமருளிச்செய்கிறார்(பாதகமாமிடத்தில்ஸ்வதந்த்ரமாய்) என்று - “உயிராய்” என்று, தாரகமாயிருக்குமென்று சொல்லுகையாலே (ரக்ஷகமானவையேபாதகமாம்படியான) என்கிறார்.

ஸ்வாபதேசம்.—இத்தால், ஆழ்வாருடைய ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயைக்கண்டநுபவிக்கிற பாகவதர்களுக்கு (க) "தேவுமற்றறியேன்" என்னும்படியாயிறேயிருப்பது. அவர்களிவரையாதரிக்கிறது பகவத்ஸம்பந்தத்தாலேயிறே; அதுக்கடியான பகவத்விஷயத்தை யநாதரித்து மிவரையாதரிக்கவேண்டும்படி இவர்க்கு ஸ்ரீவைஷ்ணவத்வந்தலைநிரம்பினபடியைச்சொல்லுகிறது. சரமாவதியைக் கண்டநுபவித்தவர்கள் ப்ரதமாவதியில் நில்லார்களிறே. சுசு.

---

அரு॥ பூர்வார்த்தத்துக்கு ஸ்வாபதேசமருளிச்செய்கிறார் (இத்தால் ஆழ்வாருடைய) என்று. உத்தரார்த்தத்துக்கு ஸ்வாபதேசமருளிச்செய்கிறார் (அவர்களிவரை ஆதரிக்கிறது) என்று பகவத் ஸம்பந்தத்தை யிட்டிவரை யாதரிக்கிறார்களாகில் ஈஸ்வரனை உபேக்ஷிக்கிறதென்னென்ன அருளிச்செய்கிறார் (சரமாவதியைக்கண்டு) என்று.

[எரிநீர்வளிவான் மண்ணாகிய வெம்பெருமான் தனது வைகுந்தமன்னாள் கண்ணாயருவினையே னுயிராயினகாவிகள், உண்ணாதுறங்காதுணர்வுறுமெத்தனையோகியர்க்கு மெண்ணாய் மிளிருமியல்வினவாம்] என்றந்வயம். சுசு.

[அப்பு அரும்பதம்.]

அறுபத்தாறும் பாட்டு.(உண்ணாது)(தரியாதாராய்)-அத்தாலே தரியாதே ஜ்ஞாநத்தாலே தரித்திருக்கை. "மானவி" - மஹாநவமிச்சோலை. "காவி."- செங்கழுநீர். காவியானது அவளிடத்திலே கண்ணாய், அவள்கண்ணழகு ஸ்ம்ருதிவிஷயமாய் தாரகமாகையாலே எனக்காத்மாவாய், தரிக்கைக்குடலாயிற்று. இனி ரூபகமாமிடத்திலே, அவள் கண்ணுக்குஸ்மாரகமாய், தனியேமுன்னே நின்று நலியாநின்றதென்றபடி. ரூபகமாக்கியருளிச்செய்கிறார் (உயிர்தான்) இத்யாதி. "கண்" என்றுஜ்ஞாநஸ்ரீயைச் சொல்லுகிறது. பகவச்சேஷபூதரிவரை ஆதரிக்கிறதெத்தாலேயென்ன வருளிச்செய்கிறார் (அவர்களிவரை) இத்யாதி. அப்படிப்பட்டவனை யநாதரித்து மிவரைப்பற்றவேண்டுவானென்னென்னவருளிச்செய்கிறார் (அதுக்கடியான) இத்யாதி, பலிதத்தையருளிச்செய்கிறார் (சரமாவதியை) இத்யாதி."வைகுந்தமன்னாள்"என்கையாலே அவனோட்டை ஸம்பந்தந்தோற்றுகிறது.

[எரிநீரென்று தொடங்கி காவிகள்எண்ணாய் மிளிருமியல்வினவாம்] என்றந்வயம். சுசு.

[வேறொரு அரும்பதம்.]

அறுபத்தாறும் பாட்டு.—(உண்ணாது) இத்யாதி. கீழேபாங்கன், "இங்ஙனிவள்கண்ணிலே ஈடுபடுவானென்னென், புண்டரீகாக்ஷன் கண்ணிலேயன்றோ ஈடுபடுவது" என்ன, "அவர்களுமித்தைக்கண்டாலத்தை மறப்பர்களத்தனை" என்கிறதாக ஸங்கதியிட்டுக்கொண்டருளிச்செய்கிறார்(தலைமகள்) இத்யாதி."உண்ணாதுறங்காது" என்றதுக்குபாவம்(ப்ராக்ருத)இத்யாதி. "எத்தனை"என்றதுக்குக் கருத்து(அவ்வாத்ம)இத்யாதி. "எரிநீர்வளிவான் மண்ணாகிய வெம்பெருமான்"

---

(க) கண்ணிநுண்சிறுத்தாம்பு-உ.

என்றத்தைக்கடாக்ஷித்த யோகத்தை விசேஷிக்கிறார் (இதலனுக்கு) இத்யாதி. "எண்ணாய்" என்னுக்கு விஷயமாய் என்றுக்கிவ்யாவர்த்ய பூர்வகமருளிச்செய்கிறார் (அவர்களும், இத்யாதி. விவரணம் அவனுடைய) இத்யாதி. (மானுவி)-மனுஷ்யாநவமிக்குச்செய்யும் க்ருத்ரிமோபத்யாநம். "தனது" என்றதின்பலிதமருளிச்செய்கிறார் (அவனுக்கு) இத்யாதி, "காவிகள்" என்றதுக்குக்கருத்தருளிச்செய்கிறார் (பாதக) இத்யாதி. அவயவமாகாதே பூவாகையாலேஸ்வதந்த்ரமும் ஆத்மாவைப்போலே அதீந்த்ரியமாகாதே முன்னேதோற்றுகையாலே, த்ருஸ்யமுமாயிருக்குமேகாவிக ளென்றுகருத்து. [எரிநீர் இத்யாதி காவிகள் உண்ணுதித்யாதி இயல்வினைவாம்] என்றந்வயம்.  ௬௬.

தாத்பர்யம்.— இதில் ஆழ்வாருடைய ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயி லீடுபட்ட ஸ்ரீவைஷ்ணவர்களின் பாசுரத்தை, நாயகியின் கடாக்ஷத்தி லீடுபட்டநாயகன் வார்த்தையினாலுரைக்கிறார்.

நாயகியின் நோக்கில் நீ இவ்வளவு ஈடுபடக் கூடுமோவென்று தோழன் கேட்க, அப்பா! செங்கழுநீர்போன்ற சைத்ய ஸௌகந்த்யாதிகளையுடையதாய், இதைக்கண்டேநான் ப்ராணதாரணம் பண்ணும்படி எனக்கு நற்சீவனாய், ஸகலஜகத்ஸ்வாமியான ஸ்ரிய:பதிக்கு போகோபகரணமான ஸ்ரீவைகுண்ட திவ்யநகரம்போல் அபரிச்சிந்நபோக்ய வைபவத்தையுடைய இவளுடையதாயிருக்கிறஇக்கண்ணில் ஈடுபடுவது நானொருவனேயன்று. தபோவிரோதிகளான அந்நபாநாதிகளையும்விட்டு, ஸம்ஸாரம் ஹேயமென்றும் ஸ்ரிய:பதியே பரமப்ராப்யனென்றும் அத்யவஸித்திருக்கிற வைராக்யத்தையுடைய மஹாயோகிகளுக்குங் கூட இக்கண்ணைக்கண்டபின் மீண்டொரு கார்யத்தை நினைப்பதரிதாய்விடும். இவ்வழகிய கண்ணை நிரந்தரமநுபவிக்கப்பெறாத பாக்யஹீநனாய் விட்டேன் என்கிறான்.  ௬௬.

காவியும்நீலமும்வேலுங்கயலும்பலபலவென்று,
ஆவியின்றன்மையளவல்லபாரிப்பு, அசுரைச்செற்ற
மாவியம்புள்வல்லமாதவன்கோவிந்தன்வேங்கடம்சேர்
தூவியம்பேடையன்னாள், கண்களாயதுணைமலரே.  ௬௭.

அர்த்தம்.— அசுரை - அஸுரர்களை, செற்ற - ஸம்ஹரித்தவனாய், மா - பெருமையையுடையவனும், வியம் - ஆஸ்சர்யகரமான வ்யாபாரத்தையுடையவனுமான, புள் - கருத்மானை, வல்ல - (வாஹநமாக) நடத்தவல்லவனாய், மாதவன் - ஸ்ரிய:பதியாய், கோவிந்தன் - கோபாலனான ஸர்வேஸ்வரனுடைய, வேங்கடம் - திருவேங்கடமென்கிற திவ்யதேசத்தில், சேர் - நித்யவாஸம் செய்கிற, அம் - அழகிய, தூவி - இறகுகளையுடைய, பேடையன்னாள் - அன்னப் பேடைபோன்ற நாயகியினுடைய, கண்களாய - நேத்ரங்களென்று சொல்லப்படுகிற, துணை - ஒன்றோடொன்று சேர்ந்த, மலர் - புஷ்பங்களாகிற (இவற்றினுடைய), பாரிப்பு - பரம்புகை, காவியும் - செங்கழுநீரையும்,

நீலமும் - கருநெய்தலையும், வேலும் - வேலாயுதத்தையும், கயலும் - மத்ஸ்யங்களையும், பலபல - மற்றுமுள்ள அநேகவஸ்துக்களையும், வென்று - ஜயித்து, ஆவியின் - ஆத்மாவினுடைய, தன்மை - ஸ்வபாவத்தின், அளவல்ல - ப்ரமாணத்தையுடைய தாகமாட்டாது. (அதை அதிக்ரமித்திருக்கும்). கூஎ.

## [பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—அறுபத்தேழாம்பாட்டு.—இப்பாட்டுங் கண்ணழகு தன்னையே தலைமகன் சொல்லுகிறான்.

வ்யா.—(காவியுமித்யாதி) இக்கண்ணுக்கொப்பு தேடப்புக்கால் (க) "விஷ்ணுநா ஸத்ருசோவீர்யே - விஷ்ணுநா ஸத்ருசோவீர்யே" என்கிறபடியே ஓரோவாகாரங்களாலே யொன்றாகப்பலவற்றையும்பிடித்தால் எல்லாங்கூட ஒப்பாகவற்றோ? மாட்டாதோ? வென்னும்படி யிறே இவைதானிருப்பது. "விஷ்ணுநா ஸத்ருசோவீர்யே - விஷ்ணுநா ஸத்ருசோவீர்யே" பரத்வம் வீர்யகுணமொன்றுக்கு மொப்பாமித்தனை. இப்படி சீலாதிகளைக்கண்டநுபவிக்கவொண்ணாதிறே யங்கு. சிவப்பாலே செங்கழுநீரைவென்று, கருமையாலே நெய்தலைவென்று, ஓராளுமொருநோக்கும்நேராயிருக்கும்படியாலே வேலைவென்று, மௌக்த்யத்தாலே கயலைவென்று, மற்றுமொப்பாகச் சொல்லுமவற்றையடையப்புக்கவிடம் புக்குவென்று. (ஆவியின்தன்மையளவல்ல பாரிப்பு)"தன்னடையேயழியுமவற்றை யழிக்கைவெற்றிக்குடலோ?"வென்று அழியாததான ஆத்மவஸ்துவையும் அழிப்பதாகக் கோலாநின்றது. (ஆவியின் தன்மையளவல்ல) இவ்வாத்மவஸ்துவினளவன்றிக்கே இதினுடைய ஸத்தாஹேதுவான பதார்த்தத்தளவுஞ் செல்லுவனபோலே யிராநின்றது. இவளுடைய அவயவங்கள் அவனையுங் கூடமலக்கவல்ல போலேகாணும்.

(அசுரையித்யாதி) அஸுரவர்க்கத்தையடையவழியச்செய்து மஹானாய்அவன்தன்னோபாதியும்பெரியனாய்விஸ்மயநீயமான வ்யாபார

---

அரு||அறுபத்தேழாம்பாட்டு—(காவியும்.)(ஒப்பாகவற்றோ மாட்டாதோ) என்றது- ஒப்பாமோமாட்டாதோ வென்றபடி. "ஆவியின்தன்மையள வல்லபாரிப்பு" என்றத்துக்கு இரண்டு பொருள். அதாவது—ஆவியென்று ப்ராணனாய், அழியுமவையான ப்ராணன்களையழிக்கை வென்றிக்குடலோவென்று அழியாததான ஆத்மவஸ்துவையும் அழிப்பதாகக் கோலாநின்றதென்னுதல்; அதவா- ஆவியென்று ஆத்மாவாய், ஆத்மவஸ்துவளவன்றிக்கே ஆத்மாவுக்கு ஸத்தாஹேதுவான ஈஶ்வரனையு மழிப்பதாகக் கோலாநின்றதென்னுதல். அப்படி ஈஶ்வரனை யழிக்கவற்றோவென்ன அருளிச்செய்கிறார் (இவளுடைய அவயவங்கள்) என்று.

"அசுரை" என்றது - அஸுரவர்க்கத்தை என்றபடி. "மா" மஹானாய்,

---

(க) ஸ்ரீராமா - பால க - கஅ.

வ்யா||ங்களையுடையனாயிருந்துள்ள பெரியதிருவடியைக் கருத்தறிந்து நடத்தவல்லவன்.(மாதவன்)கருடவாஹநனானவேற்றத்துக்குமேலே லக்ஷ்மீபதியென்னுமேற்றத்தையுடையவன்.(கோவிந்தன்) அவளோட்டைக்கலவியாலே ஆஶ்ரிதஸுலபனாய், அந்த ஸௌலப்யந்தான் பரத்வமென்னும்படி திருமலையிலேவந்து ஸுலபனானவன். கோவிந்தனதான வேங்கடத்திலே சேருமதாய், புறம்போரிடத்திலும்பொருந்தாததான தூவியம் பேடையுண்டு-அழகிய சிறகையுடைய அன்னப்பேடை, அத்தோடொத்திருந்துள்ளவள். அன்றிக்கே,"தூவியம் பேடை"என்று பெரியபிராட்டியாரைச்சொல்லிற்றாய்,அவளோடொத்திருந்துள்ளவளென்னவுமாம். "கருடவாஹநன், லக்ஷ்மீபதி" என்கிறவிவை இப்போது சொல்லுகிறதென்னென்னில், ஸௌலப்யத்தைச் சொல்லநினைத்து அது குணமாகைக்கடியான பரத்வத்தைச் சொல்லி, பின்பு அந்தஸௌலப்யத்தினெல்லையிலே வந்தார். (கண்களாயதுணைமலரே)கண்களென்கிற வ்யபதேசத்தாலே ஒன்றுக்கொன்றொப்பாயிருப்பன இரண்டுபூக்களாயிற்றின. [கண்களாயதுணை மலரின் பாரிப்பு காவியும் நீலமும் வேலும் கயலும் பலபலவென்றாவியின்தன்மையளவல்ல.]

ஸ்வாபதேசம்-இத்தால்,"திருமலையிலேவந்து நிற்கிறவனுடைய சீலகுணத்திலே வித்தராயிருக்கிற வாழ்வார்படி போக்தாக்களளவல்ல" என்று ஸ்ரீ வைஷ்ணவர்கள் சொல்லுகிறபாசுரத்தைப் பார்ஶ்வஸ்த்தர் பாசுரத்தால் தாமநுபவிக்கிறார். சுஎ.

---

அரு||அதாவது. அவுன் தன்ஞோபாதிபெரியனாய், "வியம்" விஸ்மயநீயமான வ்யாபாரங்களையுடைய. "புள்" பெரியதிருவடியை. [அசுரைச்செற்றமாவியம் புள்வல்லமாதவன் கோவிந்தன் வேங்கடஞ்சேர் தூவியம் பேடையன்னாள கண்களாய துணைமலரினுடைய பாரிப்பு, காவியும் நீலமும்வேலும் கயலும் பலபலவென்றாவியின் தன்மையளவல்ல] என்றந்வயம். சுஎ.

[அப்பு அரும்பதம்.]

அறுபத்தேழாம் பாட்டு.—(காவியும்) ஒன்றுபோராதோ? அநேகத்ருஷ்டாந்த மிடவேண்டுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (இக்கண்ணுக்கு) இத்யாதி. ஸத்தாஹேது-ஈஶ்வரன். ஈஶ்வரனையுங்கலக்க வற்றோவென்ன வருளிச்செய்கிறார் (இவளுடைய) இத்யாதி. (இப்போது)-ஸௌலப்யப்ரகரணத்திலேயென்று சங்காபிப்ராயம். "காவி" என்கிற சிவப்பாலே ராகத்தைச்சொல்லி பக்தி நிஷ்டரையும், "நீலம்" என்கிற அஞ்ஜனத்தாலே ப்ரகாசத்தைச்சொல்லி ஜ்ஞாநநிஷ்டரையும், "வேலுங்கயலும்" என்கிற சகாரத்தாலே கர்மநிஷ்டரையும், இவர்களெல்லாரையும் ஜயித்திருக்குமாழ்வாருடைய ஜ்ஞாநமென்றபடி. சுஎ.

[வேறொரு அரும்பதம்.]

அறுபத்தேழாம்பாட்டு.—(காவியும்) இத்யாதி. பரமயோகிகளுக்கு மெண்ணாய் மிளிருகைக்கு இவற்றுக்கு வைலக்ஷண்யமென்னென்ன, யோகித்யே யவஸ்துவுக்கு மயிமதமாம்படி அத்தனை யேற்றமென்று பாங்கனுக்கறிவிக்கிறதிப்பாட்டென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (இப்பாட்டும்) இத்யாதி.பலவற்றை வென்றதாகச் சொன்னத்தாலே வ்யாவர்த்யம் காட்டா நின்றுகொண்டு பாவமருளிச்செய்கிறார் (இக்கண்ணுக்கு) இத்யாதி. (ஸத்தாஹேதுவான பதார்த்தம்)-ஈஶ்வரதத்வம்.(அவனையும்). ஈஶ்வரனையும். "அம் தூவிபேடை" அன்னமென்னுதல், அன்னம்போன்ற வலர்மேல் மங்கையாதல். என்றிரண்டர்த்த மருளிச்செய்கிறார் (கோவிந்தன்) இத்யாதி வாக்யத்வயத்தாலே.

தாத்பர்யம்.—இதில், திருவேங்கடமுடையானுடைய சீலாதிகுணங்களிலீடுபட்ட ஆழ்வாருடைய ஜ்ஞாநவைபவத்தை யநுபவிக்க ஒருவருக்கும் ஸாத்யமன்றென்று ஸ்ரீவைஷ்ணவர்களுரைத்த பாசுரத்தை, நாயகியின் நேத்ரஸௌந்தர்யத்தி லீடுபட்டநாயகனுக்தியாலே யருளிச்செய்கிறார்.

துர்வர்க்ககர்வ பஞ்சநார்த்தமாக,விசித்ரசக்தியையுடையனாய்மஹாமஹிமசாலியான பெரியதிருவடி மேலேறி ஸஞ்சரித்து அஸுர ஸம்ஹாரம் பண்ணின ஶ்ரிய:பதி, பரத்வாஸாதாரண சிஹ்நமான தன்னுடையகருடவாஹநத்வத்தையும் ஶ்ரிய:பதித்வத்தையும் பாராமல் ஆஶ்ரிதர்க்குத் தன்னையநுபவிப்பிக்கைக்காக ஸர்வஸுலபனாய் வந்தவதரித் தெழுந்தருளியிருக்கிற திருவேங்கடம் திருப்பதியில் நித்யவாஸம் பண்ணுகிற அழகிய இறகுகளையுடைய ஹம்ஸம் போன்ற நடையழகையுடைய இந்நாயகி யினுடைய இணைந்த புஷ்பங்கள்போன்ற கண்களானவை, கடைக்கண் சிவப்பினால், செங்கழுநீரையும், கருவிழியின் கருமையினால் கருநெய்தலையும், நோக்கின் கூர்மையினால்வேலாயுதத்தையும், ஆகார ஸௌந்தர்யத்தினால் சேண்டைகளையும், இப்படியே தன்னுடைய மற்றுமுள்ள குணங்களினால் மற்றவஸ்துக்களையும் அதிசயித்து என்னுத் மாவையுமபஹரித்து எனக்கு ரக்ஷகனுனஶ்ரிய: பதியையும் வசீகரிப்பதாய் வ்யாபிக்கத் தொடங்கிற்று. ஆகையால் நான் இதில் நின்றும் மீளசக்தனுகிறிலேன்.

௬௭.

---

மலர்ந்தேயொழிந்திலமாலையும்மாலைப்பொன்வாசிகையும்,
புலந்தோய்தழைப்பந்தல்தண்டுறநாற்றிப்,பொருகடல்சூழ்
நிலந்தாவியவெம்பெருமான்றனதுவைகுந்தமன்னாய்
கலந்தார்வரவெதிர்கொண்டு, வன்கொன்றைகள்கார்த்தனவே. ௬௮.

அர்த்தம்.—பொரு - அலையெறிகிற, கடல் - ஸமுத்ரத்தினால், சூழ் - சுற்றப்பட்ட, நிலம் - பூமியை, தாவிய - அளந்த, எம்பெருமான் தனது - ஸர்வேஶ்வரனுடைய, வைகுந்தமன்னாய் - ஸ்ரீவைகுண்டம் போன்ற (போக்யையான) வளே! வன் - ஐஶ்வர்யத்தையுடைய, கொன்றைகள் - கொன்றை மரங்கள், கலந்தார்-(உன்னோடு) ஸம்ஶ்லேஷித்தஸர்வேஶ்வரனுடைய,

வரவு - வரவை, எதிர்கொண்டு - எதிர்பார்த்துக் கொண்டு, கார்த்தன - கர்ப்பத்தை (அரும்புகளை) யுடைத்தாயின. மாலையும் - மாலையாக (ஸரமாக) வும், மாலை - மாலையாகச் செய்யப்பட்ட, பொன்-ஸுவர்ணமயமான, வாசி கையும் - ஸ்ரமாகவும், புலம் - பூமியிலே, தோய் - படிந்த, தழை - செழித்த, பந்தல்-பந்தலாக, தண்டு - கிளைகளிலே, உற - பொருந்தி, நாற்றி - தொங்க விட்டு, மலர்ந்தேயொழிந்தில-பூர்ணமாகப் பூக்கவில்லை. சுஅ.

## [பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—அறுபத்தெட்டாம்பாட்டு.—கலந்து பிரிந்த தலைமகன் "கொன்றைபூக்குங்காலத்திலே வருகிறேன்" என்று காலங்குறித்துப்போனானாய், அக்காலம்வந்து அவையும் பூக்கச்செய்தே அவன் வாராமையாலே தலைமகள் தளர, அத்தைக்கண்ட தோழியானவள், அக்காலமல்லவென்னவொண்ணாதபடியதுமூடுகிக்கொடு நிற்கையாலே. "இவை பூக்க உத்யோகிக்கிறனவித்தனை, பூத்துச்சமைந்தன வில்லைகாண்,ஆனபின்பு அவனும்வந்தானத்தனை, நீயஞ்சாதேகொள்" என்று அவளையாஸ்வஸிப்பிக்கிறாள்.

வ்யா.—(மலர்ந்தே யொழிந்தில) "அக்காலமல்லகாண்" என்னுமேதோழி, "கெடுவாய்!இவை யிங்ஙனே மலராநிற்க அல்லகாணென்னும்படி யெங்ஙனே" என்ன, மலர உபக்ரமித்த வித்தனைகாண். மலர்ந்து சமைந்ததில்லைகாண். (மாலையித்யாதி) மாலைகளாகவும், அம்மாலைகளாலேசமைந்தபொன்வாசிகைபோலே சுருளவுமிறேயவைவுதான்பூப்பது. கண்டாருடைய விந்த்ரியங்கள் அபஹ்ருதமாம்படி யென்னுதல். தரையிலேவந்துதோயும்படி யென்னுதல. "தழைப்பந்தல் தண்டுறநாற்றி மலர்ந்தேயொழிந்தில" என்னுதல், "தண்டுற நாற்றிக்கார்த்தன" என்னுதல். தழைப்பந்தலாகப்பணைகள் தோறும்-கண்கள்தோறும், நாற்றி,

---

அரு|| அறுபத்தெட்டாம்பாட்டு— (மலர்ந்தே).— (அது முடுகிக்கொடு நிற்கையாலே) என்றது - அந்தக்கொன்றைகளானவை இப்படி பூத்து நிற்கையாலே என்றபடி.

"மலர்ந்தே யொழிந்தில" பூக்கைக்கு உத்யோகிக்கிறன வித்தனை, நன்றாகவிகஸிக்கவில்லை என்றபடி. * இந்தவிரண்டையுஞ் சொல்லுகிறது "மாலை"என்னும்"மாலைப் பொன்வாசிகை"என்றும், "புலந்தோய்"என்றதுக்கு இரண்டுபொருள், அதாவது - "புலம்" என்று இந்த்ரியங்களாய், "தோய்கை" - அபஹரிக்கையாய், இந்த்ரியங்கள் அபஹ்ருதமாம் படியென்னுதல்; அதவா, "புலம்" என்று பூமியாய், "தோய்கை" ஸ்பர்சிக்கையாய், தரையிலேவந்து தோயும்படியென்னுதல் "தழைப்பந்தல் தண்டுற நாற்றி மலர்ந்தே யொழிந்தில" என்னுதல் - "தண்டுறநாற்றிக்கார்த்தன" என்னுதல்.

---

* இந்த விரண்டையும் தொடங்கி வாசிகையும் என்றும் என்னுமளவும் ஸந்திக்தம். மாத்ருகையும் சிதிலம்.

வ்யா||(பொருகட லித்யாதி) அவனுடைய அழியாத நித்ய விபூதியோ டொத்துள்ளவளல்லையோ? நீ; அவனுன்னை யழியவிட்டிருக்குமோ? ஆவதழிவதொரு விபூதியும் அழியக்கூடாததொரு விபூதியுமாயிறே யிருப்பது. அழியவிட்டு மீட்டுக்கொள்ளும் லீலாவிபூதியை. முதலிலே அழிகைக்கு ஸம்பாவனையில்லாதபடி நோக்கும் நித்யவிபூதியை. பொராநின்றுள்ளகடலாலே சூழப்பட்ட பூமியைத் தாவியளந்துகொண்டு * அச்சிகலாலே யாஶ்ரித வர்க்கத்துக்கடங்க நாதனானவன். (தனது வைகுந்தமன்னாய்) உனக்கு ஸ்வரூபஜ்ஞாநமுமின்றிக்கே யொழியுமோ? அவனதான நித்யவிபூதியோ டொத்திருந்துள்ளவளன்றோ? நீ; அவ்விபூதியை விடிலன்றோ உன்னைவிடுவது, உன்னைத் தளரவிட்டிருக்குமோ? (கலந்தார்) உன் ஸ்வரூபத்தை யறியாதொழிந்தால் அவன்தன்ஸ்வரூபத்தையு மறியாதொழியுமோ? உன்னோடே கலந்துசுவடறிந்தவன், உன்னைவிட்டிருக்குமோ? “கலந்தார்“என்றேகாணுமவனுக்கு நிரூபகம் (வரவெதிர்கொண்டு) வாசியறியாத ஸ்த்தாவரங்களுங்கூட (௧) “अकालफलिनो वृक्षाः - அகாலபலிநோ வ்ருக்ஷா:” என்று அவன்வர உத்யோகிக்கிறபடியைக்கண்டு அலரா

அரு!என்றந்வயமிரண்டுவகையாக வருளிச்செய்கிறார். அதாவது-“பொருகடல்சூழ்நிலந்தாவியவெம்பெருமான் தனதுவைகுந்தமன்னாய்வன்கொன்றைகள் கலந்தார்வர வெதிர்கொண்டு கார்த்தன, மாலையும் மாலைப்பொன்வாசிகையும் புலந்தோய் தழைப்பந்தல் தண்டுற நாற்றிமலர்ந்தே யொழிந்தில”, என்றந்வயமாதல். இந்தவர்த்தத்துக்கு“கார்த்தன”என்றது-கருவடைந்தா லொருநிறமுண்டிறே, அத்தைச்சொல்லுகிறது. இத்தால் முகுளிதமாக உத்யோகமானமாத்ரமொழிய மலர்ந்தேயொழிந்தில என்றபடி. அதவா-“நிலந்தாவியவெம்பெருமான் தனது வைகுந்தமன்னாய் வன்கொன்றைகள் கலந்தார்வரவெதிர்கொண்டு மாலையும் மாலைப்பொன்வாசிகையும் புலந்தோய் தழைப்பந்தல் தண்டுற நாற்றி கார்த்தன மலர்ந்தேயொழிந்தில” என்றந்வயம்.

“தழைப்பந்தல் தண்டுறநாற்றி” - “தழை” - செறிந்த, “பந்தல்” - பந்தலாக, “தண்டு” சாகைகளிலே, “உற” - சிக்கென, “நாற்றி” நாலாநின்றுகொண்டு, என்று சப்தார்த்தம். இத்தால், செறியப் பந்தலிட்டாற்போலே சாகைகளிலே பூங்கொத்துகள் நாலாநின்றுகொண்டு மலர்ந்தே யொழிந்திலவென்றபடி. (முதலிலே யழிகைக்கு ஸம்பாவனையில்லாதபடி நோக்கும் நித்யவிபூதியை) இப்படியிருக்கிற நித்ய விபூதிபோலே தனக்கஸாதாரணமாயிருக்கிற வுன்னை உபேக்ஷிக்குமோ? அவஶ்யம்வருமென்றபடி. (உனக்கு ஸ்வரூபஜ்ஞாநமுமின்றிக்கே ஒழியுமோ) என்றது - ஸ்வரூபமென்று - விக்ரஹமாய், உன்னுடைய விக்ரஹ வைலக்ஷண்யமும் நீயறியாயே என்றபடி. “கலந்தார்” உன்னோடே ஸம்ஶ்லேஷித்துப்போன நாயகனுடைய, “வரவெதிர்கொண்டு”

* அச்செயலாலே என்று வேறோரும் பதத்தில் பாடம்.

(௧) ஸ்ரீராமா - யுத்த. ௧௨௭ - ௧௬.

வ்யா||கிற்கநீதளருமித்தனையோ?(வன்கொன்றைகள்)அவன்வரில்அல ரக்கடவதாய் இல்லையாகில் தவிருமதாய் இப்படியவன் வரவோடு தப் பாதான கொன்றைகள்" (கார்த்தன) சினைத்தன ; கருவடைந்தா லொருநிறமுண்டிறே யிடுவது, அத்தைச்சொல்லிற்றுதல், அன்றி யேகார்காலத்தைக் காட்டிநின்றனவென்னுதல்.

பொருகடல்சூழ் நிலந்தாவிய வெம்பெருமான் தனதுவைகுந்த மன்னாய், வன்கொன்றைகள் கலந்தார்வரவெதிர்கொண்டுகார்த்தன, மாலையும் மாலைப்பொன்வாசிகையும் புலந்தோய்தழைப்பந்தல்தண்டுற நாற்றிமலர்ந்தே யொழிந்தில; அன்றிக்கே, கார்த்துமலர்ந்தேயொழி ந்தில வென்னுதல்

ஸ்வாபதேசம்.—இத்தால். அவனுடைய குண ஜ்ஞாநத்தாலும் இத்தலையையவனவகாஹித்தபடியாலும், போகயோக்யமான காலத் தில் வாராதொழியானென்று பார்ஸ்வஸ்தர் ஆஸ்வஸிப்பிக்கிறபடி யைச் சொல்லுகிறது.

---

அரு||வரவைமுற்கோலி,"பொருகடல்சூழ் நிலந்தாவியவெம்பெருமான்தனது வைகுந்தமன்னாய்" என்றது ஸம்போதநை - கீழ் பாட்டினன்வய த்வயத் தையுமருளிச்செய்கிறார் (பொருகடல்சூழ்) என்று. ௬௮.

[அப்பு அரும்பதம்.]

அறுபத்தெட்டாம் பாட்டு.—(மலர்ந்தே) (மூடுகிக் கொடு) காலமாகை யாலே பூத்துக்கொடு. வந்தானத்தனை. வருமத்தனை. "புலம்" இந்த்ரியமாதல்; பூமியாதல். "நாற்றி" தொங்காநின்று கொண்டு, 'மலர' வில்லை யென்னுதல்; நாற்றுகைக்காக - தொங்குகைக்காக. "கார்த்தன" - சினைத்தன வித்தனையெ ன்னுதல். "தண்டுறநாற்றி. மலர்ந்தே யொழிந்தில" என்று அடியில் பதத் தோடே கூட்டவுமாம். "தண்டுற நாற்றுகைக்காகக் கார்த்தன" என்று நுனியில் பதத்தோடே கூட்டவுமாம். அர்த்தபேதமன்று என்றபடி. "சிகல்" செயல்; வ்யாபாரமென்றபடி. (ஸ்வரூபம்) என்றது-இரண்டிடத்திலும், வை லக்ஷண்யம். (அலராநிற்க) - அலர உத்யோகியாநிற்க, "சினைத்தல்"-கர்ப்ப மாதல்; மொட்டாதல். காலத்தைக்காட்டுகை - மொட்டிக்கை. கார்த்தன- நாற்றுகைக்காகச் சினைத்தன. ௬௮,

[வேறொரு அரும்பதம்.]

அறுபத்தெட்டாம்பாட்டு.—(மலர்ந்தே) இத்யாதி. கீழே "வண்ணஞ்சிவ ந்துவ:" என்கிறபாட்டிலே தம்மை விசேஷகடாக்ஷம் பண்ணினானென்று குணஜ்ஞாநத்தாலே தரித்தவாழ்வாருடைய ஜ்ஞாநவைபவத்திலே துவக்குண் டபாகவதராகிற தலைமகன் தலைமகள் கண்ணழகிலே ஈடுபட்டதாகத் தம்மு டைய வைபவத்தைப் பேசினபின்பு, பகவானாகிற நாயகன் ஸங்கேதித்துப் போனகாலம் வந்ததுக்கு ஸூசகங்களைக் கண்டு தளர, தோழி தேற்றுகிறு

ளொன்று ஸங்கதியுட்கொண்டு அவதாரிகை யருளிச்செய்கிறார் (கலந்து) இத்யாதி. (முடிசெக்கொடுசிற்கையாலே) - நன்றாகப் பூக்கையாலே யென்கை (வந்தான் என்றது - கிட்டவந்தா னென்றபடி. தோழி பலகாலும் காலத்தைமயக்கியன்றோ தரிப்பிப்பதென்னவருளிச்செய்கிறார் (அக்காலம்) இத யாதி. "காண்" என்ற வநந்தரம் என்கிறாளென்று சேஷம். "புலம்" என்று இந்த்ரியங்களென்றும், பூமியென்றும் விவக்ஷித்தருளிச்செய்கிறார் (கண்டார்) இத்யாதி. "நாற்றிமலர்ந்தேயொழிந்தில" என்றபோது நாலவு மில்லை, மல ரவுமில்லை. என்றுகருத்து. "நாற்றிக்கார்த்தன" என்றபோது, நாலுகைக்கா கக் கார்காலத்திலமையாநின்றன வித்தனை; மலர்ந்தே யொழிந்தில வென்று கருத்து. "உற" என்றதின் பலிதார்த்தம் (கண்கள்தோறும்) என்றது, கணை கள்தோறு மென்றபடி. சப்தார்த்தம் (பொராநின்றுள்ள) இத்யாதி. "செயல்" வ்யாபாரம் (ஸ்வரூபம்) என்றது - வைலக்ஷண்யமென்றபடி. (அவன்தன் ஸ்வரூபம்)-ப்ரணயித்வம், சினை-கர்ப்பம்.

தாத்பர்யம்.—ஆழ்வார்தமக்கு பகவத்விஷயத்தில் பரிபூர்ணாவகாஹநம் பிறந்தவளவிலும், ஸர்வேஶ்வரன்வந்து நேரே முகங்காட்டித்தன் குணங்களை யநுபவிப்பியாமையால் பிறந்த ஆர்த்தியை சமிப்பிக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களின் பாசுரத்தை, கொன்றை பூக்குங்கார்காலத்தில் வருவதாகக் காலங்குறித்துப்பிரிந்து போன நாயகன் அக்காலத்தில் வாராமையைக்கண்டு க்லேசிக்கிற நாயகியைத் தேற்றுகிற தோழி வார்த்தையினு லருளிச்செய்கிறார்.

ஓ ஸகி! நாயகன் குறித்துப்போனகாலம் இன்னும் வரவில்லை. கொன்றைகள் பூத்து ஆகாசமெங்கும் பந்தலிட்டாற்போல் வ்யாபித்து ஸுவர்ணமாலை போல் ஸரம்ஸரமாய் கிளைகளில்நின்றும் பூமியளவாகத்தொங்கும்படி இன்னம் பூக்கவில்லையே. அக்காலமேயன்றோ அவன்குறித்துப் போனது. உபயவிபூதி நாதனுன அவன், உத்பத்திவிநாசசாலியான இவ்விபூதியில் ஒருகாலவிசேஷத்திலவதரித்து இதை ஆக்ரமிப்பது போலன்றியே, அவனுக்கெப்போதும் பரம போக்யமாய் நித்யவாஸயோக்யமான ஸ்ரீவைகுண்டதிவ்யநகரம்போலே அவனுடைய போகத்தை வர்த்திப்பிக்கிற பரமபோக்யையான உன்னுடைய ஸம்ஶ்லேஷத்தையேதாரகமாகக் கொண்டிருக்கு மவனன்றோ? அவனுன்னைவிட்டு டுதிரகாலம் பிரிந்திருக்குமோ? அவன் வருங்காலமாயிற்று. அவன் வரவைக்கண்டு இக்கொன்றைகளும் இப்போதுதான் அரும்பிடத் தொடங்கிற்று. ஆகையால் இவை பூத்துச் சமையுமளவில் அவனும் வந்து சேருவன். நீவருத்தப் படவேண்டாவென்கிறாள். ௬௮.

---

காரேற்றிருள் செகிலேற்றின் சுடருக்குளைந்து, வெல்வான்
போரேற் றெதிர்ந்தது புன்றலை மாலை, புவனியெல்லாம்
நீரேற் றளந்த நெடியபிரானருளாவிடுமே
வாரேற்றிளமுலையாய், வருந்தேலுன் வளைத்திறமே. ௬௯.

அர்த்தம்.—இருள் - அந்தகாரமாகிற, கார் - கறுத்த, ஏறு - எருது, செகில் - சிவந்த, ஏற்றின் -(ஸூர்யனாகிற) எருதினுடைய, சுடருக்கு-தேஜஸ்ஸுக்கு, உளைந்து - தோற்று, (இத்தனைநாள் ஒளித்திருந்து, இப்போது), வெல்வான் - (அந்த எருதை) ஜயிக்கைக்காக, போர் - யுத்தத்தை, ஏற்று - ஏற்றுக்கொண்டு, புல் - அல்பமான, தலை - தலைப்பாட்டையுடைய, மாலை - ஸாயங்காலத்தில், எதிர்ந்தது - எதிர்த்தது. புவனிமெல்லாம் - பூமியெல்லாவற்றையும், நீர் ஏற்று-(மஹாபலியிடத்தில்) தாரைஜலத்தைப்பிடித்து, வாங்கி, அளந்த - ஆக்ரமித்த, செடிய-அபரிச்சிந்நஸ்நேஹத்தையுடைய, பிரான் -உபகாரகனை ஸர்வேச்வரனானவன், அருளாவிடுமே-க்ருபை செய்யாமற் போவனோ? வார்-கஞ்சுகத்தினால், ஏற்று - தாங்கப்பட்ட, இள முலையாய் - இளம்பருவமான ஸ்தநத்தையுடையவளே! உன்வளைத்திறம் - உன்னுடைய வளைவிஷயமாக, வருந்தேல்-வருந்தவேண்டா. ௬௬

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—அறுபத்தொன்பதாம் பாட்டு.— அதுக்குமேலே ஸந்த்யையும் வந்து கலிய, அநந்தரம் போக யோக்யமான காலமாயிருக்க, அவன் வந்து தோற்றாமையாலே தலைமகளாற்றாளாக, இது கண்ட தோழியானவள், "இது ஸந்த்யையல்ல, இரண்டு வ்ருஷபங்கள் தன்னிலே பொருகிறனகாண்" என்று காலம் மயக்கி, அவளைத் தரிப்பிக்கிறாளாயிருக்கிறது.

வ்யா.— (காரேற்றிருள்) இருளாகிற காரேறானது - கறுத்த வ்ருஷபமானது. (செகிலேற்றின் சுடருக்குளைந்து) ஆதித்யனாகிற சிவந்த ருஷபத்தினுடைய கிரணங்களுக்குத் தோற்றுப்போய்ச் சுரமடைந்தது. அது "நாம் முடிய விங்ஙனே தோற்றுக்கிடக்கு மித்தனையோ? நாமுமொருகால் மேலிடவேணும்" என்றுபார்த்துப் போரிலே வந்தேனென்றுகொண் டெதிரிட்டது. இருள்தான் வெல்லவேணுமென்று மாலையிட்டுக்கொண்டு வந்தாப்போலே காணும். (புன்தலை மாலை) புல்லிதான தலையையுடைத்தான ஸந்த்யையானது, † ஐஞ்சகை

அரு|| அறுபத்தொன்பதாம்பாட்டு - (காரேற்று) "சுடர்" என்று - கிரணங்களைச் சொல்லுகையாலே, ஆதித்யனை அத்யாஹரித்துக் கொள்வது. "செகில்" என்று - சிவப்பைச்சொல்லுகிறது. "உளைந்து"-தோற்று. போர்-யுத்தத்திலே (வந்தேன்றுகொண்டு, உத்யோகித்துக் கொண்டு) "எதிர்ந்தது"-எதிரிட்டது. (மாலையிட்டுக்கொண்டு வந்தாப்போலே) என்றது - சாபுப்ரத்யக்ஷமான ஸந்த்யையை நீ இப்படி மறைத்துச்சொல்லலாமோவென்ன, ஸந்த்யை தானேயாகிலும் ஸந்த்யையினுடைய உபக்ரமமித்தனை, பூர்ணமான ஸந்த்யை தானல்லகாணிது என்கிறாள் "புன்தலைமாலை" என்று. † ஐஞ்சகை

அஞ்சகைகாணஎன்று வேறொரு அரும்பதத்தில்பாடம்.

வ்யா|| சான இருள்சொழுந்துகளை யுடைத்தான ஸந்த்யையானது. (௧) “ஸக்ஷிப்ய்யஜூதிஸந்த்யாந்தே மோஹல்லக்ஷ்ய: நக்ஷிபஸஞ்சதியாந்தமோவல்லய:” என்கிறாற்போலே. ஸந்த்யையினுடைய உபக்ரமமித்தனை, ஸந்த்யைதானல்ல காணிது.

(புவனியித்யாதி) அவன் படியை யறிந்தால் வருமென்றிருக்க வேண்டாவோ? இந்த்ரன் வ்யாஜமாக எல்லார் தலையிலும் நிர்ஹேதுகமாக அமரர் சென்னிப்பூவாயிருக்கிற திருவடித் தாமரைகளை வைக்குமவனன்றோ? இப்படி யெல்லார்க்கு முபகாரகனாயிருக்குமவன் உன்னைவிடுமோ? தாமஸ ப்ரக்ருதிகளானார் மேலிடப் புக்கால் வந்துதவுமவன் தமஸ்ஸுதான்வந்து அபிபவிக்கப்புக்கால் விட்டிருக்குமோ? தன்னுடைமையைப் பிறர் “என்னது” என்றிருந்தால் தன்னையர்த்தியாக்கி அவர்கள் பக்கலிலேயும் வந்திரந்து கொள்ளுமவன். இரக்கவேண்டாதே தன்னுடைமையேயான வுன்னை விட்டிருக்குமோ? காடுமேடுமான பூமியிலொன்றும் விடாதவன் உன்னை யிங்ஙனே யறிவழியவிடுமோ? மண்ணுக்குப்பதறி இரந்தவன், பெண்ணொரு தலையானால் ஆறியிருக்குமோ? “வாரேற்றிள முலையாய்” என்னு மளவுக்கு, காடு மேடுமான பூமியிலே காலை வைத்தவன் உன் முலைமேலே காலையையாதொழியுமோ? (அருளாவிடுமே) ஸத்வமுடையார்க்குத் தன்னை யழியமாறுமவன் சுத்தஸத்வமேயான உன் விஷயத்தில் கைவாங்கியிருக்குமோ? (புவனியித்யாதி) பூமிப்பரப்படைய நீரேற்று அளந்துகொண்டு எல்லார் தலையிலேயும் திருவடிகளை ஸ்வீகாரச்செய்தேயும் பின்னையுமொன்றுஞ்செய்யப் பெற்றிலோமென்றிருக்கும் மஹோபகாரகனானவன். (அருளாவிடுமே) ப்ரணயித்வம் போனால் ஸ்வரூபாநுபந்தியான அருளும் உன்பக்கம் கார்யகரமன்றிக்கேயொழியுமோ? (வாரேற்றிள முலையாய்) வாராலே தாங்கவேண்டும்படியான முலையை யுடையவளே! வார்தரித்தல், தான் தரித்தல் செய்யவேண்டும்படியான முலைகளை நீ தரிக்கவிட்டிருக்குமோ? (இளமுலையாய்) பருவம் நிரம்பா

அரு||சான) அத்யல்பமான. (இருள்சொழுந்துகளையுடைத்தான, அந்தகாரத்தினுடைய அங்குரங்களையுடைத்தான, ஸந்த்யையான இத்தனை யென்றபடி.

(வாரேற்றிள முலையாய் என்னு மளவுக்கு) என்றதுக்கு - வாரேற்றிள முலையாயென்று அருளிச்செய்ததுக்குத்தாத்பர்யமென்றபடி. உன்வளைத்திறமாக வருந்தேல் - துக்கப்படவேண்டா.

(௧) இந்த ஶ்லோகாக்ஷரங்கள் ஸந்திக்தங்கள்

வ்யா || திருக்கச்செய்தேயும் வாராலே தரிக்கவேண்டும்படியாய்க்காணும் முலைகளிருக்கிறது. க்ஷாமகாலத்திலே ப்ரஜைகள் "சோறுசோறு" என்னுமாபோலே "விஷயத்தைக்காட்டுகாட்டு" என்றுகிளருகிற இளமுலைகள். (வருந்தேலுன்வளைத்திறமே) உன்வளை யிடையாட்டமாக நீ வருந்தவேண்டா; வேணுமாகில் அவன்கையில் வளையிடையாட்டமாக வருந்தில்வருந்து. (௧) "அப்பாஞ்சசன்னியமும் பல்லாண்டு" என்றது-கங்கையிலே யகப்பட்டிருப்பதொன்று; அதுக்கு மங்களாசாஸநம்பண்ணு.

இத்தால், அவனுடைய குணஜ்ஞாநத்தாலும் அவனித்தலையை யவகாஹித்தபடியாலும் தர்ப்பித்தபடி சொல்லிற்றுக்கீழ், இதில், அதுவேண்டாதே இருவருடையவும் தர்மிக்ராஹகப்ரமாணமே யமையும் தரிக்கைக் கென்கிறது. அவனாகில் ரக்ஷகனேயாய், இத்தலையாகில் ரக்ஷ்யமாயிருக்குமிறே. (வருந்தேலுன்வளைத்திறமே) (௨) "மாஶுச:-மாசுச:" என்கிறாள். (௨) "அஹம்த்வா-அஹம்த்வா" என்றிருவருடையவும் ஸ்வரூபத்தைச் சொல்லிவைத்திறே "மாசுச:" என்றது.

---

அரு|| (கங்கையிலே அகப்பட்டிருப்பதொன்று) என்றது-நாம் ரக்ஷிக்கத்தக்கதொன்றென்றபடி. (தர்ப்பித்தபடி சொல்லிற்றுக்கீழ்) என்றது-கீழ்ப்பாட்டிலென்றபடி. (தர்மிக்ராஹகப்ரமாணம்) என்றது-ரக்ஷ்யரக்ஷகபாவத்தை ப்ரதிபாதிக்கிறப்ரமாணமென்றபடி.

[இருளாகிற காரேறு செகிலேற்றின் சுடருக்குளைந்து வெல்வான் போரேற்றெதிர்ந்தது, ப்ரத்யக்ஷமான ஸந்த்யையை, ருஷபங்களென்று சொல்லுகிறதென்னென்ன, புன்தலைமாலை, ஆசையாலே புவனியெல்லாம் நீரேற்றளந்த நெடியபிரானருளாவிடுமே வாரேற்றிளமுலையாய் உன்வளைத்திறம் வருந்தேல்] என்றந்வயம். "வெல்வான்" - ஜயிக்கைக்காக. ௬௮.

[அப்பு அரும்பதம்.]

அறுபத்தொன்பதாம்பாட்டு.— (காரேற்று) தமஸ்ஸைக் கொழுந்தாகச் சொன்னவிடமுண்டோவென்ன வருளிச்செய்கிறார் (நகரிப்ஸஞ்சதி) இத்யாதி. "புவனி" என்றத்தைப்பற்றப் பலதாத்பர்ய மருளிச்செய்கிறார் (இந்த்ரன்) இத்யாதி. அவன் வளைக்கு வருந்துகையேதென்ன வருளிச்செய்கிறார்(அப்பாஞ்சசன்னியமும்)இத்யாதி. கைப்படுகை-வசமாய் நமக்கு ரக்ஷ்யமென்றபடி. "கீழ்" என்றது-கீழ்ப்பாட்டிலே. (தர்மிக்ராஹகப்ரமாணம்).-ரக்ஷ்யரக்ஷகஸ்வரூபத்தைப்ரதிபாதிக்கிறப்ரமாணம். "நெடியபிரான்" என்கையாலே, ரக்ஷகமும், "வாரேற்றிளமுலை" என்கையாலே, ரக்ஷ்யமும் தோற்றுகிறது. இத்தையருளிச் செய்கிறார்(அவனாகில்) இத்யாதி - இப்படி இருவர் ஸ்வரூபத்தையுஞ்சொல்லி. "மாசுச: -" என்றவிடமுண்டோ வென்ன வருளிச்செய்கிறார் (அஹம்த்வா)இத்யாதி. [புன்தலைமாலை. வெல்வான் போரேற்றெதிர்ந்தது உன் வளைத்திறம் வருந்தேல்] என்றந்வயம். ௬௮

---

(௧) திருப்பல்லாண்டு-௨. (௨) கீதை-௧௮-௬௬.

[வேறொரு அரும்பதம்.]

அறுபத்தொன்பதாம்பாட்டு—(காரேற்று) இத்யாதி. (அதுக்குமேலே) வர்ஷாகாலத்துக்குமேலே, "மயக்கி" என்ற வருத்தாம், மயக்கப்போகாமை யால் அல்பம் ஸந்த்யையென்று சொல்லி, என்று சேஷம். "செகில்" என்ற திணர்த்தம் (சிவந்த) என்றது. காம்-மலே. (என்றுகொண்டு) கோபத்தை ஏறிட்டுக்கொண்டு. ரஸோக்தி அருளிச்செய்கிறார் (இருள்) இத்யாதி. இதனை அந்சப்பண்ணுகைக்ப புல்லிகைகையென்று விவரிக்கிறார் (அஞ்சுகைகாண) இத்யாதி. இருளுக்குக் கொழுந்துண்டாகச் சொன்னவிடமுண்டோ வென்ன, (கக) இத்யாதி. வல்லிகளாகச் சொல்லுகையாலே கொழுந்துண்டாகச் சொல்லலாமென்று கருத்து. "மாலையி லருளாவிடுமே" என்றவய முட்கொண்டு, "பிரான்" என்றதுக்கு பாவமருளிச்செய்கிறார் (அவன்) இத்யாதி. "நெடிய" என்றதுக்குக் கருத்து (இதரன்) இத்யாதி. "காரேற்றிருள்" என்றத்தைக்கடாக்ஷித்து "ஆளக" என்றதுக்கு பாவ மருளிச்செய்கிறார் (ஞாயஸ) இத்யாதி. "நீரேற்று" என்றதுக்கும் பொருளருளிச்செய்கிறார் (தன்னுடைமை) இத்யாதி. "எல்லாம" என்றதுக்கு ஹ்ருதயம், (காடு) இத்யாதி. "புவனி" என்றதுக்குவ்யாஸை (மண்ணுக்கு) இத்யாதி. ஸமுதாயதாத்பாயம் (வாரேற்று) இத்யாதி. அருளுமென்னுதே "அருளாவிடுமே" என்றத்தாலே பலிதம் (ஸதவம்) இத்யாதி. வாக்யார்த்த மருளிச்செய்கிறார் (பூமி) இத்யாதி. "அருள் என்றதுக்கு விவக்ஷிதம் (ப்ரணயித்வம்) இத்யாதி. "உள" என்றதுக்கு வ்யாவர்த்ய பூர்வகம் பாவமருளிச் செய்கிறார் (வேணுமாகில்) இத்யாதி. ஸ்வாபதேசஸங்கத (இத்தால்) இத்யாதி. விவரணம் (அவனுகில்) இத்யாதி. ௬௬.

தாத்பர்யம்.—இதில், ரக்ஷணைகஸ்வபாவனான ஸர்வேஶ்வரன் அருளாதொழியானென்று பார்ஶ்வஸ்தருரைத்த பாசுரத்தை, மாலையைக்கண்டு வெருவினநாயகிநயந்தேற்றும் ஸகியின் வார்த்தையாலே யருளிச்செய்கிறார்.

வர்ஷாகாலத்தில் நாயகன் வாராமையால் பாதைபட்டுக் கொண்டிருக்கிற ஸமயத்தில் மாலையும இருளுமாய்வந்துதோற்ற, அதைக்கண்டஞ்சின நாயகியைக்குறித்து ஸகியானவள், காண்கிற இது மாலையன்று; இரண்டு ருஷபங்கள் சண்டையிடுகிறதென்று காலத்தை அபலாபிக்கிறாள். ஓ ஸகீ! ஸூர்யகிரணமென்பது ஒரெருதும், இருளென்பது ஒரெருதுமுண்டு. இருளென்கிற எருது, ஸூர்யகிரணங்களென்கிற எருதினால் முன் ஜயிக்கப்பட்டு இதுவரையில் ஓர்மூலையிலொளித்திருந்து தன்விரோதியைத்தான் ஜயிக்க ஸமயம் பார்த்திருந்து இப்போது ஸமயம் வந்ததாலே அதைஜயிக்கைக்காக வெகு ஆக்ரோஷத்துடனே சண்டையிட முன்னே எதிர்த்து வந்து தோற்றுகிறது. இது நீநினைத்தமாலையன்றுகாண். ஆஶ்ரிதாநாஶ்ரித பேதமின்றியெல்லாரையும் தன்திருவடிக் கீழிட்டுக் கொண்டுரக்ஷித்த பரமகாருணிகனை அந்த

பரமபுருஷன், அவனுக் கத்யந்தாபிமதையாய்த் தச்சேகாக்ஷையா யிருக்கிற உன்னை இப்படி துக்கிக்கும்படிவிட்டிரான் உன்னைக்வளை கழலுவதற்கு முன்னமே வந்துதவுவன், நீசோகிக்கவேண்டா வென்கிருள். ௬௯.

வளைவாய்த்திருச் சக்கரத்தெங்கள் வானவனூர் முடிமேல்,
தளைவாய்நறுங்கண்ணித் தண்ணந்துழாய்க்கு வண்ணம்பயலை,
விளைவான் மிகவந்து நாள்திங்களாண்டூழி நிற்கவெம்மை
உளைவான் புகுந்து, இதுவோர் கங்குலாயிர மூழிகளே. ௭௰.

அர்த்தம்.—வளை - வளைந்த, வாய் - வாயையுடைய, திருச்சக்கரத்து - திருவாழியையுடையனும், எங்கள் - எங்களுக்கு ஸ்வாமியாய, வானவனூர் - பரமபதத்திலுள்ள நித்யஸூரிகளுடைய ஸர்வேஸ்வரனுடைய, முடிமேல் - திருவபிஷேகத்தில் சாத்தப்பட்டும், தளைவாய் - தொடைவாய்ந்ததும (நல்லஸந்தர்ப்பங்களையுடையதும்), நறு - பரிமளத்தையுடையதும், தண் - குளிர்ந்ததும், அம் - அழகியதுமான, கண்ணி - மாலையாகக் கட்டப்பட்ட, துழாய்க்கு - திருத்துழாய்க்கு (ஆசைப்பட்டு அதுகிடையாமையாலே வருந்துகிற என்னுடைய), வண்ணம் நிறமானது, பயலைவிளைவான் - வெணணிறம் (விவர்ணம) ஆகும்படி, இது - இந்த, ஓர் - ஒரு, கங்குல், ராத்ரியானது, நாள் - நாளாகவும், திங்கள் - மாஸமாகவும், ஆண்டு, ஸம்வத்ஸரமாகவும், ஊழிநிற்க - கல்பமாகவும் பரிணமிப்பது மன்றிக்கே, எம்மை - எங்களை உளைவான் - உபத்ரவிக்கைக்காக, மிகவந்து - மேன்மேலுமதிகரித்து வந்து, புகுந்து - ப்ரவேசித்து, ஆயிரம்-அநேகமான, ஊழிகள்-கல்பங்களாகப் பெருகிற்று. ௭௰.

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ —எழுபதாம் பாட்டு—ஸ்ரீவைகுண்ட நாதன் சாத்தினமாலையைப் பெறவேணுமென்னு மபேக்ஷையா லுண்டான த்வரையாலே காலஞ்செலுத்த வுள்ளவருமை சொல்லுகிறது.

வ்யா.—(வளைவாய்த் திருச்சக்கரத்து) வளைந்த வாயையுடைய திருச்சக்கர மென்னுதல்; அன்றிக்கே, வளை - ஸ்ரீபாஞ்சஜந்யமாய், வாயையுடைய திருவாழியை யுடையவனென்னுதல் (௧) "தமஸ: பரமோ தாதா ஶங்கசக்ரகதாதர:-தமஸ:பரமோதாதா சங்கசக்ரகதாதர:" என்னக்கடவதிறே. (எங்கள்வானவனூர்முடிமேல்) த்ரிபாத்விபூதியையுடைய திவ்யாயுதங்களும சாத்தினமாலைகளுமான இவ்வழகையாமபடியிருக்கிற ஸ்ரீவைகுண்ட நாதனுடைய திருவபிஷேகத்திலுண்டான தொடைவாய்ப்புள்ள. அநந்தவைநதேயாதிகள்தொடுக்கிறதிறே. (நறுங்கண்ணி

அரு|| எழுபதாம்பாட்டு. (வளைவாய்) (தளைவாய்) தளையென்று - தொடையாய், வாயென்று - வாய்ப்பாய், தொடைவாய்ப்புள்ளதிருத்துழா யென்றபடி. இப்படி தொடைவாய்ப்புண்டாகைக்கடியென்னென்ன அருளிச்செய்கிறார் (அநந்தவைநதேயாதிகள் தொடுக்கிறதிறே) என்று. தண்ணந்துழாய்க்கெ

(௧) ஸ்ரீராமா-யுத்த-௧௧௪-௧௫-

வ்பா|| தண்ணந்துழாய்க்கு) செவ்வியையுடைய மாலையான திருத்துழாய்க்கு. (வண்ணமித்யாதி) அம்மாலையை யாசைப்பட்டுப் பெருமையாலே நிறமான பயலை விளையும் படியாக - விவர்ணமாம் படியாக. (மிகவந்தித்யாதி) மூன்றாற ஒருராத்ரி ஒருநாளாய்ப் பெருகிற்று, அதுபோய் ஒருமாஸமாய், அதுபோய் ஒருவத்ஸரமாய், அதுபோய் ஒருகல்பமாய்ப் பெருகும்படியொழிய என்னை நலிகைக்காக வந்து புகுந்து ஒருராத்ரியேழு ஊழிகளாகா நின்றது. (மிகவந்து) ஒன்றுக்கொன்று மிகும்படி வந்தென்னுதல், அநேகம்ராத்ரியெல்லாம் வந்ததிறே; இதொரு ராத்ரி யிருந்தபடியென் !

ஸ்வாபதேசம்.—இத்தால், (க) "பதிஸம்மாநிதாஸீதா - பதிஸம்மாநிதாஸீதா" என்று அவதாரத்திற் பிராட்டிபெற்ற பேற்றை ஸ்ரீவைகுண்ட நாதன் பக்கலிலே பெறவேணுமென்றாசைப் பட்டுப்பெருமையாலே காலஞ்செல்ல வரிதானபடி சொல்லிற்று. எ0.

அருளிறது - தண்ணந்துழாயை யாசைப்பட்டுப் பெருமையாலே என்றபடி. விளைவான-விளையுமபடி. "ஊழிநிற்க" என்றது - கல்பமாய்ப் பெருகும்படி யன்றுக்கே என்றபடி. "மிகவந்து" என்றதுக்கு இரண்டுபொருள். அதாவது - ஒன்றுக்கொன்று மிகும்படி வந்தென்னுதல்; கீழ்வந்த ராத்ரிகளெல்லாவற்றையும் அதிசயித்தென்னுதல். எம்மை - எங்களை, உளைவான் - நலிகைக்காக.

[ஓர்கங்குல், வளைவாய் திருச்சக்கரத் தெங்கள் வானவனார் முடிமேல்தளைவாய்நறுங்கண்ணி தண்ணந்துழாய்க்கு வண்ணம்பயலை விளைவான் மிகவந்து நாளாய் திங்களாய் ஆண்டாய் ஊழியாய் வர்த்திக்கிறமாத்ரமன்றிக்கே எம்மை உளைவான் புகுந்து ஊழிகளாயிரமாகா நின்றது] என்றந்வயம். எ0.

[அப்பு அரும்பதம்]

எழுபதாம்பாட்டு,—(வளைவாய்) (தளைவாய்) "தளை" கட்டாய், "வாய்"-வாய்ப்பாய், தொடைவாய்த்திருக்கை. இப்படி யிருக்கைக்கு மேலே தென்ன வருளிச்செய்கிறார் (அநந்த வைநதேய) இத்யாதி. மிக- நாளாய், திங்களாய்ப் பெருகிற்றென்னுதல். ஒன்றைப்பற்ற ஒன்று பெருகிற்றென்னுதல். "இதுவோ" என்றதைப்பற்ற வருளிச்செய்கிறார் (அநேகம்) இத்யாதி.

[கங்குல், பயலை, விளைவான்-விளைவிக்கைக்காக, வந்துபுகுந்து, எம்மை, உளைவான் - நலிகைக்காக, நாள திங்களாண்டூழிநிற்க, அவ்வளவன்றிக்கே மிக ஆயிரமூழிகளாயின இது-இதிருந்தபடி] என்றந்வயம். எ0.

[வேறொரு அரும்பதம்]

எழுபதாம்பாட்டு.—(வளைவாய்) இத்யாதி. கீழ் ஸந்த்யையிலே நோவுபட்ட நாயகியைக் காலமயக்காலே ஆல்வலிப்பிக்கச்செய்தேயும் அது கார்ய

(க) ஸ்ரீராமா-அயோத்யா-கக-உக.

ரமாகாதபடி கங்குலும்வந்துபுக, இவளுக்குப்போதுவிடிமாமையாலே காலக்ஷேபம் பண்ணப் போகிறதில்லை என்கிற அஸங்கதியையுட்கொண்டருளிச் செய்கிறார் (ஸ்ரீவைகுண்ட) இத்யாதி. இரண்டையும் கடாக்ஷித்து பாவம் (த்ரிபாத்) இத்யாதி. தளை-கட்டாய், வாய் வாய்ப்பாய், அருளிச் செய்கிறார் (தொடைவாய்ப்புள்ள) என்று. "வளைவாய்" இத்யாதி. வண்மையையுடைய விளைவானுக நாளிருக்கச் சில கங்குல் நாள் திங்களானவளவன்றிக்கே ஊழியாய்நிற்க, எம்மை யுளையும்படி பண்ணுகைக்காக விதர்த்தோர் கங்குல்வந்து மிகவாயிர மூழிகளேய யிராநு" என்ற அந்வய விவக்ஷயாவருளிச்செய்கிறார் (மூன்றாம்) இத்யாதி. "ஒழிய" என்றது - "நிற்க" என்றதனை பலிதார்த்தம். மிகவாயிர மூழிகளென்று கீழ் அந்வயித்தபடி. அன்றிக்கே மிகவந்தென்று தானே அந்வயமாகவுமாமென்கிறார் (ஒன்றுக்கு) இத்யாதி. "இது" என்றதன் தாத்பர்யம் (அநேக) இத்யாதி.　　௭௦.

தாத்பர்யம்.—இதில், ஸ்ரீவைஷ்ணவர்கள் தம்மையாஸ்வஸிப்பித்தவளவிலும் தமக்கு பகவதநுபவத்தில் பிறந்த விலம்பாஸஹத்வத்தை, இவ்வுக்கஞ்சின நாயகி வார்த்தையாலே யருளிச் செய்கிறார்.

நாயகனான ஸர்வேஸ்வரன், கார்காலத்தில் வருவதாகக்காலம் குறித்துப்போய் அக்காலமும் வந்து அவன் வாராமையால் நலிந்திருக்கிற வென்னை மாலைப்பொழுது வந்து நலியத்தொடங்கிற்று. இப்போது தான்வந்து எனக்கு ஸேவைஸாதித்து நான் விரும்பின தன்திருமுடியி லணிந்த திருத்துழாய் மாலையைத் தந்து என்னை ஆஸ்வஸிப்பிக்க வேண்டியிருக்க என்னை உபேக்ஷித்து என்னுடம்பை விவர்ணமாம்படி செய்து தான் தன்திருக்கையிற் றிருவாழியினால் தன்னுடைய பரமபதத்தை விளங்கச் செய்து அவ்விபூதியெங்கும் தான் சூடியதிருத்துழாயின் பரிமளம் கமழும்படி ஆராமாக வீற்றிருந்தான். இந்தஸமயத்தில் என்னுடைய எளிமையை யறிந்து என்னை நலிகைக்காக இவ்விரவு வந்து, நாள், திங்கள், ஆண்டு, ஊழி என்கிற பரிச்சின்ந காலங்களாய்ப் பரிணமிக்கை யன்றிக்கே அபரிச்சிந்நமான அநந்த கல்பங்களாய்ப் பரிணமிக்கத் தொடங்கிற்று. இதைக்கடந்து நாம் ஜீவிக்கும் வழியென்னென்னென்று சோகிக்கிறாள்.　　௭௦.

ஊழிகளா யுலகேழுமுண்டா னென்றிலம், பழங்கண்
டாழிகளாம பழவண்ண மென்றேற்கு, அஃதே கொண்டன்னை
நாழிவளோவென்னுமன்னாலமுண்டான் வண்ணம்சொல்லிற்றென்னும்
தோழிகளோ வுரையீர், எம்மை யம்மனை சூழ்கின்றவே.　　௭௧.

அர்த்தம்.—ஊழிகளாய் - காலத்தோடு கூடிய ஸகலலோகங்களுக்கும் நிர்வாஹகனாய், ஏழு உலகும் - (ப்ரளயகாலத்தில்) ஸப்தலோகங்களையும், உண்டான் - (வயிற்றிலேவைத்து ரக்ஷிக்கைக்காக) அமுதுசெய்தான், என்றிலம் - என்று சொன்னோமில்லை. பழம்கண்டு- களாப்பழத்தைப்பார்த்து, களாம்பழவண்ணம் - களாப்பழத்தினுடைய நிறம், ஆழி - ஸமுத்ரத்தின் நிறம்

போன்றது, என்றேற்கு - என்று சொன்ன எனக்கு, அஃதேகொண்டு - அச்சொல்லுக்கு வேறேயொரு கருத்துண்டென்றுநினைத்து, அன்னை - தாயானவள், இவள் - இப்பெண், நம் ஸாமர்த்ய முள்ளவள், என்றும் - என்று சொல்லாநின்றும். ஞாலம் - பூமியை, உண்டான் - அமுது செய்தவனுடைய, வண்ணம் - நிறத்தை, சொல்லிற்று - சொன்னாள், என்றும் - என்று சொல்லாநின்றும். தோழிகளோ - ஓஸகிகளே! எம்மை - எம்மைக் குறித்து, அம்னை தாயானவள், சூழ்கின்ற-மறித்து மறித்துச்சொல்லுகிறாள (இதுக்கு ப்பரிஹாரம்), உரையீர் - சொல்லுங்கேள். எக.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—எழுபத்தோராம்பாட்டு.—களவிலே புணர்ந்து நீங்கின தலைமகன், இவளாற்றாமையைப் பரிஹரிக்கைக்காக இவள் வர்த்திக்கிறதேசத்திலே தன்நிறத்தோடு போலியானபல (ஷ்ய)ங்களைச்சிலர் விற்பர்களாகப்பண்ண, இவளுமத்தைக் கண்டுதரிக்க, அத்தைத் தாயார் நிஷேதிக்கிறாள். தாயார் செய்கிற நிலைகயைத் தலைமகள் தோழிமார்க்குச் சொல்லுகிறாள்.

வ்யா.—(ஊழிகளாயுலகேழு முண்டானென்றிலம்) இப்படி சொன்னேனாகில் குற்றமாகலாமிறே. காலோபலக்ஷித ஸகலபதார்த்தங்களுக்கு நிர்வாஹகனாய், இவற்றை ப்ரளயம் வர எடுத்தூத தன் வயிற்றிலே வைத்து நோக்கின மஹோபகாரகனென்றிலேன். குண நிஷேதத்தைப் பண்ணப் புக்கவர்கள் ஸத்யஜ்ஞாநாதிபதங்களுக்கு வ்யாவர்த்ய பேதத்தாலே பேதஞ்சொல்லுமாபோலே, இவளுமகுண ஸத்பாவத்தை ஸாதிக்கைக்காக வ்யதிரேக முகத்தாலே குணங்களை

அரு|| எழுபத்தோராம்பாட்டு. (ஊழிகளாய்) (இப்படிச்சொன்னேனாகில் குற்றமாகலாமிறே) என்றது - ஊழிகளாயுலகேழு முண்டானென்று சொன்னேனாகில் குற்றமாகலாம. அப்படி சொன்னேனில்லை என்றபடி. (குணநிஷேதம் பண்ணப்புக்கவர்கள்) அதாவது - ஈஶ்வரன் நிர்க்குணனென்று சொல்லுகிற மாயாவாதிகளென்றபடி. (ஸத்யஜ்ஞாநாதிபதங்களுக்கு வ்யாவர்த்யபேதத்தாலே பேதஞ்சொல்லுமாபோலே) என்றது-நிர்க்குணத்வம் ஸாதிக்கைக்காக ஸத்யஜ்ஞாநாதி பதங்களுக்கு அந்ருத ஜடபரிச்சிந்ந வ்யாவ்ருத்தியாலே பேதம் சொல்லுமாபோலே என்றபடி. அது, ஸத்யமென்கையாலே அஸத்யாத் வ்யாவ்ருத்தியும், ஜ்ஞாநமென்கையாலே ஜடாத்வ்யாவ்ருத்தியும், அநந்தமென்கையாலேபரிச்சிந்நாத்வ்யாவ்ருத்தியும் சொல்லுகிறதென்று நிர்வஹிக்குமென்றபடி. அப்படி இவளும் குணஸத்வத்தை ஸாதிக்கைக்காக "ஊழிகளாயுலகேழு முண்டான்" என்று சொன்னேனில்லையென்று வ்யதிரேகமுகத்தாலே குணங்களைச்சொல்லித் தரிக்கிறாளென்றபடி. இந்தப் பெண்பிள்ளை சொல்லுகைக்கு

வ்யா|| ச்சொல்லித் தரிக்கிறாள். இவளுக்குச் சொல்லுகைக்கும் ப்ராப்தியுண்டு, அவளுக்கு "இதிலொருகருத்துண்டு" என்று நிஷேதிக்கைக்கு மொரு ப்ராப்தியுண்டு. உபகரித்த விஷயத்தி லுபகாரங்கொண்டவர்களும் பேசாதிருக்க வொண்ணாதிறே, சேதநராறுல் பேசாதேயிரார்களிறே. "இவளுக்கிது விபாகத்தில் பொல்லாதாம்" என்றுயிற்று அவள் நிஷேதிக்கிறது. குணாதிகவிஷயத்தில் ப்ராவண்யம் கலேசாவஹமாய்த் தலைக்கட்டு மென்றிருக்குமிறே. (பழங்கண்டு) பூர்ர்வர்த்தியான பதார்த்தம் கடமாகில் கடமென்றும், படமாகில் படமென்றுஞ் சொல்லக்கடவதிறே. பிள்ளாய்! கண்டது சொல்லுகையுங் குற்றமாவதே! (ஆழி களாம்பழவண்ண மென்றேற்கு) களாம்பழவண்ணமானது ஆழிபோலே யிருந்ததென்று இத்தனை கிடிகோள் நான்சொல்லிற்று; "இவளாழிவண்ணரை யன்றுசொல்லிற்று" என்று கொண்டாளவள். (அஃதேகொண்டு) இவ்வுக்தி மாத்ரத்தில் பர்யவஸியாதே இதுக்கு வேறுகருத்துண்டு என்றுகொண்டு. (அன்னை) இவள் பிறந்தவன்று தொடங்கித்தாயாயோவளர்ந்தது, ஒரு கால் பெண் பிள்ளையாயும் வளர்ந்திலள்போலேகாணும். குற்றமுண்டாகில் ப்ராப்தமிறே; குற்றமில்லாத விடத்திலும் நியந்த்ருநியாம்யபாவமமையுமோநியமிக்கைக்கு.(நாழிவளோவென்னும்)நாமுமெல்லாம் பழங்கண்டது சொல்லிப் போருகிறேமிறே:இவளுக்கும் நாம் சொல்லுகிறவளவேயமையாதோ? இவளுக்கோரேற்ற மென் செய்யவென்று நின்றாள். "நாழ்"என்று" தாமுடைமை, அத்தாலேற்றத்தைச் சொல்லுகிறது. அதாகிறது-நறுவட்டாணித்தனம்.இவளுடையஏற்றமேதென்னில்,(ஞாலமுண்டான்வண்ணம் சொல்லிற்றென்றும்)ப்ராளயாபத்திலே ஜகத்தையடங்க வயிற்றிலேவைத்து நோக்கின வக்குணத்திலே வித்தையாயாற்ற மாட்டாமை சொன்னவார்த்தையன்றோவிதுவென்றுநின்றாள். (தோழிகளோவுரையீர்) நீங்கள்முன்னம்என்னோடுஸமாநஸுகதுக்கைகளன்றோ? தாய்மாரல்லீகோளே. (எம்மை

---

அரு|| ப்ராப்தியேதென்ன அருளிச்செய்கிறார் (உபகரித்தவிஷயத்தில்) என்று. தாயார்நிஷேதிக்கைக்குஹேதுவேதென்ன அருளிச்செய்கிறார்(இவளுக்கதுவிபாகத்தில்)என்று. அதாவதேதென்ன அருளிச்செய்கிறார் (குணாதிகவிஷயத்தில்)என்று. இதுக்குத்தாத்பர்யம்-குணாதிகவிஷயத்திலே ப்ராவண்யம் நினைத்தபடி கிடையாதபோது ஸத்தையழியுமென்று நிஷேதிக்கிறாளென்றபடி. (இவள்பிறந்தவன்றுதொடங்கி)என்றதுக்குத் தாத்பர்யம்-பெண்பிள்ளையாய்வளர்ந்தாலிப்படிப்ரதிஷேதியாள், ஆகையாலேபிறப்பேதொடங்கித்தாயாயே வளர்ந்தாளென்றபடி. "நாழிவளோஎன்றும்"என்றது-ஸாமர்த்யத்தையுடைய

வ்யாயம்மனை சூழ்கின்றவே) என்னை மனைப்பாம்புபோலே புக்கவிடமும் புறப்பட்டவிடமுந் தானேயாய் நலிகிறபடிக்கு நீங்கள் தானே தேனுஞ் சொல்லவல்லிகோளே. (சூழ்கின்ற) முத்துலையிட்டுக் கொண்டிவள் நலியாநின்றாள். காண்கிறதும் சொல்லுகிறதுங்கிடக்க இதுக்கு வேறேயொரு கருத்துண்டென்றிவள் நலிகிறதுக்கு நீங்கள் தானொருபரிஹாரஞ் சொல்லிகோளே.

ஸ்வாபதேசம்—இத்தால், அவனோடு போலியாயிருப்பதொன்றுலல்லது தரியாதபடியையும் பகவத் விஷயத்திலுண்டான ப்ராவண்யாதிசய மொருவாறாலும் மீட்க வொண்ணாதபடியா யிருக்கிறபடியையுஞ் சொல்லுகிறது எக.

---

அரு|| ளென்றுமென்றபடி. மனைப்பாம்பு - க்ருஹத்திலே வர்த்திக்கிறபாம்பு. (முத்துலையிட்டுக்கொண்டு இவள் நலியாநின்றாள்)என்றது-நீரேறுமேட்டிலே நீரேற்றும்போது,ஒருகுழிகல்லி ஏற்றமிட்டு அதிலே இறைத்து அப்பாலே ஏற்றமிட்டு அப்பாலொரு குழிகல்லி அதிலே இறைப்பார்,இப்படி வயலிலே பாய்ச்சுவர்கள்,அப்படியே, ஒன்றைச்சொல்லி அதுக்குமேலே ஒன்றைக்கற்பிக்கிறாளென்றபடி. பழமென்றது-காண்கிறது; ஆழியென்று - சொல்லுகிறது. "உரையீர்"என்றதுக்கு இரண்டுபொருள். அதாவது-நான் சொன்னவிதிலே தேனுக்குற்றமுண்டோ சொல்லிகோளென்னுதல்,இவன் சொல்லுகிறதுக்குப் பரிஹாரஞ் சொல்லுங்கோளென்னுதல்.

[ஊழிகளாயுலகேழுமுண்டானென்றிலம் பழங்கண்டுகளாம் பழவண்ணம் ஆழிஎன்றேற்றுஅஃதே கொண்டன்னை நாழிவளோ வென்றும் ஞாலமுண்டான் வண்ணஞ் சொல்லிற்றென்றும் எம்மை யம்மனைசூழ்கின்ற வற்றை தோழிகளோ உரையீர்] என்றந்வயம். "என்றேற்கு" என்றது - என்று சொன்னேனென்றபடி. எச.

[அப்பு அநுப்பதம்.]

எழுபத்தோராம்பாட்டு.—(ஊழிகளாய்) காரணத்வ ரக்ஷகத்வ குணங்களைச்சொல்லி தரிக்கிறாளாகில் "என்றிலம்" என்று வ்யதிரேகத்தாலேசொல்லுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (குணநிஷேதத்தை) இத்யாதி. வ்யாவர்த்யபேதமாவது - மாயாவாதி (க) "ஸத்யம்ஜ்ஞாநம் - ஸத்யம்ஜ்ஞாநம்" இத்யாதிவாக்யத்துக்கு, ஈஸ்வரனுக்கு குணமில்லை யென்கைக்காக அந்ருத ஜடபரிச்சின்ந வ்யாவ்ருத்தி சொன்னது, வஸ்த்வைக்யம் போய் வஸ்துபேதஞ்சொன்னாற்போலே இவளும் வ்யதிரேகத்தாலும் குணத்தை ஸாதிக்கிறாளென்றபடி. அன்றிக்கே அவன் அந்வய முகத்தாலே குணமில்லை யென்றாற்போலே இவளும் வ்யதிரேக முகத்தாலே குணத்தை ஸாதிக்கிறாளென்று கொள்ளவுமாம். தெரியாதாகவுஞ் சொல்வது. இவள் மறைத்தாகிலும் சொ

---

(க) தைத்திரீயம்-ஆநந்த.

ல்லுவானென், அவள் நிஷேதிக்கவேண்டுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (இவளுக்கு) இத்யாதி. "பிள்ளாய்"-பூஜ்யோக்தி. தானு மொருகாலாகிலும் சிறுபெண்ணாயிருக்க வில்லையோவென்று மகள் தாய்க்குச் சொல்லுகிற வார்த்தை. வட்டாணி - சமத்காரம் - ஸாமர்த்யமாகச் சொல்லுகை. உரையீர் - இது ந்யாயமோ சொல்லுங்கோளென்னுதல், இதுக்கொரு பரிஹாரஞ்சொல்லுங்கோ ளென்னுதல். "சூழ்கின்றவே உரையீர்" என்று கூட்டியருளிச்செய்கிறார் (என்னை மனைப்பாம்பு) இத்யாதி. மனைப்பாம்பு கடியாவிட்டாலும் பயங்கரமா யிருக்குமாபோலே, இவள் சொன்னது செய்யாவிட்டாலும், பயங்கரமாயிருக்கு மென்றபடி. "முத்துலே" ஒன்றுக்கு மூன்று சொல்லுகை. எக.

[வேறொரு அரும்பதம்.]

எழுபத்தோராம்பாட்டு.—(ஊழிகளாய்) இத்யாதி, கீழே ராத்ரியாய் விடிந்தவளவிலே வடிவுக்குப்போலியான பழங்களைக்கண்டு தரிக்குமளவான தசைபிறந்தபடியை யறிந்ததிருத்தாயார்பொடியும்படியைச் சொல்லித்தோழிகளோடுபோதுபோக்கினபடி சொல்லுகிறதென்று ஸங்கதி யுட்கொண்டருளிச்செய்கிறார்(களவிலே) இத்யாதி.மிகையை-மிக்க கொடுமையை.தாத்பர்ய மருளிச்செய்து சப்தார்த்த மருளிச்செய்கிறார்(காள) இத்யாதி ஒருவன்பேர் சொல்லிற்றில மென்றாற்போலே சொல்லாதே இப்படி விசேஷித்தபடிசொன்னதில்லையென்கைக்குத் தாத்பர்யமென்னென்ன வருளிச்செய்கிறார் (குண) இத்யாதி. நிர்க்குண வஸ்து ஸித்யர்த்தமாக ஸத்யாதிபதங்களுக்கு வ்யாவர்த்ய பேதம்சொல்லப்போய் அத்தாலே வஸ்துபேதம் சொல்லிவிட்டாற்போலே,குணவானானவனைச் சொல்ல வில்லையென்கிற முகத்தாலே சொல்லியே தரிக்கிறாளென்று கருத்து. பேதமென்றது- வஸ்துபேதமென்றாற்போல் ஸவிசேஷ வஸ்துவை என்றபடி. (ஸாதிக்கைக்காக) என்றது-தோழிமார் பட்ட வ்யஸநத்திலும் வாராமல்போகையாலே,(க)"கடியன் கொடியன்"என்றுஅவனப்படிப்பட்டவனென்று ப்ரளயகாலம் போன்ற ராத்ரியிலே வந்துதவினனென்று வ்ருத்தகீர்த்தநமுகேந உபகாரத்தை ஸ்த்ரீகரிக்கைக்காக வென்றபடி. (உ) "ஓர் கங்குலாயிரமூழிகளே" என்றிருக்கிறவிவள்தா னிப்படி குணவானென்ன ப்ரஸக்தியுண்டோ? இவள்தான் குணவா னென்றத்தைக் குற்றமாகக்கொண்டு நிஷேதிக்க ப்ரஸக்தி யுண்டோவென்ன, (இவளுக்கு) இத்யாதி வாக்யத்வயத்தாலே. இத்தை விவரிக்கிறார் (உபகரித்த) இத்யாதி வாக்ய சதுஷ்டயத்தாலே. "கண்டு" என்றதுக்கு பாவ மருளிச்செய்கிறார் (புரோவர்த்தி) இத்யாதி. பிள்ளாய் - பூஜ்யோக்தி. மேலே "அம்மனே" என்று சொல்லச்செய்தே இங்கே "அன்னே" என்றதுக்கு ஹ்ருதயமருளிச்செய்கிறார் (இவள்) இத்யாதி. நறுவட்டாணி-நல்ல சமத்தென்றபடி. முத்துலே. ஒன்று மூன்றுசொல்லுகை. காண்கிறதும் - களாம்பழமும், சொல்லுகிறதும் - ஆழிபோலென்றதும், ஆழிவண்ண னென்கிறதும். எக.

---

(க) திருவாய்-கூ-கூ-ரு. (உ) திருவிருத்தம்-எo.

தாத்பர்யம்.—இப்பாசுரத்தில், ஆழ்வார் தமக்கு ஸர்வேஶ்வரனை ஸேவியாவிடிலும் தத்ஸத்ருசவஸ்துக்களையாகிலும் கண்டாலொழிய ஜீவிக்கக்கூடாமையான ப்ராவண்யாதிசயம் பிறந்தவளவில், அத்தைக்கண்ட சிலஅன்பர், இவரை ஸாதநாந்தரபராக ப்ரமித்து இவரது ப்ராவண்யத்தை நிஷேதிக்க, தம்முடைய அபிப்ராயத்தை மற்றும் சிலஸஹ்ருத்துக்களுக்கு ஆவிஷ்கரித்து அவர்களைக் கொண்டு இவர்கள் ப்ராந்தியைப் போக்கின பாசுரத்தை, நாயகனோடொத்த பதார்த்தங்களைக் கண்டுதரிக்க நினைத்த விரஹிணியான நாயகியை நிஷேதித்த தாய்மார்க்கு ஸகிகளைக்கொண்டு தன்னபிப்ராயத்தையறிவித்துத் தெளிவித்த நாயகியின் பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

கீழ்பெருழியாக வளர்ந்த இரவுகழிந்து விடிந்தவாறே விற்கவந்த களாப்பழத்தைக்கண்டு, இப்பழம் ஆழிவண்ணம் என்று நாயகிசொல்லக் கேட்ட தாயார், இவள் ஆழிவண்ணனை எம்பெருமானை நினைக்கிறுளென்று கருதி இவளை நிஷேதிக்க, ஓஸகிகளே! நான் ஸகல ஜகத்ஸ்ரஷ்டாவாய் ஸமஸ்தவஸ்துக்களையும் ரக்ஷிக்கவல்ல ஸகலகல்யாண குணாகரனை ஶ்ரிய:பதியினுடைய திருநாமத்தைச் சொன்னேனாகில் இத்தாய் நம்மை நிஷேதிப்பது யுக்தந்தான். நான் அதொன்றையும் சொல்லாமல், விற்கவந்த களாப்பழத்தைக்கண்டு, இது ஸமுத்ரம்போல் கறுத்திருக்கிறது என்று சொல்ல, இவள் அவ்வார்த்தையை அவ்வளவாகக் கொள்ளாதே, இவள் தன்னுடைய சாதுர்யத்தினால் ஸர்வேஶ்வரனுடைய கரியநிறத்தைச் சொன்னுள் என்று கொண்டு என்னை நிஷேதிக்கத்தொடங்கினுள். நீங்கள் என்னோடு ஸமஸாக தக்கைகளாய் என் ஸ்வபாவமறிந்தவர்களாகையால், இவள் நம்மை அடிக்கடி நிஷேதியாமற்படி ஒருபரிஹாரம் யோசித்துச் சொல்லுங்கோள் என்று தோழிகளைக்குறித்துரைக்கிறுள்.

எக.

---

சூழ்கின்ற கங்குல் சுருங்காவிருளின் கருந்திணும்பைப்,
போழ்கின்ற திங்களம் பிள்ளையும் போழ்க, துழாய் மலர்க்கே
தாழ்கின்ற நெஞ்சத்தொரு தமியாட்டியேன் மாமைக்கின்று
வாழ்கின்றவாறிதுவோ, வந்து தோன்றிற்று வாலியதே. எ௨.

அர்த்தம்.—சூழ்கின்ற - வ்யாபித்திருக்கிற, கங்குல் - ராத்ரியிலுண்டான, சுருங்கா - சுருக்கமற்ற (பெரிய), கரு-கருநிறத்தையுடைய, இருள் - அந்தகாரத்தினுடைய, திணும்பை - வலிவை, போழ்கின்ற - பிளக்கிற, அம் - அழகிய, பிள்ளை புத்ரன்போல் அநுகூலனை, திங்களும் - சந்த்ரனும், போழ்க- பிளக்கக்கடவது. (அதற்காகவே) வாலியது - வலியதாய், வந்து தோன்றிற்று - வந்துதித்தது. துழாய்மலர்க்கே - (ஸர்வேஶ்வரனணிந்த) திருத்துழாயின் பூந்தாருக்காகவே, தாழ்கின்ற - தளர்ந்த, நெஞ்சத்து-ஹ்ருதயத்தையுடைய, ஒருதமியாட்டியேன் - ஒருத்தியாய் ஸஹாயமற்றுத்தனியே யிருக்கிற என்னுடைய, மாமைக்கு - ஸ்வாபாவிகமான நிறத்துக்கு, இன்று-இக்காலத்தில், வாழ்கின்ற ஆறு - வாழும்ப்ரகாரம், இதுவோ - இதுவா. எ௨.

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—எழுபத்திரண்டாம்பாட்டு. போலிகண்டு தரிக்கவேண்டும்படி 'ஆற்றாமை மிக்கிருக்கிற ஸமயத்திலே ராத்ரிவந்திருளாலே நலிய "இத்தால் வந்தநலிவைப் போக்கி நம்மை ரக்ஷிப்பாராரோ?" என்றிருக்கிறவளவிலே சந்த்ரன் வந்து தோற்றினான். இவ்விடத்தே பிள்ளையமுதனார் ஒருகதை சொல்லுவர் - "ஒருஸாது ப்ராஹ்மணன் காட்டிலே தனியேவழி போனானாய் ஒருபசுதொடர்ந்து வந்ததாய், "இத்தால் வந்த நலிவைப்போக்கி நம்மைரக்ஷிப்பாரார்" என்றிருக்கிற ஸமயத்திலே ஒருபுலிவந்து தோன்றிஅந்தப்பசுவையுங் கொன்று அதினுடைய ரக்தபாநத்தைப்பண்ணி இவன் முன்னே வந்து தண்டையை முறுக்கியிட்டிருந்ததாய் "அந்தப்பசுவையாகில் ஒருபடிப்ராணரக்ஷணம் பண்ணிப்போகலாயிற்று, இனியித்தைத் தப்பி நம் ஸத்தையை நோக்குகையென்றொரு பொருளில்லையாகாதே" என்று. அதுபோலேயிறேயிதுக்கும்.

வ்யா.—(சூழ்கின்ற) ப்ரளயங் கோக்குமா போலே எங்குமொக்கத்தானே வந்து சூழ்ந்தது இது ஓரிடத்திலேயாய் மற்றோரிடத்திலே யொதுங்கநிழலாம் படியிருக்கையன்றிகே. (கங்குல் சுருங்காவிருளின்) ராத்ரியினுடைய சுருங்காவிருள். இன்னதினைபோது இருள் செறிந்து வரக்கடவது, இன்னதினைபோதை அதாகக்கடவது என்றொருமர்யாதை யுண்டிறே. அதின்றிக்கேயிராநின்றது. (கருந்திணும்பை) கறுத்த நிறத்தையுடைய. திணும்பையென்றொரு சொல்லாய் அத்தால் திண்மையைச் சொல்லுகிறது. இருளினுடைய புறவிதழைக்கழித்து அகவாயில் திண்மையான வயிரத்தைச் சேரப் பிடித்தாற்போலே இருக்கிறது (போழ்கின்ற வித்யாதி) அவ்விருளைப்போழ்ந்து கொடு-கீண்டு கொடுதோற்றுகிறசந்த்ரனும். தனக்குப்புறம்பு பாத்ய

அரு|| எழுபத்திரண்டாம்பாட்டு.—(சூழ்கின்ற)(தண்டையை முறுக்கியிட்டு) என்றது-தண்டையென்று-வாலாய், வாலை முறுக்கியிட்டுக்கொண்டென்றபடி.

"சுருங்காவிருள்"-ஸங்கோசமற்றிருக்கிறவிருள். (இன்னதினைபோதையதாகக்கடவது) என்றது-அல்பமாகக்கடவதென்றபடி. அதாக - அல்பமாக. "போழ்கின்ற" பிளந்துகொண்டு தோற்றுகிற என்று பொருள். "போழ்க" பாதித்திடுக. அதாவது-பாதிக்க என்றபடி. "சூழ்கின்ற" இத்யாதிக்கு இரண்டுபொருள். அதாவது - அந்தகாரத்தைப் பிளந்துகொண்டு தோற்றுகிற சந்த்ரனும்பாதிக்கிறானென்றதுகீழ் ; அங்ஙனன்றிக்கே, ஸ்வபாவவிரோதிகள் அந்தகாரமும்சந்த்ரனும் அந்யோந்யங்கூடிபாதிக்கிறதென்று;அத்தை அருளி

வ்யா||மில்லாத படியாலேநம்மையேபாதித்திடுக, (போழ்கின்ற) ஸஹஜசாத்ரவத்தாலே. இத்தால், அவன் ஸந்நிதியிலே இது போழ்கின்ற தன்றியிலே கைதொட்டழிக்கிறாப்போலேயாயிற்று இதினுடையதிண்மையும் சந்த்ரனுடைய பருவம் நிரம்பாமையும். (திங்களம்பிள்ளை) சந்த்ரனாகிறவழகியபிள்ளை, முந்துற அநுகூலரைப்போலே தோற்றிப் பின்னைபிறே இவன் பாதகனாவது. இருளைப்போக்குகிற வாகாரத்தாலேயநுகூலனாய், பின்பிறே தானேநின்று பாதகனாவது. (க) "పద్మకోశ-பத்மகோச:" இத்யாதி. * ("పద్మకోశపలాశాని ద్రష్ట్వా దృష్టిర్హి మన్యతే। సీతాయా నేత్రకోశాభ్యాం సదృశానీతిలక్ష్మణ - பத்மகோசபலாசாநி த்ருஷ்ட்வா த்ருஷ்டிர்ஹிமந்யதே-ஸீதாயாநேத்ரகோசாப்யாம் ஸத்ருசாநீதிலக்ஷ்மண" இதினுடைய விபாகமறிகிறதில்லை ரஸனையென்னா நஞ்சைத்தின்னவொண்ணாதிறே. (௨) "పశ్యలక్ష్మణ-பஶ்யலக்ஷ்மண" இத்யாதி. 'దర్శ్యస్తే సౌమిత్రే-தர்சிஸௌமித்ரி" என்றுமிவ்வாகாரத்தையே பார்க்கிற வித்தனைபோக்கிப் பின்பது பாதகமென்னு மிடத்தைப்பார்க்கிறதில்லை.

(துழாய் மலர்க்கேயித்யாதி) அவன் தோளிலிட்ட திருத்துழாய் மாலையைப் பெறவேணுமென்றாசைப்பட்டு அதிலே கால்தாழ்ந்துகிடக்கிறநெஞ்சையுடைய. (துழாய்மலர்க்கே தாழ்கின்ற) அதிலருமையொன்றையும் புத்திபண்ணாதே. (ஒருதமியாட்டியேன்) ஸ்ரீஜநகராஜன் திருமகளுமொப்பன்று காணு மிவளுடைய தனிமைக்கு. இருளுக்கும் நிலவுக்கும் நொந்து தனிமைப்பட்டா ளிவளிறே. "ஒரு,, என்கிறவித்தால் உபமாநராஹித்யஞ் சொல்லுகிறது. (மாமைக் கின்று வாழ்கின்றவாறிதுவோ) இருளாலவந்தநலிவைபபோக்கி நம்நிறத்தை

அரு|| ச்செய்கிறார் (ஸஹஜசாத்ரவத்தாலே) என்ற-ஸஹஜசாத்ரவமென்றது-இருளுக்கும் சந்த்ரனுக்கு முண்டானசாத்ரவம். (அவன்ஸந்நிதியில்) என்றது - சந்த்ரனுடைய ஸந்நிதியிலே என்றபடி. இதுக்குசப்த நிர்வாஹம்-கருந்திணும்மைப்போழ்கின்ற அதுக்குமேலே திங்களம்பிள்ளையும்போழ்கவென்று. முந்தினவர்த்தமே ப்ரதாநமாகையாலே அத்தையே அருளிச்செய்கிறார் (சந்த்ரனாகிற அழகியபிள்ளை) என்று. அம்பிள்ளை என்று-ஆநுகூல்யஞ்சொல்லுகிறது. (பத்மகோசேத்யாதி) என்று தொடங்கி (பாதகமென்னுமிடத்தைப் பார்க்கிறதில்லை) என்னுமளவும் பொருள் தெரியாது - పద్మకోశపలాశాని ద్రష్ట్వా దృష్టిర్హి మన్యతే। సీతాయా నేత్రకోశాభ్యాం సదృశానీతిలక్ష్మణ॥ பத்மகோசபலாசாநி த்ருஷ்ட்வா த்ருஷ்டிர்ஹிமந்யதே! ஸீதாயாநேத்ரகோசாப்யாம் ஸத்ருசாநீதிலக்ஷ்மண"

(அதிலருமையொன்றையும் புத்திபண்ணாதே) என்றது - திருத்துழாயினுடைய துர்லபத்வத்தை புத்திபண்ணாதேயென்றபடி. "மாமைக்கின்றுவாழ்

(க) ஸ்ரீராமா - கிஷ்கி. * இந்த க்ரந்தம் ப்ரக்ஷிப்தம்.
(௨) ஸ்ரீராமா - ஆரண்ய-௬௬-௨௪.

வ்யா|| த்தருகைக்குசந்த்ரன்வந்து தோற்றினுனென்று நாம்பாரித்தி
ருந்த தெல்லாமிதுவோ? (வந்துதோன்றிற்று வாலியதே) இருளைப்
போக்குகைக்கு சந்த்ரன் வந்து தோன்றினுற் போலே, இச்சந்த்ர
னைப் போக்குகைக்கு யோராதித்யனில்லையோ? என்கிருள். இது
வேகிலேநின்று நலியு மென்றிருக்கிருள். (வாலியது) வலியது. [திங்
களம் பிள்ளையும் போழ்க - அதுவும் நம்மை வந்துநலிந்திடுக. வந்து
தோன்றிற்று வாலியதே அவ்விருளுக்கு மேலே இத்திங்களும் வந்து
பாதகமாய்த்தோற்றிற்று, மாமைக்கின்று வாழ்கின்ற வாறிதுவோ]
என்றந்வயம்

ஸ்வாபதேசம்.—இத்தால், (க) "இருளன்னமாமேனி" என்கிற
படியே திருநிறத்துக்குப் போலியான விருள் அதுக்கு ஸ்மாரகமாய்
நலிகிறபடியையும் அதுக்குமேலே சந்த்ரனும் திருமுகத்துக்காதல்
திருக்கையில் ஸ்ரீபாஞ்சஜந்யத்துக்காதல். (உ) "காளநிங்திங்களைக்
கோள்விடுத்து" என்கிறபடியே திருமுகத்துக்கு ஸ்மாரகமாய் நலி
கிறபடியாதல்; இவற்றைச் சொல்லுகிறது. எஉ.

---

அரு|| கின்றவாறு"-ஸ்வாபாவிகமான நிறத்துக்கின்று வாசியுண்டாகும்ப்ரகா
ரமிதுவோவென்று பொருள். "வாலியதே" - என்கையாலே இந்த சந்த்ர
னைப் போக்குவதொன்றுமில்லை யென்றபடி.

[சூழ்கின்றகங்குல் சுருங்காவிருளின கருந்திணும்பைப் போழ்கின்றதி
ங்களாகிறவம் பிள்ளையும் போழ்கைக்காக வாலியதாய்வந்து தோன்றிற்று, து
ழாய்மலர்க்கே தாழ்கின்ற நெஞ்சத்தொருதமியாட்டியேன் மாமைக்கின்று
வாழ்கின்றவாறிதுவோ] என்றந்வயம். எஉ.

[அப்பு அரும்பதம்.]

எழுபத்திரண்டாம்பாட்டு.—(சூழ்கின்ற) "திணும்பை சுருங்கா" என்ற
த்தைப்பற்ற வருளிச்செய்கிருர், (இன்னதினை) இத்யாதி. இருளைப் போழ்கின்ற
திங்களென்னுதல் ; தன்னைப்போழ்கின்ற விருளென்று இருளுக்கு விசேஷ
ணமாதல். இத்தை யருளிச்செய்கிருர் (ஸஹஜசாத்ரவம்) இத்யாதி. இத்தால்-
ஸஹஜசாத்ரவத்தாலே, பாலசந்த்ரனுகையாலே இருளானது சந்த்ரனை
யும் கைதொட்டு நலியாநின்று கொண்டு தன்னைநலிகிற தென்றபடி. பாதக
வேளையிலே "அழகிய" என்பானென்னென்ன வருளிச் செய்கிருர் (மூந்
துற) இத்யாதி. "பத்ம" தொடங்கி 'பார்க்கிறதில்லை' என்னுமளவும் ஸம்ப்ரதா
யமில்லை. "இதுவோ"-வ்யங்க்யத்திலே, விஷாதம். வலியதுதோன்றுகையாலே
இத்தைப்பாதிக்க வாதித்யனில்லையோ வென்றபடி. "அதுவும்" இருளும். எஉ

[வேருெரு அரும்பதம்.]

எழுபத்திரண்டாம்பாட்டு.—(சூழ்கின்ற) இத்யாதி-(போலிகண்டு) - பக
லிலே விற்கவந்த களாப்பழமாகிற போலியைக்கண்டென்றபடி. ராத்ரிவந்து-

---

(க) பெரியதிருவந்தாதி. உகூ. (உ) திருவாய்-கூ-அ கூ.

வேறொரு ராத்ரியும் வந்து.(இருளாலேநலிய) என்றது - அவன் திருமேனிக்குப்போலியாய் நலியவொண்ணாதே. பகலாகில் போலிகண்டு தரிக்கலாம், ராத்ரியாகையால் அது பாதகமென்றுகருத்து. பசுவென்றதுக்கு தார்ஷ்டாந்திகம் - இருள், புலிக்கு தார்ஷ்டாந்திகம் - சந்த்ரன். தன்னுடையை-வாலே. இது வென்றது - இருளை. சுருங்காவென்றதுக்குத் தாத்பர்யம் - (இன்னதினை) இத்யாதி. இருளின் கருந்திணும்பைப் போழ்கின்ற திங்களென்று கூட்டிக் கீழருளிச்செய்து, சுருங்காதே போழ்கின்ற விருளின்கருந்திணும்பை யென்ன திங்களம்பிள்ளை யென்ன இவை நம்மைப் போழ்கவென்றுக்கி அர்த்தாந்தரமருளிச்செய்கிறார் (ஸஹஜ) இத்யாதி. அவன்-சந்த்ரன். பால சந்த்ரனாகையாலே அவனையும் மேலிட்டுஎன்னை பாதிக்க வென்றபடி. இதுவென்றது - இருளின்கருந்திணும்பை.பாதகமென்கிறபோது.“அழகிய” என்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (முந்துற) இத்யாதி. விவரணம் (இருளை) இத்யாதி. இருளுந்திங்களும் ஸஹஜ சாத்ரவத்தாலே தன்னை பாதிக்கைக்கு சாத்ரவம்ஸஹஜமாகிறவழியென்னென்ன வருளிச்செய்கிறார் (பத்மகோச இத்யாதி.)யென்று. (க) “పద్మకోశప్రతీకాశంహృదయంచాప్యధోముఖమ్. - பத்மகோச ப்ரதீகாசம் ஹ்ருதயஞ்சாப்யதோமுகம், என்கிற விவன் ஹ்ருதயமாகிறது பத்மகோசம்போன்றதாகையாலே ஆதித்யனுக்கே யலரக்கடவதாகையாலே - (உ) “பகற் கண்டேன் நாரணனைக்கண்டேன்” என்கிறவவனைக்கண்டே அலரக்கடவதென்று கருத்தாய், அத்தாலே இருளுக்கும் சந்த்ரனுக்கு மலராமையால் சாத்ரவம் ஸஹஜமென்றபடி. ஆதிபக்ஷத்தில் “ஒருஸாது ப்ராஹ்மணன்” என்றருளிச் செய்த கதையிலே புலிஸ்த்தானே இருளாய், அதுக்கு மநுஷ்யரோடும் பசுவோடும்ஸஹஜவைர முண்டாகையாலே முகசந்த்ரனையும் விரோதித்துக்கொண்டு என்னையும் பாதிக்கவந்ததென்று த்ருஷ்டாந்தாநுரூப்யங்கண்டுகொள்வது. சந்த்ரனுக்கும் ஸஹஜசாத்ரவ முண்டானால் “அழகிய” என்று விசேஷிப்பானென்னென்ன வருளிச்செய்கிறார்.(இதினுடைய) இத்யாதி. அதாவது-இந்த சந்த்ரன ஸகலகலாபரிபூர்ணனாய்த் தன்னைப்பாதிப்பரனென்னுமதிப்போதறியுமளவாயிற்றென்கை. ஸஹஜ சத்ருவிடத்தில் அநுகூலஜ்ஞாந மிவனுடைய நெஞ்சில்தோற்றினால் வரு மநர்த்தத்தை ஸத்ருஷ்டாந்தம் வ்யாக்யாதா வருளிச்செய்கிறார் (ரஸநை) இத்யாதி. அதாவது-ரஸ்யபதார்த்தங்களை புஜிக்கை ஸ்வபாவமான நாக்கு விஷமிஸ்ர போஜநம்பண்ணலாமோவென்றபடி. இப்படிமேல்வரும் அநர்த்தம் பாராதேமேலெழுந்தவாகாரத்திலே ஸ்ப்ருஹைபண்ணி, அழகிது என்றாருண்டோவென்ன, (பச்யலக்ஷ்மண) இத்யாதி. ஸ்ரீராமாயண ஶ்லோகத்தை யுட்கொண்டர்த்ததநமுகேந பிராட்டிமேலெழுந்த வாகாரத்தைப்பார்த்து மாயாம்ருகத்தை ஆசைப்பட்டா ளென்கிறார் (தர்சி) இத்யாதி. தர்சிப்பி என்றபடி. (ஸௌமித்ரி) என்று-தமிழாக ஸம்போதித்தபடி. (என்னும்) - இப்படி அருளிச்செ

(க) நாரா - ௯. (உ) இரண்டாந்திரு - ௮௧.

ய்யும். (இவ்வாகாரத்தையே) மாயாம்ருகத்தின் இந்த மேலெழுந்தவாகாரத்தையே என்றபடி. "பார்க்கிறதில்லை" என்ற வசந்தரம் பிராட்டியென்று அருளிச்செய்தாரிறே பெருமாளென்று சேஷம். ஸ்ரீராமாயணச்லோகந்தான் "పశ్యలక్ష్మణవైదేహ్యాస్స్పృహాంమృగగతామిమామ్।రూపశ్రేష్ఠతయాహ్యేషమృగోద్య నభవిష్యతి-பஶ்யலக்ஷ்மணவைதேஹ்யாஸ் ஸ்ப்ருஹாம் ம்ருககதாமிமாம்। ரூபஶ்ரேஷ்ட்டதயாஹ்யேஷ ம்ருகோத்ய ந பவிஷ்யதி" இத்யாதி கண்டுகொள்வது. அப்படியே இவள் நெஞ்சும் ப்ரதமத்திலே விகார நிவர்த்தகமாத்ரம் கொண்டு அழகிய வென்றுளித்தனை என்றிங்ஙனே இவ்வாக்யங்களுக்கு பாவம்கண்டுகொள்வது. "தமியாட்டியேன்" என்ற ஏகவசநத்தாலே ஒருத்தியென்கிறது ஸித்தமாயிருக்க "ஒரு" என்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (ஸ்ரீஜநகராஜன் திருமகளும்) இத்யாதி. ராவணன்பிரித்தாளித்தனையாகையாலே (க) "ఊర్ధ్వంమాసాన్నజీవిష్యే-ஊர்த்வம் மாஸாந்நஜீவிஷ்யே" என்று பிராட்டி திருவடியோடே அருளிச்செய்கையாலே பிரிந்தபத்துமாஸத்திலுள்ள ராத்ரிகளுக்கும் நேர்த்தவளல்லவென்று தாத்பர்யம். (இதுவோ) என்றது-வ்யர்த்தமாய்ப் போம்படியோ நாமாசைப் பட்டதென்று கருத்து. "வாலியதோ"என்ற ஸ்வரத்துக்குபாவம்(இதுவே) இத்யாதி. "ஸஹஜசாத்ரவத்தாலே" என்றவாக்யத்தி லிரண்டாம் பக்ஷத்தில் இளந் திங்கள் ஸ்மாரகமாம்வழி எதென்ன வருளிச்செய்கிறார் (நாள்) இத்யாதி, இப்பாசுரம் மூறுவலைச்சொல்லுகையாலே அத்தோடேகூடின முகத்துக்கு ஸ்மாரகமென்றபடி. ௭௨.

தாத்பர்யம்.—பகவதநுபவாலாபஜநிதமான மோஹாந்தகாரம் நடக்கும் தசையில் பகவத் ஸ்வரூபவைலக்ஷண்ய ஜ்ஞாநம்பிறந்து நலிவுபடுகிற தம்முடையபடியை, இருளுக்குநலிந்த நாயகியானவள், அதற்குமேல் சந்த்ரோதயமாய் அத்தாலும் நலிவுபட்ட தன்படியைச் சொல்லும் ப்ரகாரத்தாலே யருளிச்செய்கிறார்.

இதுவரையிற்சென்ற பகற்காலத்தில்அந்நாயகனோடுபோலியான களாப்பழம் முதலியவற்றைப்பார்த்துப்போது போக்கினேன். இப்போது அப்பகலும் போய் போகயோக்யகாலமாயிருக்கிற இரவும் வந்து எனக்கு ஓரிடத்திலொதுங்கிப் பிழைக்க வழியில்லாதபடி எங்குமொக்கவ்யாபிக்க அவ்விரவிலுண்டான இருள்வந்து என்னிந்த்ரியங்களைமறைத்து சாலுமோரவதியற்று வலியதாய்க்கொண்டு என்னை நலியத்தொடங்கிற்று. இவ்வளவில் சந்த்ரோதயமாய் அவ்விருள் நீங்கின வளவில், நாயகனுடைய இருண்ட திருமேனியோடு போலியால் அத்திருமேனியையஸ்மரிப்பித்து என்னை நலியவந்த இவ்விருளைப்போக்குகையாலே இச்சந்த்ரன் எனக்கு மிகஉபகாரகனென்றிருந்தேன், இவனும், இந்நாயகனுடைய திருமுகத்தையும், அவன் திருக்கையிலேந்திய ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் அவற்றோடு போலியான தன்னுருவைக்காட்டி ஸ்மரிப்பித்து

(க) ஸ்ரீராமா - ஸுந்தர. ௩௮-௬௭.

என்னிற மழியும்படி மிகவும் நலியத்தொடங்கினான். நாயகனணிந்த திருத்துழாய்த்தாருக்காசைப்பட்டுத் தனியேநின்று என்னைப் போல் நலிவுபட்டவர்களிது வரையிலொருவருமில்லையே, இதுவா இப்போதென்னிறத்துக்கு வந்த வாழ்வு என்றுக்லேசித்துரைத்தாள். ௭௨.

வால்வெண்ணிலவுலகாரச்சுரக்கும் வெண்டிங்களென்னும்,
பால்விண்சுரவிசுரமுதிர்மாலை, பரிதிவட்டம்
போலுஞ்சுடரடலாழிப்பிரான் பொழிலேழளிக்கும்
சால்பின்தகைமைகொலாம், தமியாட்டி தளர்ந்ததுவே. ௭௩.

அர்த்தம்.— வெண்திங்கள் என்னும் - வெண்மையான சந்த்ரனென்று சொல்லப்படுகிற, விண்-ஆகாசத்திலேஸஞ்சரிக்கிற, சுரவி-பசுவானது, வால்வெண்-மிகவும்வெளுத்த, நிலவு - நிலவாகிற, பால்-பாலை, உலகு - லோகமாகிற பாத்ரம், ஆர-நிறையும்படி, சுரக்கும்-சுரக்கிற, சுர - சுரப்பு, முதிர்-முதிர்ந்த, மாலை-ராத்ரியிலே, தமியாட்டி-ஸஹாயமில்லாத இப்பெண், தளர்ந்தது - சிதிலையானது, பரிதிவட்டம் போலும்-ஸௌர்யபரிவேஷம்போலிருக்கிற, சுடர் - தேஜஸ்ஸையுடைய, அடல்-யுத்தோந்முகமான, ஆழி - திருவாழியையுடைய, பிரான் - உபகாரகனான ஸர்வேஶ்வரனுடைய, ஏழ்பொழில்-ஸப்தலோகங்களையும், அளிக்கும் - ரக்ஷிக்கிற, சால்பின் - ரக்ஷகத்வமர்யாதையினுடைய, தகைமைகொலாம் - ஸ்வபாவமா? ௭௩.

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—எழுபத்து மூன்றாம்பாட்டு.—நிலவுபோய் முடியநின்று பாதகமாய் அத்தாலே இவளும் நோவுபட்டு மோஹித்துக் கிடக்க, இத்தைக்கண்ட திருத்தாயார் "தர்மஹாநிகிடீர்", என்று கூப்பிடுகிறாள்.

வ்யா.—(வால்வெண் நிலவித்யாதி) இவள் நலிவைக் கண்டு அவன் ரக்ஷகத்வத்திலேயு மதிசங்கைபண்ணுகிறாள். * வலியதாய்வெளுத்தநிறத்தையுடைய நிலவாகிறபாலை லோகமடைய நிரம்பும்படி சுரக்கிறவெளுத்த நிறத்தையுடைய சந்த்ரனாகிற ஆகாசத்திலேயுண்டான ஸுரபியானது சுரக்கிற சுரப்புப்போய் முதிர்ந்தராத்ரி-வெண்

அரு|| எழுபத்து மூன்றாம்பாட்டு.— (வால்வெண்ணிலவு) (நிலவுபோய் முடிய நின்று) என்றது-போயென்று மிகுதியாய், நிலவானது மிகவும் ஸம்ருத்தமாய் நின்றதென்றபடி.

(சுரப்புப்போய் முதிர்ந்தராத்ரி) என்றது - போயென்றது - மிகுதியாய், சுரப்பு மிகவுமதிசயித்தராத்ரி என்றபடி. இத்தால், பரிபூர்ணசந்த்ரிகையையுடைய ராத்ரி என்றபடி.

(பா) வாலிபதாய்.

வ்யா॥ திங்களென்னும் விண்சுரவியானது வால்வெண்ணிலவாகிறபாலை உலகாகிற தாழி நிறையும்படி சுரக்கிற சுரப்புமுதிர்ந்த மாலையிலே. (விண்சுரவி) இப்ப்ரளயந்தன்பக்கல் தட்டாதபடியுயரத்திலே நிற்கை.

(பரிதிவட்டமித்யாதி) இந்நிலவுக்குப்பகையுண்டு கிடீரிங்கே யென்கிறாள். ஆதித்ய மண்டலம்போலே யிருக்கிற சுடரையுடைத்தாய், எப்போதும்யுத்தோந்முகமாய், ஆஸ்ரிதவிரோதிகளைப்போக்குந் திருவாழியைக் கையிலேயுடைய மஹோபகாரகன். (பொழிலேழளிக்குஞ் சால்பின் தகைமைகொலாம்) பூமியடைய ரக்ஷித்துப்போருகிறவனுடைய ரக்ஷகத்வ ஸ்வபாவமோ? விது. பொழிலேழையுமளிக்கிற சால்புண்டு - மஹா புருஷத்வமர்யாதை, அதின் ஸ்வபாவமிருந்தபடியோ? விது. அவன் ரக்ஷகனாக அவனைகைபார்த்திருப்பார்க்கு அழகிதாக ஜீவிக்கலா யிருந்தது., ப்ரளயாபத்துவந்தாலும் அவனுளனென்றழகிதாக விஸ்வஸிக்கலாயிருந்தது. கையுந் திருவாழியு மாயிருந்து ரக்ஷித்துப் போந்தபடியிதுவோ? முன்பு பண்ணிப் போந்த ரக்ஷகத்வத்துக்கு நமஸ்காரம். (தமியாட்டி தளர்ந்ததுவே) அஸாதாரண பரிகரம். படுகிறபடிகண்டால் விபூதிமாத்ரமாய் ரக்ஷ்யகோடியிலே யந்வயித்திருப்பார்க்கு அழகிதாக ஜீவிக்கலாயிருந்தது. தமியாட்டி யென்கிறாளிறே - தாயாரான தானுங்கூட விருக்கச்செய்தே அவள் கருத்தை யநுவர்த்தித்து, அவனையொழிந்தாரடங்கலுங் கழுத்துக்கட்டி, அவனொருவனுமே துணையென்றிறே யவளிருப்பது. அந்திமஸமயத்தில் யமபடர் சூழநின்றார்களென்று அவர்கள் துணையாகார்களிறே. 'க்ரமப்ராப்தியமையு மென்று ஹிதஞ்சொல்லுவார் பாதகராமித்தனையிறே.

[வால்வெண்ணிலவுலகாரச் சுரக்கும் வெண்டிங்களென்னும்பால்விண் சுரவி சுரமுதிர்மாலையிலே - தமியாட்டிதளர்ந்தது - பரிதிவட்டம்போலும் சுடராடலாழிப் பிரான்பொழிலேழளிக்குஞ் சால்பின்தகைமைகொலாம்]

---

அரு॥ சால்பென்றது - சார்வாய், ரக்ஷகத்வபூர்த்தியைச் சொல்லுகிறது. மகள் தானப்படியிருக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (அவனையொழிந்தாரடங்கலும்) என்று. தாய்மாரு மப்படியாதகரோவென்ன அருளிச்செய்கிறார் (க்ரமப்ராதியமையும்) என்று.

[வெண்திங்களென்னும் விண்சுரவியானது வால்வெண்ணில வாகிறபாலை உலகாகிற தாழிநிறையும்படி சுரக்கிற சுரப்பு முதிர்ந்தமாலையிலே தமியாட்டி தளர்ந்தது - பரிதிவட்டம்போலும் சுடராடலாழிப்பிரான் பொழிலேழளிக்கும் சால்பின் தகைமை கொலாம்] என்றந்வயம் - சுரவி-ஸுரபி. (சுர

வ்யா஖்யாவதாரம்.—இத்தால், இவருடைய தசாவிபாகத்தைக் கண்டார்க்கு அவனுடைய ரக்ஷகத்வத்தையும் மதிசங்கை பண்ணவேண்டும்படியான நிலையைச்சொல்லுகிறது. எ௩.

---

அருளுக்கிற சுரப்பு) என்றது-பால்ப்ரவஹிக்கிற ப்ரவாஹமென்றபடி. "சால் பின் தகைமைகொலாம்" என்றது-ரக்ஷகத்வஸ்வபாவம் நன்றாயிருந்ததென்று ஆக்ஷேபிக்கிறாளென்றபடி. எ௨.

[அப்பு அரும்பதம்.]

எழுபத்துமூன்றாம்பாட்டு.—(வால்வெண்ணிலவு) "தமியாட்டி தளர்ந்தது-அளிக்கும் சால்பின் தகைமைகொல்" என்றதிசங்கை. "வால்வெண்ணிலவு பாலை உலகாரச் சுரக்கும் வெண்டிங்களென்னும் விண்சுரவி" என்றந்வயித்து அருளிச்செய்கிறார் (வலியதாய்) இத்யாதி. சுரப்பு முதிருகை-பூர்ணசந்த்ரனாய் பூர்ணமானநிலாவை விடுகை. கர்த்ருகர்மக்ரமத்திலே அந்வயித்தாத்பர்யமு மருளிச்செய்கிறார் (வெண்டிங்களென்னும்) இத்யாதி. திருவாழியை ஆதித்யனாகச் சொல்லுகையாலே (பகையுண்டு) என்கிறது. சால்பு-ரக்ஷகத்வமாதல், மர்யாதையாதல். வ்யங்க்யமாக வாக்யத்ரய மருளிச்செய்கிறார் (அவன் ரக்ஷகனாக) இத்யாதி. இப்போதில்லாவிட்டால் முன்பில்லையோவென்ன வருளிச்செய்கிறார் (முன்பு) இத்யாதி. தமி-தனியாய், அத்விதீயையென்னுதல், தனியாய்-ஒருத்தியென்னுதல். இத்தையருளிச் செய்கிறார் (தமியாட்டியென்கிறாள்) இத்யாதி. அண்டையிலே யிருக்கிறவிவர்கள் துணையன்றோவென்ன வருளிச்செய்கிறார் (அந்திமஸமயத்தில்) இத்யாதி. இவர்கள் பாதகரோவென்ன வருளிச்செய்கிறார் (க்ரமப்ராப்தி) இத்யாதி. எ௩.

[வேறொரு அரும்பதம்.]

எழுபத்துமூன்றாம்பாட்டு.—(வால்) இத்யாதி. கீழ்ப்பாட்டிலே ஜ்வலிஷ்டாஷ்டமீசஜ்வலதிந்து ஸந்நிபமான திருநுதலுக்குஸ்மாரகனான வர்த்தமானாகவும் புன்முறுவலுக்கு ஸ்மாரகமான பாலசந்த்ரனாகவும் விவக்ஷித்த யோஜநாத்வயத்துக்குச் சேரவிப்பாட்டு. ராகாசந்த்ரவிஷயத்தில் நோவுபட்டாளாகஸங்கதியுட்கொண்டு அவதாரிகை அருளிச்செய்கிறார் (நிலவு) இத்யாதி. முடியப்போய்என்றந்வயிப்பது. (அத்தாலே) ராகாசந்த்ரனாலேயென்கை. (தர்மஹாநி)-அமர்யாதையென்றபடி. இப்பாட்டுக்குத்தாத்பர்யாந்தரம் (இவள்) இத்யாதி. கீழ் தாத்பர்யமருளிச்செய்து அந்வயமுகேந விவரிக்கிறார் (வெண்டிங்கள்) இத்யாதி. இப்ப்ரளயம்-இவளுடைய விரஹம். "சுடர்" இத்யாதி அமைந்திருக்க, "பரிதி வட்டம்போலும்" என்றதுக்குக் கருத்தென்னென்ன வருளிச்செய்கிறார் (இந்நிலவுக்கு) இத்யாதி. இதுவென்றது-இவள் தளர்ந்ததென்றபடி. சார்வு-ரக்ஷகத்வமென்றருளிச்செய்து, மர்யாதை யென்றர்த்தாந்தர மருளிச்செய்கிறார் (பொழில்) இத்யாதி. "ஆம்" என்றது-வ்யங்க்யத்திலேயாய் முந்தினவர்த்தாநு குண

மாக பாவமருளிச்செய்கிறார் (அவன்) இத்யாதி. வாக்ய சதுஷ்டயத்தாலே. கழுத்துக்கட்டி - சாடு, தேவதாந்தரமான லிங்கமாலை களக்ரந்தியானவ்ரண மென்னுநலென்று ப்ரதிபந்தக மென்றபடி. ௭௩.

தாத்பர்யம்—இதில், பூர்ணசந்த்ரனைக்கண்டுநொந்த நாயகியைக்கண்ட தாயார் நாயகனானஸர்வேஸ்வரனை க்ஷேபிக்கிறாள்.

சந்த்ரனானவன் ஷோடசகலாபரிபூர்ணனாய் ஆகாசத்தின்மத்தியில்வந்து தன்கிரணங்களையுலக மெங்கும் வ்யாபிக்கச்செய்து அதினால் அதிரம்யமாயிருக்கிற இவ்விரவிலுங்கூடநாயகனான ஸர்வேஸ்வரன்தான் வந்துதவாமல் இப்பெண்ணைத்தனியே நிறுத்தி இவளை வதையப்பண்ணு நின்றான். பரிவேஷம்போல் வட்டமாய் உஜ்வலமாயிருக்கிற திருவாழியையேந்தி ஜகத்ரக்ஷகனென்றுவிருது பெற்றுத் திரிகிற இவன் இவளை இப்படி உபேக்ஷிப்பது இவனுடைய மேன்மைக்குச் சிறிதும் தகுந்ததாயிராது. ௭௩.

தளர்ந்தும் முறிந்தும் வருதிரைப்பாயில், திருநெடுங்கண்
வளர்ந்துமறிவுற்றும் வையம்விழுங்கியும், மால்வரையைக்
கிளர்ந்துமறிதரக்கிண்டெடுத்தான் முடிசூடுதுழாய்
அளைந்துண் சிறுபசுந்தென்றல், அந்தோவந்துலாகின்றதே. ௭௪.

அர்த்தம்—தளர்ந்தும்-சிதிலமாயும்,முறிந்தும்-ஒடிந்தும்,வரு-வாராநின்ற, திரை - அலைகளையுடைய, பாயில்- க்ஷீராப்தியாகிற படுக்கையில், திரு - அழகாலே, நெடும் - அபரிச்சிந்நமாயிருக்கிற, கண்-திருக்கண்களை, வளர்ந்தும், மூடிக்கொண்டும், அறிவு - ஜகத்ரக்ஷணசிந்தையில், உற்றும் - பொருந்தியும், வையம் - லோகங்களை, விழுங்கியும் - (ப்ரளயகாலத்தில்) அமுது செய்தும், மால் - பெரிய, வரையை - கோவர்த்தநபர்வதத்தை, கிண்டு(பூமியில்நின்றும்) வேறாக்கி, கிளர்ந்து - கிளப்பி, மறிதர - கீழ்மேலாக, எடுத்தான் - எடுத்தவனுடைய, முடி - திருவபிஷேகத்தில், சூடு - சூடப்பட்ட, துழாய் - திருத்துழாயில், அளைந்து - வ்யாபித்து, உண் - அத்தோடுஸஹவாஸம் பண்ணின, பசும் - வேறொருவஸ்துவின் ஸம்பந்தமில்லாத, சிறுதென்றல்-இளந்தென்றலானது, வந்து - வந்து, உலாகின்றது - ஸஞ்சரியாநின்றது. அந்தோ என்பது சந்தோஷ ஸூசகமான அவ்யயம். ௭௪.

## [பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—எழுபத்துநாலாம்பாட்டு.—ஒருதென்றல் வந்துலாவிற்றாய் "தென்றல்வந்தது, அவனைவரக்கண்டிலோம்" என்று தலைமகள் தளர, அத்தைக்கண்டதோழியானவள் "இத்தை வெறுந் தென்றலென்றிருந்தாயோ? மாளிகைச்சாந்து நாறுகின்றால், "ராஜபுத்ரன்

---

அரு॥எழுபத்துநாலாம்பாட்டு.—(தளர்ந்தும்) (வெறுந்தென்றலென்றிருந்தாயோ மாளிகைச்சாந்து நாறுகின்றால்) என்றது-கேவலவாயுவானாலன்றோ

வ்யா॥ வரவணித்து" என்றிருக்கவேண்டாவோ? இது அவன் வரவுக்குஸூசகங்காண், நீ சோகிக்கவேண்டா, என்று ஸ்வஸிப்பிக்கிறாளாயிருக்கிறது.

வ்யா.—(தளர்ந்து மித்யாதி) பெருக்கு மலைபோலேயிருக்கிற திரைகளையெடுத்து அக்கனத்தாலே தளர்ந்தும், காற்றாலேமுறிந்தும் வருகிற திரைகளை யுடைத்தான படுக்கையிலே, "இவன் ஸர்வேஶ்வரன்" என்று ஐஶ்வர்யத்தைக் கோட்சொல்லிக் கொடுப்பதாய் அழகுக் கெல்லையின்றிக்கே யிருக்கிற கண்களைக்கொண்டுறங்கியும் ஜகத்ரக்ஷணத்தைப்பண்ணிக்கொண்டுகண் வளர்ந்தும். (அறிவுற்றும்) ப்ரளயம்வந்து நலியப்புக்கவாறே "இவற்றினுடைய ரக்ஷணார்த்தமாக நாம்வந்து கிடக்கச்செய்தே இவற்றைநோவுபட விட்டிருக்கையாவதென்" என்று உணர்ந்தருளியும். (வையம் விழுங்கியும்) ப்ரளயத்திலே நோவுபடாதபடி பூமியை யெடுத்து வயிற்றிலேவைத்து நோக்கியும். (மால்வரையித்யாதி) அப்படி ஜகத்துக்காக வருகையன்றிக்கே ஓரூராக நோவுபடப்புக்கால்வந்து நோக்கும்படியைச்சொல்லுகிறது. கோவர்த்தநமாகிற மஹாகிரியை நின்றநிலையிலே நின்றுகிளப்பிக் கீழது மேலதாம்படி பேர்த் தெடுத்தவனுடைய.(முடிசூடுதுழாயித்யாதி) (க) "தாளிணைமேலணி தண்ணந்துழாய்" என்று அவளிருந்தாலும், (உ) "க்ருஷ்ண ஶிரஸா ஸ்வயம்- க்ருஷ்ணஶிரஸா ஸ்வயம்" என்று அவனிருக்கும்படியாலே இவளத்தைச் சொல்லுகிறாள். இவன் திருவபிஷேகத்திலேசாத்தின திருத்துழாயிலே புக்குழறி அதிலே வாஸனையைப்பண்ணி நடுவொன்றில் தங்காதே கலபபற்றுவருகிற மந்தமாருதமன்றோ? வந்துலாவுகிறது, இனி உனக்கு சோகிக்கைக் கவகாசமுண்டோ? "அவன் முடிசூடுதுழாய்" என்ன வமைந்திருக்கக் கீழேசொன்ன விசேஷணங்களுக்குக் கருத்தென்னென்னில், அவனுஶ்ரிதார்த்தமாக வ்யாபரித்த விடமெங்கும் புக்கு ஸ்வேதகந்தத்தைக்கொண்டு வாராநின்ற தென்கை.

அரு॥ பாதகமாகிறது, திருத்துழாய் மணத்தைக் கொண்டுவருகையாலே ஈஶ்வரன்வரவுக்குஸூசகமாயிருக்கிற தென்றபடி.

தளர்ந்து-இளம்பி, பாயில் - படுக்கையில், திரு-அழகு. "கண்களைக்கொண்டுறங்கியும்" என்றத்தை விவரிக்கிறார் (ஜகத்ரக்ஷணசிந்தை) என்று. கிளர்ந்து-கிளப்பி. மறிதர-கீழதுமேலதாம்படி. கீண்டு - பேர்த்து. அளைந்து - கழறி. அதாவது-வ்யாபித்தென்றபடி. உண் - வாஸனையைப்பண்ணி, பசும்-ஒன்றில் தங்காதே. அதாவது - (கலபபற்றுவருகிறதென்றல்) சிறுதென்றல்-மந்தமாருதம். "அந்தோ" என்று - ஸந்தோஷாதிசயம். அடைவே அந்வயம் ௱௭

(க) திருவாய் - க - ௯ - எ.

(உ)

வ்யா॥ஸ்வாபதேசம்—இத்தால், அவனுஸ்ரிதார்த்தமாகத் திருப்பாற்கடலிலேகண்வளர்ந்தருளினபடியும், ப்ரளயாபத்தில் ஜகத்தைவயிற்றிலேவைத்துநோக்கின இம்மஹாகுணமும், கோவர்த்தநோத்தரணம் பண்ணினபடியுமாகிற அக்குணங்களைச் சொல்லிபார்ஸ்வஸ்த்தராய் வஸிப்பிக்கிறபடியைச் சொல்லுகிறது. குணஜ்ஞாநத்தாலே ஜீவித்தபடியைச் சொல்லுகிறது. எச.

---

அரு॥ హ్యైకాన్తినస్సర్వాన్ ప్రీణాతిభగవాన్హరిః।విధిప్రయుక్తాంపూజాంచ గృహ్ణాతిశిరసాస్వయమ్ - அஹோராத்ரையைகாந்தி நஸ்ஸர்வாந் ப்ரீணாதிபகவாந்ஹரி:। விதிப்ரயுக்தாம் பூஜாஞ்சக்ருஹ்ணாதி சிரஸாஸ்வயம்." எச.

[அப்பு அருப்பதம்.]

எழுபத்துநாலாம்பாட்டு.—(தளர்ந்தும்) திரு-ஐச்வர்யமும், அழகும். தாளிணை மேலதன்றோ வபேக்ஷிதம், முடியிலதாகவேண்டுவா னென்னென்னவருளிச்செய்கிறார் (தாளிணைமேல்) இத்யாதி. "அணைந்தவன் பசுஞ்சிறுதென்றல்" என்றந்வயித்து அருளிச்செய்கிறார் (அவன்) இத்யாதி. எச.

[வேறொரு அரும்பதம்.]

எழுபத்துநாலாம்பாட்டு.—(தளர்ந்தும்) இத்யாதி. கீழ பூர்ணசந்த்ரோதயத்துக்குநொந்து மோஹித்தவள், திருத்தாயாருடையவார்த்தையிலே "பொழிலேழளிக்கும்" என்று ரக்ஷகத்வங்கேட்டு உணர்ந்து எதிர்பார்த்திருக்கும் போது தென்றலுலாவுவதுக்குத் தளரப்புக்கவளைத் தோழி ஆஸ்வஸிப்பிக்கிறாளென்று ஸங்கதியுட் கொண்டருளிச்செய்கிறார் (ஒருவித்யாதி) "உடைத்தானை" என்றவநந்தரம், பாற்கடலாகிற வென்று சேஷம். "திரு" என்றதுக்குஐஸ்வர்யமாகவும் அழகாகவு மிரண்டர்த்தமருளிச்செய்கிறார் (ஸர்வ) இத்யாதி. துழாயென்னுதே "முடிசூடுதுழாய்" என்று விசேஷிக்கைக்குக் கருத்து (தாளிணை) இத்யாதி. "உண்" என்றதுக்கு பலிதார்த்தம் (வாஸனை பண்ணி) என்றது. "அந்தோ" வென்கிற பாடமன்றிக்கே அன்றோவென்றும் பாடமுண்டென்று திருவுள்ளமாயருளிச் செய்கிறார் (இனிபுனக்கு) இத்யாதி. அன்றோவென்றதற்கு உட்கருத்து. எச.

தாத்பர்யம்—கீழ்ராகாசந்த்ரனைக்கண்டு மோஹித்துக்கிடந்தநாயகி, தாயார் சொன்னஜகத்ரக்ஷகனுடைய திருநாமத்தைக்கேட்டுமோஹந்தெளிந்திருந்ததசையில் இளந்தென்றல் வந்து பாதிக்க, அதுக்குநோவுபட்டநாயகியைப் பார்த்துத்தோழியானவளுரைக்கிறாள்.

ஓபெண்ணே! நாயகனுடைய குணங்களை நீ கேட்டறியாயோ? இப்போது நான்சொல்லுகிறேன்கேள். அலைகளெழும்பி மடிகிற அதிசீதலமான திருப்பாற்கடலிலே கண்வளர்வதுபோல் தன்னுடைய அதிஸுந்தரமான திருக்கண்களை மூடிக்கொண்டு ஏகாக்ர சித்தனாய் ஜகத்ரக்ஷணோபாயத்தையே எப்போதும் யோசித்துக்கொண்டிருக்கும், ப்ரளயாத்யாபத்துக்களிலில்

ஜகத்தையெல்லாம் தன் திருவயிற்றிலே வைத்துநோக்கும். ஓரிடைக்குலத்து க்காபத்துவரில் அருகிருந்த கோவர்த்தநகிரியைக் கிளப்பிக் கீழது மேலதாகப்பிடித்து அவர்களை யதின்கீழ்வைத்துநோக்கும். இப்படி ரக்ஷணைகசீலனானவனுன்னை யுபேக்ஷியான். இத்தென்றலும் வெறும் தென்றலன்று. அவன் திருமுடியிலணிந்த திருத்துழாயின் மதுவி லளைந்து அத்திவலைகளை நம்மேல் தெளித்து அவன் நம்மருகில் வந்திருப்பதை ஸூசிப்பிக்கிறது. ஆகையால் நீ சோகிக்கவேண்டா என்கிறாள். ௭௪.

———(*)———

உலாகின்றகெண்டையொளியம்பு, எம்மாவியை யூடுருவக்
குலாகின்ற வெஞ்சிலைவாண்முகத்தீர், குனிசங்கிடறிப்
புலாகின்றவேலைப் புணரியம்பள்ளி யம்மானடியார்
நிலாகின்றவைகுந்தமோ, வையமோநும்நிலையிடமே. ௭௫.

அர்த்தம்—உலாகின்ற-ஸஞ்சரியாநின்ற, கெண்டை - மத்ஸ்யம்போல்முக்தமாய், ஒளி - தேஜஸ்ஸையுடைய, அம்பு - நேத்ரமாகிறபாணமானது, எம் ஆவியை - என்னுடையப்ராணனை, ஊடுருவ-உள்ளேதைத்துச்சிதிலமாம்படியாக, குலாகின்ற - வளையாநின்ற, வெம் க்ரூரமான, சிலை-புருவமாகிறதனுஸ்ஸையுடைய, வாள் - ஒளியையுடைய, முகத்தீர் - முகத்தையுடையவர்களே! நும் - உங்களுக்கு, நிலை-வாஸஸ்த்தாநமாகிய, இடம் ப்ரதேசமானது, குனி-வளைந்திருக்கிற (தக்ஷிணாவர்த்தமான), சங்கு - சங்குகளை, இடறி-(கரையிலே) ஒதுக்கி, புலாகின்ற - இந்த்ரியங்களுக்கு விஷயமாகாநின்ற (ப்ரகாசியாநின்ற), வேலை - அலைகளையுடைய, புணரி ஸமுத்ரத்தை, அம் - அழகிய, பள்ளி - படுக்கையாகவுடைய, அம்மான்- ஸ்வாமியுடைய, அடியார்- பக்தரானநித்ய ஸூரிகள், நிலாகின்ற - வாஸம்செய்கிற, வைகுந்தமோ-ஸ்ரீவைகுண்டமா? வையமோ-லீலாவிபூதியா? ௭௫.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—எழுபத் தைந்தாம்பாட்டு—கலந் திருக்கிற தலைமகன் கொண்டாடுகிறபடியிலே ஒருவகை யாதல்; அன்றிக்கே இயற்கையிலே ஐயமாதல்.

வ்யா.—(உலாகின்றகெண்டை) உலாகின்ற கெண்டைபோலே யாயிற்று மௌக்த்யமிருக்கிறபடி. (ஒளியம்பு) இவன்பார்த்தபோது

அரு॥ எழுபத்தைந்தாம்பாட்டு.—(உலாகின்ற) இந்தப்பாட்டுக்கிரண்டவதாரிகை. அதாவது - ஒருகால் ஸம்ஶ்லேஷித்து விஶ்லேஷித்துப் பின்னையும்வந்து ஸம்ஶ்லேஷித்த நாயகன் நாயகியுடையவைபவமுபய விபூதியிலுமடங்காதென்று கொண்டாடுகிறானென்னுதல், அதவா:-யாத்ருச்சிகமாகப்ரதமத்திலே ஸம்ஶ்லேஷித்துப் பரிச்சேதிக்கமாட்டாதே ஸம்சயிக்கிறானென்னுதல், ஐயம்-ஸம்சயம்.

ஒளியம்பு - ஒளித்தேபடுகிற அம்பு, அதேதென்ன அருளிச்செய்கிறார்

வ்யா,—பாராதேபாராதபோதாகப்பார்க்கையாலேவாவுதெரியாதபடி காணுக்கோலாகவந்து தைக்கிறபடி. (ஒளியம்பு) கண் கண்டு தப்பவொண்ணாதிருக்கிறபடி. (எம்மாவியை யூடுருவ) இதுதான் புறம்பொருவர்மேல் தையாதே நம்மேல்தைப்பது மாயிருந்தது. அது தன்னிலும் தோல்புரையேபோமதன்றிக்கே ப்ராணனிலே தைப்பதுமாயிருந்தது. அது தன்னிலும் தோற்றம்பன்றிக்கே மறுபாடுருவத்தைப்பதுமாயிராநின்றது. (குலாகின்ற வெஞ்சிலைவாள் முகத்தீர்) எப்போதுமொக்க வளைந்தபடியே யிருப்பதாய் ஒரு வ்யாபாரம் பண்ணவேண்டாதே கண்டகாட்சியிலேயிலக்காய் ழியும்படியாய்; அல்லாவிற்களோபாதி கையிலே யிருக்கையன்றிக்கே முகத்திலேயிருக்குமதானவில் வர்த்தியாநின்றுள்ள முகத்தையுடையீர்! அன்றிக்கே "வாள்" என்று ஒளியாய், வெஞ்சிலையையும் ஒளியையுமுடைத்தான முகத்தையுடையீரென்னுதல், முகம்பழகின வில்லுக்காணுமிவளை நலிகிறது.

(குனிசங்கித்யாதி) வலம்புரிதொடக்கமான சங்குகளையிட்டு. (புலாகின்ற) புலம்புகின்ற - சப்தியாநின்றுள்ள, திரைக்கிளர்த்தியையுடைய கடலாகிறவழகியபடுக்கையையுடைய ஸர்வேஸ்வரனுடைய. (புலாகின்ற) அச்சங்குகளினுடைய ஒளியாலே எப்போது மொக்க ப்ரபாதஸமயமே யாயிருக்கிற கடலென்னவுமாம். (அம்மாணித்யாதி) நித்ய விபூதியிலே போதுபோக்கி ஓலக்கங்கொடுத் திருக்கையன்றிக்கே தன் ஸந்நிதானத்தாலே கிளர்ந்துவருகிற திருப்பாற்கடலிலே புகுந்து குடில் கட்டி நோக்கிக் கிடப்பாரைப்போலே இஜ்ஜகத்ரக்ஷணார்த்தமாக வந்து கண்வளர்ந்தருளுகிற இந்நீர்மைக்குத் தோற்றிருக்கிற நித்யஸூரிகள் நித்யவாஸம்பண்ணுகிற ஸ்ரீவைகுண்டமோ? அன்றிக்கே மாணவிச்சோலைபோலே ஆவதழிவதாய், காதாசித்கமாக

அரு॥ (இவன்பார்த்தபோது) என்று. (கண்கண்டுதப்பவொண்ணாதிருக்கிறபடி) என்றது - சாடு. அதாவது - கண் என்று - பார்வையாய், நாயகிபார்க்கிறபார்வையானது கண்டுதப்ப வொண்ணாதென்னுதல்; கண்ணாலேகண்டு தப்பவொண்ணாதென்னுதல். தோற்றம்பன்றிக்கே - மேலெழுப்பட்டுப் போகையன்றிக்கே என்றபடி. நாடின மாத்ரமொழிய, குலாகின்ற - வளைந்த, சிலையென்று ப்ருக்களைச் சொல்லுகிறது. வாளென்றது - வர்த்திக்கையாதல், ஒளியாதல். (முகம்பழகின) என்றது - சாடு, அதாவது - முகத்திலே யுண்டானவென்னுதல்; பரிசயத்தையுடையவென்னுதல்.

இடறி - தள்ளிக் கொண்டு. "புலாகின்ற" என்றதுக்கு இரண்டு பொருள். அதாவது - சப்திக்கிறவென்னுதல், "புலா" என்று ப்ராதஃகாலமாய்,

வ்யா.—அவன்வந்து முகங்காட்டிப்போம் லீலாவிபூதியோ? உங்களு டையவாஸஸ்தாநம், (௧) "வானவர்நாடு" என்கிறபடியே அவர்களி ட்டவழக்காயிருக்குமிறே அவ்விபூதி. அஹங்கார மமகாரங்களாலே ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யம் நடையாடாதபடி பண்ணிக்கொண்டிருப்பார்க ளிறே இங்குள்ளார். பிள்ளை திருநறையூரரையர், "அடியார் நிலாகி ன்றவைகுந்தமோ? அன்றிக்கே அவனதான வையமோ" என்று பணிப்பராம்.

ஸ்வாபதேசம்.—இத்தால், ஆழ்வாரிருக்கிறவிருப்பைக் கண்டார் க்கு "உபயவிபூதியிலுமிவர் படிக்கொப்பில்லை" என்று சொல்லும்படியி ருக்கிறபடியைச் சொல்லுகிறது. அங்குள்ளார் நிரந்தரபகவதநுபவ மே யாயிருப்பர்கள். இங்குள்ளார் இதர விஷயங்களினுடையலாபா லாபங்களேயாயிருப்பர்கள். இவர்படி உபயவ்யாவ்ருத்தமாயிறேயிரு ப்பது. நிரந்தரமான பகவதநுபவமுமின்றிக்கே, அந்நபாநாதிகளால் தரித்திருக்குமதன்றிக்கேயிறேயிருக்கிறது. இரண்டு விபூதியிலுங் கைக்கடங்காதபடியாயிருக்கிற விருப்பைச்சொல்லிற்று இங்ஙனன் றாகிலிரண்டிடத்திலுமையங்கூடாதிறே. ௭௫.

அரு|| ப்ராதஃகாலமேயாயிருக்கிற வென்னுதல். (வானவர்நாடு என்கிறப டியே) என்று தொடங்கி யருளிச்செய்ததுக்குத் தாத்பர்யம் - நித்யஸூரி கள் பாதந்த்ர்ராகையாலே நித்யவிபூதியை யவர்களிட்ட வழக்காம்படி பண்ணிக்கொடுக்கும்; ஆகையாலே "அடியார் நிலாகின்ற" என்றருளிச்செய் கிறார். ஸம்ஸாரிகள் அஹங்கார மமகாரங்களாலே ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யம் நடையாடாதபடி பண்ணிக்கொண்டிருப்பர்களிறே; ஆகையாலே லீலாவிபூதி யை யவர்கள்கையில் காட்டிக்கொடாதே தானே யாளுமென்றபடி. இதுக் கு ஸம்வாதமாக ஆசார்ய ஸ்ரீஸூக்தியை யருளிச்செய்கிறார் (பிள்ளைதிரு நறையூரரையர்) என்று ஐயம்-ஸம்சயம். புணரி-ஸமுத்ரம். வேலை - திரைக்கி ளப்பம். அடைவே அந்வயம். ௭௫.

[அப்பு அரும்பதம்.]

எழுபத்தைந்தாம்பாட்டு - (உலாகின்ற) ஸம்ஶ்லேஷித்தவநந்தரம் கொ ண்டாட்டமாதல், கண்டவுடனே ஸம்சயமாதல். ஐயம்-ஸம்சயம். மௌக்த்யம்- அழகு. ஒளியென்று-தேஜஸ்ஸாய், இவள் கண்ணில் தேஜஸ்ஸு கண்டவர்க ளைத்தப்பவொண்ணாதபடி வசீகரிக்கையாதல், ப்ரத்யக்ஷமாகத் தப்பவொண் ணாதென்று த்வநி. வாள் - வாழ்ச்சியாதல், ஒளியாதல். இடறி - தள்ளாநின் று கொண்டு. புலாகின்ற வேலை - சப்தியாநிற்கிற அலையென்னுதல்; வேலை - வேளையாய், விடியாநிற்கிற காலமென்னுதல். பரமபதத்தை வானவர்நாடெ ன்றும், வையத்தை அவனதென்றும் சொல்லுவானென்னென்ன வருளிச்செ ய்கிறார் (வானவர்நாடு) இத்யாதி-உபயவிபூதியிலும் வ்யாவ்ருத்தரென்கைக்கு ஜ்ஞாபகமருளிச் செய்கிறார் (இங்ஙனன்றாகில்) இத்யாதி. ௭௫.

(௧) திருவாய் - ௩ - ௯ - ௧.

[வேறொரு அரும்பதம்.]

எழுபத்தைந்தாம்பாட்டு. (உலாகின்ற) இத்யாதி. கீழ்ப்பாட்டிலே *முடி சூடுதுழாயனைத்தான் சிறுபசுந் தென்றலாக பாகவதனாகிற நாயகன் வந்த படியைத் தோழிசொல்லி தேற்றப்பண்ணுகையாலே அந்த பாகவதன் வந்து கலந்தநுபவித்துக்கொண்டாடின படியாதல், வந்துகண்டவுடனே இவராரென்று ஸம்சயித்து நின்றபடியாதல் ஸங்கதியென்று அவதாரிகாத்வய மருளிச் செய்கிறார் (கலந்து) இத்யாதி வாக்ய த்வயத்தாலே. இயற்கையிலே-யாத்ருச்சிகமாக நேர்பட்டவிடத்திலே. ஐயம் - ஸம்சயம். மௌக்த்யம்-அழகு ஒளித்துவருமமென்று அருளிச்செய்கிறார் (இயன்) இத்யாதி. ஒளி-தேஜஸ்ஸாய், அதிலகப்பட்டார்க்குத் தப்பவொண்ணா தென்றர்த்தாந்தர மருளிச் செய்கிறார் (கண்கண்டு) இத்யாதி. ஸாக்ஷாத்கரித்தென்று த்வநி. கண்ணழகைக் கண்டென்று ப்ரக்ருதார்த்தம். “எம்”என்றதுக்கு பாவம் (இது) இத்யாதி. சாடு - (முகம்) இத்யாதி. இடறி - தள்ளாநின்றுகொண்டு. “வேலை” என்றதினர்த்தம் (திரைக்கிளர்த்தியை) என்றது. புணரி - கடல். புலாகின்ற- புலப்படுகின்ற-இந்த்ரியங்களுக்கு விஷயமாகின்ற-ப்ரகாசியாநிற்கிற. வேலை-வேலையாக விவக்ஷித்து ஸமுத்ரதரங்கத்தும் சங்குகள் வெளுத்து மிருக்கையாலே பலித்தார்த்தம் (அச்சங்குகள்) இத்யாதி. ௭௫.

தாத்பர்யம்.—இதில் ஆழ்வாராகிற நாயகியுடன் பாகவதராகிற நாயகன் வந்து ஸம்ஶ்லேஷித்து அந்நாயகியின் கண்ணழகிலீடுபட்டுச்சொல்லுகிறான்.

ஓ பெண்ணே! நான் அந்யத்ருஷ்டியாயிருக்கும்போது என்னைப்பார்த்துக்கொண்டிருந்த நீ நானுன்னைப்பார்க்கும்போது அப்பார்வையை என்னிடத்தில்நின்றும் விலக்குங்காலத்தில் உன்னுடைய அழகிய முகத்திலுள்ள புருவம் தநுராகாரமாய் வளைந்தும், உன்னுடைய அழகிய நேத்ரங்கள் மத்ஸ்யங்கள் போல் கர்ணாந்தமாக அதிமுக்தமா யுலாவாநின்றுகொண்டு பாணம்போல் அதிக்ரூரமாய் எனக்கத்யந்தமாகர்ஷகமாயுமிருந்தன. உன்னுடைய வைலக்ஷண்யத்தைக்கண்டு எனக்கொருஸம்சய முதித்தது. அதாவது - நித்யஸூரிகளைப்போல் நித்யாநுபவ பரையுமன்றிக்கே, லௌகிகரைப்போல் அந்நபாநாதி தத்பரையுமன்றிக்கே உபயரிலும் விலக்ஷணையான நீ இப்போது வாஸம் பண்ணுகிற இப்ப்ரதேசமானது, தன்னலைகளினால் சங்கங்களைக் கரையிலெறிந்து கோஷிக்கிற க்ஷீரார்ணவசாயியினுடைய நிரந்தராநுபவ பரரான நித்யஸூரிகள் நித்யவாஸம்பண்ணுகிற ஸ்ரீ வைகுண்டமா, அல்லது விஷயாந்தர பரர்வஸிக்கும் பூலோகமா, இஸ்ஸம்சயமற உரைக்கவேணுமென்கிறான். ௭௫.

---

இடம்போய்விரிந்திவ் வுலகளந்தானெழிலார்தண்டுழாய்,
வடம் *போதில்லையும்மடநெஞ்சமே, நங்கள்வெள்வளைக்கே
விடம்போல்விரிதலிது வியப்பேவியன் தாமரையின்
தடம்போதொடுக்க,மெல்லாம்பலலர்விக்கும்வெண்டிங்களே. ௭௬.

ஆர்த்தம்.—இடம்-ப்ரதேசங்களில், போய்-சென்று,விரிந்து-வ்யாபித்து,

---

* போதிலையும் என்றும் பாடமுண்டு.

இவ்வுலகு, இந்தலோகத்தை, அளந்தான் - அளந்தவனுடைய, எழில் - அழகாலே, ஆர் - நிறைந்த, தண் - குளிர்ந்த, துழாய் - திருத்துழாயினுடைய, வடம் - மாலையிலுள்ள, போதில் - அழகிலே, (ஆசையைவைத்து அது கிடையாமையாலே), மையும்-சிதிலமாகாநிற்கிற, மடம் - பிடிவாதமுடைய, நெஞ்சமே - மநஸ்ஸே! வியன் - ஆர்ச்சர்யகரமான, தாமரையின் - தாமரையினுடைய, தடம் - விசாலமான, போது - புஷ்பம், ஒடுங்க - முகுளிதமாம்படி (பண்ணுகிறவனும்), மெல் - அல்பமான, ஆம்பல்-ஆம்பல்பூவை, அலர்விக்கும் - விகஸிப்பிக்கிறவனுமான, வெண் - வெளுத்த, திங்கள் - சந்த்ரன், நங்கள் - நம்முடைய, வெள்-வெளுத்த, வளைக்கே - வளையின்மேலே, விடம்போல் - விஷம்போலே, விரிதல்-கிரணங்களாலே வ்யாபரிப்பதாகிற, இது-இது, வியப்பே - ஆர்ச்சர்யமோ? எசு.

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—எழுபத்தாறும்பாட்டு.—சந்த்ரோதயத்திலே நோவுபடுகிறளொரு பிராட்டி தன்னெஞ்சைக்குறித்து, "சந்த்ரனுக்கிங்ஙனேயெளியசெயல்கள் செய்கை, ஸ்வபாவங்காண், நீ இதுக்கு சோகியாதேகொள்" என்றுஸமாஸிப்பிக்கிறுள்.

வ்யா.—(இடம்போய்விரிந்து) பள்ளமுள்ள விடமெங்கும் வெள்ளம்பரக்குமாபோலே அவகாசமுள்ள விடமெங்கும் போய் வளர்ந்து; இந்தலோகத்தை யளந்துகொண்டவனுடைய வெழிலார்தண்டுழாயுண்டு - இதுக்கெல்லாமாக முதலியாராக விட்டமாலே; அவன்திருமேனியில் ஸ்பர்சத்தாலே யழகியதாய்க் குளிர்ந்திருந்துள்ள திருத்துழாய்மாலையிலே செவ்வியைப் பெறவேணுமென் றாசைப்பட்டுப் பெறுமையாலே தளராநிற்பதாய், அதினருமை சொன்னாற்கேளாதே பற்றினத்தைவிடாதே கிடக்கிறநெஞ்சே!

(நங்களித்யாதி) நம்முடைய சங்குவளையின்மேலே விஷம்போலே பரக்குமிதுவொரு விஸ்மயமோ? (வெள்வளைக்கே) தந்தாமுக்குப் ராப்தியுள்ள விடங்களிலே நலிகை முறையிறே. தானும் வெண்டிங்களாய், இதுவும் வெள்வளையாகையாலே நிறத்தில் ஸாம்யங்கொண்டு

---

அரு|| எழுபத்தாறும்பாட்டு. (இடம்போய்) "தண்டுழாய் வடம்போதில் மையும் மடநெஞ்சமே" வடமென்று-மாலையாய், போதென்று-புஷ்பமாய், இத்தாலே செவ்வியைச்சொல்லி, திருத்துழாய்மாலையிற் செவ்வியைப் பெறவேணுமென்றாசைப்பட்டு, மையும்-துக்கப்படுகிற, நெஞ்சமே! மடப்பம்-பற்றிற்று விடாமை.

விடம்போல்-விஷம் போலே, விரிதல் இது, வ்யாபிக்கு மிது, வியப்பே-

வ்யா|| நலியலாமிறே. (வியன்தாமரையித்யாதி) வாசியறியாதாரென் செய்யார்கள். விஸ்மயநீயமான தாமரையினுடைய பெருத்தபூவான தொடுங்கவும், க்ஷுத்ரமாய்ப் புல்லிதான ஆம்பலலரும்படியாகவும் பண்ணுமதான வெண்டிங்கள், நங்கள் வெள்வளைக்கே விடம்போல் விரிதலிது வியப்பே?

ஸ்வாபதேசம்.—இத்தால், திருவுலகளந்தருளினபோது சாத்தின அச்செவ்விமாலையை இப்போது பெறவேணுமென்றாசைப்பட்டுப் பெருமையாலே அநுகூல பதார்த்தங்களடைய பாதகமாகிறபடியைச் சொல்லுகிறது. ௭௬.

அரு|| விஸ்மயமோ. (வாசியறியாதார் என்செய்யார்கள்) என்றபடி. இது மேலுக்கவதாரிகை. [தடம்போதொடுங்க மெல்லாம்பலலர்விக்கும் வெண்டிங்கள் வெள்வளைக்கே விடம் போல்விரிதலிது வியப்பே ஆகையாலேநீ சோகியாதே கொள்] என்றந்வயம். இடம் - அவகாசம். ௭௬.

[அப்பு அரும்பதம்]

எழுபத்தாறும்பாட்டு.—(இடம்போய்) எளியசெயல். பூஜ்யமானதாமரையை மூடப்பண்ணி அபூஜ்யமான ஆம்பலை அலரப்பண்ணுகை. போது - செவ்வி. ௭௬.

[வேறொரு அரும்பதம்.]

எழுபத்தாறும்பாட்டு.—(இடம்) இத்யாதி. கீழேபாகவதராகிறநாயகன்கொண்டாடி நிற்கச்செய்தேயும் * முடிசூடிதுழாயில் நசையுள்ளவளாகையாலே அதுக்காசைப்பட்டிருக்கச்செய்தே சந்த்ரனுதிக்க, அதுபாதகமாக, நெஞ்சுக்குரைக்கிறாளென்று ஸங்கதியருளிச்செய்கிறார் (சந்த்ர) இத்யாதி. (எளியசெயல்கள்) உத்க்ருஷ்டமான தாமரையை முகுளிப்பிக்கையும், க்ஷுத்ரமான ஆம்பலையலரப்பண்ணுகையும். (இதுக்கெல்லாம்)- இந்த லோகத்துக்கெல்லாம். (முதலியாராக)-ஸ்வாமியாகைக்காக. (போதில்) செவ்வியில். விஸ்மயமாகாமைக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் (தந்தாமுக்கு) இத்யாதி. விவரிக்கிறார் (தானும்) இத்யாதி. உட்கருத்து (வாசி) இத்யாதி. "தடம்" என்றதினர்த்தம் (பெருத்த) என்றது. ௭௬.

தாத்பர்யம்.—இந்நாயகி, த்ரிவிக்ரமன் சாத்தியருளின திருத்துழாய்மாலைக்காசைப்பட்டு அது கிடையாமல் வருத்தமுறுங் காலத்தில், அதற்குமேல் சந்த்ரனும் வந்துபாதிக்க, அதுக்காற்றாத நெஞ்சைக்குறித்துச் சொல்லுகிறாள்.

ஓயாஸ்ஸே! நீயோ, த்ரிவிக்ரமாவதாரமெடுத்து பூம்யந்தரிக்ஷங்களனைத்தையும் சிறிதளவும் விடாமல் ஆக்ரமித்த புருஷோத்தமனணிந்த திருத்துழாய்க்காசைப்பட்டு, அது நமக்குக்கிடைக்கவரிதென்று பலவாறுரைக்கினும் கேளாது ஒரேபிடிபிடித்து வருத்தப்படாநின்றாய்; இந்தஸமயத்தில் சந்த்ரனும் வந்து நாமணிந்தவளையைத் தன்னோடொத்த வெண்ணிறமுள்ளதென்று

கருதி அதின்மேல் பகைசெய்து விஷத்தைப்பெருக்கிறாற்போல் தன்கிரணங்களைப் பரப்பி பாதிக்கத்தொடங்கினான். வருத்தமுள்ள காலத்தில் சந்த்ரன் பாதிப்பதைக் கண்டு நீ ஆச்சர்யப் படவேண்டா. ப்ரசஸ்தமான தாமரைப்பூவையொடுக்கி க்ஷுத்ரமான ஆம்பலை யலரப்பண்ணுமவன் ஸ்வபாவத்தைப் பார்த்து, நீசர்களுக்குப் பலங்கொடுத்து மஹான்களை நலிவதே அவனுக்குப் பணியாக நினைத்தையாகில் நம்மைப் பாதிப்பதும் ஓராச்சர்யமாகத்தோற்றுது. எசு.

---

திங்களம்பிள்ளை புலம்பத்தன் செங்கோலரசுபட்ட,
செங்களம்பற்றி நின்றெள்கு புன்மாலை, தென்பாலிலங்கை
வெங்களமசெய்த நம் விண்ணோர்பிரானார் துழாய்துணையா
நங்களை மாமைகொள்வான், வந்துதோன்றி நலிகின்றதே. எஎ

அர்த்தம்.—திங்கள்-சந்த்ரனாகிற, அம்-அழகிய, பிள்ளை-புத்ரனானவன், புலம்ப - (பக்ஷிகோலாஹலத்தாலே) அழ, செங்கோல்-ஆஜ்ஞையைநடத்தா நின்ற, தன் அரசு - தன்னுடைய ராஜாவான ஸூர்யன், பட்ட-விழுந்த(அஸ்தமித்த,) செம் - சிவந்த, களம் - யுத்தரங்கத்தை, (செவ்வானத்தை,) பற்றி-ஆச்ரயித்து, நின்று - இருந்து, எள்கும் - ஈடுபடுகிற, புன்மாலை - அல்பமான ஸந்த்யா காலமானது, தென்பால் - தெற்குத்திக்கிலிருக்கிற, இலங்கை - லங்கையை, வெங்களம் செய்த - ச்மசானமாகப் பண்ணின, விண்ணோர் - ப்ரஹ்மாதிதேவர்களாலே, பிரானார் - ஸ்தோத்ரம் பண்ணத்தக்க ஸ்வாமியான, நம் - நம்முடைய சக்ரவர்த்தித்திருமகனணிந்த, துழாய் - திருத்துழாயிலேயுண்டான ஆசையை, துணையா - ஸஹாயமாகக்கொண்டு, நங்களை - நம்மை, மாமைகொள்வான்-ஸ்வாபாவிகமான நிறத்தை யழிக்கைக்காக,வந்து-வந்து, தோன்றி - உதித்து, நலிகின்றது - பாதிக்கிறது. எஎ,

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—எழுபத்தேழாம்பாட்டு.—ஸந்த்யையிலே நோவுபடுகிறாளொருதலைமகள் வார்த்தையாயிருக்கிறது.

வ்யா.—(திங்களம்பிள்ளை) சந்த்ரனாகிற அழகியபிள்ளை. (க) "மஹாதபஸா-மஹாதாதபஸா" என்கிறபடியேவருந்திப்பெற்றபிள்ளையிறே. (புலம்ப) வாய்விட்டுக்கூப்பிடமாட்டாதே. கடலோசையாதல் அக்காலத்திற் பக்ஷிகளுடைய ஆரவாரமாதலிறே யதாவது.(தன் செங்கோலித்யாதி)தன்னுடைய ஆஜ்ஞாப்ரதானனான ராஜாவானவன்

---

அரு॥எழுபத்தேழாம்பாட்டு(திங்களம்பிள்ளை)"அம்"என்றதுக்குத்தாத்பாயமருளிச்செய்கிறார(மஹாதாதபஸா)என்று"புலம்ப"என்றது-சந்த்ரனுக்குவிசேஷணம். ஆஜ்ஞாப்ரதானனான ஸந்த்யாகாலத்தினுடைய ராஜாவானஸூர்யன்

---

(க) ஸ்ரீராமா - ஆரண்ய - சுசு - கரு,

வ்யாபிபட்டயுத்த பூமியைப்பற்றி நின்றீடுபடுகிற புல்லியமாலை. உதிர வெள்ளத்திலே சிவந்த யுத்தபூமிபோலே யிருக்குமிறே அப்போதை க்கொப்பு. ராவணன் பட்டகளத்திலே மண்டோதரி கூப்பிட்டாற் போலவும், வாலிபட்டகளத்திலே தாரையங்கதப்பெருமாளையுங்கொ ண்டு கூப்பிட்டாற்போலவு மாயிற்று, இவ்வாதித்யனை யிழந்த ஸந்த் யையும் அப்ரதேசத்தைப்பற்றி நின்றிடுபடுகிறபடி. இத்தால், (க) வாயுந் திரையுகளிற் படியே கண்டகடங்கத் தம்மோடே ஸமதுஃகி களாய்த் தோற்றுகிறபடி. (உ) "பகற்கண்டேன்" என்கிற வாதித் யனை யிழந்திறே இவளும் நோவுபடுகிறது.

(தென்பாலித்யாதி)ஆர்யர்க ளிழந்த ம்லேச்சபூமியான தெற்குத் திக்கி லறிவுடையார் நடையாடாத லங்கையை வெவ்விய களமாம் படி. (வெங்களம்) ஶ்மசாநம். ஶ்மசாந கல்பமாம்படி பண்ணி. (௩) "இலங்கையொள் ளெரிமண்டியுண்ண" என்னக்கடவதிறே. (நம் விண்ணோர்பிரானார்) ராவணவதாநந்தரமாக (ச) "த்வாம் ந்யாஸ்யஸ்ஸர்வதேவா:" "பவாந்நாராயணோதேவ:" என்று ப்ரஹ்மாதிகள் ஸ்துதிக்கும்ப டிநின்ற உபகாரகரானவர். (துழாய்துணையா) அவர்தோளில் மா லையைப்பெற வேணுமென்றாசைப் பட்டவிதுவே பரிகாரமாகக்கொ ண்டு. (நங்களையித்யாதி) தன்னிழவுக்குக் கூப்பிடுகை யன்றிக்கே நம்மை நலிகைக்குக் கூப்பிடுகிறதா யிருந்ததிறே. (நங்களைமாமை கொள்வான்) நிறங்கொள்வார்க்கு நிறந்தான்வேண்டாவோ? தன்னி ழவுக்குக் கூப்பிடுங் கிடக்கச்செய்தே பண்டேகுறைபட்டு நோந்திரு க்கிற நம்மை நலிகைக்குப் பாரிக்கிற பாரிப்பாயிருந்ததீ!

ஸ்வாபதேசம்.—கீழ், திருவுலகளந்தருளினபோதிட்ட மாலை யைப் பெறவேணுமென்றாசைப்பட்டுக்கிடையாமையாலே நோவுப ட்டபடி சொல்லிற்று. இதில், ராவணவதாநந்தரமிட்ட வெற்றிமாலை யைப்பெறவேணுமென்றாசைப்பட்டுவந்து கிடையாமையாலே நோ வுபட்டபடி சொல்லுகிறது. எஎ.

---

அருளின்றபடி. ஸந்த்யாராகரஞ்சிதமான ஆகாசத்தை "செங்களம்." என்று யுத்தபூமியாக உத்ப்ரேக்ஷிக்கிறார். "எள்கு" என்று ஈடுபடுகிறது என்றது. "புன்மாலை"-அல்பமான ஸந்த்யாகாலம், "துழாய்" துழாயையாசைப் பட்டதுவே "துணையா"-பரிகாரமாகக்கொண்டு, புன்மாலைநலிகின்றது என்றந்வயம்.

[அப்பு அரும்பதம்.]

எழுபத்தேழாம்பாட்டு.— (திங்களம்பிள்ளை) அழகேதென்ன வருளிச் செய்கிறார் (மஹதா) இத்யாதி. "புலம்புதல்" - வாய்விடமாட்டாதேவிம்மல் பொருமலாய் அலமாக்கை. "செங்களம்" - யுத்தபூமி. ஸந்த்யாகாலத்துக்கு யுத்தபூமி ஸாம்யமெப்படியென்ன வருளிச்செய்கிறார் (உதிரவெள்ளத்திலே)

---

திருவாய் - உ - க -

(உ) இரண்டாந்திரு - அக,

(௩) திருமொழி - க0-௩-க.

(ச) ஸ்ரீ ராமா-யுத்த-க௨0-கஉ

இத்யாதி. (பரிகாரமாக) ஹேதுவாக. "நங்களை" - முதலிலே நிறமழிந்திருக்கிற வெங்களை. ௭௭.

[வேறொரு அரும்பதம்.]

எழுபத்தேழாம்பாட்டு.— (திங்கள்இத்யாதி) சந்த்ரோதயத்துக்காம்ஸ்வஸிப்பிக்கச் செய்தே ஸந்த்யையானது தன்படிக்கு மேலே ஸத்ருசஸ்வபாவையாய் நலிய, அத்தாலீடுபடுகிறாளென்று ஸங்கதியுட்கொண்டருளிச்செய்கிறார் (ஸந்த்யையிலே) இத்யாதி. திங்களானபோதே அழகாயிருக்குமே; "அம்" என்றத்தால் அழகேதென்ன வருளிச்செய்கிறார் (மஹாதபஸா) இத்யாதி. "மாட்டாதே" என்றவநந்தரம், விம்மல்பொருமலாயிருக்குமென்று சேஷம். "அதாவது" என்றத்தை "கடல்" இத்யாதிக்குமுன்பே அநுஸந்திப்பது. (என்கு) என்றதினர்த்தம். (ஈடுபடுகிற) என்றது. ஆதித்யன்பட்டது ஆகாசத்திலன்றோ, அது யுத்த பூமியோடொப்பதெப்படியென்ன வருளிச்செய்கிறார் (உதிர) இத்யாதி. பரிகரம் - ஸஹசாரி. ௭௭.

தாத்பர்யம்.— இதில் மாலைக்கஞ்சினநாயகியா யருளிச்செய்கிறார்.

புத்திஹீநர்களான அரக்கர்வஸிக்கும் இலங்கையிற் சென்று அவர்களைக்கொன்று கூறாக்கி அவ்வூரை ஸ்மசாநமாம்படியழித்து நிற்கையில் அம்மஹிமையைக்கண்டு ப்ரஹ்மாதிகளால் ஸ்தோத்ரம்செய்யப்பட்டநம்சக்ரவர்த்தித்திருமகன் அக்காலத்தில் சாத்தியருளின வெற்றிமாலையைப் பெறவேணுமென்றாசைப்பட்டு அது கிடையாமையாலே முன்னமேநான் பாதைபட்டுக் கொண்டிருக்க, அதற்குமேல் பகற்காலமும் போய் ஸூர்யனு மஸ்தமித்து, சந்த்ரனுமுதிக்க, அப்போதுண்டான பக்ஷிகோஷங்களையும் செவ்வானத்தையுமுடைய மாலையானது, முன் ராமபாணத்திலடிபட்டுப் போர்க்களத்தில் விழுந்த வாலியைக்கண்டு பிள்ளையாகிய அங்கதனும்தானுமாய்த் தாரையானவள் புலம்பினதுபோல் தோற்றி என்னைமிகவும் நலிவுறச்செய்கிறது. ௭௭.

---

நலியும் நரகனை வீட்டிற்றும், வாணன் திண்டோள் துணித்த
வலியும்பெருமையுமயான் சொல்லும் நீர்த்தல்ல, மைவரைபோல்
பொலியுமுருவில் பிரானார் புனைபூந்துழாய் மலர்க்கே
மெலியுமடநெஞ்சினார், தந்து போயின வேதனையே. ௭௮.

அர்த்தம்.—நலியும் - உபத்ரவிக்கிற, நரகனை - நரகாஸுரனை, வீட்டிற்றும் - அழித்ததும், வாணன் - பாணாஸுரனுடைய, திண் - பலிஷ்டமான, தோள் - புஜங்களை, துணித்த - வெட்டின, வலியும் - பலமும், பெருமையும் - (அத்தால் வந்த) மஹிமையும், யான் சொல்லும் - நான் சொல்லத்தக்க, நீர்த்தல்ல - ஸ்வபாவத்தையுடையவையன்று, மைவரைபோல் - அஞ்சநபர்வதம் போல், பொலியும் - (அழகு) மிகுந்திருக்கிற, உருவில் - திருமேனியையுடைய, பிரானார் - ஸ்வாமியான க்ருஷ்ணன், புனை - சாத்திய, பூ - அழகிய தான, துழாய்மலர்க்கே - திருத்துழாய் மலருக்காக, மெலியும் - வாடுகிற, மடம் - பிடிவாதமுடைய, நெஞ்சினார் - மநஸ்ஸானது, தந்துபோன - கொடுத்த, வேதனை - பாதை. (இதுவாயிருக்கிறது). ௭௮.

## [பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—எழுபத்தெட்டாம்பாட்டு.—இதில்க்ருஷ்ணாவதாரத்திற் பரிமாற்றத்தைப் பெறவேணுமென்றாசைப் பட்டாளொரு பிராட்டி வார்த்தையாயிருக்கிறது.

வ்யா.—(நலியும் நரகனை) ஸர்வேஶ்வரன் பரிக்ரஹிக்கைக்கு யோக்யைகளா யிருக்கிறவர்களைக் கொண்டுவந்து சிறை செய்தானன்றே. (நலியும்) அந்தநலிவு தம்மதாயிருந்தபடி. (வீட்டிற்றும்) வீழ்த்ததும்-முடித்ததும். (வாணனித்யாதி) உஷையையும் அநிருத்தனையுஞ் சேரவொட்டாதே, சிறை செய்தவாணனுடைய (திண்டோள்) தேவதாந்தர ஸமாஶ்ரயணைத்தைப்பண்ணித்திண்ணிய தோளையுடையனாக நினைத்திருந்தான். (க) ఆనన్దం బ్రహ్మణో విద్వాన్ - ஆநந்தம்ப்ரஹ்மணோ வித்வாந்" ப்ராஹ்மத்தினுடைய வாநந்தத்தையறிந்தவன், (க) న బిభేతి కుత

శ్చన-நபிபேதிகுதஶ்சந". (உ) ఏష హ్యేవానన్దయాతి-ஏஷஹ்யேவாநந்தயாதி" இறே. அத்தால் வந்த தைர்யத்தாலே தான்புத்தி பூர்வம்பண்ணின வற்றையும மதியாதிருக்கு மிறே. அவன்திணணிய தோளைத் துணித்தவலியும் பெருமையு மென்னுதல்; வலியின் பெருமையென்னுதல், மிடுக்கும் மேன்மையும்; அன்றிக்கே, வலியினுடைய பெருமையும். (யான் சொல்லும நீர்த்தல்ல) நாமிப்போதிருந்து சொல்லுமளவோ! (நீர்த்தல்ல) தன்மையை யுடைத்தல்ல - ஸ்வபாவத்தையுடைத்தல்ல. அவனுடைய விரோதிநிரஸந சீலத்தையுமாண்பிள்ளைத் தனத்தையும் மேன்மையையும் நாமின்றிருந்து சொல்லு மளவோ? அவன் வாராமையால்படுகிற நலிவால்வந்தகுறை அத்தலையிலிடவொண்ணுதபடியாயிறே யவன் ஸ்வரூபத்தை நிரூபித்தாலிருப்பது.

ஆனால் பின்னை இதாராலே வந்ததாகிறதோவென்ன; (மைவரையித்யாதி) நமக்கு ஸாத்மிக்கும விஷயம் ஸாத்மியாத விஷயமென்று ஆராயாதே யாசைப்பட்டநம் நெஞ்சுதந்துபோன ஐஶ்வர்யமிறே இதெல்லாமென்கிறார். (மைவரைபோல்) அஞ்சநகிரி போலே

---

அரு|| எழுபத்தெட்டாம்பாட்டு.—(நலியும்)நலியுமென்று இவன் நலிந்ததென்னென்ன அருளிச்செய்கிறார்(ஸர்வேஶ்வரன்பரிக்ரஹிக்கைக்கு)என்று. (மிடுக்கும்மேன்மையும், அன்றிக்கேவலியினுடைய பெருமையும்) என்றருளிச்செய்த வர்த்தத்வயமும். கீழுக்குவிவரணம். இப்படி எட்டாதிருக்கிற விஷயத்தை ஆசைப்படுகிறதென், துக்கப்படுகிறதென்னென்ன, அவனப்படி எட்டாதவிஷயமே, தப்பாது, மநஸ்ஸினுடைய சாபல்யாதிசயத்தாலே வந்ததென்கிறார் (அவன்வாராமையால்) என்று.

"மைவரைபோல்"-அஞ்சநகிரிபோலேயாய், "பொலியும்"-ஒருத்ருஷ்டாந்த

---

(க) தைத்திரீயம். ஆநந்த. உ. (உ) தைத்திரீயம். ஆநந்த. எ.

வ்யா|| யாயிற்று திருமேனியிருப்பது.(பொலியுமுரு)ஒரு த்ருஷ்டாந் தத்தைச் சொல்லிற்றென்று அவ்வளவாயிராதிறே, ஸர்வதாஸத்ரு சவஸ்து வில்லாமையால். உள்ளதி லுருச்செய்த தொன்றைப்போலி யாகச் சொல்லப்புக்குப் பின்னையதுதானும் போராதேயிறேயிருப்ப து.(பிரானுர்)(க)"ஞ்ஞாநீ-பக்த்தாநாம்"என்றிறேயவர்படி.(புனையித் யாதி) அவர்சாத்தின அழகியதிருத்துழாய் மலர்க்கே. (மெலியுமட நெஞ்சினுர்)ஸாத்மிக்கும்விஷயத்திலே யாசைப்பட்டுக்கிடையா விட் டால் படுமதைப்பட்டுக் கிடையாதென்றிருந்தாலும் பற்றிற்று வி டாதே நிற்கிறநம்நெஞ்சுதந்து போனக்லேசமிறேஇதெல்லாம். எஅ.

---

அரு|| மிட்டுச்சொல்லவொண்ணுத படியழகு மிக்கிருக்கிற, "உருவில்" - விக் ரஹத்தையுடைய. (உள்ளதிலுருச்செய்தது) - தாம் சொல்லுகிற வற்றில் அழ கியதாயிருப்ப தொன்றை என்றபடி. எஅ.

[அப்பு அரும்பதம்.]

எழுபத்தெட்டாம்பாட்டு.—(நலியும்) அவன் நினைத்திருந்த தெப்படியிரு ந்ததென்ன வருளிச்செய்கிறுர் (ஆநந்தம்) இத்யாதி. அர்த்தத்வயத்தையும் விவரிக்கிறுர்(மிடுக்கும்மேன்மையும்)என்று. விஶ்லேஷதசையிலே"நாமின்றி ருந்துசொல்லுமளவோ?"என்று கொண்டாடக்கூடுமோவென்னவருளிச் செய் கிறுர் (அவன்வாராமையால்) இத்யாதி. அவ்வளவாயிராமைக்கு ஹேதுவே தென்னவருளிச்செய்கிறுர் (ஸர்வதாஸத்ருச) இத்யாதி. உருச்செய்தது-லோ கத்திலே அழகாயிருக்கிற தொன்று. ஸாத்மிக்கும் விஷயத்திலே கிடையா விட்டால் துஃகப்படுமத்தை ஸாத்மியாத விஷயத்திலே ஆசைப்பட்டு துஃகப் படுகை-மெலிவு. எஅ.

[வேறொரு அரும்பதம்.]

எழுபத்தெட்டாம்பாட்டு.—(நலியும்) இத்யாதி. "சந்த்ரோதயத்தில் நோ வுபடவேண்டா" என்று நெஞ்சத்துக்குச் சொல்லியிருக்கச் செய்தே ஸத்த் யைபாதிக்க நலிவுபட்டவர் "நமக்குதவவாராதே யிருந்தது அவன் குற்றம ன்று, அவன் பரமப்ரணயி"என்று நிஶ்சயித்துத்தம் நெஞ்சின் குற்றமென்று ஸமாஹிதராகிறு ரென்று ஸங்கதியுட்கொண்டு இப்பாட்டில் ப்ரமேயத்தை யருளிச்செய்கிறுர்(இதில்)இத்யாதி. தன்னை நலியுமென்று ஆர்த்தமாய், அது க்குபாவமருளிச்செய்கிறுர் (ஸர்வேஶ்வரன்) இத்யாதி. தம்மை நலியுமென்று அர்த்தாந்தரம் விவக்ஷித்து அதுக்குக் கருத்தருளிச்செய்கிறுர் (அந்தநலிவு) இத்யாதி. "விழ்த்ததும்"-விழப்பண்ணினதும். அவன் நினைத்திருந்ததுக்குத்ரு ஷ்டாந்த மருளிச்செய்கிறுர் (ஆநந்தம்) இத்யாதி. பாடாந்தரம் காட்டுகி றுர் (வலியின்) இத்யாதி. தாத்பர்யம்(அவனுடைய)இத்யாதி. மேலுக்கவதாரி கை (அவன்) இத்யாதி. (உருச்செய்தது) அழகாயிருக்குமது. எஅ.

---

(க) ஜிதந்தா ஸ்தோ. ௫.

தாத்பர்யம்.—இதில் க்ருஷ்ணாவதாரத்திலணிந்த திருத்துழாய் மாலையைப்பெற ஆசைப்பட்டுக்கிடந்து நலிகிற தம்மை அவனப்போதேவந்து அம்மாலையைத்தம் தோளிலிட்டு ஆஶ்வஸிப்பியாமற்போனது அவனுடைய தோஷமன்று; தனக்கரிதான வஸ்துவிலாசையைவிளைத்த தம்முடைய மநஸ்ஸின் தோஷமென்று மநஸ்ஸை வெறுக்கிற நாயகியின் பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

தான்மணம்புணரயோக்யையான ஸத்யபாமையைக்கொண்டு நரகாஸுரன்சிறையிலடைக்க அவனை அப்போதேஸம்ஹரித்தமஹோபகாரகனாய், தன்னுடைய அநிருத்தனை அவனுடைய தேவியான உஷையுடன் சேரவொட்டாமல் சிறையிலடைத்த பாணாஸுரனுடைய புஜங்களைத்துணித்து அவர்களைச்சேரவிட்ட உபகாரகனுமான அந்தக்ருஷ்ணனுடைய உபகாரசீலதை ஆஶ்ரித வாத்ஸல்யம் முதலியகல்யாணகுணங்களை, அபௌருஷேயமாய் நித்யஸித்தமான வேதமே அளவிட்டுச் சொல்லமாட்டாதிருக்க அவற்றின் பெருமையை நம்மால் சொல்லமுடியாது. அம்மஹாகுணங்களையுடையவன் நமக்கிப்போது வந்துதவாதது அவனுடைய தோஷமன்று. இப்படியிருக்க,நமக்கெட்டா நிலத்திலெழுந்தருளியிருக்கிற, அஞ்சநகிரிபோன்ற திருமேனிஸௌந்தர்யத்தையுடைய அம்மஹாநுபாவனுடைய திருத்துழாய் மாலையையாசைப்பட்டு, நமக்கரியதை நாமாசைப் படத்தகாதென்று சொன்னாலும் கேளாத என்னுடைய மநஸ்ஸினாலெனக்கிவ்விதமான வேதனை ஸம்பவித்தது. எஅ.

---

வேதனை வெண்புரிநூலனை, விண்ணோர்பரவநின்ற
நாதனைஞாலம் விழுங்குமநாதனை, ஞாலந்தத்தும்
பாதனைப்பாற்கடல் பாம்பணைமேற்பள்ளி கொண்டருளும்
சீதனையேதொழுவார், விண்ணுளாரிலுஞ்சீரியரே. எக.

அர்த்தம்.—வேதனை-வேதப்ரதிபாத்யனாய், வெண்-வெளுத்த, புரி-புரிகளையுடைய, நூலனை-திருயஜ்ஞோப வீதத்தையுடையவனாய், விண்ணோர்-நித்யஸூரிகள், பரவநின்ற-ஸ்தோத்ரம்பண்ணும்படியிருக்கிற, நாதனை - ஸ்வாமியாய், ஞாலம் - பூமியோடுகூடின லீலாவிபூதியை, விழுங்கும் - அமுதுசெய்யுமவனாய், அநாதனை - தனக்கொருஸ்வாமியில்லாதவனாய், ஞாலம்-பூமியை, தத்தும் - கீழ்ப்படுத்திக்கொண்ட, பாதனை - திருவடிகளையுடையவனாய், பாற்கடல் - க்ஷீராப்தியில், பாம்பு அணைமேல்-திருவனந்தாழ்வானாகிற திருப்பள்ளியின்மேல், பள்ளிகொண்டருளும் - சயநித்திருக்கிற, சீதனையே-சீதளஸ்வபாவத்தையேயுடையனாயிருக்கிற ஸர்வேஶ்வரனை, தொழுவார்-ஆஶ்ரயிக்குமவர்கள், விண்ணுளாரிலும்-பரமபதவாஸிகளான நித்யஸூரிகளைக்காட்டிலும், சீரியர் - ஶ்லாக்யமானவர்கள். எக.

[பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—எழுபத்தொன்பதாம்பாட்டு.—பாவியேன், பகவத்விஷய மென்றால் தளராதே நின்றநுபவிக்குமவர்களும் சிலரேயென்கிறார்.

வ்யா.—(வேதனை) புக்கவிடமும்புறப்பட்டவிடமுந்தெரியாதே தாம்பட்டது படும் வேதத்தைத் நினைக்கிறார். (வெண்புரிநூலனை) (க) "மைவரைபோல் பொலியுமுரு" என்ற அவ்வடிவையிறே வேதங்களும் ப்ரதிபாதிக்கிறது. அவ்வடிவுக்குப் பரபாகமான திருயஜ்ஞோபவீதத்தையுடையவனை. (விண்ணோர்பரவ நின்றநாதனை) நித்யஸூரிகளுமடைவு கெட்டுக்கிடந்து கூப்பிடுவது மவ்வடிவையிறே. (ஞாலம்விழுங்குமநாதனை) குறைவற்றார் சிலர் கொண்டாடவிருந்தோமென்று மேன்மைபார்த்திராதே குறைவாளரான ஸம்ஸாரிகளைப்ரளயம் நலியாதபடி வயிற்றிலேயெடுத்துவையா நின்றால் "நீயிது செய்யக்கடவையல்லை" என்றுசிலரால்சொல்ல வொண்ணாதிருக்கிறவனை. (ஞாலமித்யாதி) புழுக்குறித்த தெழுத்தாமாபோலேயொருகால் ரக்ஷித்து விடுகையன்றிக்கே ஜகத்தையடைய வளைந்துகொண்டதிருவடிகளையுடையவனை. (ஞாலமித்யாதி) எல்லாஞ்செய்தாலும் "ஒன்றும் செய்யப்பெற்றிலோம்" என்று இவற்றையடைய அளந்துகொண்ட திருவடிகளையுடையவனை. (பாற்கடலித்யாதி) எல்லாஞ்செய்தாலும் "ஒன்றுஞ்செய்யப்பெற்றிலோம்" என்று இவற்றினுடையரக்ஷணசிந்தைபண்ணிக் கொண்டுகிடக்கிறபடியாதல், இந்த்ரனுக்கிழந்தத்தைக்கொடுத்துத் தான் பேர்ந்துகிடக்கிறபடியாதல். (சீதனை) திருப்பாற்கடலில் கிடக்கிறபடியை நினைத்தால் தாப மடையத்தீரும்படியிருக்கிறவனை (உ) "[Grantha] - காபார்தோஜலசாயிநம்" (சீதனையேதொழுவார்) அவனைத்தொழுதுவேறே யொர்ப்ரயோஜநத்தைக் கொள்ள விருத்தல், அவனைப்ராஸங்கித்த மாத்ரத்திலே நெஞ்சு தளருதல் செய்யாதே தொழுவார்கள். (விண்ணுளாரிலுஞ் சீரியரே) நிரந்தரபகவதநுபவமே யாத்ரையான அத்தேசத்திலன்றியிலே அப்படிக்கு விரோதியான ஸம்ஸாரத்திலே யிருந்தே அதுவேயாத்ரையாயிருக்கையாலே இவர்கள் நித்யஸூரிகளிலுஞ் சீரியர். எகூ.

அரு॥ எழுபத்தொன்பதாம்பாட்டு,—(வேதனை) "வேதனை"-வேதப்ரதிபாத்யனை, "அநாதனை"-(க) "[Grantha]-ஆத்மேஶ்வரம்" என்னுமாபோலே தனக்கொருநியந்தாவை யில்லாதவனை. தான் பேர்ந்துலக மளந்தஶ்ரமமாறும்படி கிடக்கிறபடியாதல். "சீதனையே" என்கிற அவதாரணத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனைத்தொழுது) என்று. எகூ.

(க) திருவிருத்தம். எஅ. (க)
(உ) நாராயணஸூ.

[அப்பு அரும்பதம்.]

எழுபத்தொன்பதாம்பாட்டு.—(வேதனை) "பாவியேன்" என்றநுஸந்தோஷம்.வேதம்தாமாசைப்பட்டஸ்வரூபத்தையன்றேப்ரதிபாதிக்கிறதென்றருளிச்செய்கிறார்(மைவரைபோல்)இத்யாதி.வேதம் தாம்பட்டதுபடுகை-தம்மைப்போலே யேத்தமாட்டாதே படுகை, "அநாதன்" - தன்னை நியமிக்க வேறுநாதனில்லாதவன்.                ௭௯.

[வேறொரு அரும்பதம்.]

எழுபத்தொன்பதாம்பாட்டு.—(வேதனை) இத்யாதி. கீழே தம் நெஞ்சின் குற்றம் வேதனைப்படுகிறதென்று அருளிச்செய்த பரஸங்கத்திலே த்ருஷ்டசித்தர்படியை யநுஸந்தித்து ஈடுபடுகிறாரென்று ஸங்கதியருளிச் செய்கிறார் (பாவியேன்)இத்யாதி. பட்டதென்றால் பாவியேனென்பாரைப் போலே ஹர்ஷத்தில்வார்த்தை பாவியேனென்றது. வேத ப்ரதிபாத்யனை யென்று சப்தார்த்தமாய்த், தாத்பர்யமருளிச் செய்கிறார்.(புக்கவிடம்)இத்யாதி. "அநாதனை"தனக்குநியந்தாவில்லாதவனையென்றாய், அருளிச்செய்கிறார் (நீ)இத்யாதி.       ௭௯.

தாத்பர்யம்.—இதில், பகவதநுபவத்தில் தம்மைப்போல் நெஞ்சு தளருகையின்றிக்கே த்ருஷ்டசித்தராயிருந்து அவனையநுபவிக்கிறபாகவதரைக்கண்டு ஹ்ருஷ்டராகிறார்.

கரியமேனிக்குப் ப்ரபாகமாகிய வெள்ளிய திருயஜ்ஞோபவீதத்தையுடைய வடிவழகைக்கண்டு விடமாட்டாதேநின்று வேதங்களும் வைதிகர்களான நித்யஸூரிகளும் எப்போது மேத்தும்படியான கல்யாணகுணங்களையுடைய பராத்பரனாய், சிறியார்க்கோராபத்துவரில் தன்மேன்மையைப் பார்த்து மதித்திராமல் அப்போதவர்களுக்குத் தன் திருவயிற்றிலிடங்கொடுத்து ரக்ஷிக்கும் ஸுசீலபனாய்,இவ்வளவுமேன்மையுடைய நீ இந்தச்சிறியவ்யாபாரம் செய்யத்தகாதென்று தன்னைநியமிக்க வல்ல வேறொருநாதனில்லாதவனாய், இவ்விபூதியை யொருநாள்ரக்ஷித்து விட்டுவிடுகையன்றிக்கே த்ரிவிக்ரமாவதாரமெடுத்து இவற்றைத் தன் காற்கீழிட்டுக்கொண்டு ரக்ஷித்தும், அதற்குமேல் இவற்றைரக்ஷிக்கு முபாயமேதென்று திருப்பாற்கடலில் திருவநந்தாழ்வான்மேல் பள்ளிகொண்டு ஆலோசிக்கும் ஸ்வபாவனாய், தன்னை யநுஸந்திப்பாருடைய ஸம்ஸார தாபங்களெல்லாமாறும்படியான சீதள ஸ்வபாவனான ஸ்ரிய:பதியை விரோதிபஹுளமான இஸ்ஸம்ஸாரத்திலிருந்தே யாஸ்ரயிக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்கள், நிர்பாதமான பரமபதத்திலிருந்து நித்யாநுபவம் பண்ணுகிற நித்யஸூரிகளிலு முயர்ந்தவராய் வாழ்வர்கள்,       ௭௯.

சீரரசாண்டுதன் செங்கோல் சிலநாள்செலீஇக்கழிந்த,
பாரரசொத்து மறைந்தது நாயிறு, பாரளந்த
பேரரசேயெம் விசும்பரசே யெம்மை நீத்துவஞ்சித்
தோரரசேயருளாய், இருளாய் வந்துறுகின்றதே.       அ௦.

அர்த்தம்.—சீர் - நன்ருக, அரசு - ராஜ்யத்தை, ஆண்டு - பரிபாலநம்செய்து, தன் - தன்னுடைய, செங்கோல் - ஆஜ்ஞையை, சிலநாள் - சிலகாலம், செலீஇ - நடத்தி, கழிந்த - போன, பார் - பூமியிலுள்ள, அரசு - அரசர்களோடு, ஒத்து - ஸமாநமாய், நாயிறு - ஸூர்யன், மறைந்தது - அஸ்தமித்தான், இருளாய்வந்து - அந்தகாரமான து ஸ்வஸ்வரூபத்துடன்வந்து, உறுகின்றது - தொடாகின்றது. பார் - பூமியை, அளந்த - ஆக்ரமித்த, பேர்-மஹாகுணத்தையுடைய, அரசே - ஸ்வாமியே! எம் - எமக்கு ஸந்நிஹிதமாயிருக்கிற, விசும்பு - பரமபதத்துக்கு, அரசே - நாதனானவனே! எம்மை - எங்களை, நீத்து - விட்டு, வஞ்சித்த - வஞ்சனைசெய்த, ஓர் - அத்விதீயமான, அரசே - ராஜாவானவனே! அருளாய் - க்ருபைபண்ணவேணும். அ௦.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—எண்பதாம்பாட்டு.—ஆதித்யனும் போயஸ்தமித்து இருளும் வந்துபாதகமாக நோவுபடுகிருளொரு பிராட்டிவார்த்தையாயிருக்கிறது.

வ்யா.—(சீரரசாண்டு)குணமாகவாண்டு. "தர்மபுத்ரன் ராஜ்யம் பண்ணுவிடில் நாங்களு மிங்கிரோம்" என்று அக்நிஹோத்ரங்களையுங்கொண்டு அவனிருந்தகாடேறப் புறப்பட்டுப் போனுர்களிறே. அப்படியே சீரிதாக ராஜ்யத்தை நடத்தி. (தன்செங்கோல் சிலநாள் செலீஇ)இதுதானல்பகாலத்தோடே பர்யவஸிக்கை யன்றிக்கே தன்னுடைய வாஜ்ஞையை நெடுநாள் நடத்தி. (கழிந்தபாராசொத்து) இப்படிநெடுநாள் லோகத்தை நடத்திப்போனமாந்தாத்ருப்ரமுகரான ராஜாக்களைப் போலே. (மறைந்தநாயிறு) ஆதித்ய ஸந்நிதியில் நாயகஸந்நிதியிற் போலே ஆஸ்வஸித்திருக்கக் கடவதாய், ராத்ரியில் வந்தால் கரணங்களுக் கெல்லாம் பிரிந்தவிஷய மொன்றுமேயிலக்காகையாலே ராத்ரியென்றால் வெருவக்கடவதாயிறே யிருப்பது. பகலில் இந்த்ரியங்கள் ஸ்வஸ்வ விஷயங்களிலே பாவிபாய்கையாலே வ்யஸநமறையாது பட்டிருக்கு மிறே, (மறைந்தது) ஆதித்யனெல்லார்க்குங் கண்ணுயிருக்கிற வாகாரங்கிடக்கச் செய்தே விசேஷித்திவளுக்குக்கண்ணுயிருக்கையாலே, நாயகனைப்போகவிட்டு வழிபார்த்து நின்றாற்போலே கண்மறையப்பார்த்து நின்றுள்போலேநாணும்.

(பாரளந்தபேரரசே)இருளின் கையிலேயகப்பட்டஆதித்யனை மீட்கும்போது மஹாபலிகையிலேயகப்பட்டபூமியை மீட்டவனேவேணும்

அரு॥ எண்பதாம்பாட்டு.—(சீரரசாண்டு) குணமாக-நன்ருக, அரசு-ராஜ்யத்தை, ஆண்டு-நடத்தி. "மறைந்தது"என்கையாலே, கண்ணுஞ்சுழலையிட்டுப்பார்த்தாளென்று தோற்றுகிறது.

வ்யா|| போலேகாணும் (அளந்த) பூமிப்பரப்படைய அளந்ததிருவடிக ளைக்கொண்டு இவ்விருளையு மளந்தாலாகாதோ? (க) *இருளார்வினை கெடவிறே செங்கோல் நடத்துகிறது. (போரசே) எளியசெயல்கள்செ ய்யுமவனல்லனே; செய்யுமவையடங்கப்பெருத்தாயிற்றிருப்பது. (எம் விசும்பரசே) பகவத்விஷயத்திலே ஜ்ஞாநம் பிறந்த பின் ஸம்ஸாரத் திற் காட்டில் பரமபதமணித்தாய் காணுமிவர்க்கிருப்பது. (உ) "பொ ன்னுலகாளீரோ" என்று முதலதுவேயிறே கொடுத்தது. (எம்மை நீத்துவஞ்சித்தோரரசே) "உபயவிபூதிக்கும் தனித்தனியேகடவனை வோபாதி, என்னையகற்றி முடிக்கைக்கும் தனி முடிசூடியிருக்கிறவ னே!' என்றுபிள்ளான். "என்னையகற்றியதுசெய்கிறபோது 'பிரியேன்' என்றுவைத்துப்பிரித்து, 'இஸ்ஸ்வபாவத்துக்குப்புறம்பென்னேடொ ப்பாரார்?' என்றிருக்கிறவனாயிற்று. 'என்னுலல்லது செல்லாதாரைப் பொகடவல்லாரார்? என்னேபாதியில்லை" என்றிதுக்குத்தனிமுடிசூடி யிருக்கிறவனாயிற்று என்றுபட்டர். (அருளாய்) அருளுக்கு விஷயமற க்கிடாய் புகுகிறது. ஸத்தை போனாலருளுக்குவிஷயமில்லையாமிறே. பரமபதத்திலுள்ளார் நித்யாநுபவத்தாலே நிரபேக்ஷராயிருப்பர்கள், ஸம்ஸாரத்திலுள்ளார் அந்நபாநாதிகளாலே தரித்திருப்பர்கள்; இங் கேயிருந்தே அவ்விபூதியிலுள்ளார்படியாயிருப்பார்க்கருளலாகாதோ? குணாநுபவத்தாலே அங்குள்ளார் அந்யபரராயிருப்பர்கள், இங்குள் ளார் சப்தாதிவிஷயங்களாலே அந்யபரராயிருப்பர்கள், குணஜ்ஞாநமே யாய் அநுபவமின்றிக்கேயிருக்கிற விவர்பக்கலிலேயிறே யவனுக்கு த்தானருளின படிகாட்டலாவது. அருளவேண்டும்படி இப்போதிங் குவந்ததென்னென்ன, (இருளாய்வந்து) கோமுக வ்யாக்ரமாகை தவி ந்துவ்யாக்ரமாயேவாராநின்றது. ஊழியென்கிற பேராய்த்தலைக் கா ட்டுகை தவிர்ந்து இருளாயே பாதகமாகாநின்றது. மத்யஸ்தர்க்கிறே ஊழிபாதகமாவது; பிரிந்தார்க்குராத்ரியேயிறே பாதகமாவது, ஜகது

அரு|| ஈஸ்வரனைப்படி விரோதியைப்போக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (இருளார்வினைகெட) என்று. "எம்விசும்பு" என்கையாலே, பரமபதமே யணி த்தாயிருக்கிறதென்றபடி. இவரொருவருமொழிய அருளுக்குவிஷயமில்லை யோவென்ன அருளிச்செய்கிறார் (பரமபதத்திலுள்ளார்) என்று. இத்தைவி வரிக்கிறார் (குணாநுபவத்தாலே அங்குள்ளார்) என்று கோமுகவ்யாக்ரமாவது- பசுவின்தோலைப் போர்த்துக்கொண்டு வருகை. (பொய்த்தலை)-க்ருத்ரிமமான தலை. ஊழியென்று ப்ரளயமாய், ப்ரளயமன்றே மிகவும் பாதகம், ராத்ரிபா தகமோவென்ன அருளிச்செய்கிறார் (மத்யஸ்தர்க்கிறே) என்று. ஏதத்விவ ரணம் (ஜகதுபஸம்ஹாரத்துக்கு) என்று மத்யஸ்தரென்றது - நாட்டாரை.

(க) திருவிருத்தம். ௩௬.  (உ) திருவாய். ௬-௭-௧.

§ அரும்பதத்தில் பொய்த்தலை யென்று ப்ரதீகமும் அதற்கு அர்த்தமும் காண்கிறது. வ்யாக்யாந ஸ்ரீகோசங்களெல்லாவற்றிலும் யதாபாங்கித பாடமே காண்கிறது.

வ்யா॥ பஸம்ஹாரத்துக்கு ஹேதுவாகையாலே காட்டார்க்கிறே ஊழி பாதகமாவது. (உறுகின்றதே) இருள்வந்து ஸ்பர்சிக்கப்புகாநின்றது. அதுக்கு முன்னே (௧) * இருளன்ன மாமேனியைக்கொண்டுவந்து இடையிட்டுக்கலக்கவேணுமென்கிறாள்.

ஸ்வாபதேசம். இத்தால், ஸம்ஸாரத்திலிருப்பு அஜ்ஞானம்வந்து மேலிடும்படியாயிருக்கையாலே கடுக இவ்விருப்பைக் கழித்துத்தரவேணுமென்று அருளிச்செய்கிறார். ௮௰.

---

அரு॥ (இடையிட்டு)-நடுவே. [சீராசாண்டு தன்செங்கோல் சிலநாள் செலீஇக்கழிந்தபாரர சொத்து நாயிறுமறைந்தது. ஆகையாலே, இருளாய்வந்துறுகின்றது, பாரளந்த பேரரசே எம்விசும்பரசே எம்மை நீத்துவஞ்சித் தோரரசேயருளாய்] என்றந்வயம். ௮௰.

[அப்பு அரும்பதம்.]

எண்பதாம்பாட்டு.—(சீராசு) நாயிறுமறைந்ததென்றஞ்சுவானென்னென்னவருளிச்செய்கிறார் (ஆதித்யஸந்நிதி) இத்யாதி, கண்மறைய -கண்பூச்சி பூக்க. "உபயவிபூதிக்குத் தனித்தனியே நாதனானாற்போலேஎன்னை முடிக்கைக்காகமுடிசூடினான்" என்று $ பிள்ளான். அப்போது 'வஞ்சித்து' வஞ்சனைபண்ணியென்றாய், முடித்தென்றபடி "வஞ்சனத்தால-கபடத்தாலே, அகற்றுகைக்குமுடிசூடினான்" என்றுபட்டர். இந்நிர்வாஹத்திலே சப்தார்த்த மருளிச்செயகிறார் (என்னையகற்றி) இத்யாதி. அருளுக்குத்தாமில்லாவிட்டால் வேறுவிஷயமில்லையோ வென்ன வருளிச்செய்கிறார் (பரமபதத்தில்) இதயாதி. ப்ரளயமன்றோ பாதகம்; ராத்ரிபாதகமாமோ வென்னவருளிச்செய்கிறார் (மத்யஸ்த்தர்) இத்யாதி. மத்யஸ்த்தர்-ஸம்ஸாரிகள். ஊழி-ப்ரளயம். ௮௰.

[வேறொரு அரும்பதம்.]

எண்பதாம்பாட்டு.—(சீர்) இத்யாதி. கீழேபாகவதர் படியைக்கண்டஹர்ஷத்தாலே போது போக்கினவா, ஸம்ஸாரமண்டலத்திலேயிருந்த ஜ்ஞானம் தானும் நிலைநில்லாதென்று விசாரித்துத் தளர்ந்து பிராட்டி தசையையடைந்து நோவுபடுகிறாரென்று ஸங்கதியுட்கொண்டு அவதாரிகை யருளிச்செய்கிறார் (ஆகிலயனும்) இத்யாதி. குணமாகவாளும்படியெங்ஙனேயென்ன வருளிச்செய்கிறார் (தர்மபுத்ரன்) இத்யாதி. "இருளாய்வந்துறுகின்றதே" என்றபோதே ஆதித்யாஸ்தமயம் ஸித்தமாயிருக்க "மறைந்தது" என்றுசொன்னதுக்குக்கருத்து (ஆதித்ய) இத்யாதி. (பாவிபாய்கை) பிரிந்து போகை. போனவென்றுதே "மறைந்தது" என்றதுக்கு ஹ்ருதயம (ஆதித்யன்) இத்யாதி. இருளையுமளந்தாலென்றது-காற்கீழிட்டுக் கொண்டென்றாய், ஸ்வாதீநமாக்கினலென்றபடி. இத்தால, (போக்கலாகாதோ) என்றபடி. வஞ்சனம் முடிக்குமளவாகவருளிச்செய்து கபடமாக யோஜநாந்தரம் (என்னை) இத்யாதி. அருளுக்குவேறுவிஷயம் கிடையாதோ வென்ன வருளிச்செய்கிறார். (பரம) இத்யாதி. விவரணம் (குண) இத்யாதி. ௮௰.

---

(௧) பெரியதிருவந்தாதி - ௨௬. $ எம்பாரென்றும் பாடம் காண்கிறது. இரண்டுபாடத்திற்கும் மூலபாடம் ப்ரஸித்தமாக வேணும்.

தாத்பர்யம்.—ஸ்ரீமத்பகவத்ருபவைராரான பாகவதரைக் கண்டுகளித்த ஆழ்வார், அவ்வநுபவம் தமக்குக் கிடையாமையாலே தளர்ந்து அஜ்ஞாநவர்த்தகமான இஸ்ஸம்ஸாரத்தில் என்னை உபேக்ஷித்து விட்டிராதேயருளவேணுமென்கிற தம்முடைய ப்ரார்த்தனையை, இருணுக்கஞ்சினநாயகியின்வார்த்தையாலே யருளிச்செய்கிறார்.

மாந்தாத்ரு ப்ரப்ருதிகளான ராஜாக்கள் இவ்வுலகில் நெடுநாளிருந்து ஸாதுஸம்மதமாக தம்மாஜ்ஞையை நடத்தி யாண்டுவந்த பின்பு காலங்கழிந்தது போல், இத்தனைகாலமும் என்னிந்த்ரியங்கள் வெவ்வேறு விஷயங்களில் வ்யாபித்து நான் பொழுதுபோக்கும்படி எனக்கத்யந்தோபகாரகனுகவிருந்த ஸூர்யனுமஸ்தமித்துவிட்டான். இருளும்வந்துவ்யாபித்துப்பதார்த்தங்களைக் காணவொட்டாமல் மறைத்து மாஸ்லை ஏகமுகயாக்கிவிட்டது. உபய விபூதி நிர்வாஹகனுனவனே! அவ்விபூதிகளைப்போல் என்னையும் ரக்ஷிப்பதாக ப்ரதிஜ்ஞைபண்ணி இப்போதென்னைப்பிரிந்துவிலு துசிதமன்று, உன்னையே கதியாகநம்பின என்னைவிட உன்னருளுக்கு வேறொரு விஷயமும் கிடையாது. ஆகையால் நீயென்னைஉன்னருளுக்கு விஷயமாக்கியருளவேணும். அ0.

---

உறுகின்றகன்மங்கள்மேலனவோர்ப்பிலராய், இவளைப்
பெறுகின்றதாயர் மெய்நொந்து பெறுர்கொல், துழாய்க்குழல்வாய்த்
துறுகின்றிலர் தொல்லைவேங்கடமாட்டவும் சூழ்கின்றிலர்
இறுகின்றதாலிவளாகம், மெல்லாவியெரிகொள்ளவே. அக.

அர்த்தம்.—மெல் - ம்ருதுவான, ஆவி - (இவளுடைய)ப்ராணனை, எரி-விரஹாக்நியானது, கொள்ள - க்ரஸிப்பதற்க, இவள் - இந்நாயகியினுடைய, ஆகம் - உடம்பு, இறுகின்றது - இற்றுவிழாநின்றது, மேலன - மேல்வரக்கடவனவாய், உறுகின்ற - (அவையும்) ஸமீபித்துமிருக்கிற, கன்மங்கள் - கர்மங்களை, ஓர்ப்பிலராய் - விசாரியாதவர்களாய்க்கொண்டு, துழாய்- திருத்துழாயை, குழல்வாய் - குழலில், துறுகின்றிலர் - சூட்டுகிறார்களில்லை. தொல்லை - பழையதான, வேங்கடம் - திருமலையாகிற தடாகத்திலே, ஆட்டவும் - அவகாஹிக்கப்பண்ணவும், சூழ்கின்றிலர்-யத்நிக்கிறார்களில்லை. இவளை-இந்த விலக்ஷணையான நாயகியை, பெறுகின்ற - பெற்ற, தாயர் - தாய்மார்கள், மெய்நொந்து-சரீரம்வருந்தி, பெறுர்கொல்-பெற்றார்களில்லையோ?அக.

## [பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—எண்பத்தோராம்பாட்டு.—இருளும் போய்முடிகி இவளும் மோஹித்துக்கிடக்க, இவள் தசையையுங்காணு நிற்கச்செய்தே பந்து வர்க்கத்திலுள்ளார் "க்ரமத்திலே பரிஹரிக்கிறோம்" என்றுறியிருக்க, இத்தைக்கண்டு, "இவளுடைய அவஸாத மிருந்தபடியிது,

வ்யா|| ச்லாக்யதையிருந்தபடி இது, இப்படியிருக்க இவர்களாறியிரு க்கைக்கு இவர்கள் நேர்கொடுநேரே இவளைப்பெற்றவர்களன்றோ?" என்றிங்ஙனேயொரு மூதறிவாட்டி சொல்லுகிறாளாயிருக்கிறது.

வ்யா.—(உறுகின்றவித்யாதி) இவர்கள் நிரூபித்துச் செய்யக்கட வதொருகார்யமில்லையோ? வென்கிறாள். (உறுகின்ற கன்மங்கள்மேல னவோர்ப்பிலராய்) மேல் வரக்கடவனவாய், அவைதான் வர்த்தமா நம் போலேயிருக்கவந்து கிட்டிநிற்கிறகார்யங்களை யொன்றுமோரா க்கடவாரன்றிக்கே. (இவளைப்பெறுகின்றதாயர்) இவளைப்பெற்றவர்க ளுக்கெப்போது மொக்க வயிறெரிந்தபடியே யிருக்கவேண்டாவோ? ஒருலாபாலாபங்கள் வேணுமோ? இவள் தானாக வமையாதோ? (மெ ய்நொந்துபெறார்கொல்) இவளைப் பெற்றவர்களுடம்பு நொந்தன்றோ பெற்றது; வளர்த்துக்கொண்ட வித்தனையோ?

என்றான், இவளிப்படிசொல்லுகைக்கு இவர்கள் செய்ததென் னென்ன, (துழாய்குழல்வாய்த்துறுகின்றிலர்) (க) "மண்ணையினுங் கொண்டு வீசுமினே" என்னுமளவும்போய், அது கடக்கநின்று வீசுமளவும் போராதே, அதுதன்னையேகொண்டுவந்து குழலிலே கிரம்பத்துறுக்கவேண்டும்படியாயிற்று தசைமுடுகினபடி. (தொல்லை யித்யாதி) இக்குடிக்குப் பழையதாகச் செய்துபோரும் பரிஹாரத் தையுஞ்செய்கிறிலர்கள். (வேங்கடமாட்டவும்) கல்லுங் காடுமாயிருக் கிறதடைய ஒரு தடாகம்போலே காணுமவளுக்குத் தோற்றுகி றது, (உ)* 𑌏𑌷𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌪𑍍𑌰𑌵𑌿𑌷𑍍𑌟𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 - ஏஷப்ரஹ்மப்ரவிஷ்டோஸ்மி போலே. (சூழ்கின்றிலர்) அதுதான் செய்யவும் வேண்டா; உபக்ரமிப்பதுஞ் செய்கிறிலர்கள்; மந்த்ரிப்பதுஞ் செய்கிறிலர்கள். பகவத்விஷயம்ஸ்ப ர்சவேதியாகையாலே அடியிட்டபோதே தொடங்கி பலிக்குமிறே.

அரு|| எண்பத்தோராம்பாட்டு.—(உறுகின்ற, "இவளை" என்கையாலே ச்லாக்யதை. (மூதறிவாட்டி) - ஜ்ஞாநாதிகை. "மேலன"-மேல்வரக்கடவன வாய், "உறுகின்ற"-கிட்டாநிற்கிற, "கன்மங்கள்"-கன்மங்களை, கார்யங்களை, "ஓர்ப்பிலராய்"-விசாரியாதவர்களாய். "இவள்" என்று வைலக்ஷண்யந்தோ ற்றவருளிச் செய்ததுக்குத்தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவளைப்பெற்றவர்க ளுக்கு) என்று.

"துறுகின்றிலர்" - சூட்டுகிறிலர்; தொல்லை" - பழையதாகச்செ ய்து போருமதாயிருக்கிற, "வேங்கடமாட்டவும்"-வேங்கடத்திலேஅவகாஹிக்க ப்பண்ணவும், "சூழ்கின்றிலர்"-விசாரிப்பதுஞ் செய்கின்றிலர். விசாரித்தமா த்ரம் போருமோ வென்ன அருளிச்செய்கிறார் (பகவத்விஷயம்ஸ்பர்சவேதி) என்று. "இறுகின்றது"-இற்றிற்றழிந்துபோகாநின்றது. [மெல்ல விளரிகொள்ள

(க) திருவிருத்தம். ௫௩ (உ) பாரதம்-மோக்ஷ-ச-௫௦.

வ்யாதி சோலவயுமறிந்து பரிஹாரமு மின்னதென்றறிந்து செய்ய வேண்டாவோவென்ன (இறுகின்றதா லிவளாகம) இத்தனைக்ரமம் பொறுக்குமதோ? விவள்ப்ரக்ருதி; இற்றிற்றழிந்து போகாநின்றது. (மெல்லாவியெரிகொள்ளவே) ம்ருதுவான வாத்மா விரஹாக்நி கொளுந்திவேவாநிற்க க்ரமம்பார்த்திருக்கக்கடவதோ?

ஸ்வாபதேசம்.—இப்பாட்டால், தரிப்பிப்பார்க்கும் ரக்ஷகனுக்கு மிடமறும்படி இவர்பகவத் விஷயத்திலே யவகாஹித்தபடியைச்சொல்லிற்று. அக.

---

அரு|| இவளாகமிறுகின்றது, மேலனவாயுறுகின்றகன்மங்களை ஓர்ப்பிலராய்க் கொண்டு துழாய் குழல்வாய்த்துறுகின்றிலர், தொல்லை வேங்கட மாட்டவுஞ் சூழ்கின்றிலர், ஆகையாலே இவளைப் பெறுகின்றதாயர் மெய்நொந்து பெறார் கொல்] என்றந்வயம். அக.

[அப்பு அரும்பதம்.]

எண்பத்தோராம் பாட்டு.—(உறுகின்ற) "இவளை" என்கையாலே ஸ்லாக்யதை. (மேல்வரக்கடவனவாய்) மேல்ஸத்தாநாசபர்யந்தம் வரக்கடவனவாய், இப்போதுபடுகிறநோய்களை விசாரிக்கிறிகோளில்லையென்றபடி. (லாபாலாபம்) இவளை யொழியவும் வேறேலாபாலாப முண்டோ? இவளே யமையாதோ? வென்றபடி. இப்படிதடாக மாகச்சொன்ன விடமுண்டோ வென்ன வருளிச் செய்கிறார் (ஏஷப்ரஹ்ம) இத்யாதி. மந்த்ரிப்பது-விசாரமிடுகையாய், இது போருமோவென்ன வருளிச்செய்கிறார் (பகவத்விஷயம்) இத்யாதி. "இறுகின்றது" என்கையாலே-தரிப்பிக்கையருமை. [இவளாகம், மெல்லாவியெரிகொள்ள, இறுகின்றது. மேலனஉறுகின்றகன்மங்களைஓர்ப்பிலராய் துழாய் குழல் வாய் துறுகின்றிலர், தொல்லை வேங்கடமாட்டவுஞ் சூழ்கின்றிலர் இவளைப் பெறுகின்றதாயர் மெய் நொந்து பெறார்கொல்] என்றந்வயம். அக.

[வேறொரு அரும்பதம்.]

எண்பத்தோராம்பாட்டு.—(உறுகின்ற) இத்யாதி. மூதறிவாட்டி- பழைய மர்யாதைகளெல்லாமறிந்தவள். தொகுத்த பாவமருளிச்செய்கிறார் (இவர்கள்) இத்யாதி. "மேலனவுறுகின்ற கன்மங்களை ஓர்ப்பிலராய்" என்றந்வய முகேந அர்த்தமருளிச் செய்கிறார் (மேல்) இத்யாதி. தாயரென்ன வமைந்திருக்க "இவளைப் பெறுகின்ற" என்று விசேஷித்ததுக்குபாவம் (இவளை) இத்யாதி. இவளை- ஸ்லாக்யையானவிவளை. "துழாய்" என்றதுக்கு வ்யாவர்த்யம். (மண்) இத்யாதி. சூட்டுகின்றிலர் என்னாதே "துறுகின்றிலர்" என்றதுக்கு பாவம் (கடக்க) இத்யாதி. திருத்துழாயைக்கொண்டுவந்து துறுக்குமது ஸ்வயத்நஸாத்யமாகையாலே அதுக்குக் கூசியிருந்தாலும், திருவேங்கடமுடையான் திருவடிகளிலே சேர்த்து "அவனேஉபாயம்" என்று காட்டிக்கொடுக்குமது ப்ரபந்ந

குலத்துக்கு அடுக்குமதாகையாலே "தொல்லை" என்கிறளென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (இக்குடிக்கு) இத்யாதி. மலையிலே ஆட்டுகைகூடுமோவென்ன அருளிச்செய்கிறார்" (கல்லும்) இத்யாதி. இதுக்குத்ருஷ்டாந்தம் (வஷ:) இத்யாதி. "ஆட்டவும்" என்கிற ச (ச்) காரத்தாலே ஸமுசிதமாய் விசாரமும்செய்கின்றிலரென்று அருளிச்செய்கிறார் (மந்த்ரிப்பதும்) இத்யாதி. மந்த்ரம் - ஆலோசனை. [இவளாகம் மெல்லாவி யெரிகொள்ள இறுகின்றது, மேலை உறுகின்றகன்மங்கள் ஒப்பிலராய், துழாயித்யாதி சூழ்கின்றிலர், இவளைப்பெறுகின்றதாயர் மெய்நொந்து பெறாள்கொல்] என்றந்வயம்.

தாத்பர்யம்.—இப்படிமோஹித்துக்கிடந்த நாயகியைக்கண்டஒருஜ்ஞாநவ்ருத்தை, இவள் நோய்க்குப் பரிஹாரம் செய்யாமலிருக்கிற பந்துக்களை வெறுக்கிறாள்.

நாயகனுடைய விரஹத்தினால் இவளுடைய சரீரமும் ப்ராணனும் மிகவும் வருந்துகிறது, இனியிவளை உபேக்ஷிக்கில் உத்தரக்ஷணத்தில் நேரிடுமாபத்தையும்யோசியாமலும், இவளுடைய இந்நோய்க்குப் பரிஹாரமாக ஸர்வேஶ்வரனணிந்த திருத்துழாயை இவள்குழலில் கொண்டுவந்து முடியாமலும், அவனெழுந்தருளியிருக்கிற திருவேங்கடத்தில் இவளைக்கொண்டு சேர்ப்பியாமலும் இவர்கள் உபேக்ஷையாயிருக்கிறார்கள். தன்மெய்வருந்தி இவளைப்பெற்றதாய் இவ்வவஸ்தையைக் கண்டால் வயிறெரியாளோ? ஏதாவதொரு பரிஹாரம் செய்து இவளைத்தெளிவியாளோ? இவளருமை யறியாதவர்களாகையாலிவர்களுபேக்ஷித்தார்கள் என்று வெறுக்கிறாள். ௮௧.

எரிகொள்செந்நாயிறிரண்டுடனேயுதயம் மலைவாய்,
விரிகின்ற வண்ணத்த வெம்பெருமான் கண்கள், மீண்டவற்றுள்
எரிகொள் செந்தீவீழசுரரைப்போல வெம்போலியர்க்கும
விரிவசொல்லீரிதுவோ, வையமுற்றும் விளரியதே. ௮௨.

அர்த்தம்.—எம்பெருமான்-எமக்கு ஸ்வாமியான ஸர்வேஶ்வரனுடைய, கண்கள் - நேத்ரங்களானவை, எரிகொள் - நெருப்புடையதாய், உதயம் மலைவாய் - உதயகிரியில், உடனே - ஏககாலத்தில், விரிகின்ற - பரவாநின்ற, செம்-சிவந்தகிரணங்களையுடைய, இரண்டுநாயிறு-இரண்டுஸூர்யர்களுடைய, வண்ணத்த-ஸ்வபாவத்தை யுடையதாய்க் கொண்டு, எரிகொள்-ஜ்வாலையையுடைத்தாய், செம்-சிவந்த, தீ-நெருப்புப் போன்ற, அவற்றுள் - அந்த ஸூர்யதேஜஸ்ஸில், மீண்டு - திரும்பியும், வீழ் - விழாநிற்கிற, அசுரரைப்போல - (மந்தேஹரென்கிற) அஸுரர்களைப்போல, எம்போலியர்க்கும் - (பகவத்விஷயத்தில் ப்ரேமயுக்தரான எம்போல்வார்க்கும் - விரிவ-முன்னே தோற்றுகின்றன. வையம்முற்றும்-உலகமெல்லாம், விளரியது-கூப்பிடுகிறது, இதுவோ-இதுக்காகத்தானோ? சொல்லீர்-சொல்லுங்கோள். ௮௨.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—எண்பத்திரண்டாம்பாட்டு.—ஜீயர் "எனக்கு இப்பாட்டு ச்சொல்ல வநபிமதமாயிருக்கும்" என்றருளிச்செய்வர். உருவெளிப் பாட்டிலே ஸர்வேஶ்வரனுடைய திருக்கண்கள்பாதகமாகிறபடியை ச்சொல்லுகிறதிறே. இவருடைய வாற்றாமையுண்டாகிலிறே இப்பா சுரஞ்சொன்னால் நமக்குஸாத்மிப்பது.

வ்யா.—(எரியித்யாதி) நெருப்பையுமிழாநிற்பனவாய், சிவ ந்திருந்துள்ள நாயிறிரண்டு உதயகிரியிலே யுடனேவிரிக்கின்ற எரி போலே உதயகாலத்திலே பரம்புகிற அவற்றின்படியை யுடைத்தாயி ராநின்றன ஸர்வேஶ்வரனுடைய திருக்கண்கள்.

(மீண்டித்யாதி) ஆதித்யனுதிக்குமளவிலே மந்தேஹரென்பார் சிலஅஸுரர்கள் ஆதித்யரதத்தைப் பற்றிக்கொண்டு போகவொட் டாதே நிரோதிப்பார்களாய், ப்ராஹ்மணர் நீர்பொகடுகிற வித்தாலே ஆதித்யனுக்கு ஒருதேஜஸ்ஸு பிறந்து அதிலேயவர்கள் புக்குமுடி ந்துபோகையா யிருப்பதுண்டிறே; அப்படியே, புறம்பு போக்கற்றுத் திரியட்டும் அவ்வாதித்யர்களுடையஅந்தளரிகிறநெருப்பிலேவிழுந்து முடிந்து போகிற வஸுரர்களைப் போலே. (எம்போலியர்க்கும் விரிவ) என்னைப்போலே யாசைப்பட்டு நோவுபடுகிற வர்களுக்கெ ல்லாம் அஸுரர்களுக்குப்போலே இவைபாதக மாய்க் கொண்டு ப்ர காசமாகா நின்றது. (சொல்லீரிதுவோவையம் முற்றும் விளரியதே) லோகமாகக் கையெடுத்துக் கூப்பிடுகிறவதுக்கு மடி இதுவோ? சொல்லீர் கோள். இவைபாதகமாயோ லோகமாகக் கூப்பிடுகிறதென் கிறாள், (க) * வாயுந்திரையுகளிற்படியே. அன்றிக்கே (மீண்டவற்று

அரு||எண்பத்திரண்டாம்பாட்டு.—(எரிகொள்) (ஜீயர் இப்பாட்டுச்சொ ல்ல அநபிமதமாயிருக்கும்) என்றதுக்குத்தாத்பர்யம்-(உ)* தாயாயளிக்கின்ற தண்டாமரைபோலேயிருக்கிறஇந்தக்கண்களைப்பாதகமாகச்சொல்லுகிறதநபிம தமாயிருக்குமென்றபடி. இதுக்கடியென்னென்ன, ஆழ்வாருடையவாற்றாமை யுண்டானலப்படி சொல்லலாமொழிய அதன்றிக்கே பாதகமென்னும்போது அஸஹ்யமாமிறே. இத்தை அருளிச்செய்கிறார் (உருவெளிப்பாட்டிலே) என்று "விரிகின்ற வண்ணத்த" - பரம்புகின்ற அவற்றின்படியை யுடைத்தா யிராநின்றன.

"விரிவ" என்றதுக்கு இரண்டு பொருள். அதாவது - ப்ரகாசமாக நின்ற தென்னுதல்; அதவா - புகலிடமென்னுதல். ஸூர்யோதயகாலத்திலே (ஙு) "மெ ள்ளவெழுந்தரியென்றபேரரவம்" என்கிறபடியே "ஹரிஹரி" என்றுகையெடு த்துக்கூப்பிடுகிறவதுக்குமென்றபடி. "விளரியது"-கூப்பிடுகிறது. (அன்றிக்கே) என்றர்த்தாந்தரமாக வருளிச்செய்தது - "விரிவ" என்கிறபதத்திலே பேதம்.

(க) திருவாய் - உ - க. (உ) திருமொழி - எ - க - க.
(ஙு) திருப்பாவை - ச.

வ்யா|| எரிகொள் செந்தீவீழசுரரைப்போல வெம்போலியர்க்கும்) அவ்வாதித்யர்களுடைய தேஜஸ்ஸிலே விழுந்து முடிந்து போகிற அந்த ஆஸுரப்ரக்ருதிகளைப் போலேயாயிற்று என்போல்வார்க்கும் இக்கண்கள் பாதகமாகிறபடி. (விரிவசொல்லீர்) இவ்வளவிலெனக் கொருபுகலிடஞ்சொல்லீர். விரிகையாவது பரம்புகையாய், அத்தாலே போய்ப்புகுகையாய், புகலிடமென்று வருகிறது. அஉ.

அரு|| மற்றையதெல்லாம் பூர்வவத். [எம்பெருமான்கண்கள் எரிகொள் செந்நாயிறிரண்டுடனே உதயம் மலேவாய் விரிகின்றவண்ணத்த, அவற்றுள் மீண்டு எரிகொள்செந்தீவீழசுரரைப்போல வெம்போலியர்க்கும் விரிவ வையம்முற்றும் விளரியது இதுவோ சொல்லீர்] என்றன்வயம் "அவற்றுள்"-அந்தவாதித்ய ரூபங்களுக்குள்ளே. "மீண்டு" திரியட்டும். அஉ.

[அப்பு அரும்பதம்.]

எண்பத்திரண்டாம்பாட்டு.—(எரிகொள்) (க) "தாயாயளிக்கின்றதண்டாமரைக்கண்ணு" என்று தாரகமான கண்களை "எரிகொள்" என்று பாதகமாகச் சொல்லுகையாலே பாவபந்தமில்லாத நாமிது சொல்லக்கூடுமோவென்று ஜீயர். அநபிமதமென்ன வேண்டுவானென் னென்ன வருளிச்செய்கிறார் (உருவெளிப்பாட்டிலே) இத்யாதி. லோகத்திலே ஸத்வநிஷ்டரானவர்கள் ஹரி ஹரியென்று கையெடுத்துக் கூப்பிடுகிறதும், நம்மைப்போலே நோவுபட்டோமென்றிருக்கிறு ரென்றபடி. "விரிவ" என்றத்தை "எம்போலியர்க்கும் விரிவ" என்று கீழோடே கூட்டுதல். "விரிவசொல்லீர்" என்று மேலேகூட்டுதல். இத்தை யருளிச்செய்கிறார் (அன்றிக்கே) இத்யாதி. அஉ.

[வேறொரு அரும்பதம்.]

எண்பத்திரண்டாம்பாட்டு.—(எரிகொள்) இத்யாதி. மூதறிவாட்டியானவள் "வேங்கடமாட்டவுஞ்சூழ்கின்றிலர்" என்று தாய்மாரைவெறுக்கும் புடையிலே சொன்னதீதவோதுவாகக் கண்ணைத் திறந்து பார்த்தாள்; அப்போது கண்முன்னே அவன்கண்கள் வந்துதோன்றி நலியத்தொடங்கிற்று; அத்தைத்தோழிகளுக்கு நாயகி சொல்லுகிறுளென்று ஸங்கதியுட் கொண்டு இப்பாட்டிலே பிறந்த ப்ரேமாதிக்யமொருவர்க்குங்கிடைக்கத்தக்கதன்றென்னு மிடம் தோன்றவைதிஹ்யமருளிச்செய்கிறார் (ஜீயர்) இத்யாதி. இத்தால், (க) தாயாயளிக்கின்றதண்டாமரைக்கண்ணை எரிகொள் செந்நாயிறுகச் சொல்லும் படியான ப்ரேமமில்லாதார்க்கு இதநுஸந்திக்கக் கூடுமோவென்றதாயிற்று. ஸாத்மிப்பது - நெஞ்சுக்கொத்துரஸிப்பது. "மீண்டு" என்றதினர்த்தம் (திரியட்டும் என்றது, கண்கள் மீண்டும், விரிவ - விஸ்த்தரிக்கிறதுக ளென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (என்னைப்போலே) இத்யாதி. "விளரியது"-கூப்பிடுகிறதென்றாய், ப்ரபாதகாலத்திலே "ஹரிஃஹரிஃ" என்று கூப்பிடுகிறதென்றபடி. "விரிவ" என்றத்தை "சொல்லீர்" என்றத்தோடே கூட்டி அர்த்தாந்தரமருளிச் செய்கிறார் (அன்றிக்கே) இத்யாதி. அஉ.

(க) திருமொழி - எ - க - க.

தாத்பர்யம்.—இழ்ஜ்ஞாக வ்ருத்தையானவள் திருவேங்கட மென்று சொல்லக்கேட்டு நாயகி கண்விழித்துப் பார்க்க, அப்போது நாயகனான ஸர்வேஶ்வரனுடைய திருக்கண்கள் தன்முன்னே தோற்ற, அவை நிரந்தரமநுபவிக்கப்பெறாமல் தனக்கு பாதகமான படியைத் தோழிக்குரைக்கிறாள்.

ஸூர்யனுதிக்கும் போது அவனை மேற்கிளம்ப வொட்டாமல் மந்தேஹரென்கிற சிலஅஸுரர் வந்துதடுக்க, அப்போது ப்ராஹ்மணர்காயத்ரியையுச்சரித்துவிடுகிற அர்க்யத்தினால் ஸூர்யனுக்கு மிகுந்த தேஜஸ்ஸுண்டாய், அதினாலவர்கள் தோற்றுப்போய் வேறெங்கும் போக்கிடமற்றுத்திரும்பிவந்து அந்த தேஜஸ்ஸிலே விழுந்து மடிவதுபோல், உதயகிரியிலேககாலத்திலுதித்த அத்யுஜ்ஜ்வலரான இரண்டுஸூர்யர்கள்போன்ற ஸர்வேஶ்வரனுடைய இரண்டு திருக்கண்கள் என்முன்னும் என்னைப்போல் ப்ரேமபரவசரானவர்கள்முன்னும் தோற்றி மிகவும் பாதியாநின்றது. லோகத்தாரெல்லாரும் உதயத்திலெழுந்திருந்து ஹரிஹரியென்பதும் இத்திருக்கண்களின் வ்யதை பொறுக்கமாட்டாமல் சொல்லுகிறார்களோவென்று ஸம்சயிக்கிறேன்.—அத்தண்டாமரைக்கண்களை இப்படி எரிவிழியாகச் சொல்வது, அவற்றில் ப்ரீதராய் அப்ப்ரீதிகார்யமான அநுபவம் தலைக்கட்டாமையால் வந்தவெறுப்பினாலருளிச் செய்ததாயிருக்கிறது. ௮௨.

---

விளரிக்குரலன்றில் மென்பெடைமேகின்ற முன்றில்பெண்ணை,
முளரிக்குரம்பையிது விதுவாக, முகில் வண்ணன்பேர்
கிளரிக்கிளரிப் பிதற்றும் மெல்லாவியும் நைவுமெல்லாம்
தளரிற்கொலோவறியேன், உய்யலாவதித்தையலுக்கே. ௮௩.

அர்த்தம்.—மெல் - ம்ருதுஸ்வபாவமுடைய, பெடை-பெண்பக்ஷியோடு, மேகின்ற ஸம்ஶ்லேஷித்திருக்கிற, விளரி - உச்சஸ்வரமான, குரல் - கண்டத்வநியையுடைய, அன்றில் - அன்றில் பக்ஷியினுடைய வாஸத்துக்காக, முன்றில் - முற்றத்திலேயுண்டான, பெண்ணை - பனைமரத்திலே, முளரி - தாமரைப்பூவினால் செய்யப்பட்ட, குரம்பை - கூடு, இது விதுவாக-இப்படி நித்யமாயிருந்து பாதக மாகையாலே, முகில் - மேகம்போன்ற, வண்ணன் - வடிவையுடைய ஸர்வேஶ்வரனுடைய, பேர் - திருநாமத்தை, கிளரிக்கிளரி-எடுத்தெடுத்து, பிதற்றும் - ஜல்பிக்கையும், மெல் - ம்ருதுவான, ஆவியும்-ப்ராணனும், நைவும் - (சரீர) சைதில்யமும், எல்லாம் - இவையெல்லாமுண்டாகையாலே, இத்தையலுக்கு - இப்பெண்பிள்ளைக்கு, உய்யலாவது-பிழைக்கையென்பது, தளரில்கொலோ - முடிந்தாலோ? அறியேன் - நிஶ்சயிக்க மாட்டுகிறிலேன். ௮௩.

## [பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யானம்.]

அவ.—எண்பத்துமூன்றாம் பாட்டு.—உருவெளிப் பாட்டாலே நோவுபடாநிற்கச் செய்தே அதுக்குமேலே முற்றத்திலே யொருபனை

வ்யாபியாய், அப்பனையிலே தொங்கிற்றோரன்றில் தன் வாயலகைப் பேடையோடே கோத்துக்கொண்டிருக்கிற வித்தைநெகிழ்ந்தவாறே கூப்பிடக்கடவதாய், அதினுடைய ஆர்த்தத்வநியிலே இவள் மோஹித்துக்கிடக்க. இத்தைக்கண்டு "இதின த்வநியிருக்கிறபடி இது, இவளுடையவாற்றாமை யிருந்தபடி இது, இவளுடைய மார்தவமிருக்கிறபடி இது, இவையெல்லா மிருந்தபடியாலே இவளுள்ளாக அபிமதங்கை புகுந்து இவள் ப்ரீதையாயிருக்கக்காண மாட்டோமாகாதே!" என்றிங்ஙனே திருத்தாயார் வார்த்தையாயிருக்கிறது. பட்டர், இவ்விடத்தையருளிச்செய்யா நிற்க, நஞ்ஜீயர் "ஸ்ரீராமாயணத்திலிவ் விடத்துக்குப் போலியாகச் சொல்லலா மிடமுண்டோ?" என்றுகேட்க, "இளைய பெருமாள் காட்டிலே கொண்டுபோய்ப்பிராட்டியை விட்டுப்போந்த வநந்தரம் அவளுடைய ஆர்த்தத்வநிகேட்ட ஸ்ரீவால்மீகிபகவானுக்குத்திருத்தாயார்படியுண்டாகச் சொல்லலாம்" என்றருளிச்செய்தார்.

வ்யா.—(விளரிக்குரலன்றில்) விளரியென்று - உச்சமானத்வநிக்குப்பேர். உயர்ந்தத்வநியை யுடைத்தாம்படி கார்யப்பாட்டால் கூப்பிடுகிற வன்றிலுடைய. (மென்பெடை) கலக்கும்போதும்பூத்தொடுமாபோலே நீண்டும்படியா யிற்று மார்தவம்; இம்மார்தவத்திலே விரஹமு மானால் பாடாற்றப் போகாதிறே. (மேகின்ற) மேவாநிற்கிற. நித்யஸம்ஶ்லேஷமாய்ச் செல்லா நிற்குமிறே. அநபாயிநிக்கு ஸ்மாரகமாயிருக்கிறபடி. (முன்றில்பெண்ணை) முன்றிலென்று - முற்றத்துக்கும்வாசலுக்கும் பேர். முற்றத்திற்பனை நடலாமோவென்றிவ்விடம் நிர்வஹியாநிற்கச்செய்தே வங்கிப்புரத்துநம்பியைச்சிலர்கேட்க, "அதுவோ! இவள்கார்யங்களிரு முறியுமாய்ச் செல்லுகிறது" என்றுபணித்தாராம். (க) "முன்றில்தனி நின்றபெண்ணை மேல் கிடந்தீர்கின்ற வன்றிலின் கூட்டைப் பிரிக்க கிற்பவரார் கொலோ!" அவனைக்கொடு வருவாராரோ? வென்றபடியிறே. அல்லது, பிரிப்பனபிரித்துக் கூட்டுவன கூடித்திரிகிறாளன்றேயிவள். (முளரிக்குரம்பை) இதினுடையஸௌகுமார்யத்துக் கிடாகத்தாமரையிலைகளையும் பூக்களையுங்கொடுவந்து கூடாகப்பண்ணு விக்குமிறே. அன்றிக்கே, முளரியென்று முள்ளாய்,

---

அரு|| எண்பத்துமூன்றும்பாட்டு.—(விளரிக்குரல்) "பெண்ணை"-பனை. (அதுவோ இவள் காயங்களிரு முறியுமாய்ச் செல்லுகிற தென்று பணித்தாராம்) என்றதுக்குத்தாத்பர்யம்-ஆகையாலேயன்றோ விவளுக்கிந்த வநர்த்தமெல்லாம் வருகிறதென்றருளிச் செய்தா யென்றபடி, அன்றிலின் குரல்பாதகமாயிருக்குமோ வென்ன அருளிச்செய்கிறார் (முன்றிற்றனி நின்றபெண்ணை மேல்) என்று. இதுக்குத்தாத்பர்யமருளிச்செய்கிறார். (அவனைக்கொண்டுவருவார்) என்று, "முளரி" தாமரைக்கும் முள்ளுக்கும் பேர். "குரம்பை"-கூடு.

---

(க) திருமொழி - ௧௧. ௨ - ௧.

வ்யா|| முள்ளாலே செய்த கூடென்னவுமாம்.(இதுவிதுவாக)இக்கூடு கூடாக. இதிப்படி குடில்கட்டிக் கொண்டுபோந்து பாதகமாயற்ற பின்பு. மென்பெடையோடே மேவாநின்றுள்ள விளரிக்குரலன்றிலினுடைய முன்றில் பெண்ணை முளரிக்குரம்பையிதுவிதுவாக.

(முகில் வண்ணன்பேர் கிளரிக்கிளரிப் பிதற்றும்) முகில்வண்ணனுடைய திருநாமத்தைக் கிளர்ந்து கிளர்ந்து ஜல்பிக்கிற ஜல்பமும். (மெல்லாவியும்)சிறிதுபோது மிஜ்ஜல்பத்தோடே தான் செல்லுகிறதோ வென்றிருக்க, அதுவுமில்லாதபடி ஹ்ருதயத்திலுண்டான தளர்த்தியும். (நைவும்)அதுக்குமேலேஇவளுடைய சைதில்யமும். (எல்லாம்) இவையெல்லா மிருந்தபடியால். (தளரிவித்யாதி)(இத்தையலுக் குய்யலாவது) இப்பெண்பிள்ளைக்கு ஜீவிக்கலாவது. (தளரிற்கொலோ) இஜ்ஜல்பமுமின்றிக்கேயொழியும்படி வருந்தளர்த்தியாவது - முடிகையிறே. முடியிலாகாதே யிவளுக்குப் பிழைக்கலாவது, அறிகிறிலேன்.

ஸ்வாபதேசம்.—இத்தால், ஆழ்வார் படியைக் கண்டவர்களுக்கு "யாதநாசரீரம் போலே க்லேசமேயாகாதே! இவர்க்குள்ளது; இச்சரீரத்தோடே பகவல்லாப முண்டாய் இவர் தரித்திருக்கக் காணமாட்டோமாகாதே! இச்சரீர விஸ்லேஷத்துக்குப்பின்பாகாதே யிவர்க்காச்வாஸமுள்ளது" என்று தோற்ற விருக்கிற படியைச்சொல்லிற்று. அ௩.

---

அரு|| பூர்வார்த்தத்துக்கந்வயமருளிச்செய்கிறார் (மென்பெடை யோடேமேவாநின்றுள்ள) என்று.

"எல்லாம்" என்றது-இவையெல்லா மிருந்தபடியாலே என்றபடி. "தளரிற்கொலோ" முடிந்தாளாகிலோ என்றபடி. இத்தால், முடிந்துபிழைக்கலாமித்தனை யொழிய மற்றைப்படி யுஜ்ஜீவநமில்லை என்றபடி.

[மென் பெடையோடே மேவா நின்ற விளரிக்குரலன்றிலினுடைய முன்றில் பெண்ணையில் முளரிக்குரம்பையிது விதுவாக முகில்வண்ணன் பேர் கிளரிக் கிளரிப் பிதற்றும் மெல்லாவியும் நைவுமெல்லாம்—இவையெல்லா மிருந்தபடியால், இத்தையலுக் குய்யலாவது தளரிற்கொலோ அறியேன்] என்றந்வயம். அன்றிலினுடைய முளரிக்குரம்பை என்றபடி. "இது விதுவாக" - இதிப்படி குடில் கட்டிக்கொண்டு கிடந்து பாதகமாயற்ற பின்பு. அ௩

[அப்பு அரும்பதம்.]

எண்பத்து மூன்றாம் பாட்டு:—(விளரிக்குரல்) வேதார்த்தமன்றோ விது, வேதோபப்ரும்ஹணமான ஸ்ரீராமாயணத்திலேயுண்டோ இவ்வர்த்தம்" என்று ஜீயர். "தளிரும் முறியும்"என்று வ்யங்க்யம். ஆகையிறேயன்றோ அநர்த்தமாயிற் றென்றபடி. இது பாதகமென்னு மதுக்குப்ரமாணம் (முன்றில் தனி) இத்யாதி. "தளர்கை"—தளருகையாய், முடிகையைச் சொல்லு

கிறது. "இது விதுவாக நைவுமெல்லாம் இத்தையலுக் குய்யலாவது நள ரில்கொலோ" தளர்ந்தாலொழிய - முடிந்தா லொழிய,பிழைப்பில்லை யென்ற படி. அ௩

[வேறொரு அரும்பதம்.]

எண்பத்துமூன்றும்பாட்டு.—(விளரி) இத்யாதி. இது என்றது - உச்சமா யிருக்கிறதென்றபடி. (ஆற்றாமை யிருக்கிறபடிஇது) என்றது-பேர்கிளரிக் கிளரிப் பிதற்றுகை. வேதார்த்தமன்றோ? இப் ப்ரபந்தத்தில் சொல்லுமது; வேதோபப்ரும்ஹண ஶ்ரேஷ்டமானத்திலே இப்படி சொல்லலாமிடமேதென்று கேட்க, லோகவார்த்தாரீதியாலே ப்ரஸக்தமான பிராட்டி யிரண்டாம் பிரிவிலே ஶ்ரீ வால்மீகி பகவான் ப்ரியபரராயுதவி, "இனி இப்பாட்டில் அவதார ஸமாப்த்யநந்தரம் ஸம்ஶ்லேஷிக்கு மத்தனையோ?" வென்றிருந்தானாகவேணுமென்று பரிஹரித்த வைதிஹ்யத்தை அருளிச் செய்கிறார் (பட்டர்) இத்யாதி. வர்த்தமான பலிதமருளிச் செய்கிறார். (நித்ய) இத்யாதி. ஹார்த்தபாவம் (அநபாயிநிக்கு) இத்யாதி. க. * தாநிலா முற்றத்திலே யொருபனையிருக்க ப்ரஸக்தியுண்டோவென்னும் சங்கையை ஐதிஹ்யமுகேந பரிஹரிக்கிறார் (முற்றத்தில்) இத்யாதி, (நடலாமோ) என்றது-வைக்கலாமோ? வெட்டிவிட வேண்டாவோ வென்றபடி. (தளிரும் முறியுமாய்) என்றது வ்யங்க்யம். அதாவது நாயகன் அடிக்கடி வருகையும் முற்றத்திலே படுக்கையும் நிலாவுமாய் போகம் நடக்கிறதோ? இரவும் பகலும் பாதகமாய் இவளுக்குச் செல்ல, பந்துவர்க்கத்துக் கித்தைக்கண்டு க்லேசிப்பதாயே நடக்கையாலே, பனையைவெட்டி முற்றத்தை அழகாகப் பேணுவாருண்டோ வென்றபடி. முற்றத்தில் பனையுண்டாகச் சொன்ன பேருண்டோ வென்ன, ஸம்வாதம் காட்டி அதுக்குக் கருத்தருளிச் செய்கிறார் (முன்றில்) இத்யாதி. (இக்கூடு கூடாக) என்றது-ஸ்த்திரமாயிருக்கையாலே என்றபடி. விரஹம்பொறுத பேடையோடே நித்யஸம்ஶ்லேஷம் நடவாநிற்கச்செய்தே விரஹத்தை அதிசங்கைபண்ணிக் கூப்பிடுகிற பும்பக்ஷியினுடைய உச்சத்வநி, முகில்போலே பரமோதாரனுய்த் தன்னைக்கொடுத்தநுபவிப்பிக்கு மவனாயிருக்கச்செய்தேயும், (உ) "ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம்- நஜீவேயம் க்ஷணமபிவிநாதாமஸிதேக்ஷணாம்" என்னும் படியிருக்கும் நாயகன் படிக்கு ஸ்மாரகமாய், அத்தாலே அவன்பேரைப் பிதற்றத் தொடங்கினளென்னு மது தோற்ற அந்வயித்தருளிக் காட்டுகிறார் (மென்பெடை) இத்யாதி. மெல்லியதாய்-ஸூக்ஷ்மமா யிருந்துள்ள ஆவி-ப்ராணனென்று சப்தார்த்தமாய்ப் பலிதமருளிச் செய்கிறார் (இஜ்ஜல்ப) இத்யாதி. (சைதில்யமும்) - காயிகசைதில்யமும். "எல்லாம்" என்றவநந்தரம் உண்டாகையாலென்று சேஷம் திருவுள்ளம்பற்றி அருளிச் செய்கிறார் (இவை) இத்யாதி. "ஜல்பமும்" என்ற சகாரம் "மெல்லாவியும் நைவும்" என்ற விரண்டையும் ஸூசிப்பிக்கிறது. அ௩.

(க) பெரியாழ்வார் திரு.க-எ-ச. (உ) ஸ்ரீராமா - ஸுந்தர ௬௬ ௧௦.

தாத்பர்யம்.—கீழ்நாயகனுடைய உருவெளிப்பாட்டாலே தளர்ந்ததற்கு மேல் அன்றிலும் கூப்பிட, அதன் சப்தத்தைக் கேட்டு மோஹித்துக் கிடந்த நாயகியைக் கண்டு திருத்தாயார் வருந்தி யுரைக்கிறாள்.

இந்நாயகி யெழுந்தருளியிருக்கிற திருமாளிகையின் முற்றத்தில் மூலைத் திருந்த பனைமரத்தில் அன்றில் பக்ஷிகளுக்கு வாஸயோக்யமாகத் தாமரைப் பூவினால் கூடு சமைத்திருக்க, அக்கூட்டில் தன் பேடையோடு நித்யஸம்ச்லிஷ்டமா யிருக்கச் செய்தேயும், இப்பேடையோடு தனக்கு விச்லேஷம் நேரிடுமோவென்னு மதிசங்கையினால் அன்றிலானது உச்சஸ்வரமிட்டுக் கூப்பிட,இதைக்கேட்ட இப்பெண்,இப்படியே தன்னோடு நாயகன் ஸம்ச்லேஷித்திருக்கும்போது விச்லேஷத்திலே யதிசங்கைபண்ணி, உன்னைவிட்டு ஒரு க்ஷணமும் பிரிந்து ஜீவியேனென்று தன்னைப்பார்த்து நாயகன் சொன்ன வார்த்தையை ஸ்மரித்து, நினைத்தமாத்ரத்தில் ப்ரமமாறும்படியான அவனுடைய திருமேனிக்கு வாசகமான திருநாமத்தை யடிக்கடி இவளநுஸந்திப்பதையும், அப்படி யநுஸந்திப்பதற்கும் சக்தியற்ற யனத்தளர்த்தியையும், அதடியான சரீரத்தின் மெலிவையும் கண்டால், இனியிவளுக்கு மறுசரீரமெடுத்து ஸுகமநுபவிக்கவேண்டுமொழிய இச்சரீரத்துடன் ஸுகியாளென்று தோற்றுகிறது, என்று தாயார் வருந்துகிறாள்.

---

தையலெல்லார்கள் குழாங்கள் குழிய குழுவினுள்ளும்,
ஐயநல்லார்கள் குழிய விழவினும், அங்கங்கெல்லாம்
கையபொன்னாழி வெண்சங்கொடும் காண்பானவாவுவன்நான்
மையவண்ணா மணியே, முத்தமே யென்றன் மாணிக்கமே.

அர்த்தம்.—தையல் நல்லார்கள் - ஸ்த்ரீரத்நங்களினுடைய, குழாங்கள் - ஸமூஹங்கள், குழிய - திரண்ட, குழுவினுள்ளும் - திரள்களிலும், ஐயநல்லார்கள் - பண்டிதமணிகள், குழிய - திரண்ட, விழவினும் - உத்ஸவங்களிலும், அங்கங்கெல்லாம் - அவ்வவ இடங்கள்தோறும், மைய - அஞ்சநம் போன்ற, வண்ணா - (பார்த்தகண் குளிரும்படியான) வடிவையுடையவனே! மணியே - மணிபோல் ஸுலபனானவனே! முத்தமே - முத்துப்போல் சீதல ஸ்வபாவனே! என்தன் - எனக்கு ஸ்வாமியாய், மாணிக்கமே - ரத்நம்போன்ற மஹிமையுடையவனே! கைய - திருக்கையிலேயிருக்கிற, பொன் - உஜ்வலமான, ஆழி - திருவாழியோடும், வெண் - வெளுத்த - சங்கொடும்-ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடும், நான் - நான், காண்பான் - (உன்னை) ஸேவிக்கைக்காக, அவாவுவன் - ஆசைப்படாநின்றேன்.

௮௪.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ,—எண்பத்துநாலாம்பாட்டு:—இவள் மோஹித்தவநந்தரம் அதியாயோரிடத்திற்றரியாதே பகவதலாபத்தாலே அங்கேயிங்கே தடுமாறிக் கூப்பிட்டுக்கொண்டு திரிகிறபடியைச் சொல்லுகிறது. (௧) ‘క్వచిదుద్భ్రమతే వేగాత్ క్వచిద్విభ్రమతే బలాత్ । క్వచిన్మత్త ఇవాభాతి కాన్తాన్వే

---

(க) ஸ்ரீராமா. ஆரண்ய-௬0-௩௧.

வ்யா||தண்டகாரண்யத்தில்*ருஷிகள் திரள்போலே... ஸமாஜேஷு மஹத்ஸுச ...

வ்யா.—(தையனல்லாரித்யாதி) தையல்நல்லாருண்டு-ஸ்த்ரீரத்நங்கள், அவர்கள் குழாமுண்டு-திரள், அத்திரள்கள் திரண்டதிரளினுள்ளும். பெண்கள் திரள்களைக்கண்டவாறே திருக்குரவை யென்றிருப்பாராயிற்றிவர். (ஐயநல்லாரித்யாதி) (௧) "அறவோராருந்தவத்தோரையர்" என்று பண்டிதவாசகங்கள். ஐயநல்லாருண்டு-பண்டிதர்களில் நல்லவராயிருக்குமவர்கள், அவர்கள் குழிய விழவிலும் - தீர்க்க ஸத்ரங்கள், மற்றையில்; அவற்றுக்காகத் திரள விருப்பர்களிறே. அவற்றிலும். தண்டகாரண்யத்தில்*ருஷிகள் திரள்போலேயிருக்கிறவற்றிலும். (௨) "ஸமாஜேஷு மஹத்ஸு ச - ஸமாஜேஷு மஹத்ஸு ச" என்னுமாபோலே. (அங்கங்கெல்லாம்) அவற்றோடு போலியான விடங்களெல்லாவற்றிலும். (கையவித்யாதி) திருவாழியின்றிக்கே மனிச்சேயான அவதாரத்தோடு, அவற்றை மறைத்த அவதாரத்தோடு வாசியற திவ்யாயுதங்களோடே காணவாசைப்பட்டாயிற்றிருப்பது. ஆஸாரப்ரக்ருதிகளுக்கன்றே! மறைத்தது, எனக்குக்காணத்தட்டென், என்றிருப்பாராயிற்று(௩) "ஜாதோऽஸி தேவதேவேஶ ஶங்கசக்ரகதாதர - ஜாதாது மாவதாரம்தே கம்ஸோயம்திதிஜந்மஜ:" ஸத்ப்ரக்ருதியானவன் (௪) "தேநைவ ரூபேண சதுர்புஜேந-தேநைவ ரூபேணசதுர்புஜேந" என்றானிறே. (அவாவுவன்காண்) ஆசைக்குக் கண்ணுண்டோ? "காணவேணும்" என்றாசைப்படுமித்தனைபோக்கி "காணவரிது" என்றறியமாட்டேன். காணவரிதாகில் காணவேணுமென்றாசையைப் பிறப்பித்து நம்மை சிக்ஷித்துவிட்டாரா ரென்ன, (மையவண்ணா வித்யாதி) விஷயதோஷமிறே யிதுக்கடி யென்கிறார்.

அரு || எண்பத்துநாலாம்பாட்டு (தைய னல்லார்கள்) "குழிய" - திரண்ட, "விழவினும்" - மஹோத்ஸவத்திலும். (தீர்க்க ஸத்ரம்) என்றது - யாகாதிகளை. (மற்றையில்) என்றது. விவாஹாதிகளை. (தண்டகாரண்யத்தில் ருஷிகளும்) என்றது-ருஷிகள் திரண்டவிடத்திலு மென்றபடி: "ஆஸாரப்ரக்ருதிகளுக்குத்தோற்றாதே ஸத்ப்ரக்ருதிகளுக்குத்தோற்றும்" என்றதற்கு ப்ரமாணமருளிச் செய்கிறார் (ஜாதாது மாவதாரம் தே) என்று. துர்லப விஷயத்தை ஆசைப்பட்டால் கிடைக்குமோவென்ன அருளிச் செய்கிறார் (ஆசைக்குக் கண்ணுண்டோ) என்று. அதாவது - கண்ணென்று யுக்தாயுக்த விவேக ஜ்ஞாநம். கிடைக்கும் கிடையாதென்கிற வறிவுண்டோ ஆசைக்கென்றபடி. "ஆசைக்குக் கண்ணுண்டோ" என்றத்தை விவரிக்கிறார் (காணவேணுமென்றாசைப் படுமித்தனைபோக்கி) என்று.

(௧) (௨) (௩) ஸ்ரீவிஷ்ணு பு - ரு-௩-௧௩. (௪) கீதை. ௧௧-௪௬.

* ருஷிகளும் என்றே அரும்பத ஸ்ரீகோசத்தில் காண்கிறது. வ்யாக்யாந ஸ்ரீகோசங்களில் யதாபாங்க்தம் பாடம் காண்கிறது.

வ்யா|| நற்சரக்கை யிழந்தாறியிருப்பார்களோ?(மையவண்ணு)கண்டார் கண்ணிலே அஞ்சநமெழுதினுற்போலே குளிர்ந்திருக்கும்படி. (மணியே)அப்படியே யிருக்கச்செய்தே முடிந்தாளலா யிருக்கிறபடி. (முத்தமே) உடம்பிலே யேறிட்டுக்கொண்டால் விடா யெல்லாந் தீரும்படி யிருக்கை. (என்றன் மாணிக்கமே)பெருவிலையனுயிருக்கை. அச.

அரு|| [மையவண்ணு மணியே முத்தமே யென்றன் மாணிக்கமே தையனல்லார்கள் குழாங்கள் குழிய குழுவினுள்ளும் ஐயநல்லார்கள் குழியவிழவினு மங்கங்கெல்லாங் கையபொன்னுழி வெண்சங்கொடுங் காண்பான் நானவாவுவன்.] அச.

[அப்பு அரும்பதம்.]

எண்பத்துநாலாம்பாட்டு :—(தையனல்லார்கள்) விஶ்லேஷத்திலே இப்படிபட்டபேருண்டோ வென்ன, பெருமாள் பட்டா ரென்கிறுர் (க்வசிதுத்ப்ரமதே) இத்யாதி. ஸ்த்ரீகள் திரண்ட விடம் திருக்குரவைஸ்த்தாநமா யிருக்குமோ வென்ன வருளிச் செய்கிறுர் (பெண்கள்) இத்யாதி. ஐயம்-அறமாய், "அறத்தோர்" என்று ருஷிகளைச்சொல்லுகிறது. "(மற்றையில்)" யஜ்ஞகோஷ்ட்டி,தான கோஷ்ட்டி,இவற்றிலும் ருஷிகளுந் தாமுமாயிருப்பாரென்றபடி. மறைத்தத்தைக் காட்டுவரோவென்ன வருளிச் செய்கிறுர் (ஆஸாரப்ரக்ருதிகளுக்கு) இத்யாதி. அப்படி மறைத்தது ஸத்ப்ரக்ருதிகளுக்குக் காட்டுமோவென்ன (ஜாநாது) இத்யாதி. [மையவண்ணு தொடங்கிநான்அவாவுவன்) என்றந்வயம். அச.

[வேறொரு அரும்பதம்.]

எண்பத்துநாலாம்பாட்டு (தையல்) இத்யாதி. இவ்வாழ்வாருக்கு மோஹமாவது - தமோபிபூதியாலன்றிக்கே, (க) "எத்திறம்" என்றவிடத்தில் ஸௌலப்யகுண மாத்ராநுபவ மாறுற்போலே, முகில் வண்ணன் விஷயத்திலே அழுந்தின வநுபவமே யாகையாலே, அதிருந்தவிடத்திலிருக்க வொட்டாதே கிளப்பிவிட, ராமக்ருஷ்ணுவதாரங்களி லுண்டான வாசாமகோசர மாஹாத்ம்யத்தாலே தேடிக் கூப்பிடுகிருரென்று ஸங்கதியுட்கொண் டருளிச் செய்கிறுர் (மோஹத்தில்) இத்யாதி. இப்படி விரஹத்தில் க்லேசப்பட்டவ ருண்டோ வென்ன (க்வசித்) இத்யாதி. 'மற்றையில்'' என்றது- போககோஷ்ட்டி, தானகோஷ்ட்டி என்றுற்போலே கூடுகையிலென்றபடி. ஸத்ப்ரக்ருதியானவன்- அர்ஜுநன். (கண்ணுண்டோ) - கிடைக்குங் கிடையாதென்கிற விவேக முண்டோ வென்கை. மேலுக்கவதாரிகை (காண) இத்யாதி. அச.

தாத்பர்யம்.—இதில், ஸர்வேஶ்வரனுடைய ஸௌலப்யாதிசயத்தை யநுஸந்தித்து அவனைக் காணவேணு மென்கிற த்வரையாலே யருளிச் செய்கிறுர்.

ஓ ஸ்வாமீ ! நீ யபரிச்சிந்ந வைபவனுயிருக்கச் செய்தேயும் ஆஶ்ரிதர்க்கத்யந்தஸுலபனுய், கண்டார் கண்குளிரும்படியும் அவர்கள் பட்ட ஸம்ஸார தாப மாறும்படியுமா யிருக்கிற அஞ்ஜந கிரிபோன்ற திருமேனியை யுடையவ

(க) திருவாய்-க-ங-க.

ளுய், இந்த ஸௌலப்யத்தையு மழகையும்காட்டி என்னை நின்றவிடத்தில் நிற்க வொட்டாமற் பண்ணுகிற சங்க சக்ராதி திவ்யாயுததரனான நீ, க்ருஷ்ணாவ தாரத்தில் உனக் கபிமதைகளான கோபிமார்கள் திரளில் ராஸக்ரீடை பண்ணினபடியையும், ராமாவதாரத்தில் ஸ்ரீதண்டகாரண்யத்தில் ருஷிகள் கோஷ்டியில் வீற்றிருந்தபடியையும் காண ஆசைப்பட்டிருக்கிற வெனக்கு, அப்போதுள்ளார்க்கு ஸேவை ஸாதித்தாற்போல் ஸகல திவ்யாயுதோ பேதனாய் ஸேவை ஸாதித்து என்னை க்ருதார்த்தனாக்கவேணும் என்று ப்ரார்த்திக்கிறார். அச.

மாணிக்கங்கொண்டு குரங்கெறிவொத் திருளோடு முட்டி,
ஆணிப் பொன்னன்ன சுடர்படுமாலை, உலகளந்த
மாணிக்கமேயென் மரதகமே மற்றொப்பாரையில்லா
ஆணிப்பொன்னே, அடியேனடியாவி யடைக்கலமே. அரு.

அர்த்தம்.—குரங்கு - குரங்கானது, மாணிக்கம் - ரத்நத்தை, கொண்டு - எடுத்துக்கொண்டு, எறிவு ஒத்து - எறிந்து பொகட்டதனோடொப்பாக, இருளோடு - அந்தகாரத்துடன் கூட (வந்து), முட்டி - ஸமீபித்து, ஆணிப் பொன்னன்ன - ச்லாக்யமான பொன்போன்ற, சுடர் - உஜ்வலனான ஸூர்யன், படும் - பட்ட, மாலை - ஸந்த்யாகாலம் (தோற்றிற்று.) உலகு - லோகங்களை, அளந்த - ஆக்ரமித்த, மாணிக்கமே - உத்தமனே! என் - எனக்கு ஸ்வாமியாய், மரதகமே - மரதகமணிபோல் ப்ரமஹரமானவனே! மற்று - அதுக்குமேலே, ஒப்பாரை - தன்னோடு ஸமானமானவர்களை, இல்லா - உடைத்தாகாதவனாய், ஆணிப்பொன்னே - உயர்ந்த பொன் போன்றவனே! அடியேன் - அடியேனுடைய, அடி - உனக்கு சேஷமான, ஆவி - ப்ராணன். அடைக்கலம் - (உனக்கு) ரக்ஷ்யமானது. அரு.

## [பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம்.]

அவ.—எண்பத்தைந்தாம்பாட்டு.—இருளினுடைய தோற்றரவுக்கு நொந்தா ளொருதலை மகள் வார்த்தையாதல், அன்றிக்கே, இவள் தசையை யநுஸந்தித்த திருத்தாயார் வார்த்தையாதல்.

வ்யா.—(மாணிக்கங்கொண்டு குரங்கெறிவொத்து) குரங்கானது மாணிக்கத்தைக் கொண்டெறியுமாபோலே; பெருவிலையனான மாணிக்கத்தைக் குரங்கானது அதின்சீர்மையை யறியாதேயெடுத்துக் கார்யங்கொள்ள வொண்ணாதோரிடத்தே மங்கிப்போம்படி எறியுமாபோலே என்னுதல்; அன்றிக்கே, குரங்கென்று விலங்குதலாய், அத்தாலும் எடுத்துவிநியோகங்கொள்ள வொண்ணாதோரிடத்தே

அரு॥ எண்பத்தைந்தாம்பாட்டு(மாணிக்கம்). கீழ்வாக்யவிவரணம் (பெருவிலையனானமாணிக்கத்தை) என்று- (விலங்குதல்)அஸாத்யஸ்த்தலம். (அழைத்து

வ்யா॥ மங்கிப்போம்படி யெறியுமாபோலே யென்னுதல். அப்போது எறிவாரையழைத்துக்கொள்ளுமித்தனை. (இருளோடித்யாதி) இருளோடேவந்து § (சந்தித்து.) மாற்றற்ற செம்பொன்போலேஸ்லாக்யமான ஆதித்யனையாயிற்று முடித்துக்கொண்டு மாலைவந்து தோற்றிற்று. குரங்கின்கையிலேபுக்குமாணிக்கம் நசித்தாற்போலேயாயிற்று ராத்ரிக்கவயவமான விருளின்கையிலேபுக்கு ஆதித்யன்மாய்ந்தபடி.

இனி வெறும்மாலையேயாய்ச் செல்லுமித்தனை யாகாதேயென்று கைவாங்கியிருக்க வொண்ணாதபடி யாயிற்றவன்படி. (உலகளந்தமாணிக்கமே) ரக்ஷகரான இந்த்ராதிகளும் தங்களால்முடியாமை கைவாங்கினவன்றும் தான்வந்து கைக்கொண்டு தாமஸப்ரக்ருதிகளைத்தள்ளிநோக்குமவனிறே. காடுமலையுமான விபூதியை யளந்துகொண்டது ஒரு மாணிக்கத்தையிட்டுக்காணும், (மாணிக்கமே) பெருவிலையனாயிருக்கை; தன்னைப்பாராதே யழியமாறினபடி. (என் மரதகமே) உடம்பிலே யணைத்தால் ஶ்ரமஹரமாயிருக்கை. (மற்றொப்பாரையில்லாவாணிப்பொன்னே)முதலிலேஸ்லாக்யமாய் உபமாநராஹித்யத்துக்கு மாற்றற்றபொன்போலே யிருக்கிறவனே! (அடியேன்)போக்யதையிலே தோற்று அடியேனென்கிறார். (அடியாவி)தலைமகள் வார்த்தையானபோது, உனக்குச்சேஷபூதமான வென்னுடைய வாத்மவஸ்துவென்கை. ஆத்மஸமர்ப்பணமபண்ணுகையும் மிகையாம்படியிறே இதவனுக்கத்யந்தம் சேஷமாயிருக்கும்படி. ப்ரமித்தபோதிறே ஸமர்ப்பிக்கலாவது; ஸமர்ப்பித்தவநந்தரக்ஷணம் "என்னதை யவனுக்குக்கொடுத்தேன்" என்று நினைக்கவொண்ணாதபடி தன்னோடுதான் தொற்றற்றிறே* யிருப்பது. (க) "அதவா கிந்நு ஸமர்ப்பயாமி தே - அதவா கிந்நுஸமர்ப்பயாமிதே". (உ) "உற்றேனாவது மற்றாருக்கும் அன்னது" என்னக்கடவதிறே. ஆழ்வான் திருக்கோட்டியூர்நம்பிபாடுநின்றும் வந்தவநந்தரத்திலே "பிள்ளைப்பிள்ளாய்! என்னுள்ளான் என்ன

அரு॥ க்கொள்வது -அத்யாஹரித்துக்கொள்வது. "இருளோடுமுட்டி"-மாலைக்கு விசேஷணம். "முட்டி" என்றது- கிட்டியென்றதாய், இருளோடேவந்துகிட்டி என்றபடி. "சுடர்" என்று ஆதித்யனைச் சொல்லுகிறது.

(இனிவெறும்மாலையேயாய்ச் செல்லுமித்தனையாகாதே என்று கைவாங்கியிருக்கவொண்ணாதென்னும்படி யாயிற்றவன்படி) என்றது-இப்படி ஸந்த்யையானது ஸாம்ராஜ்யம்பண்ணுகிறகாலத்திலேதம்மைரக்ஷிக்கிறவர்களாரென்று கைவாங்க வொண்ணாதென்னும்படி யாயிற்றிவனுடைய ரக்ஷகத்வமென்றபடி. "அடைக்கலம்" உனக்குரக்ஷ்யம். (நம்பிபாடுநின்றும் வந்தவநந்தரத்திலே) என்றது-ஆறுமாஸங்காத்துக்கொண்டிருந்து நம்பிபாடுநின்றும்போகப்புக நம்பி திரும்பவழைத்தவாறே வந்தவநந்தரத்திலே என்றபடி.

* இதுக்வாசித்கம். (க) ஸ்தோத்ரரத்நம். ருரு.
(உ) திருவாய் - எ-கூ-கப.

வ்யா|| வேண்டும் ஸ்த்தாநே, ஆழ்வார் (க) "அடியேனுள்ளான், என் றபடி கண்டாயே" என்று பணித்தார். அரு.

அரு|| [மாணிக்கங்கொண்டு குரங்கெறிவொத்திருளோடு மூட்டியாணிப் பொன்னன்ன சுடர்படுமாலைவந்தது,ஆகையாலே உலகளந்தமாணிக்கமே என் மரதகமே மற்றொப்பாரையில்லாவாணிப் பொன்னேயடியேனுடைய அடியா வியடைக்கலம், ஆதலால் ரக்ஷிக்கவேணும்] என்றந்வயம் "அடியாவி" சேஷ மானவாத்மவஸ்து. அரு.

[அப்பு அரும்பதம்.]

எண்பத்தைந்தாம்பாட்டு.—(மாணிக்கம்) (வெறும்மாலையேயாய்)-வெறும் ராத்ரியேயாய். அடைக்கலமென்று நிற்க, அடியேனென்று ஸ்வரூபஞ்சொல் லுவானென்னென்னவருளிச்செய்கிறார் (ஆத்மஸமர்ப்பணம்.) இத்யாதி. ஆனால் ஆத்மஸமர்ப்பணம்பண்ணுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (ப்ரமித்தபோது) இத்யாதி. ஆனால் தெளிந்தபோ தெப்படியிருக்குமென்ன வருளிச்செய்கிறார் (ஸமர்ப்பித்தவநந்தர) இத்யாதி. இப்படி ப்ரதமத்திலே ஸமர்ப்பித்தும் அநந்தரமநுதபித்த பேருண்டோ வென்னவருளிச்செய்கிறார் (அதவா) இத்யாதி. சேஷத்வம்ஸ்வரூபமென்னு மதுக்குஸம்வாதமாக வருளிச் செய்கிறார் (ஆழ்வான்) இத்யாதி.(வந்தவநந்தரத்திலே)எம்பெருமானார் கேட்க நம்பி தம்மைக்குறித்தருளிச்செய்தபடியே யாழ்வானநுவதித்தானென்றபடி. "பிள்ளைப்பிள்ளாய்" என்றாழ்வானைக்குறித்து நம்பியருளிச்செய்தார் பூஜ் யோக்தியாக. அன்றிக்கே, ஆழ்வான்தாம் தம்முடைய சிஷ்யரான பிள்ளைப் பிள்ளையைக் குறித்தருளிச்செய்தாராகவுமாம். அரு.

[வேறொரு அரும்பதம்.]

எண்பத்தைந்தாம்பாட்டு.—(மாணிக்கம்) இத்யாதி. கீழ்ப்பாட்டில் அரதி யாய்த்தேடிக்கூப்பிடும்படியான வளவிலே,அதுக்குமிடமறும்படி ராத்ரிவரப்புக அத்தைக்கண்டு பலகாலும் ராத்ரிவ்யஸநப்பட்டவளாகையாலே அத்தைப் பொறுக்கமாட்டாதே சரணம் புகுகிறபடி இப்பாட்டென்று ஸங்கதியுட் கொண்டு இரண்டுவிதமாகவவதாரிகை யருளிச்செய்கிறார் (இருள்) இத்யாதி. திருத்தாயார் வார்த்தையானபோது "அடியேனடியாவி" என்றத்தை என்னு டைய பெண்பிள்ளையாவி என்றுக்கிக்கொள்வதென்று திருவுள்ளம். விலங்குத லென்றர்த்தமானபோது எறிகைக்கு கர்த்ருபதம் வேணுமேயென்ன வருளிச் செய்கிறார் (அப்போது) இத்யாதி. (அழைத்துக் கொள்ளுமித்தனை) என்றது - கர்த்ருவாசகபதம் அத்யாஹரித்துக் கொள்வதென்றபடி. மேலுக்கவதாரிகை (இனி) இத்யாதி. வெறும் ராத்ரியானால் கரணோபரதிரூபமான நித்ரையாலே போதுபோக்கி, போது விடிந்தால் முன்புபோலே தேடித் திரியலாமெ ன்றிருக்கலாம்;கண்ணுறங்கவொட்டாதே அநுபாவ்யவிஷயம் பாதிக்கையாலே

(க) திருவாய் - அ - அ - உ.

சரணம்புகவேண்டிற்றென்று கருத்து. (தாமஸப்ரக்ருதிகளை) மஹாபலியை. தமோநிவர்த்தகத்வாகாரத்தையிட்டு ஒருதாத்பர்ய மருளிச்செய்து அநர்க்கதை யிலே தத்பர்யாந்தர மருளிச்செய்கிறார் (பெருவிலையன்) இத்யாதி. "அடைக் கலம்" என்றதுக்குபாவம் (ஆத்மஸமர்ப்பணம்) இத்யாதி. அடைக்கலம்போலே அத்யந்த சேஷமேயானால் ஆத்மஸமர்ப்பணம் பண்ணுவானென்னென்ன (ப்ரமித்த) இத்யாதி. ஆனால் தெளிந்தபோதிருக்கும்படி யென்னென்ன (ஸமர்ப்பித்த) இத்யாதி. ஸமர்ப்பித்தநுதபித்த பேருண்டோவென்ன (அதவா) இத்யாதி. ஆத்மஸ்வரூபமத்யந்த பரதந்த்ரமாயிருக்குமென்னு மதுக்கு ஸம்வாதம் (ஆழ்வான்) இத்யாதி. வந்தவநந்தரத்திலே எம்பெருமானார்கேட்க, நம்பிதம்மைக்குறித்து அருளிச்செய்தபடியை ஆழ்வானநுவதித்தானென்றபடி, "பிள்ளைப்பிள்ளை" என்று நம்பி ஆழ்வானைப் பூஜித்துச்சொல்லும்படி. அன் றிக்கே, ஆழ்வான் தாம் தம்முடைய சிஷ்யரானபிள்ளைப்பிள்ளையைக் குறித்து அருளிச்செய்தாரெனவுமாம், இரண்டு பக்ஷத்திலும் "பணித்தார்" என்றவநந் தரம் சொன்னானென்று சேஷம். அரு.

தாத்பர்யம்.—இதில், இரவுக்கஞ்சின நாயகியாய்க்கொண்டு, அடிக்கடி இரவும் இருளும்வந்து என்னைநலியாதபடி ரக்ஷித்தருளவேணுமென்று நாயக னாக ஸர்வேச்வரனைச் சரணம் புகுகிறார்.

விவேகசூந்யமான குரங்கானது மாணிக்கத்தினருமை யறியாமல் அதை யெடுத்துத் தனக்கும் பிறர்க்கும் உபயோகியாதபடி யோர்பாழான ப்ரதேசத் திலெறிந்து விடுமாபோலே, லோகோபகாரகனான ஸூர்யனைப்போக்கடித்து விட்டு பாதகரமான இருளைத்தனக்குத்துணையாகக் கூட்டிக்கொண்டுவந்து இந்த ராத்ரியானது என்னை பாதிக்கிறது. தனக்கொத்தாரும் மிக்காருமில்லாத அபரிச்சிந்நவைபவனாய், ஸகலேந்த்ரியாஹ்லாதகரமான திருமேனியையுடைய னாய், ஸகல ஜகத்ஸ்வாமியாய், எனக்கு நாதனான நீயிருக்க, உனக்கு சேஷமாய் உன்கையையே யெதிர்பார்த்திருக்கும் என்னுடைய இந்த ப்ராணன்படும் வருத்தம் ஸஹிக்கக்கூடாததாயிருக்கிறது. ஆகையாலதைப்போக்கி ரக்ஷித்தரு ளவேணும். அரு.

---

அடைக்கலத்தோங்கு கமலத்தலரயன் சென்னியென்னும்,
முடைக்கலத்தூண் முன்னரனுக்கு நீக்கியை, ஆழிசங்கம்
படைக்கலமேந்தியை வெண்ணெய்க்கன்றாய்ச்சிவன் தாம்புகளால்
புடைக்கலந்தானை யெம்மானை, என்சொல்லிப் புலம்புவனே. அசு.

அர்த்தம்.—அடைக்கலத்து - ரக்ஷ்யவஸ்துவாக, ஓங்கு - வளராநின்ற வனாய், கமலத்து - (திருநாபியிலுத்பந்நமான) தாமரையினுடைய, அலர் - பூவில்பிறந்த, அயன் - ப்ரஹ்மாவினுடைய, சென்னி என்னும்-தலையென்கிற, முடை - துர்க்கந்தமுடைய, கலத்து - பாத்ரத்தில், ஊண் - போஜநத்தை, முன் - முற்காலத்தில், அரனுக்கு - ருத்ரனுக்கு, நீக்கியை - போக்கின

வனாய், ஆழிசக்கம் - ஸுதர்சநபாஞ்சஜந்யங்களாகிற, படை - திவ்யாயுதங்களை, கலன் - ஆபரணங்களாக, ஏந்தியை - தரித்தவனாய், அன்று - க்ருஷ்ணவதாரத்தில், வெண்ணெய்க்கு - வெண்ணெய்க்காக, ஆய்ச்சி - யசோதைப்பிராட்டி, வன்-வலிய, தாம்புகளால் - கயிறுகளினால், புடைக்க - அடிக்க, அலந்தானை - அலமாப்பையுடையவனாய், எம்மானை - எனக்குஸ்வாமியானவனான உன்னை, என் சொல்லி - என்னகுறையைச் சொல்லி, புலம்புவன் - கூப்பிடுவேன்? அசு.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—எண்பத்தாறும்பாட்டு.—எத்தனையேனுமிருள்வந்து மேலிட்டுபாதகமானாலு மத்தலையிலொரு குறைசொல்ல வொண்ணாதபடியிறே அவன் ஸ்வரூபத்தை நிரூபித்தாலிருக்கும்படி.

வ்யா.—(அடைக்கலத்தோங்கு) ஸர்வேஸ்வரன் பக்கலிலே நிக்ஷேபம்போலேயாயிற்று ப்ரஹ்மா வளருவது. (கமலத்தலரயன்) நிக்ஷேபம்போலே என்றவிடம் - ஒரு குறைபிறவாதபடி உணர்ந்து நோக்குகிறபடியைப் பற்றச்சொன்னவித்தனை. அவ்வளவன்றிக்கே, நேரேஸர்வேஸ்வரன் பக்கலிலே பிறந்தஜந்மத்தால்வந்த ப்ராப்தியையுடையவன். (சென்னியித்யாதி) லோககுருவுமாய், பிதாவுமானவன் தலையையறுத்துப் பாதகியாய் நின்றான் ஒருவன்; தலையறுப்புண்டு எளிவரவுபட்டு நின்றானொருவன்; இருவருடையதுஃகத்தையும் போக்கினானாயிற்றிவன். (அயன்சென்னியென்னும் முடைக்கலம்) ப்ரஹ்மசிரஸ்ஸென்றொரு நாமமாத்ரமேயாய் தான் முடைக்கலமாயிற்று. பூதிகந்தபஹுளமாகையாலே கழுகும் பருந்துமாய்த்தொடர்ந்து திரியும்படியாயிற்று ஸஞ்சரிப்பது. (முடைக்கலத்தூண்முன்னானுக்கு நீக்கியை) அதிலேயுண்டு திரிகிறவித்தை முன்னானுக்கு நீக்கினவனை. ஸம்ஹர்த்தாவாய்த்தன்னதிகாரத்தோடே யிருக்கச்செய்தே, இவ்வெளிவரவுவர, "நாமொருவனுக்கிக் கார்யங்கொள்வானொருவன், நோவுபடவிட்டிருக்க வொண்ணாது" என்று அவனுடைய

---

அரு || எண்பத்தாறும்பாட்டு.—(அடைக்கலத்தோங்கு) "அடைக்கலத்து"-ரக்ஷ்யமாய்க்கொண்டு, "ஓங்கு"-வளருகிற, "கமலத்தலர்"-தாமரைப்பூவிலேபிறந்த, "அயன்சென்னியென்னும்"-ப்ரஹ்மாவினுடைய சிரஸ்ஸாகிற, முடைக்கலத்து"-துர்க்கந்தியான கபாலத்திலே, "ஊண்"-உண்டுதிரிகிறவித்தை, "முன்னானுக்கு நீக்கியை"-முன்னே அந்தபாதகிக்கு நீக்கினவனை. இத்தால், ரக்ஷ்யனுமாய், புத்ரனுமான அயனென்றபடி. (நாமொருவனுக்கிக்கார்யங்கொள்வானொருவன்) என்றது நாம் அதிகாரிபுருஷனும்படி பண்ணிக்கார்யம் கொள்வானொருவனென்றபடி.

வ்யா|| துஃகத்தைப்போக்கினவனே. இத்தால், ஸ்ருஜ்யத்வ கர்மவஶ்ய த்வக்ஷேத்ரஜ்ஞத்வங்களிருவர்க்கும் அவிசிஷ்டமென்றபடி; ஒருவன் தலையறுப்புண்டு நின்றான்; ஒருவன் பாதகியாய் நின்றான். இவன் அவர்களிருவர்க்கும் வந்ததுஃகத்தைப் போக்கிக்கொண்டு நின்றான்.

(ஆழிசங்கம் படைக்கலமேந்தியை) "இவர்களிப்படி யலைந்து கொண்டுகிடந்தால் ரக்ஷிக்கவேண்டும்போதாகக்கருவியெடுக்கப்பார்த்திருக்கவொண்ணாது" என்று திவ்யாயுதங்களை எப்போதுங்கையிலே தரித்துக்கொண்டுநிற்கிறவனை. திருவாழியுள்ளிட்ட திவ்யாயுதங்களாகிற திருவாபரணங்களை ரக்ஷிக்கவேண்டும்படியாகத்தரித்துக்கொண்டிருக்கும் ஸ்வபாவனானவனை. (வெண்ணெயித்யாதி) ப்ரஹ்மருத்ராதிகளுக்குங்கூட துஃகநிவர்த்தகனாய், அதுக்கீடான பரிகரத்தையுமுடையனாயிருக்கச் செய்தே ஆஶ்ரிதரால் தனக்குவந்த க்லேசத்தைப்பரிஹரித்துக்கொள்ள மாட்டாதேயிருக்குமவன். ப்ரஹ்மாதிகளுக்குங்கூட நிர்வாஹகனாய்; ஸர்வஸ்மாத்பரனாயிருக்கிறவன் தன்னுடைய விபூதியிலேகதேசத்திலே சிலவநுகூல ஸ்பர்சமுள்ள த்ரவ்யத்தாலல்லது செல்லாதே, அவாப்தஸமஸ்தகாமனாயிருக்குமவனுக்குஒன்று குறையாய், அதுதான் நேர்கொடுநேர்கிடையாமே களவுகாணப்புக்கு வாயதுகையதாகவகப்பட்டு, அதுக்கு ப்ரதிக்ரியைபண்ணமாட்டாதே நின்றவனை. (அன்று) அவன் வந்துகட்டுண்டு எளியனானதொருநாளுண்டாவதே! அதுவுமொருநாளே! தானே வந்துகட்டுண்டு எளியனாயிருக்கிறவன்று கிட்டப்பெறாதே இன்று பெறுகைக்குப் ப்ரார்த்தித்திருப்பதே! நான் (ஆய்ச்சி) ஒரிடைச்சியால் வந்தநோவுபரிஹரிக்க மாட்டாதேயிருப்பதே! (வன்தாம்புகளால்) உரவியவையெல்லாமற்றற்றுப்போக மேலேமேலே வேறுசிலவற்றை யெடுத்தடித்தாளாயிற்று. ஸ்நேஹமெவ்வளவுண்டு, அவ்வளவு நிலைநிற்குமிறே சீற்றமும். (க) "இடைச்சிகுமைத்திறங்கள்" என்னக்கடவதிறே. (புடைக்கலந்தானை) அலந்திருக்குமிதுக்கு மேற்பட இதுக்கொரு ப்ரதிக்ரியையில்லை பண்ணலாவது. (அலந்தானை) அலவென்று - மலர்வாய், இவளடிக்கவடிக்க முகம்மலர்ந்திருந்தபடியாகவுமாம். (உ) * கண்ணியால்

அரு|| (அலைந்துகொண்டு) துஃகப்பட்டுக்கொண்டு. "ஆழிசங்கம்" - திருவாழி சங்கம் முதலான, "படை" - திவ்யாயுதங்களாகிற, "கலம்" - ஆபரணங்களை "ஏந்தியை" - தரிக்கும்ஸ்வபாவனானவனை. "கலம்" என்றது - கலனென்றதாய், ஆபரணங்களைச் சொல்லுகிறது. அப்படி பலதாம்புகளாலே அடித்தாளோவென்ன அருளிச்செய்கிறார் - (இடைச்சிகுமைத்திறங்க ளென்னக்கடவதிறே) என்றது - குமைத்திட்ட ப்ரகாரங்களென்றபடி. "புடைக்கு" ப்ரஹார

(க) பெரியதிருவந்தாதி-௩௮. (உ) திருமொழி-ரு-௩-௭.

வ்யா|| குறுங்கயிற்றாற் கட்ட வெட்டென்றிருந்தவனிறே. (எம்மானை) கட்டுண்டு அடியுண்டு கண்ணுங்கண்ணீருமாயுடம்பு வெளுத்திருந்த விருப்பைக்காட்டி என்னை அநந்யார்ஹமாக வெழுதிக்கொண்டவனை. (க)*பையபையவேநிலையிறே யீடழிப்பது. (என்சொல்லிப்புலம்புவனே) இப்போதாசைப் பட்டுப்பெறாமையாலே புலம்பவேண்டாநின்றது ; முன்புசெய்துவைத்ததொருகுறையில்லாதபடியாலேசொல்லுகைக் கொரு பாசுரம்காண்கிறிலேன். நாமிப்போது பெறுதொழிகிறது-நம் முடைய க்ரமப்ராப்திபற்றாமையென்றித்தலையிலே வாங்கலாயிருந் தது. அங்ஙனுஞ்சொல்லலாவதொன்றில்லையிறே யத்தலைக்கு. அகூ.

அரு|| த்துக்கு.-''அலந்தானை''-து:கப்பட்டிருக்கிறவனை, என்சொல்லிப்புலம்பு வனே, (உ) ''மமைவ துஷ்க்ருதம் கிஞ்சித்'' - மமைவ துஷ்க்ருதம் கிஞ்சித் '' என்கிறபடியே என்னுடைய ஆற்றாமையாலே கூப்பிடுகிறேனித்தனையொ ழிய அவனுக்கென்ன குறையைச்சொல்லிக் கூப்பிடுகிறேனென்றபடி. அடைவேயந்வயம்.

அகூ.

[அப்பு அரும்பதம.]

எண்பத்தாறும்பாட்டு.—(அடைக்கலத்தோங்கு) விஶ்லேஷதசையிலே கொண்டாடுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (எத்தனையேனும்) இத்யாதி. ப்ரஹ்மாவுக்கு து:கத்தைப்போக்குகை.-அங்கஹீநன்என்று தள்ளி வையாதே ப்ரஹ்மபட்டத்துக்கர்ஹனாக்குகை. பூதிகந்தம்- துர்க்கந்தம். கருவி- ஆயுதம். படைக்கலம்—படையாகிற ஆபரணம். ஸ்நேஹம் - வெண்ணெய். இப்படி திரளாகவடிபட்டாருண்டோவென்ன வருளிச்செய்கிறார் (இடைச்சி) இத்யாதி. ''அலந்தான்'' அலமாக்கையாதல், அலறுகையாதல். ''எம்மானை யென்சொல்லி'' என்று கூட்டியருளிச்செய்கிறார் (நாமிப்போது) இத்யாதி. (வாங்கலாய்) கைவாங்கலாய்.

அகூ.

[வேறொரு அரும்பதம்.]

எண்பத்தாறும்பாட்டு.—(அடைக்கலம்) இத்யாதி. கீழ்ப்பாட்டு நாயிகா வார்த்தையாகில் குணஜ்ஞாநத்தாலே அவனைக்குறை சொல்லாதே தன்னிலே நொந்துகொள்ளுகிறாளென்று. திருத்தாயார்வார்த்தையானபோது, அவர்தா மும்அவன் குணங்களை ஆராய்ந்து குற்றஞ்சொல்ல வழிகாணமல் தடுமாறுகிறா ரென்று ஸங்கதியுட்கொண்டு, விஶ்லேஷித்திருக்கும்போது குணங்களை குணங்களாக இப்படி சொல்லலாமோ வென்னும் சங்கையைப் பரிஹரிக்கிறார் (எத்தனை) இத்யாதி. அயனை ''அடைக்கலத்தோங்கு'' என்று விசேஷிப்பா னென்னென்ன (ஸர்வேஶ்வரன்) இத்யாதி. மீளவும், ''கமலத்தலர்'' என்பா னென்னென்ன வருளிச்செய்கிறார். (நிக்ஷேபம்) இத்யாதி. ''அயன்'' அஜனெ ன்றாய், இப்படி விசேஷிக்கையாலே யோநிஜந்மாவன்றென்று தோற்றுகை யாலே பலிதமருளிச்செய்கிறார் (அவ்வளவு) இத்யாதி. அரனுக்குள்ள து:கத்தைநீக்கினது உபலக்ஷணமாக்கி அயனுக்குநீக்கினது விவக்ஷிதமென்று

(க) திருவாய். ரு-க0-ரு. (உ) ஸ்ரீராமா. ஸுந்தர-ருஅ-சஎ;

பாவமருளிச்செய்கிறார் (லோக) இத்யாதி. அங்கஹீநன் அதிகாரத்துக் கர்ஹனன்றென்று தள்ளிவிடாதே அவன் துஃகத்தைப்போக்கினபடி யென்று திருவுள்ளம்.பூதிகந்தம் - துர்க்கந்தம் "அதிலே" என்றதுக்குக்கருத்து (ஸம்ஹர்த்தா) இத்யாதி. "நீக்கிய" என்று.இத்தையே ஸ்வபாவமாகவுடையவனென்று நிரூபகமாகச் சொன்னதுக்கு,இப்படிப்பட்ட துஃகங்களைப்போக்கிக்கொண்டே யிருப்பனென்று பலிதமாகையாலேயத்தை அருளிச்செய்கிறார் (இத்தால்) இத்யாதி வாக்யசதுஷ்டயத்தாலே. கருவி-ஆயுதம். "கலம்" என்றதுக்கு சப்தார்த்தம் தோற்றவருளிச்செய்கிறார் (திருவாழி) இத்யாதி. கீழ்வாக்யவிவரணம் ப்ரஹ்மாதி) இத்யாதி. திருத்தாயார் வார்த்தையானபோது "அன்று" என்றதக்குபாவமருளிச்செய்து, நாயிகைவார்த்தையான போதைக்குச்சேர வருளிச்செய்கிறார் (தானே) இத்யாதி. பஹுவசநதாத்பர்யம் (உரவிய) இத்யாதி. (ஸ்நேஹம்)-வெண்ணெயென்று சாடு. இதுக்கு-புடைக்கு, அடிக் கைக்கென்றபடி. (வாங்கலாய்)-கைவாங்கலாய். அசா.

தாத்பர்யம்.—இதில், ஸர்வேஶ்வரன் நம்மைரக்ஷிக்கைக்காக அவதரித்த போது அவனுடையரக்ஷணத்துக்ககப்படாமலொதுங்கியிருந்து இப்போதுகிடந்துவருந்துவது அவன்குற்றமன்று; நம்முடைய பாபவிசேஷமேயென்று தம்மை வெறுக்கிறார்.

உனக்குப்புத்ரனாய் ரக்ஷ்யனாயிருக்கிற ப்ரஹ்மாவின் தலையையறுத்துப்பாதகியானருத்ரன்கையில் அந்தத்தலையொட்டிக்கொள்ள, அந்த துர்க்கந்தமான தலையிலேயே பிக்ஷையெடுத்துண்டு திரிந்த ருத்ரனுடைய அந்தப்ரஹ்மஹத்தியைப்போக்கியும், அங்கஹீநனை ப்ரஹ்மாவை அதிகாரத்தில் நின்றும் தள்ளிவிடாமல் வைத்தும் இப்படி ஈஶ்வராபிமானிகளானவர்களுக்கும் ரக்ஷகனாய் ரக்ஷணபரிகரங்களான திவ்யாயுதங்களையுடைய நீ க்ருஷ்ணனாயவதரித்து இடைச்சேரியில் வெண்ணெயைக்களவுசெய்ய, அந்த அபவாதத்தைப் பொறாத தாயானயசோதை உன்னிடத்தில் பரிவினால் தன்கைக்கெட்டின கயிறுகளையெடுத்து உன்னையடிக்க, அதைத்தப்பிப்போகமாட்டாமல் அலைந்து அழுது அந்தஸௌலப்யத்திலென்னை யீடுபடுத்தின உன்னை அப்போது ஸேவிக்கப்பெறாமலிருந்துவிட்டு இப்போதாகக்கிடந்தலைந்தால் இதற்குன்மேலென்ன குற்றமுண்டு ? அசா.

---

புலம்புங்கனைகுரல் பொழ்வாயவன்றிலும், பூங்கழிபாய்ந்
தலம்பும் * கனைகுரல்சூழ்திரையாழியும், ஆங்கவனின்
வலம்புள்ளது நலம்பாடு மிதுகுற்றமாகவையம்
சிலம்பும்படி செய்வதே, திருமாலித்திருவினையே. அஎ.

அர்த்தம்.—திருமால் - ஶ்ரிய:பதியே! நின் - உனக்குவாஹநமாய், வலம் - பலத்தையுடைய, புள்ளது - பெரியதிருவடியினுடைய, நலம் - கல்யாணகுணங்களை, பாடும் இது - கீர்த்தநம்பண்ணுகையாகிற இத்தை, குற்றமாக - தப்

* (பா) கனைகுரல்.

பாக (வ்யாஜமாகக்கொண்டு), இத்திருவினை - இந்த லக்ஷ்மியை, கனை குரல் - அநக்ஷரமான சப்தத்தினால், புலம்பும் - அழாநின்றதாய், போழ் - (விரஹிணிகளைப்)பிளக்கிற (பாதிக்கிற), வாய் - வாயையுடையதான, அன்றிலும் - அன்றில்பக்ஷியும், பூ - அழகிய, கழி - கழியில், பாய்ந்து, ப்ரவஹித்து, அலம்பும் - அலையாநின்றதாய், கனம் - கனத்த, குரல் - சப்தத்தையுடையதாய், சூழ் - பரந்த, திரை - அலைகளையுடைய, ஆழியும் - ஸமுத்ரமும், ஆங்கு அனைவை - ஆகிய அப்படிப்பட்ட பாதகவஸ்துக்களினாலே, (இவளை வருத்தி), வையம் - லோகமெல்லாம், சிலம்பும்படி - கோஷிக்கும்படி, செய்வதே - பண்ணுவதே! அஎ.

## பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம்.

அவ.—எண்பத்தேழாம்பாட்டு.—"உன்னைப் பிரிந்தவளவிலே பாதகபதார்த்தங்களிவளை நலிந்து ஈடுபட்டது கண்டு லோகமாகக் கூப்பிடும்படி பண்ணுவதே!" என்று திருத்தாயார் வார்த்தையாயிருக்கிறது.

வ்யா.—(புலம்புங்கனைகுரல்) பலவற்றைச் சொல்லிக்கூப்பிடுவதாய், செறிந்தத்வநியையுடைத்தாய், உன்னைக்கூடிப்பிரிந்து தனியிருப்பாரை இருதுண்டமாக விடுகிறவாயையுடையவன்றிலும். (பூங்கழியித்யாதி) அழகிய கழியிலே வரப்பாயாநிற்பதாய், அலையெறியாநிற்பதாய், ஊமைக்கூறனை த்வநியையுடைத்தாய், பரந்ததிரைகளையுடையகடலும். (ஆங்கவை) பிரிந்திருப்பார்க்கு மற்றும் பாதகமான சேக்கள் கழுத்தில் மணியோசையென்ன, சந்த்ரோதயமென்ன, தென்றலென்ன, இப்படிப்பட்ட பாதகங்களைச் சொல்லிற்றாகல்; அன்றிக்கே, கீழ்ச்சொன்னவை தன்னையே சொல்லிற்றாதல், இவை பாதகமாகாநின்றன. என்ன குற்றஞ் செய்தாளென்று பாதகமாகிறதென்ன, (நின்வலம்புள்ளித்யாதி) உனக்கஸாதாரணமாய் பலத்தையுடைத்தாய். (க) "గరుడో వారణం ఛత్రం తథైవ మణిపర్వతమ్ | సభార్యం చ హృషీకేశం లీలయైవ వహన్ యయౌ - கருடோவாரணம் சத்ரம் ததைவமணிபர்வதம் | ஸபார்யஞ்சஹ்ருஷீகேசம் லீலயைவ வஹந்யயௌ" என்கிறபடியே தாரணஸாமர்த்யத்தையுடையனை திருவடியுடைய நலமுண்டு-நன்மை, அத்தைப்பாடினது குற்றமாக (உ) "త్వదంఘ్రి సంమర్దకిణాఙ్క శోభినా - த்வதங்க்ரி ஸம்மர்தகிணாங்கசோபிநா"

---

அரு॥ எண்பத்தேழாம்பாட்டு —(புலம்பும்) "கனைகுரல்" - கனைத்தகுரலையுடைத்தாய்க்கொண்டு, புலம்புகிறதாய், "போழ்" - பிரிந்தாரை இருதுண்டமாகவிடுகிற, "வாய்" - வாயையுடையவன்றிலும், "ஆங்கவை" - ஆந்தவவை, நலம்பாடுகை யாவதென்னென்ன அருளிச்செய்கிறார் (த்வதங்க்ரிஸம்மர்த்த)

---

(க)   (உ) ஸ்தோத்ர ரத்நம்.

வ்யா॥ என்கிறபடியே அவனுக்கடிமைசெய்து அவன்தழும்புசுமந்தா ற்போலே ஸம்ஶ்லேஷசிஹ்நங்களைத் தரிக்கவேணுமென்றாசைப்பட்டு அவனைப்பாடினவிது குற்றமாக (வையம்சிலம்பும்படி செய்வதே) சிறியார் பெரியாரென்று வாசியின்றிக்கே இருந்ததே குடியாகக்கை யெடுத்துப்பழிசொல்லும்படி பண்ணுவதே! (திருமால்) நீர்தாம் ப்ரணயிகளஸ்லீராய்த் தானிப்படி செய்கிறீரோ? (இத்திருவினையே) உம்மை யாசைப்பட்டவளில் குறைந்தாளோ? அவளோடுகூடினஉம் மையாசைப்பட்டவள், ராவணாதிகள் பெருமாளைப்பழிசொல்ல ராக்ஷஸிகள் தன்னை நெருக்கவிருந்தவளைப்போலே யிருக்கவல்லளோ? இவள். அன்றில், கடலோசை தொடக்கமானவை இவளோடலிய அத்தாலே இவள் நோவுபடாநின்றாளென்று நாட்டார் பழிசொல்ல நீர் விட்டுவைப்பதே! உம்முடைய மஹிஷீநோவுபடப் பார்த்திருக்கை உமக்குக்குறையன்றோ? வென்றபடி.

ஸ்வாபதேசம் —இத்தால், "அத்தலையாலே வரக்கண்டாறியிருக்கையன்றி இவர்க்ரமப்ராப்திபற்றாமை பதறிமேல்விழ நீர்தாழ்த்திராவது உமக்குக்குறையன்றோ?" வென்று இவர்தசையையநுஸந்தித்தவர்பாசுரமா யிருக்கிறது (க) "ந மே பக்த: ப்ரணஶ்யதி- நமேபக்த:ப்ரணஶ்யதி" இவைமறந்தீரோ வென்கிறார்கள்.                                    அஎ.

அரு॥ என்று. [வலம்புள்ளது நலம்பாடுமிது குற்றமாக, கனைகுரல்புலம்பும், போழ்வாயவன்றிலும், பூங்கழிபாய்ந்தலம்புங்கனை குரல் சூழ்திரையாழியும் ஆங்கவற்றிலேநோயும்படிபண்ணித்திருமாலித்திருவினைவையஞ் சிலம்பும்படிசெய்வதே] என்றந்வயம் "ஆங்கவை" பாதகபதார்த்தங்களாலே என்னுதல்-அன்றிலுங் கடலுமாகிற அவற்றாலே என்னுதல். "ஆழி" - ஸமுத்ரம். "க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா ஶஶ்வச்சாந்திம் நிகச்சதி । கௌந்தேய ப்ரதிஜாநீஹி ந மே பக்த: ப்ரணஶ்யதி"- க்ஷிப்ரம்பவதிதர்மாத்மாசஶ்வச்சாந்திம்நியச்சதி|கௌந்தேய ப்ரதிஜாநீஹி நமேபக்த: ப்ரணஶ்யதி."                                    அஎ.

[அப்பு அரும்பதம்.]

எண்பத்தேழாம்பாட்டு.—(புலம்பும்) புலம்பாநின்ற கனைகுரலாலே விரஹிணிகளைப் போழாநிற்கிறவாயையுடைய அன்றிலு மென்று சப்தார்த்தம். அவளிவிவளுக்கு வ்யாவ்ருத்தியேதென்ன வருளிச்செய்கிறார் (ராவணாதிகள்) இத்யாதி. அவள்பழி சொல்ல ஸஹிப்பள், இவள் அதுக்கொட்டாளென்றபடி. இது குற்றமாகத் திருமாலித்திருவினைவையம் சிலம்பும்படி செய்வதே என்றுக்ரியை.                                    அஎ.

[வேறொரு அரும்பதம்.]

எண்பத்தேழாம்பாட்டு.—(புலம்பும்) இத்யாதி. புலம்பாநிற்பதாய் - ப்ரலாபியாநிற்பதாய், கனை - அவர்ணாத்மகமான, குரலாலே, விரஹிணிகளைப் போழாநிற்பதான வாயையுடைய வென்று சப்தார்த்தமாய், தாத்பர்யமருளி

ச்செய்கிறார் (உன்னை) இத்யாதி. அலம்புதல் - அலைதலாய், அதுக்கர்த்தம் (அலையெறியா நிற்பதாய்); அலையாநிற்பதா யென்றபடி மேலுக்கவதாரிகை (என்ன) இத்யாதி. ''பலத்தையுடைத்தாய்'' என்றத்தை ப்ரமாண பூர்வகம் விவரிக்கிறார் (கருடோவாருணம்) இத்யாதி. ப்ரக்ருதோபயோகம் (த்வ தங்க்ரி) இத்யாதி. 'இத்திரு'' என்றவிடத்தில் இதம்சப்தத்துக்குப்போர (உம்மை) இத்யாதி. இதம் சப்தத்துக்குத் தாத்பர்யம் (ராவணோதி) இத்யாதி. பாட்டுக்குத் தொகுத்தபாவமருளிச்செய்கிறார் (அன்றில்) இத்யாதி வாக்யத்வயத்தாலே. அஎ.

தாத்பர்யம்.—இதில், லௌகிக பதார்த்தங்கள் ஸ்மாரகமாய் பாதிக்கிற படியைக்கண்டு ஸஹ்ருதத்துக்கஹுரைத்த பாசுரத்தைக் கடலோசைமுதலிய உத்போதகபதார்த்தங்களினால் வருந்தும் நாயகியைக்கண்டு க்லேசிக்கிற திருத்தாயார் வார்த்தையாலே யருளிச்செய்கிறார்.

ஓஶ்ரியஃபதீ! பரமரஸிகனான உன்னுடன் ஸம்ஶ்லேஷித்து அந்தஸம்ஶ்லேஷசிஹ்நங்களைத் தான் தரிக்கவேணுமென்றாசைப்பட்டு மஹாலக்ஷ்மிபோன்ற இப்பெண்ணானவள், உனக்குவாஹநமாய்,உன்னை எழுந்தருளப்பண்ணும்போது உன்னுடைய திருவடிரேகைகள் படிந்து விளங்குகிற பெரிய திருவடியின் கல்யாண குணங்களைச்சொல்லி கீர்த்தநம் பண்ணினாள். இவளும் அப்பெரிய திருவடிபோலவே உன்னுடைய ஸம்ஶ்லேஷத்தினாலுண்டான ரேகைகளைப்பெறவேண்டும்படி நீ வந்துதவாமையால் இவள் மிகவும் மார்த்தையானாள். அதற்குமேல் விரஹிணிகளுக்கு பாதகங்களான அநக்ஷரமான அன்றிலின் குரலும், கழிகளெங்கும் நிறையும்படி யலையெறிந்துகோஷிக்கிற ஸமுத்ரகோஷமும் இவளைகலிய, இந்த வாசாமகோசரமான அவஸ்த்தையைக்கண்டு லோகமெல்லாம் ஐயோ! என்று வருந்தி கோஷியா நின்றது. இவளை நீ இப்படிவிட்டு வைப்பது உனக்குத்தகுமா? என்று நாயகனான ஸர்வேஶ்வரனைப் பார்த்துச்சொல்லுகிறாள். அஎ

திருமாலுருவொக்கும்மேரு, அம்மேருவில்செஞ்சுடரோன்
திருமால் திருக்கைத் திருச்சக்கரமொக்கும், அன்னகண்டும்
திருமாலுருவோடவன் சின்னமேபிதற்றாநிற்பதோர்
திருமால்தலைக்கொண்ட நங்கட்கு, எங்கேவருந்தீவினையே.

அர்த்தம்.—மேரு-மேருபர்வதமானது, திருமால் - ஶ்ரியஃபதியினுடைய, உருவு - திருமேனியோடு, ஒக்கும் - ஸத்ருசமாயிருக்கும். அம்மேருவில் - அந்தமேருபர்வதத்தினுச்சியிலிருக்கிற, செம் - சிவந்த, சுடரோன் - கிரணங்களையுடைய ஸூர்யனானவன், திருமால் - ஶ்ரியஃபதியினுடைய, திருக்கை - ஶ்ரீஹஸ்தத்திலிருக்கிற, திருச்சக்கரம் - ஶ்ரீஸுதர்சனாழ்வானோடு, ஒக்கும் - ஸத்ருசமாயிருக்கும். அன்னகண்டும் - அப்படி ஸர்வேஶ்வரனுடைய திருமேனியோடும் திவ்யாயுதத்தோடும் ஸத்ருசமான வஸ்துக்களைக்கண்டிருக்கச்செய்தேயும்,திருமால்-ஶ்ரியஃபதியினுடைய,உருவோடு-திருமேனியோடுகூட,

அவன் - அவனுடைய, சின்னமே - திவ்யாயுதங்களேயே, (காணவேணுமென்று), பிதற்றுகிற்பது - கூப்பிடுகையாகிற, ஓர் - விலக்ஷணமாய், திரு - ச்லாக்யமான, மால் - வ்யாமோஹம், தலைக்கொண்ட, அதிகரித்த (த்ருடமாயிருக்கிற), நங்கட்கு - நமக்கு, தீவினை - கொடியபாபம், எங்கேவரும் - எவ்விதமாகநேரிடும்! அ அ.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—எண்பத்தெட்டாம்பாட்டு,—இப்படிநாடு பழிசொல்லாநிற்கச்செய்தே, இத்தைச்சொல்லிப் பழிசொல்லும்படியாகப்பெற்ற நமக்கினியொரு குறையுண்டோ? வென்கிறாள். இப்பாட்டிற் சொல்லுகிற தென்னென்னில். ஸர்வதாஸத்ருசமாயிருப்பதொரு வஸ்துவில்லாதபடியிருக்கிற ஸர்வேஸ்வரன் திருமேனிக்குச் சேர்ந்திருப்பதோருபமானத்தைக்கண்டால், "உபமாநரஹிதமாயிருப்பதொரு வஸ்துவுக்குக் கதிர்பொறுக்கி யாகிலுமிங்ஙனே யோருபமாநமுண்டாகப்பெற்றோம்" என்று இது ஆஸ்வாஸஹேதுவாகையன்றிக்கே "அவ்வுபமேயந்தன்னையே காணவேணும்" என்னும்படியான விடாயையுடைய நமக்கினியொருகுறையுண்டோ? வென்றதாதல்; அன்றிக்கே, அவனுடைய ஜகதாகாரதையை யநுஸந்தித்தால் அவ்வளவில் பர்யவஸியாதே "அவனுடைய அஸாதாரணவிக்ரஹத்தைக்காணவேணும்" என்னுமபேக்ஷை பிறக்கும்படியானவெனக்கொரு குறையுண்டோ? வென்னுதல்.

வ்யா.—(திருமாலுருவொக்கும்மேரு) ஸ்ரியஃபதியுடைய வடிவோடொத்திராநின்றது, மேருவானது, வளர்த்தியாலும் புகராலும். (அம்மேருவித்யாதி) அம்மேருவிலே ஸஞ்சரியாநிற்கிற ஆதித்யனானவன். (திருமால் திருக்கைத் திருச்சக்கரமொக்கும்) (க) "வடிவார்சோதிவலத்துறையுஞ் சுடராழியும்" என்கிறபடியே அவன் கையில் திருவாழியைப்போலே யிருக்கும். (அன்னகண்டும்) இப்படியேயவனுக்குப் போலியானவற்றைக்கண்டு வைத்தும். (திருமாலித்யாதி)ஸ்ரியஃபதியுடைய அந்தமேருவோடொத்த திருமேனியையும்,

அரு || எண்பத்தெட்டாம்பாட்டு (திருமாலுரு) ஸர்வேஸ்வரன் திருமேனிக்கு த்ருஷ்டாந்தமாயிருக்கிறவாகாரத்தை யநுபவித்து அதில் த்ருப்திபிறவாமையாலே அஸாதாரணமான விக்ரஹத்தையும் அவர் சிஹ்நங்களேயுமநுபவிக்கவாசைப்பட்ட நமக்குத்தீவினை எங்கேவருமென்னுதல்; அதவா-ஸர்வேஸ்வரனுக்குத் திருமேனிபோலே, நியாம்யமாய், தார்யமாய், சேஷமாயிருக்கையாலே மேருமுதலானவை அவனுக்குச்சரீரமாயிருக்கிற வாகாரத்தையநுஸந்தித்து அதில் த்ருப்திபிறவாமையாலே அஸாதாரணவிக்ரஹத்தை யநுபவிக்கவாசைப்பட்ட நமக்கெங்கேவருந்தீவினை யென்னுதல். இந்த வர்த்தத்

(க) திருப்பல்லாண்டு. உ.

வ்யா|| (௧) "வலக்கையாழியிடக்கைச்சங்கம்" என்கிறபடியே, அஸாதாரண சிஹ்நத்தையுங் காணவேணுமென்றாசைப்பட்டுப் பிதற்றாநின்றாள்.

அன்றிக்கே, (திருமாலுருவொக்கு மித்யாதி) ஸர்வேஶ்வரன் திருமேனியோடொத்திருந்தது மேரு; அதிலே ஸஞ்சரிக்கிற ஆதித்யன் அவன்கையில்திருவாழியோடொத்திருந்தான்; இவை இரண்டும் ஜகதாகாரதைக்குபலக்ஷணமாயிருக்கிறது. (அன்னகண்டும) ப்ருதக்ஸ்த்தித்யநர்ஹாதாராதேயபாவநியந்த்ரு நியாம்யபாவ சேஷசேஷிபாவாதிகளாலே இவ்வயவனுக்குச்சரீரமா யிருக்கிறபடியைக்கண்டுவைத்தும். (திருமாலித்யாதி) இப்படி ஜகதாகாரனாயிருக்கிறவளவில்பர்யவஸியாதே யவனுடைய அஸாதாரணமான ரூபத்தையும் அஸாதாரணமான சிஹ்நங்களையுங் காணவேணுமென்றாசைப்பட்டுக் கூப்பிடும்படி. (திருமால்) அடிக்கழஞ்சுபெற்றபிச்சு. (௨) "निदिध्यासितव्यः- நிதித்யாஸிதவ்ய:" என்று விதேயமானது தானிவர்க்கு ப்ராக்ருதியாயிற்று, (தலைக்கொண்ட) தலைக்கொள்கையாவது- "சிலர் பழிசொன்னார்கள்" என்று மீளாதபடி முறுகுகொளுந்துகை. (நங்கட்கித்யாதி) இப்படி பகவத்விஷயத்திலே யவகாஹித்த நம்மை (௩) "अवश्यमनुभोक्तव्यम्- அவஶ்யமநுபோக்தவ்யம்" என்கிறவசநத்தைக்கொண்டு நங்கர்மம் நம்மைவடிம்பிடவற்றோ? வென்கிறார்.

அரு|| துக்குத்திருமாலுடைய திருமேனிபோலே மேருவும் சரீரமாயிருக்கும் திருவாழிபோலே ஸூர்யனும் சரீரவத்விதேயனாயிருக்குமென்றபடி. (திருமால் தலைக்கொண்ட) திருமாலென்று-வ்யாமோஹமாய், வ்யாமோஹமானது தலைக்கொண்ட- அதிசயித்த. (முறுகுகொளுத்துகை) என்றது-வய்ரம் பற்றினதென்றபடி. முறுகு-வயிரம். நெருப்பானது வயிரத்தில் பற்றினால் அவிக்கப்போகாதாப்போலே ஒருத்தராலும் மீட்கப்போகாதென்றபடி. அடைவே அந்வயம். அஅ.

[அப்பு அரும்பதம்.]

எண்பத்தெட்டாம்பாட்டு.—(திருமால்) "தீவினை" பொல்லாங்காதல், பாபமாதல். முந்தினதிலே அவதாரிகை யருளிச்செய்கிறார் (இப்படி நாடு) இத்யாதி. (இத்தை) பகவத்ப்ராவண்யத்தை. "உருவொக்கும்"-உருவோடே ஸத்ருசமென்னுதல்; உருத்தானென்னுதல். இவற்றை வாக்யத்வயத்தாலே யருளிச்செய்கிறார் (ஸர்வதாஸத்ருசம்) இத்யாதி. "திருமால்"-அழகியபிச்சு, பக்தியென்றபடி. அஅ.

[வேறொரு அரும்பதம்.]

எண்பத்தெட்டாம்பாட்டு.—(திருமால்) இத்யாதி. "திருமால் தலைக்கொண்ட நங்கட்கெங்கே வருந்தீவினை" என்றத்தைக் கடாக்ஷித்து ஸங்கதி

(௧) திருவாய் ௯-௪-௯. (௨) ப்ருஹதாரண்யம் ௪-௪-௫.
(௩)

அருளிச்செய்கிறார் (இப்படி) இத்யாதி. "இத்தை" என்றது-நாடெழில் சொல்லும்படியான பகவத்ப்ராவண்யத்தை என்றபடி. "திருமால் தலைக்கொண்ட" இத்யாதியே யமைந்திருக்க, மூன்றடியாலுஞ் சொல்லுமது ஏதுக்கென்னும் சங்கையையநுவதித்து,இரண்டுவகையாக வருளிச்செய்கிறார் (இப்பாட்டில்) இத்யாதி. (சேர்ந்திருப்பது) என்றது-ஒருபடி சேர்ந்திருப்பதென்றபடி. (குறையுண்டோ) என்றது-"தீவினை" என்று சொல்லப்பட்ட கர்மமில்லாமையாலே ஒரு குற்றமுமில்லையென்றபடி. இந்த பிச்சுபக்தியன்றோ?அது ஸாதநமானால் அடிக்கழஞ்சுபெற்றபடி யென்னென்னவருளிச்செய்கிறார் (நிதித்யாஸிதவ்ய:) இத்யாதி. ப்ரக்ருதி-ஸ்வபாவம். ஸ்வரூபாந்தர்க்கத மென்றபடி. மூறுகுகொளுந்துகை-த்ருடமாகை. (அஅ)

தாத்பர்யம்.—இதில், ஸர்வேஶ்வரனோடு போலியான மேருமுதலிய வஸ்துக்களைக்கண்டும் அவ்வளவிலே த்ருப்திபிறவாமல், அவனையே காண வேணுமென்கிற அபிநிவேசத்தையுடைய நமக்கு இனியொருகுறையும் நேரிடாதென்கிறார்.

ஸர்வேஶ்வரனுடைய திருமேனிக்கு ஸர்வப்ரகாரத்தாலும் ஸாம்யமுள்ள வஸ்து ஒன்றுமேகிடையாது. ஆயினும் ஆராயுமிடத்தில், இவ்வுலகினில் தனக்கு மேலொன்றில்லை யென்னும்படி மஹத்தாயுள்ள மேருபர்வதமே அவனுடைய திருமேனியைப்போல் மிக உந்நதமாய்ப் புகழ்பெற்றுக்காண்கிறது. அவன் வலது திருக்கையிலேந்திய திருவாழிக்கு, அம்மேருசிகரத்தில் ஸஞ்சரிக்கிற ஸஹஸ்ரகிரணனை த்ருஷ்டாந்தமாகச் சொல்லில் சொல்லலாம். இப்படி நிருபமாநமான அத்திருமேனிக்கு ஸத்ருசவஸ்துவை ஆராயுமிடத்தில் ஏதோஒருவிதமாக இவ்வளவாகிலும் ஸத்ருசமான வஸ்துவைக்கண்டோமே யென்று த்ருப்தியடைய வேண்டியிருக்க, நம்முடைய ஆசைக்குத்தக்கபடி இவை ஸர்வேஶ்வரனோடு ஸத்ருசமாகாமையாலும், ஸர்வதா ஸத்ருசமான வஸ்த்வந்தரமில்லாமையாலும் அவனையே காணவேணுமென்று உறுதிப்பட்டு நின்ற இவ்வபிநிவேசம் நமக்குப்பிறந்தபின்பு பலப்ராப்தியில் எவ்விதமான குறையும் நேரிடாதென்று நிஶ்சயித்து ஹ்ருஷ்டரானார்.

---

தீவினைக்கரு நஞ்சைநல்வினைக்கின்னமுதத்தினைப்,
பூவினைமேவிய தேவிமணாளனைப், புன்மையெள்கா
தாவினைமேய்க்கும் வல்லாயனையன்றுலகீரடியால்
தாவினவேற்றையெம்மானை,எஞ்ஞான்றுதலைப்பெய்வனே. அகூ

அர்த்தம்.—தீ- கொடிய, வினைக்கு-(ஆஶ்ரிதருடைய)பாபத்துக்கு, அரு- அபூர்வமான, நஞ்சை - விஷம்போன்றவனாய், நல்வினைக்கு - ஸத்கர்மத்துக்கு, இன் - இனிய, அமுதத்தினை - அம்ருதம்போன்றவனாய், பூவினை - தாமரைப்பூவை, மேவிய - பொருந்திவாஸம்செய்கிற, தேவி - பெரிய பிராட்டிக்கு, மணாளனை - வல்லபனாய், புன்மை - தாழ்ந்த செயல் (என்று),

என்காது - இகழாமல், ஆவினை - பசுக்களை, மேய்க்கும் - மேய்க்கிற, வல் - ச்ரேஷ்ட்டனை, ஆயனை - இடையனாகிய க்ருஷ்ணனாய், அன்று - மஹாபலிகாலத்தில், உலகு - லோகங்களை, ஈரடியால் - இரண்டடிகளினால், தாவின - ஆக்ரமித்த, ஏற்றை - ச்ரேஷ்ட்டனாய், எம்மானை - எனக்கு ஸ்வாமியான ஸர்வேச்வரனை, என்றோன்று - எப்போது, தலைப்பெய்வன் - கிட்டுவேன்? அகூ.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—எண்பத்தொன்பதாம்பாட்டு.—ஸம்ஸாரிகளிற் காட்டில் வ்யாவ்ருத்தராகப் பெற்றோம்; இனியவனைப்பெற்றநுபவிக்கிறவர்களோடு நாம்ஸஜாதீயராகப் பெறுவதென்றோ? வென்கிறார்.

வ்யா.—(தீவினைக் கருநஞ்சை) பகவத்ப்ராப்திக்கு ப்ரதிபந்தகமான து்ஷ்கர்மங்களுக் காற்றவொண்ணாத நஞ்சாயுள்ளவனை. (நல்வினைக்கு) பலாபிஸந்திரஹிதமான கர்மத்தைப் பரிகரமாகவுடைய பக்திக்கு. (இன்னமுதத்தினை) நிரதிசயபோக்யனாய், பரமப்ராப்யனாயுள்ளவனை. இப்படி பாபங்களைப் போக்குகைக்கும் தன் பக்கல் ருசிஜநகனாகைக்குமடி யென்னென்ன, (பூவினைமேவியவித்யாதி) பிராட்டியோட்டைச்சேர்த்தியாலே. பெரியபிராட்டியார்க்கு வல்லபனாகைக்கு மேற்படவில்லையிறே மேன்மைக்கு. (புன்மையித்யாதி) அம்மேன்மையுடைய னாயிருக்கச்செய்தே, அவளோட்டைச் சேர்த்தியாலே யாச்ரிதர்க்கு ஸுலபனாயுள்ளவனை. (புன்மையென்காதாவினைமேய்க்கும்) ச்ரிய:பதியான தன்மேன்மைக்கிதுபோருமோ? இது புல்லிதென்றிகழாதே பசுக்களை மேய்க்குமாயிற்று. (வல்லாயனை) மற்றும் பசுமேய்ப்பாருடம்பிலே தூளி நீரேறிட்டுக் கொள்ளிலும் அதுக்கு மவஸரமில்லாதபடி யிருக்குமவனை. (அன்றுலகித்யாதி) ஒருநாளை ரக்ஷித்தாற்போலே இப்பூமியாக ரக்ஷிக்குமவனை. (ஏற்றை) லோகத்தையடையத் தன்திருவடிகளின் கீழேயிட்டுக் கொள்ளப்பெற்றபடியாலே மேனாணித்திருக்கிறவனை. இத்தால் வந்த பலமும் தன்னதாயிருந்தபடி. (எம்மானை) அவன்வெற்றியாலே மேனாணித்திருக்கவல்லாரைப்போலேயாயிற்று இவர் அவன் செயலுக்குத் தோற்கவல்லபடி. (என்றோன்று தலைப்பெய்வனே) அவன் படிகளிவையான பின்பு, நாளிழவல்லது பொருளிழவில்லையிறே.

அரு|| எண்பத்தொன்பதாம்பாட்டு.—(தீவினை) "புன்மையென்காது" பசுக்களை மேய்க்கை க்ஷுத்ரமென்று என்காது - விடாதே என்றபடி. வன்மையாவதேதென்ன அருளிச்செய்கிறார் (மற்றும்பசுமேய்ப்பார்) என்று. (நாளிழவல்லது பொருளிழவில்லை) என்றது - ஒருவன் ஒருத்தனுக்குக் கடன்

வ்யா|| அப்பேறுபெறும் நாளென்றோ? வென்கிறார்; (க) "ஶ்ரீதா ஸீஸ்ஸ்வாஸ்ஸ்ய தூமி - அபிநாமீம் ஸகாலஸ்ஸ்யாத்" பதினாலாண்டுங்கழி ந்தால் வரக்கடவதிறே. அந்நாளின்றாகப் பெறுவது காணென்றாற் போலே. ௮௯.

அரு|| கொடுத்தால் கொடுத்தவன் பணங்கேட்டால், நாலுநாள் தாமஸ மொழியப் பணங்கொடுக்கிறதுக்குக் கண்ணழிவில்லையென்று சொல்லுமா போலே, இங்கு நாலுநாள் காலவிலம்பமொழியப்பலத்திலே கண்ணழிவில்லை யிறே. ஆகையாலே "அந்நாளெந்நாள்" என்று கேட்கிறாரென்றபடி. நாளை உத்தேச்யமாகக் கேட்கையாலே அந்நாளின்றாகாதோ என்கிறார் (அபீ தாநீம்) என்று. ௮௯.

## அப்பு அரும்பதம்.

எண்பத்தொன்பதாம்பாட்டு.—(தீவினை) (ஆற்றவொண்ணாத)- பொறுக்க வொண்ணாத. "எஞ்ஞான்று" என்றதுக்குக்கருத்து-இன்றுதானாகவொண்ணா தோ வென்றபடி. இப்படி சொன்னவிடமுண்டோ வென்னை வருளிச்செய்கி றார் (அபீதாநீம்) இத்யாதி. ௮௯.

## வேறொரு அரும்பதம்,

எண்பத்தொன்பதாம்பாட்டு.—(தீவினை) இத்யாதி. கீழே "எங்கேவருந் தீவினை" என்று களித்து இதிலே "எஞ்ஞான்று தலைப்பெய்வனோ" என்று கூப்பிடுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (ஸம்ஸாரிகளில்) இத்யாதி. (ஆற்றவொண்ணாத) - பொறுக்கவொண்ணாதவென்றபடி. புருஷகாரத்வோ பயோகமாகத் தாத்பர்யமருளிச்செய்து தாத்பர்யாந்தர மருளிச்செய்கிறார் (பெரிய) இத்யாதி. என்குதல் - நழுவவிடுதல். (இத்தால்)-ரக்ஷணத்தால். (என்றோ) என்றது - இன்றுதானாகவொண்ணாதோ வென்று கருத்தாய், இப்படி சொன்னாருண்டோ வென்னை வருளிச்செய்கிறார் (அபீதாநீம்) இத்யாதி. ௯௯.

தாத்பர்யம்.—இதில், இப்படி. பகவத்விஷயத்தில் விலக்ஷணபக்தியுக்த ராய் ஸம்ஸாரிகளில் விலக்ஷணரானநாம், பகவதநுபவைகபரரான நித்ய ஸூரிகளுடன் கூடி என்றோ அவனை யநுபவிப்பதென்று த்வரிக்கிறார்.

கமலவாஸிநியாய்த் தனக்கத்யந்த வல்லபையான பெரிய பிராட்டியாரு டைய புருஷகாரத்தாலே, ஆஶ்ரிதர்க்கத்யந்ததுஃகஜநகமாய் ஸ்வப்ராப்திவி ரோதியான பாபங்களைப்போக்கி, பலாபிஸந்திரஹிதமான கர்மாதிகளை யநு ஷ்டித்து அவர்கள்பண்ணும் ப்ரபத்திக்குப் பரமபுருஷார்த்தபூதனாயிருக்கிற ஸர்வேஶ்வரன், தன்னுடைய மேன்மையையும் பாராதே ஆஶ்ரித ஸம்ரக்ஷ ணார்த்தமாக இடைக்குலத்திலவதரித்து இழிதொழிலான பசுமேய்ப்பதையும் செய்தும், ஸ்ரீவாமநனாயவதரித்து மஹாபலியையிரந்து மூன்றடிவாங்கி இர ண்டடியால் ஸகலலோகங்களையு மாக்ரமித்துத் தன் காற்கீழிட்டுக்கொண்டும், இவ்விதமான விசித்ரசர்யையினால் புகர்பெற்று விளங்காநின்றுகொண்டு, இவ்

(க) ஸ்ரீராமா - அயோத்யா, ௨௪ - ௫௭.

வண்ணமான பரத்வ ஸௌலப்யங்களைக் காட்டி என்னையாளாக்கிக் கொண்டான். இப்படி வகுத்த சேஷியான அவனைக்கிட்டி இஸ்ஸம்ஸார தாபமற்றவனாய் எப்போ தநுபவிக்கப் போகிறேனென்று காலத்தை ப்ரதீக்ஷிக்கிறார். அ௯.

---

தலைப்பெய்து யானுன்றிருவடிச் சூடுந்தகைமையினால்,
நிலைப்பெய்த வாக்கைக்கு நோற்றவிம்மாயமும், மாயஞ்செவ்வே,
நிலைப்பெய்திலாத நிலைமையுங்காண்டோறசுரர்குழாம்
தொலைப்பெய்த நேமியெந்தாய், தொல்லையூழி சுருங்கலதே. ௯௦.

அர்த்தம்.—அசுரர் - அஸுரர்களுடைய, குழாம் - ஸமூஹத்துக்கு, தொலை - நாசத்தை, பெய்த - பண்ணின, நேமி - திருவாழியையுடைய, எந்தாய் - ஸ்வாமியானவனே! யான் - நான், தலைப்பெய்து - கிட்டி, உன் திருவடி - உன்னுடைய திருவடிகளை, சூடும் - சிரஸிலணிகையாகிற, தகைமையினால் - ஸ்வபாவத்தினாலே, நிலைப்பு எய்த-ஸ்த்திதிபெற்ற, ஆக்கைக்கு - சரீரத்தைப் பெறுகைக்கு, நோற்ற - (ஜந்மாந்தரத்தில்)ஸுக்ருதத்தைப்பண்ணின, இ-இந்த, மாயமும் - ஆச்சர்யமும், மாயம் - ஆச்சர்யமான சரீரம், செவ்வே - நன்றாக(ஏகரூபமாக), நிலைப்பெய்து இலாத -ஸ்த்திதியையுடைத்தாகாததான, நிலைமையும் - இருப்பையும், காண்தோறு - நினைக்கும்போதெல்லாம், தொல்லை - அநாதியான, ஊழி கல்பமானது - சுருங்கலது - சுருக்கமற்றிருக்கிறது. ௯௦.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்]

அவ.—தொண்ணூறாம்பாட்டு.—“ எஞ்ஞான்று தலைப்பெய்வனே” என்றிறே, கீழ்நின்றது. “என்றாகிலென்? ‘பகவத்ஸ்பர்சமபலத்தோடே சந்திப்பித்துவிடும்’ என்று விஸ்வஸித்திருக்குமத்தனையன்றோ?” என்ன, அப்படியே செய்யலாயிற்றிறே, ஸம்ஸாரிகளைப்போலே நிரபேக்ஷனானேனாகில்; எனக்குன்னையொழியக்காலக்ஷேபம் பண்ணுகை அரிதாகாநின்றதென்கிறார். இப்பாட்டில் சொல்லுகிறதென்னென்னில், உன் திருவடிகளை ஸமாச்ரயிக்கைக்கீடாக இருப்பதொரு சரீரத்தைப்பெற்றபடியையும், அது தான் அஸ்த்திரமாயிருக்கிறபடியையும் அநுஸந்திக்கப்புக்கால், அத்தாலேவந்த வாற்றாமையாலே காலம் நெடுகாநின்றதென்னுதல்; அன்றிக்கே, உன்னையொழிய வேறொன்றால் தரியாதபடியான ஸ்வபாவத்தைப் பெற்றேனானபடியையும், இதுதான் ப்ராக்ருதியோடே யிருக்கச்செய்தேவந்த ஸ்வபாவமாகையாலே இதுதானேகரூபமின்றிக்கே யிருக்கிறவாச்சர்யத்தையுமநுஸந்திக்கப் புக்கால், இதுக்குக் காலம் போருகிறதில்லையென்றதாதல்.

---

☞ இப்பாசுரத்துக்கு மூல ஸ்ரீகோசங்களில் இவ்வரும்பதம் காணவில்லை.

வ்யா.—(தலைப்பெய்து) உன்னைவந்துகிட்டி. (யான்) அறக்கை கழிந்த நாள். (உன் திருவடியித்யாதி) உன் திருவடிகளையாஸ்ரயிக்கையாகிற இஸ்ஸ்வபாவத்தாலே தரிப்பதான சரீரத்தைப் பெறும்படி ஜந்மாந்தரத்திலேஸுக்ருதத்தைப் பண்ணின வாஸ்சர்யமும். (மாயம்செவ்வே நிலைப்பெய்திலாத நிலைமையும்) மாயமுண்டு-இப்ப்ரக்ருதி; இதுஎன்று மொக்க ஒருபடிப்பட்டிராதே யிருக்கிற இஸ்ஸ்வபாவத்தையும் காண்டோறு.

அன்றிக்கே, (தலைப்பெய்தித்யாதி) நானுன்னைவந்துகிட்டி உன் திருவடிகளை யொழிய வேறொன்றால் தரியாதபடியானஇஸ்ஸ்வபாவத்தையுடையேனாய்க்கொண்டு நானிதிலே நிலைநின்ற வாஸ்சர்யத்தையும் ஆக்கைக்கு நோற்றவிம்மாயமும் (க) "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு- ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு" என்று நோற்றுவிறே இஸ்ஸ்வபாவம் பிறப்பது. ஒரு சரீரபரிக்ரஹம்பண்ணி யிருக்கச்செய்தேயிறே இஸ்ஸ்வபாவந்தானுண்டாவது. ஆகையாலே, தாத்ருச சரீரபரிக்ரஹமும் அந்த பக்திக்கு உறுப்பாமிறே. இந்தயோஜனையிலும் க்ரியாகாரகபாவேந அந்வயிக்குமிடத்தில், "ஆக்கைக்கு நோற்ற" என்கிறவதுவே விசேஷ்யமாய்க்கொண்டு ப்ரதாநமாய்த் தோற்றிற்றேயாகிலும், "திருவடிச்சூடுந்தகைமையினால் நிலைப்பெய்த" என்கிற இஸ்ஸ்வபாவபரமான விசேஷணமும் சத்திலே வாக்யத்துக்குத் தாத்பர்யமாய், அது வேப்ரதாநமாகக்கடவது. (மாயஞ்செவ்வே யித்யாதி)அஶரீரந்தான் குணத்ரயயுக்தமாயிருக்கையாலே ரஜஸ்தமஸ்ஸுக்கள் தலையெடுத்தபோது இஸ்ஸ்வபாவமின்றிக்கே ஸத்வந்தலைமையானபோதுண்டாமதாகையாலே என்று மொக்க ஒருபடிப்பட நிலைநில்லாதே யிருக்கிற இவ்வாஸ்சர்யத்தையும். (காண்டோறு) அநுஸந்திக்குந்தோறெல்லாம், இத்தையே முடியவநுஸந்தித்துப் போந்தாரென்று தோற்றுகிறது. (அசுரரித்யாதி) அஸுரஸமூஹத்தைத் தொலையும்படி பண்ணின திருவாழியையுடைய வென்ஸ்வாமியானவனே! இத்தால், நீ அசக்தனாயாதல்,அப்ராப்தனாபாதல்,நாம்செய்தது நாம் பட்டோமித்தனையன்றோ?வென்றுதானறியிருக்கிறேனோ? (தொல்லையித்யாதி)பழையதான கல்பம்சுருங்குகிறதில்லை; நெடிதாகாநின்றது. அன்றிக்கே, இவ்வாஸ்சர்யத்தை யநுஸந்திக்கப் புக்கால், தொல்லையூழியானது சுருங்கலையுடைத்தாயிராநின்றது. காலம் போருகிறதில்லை.

கூ௦

(க)

[அப்பு அரும்பதம்.]

தொண்ணூறாம்பாட்டு.—(தலைப்பெய்து) அநுரூபமான ப்ரக்ருதி ஏக ரூபமாயிராமையாலும், உன் விஷயமான ப்ராவண்ய மேகரூபமாயிராமையாலும், பரமபதத்திலேயிருக்கிற வுன்னையொழியவிங்கே காலக்ஷேபம் பண்ணுகையரிதென்றபடி. ப்ரக்ருதிபரத்துக்கும் ப்ராவண்யபரத்துக்குஞ்சேரத் விவிதமாக வவதாரிகையருளிச்செய்கிறார் (உன் திருவடிகளை) இத்யாதி வாக்யத்வயத்தாலே, பாட்டெல்லாமிரண்டு நிர்வாஹம். (யானும்) இத்யாதி. "திருவடிச்சூடுந்தகைமையினாலே நிலைப்பெய்தமாயம்" என்று மாயத்தை இங்கேயுங்கூட்டியருளிச்செய்கிறார் (நானுன்னை) இத்யாதி. பக்திபரமான பக்ஷத்தில் "ஆக்கைக்கு நோற்ற" என்று ப்ரக்ருதியைச் சொல்லுவானென்னென்ன, ப்ரக்ருதியும் பக்திக்குபயோகமென்கிறார் (ஜந்மாந்தர) இத்யாதி வாக்யத்ரயத்தாலே "நிலைப்பெய்தவாக்கைக்கு" என்று நிலைப்பெய்தவென்று விசேஷணமும், ஆக்கைக்கென்று விசேஷ்யமுமாய்த்தோற்றினாலு மிந்தயோஜனைக்கு விசேஷணவாக்யம் ப்ரதாநமென்றபடி. பக்திபக்ஷத்திலே அருளிச்செய்கிறார் (அச்சரீரந்தான்) இத்யாதி. வர்த்தமானத்தைப்பற்றவருளிச்செய்கிறார் (இத்தையே) இத்யாதி. சரீரம் ஏகரூபமாக அநுகூலமின்றிக்கேயிருக்கிறபடியைப் பார்த்தால் (க)ஒருபகலாயிர மூழியாய்க்காலம்நெடுகாநின்றது, இப்படிப்பட்ட சரீரத்திலே பக்தியையுண்டாக்கின வாஸ்சர்யத்துக்குப் பாசுரமிடப்பார்த்தால், அதுக்குக்காலம் போருகிறதில்லை யென்றபடி. [எந்தாய் யான் தலைப்பெய்து உன் திருவடிசூடுந் தகைமையினால் என்று, தொடங்கிக் காண்டோறும் தொல்லையூழி சுருங்கலதே] என்றந்வயம். கூ0.

[வேறொரு அரும்பதம்.]

தொண்ணூறாம்பாட்டு.—(தலைப்பெய்து) இத்யாதி. கீழே "எஞ்ஞான்று தலைப்பெய்வனே" என்றத்தையும், "எந்தாய் தொல்லையூழி சுருங்கலதே" என்றத்தையுங் கடாக்ஷித்து ஸங்கதியருளிச்செய்கிறார் (எஞ்ஞான்று) இத்யாதி. ஆனால் பாட்டின் சேஷமென்சொல்லுகிறதென்கிறப்ரஸ்நத்தை யநுவதித்து ப்ராபகபரமாகவும் ப்ராப்யபரமாகவும் யோஜநார்த்வய மருளிச்செய்கிறார் (இப்பாட்டில்) இத்யாதி. (எப்போது கிட்டுவது) என்கிற விடாயின் மிகுதியாலே தாமாஸ்ரயித்ததில்லை யென்றாம், இனி ஆஸ்ரயிப்போமென்றால் அதுக்கு ஈஸ்வரனைக்கண்டு பற்றவேணுமே, அவ்வளவும் சரீரம் ஸ்திரமாயிராதே, சரீராந்தரத்திலேயாகிறதென்றால் * (அதுகர்த்தம்ஸம்.) என்கிறவிசாரத்தாலே காலம் நெடுகிற்றென்று முந்தின யோஜனை ப்ராப்யனானவுன்னைப் பெற்றல்லது தரியாத ப்ரேமந்தானும் நிலைநில்லாதே என்கிற விசாரத்துக்குக் காலம்போராதென்றிரண்டாம் யோஜனை. "எஞ்ஞான்று தலைப்பெய்வனே" என்றத்தைக் கடாக்ஷித்து "யான்" என்றதுக்குப்பலிதம் (அற) இத்யாதி. ஸித்தோபாய பரிக்ரஹம் பண்ணுகைக்குறுப்பான ஸுக்ருத விசேஷங்கள் ஜந்மாந்தரங்களிலுண்டாயிருக்குமே; அவை ஆஸ்ரயணத்திலே மூட்டுமே, அவையில்லாவிட்டால் அவற்றையுண்டாக்கென்னலாமே, ஆஸ்ரயித்தால் பலம் தப்பாதே வருமே என்றிருக்கலாமே, என்ற இத்தனையும்

---

(க) திருவாய் ௧0-௯.௧. * குண்டலித க்ரந்தம் ஸந்திக்தம்.

விசாரிக்கப்போனால் இனிமேலுள்ள காலமெல்லாம் வேணுமே. காலம் கெடுகுமென்கிற தாத்பர்யத்தாலே அருளிச்செய்கிறார் (உன் திருவடிகளை) இத்யாதி. ஆஶ்ரயணோபயுக்தமான ஸுக்ருதமேயுண்டாகு லதுக்கனுகுணமாக ஒரு படிப்பட்டிருக்கவேணும்; அதப்படியிராதபடியாலே இனிஸுக்ருதம்ஸம்பாதிப்போமென்றால் அதுக்குறுப்பாகாதபடியு முண்டேயென்கிறார் (இது) இத்யாதி. இனிப்ராப்யபரமான பக்ஷத்திலே "யான் தலைப்பெய்வது உன் திருவடி சூடுந்தகைமையினால் நிலைப்பெய்தும்படியான மாயமும் அதுக்கடியாகவாக்கைக்கு நோற்றவிம்மாயமும், மாயஞ்செவ்வே நிலைப்பெய்திலாத நிலைமையுங்கண்டோறு" என்று மூன்றாகப்பிடித்து ப்ராப்யருசியுமதுக்கடியான ஜந்மாந்தரஸாதநங்களும் அந்தருசிதான் நிலைநில்லாதபடியுங் கண்டு விசாரிக்கைக்குக் காலதத்வம் போராதென்கிற தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (அன்றிக்கே) இத்யாதி. இங்ஙனன்றாகில் "நோற்றநோன்பிலேன்" என்றவர்க்கு இது சொல்லக்கூடாதிறே. "மாயமும்" என்றித்தை "நிலைப்பெய்த" என்ற விடத்தில் கூட்டினால் கேவலமாக்கைக்கென்று தோற்றுமே யென்ன, ப்ரகரணபலத்தாலே விசேஷிக்கலா மென்கிறார். இந்தவிரண்டாம் யோஜனையிலே யருளிச்செய்கிறார் (அச்சரீரந்தான்) இத்யாதி. "தோறு" என்றதுக்கு பாவம் (இத்தை) இத்யாதி. முந்தினபக்ஷானுகுணமாக சப்தார்த்தமருளிச்செய்து, இரண்டாம் பக்ஷானுகுணமாக சப்தார்த்தம் (அன்றிக்கே) இத்யாதி. இப்பக்ஷத்தில் "சுருங்கல்"என்று பதம்.

தாத்பர்யம்,—இதில், ஸர்வேஶ்வரன் தன்னுடைய கைங்கர்யத்துக்கு பயோகியான சரீரத்தையும் தன்னிடத்தில் பக்தியையுமெனக்குக் கொடுத்திருப்பதைக்கண்டு இனிபேறுதப்பாதென்று விஶ்வஸித்திருக்கவேண்டியிருந்தபோதிலும், இந்தச் சரீரத்தினுடையவும் பக்தியினுடையவும் அஸ்த்தைர்யத்தைப் பார்த்து நானிப்படி கூப்பிடுகிறேனென்கிறார்.

நானுன்னைக்கிட்டி உன்னுடைய திருவடிகளை என்சிரஸில் வைத்துக்கொண்டா லல்லது தரிப்பரிதாம்படி பெரிய ஆற்றாமையுடைய இந்தச் சரீரத்தை, அநேக ஜந்மங்களில் அநேகவிதமான தவங்களைச்செய்து பெற்றும் இது வரையில் உன்னைக்காணப் பெற்றிலேன், இனி உன்னைக்காணுமளவும், இச்சரீரமஸ்த்திரமாகையாலே நிலைநிற்குமென்று விஶ்வஸிக்கப்போகவில்லை. இனி மறுபிறப்பிலுன்னை யாஶ்ரயிப்போமெனில், அதி துர்லபமாகிய இம் மாநுஷதேஹம் அப்பிறப்பில் நேரிடுமென்றும், ஸத்வரஜஸ்தமோமயமான இவ்வுலகினில் ஸத்வகார்யமான பக்தியே மறுபிறப்பிலுமுண்டாகிற தென்றும் நிஶ்சயிக்கப்போகாது. இவ்விதமான பாதகங்களை யோசித்துப்பார்த்தால், உன்னுடைய ஸேவையில்லாது வீணாய்ப்போகிற இக்காலம் கல்பமாய் முடிவின்றிப் பெருகாநின்றது. இதிப்படியிருக்க, எனக்கு நாதனான நீயோ,

ஆச்ரிதவிரோதி நிரஸநசீலமான திருவாழியை எப்போதும் திருக்கையிலேந்தி ரக்ஷணதீக்ஷிதனாயிருக்கிறாய். இப்படி ஸமர்த்தனான நீ எனக்கு ஸ்வாமியாயிருக்க எனக்கிப்படி வீணாய்க்காலங்கழிவது பொறுக்கப்போகிறதில்லை என்று ஸர்வேச்வரனைக்குறித்து முறையிடுகிறார். கூ௦.

சுருங்குறிவெண்ணெய் தொடுவுண்டகள்வனை, வையம் முற்றும்
ஒருங்குறவுண்ட பெருவயிற்றாளனை, மாவலிமாட்
டிருங்குறளாகி யிசையவோர் மூவடிவேண்டிச்சென்ற
பெருங்கிறியானையல்லால், அடியேன் நெஞ்சம்பேணலதே. கூக.

அர்த்தம்.— சுருக்கு-(கள்ளக்கயிற்றாலே) சுருங்கப்பண்ணின, உறி - உறியில் (வைக்கப்பட்ட), வெண்ணெய் - நவநீதத்தை, தொடுவுண்ட - களவு செய்து அமுதுண்ட, கள்வனை - சௌர்யத்தையுடைய க்ருஷ்ணனாயவதரித்தவனாய், வையம்முற்றும் - உலகமெல்லாம், ஒருங்கு - ஒருப்ரதேசத்திலே, உற - பொருந்தும்படி; உண்ட - விழுங்கிய, பெரு - பெரிய, வயிற்றாளனை - உதரத்தையுடையவனாய்,மாவலிமாட்டு - மஹாபலியிடத்தில், இரு - பெரிய (சிறிய), குறளாகி-வாமநனாய்க்கொண்டு (சென்று),இசைய-(அவன்) ஸம்மதிக்கும்படி, ஓர் - அத்விதீயமான, மூவடி - மூன்றடியை, வேண்டி - யாசித்து, சென்ற - அழகிய நடையையுடையனாய்க்கொண்டுபோன, பெருங்கிறியானை அல்லால் - பெரிய உபாயத்தையுடையனானவனை யல்லது (மற்றொன்றை), அடியேன் - அவனுக்கே தாஸனான என்னுடைய, நெஞ்சம் - மநஸ்ஸு, பேணலது - விரும்பாது.

## பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.

அவ.—தொண்ணூற்றோராம்பாட்டு.—"இங்கேகிடந்து காலம் நெடுகாநின்றது, குறுகாநின்றதென்று ஆழங்காற்படாதில்லாதே நாங்கள் கண்டீரே, புறம்புள்ள விஷயங்களிலேதரித்துக் காலங்குறுகுதல் நெடுகுதல் செய்தாலும் ஸுகித்துத்திரிகிறோம்; அப்படியே நீரும்பகவத்விஷயத்தில் நின்றும் நெஞ்சை மாறவைக்கப்பார்த்தாலோ?" என்ன, ஓம்; அப்படி செய்யலாயிற்றிறேயதுக் கீடாயிருப்பதொரு நெஞ்சுபெற்றோமாகில்;என்னெஞ்சவனையொழிய வேறொன்றறியாதென்கிறார். இன்னெஞ்சுதன்னையும் வைக்கலாயிற்றே அவன் சௌர்யம்பண்ணிற்றிலனாகில்.

வ்யா.— (சுருங்குறிவெண்ணெய்) கள்ளக்கயிறுருவி வைத்த உறியாயிற்று (வெண்ணெய்தொடுவுண்ட)வைத்தகுறியழியாமேவெண்ணெயைக் களவுகண்டமுது செய்தான். (கள்வனை) களவுதன்னை

அரு||தொண்ணூற்றோராம்பாட்டு,—(சுருங்குறி) "சுருக்கு" சுருங்கப்பண்ணின, அதாவது-(கள்ளக்கயிறுருவிவைத்த)"ஒருங்கு"-ஒருப்ரதேசத்திலே

வ்யாப்யாயிற்றுகளவுகண்டது. ஆகையால் "இதுசிலர்களவுகண்டல்ல, தெய்வங்கொண்டதோ? காமம்வத்திலாமோ ?" என்னும்படியாக வாயிற்றுகளவுகண்டபடி. (வையமித்யாதி) இவ்வெண்ணெயாலே வயிறுநிறையச்செய்தேயும், ஜகத்தாகவெடுத்து வைத்தால் அரை வயிறும்படியாயிற்றிருப்பது. இத்தால், ஆஶ்ரிதஸ்பர்சமுள்ள த்ரவ்யத்தாலே தரிக்கையும், ஜகத்ரக்ஷணத்தில் பர்யாப்தமின்றிக்கேயிருக்கும்படியையுஞ் சொல்லிற்று. (மாவலியித்யாதி)தான் காவலாக இட்டுவைத்தகடல் இவ்விபூதியைக் களவுகாணுமன்று தன்வயிற்றிலேயிட்டு வைத்துநோக்குமு; "நான் என்னது" என்றிருப்பானொருத்தனித்தையபஹரித்தவன்று அவனோடிசைய விருந்து சென்றுகொள்ளும். (மாவலிமாட்டு) ஆஸுரப்ரக்ருதியானவன் பக்கலிலே சென்றுகிட்டிற்று; தன்னையொழிய வேறொன்றைப்பேறாத நெஞ்சுடையவென்பக்கலிலேயன்றோ? கிட்டவடுப்பது. (இருங்குறளாகி) பெரியகுறளாகி. அதாகிறது லோகத்தில் வாமநர்களுடைய வளர்த்தருளின விடத்துக் கொப்பாம்படியாயிற்று இவனுடைய சிறுமை. (இசைய) இசைவிக்கைக்குக் க்ருஷிபண்ணுவான்தானேயாய், அவனிசைவுந்தன்னதிமாம்படியாக உடையனாய். ஆரேனும்வேண்டாவென்னிலும அவனிசைந்து கொடுக்கும்படி. (ஓர் மூவடிவேண்டிச்சென்ற)இரண்டடியை யிரந்து இரண்டடியையுமளந்துவிடாதே, ஓரடிக்குச்சிறையிடும்படி மூன்றடியையிரந்தவனை. (வேண்டிச்சென்ற பெருங்கிறியானையல்லால்)தான் ஸர்வநிரபேக்ஷனென்று தோற்றுதபடி சென்றவன். "நாம்கொடுக்கிற வித்தாலல்லது தரியான்" என்று தோற்றும்படியாக வாயிற்று சென்றது. தன்னீஶ்வரத்வத்தைக்களவுகண்டபடி. "அவாப்தஸமஸ்தகாமன் ஓரபேக்ஷை தோற்றவந்தான்" என்று இத்தனை தோற்றுமை இரப்பாளனாய்ச் சென்றபடி. அவன் கையைபிறந்து கொடுக்கும்படியான வடிவைக்கொண்டு. (பெருங்கிறியான்)பெருவிரகன். (அடியேன்)மஹாபலியைப்போலே யொன்று கொடுக்கவிருக்கிறாரல்லர். இந்த்ரனைப்போலே யொன்று பெறவிருக்கிறாரல்லர். அச்செயலுக்குத் தோற்று எழுதிக்கொடுக்குமவரிறே இவர். (நெஞ்சமபேணலந்தே) பாத்வத்தையுங்கொள்ளாது (க) "ஶேஷ்ஸுவஉநூஶ்ரிஶஷ் - பாவோநாந்யத்ரகச்சதி." ௯௧.

அரு॥ "உற"-அடங்கும்படி, "மாவலிமாட்டு"-மாவலிபக்கலிலே, "இரு" என்றது - விபரீதலக்ஷணை. அடைவே அந்வயம். ௯௧.

[அப்பு அரும்பதம்.]

தொண்ணூற்றோராம்பாட்டு.—(கருங்குறிவெண்ணெய்) (வைத்த) மாறிவைத்த. "தொடுவுண்ட" என்றபின்பு "கள்வன்" என்பானென்னென்னவருளி

(க) ஸ்ரீ ராமா-உத்தர-௪௦-௧௬.

ச்செய்கிறார்.(களவுதன்னை) இத்யாதி. "ஒருங்குற" பிறிகதிர்படாதே ஒருகாலே யென்றாய், நிச்சேஷமாகவென்றபடி. "பெருங்கிறி"-பெருவிரகு, விரகேதென்னவருளிச்செய்கிறார் (தான் ஸர்வ நிரபேக்ஷன்) இத்யாதி. களவுகாண்கை-நிரபேக்ஷன் ஸாபேக்ஷனாகை-இரு-அத்யல்பமும். ௯௯.

## வேறொரு அரும்பதம்.

தொண்ணூற்றொன்பாட்டு.—(சுருங்கு) இத்யாதி, கீழே "தொல்லைபூழிசுருங்கலதே" என்றெம்பெருமானை உத்தேசித்துச்சொல்லுகிற பாசுரத்தைக் கேட்டஸம்ஸாரிகள் "இவரெட்டாததைஎட்டப்பார்த்துநோவுபடாநின்றார்" என்று தங்கள் படியைச்சொல்ல "அடியேன் நெஞ்சம்பேணலதே" என்கிறாரென்று ஸங்கதியை யருளிச்செய்கிறார் (இங்கே,-இத்யாதி.(என்று)-என்றுகொண்டு.(பட)-பட்டுக்கொண்டு. எட்டாதத்தை யாசைப்பட்டு, துக்கப்படுவானென்னென்று நெஞ்சுக்கறிவித்து மீட்டாலாகாதோவென்கிற சங்கையிலே அருளிச்செய்கிறார் "'சுருங்குறி இத்யாதி' 'பெருங்கிறியானை' என்னுமளவும்" என்று விவக்ஷித் தருளிச்செய்கிறார் (என்நெஞ்சு) இத்யாதி. அதாவது-ஆஸ்ரிதகரஸ்பர்சமுள்ள வெண்ணெயையும், ப்ரளயம்வந்தாலுமிங்கில்லையென்று வயிற்றைக்காட்டி யொளிக்கும்படியாக மண்ணையும் சௌர்யம் பண்ணினானாகையாலே என்னெஞ்சையும் நானறியாதபடி அபஹரித்தான். இனி மீட்கவிரகுண்டோ வென்கை. தொடுவுண்டவனை என்னவமைந்திருக்க "கள்வனை" என்று மீளவுஞ்சொல்லுகைக்கு பாவம்(களவு) இத்யாதி. "ஒருங்குறவுண்ட"- பிறிகதிர் படாதே ஒருகாலே உறும்படியாக வென்றாய் நிச்சேஷமாகவையமெல்லாம் உண்டிருக்கச் செய்தேயும் பெரியவயிற்றையுடையவனை என்று சப்தார்த்தமாய், ஸூபிவ்யாஹாரதாத்பர்யமருளிச் செய்கிறார் (இவ்வெண்ணெயாலே) இத்யாதி. "கண்ணன் நவநீதசோரன்" என்று ப்ரஸித்தியாலே பிறந்தவாறே இடைச்சிகளிவனறியாதபடி இருட்டிலெட்டாதவிடத்திலே உறிகளிலேவைத்துக் கள்ளக்கயிறுருவி இலச்சினைசெய்து படலடைத்து மோர்விற்கப்போக, இவர்களறியாதபடி வெண்ணெயையுண்ட சதுரன்தானே, தன்னைக்காவலாகபூமிக்குச்சுற்றும் வைத்தகடல் அவனறியாதபடி தன்னில் கரைத்துப்போகட வுத்யோகித்தவளவிலே, வயிற்றிலேவைத்து "இங்கில்லை" என்று அத்தைக்களவு கண்டவனே. அன்றிக்கே, 'மண்ணெல்லாமென்னது" என்று களவுகண்டு நிற்கிற ஆஸுரப்ரக்ருதிமுன்னே தன்னீஸ்வரத்வத்தைக்களவுகண்டு அவனை வஞ்சித்தமஹோபாயனாகையாலே "யானேயென்றதே" என்றிருந்த வென்நெஞ்சத்தையு மபஹரித்தானென்று ப்ரக்ருதோபயோகங்காட்டவேணுமென்று திருவுள்ளம்பற்றி இரண்டு பதங்களுக்கும் சேர்ந்த கருத்தை அருளிச்செய்கிறார் (தான்) இத்யாதி. "தான்" இப்படி கள்வனானதான். "மூவடிவேண்டி" இத்யாதியாலே அர்த்தஸித்தமாயிருக்க வருளிச்செய்ததுக்குபாவம் (ஆஸுர) இத்யாதி.

களவுகண்டப்ரகரணத்துக்குச் சேரவருளிச்செய்கிறார் (தன்) இத்யாதி. எதத் விவரணம் (அவாப்த) இத்யாதி. “பெருங்கிறியான்” என்றதுக்குபாவம். (அவன்) இத்யாதி. (ஒன்று) தன்னை யொழியவேயொன்று. ௯௧,

தாத்பர்யம்.—இதில், பகவத்தலாபத்தாலே ஆழ்வார்படும் பாதையைக்கண்ட ஸம்ஸாரிகள், நீரவ்விஷயத்தைவிட்டு எங்களைப்போல் சப்தாதி விஷயங்களிலேப்ரவணராய் ஸுகித்திருமென்று சொல்ல, நானப்படி செய்யினும் என்மநஸ்ஸு அவனைவிட்டு மற்றொன்றை விரும்பாதென்கிறார்.

க்ருஷ்ணனறியவொண்ணாதென்று,இடைச்சிகள் தாங்கள் கடைந்தெடுத்தவெண்ணெயை ஒருவருமறியாத ஓரிருட்டறையில் கைக்கெட்டாதவுயரத்தில் உறியில்வைத்து கள்ளக்கயிற்றையுருவி யதன்மேல் மற்ற கொம்புகொடிகளையுமமைத்து மோர்விற்கப்போக,தான் அவ்வெண்ணெயைநிரவசேஷமாக அமுதுசெய்து அவர்கள்குறித்தஅடையாளங்களை மாறாமல் முன்போலவேயமைத்துவைத்தஅவனுடையசௌர்யவ்யாபாரத்திலும்,ப்ரளயகாலத்தில்ஸகலஜகத்தையும் தன்வயிற்றிலொருமூலையில்வைத்து ரக்ஷித்தஅவனுடைய உபகாரகுணத்திலும்,மிகச்சிறியவடிவையெடுத்துக்கொண்டுமஹாபலியிடம்சென்று, இரண்டடியையாசித்தால் இவனைச்சிறைசெய்ய விரகில்லையென்றுமூன்றடியாசித்துவாங்கி இரண்டடியாலே பூம்யந்தரிக்ஷங்களையளந்து ஓரடியாலவனைச்சிறைசெய்த அவனுடையநடையழகிலும்,புத்திசாதுர்யத்திலுமீடுபட்டு அவனுக்கேயடியனான என்னுடையமநஸ்ஸு உங்கள் சொற்படி மற்றொன்றை இசையாது, நானென்செய்வேனென்கிறார். ௯௧.



பேணலமில்லாவரக்கர் முந்நீரபெரும் பதிவாய்,
நீணகர்நீளெரி வைத்தருளாயென்று, நின்னைவிண்ணோர்
தாணிலந்தோய்ந்துதொழுவர்நின்மூர்த்திபல்கூற்றிலொன்றும்
காணலுமாங்கொலென்றே, வைகல்மாலையுங்காலையுமே. (௯௨)

அர்த்தம்.—முந்நீர - ஸமுத்ரத்தினால் சூழப்பட்ட, பெரும் - விசாலமான, பதி - விபூதியை, பேண் - ரக்ஷிக்கையாகிற, நலம் இல்லா- நன்மையையுடைத்தாகாத, அரக்கர் - அஸுரர்கள் வாஸம்செய்கிறதாய், முந்நீர - ஸமுத்ரத்தினால் சூழப்பட்ட, பெரும்பதிவாய் - விசாலமானத்வீபத்திலுள்ளதாய், நீள் - ஒருவராலுமழிக்கவொண்ணாத பெருமையையுடையதான, நகர் - லங்காபுரியில், நீள் - மற்றொன்றால் தஹியாததையும் தஹிக்கவல்ல மஹிமையையுடைய, எரி - பாவகாக்நியை, வைத்து - ப்ரயோகித்து, அருளாய் - (எங்களை) ரக்ஷிக்கவேணும், என்று-என்றுப்ரார்த்தித்து, நின்னை-உன்னை, விண்ணோர் - தேவர்கள், நிலம் - பூமியில், தாள்தோய்ந்து - காலைப்படியவைத்து, வைகல்-தினமும், காலையும் மாலையும்-உதயகாலத்திலும் அஸ்தமனகாலத்திலும்,தொழுவர்-ஆஶ்ரயிப்பர்கள். நின்மூர்த்தி-உன்னுடையதிருமேனி ஸௌந்தர்யத்தில், பல் கூற்றில் - அநேக பாகங்களில், ஒன்று - ஒரு பாகத்தையாவது, காணலுமாங்கொல் என்றே - காணவேணுமென்றோ (அவர்கள் தொழுவது?) (அன்று.) ௯௨.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ,—தொண்ணூற்றிரண்டாம்பாட்டு.— “பெருங்கிறியானை யல்லாலடியேன் நெஞ்சம்பேணலதே” என்றாரே தாங்கீழ். அள வுடையராய் அதிகாரி புருஷர்களான தேவர்களுக்கிதுவுமின்றிக்கே யொழிவதே! யென்கிறார். என்றான், அவர்களுக்குவந்த குறையென் னென்னில்; நாமெல்லாவற்றையுமழிய மாறிப்பெறவிருக்கிற வஸ் துவை அழிவுக்கிட்டுவேறேசில ப்ரயோஜநங்களைக்கொள்ளாநின்றார் களென்கிறார்.

வ்யா.—(பேணலமித்யாதி) (முந்நீரபெரும்பதியைப் பேணல மில்லாவரக்கர்) கடலாலே சூழப்பட்டுப் பல பதிகளையுடைத்தான உன்விபூதியை. (நீணகரித்யாதி) உன் விபூதியிலேகதேசத்தை யழி த்துத்தரவேணுமென்று சொல்லாநிற்பர்களாயிற்று. பாஹிம்ஸை யென்றால் திருவுள்ளத்துக்குச்சென்றிராதென்று இரங்குகைக்காகச் சொல்லிக்கொடுவரும் வார்த்தையாயிற்று. “அவர்கள் ஜீவிக்கி லுன் விபூதி ஜீவியாது” என்னாநிற்பர்கள். தேவர், குணங்களையோ ரிடத்திலே நாசப்பண்ணியிருக்கிற ருஷிகளையும், நீர் விரும்பி நோக்குகிற தேவர்களையும் நலியாநின்றார்களென்பர்கள். (பேணல மில்லா) பிறரைப்பேணுகையாயிற்றவன் நன்மையாக நினைத்திருப் பது. பிறரும்ஜீவிக்க நாமும் ஜீவிக்கக்கடவோமென்றிரார்கள். (பே ணலமித்யாதி) அவன் விபூதியைப் பேணுகையாகிற நன்மையில்லா த ராக்ஷஸருடைய. (முந்நீரபெரும்பதிவாய் நீணகர்) அஞ்சினான் புகலிடமாய், துர்வர்க்கமடங்கலும் புக்கொதுங்குமிடமாயிற்று. கட லையகழாக வுடைத்தாயிருக்கையாலே சிலரால்ப்ரவேசிக்கவரிதாயிரு

---

அரு|| தொண்ணூற்றிரண்டாம்பாட்டு.—(பேணலம்) (பரஹிம்ஸையென் றால் திருவுள்ளத்துக்குச் சென்றிராதென்று இரங்குகைக்காகச்சொல்லிக்கொ டுவரும் வார்த்தையாயிற்று) என்றது, நீணகர்நீளெரிவைத்தருளாய் என் னாதே, “முந்நீர பெரும்பதியைப்பேணலமில்லா வரக்கர்நீணகர்நீளெரிவைத் தருளாய்” என்று விசேஷித்தது-கேவலம் ராக்ஷஸரை ஹிம்ஸிக்கவேணு மெ ன்றால் ஹிம்ஸை திருவுள்ளத்துக்கு வாராமையாலே விபூதியெல்லாம் நலிகி றராக்ஷஸரை ஹிம்ஸிக்கவேணுமென்றால் விபூதியாக நலிவுபடுவதிற்காட்டி ல் இவர்களைஹிம்ஸித்தால் (௧) [illegible]-த்யஜேதேகம் குலஸ்யார் த்தே” என்கிறபடியே விரோதமில்லை யென்றிரங்கிக் கார்யஞ்செய்யு மென் கைக்காக விசேஷித்தருளிச்செய்கிறாரென்றபடி. சப்தார்த்தமருளிச் செய்கி றார் (அவன் விபூதியைப் பேணுகையாகிற) என்று. “முந்நீரபெரும்பதியை ப்பேணலமில்லா வரக்கருடைய முந்நீரபெரும்பதிவாய் நீணகர்”என்றுபெரு ம்பதியென்றத்தைக்கீழும் மேலும் யோஜித்துக்கொள்வது. மேலே கூட்டின

---

(௧)

வ்யாக்கை. கடல்சூழ்ந்த மஹாத்வீபத்திலேயுண்டான. (நீணகர்)தேவர்களுடைய வரபலத்தாலே யொருநாளுமழியாதபடி பூண்கட்டினலங்கையிலே. (நீளெரிவைத்தருளாய்) தேவதைகளுடைய வரத்தாலுண்டான சக்தியையுமழிக்கவற்றான சராக்நியை ப்ரவேசிப்பிக்கவேணுமென்பர்களே. (௧) "இலங்கைநகரம்பெரியுய்த்தவர்" என்னக்கடவதிறே. ஒரூரைச் சுட்டுத்தரவேணுமென்பர்கள். (நின்னை) ஜகத்ரக்ஷணத்திலே தீக்ஷித்திருக்கிறவுன்னை. "ஒரு விபூதியாகவழியுமாகிற் செய்யலாவதில்லையிறே" என்று கண்ணுங்கண்ணீருமாய் நின்றிறே யவர்கள் தன்னையுமழியச்செய்வது. (விண்ணோர்) எப்போது மொக்கக்கண்டநுபவிக்கிறவத்தேசத்திலே வர்த்திக்கிறவர்களுமன்றிக்கே நீயவதரித்துத் தாழநின்றவிடத்தில் மனிச்சிலுண்டான நீர்மைகடையாடுமிங்கே வர்த்திக்கிறவர்களுமன்றிக்கே பரணிலேயிருப்பாரைப்போலே ஸ்வர்க்கத்திலேயிருக்கிறவர்களிறே. (கால்நிலம்தோய்ந்து) நிலத்திற்கால்தோயக் கடவான்றிக்கே யிருக்கிற நிலையழிந்து பூமியிலேவந்துகிட்டி. (தொழுவர்) (௨) "न नमेयं - நநமேயம்" என்ற ராவணனைப்போலே யிருக்கும் நிர்ப்பந்தம் தவிர்ந்து தொழாநிற்பர்கள். (நின்னித்யாதி) தொழுதார் பெறும்ப்ரயோஜநத்துக்காகத்தான் தொழுகிறார்களோ? தொழுதால் கண்டநுபவிக்கும் வடிவைக்காண்கைக்காகவன்றிறே. உன்னுடைய விக்ரஹத்திலுண்டான வழகில் அநேகங்கூற்றிலேகதேசமான ஒருநாளைப்புறப்பாடுதான் காண்கைக்காகவோ? அன்றிறே (௩) "सकृत्त्वदाकारविलोकनाशया तृणीकृतानुत्तमभुक्तिमुक्तिभिः - ஸக்ருத்வதாகார விலோகநாசயாத்ருணீக்ருதாநுத்தமபுக்திமுக்திபி:". (வைகல்மாலையுங்காலையுமே) அவ்வடிவைக்காண்கைக்கர்த்திப்பார் நேருமளவல்லவாயிற்றிவர்கள்நேருவது. நாள்தோறும் அதுதன்னிலுமிடைவிடாதே தொழுவர்கள்.

[வைகல்மாலையுங் காலையும் விண்ணோர்கால் நிலந் தோய்ந்து தொழுவர், நின்மூர்த்திபல்கூற்றிலொன்றும் காணலுமாங்கொலென்றே - அன்றிறே.] ௬௨.

---

அரு|| போதைக்கு சப்தார்த்தமருளிச்செய்கிறார் (கடல் சூழ்ந்தமஹாத்வீபத்திலே) என்று. ஜகத்ரக்ஷணத்திலே தீக்ஷித்திருக்கிறவன் ஹிம்ஸிக்கிறதென்னென்ன, அருளிச்செய்கிறார் (ஒரு விபூதியாக) என்று. "நின் மூர்த்திபல் கூற்றிலொன்று காணலுமாங்கொலென்றே" உன்னுடைய விக்ரஹத்தினுடைய வழகில் அநேகங்கூற்றிலேகதேசமும் காண்கைக்காகவோ? அன்றென்றபடி. இத்தால் ப்ரயோஜநாந்தரபரராய்த் தொழுகிறார்களித்தனை யொழிய அநந்யப்ரயோஜநராய்த்தொழவில்லை என்றபடி. ஒரு நாள் ஸேவித்தால் போருமோவென்ன அருளிச்செய்கிறார் (ஸக்ருத்வதாகார) இத்யாதி.

---

(௧) திருவாய்-௪-௨-௮. (௨) ஸ்ரீராமா-யுத்த-௩௬-௧௧.
(௩) ஸ்தோத்ரரத்நம்-௫௫.

அரு||[பெரும்பதியைப் பேணலமில்லாவரக்கருடைய முந்நீரபெரும்பதிவாய் நீணகர்நீளெரிவைத்தருளாயென்று நின்னைவைகல் மாலையுங்காலையும் விண்ணோர் கால் நிலந்தோய்ந்து தொழுவர் நின்மூர்த்திபல் கூற்றி லொன்றும் காணலுமாங்கொல்] என்றந்வயம்.

௯௨.

## [அப்பு அரும்பதம்.]

தொண்ணூற்றிரண்டாம்பாட்டு.—(பேணலம்)(இதுவுமன்றிக்கே)-ப்ரயோஜநத்தைக் கொண்டகலுகை யொழிய வென்னைப்போலே வாயாலே சொல்லுகையுமன்றிக்கேயொழிவதே!யென்றபடி.(எல்லாவற்றையுமழியமாறுகை)-ஐஶ்வர்யாதிகளையழியமாறுகை, (அழிவுக்கிட்டு)-தாழஅவதரிக்கும்படி பண்ணி. முந்நீரபெரும்பதியைக்கீழே கூட்டுதல், மேலேயுங்கூட்டுதல். இத்தையருளிச்செய்கிறார் (உன் விபூதி) இத்யாதி. கீழே கூட்டவேண்டுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (பாஹ்யஸை) இத்யாதி. "நீளெரிவைத்தருள்" என்றத்தைப்பற்ற (அவர்கள்) இத்யாதி. ஜகத்ரக்ஷகனுக்கவர்களை அழிக்கக்கூடுமோ வென்ன வருளிச்செய்கிறார் (ஒரு விபூதியாக) இத்யாதி. பூமியிலே)-திருப்பாற்கடலிலே. இங்கே தொழுதவர்கள்,அங்கே(க)"ஸாஞ்ஜலிபுடா:" நித்யாஞ்சலிபுடா:" என்றிருக்கையாலே (தொழுசார் தொழும்ப்ரயோஜநம்) என்கிறது. "ஆங்கொலென்றே" - காண்கைக்காகவன்றே யென்றபடி. காலகாண்கையும் அபேக்ஷிதமாயிருக்குமோ வென்னவருளிச் செய்கிறார் (ஸக்ருத்) இத்யாதி. (நேருமளவு)-ஸக்ருத்ப்ரபத்தி. இத்தால், அநந்யப்ரயோஜநர்க்கு நேர்த்தி அல்பமாய் பலமதிகமாய், ப்ரயோஜநாந்தரபரர்க்கு நேர்த்தியதிகமாய், பல மல்பமாயிருக்கு மென்றபடி.

௯௨.

## [வேறொரு அரும்பதம்.]

தொண்ணூற்றிரண்டாம்பாட்டு.—(பேணலம்) இத்யாதி. கீழே அவதாரத்திலே அபஹ்ருத சித்தரானவராகையாலே அதிலேதிருவுள்ளங்குடிபோய், அவதரிக்கைக்குஹேது(க)"ஸஹி தேவைருதீர்ணஸ்ய"-ஸஹிதேவைருதீர்ணஸ்ய" என்கிறபடியே தேவர்களுடைய அர்த்தித்வமன்றே யென்றிப்படி ப்ரஸங்காத் அவர்களை வெறுக்கிறாரென்று ஸங்கதியையருளிச்செய்கிறார் (பெருங்கிறியானை) இத்யாதி. (இதுவுமன்றிக்கே) என்றது-அநந்யப்ரயோஜநனுயென்னைப்போலேசொல்லுகையுமன்றிக்கேயென்கை. (எல்லாவற்றையுமழியமாறி) என்றது-ஐஶ்வர்யாதிகளை யெல்லாம் விட்டென்றபடி. அரக்கரைக்கொன்றிடவேணுமென்றதே"நீணகர்"என்றத்தாலே சிரகாலஸ்த்தாயியாய்அவிசேஷஜ்ஞர் கலந்துவர்த்திக்கு மூரைச்சுட்டுத்தரவேணு மென்கை தேவர்களுக்குக்கருத்தென்று திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளிச்செய்கிறார்.(உன்) இத்யாதி. (இது) என்றது-சுட்டென்றதே "வைத்து" என்ற ஸௌம்யோக்தி யென்றபடி. வைக்கவேணுமென்றதே "அருளாய்" என்றதுக்குக்கருத்து (அவர்கள்) இத்யாதி. உன் விபூதி என்றதில் அவர்களுங்கூட்டன்றோ வென்ன

(க) பாரதம்-மோக்ஷ-௧௬௫.

உ) ஸ்ரீராமா அயோத்யா-௧-எ.

வருளிச்செய்கிறார் (தேவர்) இத்யாதி. "பேண்நலம்" என்று பதங்களாய் நலமென்றவிடத்தில் நகரம் தலைக்குறைத்தலாய்க்கிடக்கிறதென்று தாத்பர்யமருளிச்செய்கிறார் (பேணுகை) இத்யாதி. "முந்நீரப்பெரும்பதி" என்றத்தை "பேணலம்" என்றத்தோடும் "வாய்" இத்யாதியோடும் கூட்டிசப்தார்த்தங்களையும் தாத்பர்யங்களையுங் காட்டுகிறார் (அவன்) இத்யாதிவாக்யசதுஷ்டயத்தாலே. 'நீள்" என்றதுக்கு பாவம் (தேவர்களுடைய) இத்யாதி. ஜகத்திலிவர்களுங்கூட்டாயிருக்க இவர்கள்சொன்னமாத்ரத்திலே இவனுக்குச் செய்யவேண்டுவதென்னென்ன (ஒரு) இத்யாதி. "என்றே" என்றது-என்றோவென்றாய், அன்றென்று தாத்பர்யமருளிச்செய்கிறார் (அன்றிறே) என்று.

தாத்பர்யம்.—இழ் அவதாரகுணங்களை யநுபவித்தார். இதில், தேவர்களின் ப்ரார்த்தனையினாலன்றோ தன் ஸௌகுமார்யத்தையும் பாராமல் இந்நகர்க்சமான லோகத்திலவதரித்ததென்று அவர்களை வெறுக்கிறார்.

"இந்த ராவணாதிகள், ஒருவருமணுக வொண்ணாதபடி முந்நீரையரணாகவுடைய ஓர் தீவில் இலங்கையென்றொரு நகரத்தை நிர்மித்து அதுக்கொருவராலுமழிவாராதபடி ப்ரஹ்மாதிகளிடத்தில் வரம்பெற்று அங்கு வாஸம் செய்துகொண்டு அநேக ஸஜ்ஜநங்களைக் கருணையின்றி மிகவருத்தமுறுத்துகிறார்கள். அதற்காக நீபூலோகத்திலவதரித்து உன்னுடைய அமோகமானபாணங்களைப் ப்ரயோகித்து அவ்வஸுரர்களையும் அந்தஇலங்கையையுமழித்து உலகைநோக்கியருளவேணும்" மென்று, தாங்கள்ஸுகமேவாழ்கைக்காகத் தேவர்கள் உன்னையநவரதம் ப்ரார்த்தித்தார்களே யல்லது, நீயவதரித்தவிடத்தில் உன்னுடைய ஸௌந்தர்யத்தைக் கொஞ்சமேனும் அநுபவிக்க விரும்புகிறார்களில்லையே. அவர்களுடைய பாக்யஹீநதைக்கு நானென் சொல்வேனென்கிறார்." ௯௨,

---

காலைவெய்யோற்கு முன்னோட்டுக்கொடுத்தகங்குல்குறும்பர்,
மாலைவெய்யோன்படவையகம்பாவுவர், அன்னகண்டும்
காலைநன்ஞானத்துறைபடிந்தாடிக்கண்போதுசெய்து
மாலைநன்னாவில்கொள்ளார், நினையாரவன்மைப்படியே. ௯௩.

அர்த்தம்.—காலை - ப்ராதஃகாலத்தில், வெய்யோற்கு - ஸூர்யனுக்கு, (பயந்து), முன் - முன்னமே, ஓட்டுக்கொடுத்த - ஓடிப்போன, கங்குல் - ராத்ரியாகிற, குறும்பர் - தீம்பர், மாலை - ஸாயங்காலத்தில், வெய்யோன் - ஆதித்யன், பட - அஸ்தமிக்க, வையகம் - பூலோகத்தில், பாவுவர் - பரவுவார்கள். அன்ன - அப்படிப்பட்டகாலகதியை, கண்டும் - பார்த்திருந்தும், காலை - உதயகாலத்தில், நல் - (பகவத்விஷயகமாகையாலே) விலக்ஷணமாயிருக்கிற, ஞானம் - ஜ்ஞாநமாகிற, துறை - தீர்த்தத்தில், படிந்து - பொருந்தி, ஆடி - அவகாஹித்து, கண் - நேத்ரம் (முதலிய இந்த்ரியங்களை), போது செய்து - (விஷயாந்தரங்களில் போகாதபடி) முகுளிதமாகச்செய்து, மாலை - (ஆச்ரித)

வ்யாமோஹமுடைய ஸர்வேஶ்வரனை, நல் - (பகவத்ஸ்தோத்ரபரமாய்) ஶ்லாக்யமான, நாவில் - நாவிலே, கொள்ளார் - ஸ்வீகரியாதவர்கள், அவன் - அந்தஸர்வேஶ்வரனுடைய, மை - அஞ்ஜநம்போல் ஶ்யாமமான, படி - திருமேனியை, நினையார் - நெஞ்சிலே கொள்ளார்கள். ௯௩.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—தொண்ணூற்றுமூன்றாம்பாட்டு.—தேவர்கள் தாமோ ரபிமாநவிசேஷத்தாலே தவிருகிறார்கள்; அல்லாதாரோதான் பகவத்பஜநம்பண்ணுகிறார்கள்? அவரிவரென்று விசேஷிக்கிறதென், எல்லார்க்கும் புறம்பேயன்றோபோதுபோக்கென்கிறார்.

வ்யா.—(காலையித்யாதி) உத்பவாபிபவரூபத்தாலே ஆதித்யனின்னை மேலிடுவது, ராத்ரி ஆதித்யனை மேலிடுவதாகிற வித்தைக்கண்டுவைத்தும். (௧) [[illegible] - நக்தந்த்யுதித ஆதித்யே] விடிந்தவாறே அபிமதவிஷயத்தை ஸாதிக்கைக்கு த்ரவ்யார்ஜநம பண்ணுகைக்கீடான காலம்வந்ததென்று உகவாநிற்பர்கள் (௧) [[illegible] - நக்தந்த்யஸ்தமிதே ரவௌ] அஸ்தமித்தவாறே இவற்றைக் கொண்டுபிறரறியாதபடி அவ்விஷயங்களை புஜிக்கக்காலம் வந்ததென்று உகவாநிற்பர்கள். (காலையித்யாதி) ப்ரபாத ஸமயத்திலே - வெய்யோனுண்டு - ஆதித்யன், அவனுக்குமுன்னேயோட்டுக்கொடுப்பார்களாயிற்று, கங்குல்களாகிற குறும்பர். அவன் கிரணங்கள்படக் கைவிட்டோடாநிற்பர்களிறே. மாலையிலே பெரியப்ரதாபத்தையுடைய ஆதித்யனையழித்து அவனுண்டபரப்பையடையக் கைக்கொள்வர்கள். நித்ரையாலே பூமியாகப்பரவசமாம்படி பண்ணிக்கொண்டுவருமிறே.

(அன்னகண்டும்) அப்படியைக்கண்டுவைத்தும். பகவத்விஷயம் ப்ரத்யக்ஷத்துக்கு அவிஷயமாகையாலே தானறியாதொழிகிறார்கள். இதினுடைய அஸ்த்தைர்யத்தை ப்ரத்யக்ஷியாநிற்கச் செய்தேயும நெஞ்சிற்படாதொழிவதே! (காலை) ஸத்வோத்தரமான காலத்திலே. (நன்ஞானம்) ஜ்ஞாநமாகில் பகவத்விஷயத்தைப்பற்றியன்றிராதிறே.

அரு|| தொண்ணூற்றுமூன்றாம்பாட்டு.—(காலை வெய்யோற்கு) "காலை வெய்யோற்கு" என்று தொடங்கி "அன்னகண்டும்" என்னுமளவுக்கும் ஸமுதாய தாத்பர்யமருளிச் செய்கிறார் (உத்பவாபிபவரூபத்தாலே) என்று. இத்தால், "இப்படி திவாராத்ரவிபாகத்தாலே காலமழிகையாலே ஆயுஸ்ஸினுடையவஸ்த்தைர்யத்தை ப்ரத்யக்ஷியாநிற்கச் செய்தேயும் நெஞ்சிற்படாதொழிவதே!" என்று வெறுக்கிறாரென்றபடி. 'முன்னோட்டுக்கொடுத்த'-வலக்கோலியோடிப்போன. அப்படி ஸந்த்யாகாலம் வந்தால் வருமநர்த்தமேதென்ன அருளிச்செய்கிறார் (நித்ரையாலே) என்று.

(௧)

வ்யா|| (க) "ஒண்டாமரையாள்கேள்வ னொருவனையேநோக்கு முணர்வு" என்னக்கடவதிறே. (உ) தஜ்ஜ்ஞாநமஜ்ஞாநமதோऽந்யதுக்தம். தத்ஜ்ஞாநம்ஜ்ஞாந மதோந்யதுக்தம்" (ங) வித்யாந்யா ஶில்பநைபுணம் - வித்யாந்யாசில்பநைபுணம்" புறம்பேயொன்றை யறிந்ததோடு துன்னம் பெய்யவறிந்ததோடு வாசியில்லையிறே. (அறைபடிந்தாடி) ஜ்ஞாநமாகிறவித்தீர்த்தத்திலே புக்கவகாஹித்து. (கண்போதுசெய்து) போது செய்தென்று- மொட்டிக்கைக்கும் பேர்; அலருகைக்கும் பேர். புறம்புத்தை விஷயங்களிற்கண் செம்புளித்தென்னுதல், பகவத்விஷயத்திலே விழித்தென்னுதல். (மாலை) இவனநுஸந்திக்க வென்றுபக்ரமிக்குமத்தனைவேண்டுவது. மேலுள்ளதெல்லாம் தானே செய்து கொடுவந்து மேல்விழும்படியான வ்யாமோஹத்தையுடையவனை. (நல்நாவில்கொள்ளார்) நல்நாவென்கிறது-புறம்புத்தை ஜல்பங்களைத்தவிர்ந்து, பகவத்விஷயத்தைப் பேசுவோமென்றால் அதுக்குப்பாங்கான நாவைப்படைத்து வைத்தே இவர்கள் புறம்பேபோகிறதென்கிறார் (ச) "ஸாஜிஹ்வா-ஸாஜிஹ்வா". (நினையாரவன்மைப்படியே) வ்யாமோஹம்பண்ணாதே த்வேஷத்தைப்பண்ணிலும் விடவொண்ணுதபடியானவடிவழகை நினைப்பாரில்லை. (ரு) தேருணா-தருணௌ' த்வேஷத்துக்கு விஷயமாய் மூக்கறுப்புண்டவளிறே இவ்வார்த்தை சொன்னாள். தான் பரிபூர்த்தையாம்படியைப் போய்ச்சொல்லுகிறவிடத்திலே இதுக்குறுப்பாகச் சொன்னாள் தான்? ௯௩.

---

அரு||(துன்னம் பெய்ய) என்றது - புடைவைதைக்க என்றபடி. அடைவே அந்வயம். "ஸாஜிஹ்வா யாஹரிம் ஸ்தௌதி தச்சித்தம் யத் ததர்ப்பிதம் । தாவேவ கேவலௌ ஶ்லாக்யௌ யௌ தத்பூஜாகரௌ கரௌ - ஸாஜிஹ்வாயாஹரிம்ஸ்தௌதி தச்சித்தம்யத்ததர்ப்பிதம்| தாவேவ சகரௌஶ்லாக்யௌயௌதத்பூஜாகரௌகரௌ". ௯௩.

[அப்பு அரும்பதம்]

தொண்ணூற்றுமூன்றாம்பாட்டு.—(காலை) இப்படி ஆயுஃக்ஷயத்தைக்கண்டுவைத்தும் விஷயங்களை விரும்புவதே! என்று வெறுத்தவிடமுண்டோ வென்னவருளிச்செய்கிறார் (நந்தந்தி) இத்யாதி. ராத்ரியைக் குறும்பரென்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (சித்ரையாலே) இத்யாதி. "நன்ஞானம்" என்று விசேஷிப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (ஜ்ஞாநமாகில்) இத்யாதி. (துன்னம்பெய்கை) தைக்கை. வடிவழகு-த்வேஷித்தாலும் விடவொண்ணுதபடியிருக்குமோவென்ன வருளிச்செய்கிறார் (தருணௌ) என்று. சொன்னவளைக்கு ஜ்ஞாபகமேதென்ன வருளிச்செய்கிறார் (தான்பரிபூர்தை) இத்யாதி. ௯௩.

---

(க) முதல்திருவந்தாதி - ௬௭. (உ) விஷ்ணுபுராணம்-௬-ரு-அ௭.
(ங) விஷ்ணுபுராணம்-௧-௯-௪௧. (ச) விஷ்ணுதர்மம்-௧.
(ரு) ஸ்ரீராமா ஆரண்ய - ௧௯-௧௪.

[வேறொரு அரும்பதம்.]

தொண்ணூற்றுமூன்றாம்பாட்டு.—(காலே) இத்யாதி. கீழ்ப்பாட்டிலே "விண்ணோர்" என்று விசேஷித்து இப்பாட்டிலே "நினையார்" என்று ஸாமாந்யமாகச் சொன்னதுக்கு ஸங்கதி யருளிச்செய்கிறார் (தேவர்கள்) இத்யாதி. (கண்டுவைத்தும்) என்றதுக்கு-இப்படி தங்களாயுஃக்ஷயத்தைக்கண்டும் விஷயங்களை விரும்புவதே! என்று கருத்து. இதுக்கு ஸம்வாதம் (நந்தந்தி) இத்யாதி. சப்தார்த்தம் (ப்ரயாத) இத்யாதி. ராத்ரியைக் குறும்பரென்பானென்னென்ன (நித்ரையாலே) இத்யாதி. "கண்டும்" என்ற சகாரம் விரோதேயாக்கி பாவமருளிச் செய்கிறார் (பகவத்) இத்யாதி. தூன்னம் பெய்கை-தைக்கை. ௯௩.

தாத்பர்யம்.—இதில், ப்ரஹ்மாதி தேவர்கள் தாங்களீஶ்வரரென்கிற துர்மாநத்தினால் ஶ்ரிய:பதியை மறந்து நினையாவிடிலும், மற்றவர்களாவது நினைத்துஜ்ஜீவிக்கலாம். அவர்களும் அப்படியே யிழந்து கெட்டுப் போவதே! யென்று மற்றவர்களை வெறுக்கிறார்.

தினந்தோறும் ஸூர்யனஸ்தமித்தவாறே லோகமடங்கவ்யாபித்துப்ராணிகளுக்கு நித்ரையை யுண்டாக்கி, அவர்களுடைய ஜ்ஞாநங்களை யபஹரித்துத் தீம்பு செய்கிற ராத்ரியானது மற்றைநாள் ஸூர்யனுதிக்கும்போது அவனுடைய கிரணங்களுக்குப் பயந்து முன்னதாகவே யோடிப்போய் ஒளித்திருந்து அன்றை ஸாயம ஸமயத்தில் ஸூர்ய னஸ்தமித்தபின் லோகமெங்கும்வந்து பரவாநிற்கும்,இப்படி மாறிமாறிதினமும்ராத்ரியுமாய்த் தங்களுடைய ஆயுஸ்ஸு வீணாய்க்கழியும் விதத்தை யறிந்தும் ப்ராணிகள், அவ்வாயுஸ்ஸு வீணாய்ப்போகாமற்படி ஸத்வோத்தரமான ப்ராத: காலத்தி லெழுந்து தம்முடைய ஸகலேந்த்ரியங்களையும் விஷயாந்தர ப்ரவணமாகாதபடிநிக்ரஹித்து பகவத் த்யாநமாகிற மஹாதீர்த்தத்தில் செவ்வையா யவகாஹித்து, அவனுடைய கல்யாண குணங்களுக்கு வாசகமான திருநாமங்களைச் சொல்லி, அவனுடைய அஞ்ஜநமேனியை நினைத்துக் காலத்தை ஸபலமாக்குகை யுக்தமாயிருக்க அதைத்தவிர்ந்து கெட்டுப்போகிறார்களே! யென்று சோகிக்கிறார். ௯௩

---

மைப்படிமேனியும் செந்தாமரைக்கண்ணும் வைதிகரே,
மெய்ப்படியாலுன் திருவடிச்சூடுந்தகைமையினார்,
எப்படியூராமிலைக்கக்குருட்டாமிலைக்குமென்னும்
அப்படியானுஞ்சொன்னேன், அடியேன்மற்றுயாதென்பனே. ௯௪.

அர்த்தம்.—வைதிகரே, வேதத்திற்சொல்லிய உன் ஸ்வரூபத்தை யறிந்த பக்தஜநங்களே, மை-அஞ்ஜநத்தினுடைய, படி-ஸ்வபாவத்தையுடைய, மேனியும் - விக்ரஹத்தையும், செய் - சிவந்த, தாமரை - தாமரைப் பூப்போன்ற, கண்ணும்-நேத்ரங்களையுமுடைய, உன்-உனனுடைய, திருவடி - ஶ்ரீபாதத்தை, மெய்ப்படியால் - யதார்த்தமான ப்ரகாரத்தினால், சூடும் - சிரஸில் வஹிக்கும்படியான, தகைமையினார் - ஸ்வபாவத்தையுடையவர்கள். ஊர் - ஊரைக்கிட்டின, ஆ - பசுவானது, எப்படி - எவ்விதமாக, மிலைக்க - கனைக்க,

(அதைக்கேட்டு), குருட்டு ஆ-கண் தெரியாத பசுவும், மிலைக்கும் - (அப்படியே) கனைக்கும், என்னும் அப்படி - என்கிற அந்த உலகமொழிப்படியே, யானும் - நானும், சொன்னேன் - (உன்னைச்) சொன்னேன். அடியேன் - பக்திபரவசனான நான், மற்று - அதுக்குமேலே, யாதென்பன் - எதைச் சொல்லுவேன்? ௯௪.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்]

அவ.—தொண்ணூற்றுநாலாம் பாட்டு.—அஜ்ஞாநத்தாலே விழப்பாரு மறிவுகேட்டாலே விழப்பாரு மாகாநிற்பர்கள் என்றார்; "உமக்குக்குறையில்லையே" என்ன, எனக்குமொருகுறையுண்டாக்கி வைத்தாயே "முன்னடிதோற்றாதபடி *மயர்வறமதிநலமருளினையே". பக்திரூபாபந்நஜ்ஞாநத்தையிறேயருளிற்று. அந்த பக்திபாரவஶ்யத்தாலே சொல்லமாட்டுகிறிலேனென்னுதல்; (க)*வளவேழுலகிற்படியே அயோக்யதாநுஸந்தாநத்தாலே யொன்றுஞ்சொல்லமாட்டுகிறிலேனென்னுதல்.

வ்யா.—(மைப்படிமேனியும்) அஞ்சநத்தின் படியான திருமேனியும். கண்டார்கண்கள் குளிரும்படியான வடிவும். பட்டரொருநாளிவ்விடத்தையருளிச்செய்யாநிற்க, பிள்ளைவிழுப்பரையரும் ஆப்பான் திருவழுந்தூரரையருமிருந்தார்களாய், "அநுஸந்தித்தார் நெஞ்சிலேயிருள்படியும்படியான திருமேனியும்" என்றருளிச்செய்ய, நஞ்சீயர் (உ)"'இன்னாரென்றறியேன்' என்னப்பண்ணுகையாகாதே" என்றருளிச்செய்தருள, "இவ்வார்த்தைசொன்னாரார்?" என்ன 'ஜீயர்' என்றவர்கள் சொல்ல, "நூற்றுப்பதின்காதத்தவ்வருகே பிறந்து இவ்வளவும் வந்து இன்று நமக்கித்தையுபகரிப்பதே!" என்று கொண்டாடியருளினாராம். (செந்தாமரைக்கண்ணும்) அகவாயிற்குண ப்ரகாசகமான திருக்கண்களும். (வைதிகரித்யாதி) இப்போது வைதிகரென்கிறது-வேதத்திற் பூர்வபாகநிஷ்டரை. கேவலம் க்ரியாகலாப

அரு|| தொண்ணூற்றுநாலாம்பாட்டு.—(மைப்படிமேனி) "மை" என்று அஞ்சநமாய், அஞ்சநத்தின் படியான திருமேனியென்னுதல்; அதவா - அநுஸந்தித்தார் நெஞ்சிலே இருள்படியும் படியான திருமேனியென்னுதல். அதாவது-(ந)* காதல் மையலையுண்டாகும்படியான திருமேனியென்றபடி. அரையர்களருளிச்செய்ததுக்குத் தாத்பர்யமாக 'பொன்னார் சார்ங்க முடையவடிகளை இன்னார்' என்றதைக் கடாக்ஷித்து "இன்னாரென்றறியேனென்னப் பண்ணுகையாகாதே" என்று நஞ்சீயர் அருளிச்செய்ய, பட்டர் பராக்காயிருந்து "இந்த வார்த்தை இப்போது சொன்னாரார்" என்ன, அவர்கள் "நஞ்சீயர்" என்றருளிச் செய்தார்களென்றபடி. "வைதிகர்" என்று-கர்மோபாய நிஷ்டரைச்சொல்லுதல், பக்த்யுபாய நிஷ்டரைச்சொல்லுதல்.

(க) திருவாய் - க-ரு.
(உ) திருமொழி - ௯௦-௪௦-௯.
(ந) திருவாய் - ௪ - ௬ - க.

வ்யாஜங்கொண்டு பெறவிருக்குமவர்கள். ப்ரஹ்மத்தினுடையஸ்வரூப ரூபகுணவிபூதிகளுக்கு ப்ரதிபாதகமான உபரிதநபாகநிஷ்டரன்றிக்கே கர்மபாகத்தையே பற்றிநிற்குமவர்கள், அங்ஙனன்றிக்கே (க) "நிதித்யாஸிதவ்ய: - நிதித்யாஸிதவ்ய:" என்று விதேயமாய்வரும் நூற் பிடித்தபக்தியையுடையவர்களைச் சொல்லிற்றாகவுமாம். அவனுடைய குணாநுஸந்தாநத்தாலே கலங்கி யடைவுகெடுமதன்றிக்கேயிருக்குமவர்கள். இப்படி யிருக்குமவர்களே மெய்யானப்ரகாரத்தாலே உன்திருவடியை யாச்ரயிக்கும் ஸ்வபாவத்தையுடையார்,

ஆனால் பின்னை நீர் சொன்னபடி யெங்ஙனே யென்ன, (எப்படியித்யாதி) ஊரிற்பசுக்கள் வந்து புகுரப்புக்கால் எப்படி ஸம்ப்ரமிக்கும், அந்த ஸம்ப்ரமமேஹது இன்னதென்றறியாதே குருட்டுப் பசுவும் ஸம்ப்ரமியாநிற்குமிறே. (அப்படி யானுஞ்சொன்னேன்) "அளவுடையார் சொல்லும் விஷயமன்றோ! நாமென்?" என்றுபாராதே, நானும் பாசுரத்தைச் சொன்னேன். (அடியேன் மற்றுயாதென்பனோ) இதுக்கு மேற்பட பாதந்த்ரனுமாய், பக்திபரவசனுமான நான் அடைவுபட ஒன்றைச் சொல்லித் தலைக்கட்ட வல்லேனோ? அன்றிக்கே, அயோக்யாநுஸந்தாநம்பண்ணியகலுகிற நான் அங்குத்தைக்கு ஸத்ருசமாக ஒன்றைச்சொல்லித் தலைக்கட்ட வல்லேனோ?

௯௪.

அரு|| அயோக்யதாநுஸந்தாந பரமான போதைக்கு "வைதிகர்" என்று அநந்ய ப்ரயோஜநரைச் சொல்லுகிறது. "வைதிகரே" என்று ஸம்போதநமன்று, வைதிகரானவர்களென்றபடி,

"மிலைக்க" ஸம்ப்ரமிக்க, "குருட்டா மிலைக்கும் என்னும்"-குருட்டா-குருட்டுப்பசு, மிலைக்கும்-ஸம்ப்ரமியா நிற்குமென்று லோகம் யாதொரு படி பழமொழியாகச் சொல்லும், அப்படியே நானுஞ்சொன்னேனென்றபடி "மற்று" இதுக்கு மேற்பட. "யாது" எத்தை, "என்பன்" - சொல்லித் தலைக்கட்ட வல்லன். இத்தால், உபாயாந்தர நிஷ்டராதல், பக்த்யுபாய நிஷ்டராதலன்றோ அடைவுபட்ட அவனை யாச்ரயிக்கும் ஸ்வபாவத்தையுடையார், அயோக்யனான நானங்குத்தைக்கு அநந்யப்ரயோஜநனன்றோ, நானங்குத்தைக்கு ஸத்ருசமாக ஒன்றைச்சொல்லித் தலைக்கட்ட வல்லேனோ? வென்றதாயிற்று. அயோக்யதாநுஸந்தாநமே பாட்டுக்கு ஸ்வரஸமான தாத்பர்யம்.

௯௪.

[அப்பு அரும்பதம்.]

தொண்ணூற்று நாலாம்பாட்டு.—(மைப்படி) நெஞ்சிலே மை படியும்படி யென்றாய், கறுப்பாலே இருளைச் சொல்லி, நெஞ்சு பிச்சேறும் படியான விக்ரஹமென்று பட்டருக்குவிவக்ஷையாய் அர்த்தாந்தரம்,(பட்டர்)

(க) ப்ருஹதாரண்யம் ௪-௪-௫.

இத்யாதி. கர்மநிஷ்டரையும் பக்திநிஷ்டரையும் சொன்னதுக்குத் தாத்பர்யம் - அவர்களைப்போலே தெளிந் திருக்கையன்றிக்கே கலங்கிய பக்தியை யுடையனென்னுதல்; அவர்களைப்போலேஜ்ஞாநாதிகனன்றிக்கே அஜ்ஞனானாயென்னுதல் என்று கண்டுகொள்வது. கன்றுள்ளபசு ஊரைக்கண்ட மட்டிலே கன்றைக் காணப்போகிறோமென்று ஸம்ப்ரமிக்கும். இது காணுதிருக்கச்செய்தேயுமத்தைக்கண்டு கூப்பிடுமென்றபடி. ஊரா-ஊரைக்கண்டபசு. [மைப்படிமேனியும் செந்தாமரைக் கண்ணுமுடைய உன் திருவடிகாண.]௯௪

[வேறொரு அரும்பதம்.]

தொண்ணூற்று நாலாம்பாட்டு (மைப்படி) இத்யாதி. கீழிரண்டுபாட்டோடு மிதுக்குஸங்கதியருளிச் செய்கிறார் (துர்மாந)இத்யாதி. மை யென்று கறுப்பாய், அத்தாலே இருளாய், அதுதானும் பாரவஸ்யஜநகமான பக்தியாய், அது நெஞ்சிலே படியும்படியான வென்று அர்த்தாந்தரத்தை ஸம்வாதமூகேந வருளிச்செய்கிறார் (பட்டர்) இத்யாதி. தமிழ்நடையாடாத தூரதேசவாஸியான நஞ்சீயர் திருந்தி அருளிச் செயல்களில் மிகவும்பரிசீலநமுண்டாய்த் தம்முடைய திருவுள்ளக் கருத்தறிந்து "இருள்" என்றமாத்ரத்திலே பக்தியாக்கி அதுக்கு ஸம்வாதமாகத் திருமங்கையாழ்வார் பசுரத்தை உபகரிக்கும்படியாகப் பெற்றோமென்றுகந்தருளினரென்றுகருத்து. "செந்தாமரைக் கண்ணுமுடைய உன் திருவடிச் சூடும்" என்றவயமுட்கொண்டு, வைதிகர்-கர்மயோகநிஷ்டராகவும்,பக்தியோக நிஷ்டராகவும் யோஜநாத்வய மருளிச் செய்கிறார் (இப்போது) இத்யாதி. (நீர்சொன்னபடி) என்றது- "நினையாரவன் மைப்படியே" என்று வடிவிலீடுபட்டதென்றபடி. "ஊரா" ஊரைக்கிட்டினபசு வென்று சப்தார்த்தமா யருளிச் செய்கிறார் (ஊரில்) இத்யாதி. "மிலேக்க" என்றதினர்த்தம் (ஸம்ப்ரமிக்கும்) என்றது. (குருட்டுப்பசுவும்) என்றத்தாலே பக்திபாரவஶ்யத்தாலே வந்த ஜ்ஞாநமாந்த்யத்தைச் சொன்னபடி. (அளவுடையார்) ஜ்ஞாநாதிகர். "குருட்டா" என்றத்தாலே ஸூசிதமான அயோக்யதாநுஸந்தாநம் பண்ணுகிறபடியாக வருளிச் செய்கிறார் (அன்றிக்கே) இத்யாதி. ௯௪,

தாத்பர்யம்.—இதில், தேவர்களபிமாநத்தினாலும், மற்றவர் அஜ்ஞாநத்தினாலும் பகவத் விஷயத்தை யிழந்து ஸ்துதியாதாற்போலே, நானும் பக்தி பரவசனாய்க் கொண்டு பகவத்விஷயத்திலிழிந்து மயங்கி எவ்விதத்திலும் ஸ்துதிக்கப் பெற்றிலேனென்கிறார்.

வேதோக்தமான உன்னுடைய ஸ்வரூபரூப குணவிபூதிகளை யறிந்து அதில் விதித்தபடியே த்யாநம் செய்கிற பக்தஜநங்களே, த்யாநயுக்தருடைய உள்ளத்திலே புகுந்து பரவசமாக்குகிற அஞ்சநகிரிபோல் ஶ்யாமமாயதி ஸுந்தரமான உன்னுடைய திருமேனியையும்,உள்ளுள்ளவாத்ஸல்யம் வெளியில் கசிந்து தோற்றுவதுபோல் சிவந்து செந்தாமரைபோன்ற அழகிய திருக்கண்களையும் த்யாநித்து ப்ராப்யமான உன்னுடைய திருவடியை சிரஸா

வஹித்துக்கொண்டாடுவர்களல்லது மற்றெனக்கு இப்படிச்செய்யமுடியாது. ஆகிலும், காலையில் மேய்ச்சலுக்குப் போனபசு ஸாயம்ஸமயத்தில் வீட்டிற்கு வரும்போது ஊரைக்கண்டு தன் கன்றை நினைத்துக்கனைத்துக் கொண்டுவருவதைக்கண்டு, ஊரிருக்குமிடமுமறியாதகுருட்டுப்பசுவும் ஊரருகே வந்ததென்றறிந்து தானும் கூப்பிடுமென்ற உலகமொழிபோலே, அந்த பக்த ஜநங்கள் அநுஸந்திப்பதைக் கண்டு அதையே நானுமநுஸரித்துச் சொன்னேன். இப்படியல்லது, நீ யளித்த பக்தியினால் உன் ஸ்வரூபாதிகளிலிழிந்து மதிமயங்கிக் கிடக்கிற நான் உன்னை ஸ்மரித்து ஸ்வதந்த்ரித்து ஒன்றைச் சொல்ல வல்லேனல்லேன்.

௯௪

---

யாதானுமோராக்கையிற்புக்கு, அங்காப்புண்டு மாப்பவிழ்ந்தும்
மூதாவியிற்றடுமாறு முயிர்முன்னமே, அதனால்
யாதானும்பற்றிநீங்கும் விரதத்தை நல்வீடுசெய்யும்
மாதாவினைப்பிதுவை, திருமாலை வணங்குவனே. ௯௫.

அர்த்தம்.—உயிர் - ஜீவனானது, முன்னமே - அநாதிகாலமாக, யாதானும் ஓர் - ஏதோ ஒரு, ஆக்கையில் தேஹத்தில், புக்கு - ப்ரவேசித்து, அங்கு - அந்ததேஹத்தில், ஆப்பு உண்டும்-(ப்ராரப்த கர்மத்தினால் அதையுகந்து.) பந்தத்தையடைந்தும், ஆப்புஅவிழ்ந்தும்-(ப்ராரப்தகர்ம நாசத்தினால் அதையிழந்து) பந்தத்தைவிட்டும், மூது - பழையதான, ஆவியில் - ஸூக்ஷ்மசரீரத்தில் (இருந்து ஸ்வர்க்கநரகங்களில்,) தடுமாறும் - அலையாநிற்கும். அதனால் - அந்த வாஸனையினால், யாதானும் - ஏதேனும் (ப்ராக்ருதமான) விஷயத்தை, பற்றி - அவலம்பித்து. நீங்கும் - (பகவத்விஷயத்தைவிட்டு) அகலும்படியான, விரதத்தை - (என்னுடைய) ஸங்கல்பத்தை, நல்வீடுசெய்யும் - நன்றாகவிடுவிப்பதைச் செய்தவனாய், மாதாவினை - மாதாவைப்போல் ப்ரிய பரனுமாய், பிதுவை - பிதாவைப்போல் ஹிதபரனுமான, திருமாலை - ஸ்ரீயஃபதியானவனை, வணங்குவன் - ஆஸ்ரயிப்பேன்.

௯௫.

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—தொண்ணூற்றைந்தாம்பாட்டு.—பக்திபாரவஶ்யத்தாலேயாதல், அயோக்யதாநுஸந்தாநத்தாலேயாதல் ஏதேனுமொருபடி கண்ணழிவு சொல்லிக்கைவாங்காதே, தன்பக்கலிலே ப்ராவண்யாதிசயத்தையுடையேனாய், இதரவிஷயங்களில் அருசியையுமுடையேனாம்படி பண்ணின மஹோபகாரத்தையநுஸந்தித்து அவன் திருவடிகளிலே விழுகிறேனென்கிறார். இவ்விடத்திலே ஜீயர் குறியாகவருளிச்செய்வதொரு வார்த்தையுண்டு "திருக்கோட்டியூரிலே பட்டரெழுந்தருளியிருக்கச்செய்தே அங்கே ராமாநுஜதாஸரென்றொருஶ்ரீவைஷ்ணவர், "அடியேனுக்குத் திருவிருத்தமருளிச்

---

அரு|| தொண்ணூற்றைந்தாம்பாட்டு.— (யாதானும்) இப்பாட்டினுடைய வைபவந்தோற்ற ஒரைதிஹ்யமருளிச்செய்கிறார்(இவ்விடத்திலேஜீயர்)என்று.

வ்யா॥செய்யவேணும்’ என்ன. ‘பெருமாளைப்பிரிந்த சோகத்தாலே நானொன்றுக்கும் க்ஷமனல்லன், ஜீயரே! நீரருளிச்செய்யும்’ என்ன, ஜீயருமருளிச்செய்துகொடுபோகாநிற்கச்செய்தே, வளவன் பல்லவதரையரென்று திருக்கோட்டியூர்நம்பி ஸ்ரீபாதத்தையுடையாரொருவர் அநுஸந்தித்துக்கொடுபோந்தாராய், அவரிப்பாட்டளவிலே வந்தவாறே கண்ணுங்கண்ணநீருமாய்ப், புளகிதகாத்ரராயிருக்க, இத்தைக்கண்டு ‘பாட்டில வார்த்தைகள் சொல்லுவது இனி, ப்ரஸங்கித்த மாத்ரத்திலே விக்கரானீர்’ என்ன, ‘நம்பியெனக்குஹிதமருளிச்செய்தவந்தரத்திலே, எம்பெருமான் திருமுன்பேயிப்பாட்டை நாள்தோறும் விண்ணப்பஞ்செய்’ என்றருளிச் செய்தார். அத்தையிப்போது ஸ்மரித்தேன்’ என்ன, ‘அவரிதிலேதேனு மருளிச்செய்யும் வார்த்தை நினைத்திருப்பதுண்டோ?’ என்ன, ‘அதெனக்குப்போகாது, இப்பாசுரமாத்ரத்தை நினைத்திருப்பேன்’ என்றாராம்”. நம்பியாதரித்தபாட்டாகாதேயென்று ஐந்தாறுநாழிகைபோது இத்தையே கொண்டாடியருளிச் செய்தார்.

வ்யா.—(யாதானுமோராக்கையிற்புக்கு) ஏதேனுமொரு சரீரத்திலே ப்ரவேசித்து. அறத்தண்ணிய ஸ்தாவரஜங்கமத்திலே ஜநித்தாலும் ‘ममायं देहः - மமாயம்தேஹ:’ என்று அதிலேயபிமாநித்து அங்கேயுண்டானவற்றோடே சில ஸம்பந்தவிசேஷங்களுமுண்டாம், அவைதன்னைவிடமாட்டாமையாலேயாய்ப்போராநிற்குமாயிற்று. “ஆக்கை” என்கையாலே உபசயாத்மகமென்று தோற்றுகிறது. (புக்கு) சேதநனுக்கு அசித்ஸம்ஸர்க்கம்ஸ்வத: உள்ளதொன்றன்று, கர்மநிபந்தநமென்கை. (அங்காப்புண்டும்) கர்மவாஸநை ருசிவாஸநையாய் அதிலே பத்தனாயிருக்கும். இது தண்ணிதென்று ஆசார்ய வசநாதிகளாலும், சாஸ்த்ரவாஸநையாலும், ப்ரத்யக்ஷத்தாலு மறியாநிற்கச்செய்தேயும் இத்தைவிடிற்செய்வதென்னென்று துணுக்குத்துணுக்கென்னாநிற்கும். (ஆப்பவிழ்ந்தும்) கர்மமடியாகவந்ததொன்றிறேயென்றறியாதே அவன்தானிதிலேயிலையகலப்படுத்தாநிற்கும்; கர்மக்ஷயம்

---

அரு॥(அநுஸந்தித்துக்கொடுபோந்தாராய்) என்றது - அந்தராமாநுஜதாஸரென்கிற ஸ்ரீவைஷ்ணவரோடே கூடநஞ்சீயர் ஸந்நிதியிலே கேட்டுக்கொண்டு போந்தாராயென்றபடி. (பாட்டில் வார்த்தைகள்சொல்லுவதினி) என்றது-பாட்டுக்கர்த்தமருளிச் செய்வதினியென்றபடி.

“ஆக்கை” என்றுதேஹமாய்(க) “दिह उपचये - திஹ உபசயே” என்று உபசயாத்மகமென்று தோற்றுகிற தென்றபடி. “ஆப்புண்டும்” ஸ்நேஹத்தைப் பண்ணியும்.

---

(க) அதாதி - (௮௯௨.)

வ்யாவ்ருத்தவாறே அதுதான் குலைந்துகொடுக்கும்றே. (மூதாவியில்) இத்தால், பழைமையை நினைக்கிறது. ஆவியென்று-ப்ராணனாய், அசித் விசேஷம் ப்ராணனாயிருக்கையாலே, இப்போது ஸூக்ஷ்மசரீரத்தை ஆவியென்கிறது. இதுதன்னை ப்ராக்ருதிகார்யமென்பாருமுண்டு, ப்ராக்ருத்யம்சமென்பாருமுண்டு. இதுதான் மோக்ஷதசையளவும் அநுவர்த்திக்குமது, சேதநனுடைய கமநாகமநாதிகளுக்குடலாயிருக்கும். (தடுமாறும்) பஞ்சாக்நிவித்யையிற் சொல்லுகிறபடியே மேகங்களிலே புக்கு வர்ஷமுகத்தாலே பூமியிலே பதித்து அந்நமுகத்தாலே புருஷன் பக்கலிலே யந்வயித்து சுக்லசோணிதரூபத்தாலே ஸ்த்ரீபக்கலிலே ஸங்க்ரமித்து இப்படி தடுமாற்றமாயிற்றிருப்பது. இச்சேதநனுக்குப் புக்கபுக்கவிடமெங்குந் தடுமாற்றமேயுள்ளது. அத்தைத்தானறிந்தவிடமுமறியாதவிடமுமாயிருக்கும். (உயிர்) ஜ்ஞாநாநந்தலக்ஷணமாய் நித்யமானவஸ்து கிடீர் இப்படிபடுகிறது. இப்படி தடுமாறி ஸம்ஸரிக்கிறது என்றுதொடங்கியென்னில், (முன்னமே) அநாதியாய்ப் போருகிறதாயிற்று,

(அதனால்) அந்தவாஸனையே உபாத்யாயாக; முன்னமேயாகையாலே. (யாதானும்பற்றி) பகவத்வ்யதிரிக்தவிஷயமாகையே வேண்டுவது; பற்றுவதேதேனுமொன்றாகவமையும்; அவற்றில் குணதோஷங்கள் நிரூபிக்கவேண்டா. (நீங்கும்) பகவத்விஷயமாகித்தனையேவேண்டுவதுவிடுகைக்கு. (விரதத்தை) "நீ பற்றுகிற விஷயங்களடையத் தோஷமாயிருக்கும். பகவத்விஷயமேகிடாய் நல்லது" என்று சிலருபதேசித்தாலும் அது நன்றேயாகிலும் நானதைவிடுகையிலே ஸங்கல்பித்தேனென்னும். ஸர்வேஶ்வரன் (௧) "ददाम्येतद्व्रतं मम-ஏதத்வ்ரதம்மம" என்று ரக்ஷிக்கைக்குவ்ரதங்கொண்டிருக்குமா போலேயாயிற்று இவனவனை விடுகைக்கு வ்ரதங்கொண்டிருக்கும்படி. (௨) "द्विधा भज्येयमप्येवं न नमेयं- த்விதாபஜ்யேயமப்யேவம் நநமேயம்" என்கிறபடியே இரண்டாகப்பிளக்கிலும் தலைசாயேனென்றாயிற்றிருப்பது. (நல்வீடு செய்யும்) இப்போதந்நிலை தவிர்ந்து (௩) "இந்நின்ற நீர்மையினியாமுறாமை" என்று காலகட்டி "இத்தை விடுவித்துத்தரவேணும்" என்னப் பண்ணின. (௪) "मम माया दुरत्यया। मामेव ये प्रपद्यन्ते-மமமாயா துரத்யயா| மாமேவயேப்ரபத்யந்தே" என்கிறபடியே நீ பிணைத்த பிணையை நீயேயவிழ்க்கவேணும் என்றபேக்ஷிக்கப்பண்ணின ; தன் பக்கல்ருசிமுன்னாக இத்தை விடுவிக்க வேணுமென்னப்பண்ணின. (மாதாவினைப்பிதுவை) சரீரத்துக்குத்பாத

அரு|| (முன்னமேயாகையாலே வாஸனை கிடக்குமென்றபடி. "விரதத்தை"-வ்ர

(௧) ஸ்ரீராமா-யுத்த - ௧௮-௩௪, (௨) ஸ்ரீராமா-யுத்த- ௩௬-௧௧.
(௩) திருவிருத்தம் - ௧, (௪) கீதை-௭-௧௪.

வ்பாலகராய் ஸம்ஸாரவர்த்தகராயிறே யல்லாத மாதாபிதாக்களிருப்பது. இவனிதில் நின்றும் விடுவித்து ரக்ஷிக்குமவனாயிற்று. இங்ஙனிரண்டாகாரமாகச் சொல்லவேண்டுவானென்னென்னில், (திருமாலை) ஸர்வபந்துவாகையாலே. (க) "பிதா மாதா ச மாதவ: - பிதாமாதா சமாதவ:" என்னுமாபோலே. (வணங்குவனே) இதரவிஷயங்களிலே அருசியைப்பிறப்பித்துத் தன்பக்கலிலே ப்ராவண்யத்தைப் பிறப்பித்த இவ்வுபகாரத்துக்கு ஸத்ருசமாயிருப்பதொரு ப்ரத்யுபகாரம் நம்மால்பண்ணவொண்ணாதிறே. அவனதான வஸ்துவை யவன் பக்கலிலே ஸமர்ப்பிக்குமத்தனையிறே. ௯௫.

---

அருளித்தந்தை. மாதாவும் பிதாவுமான திருமாலே என்றபடி. 'நல்வீடுசெய்யும்"- நல்வீடுசெய்த. ௯௫.

[ அப்பு அரும்பதம் ]

தொண்ணூற்றைந்தாம்பாட்டு.—(யாதானும்) இப்பாட்டினுடைய வைபவ ப்ரகாசார்த்தமாக ஓரைதிஹ்யம் (இவ்விடத்தில்) இத்யாதி. (வார்த்தைகள்)- அர்த்தம். ஆக்கையென்று - தேஹமாய், "திஹ உபசயே" என்கிறதாதுவாலே உபசயாத்மகமென்கிறது. (அந்தை) தடுமாற்றத்தை. கர்ப்பாவஸ்தையிலே யறிந்தும் ஜநித்தமட்டிலே யறியாதேயும் போமென்றபடி. "அதனால்" என்றதுக்கு சப்தார்த்த மருளிச்செய்கிறார் (முன்னமேயாகையாலே) என்று. கேவலனைப் போலே கேவலதேஹநிவ்ருத்தி மாத்ரமன்றிக்கே "நல்வீடு"என்றது - தன்பக்கல் ருசி முன்னாகவிடுவிக்கை, ௯௫.

[வேறொரு அரும்பதம்.]

தொண்ணூற்றைந்தாம்பாட்டு.—(யாதானும்) இத்யாதி. கீழ்ப்பாட்டிலிரண்டு யோஜனைக்கும் சேர ஸங்கதியை நிந்த்ரேண வருளிச்செய்கிறார் (பக்தி) இத்யாதி. பக்திபாரவஸ்யத்தாலே 'யாதென்பனே" என்று கைவாங்கப்பார்த்தவாறே இதரவிஷயங்களிலே புகுமத்தனையிறே. அதில் ருசியில்லாமையும்பகவத்விஷயத்திலே ருசியும்தமக்கு (உ)*பொய்ந்நின்றஞானத்திலேதானேயுண்டாக்கினபடி ஸ்ம்ருதமாய் அதுக்குத் தோற்று வணங்குகிறாரென்றும், அயோக்யதாநுஸந்தானத்தாலே அகலப் பார்க்குமளவிலும் விஷயாந்தரங்கள் ருசியாமையாலே மீண்டு இப்படி யாக்கினதுக்கு வணங்குகிறாரென்றும் இரண்டுவிதமாக ஸங்கதிகண்டு கொள்வது. இப்பாட்டு, திருந்தின ஸ்ரீவைஷ்ணவர்களுக்கெல்லாம் அநுஸந்திக்க வடுக்குமதென்று தோற்றுகைக்காகத் திருக்கோட்டியூர் நம்பி இதிலர்த்தாநுஸந்தானத்தாலே உகந்து, தஞ்சமாக ஸ்ரீபாதத்திலேயாஸ்ரயித்தார்க்கும் அருளிச் செய்தாரென்று கொண்டாடினபடியை அருளிச்செய்கிறார் (இவ்விடத்திலே) இத்யாதி, (வார்த்தைகள்) - அர்த்தாபிலாபகசப்தங்கள். "ஆப்புண்டு" என்னுமளவுக்குத் தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார்

---

(க) பாரதம்-ஆரண்ய-கஅக. (உ) திருவிருத்தம் - க.

(அற) இத்யாதி. ஆகுகையையுடைத்தான தாக்கையென்று விவக்ஷித்தருளிச் செய்கிறார் (ஆக்கை) இத்யாதி. "ஆகுகை"-உபசயம். "மூது" என்றத்தாலே முடிவில் பெரும்பாழான ப்ரக்ருதிதௌல்யமும் "ஆவி" என்கையாலே மஹ தாதி விசேஷங்களிலே கூட்டாம்படி அசித்விசேஷமாகவும் சொல்லக்கூடுமோ வென்ன வருளிச்செய்கிறார் (இதுதன்னை) இத்யாதி. ஆமோக்ஷமநு வர்த்திக்கும் ப்ரக்ருதியைப்போலே யிருக்கையாலும், ஸகலவிதஸ்தூல சரீர பரிக்ரஹாதிகளுக்கு உடலாயிருக்கையாலும் இத்தோடெத்தோடுங் கூட்டிச் சொல்லவுமாயிருக்கையால், இது தோற்றும்படி, மூதாவியென்று ஸூக்ஷ்மசரீ ரத்துக்குப் பேராயிற்றென்கை. வர்த்தமாநத்துக்கு பாவம் (இச்சேதநனுக்கு) இத்யாதி. (அறியாதவிடம் -ஸூக்ஷ்மசரீரம். தடுமாற்றத்துக்கு ப்ரதிகோட்யா காரமும், தடுமாறுமென்கிற வர்த்தமானத்தாலே பலித்தநித்யதையும் உயிர் பதத்திலே விவக்ஷிதமாக்கிஅருளிச்செய்கிறார் (ஜ்ஞாந) இத்யாதி. (அநாதியாய்) என்றது - (க) "धाता यथापूर्वमकल्पयत् - தாதாயதாபூர்வமகல்பயத்" என் கிறபடியே அநேககாலமா யென்றபடி. பலிதார்த்த மருளிச்செய்து சப் தார்த்த மருளிச் செய்கிறார். (முன்னமேயாகையாலே) என்று, "வீடுசெய்யும்" என்றதுக்கு பாவம் (இப்போது) இத்யாதி. விவரணம், (மமமாயா) இத்யாதி. நன்மைக்குத் தாத்பர்யம் (தன்பக்கல்) இத்யாதி. இத்தாலே கேவலனைப்போலே ப்ரக்ருதி விமோசந மாத்ரமன்றிக்கே பகவத்ப்ராப்தி காமநயா வந்த நன்மை சொன்னதாயிற்று. ௯௫

தாத்பர்யம்.—இதில், நான்பக்திபரவசனாய்க் கொண்டு, உன்னை ஸ்துதித் துக் கிட்டப் பெற்றிலேனென்று சொல்லி யகலப்பார்த்தவிடத்திலும், அவனி தற்கு முன்னமே யெனக்குத் தன்னிடத்தி லத்யந்த ப்ராவண்யத்தையும், விஷ யாந்தரங்களில் வைராக்யத்தையு முண்டாக்கி வைத்து என்னை விஷயீகரிக்க ஸங்கல்பித்தான், அவன் செய்த அந்த உபகாரத்துக்கு என்னால் செய்யத்தக்க ப்ரத்யுபகார மொன்று மில்லை, ஆகையாலவன் திருவடிகளிலே வணங்குகிறே னென்கிறார்.

ஜீவர்கள், தங்களுடைய ஜந்மாந்தரீய புண்யபாபாநுகுணமாக தேவமநுஷ் யஸ்வஸூகராதிகளிலேதோ ஒருசரீரமெடுத்து அஜ்ஞாதியிலுள்ளவற்றோடும் அஜ்ஞாதிக்கு போக்யமான வஸ்துக்களோடும் ப்ரீதிசெய்து அவற்றிலே சிலநா ளழுந்திக்கிடந்து, அஜ்ஜந்மத்துக்கு ஹேதுவாகிய ப்ராரப்தகர்மம் கழிந்தவாறே அவற்றிலாசையையும் அந்த சரீரத்தையும் விட்டு ஸூக்ஷ்மசரீரத்துடன் மற் றொரு சரீரத்தில் ப்ரவேசித்து, அப்படியே யநாதியாய் நிலையற்று அலைந்து கொண்டிருப்பார்கள். அப்படியே நானுமநாதி வாஸனையினால் ப்ராக்ருதவிஷய ங்களையே விரும்பி, "நான் பற்றினவிஷயம் ஸதோஷமாயினும் பகவத்விஷயம் நிர்த்தோஷமாயினு மிதைவிட்டுஅதைப்பற்றேன்" என்றிருந்தஎன்னுடையநினை வைமாற்றி நிரதிசயாநந்தரூபமான உன் திருவடிகளில் ப்ராவண்யத்தை எனக்கு ஜந்மப்ரப்ருதி யுண்டாக்கின ஆப்தபந்துவான ஸ்ரியःபதியை யாஸ்ரயியாநின் றேன் என்றருளிச்செய்கிறார். ௯௫.

---

(க) தைத்திரீய.ம.௬.நாராயண.உ. ௭-௬௮.

வணங்குந்துறைகள் பலபலவாக்கி, மதிவிகற்பால்
பிணங்குஞ் சமயம் பலபலவாக்கி, அவையவைதோ
றணங்கும் பலபலவாக்கிநின்மூர்த்தி பரப்பிவைத்தாய்
இணங்குநின்னோரை யில்லாய், நின்கண்வேட்கையெழுவிப்பனே.

அர்த்தம்.—வணங்கும் - (தேவதாந்தரங்களை) ஆச்ரயிக்கைக்கு, பலபல-பஹுப்ரகாரமான, துறைகள் (இழியும் துறைகளாயிருக்கிற அந்தந்த) மதோபதேஷ்டாக்களை, ஆக்கி-உண்டாக்கி, மதிவிகற்பால் புத்திபேதத்தினால், பிணங்கும்-விவாதப்படுகிற, பலபல-அநேகவிதமான, சமயம்-மதங்களை, ஆக்கி-உண்டாக்கி, அவையவைதோறு-அவ்வவமதங்கள் தோறும், நின்மூர்த்தி - உனக்குச் சரீரங்களாகிய, பலபல-நாநாவிதமான, அணங்கும்-தேவதைகளையும், ஆக்கி-ஆச்ரயணீயங்களாக உண்டாக்கி, பரப்பிவைத்தாய் - விஸ்தாரமாக்கிவைத்தாய். இணங்கு - (அத்தேவதைகளோடு) ஸத்ருசமாகத் தோற்று கிறவனை, நின்னோரை - உன்னோடு ஸமாநமாக உள்ளவரை, இல்லாய் உடைத்தாகாதவனே! நின்கண் - உன்னிடத்தில், வேட்கை - அபிநிவேசத்தை, எழுவிப்பன் - உண்டாக்கிவைப்பேன். ௯௬

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—தொண்ணூற்றாறும்பாட்டு.—பேசவொண்ணுதென்று கைவாங்கவும்மாட்டாதே பேசாதிருக்கவும்மாட்டாதபடியாகவும் இதரவிஷயங்களில் அருசியையும் பிறப்பித்துத்தன்பக்கலிலே ருசியையும்பிறப்பித்த இம்மஹோபகாரத்துக்கு ஸத்ருசமாகப் பண்ணுவதொரு ப்ரத்யுபகாரமில்லையிறே. உன்னதான வஸ்துவையு முன்பக்கலிலே ஸமர்ப்பிக்கு மத்தனையிறே யினியென்று அத்தைச்செய்தார். (வணங்குந்துறை) லபிக்கு மம்சமெல்லா மிங்கில்லையென்கிறார். நீகைவிட்டால் உன்கார்யஞ்செய்யப்போந்த நானுங்கைவிடவோ? சித்சக்திகளை

---

அரு|| தொண்ணூற்றாறும்பாட்டு.—(வணங்கும்) (பேசவொண்ணுதென்று கைவாங்கவும் மாட்டாதே) என்று தொடங்கி (உன்பக்கலிலே ஸமர்ப்பிக்குமத்தனையிறே) என்னுமளவும் கீழ்ப்பாட்டில் தாத்பர்யம். இனிமேலிற் பாட்டுக்கவதாரிகை அருளிச்செய்கிறார் (லபிக்குமம்சமெல்லாம்) என்று. (லபிக்குமம்சமெல்லாமிங்கில்லை என்கிறார்) என்றது-பூர்வார்த்தத்தைக் கடாக்ஷித்துக்கொண்டு, நீ இப்படிசெய்தபிற்பாடு உன்னையாச்ரயிக்கு முபாய மொன்றுமில்லையென்றருளிச்செய்கிறாரென்றபடி. ஆகையாலே (நீகைவிட்டால் உன்கார்யஞ் செய்யப்போந்த நானும்கைவிடவோ) என்று உத்தரார்த்தத்துக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார். ஸ்வசரணகமல ஸமாச்ரயணத்துக்குறுப்பாகக் கரணகளேபரங்களைக் கொடுத்து ப்ரவ்ருத்தி நிவ்ருத்திசக்திகளையுங்கொடுத்து ஹிதைஷியாயிருந்தேனித்தனையொழியக் கைவிட்டேனோவென்ன அருளிச்செய்கிறார் (சித்சக்திகளையும்) என்று.

வ்யாபாரங்களையும் ப்ரவ்ருத்தி சக்திகளையும், அடியிலே இவை அசித் கல்பமாய்க் கிடக்கிற ஸமயத்திலே இவற்றினுடைய தயநீயதசையைக்கண்டு புருஷார்த்தமின்னதென்றறிந்து ருசித்துப்பற்றுகைக்கிடாகக் கொடுத்துவிட, அவைதானிதரவிஷயங்கள் ருசிக்கைக்கும் அதுக்கீடாக ப்ரவர்த்திக்கைக்கும் பொதுவாயிருக்கையாலே இவை ஸம்ஸரிக்கைக்கிடாக ப்ரவர்த்தித்தாய் நீயென்னலாம்படி விழுந்தது. கிணற்றின் கரையிற் ப்ரஜையைவாங்காதே யாறியிருந்த தாயைத் தானே தள்ளினாளென்னக்கடவதிறே.

வ்யா.--நாமிவை ஸம்ஸரிக்கைக்கீடாக ப்ரவர்த்திப்பிக்கையாவதென்னென்ன, (வணங்குந்துறை யித்யாதி) ரஜஸ்தமஸ்ஸுக்களுடையராயிறே புருஷர்களிருப்பது; அவ்வவருடைய குணமாக ருசிபிறந்தால் அவ்வளவிலே, ராஜஸராயும் தாமஸராயுமுள்ள அவ்வோ தேவதைகளே யாஸ்ரயணீய வஸ்துக்களென்றுபதேசிக்கைக்கிடாக உபதேஷ்டாக்களான தீர்த்தர்கள் பலரையுமுண்டாக்கிவைத்தாய். துறையென்று - தீர்த்தமாய், அத்தால் தீர்த்தரை நினைக்கிறது.(மதியித்யாதி) மதிபேதத்தாலே ஒருவன் ஸித்தாந்தித்ததுதன்னைப்பூர்வபக்ஷமாகக்கொள்ளுமிறே வேறொருவன். இப்படி பிணங்குகைக்குப் பாசுரமான அவ்வோசாஸ்த்ரங்கள் பலவற்றையு முண்டாக்கிவைத்தாய். (அவையவை யித்யாதி) அவ்வோ சாஸ்த்ரங்களாலே ப்ரதிபாதிக்கப்படுகிற தேவதைகள் பலவற்றையு முண்டாக்கிவைத்தாய். (நின்மூர்த்தி பரப்பிவைத்தாய். (க) “யோ யோ யாம் யாம் தநும் ப⁴க்த: - யோயோயாம்யாம் தநும்பக்த்யா” என்கிறபடியே உனக்குத்தநுபூதரானவர்களைப் பலரையுமுண்டாக்கிவைத்தாய். “பைசல் கைசுரோய் மூக்கைசு”என்று பண்டேயிவற்றினுடைய வறிவுகேட்டுக்கு மேலே க்ஷுத்ர தேவதைகளை யாஸ்ரயணீய ரென்றுபதேசிப்பாரையும், அவர்களுக்குபதேசிக்கைக்குப் பாசுரமான சாஸ்த்ரங்களையும், அவ்வோ தேவதைகளையு முண்டாக்கிவைத்தாய். (இணங்கு நின்னோரையில்லாய்) நீ யிப்படி பரப்பிவைத்தால்இத்தை வேறுசிலரால் தவிர்க்கலாம்படி யிருப்பாரொருவரல்லை, உன்னோடொக்க நிற்கும்படி உனக்குப் போலியானாருடையையல்லை. இனிநீர் செய்யப்பார்த்ததென்னென்ன, (நின் கண்வேட்கை யெழுவிப்பனே) உன்

அரு|| “வணங்கும்” - அவ்வோதேவதைகளே ஆஸ்ரயணீயவஸ்துக்களென்றுபதேசிக்கைக்கிடாக, “துறைகள்” உபதேஷ்டாக்கள், “அணங்கு” என்று தேவதைகளைச்சொல்லுகிறது. (பைசல்) என்றது-பையலென்றதாய், பையலொரு சிறுங்கை வ்யாதி மூன்று சிறுங்கை யென்றபடி. “இணங்கு” - ஸத்ருசமான. நாமிப்படி ஸ்வதந்த்ரராய்ச்செய்தாலினி நீர் செய்யப்பார்த்ததென்

(க) கீதை - ௭ - ௨௧.

வ்யா|| ஸ்வாதந்த்ர்யத்தையுந் தவிர்த்து, அவர்கள் தங்களறிவுகேட்டின்ப லமநுபவியாதபடி பண்ணி எல்லாருமென்னைப்போலே உன்பக்கலி லே யூரசையுடையராம்படி பண்ணக்கடவேன். இது ஸம்ஸாரத்திலே யிருக்கச்செய்தே பகவத்ஜ்ஞாநம் பிறக்கையால் வந்த சர்வோக்தியி ருந்தபடி யிறே. ௯௯.

அரு|| னென்ன அருளிச்செய்கிறார் (நின்கண்வேட்கை)என்று. [வணங்குந்து றைகள் பலபலவாக்கி மதிவிகற்பால் பிணங்கும்சமயம் பலபலவாக்கி அவை யவைசோறுநின்மூர்த்தியான அணங்குகளைப் பலபலவாக்கிப் பரப்பிவைத் தாய், இனிநீர் செய்யப்பார்த்த தென்னென்ன இணங்குநின்னோரை யில்லாய் நின்கண் வேட்கை யெழுவிப்பனே ] என்றந்வயம். "இணங்குநின்னோரை யில்லாய்" என்றது - ஸம்போதநம். "மதிவிகற்பால்" மதிபேதங்களாலே. என்றபடி. விகற்பு-பேதம். ௯௯.

[அப்பு அரும்பதம்.]

தொண்ணூற்றொன்பாட்டு.—(வணங்கும்) இதிலே, அந்த ஜ்ஞாநலாபத் தாலே எல்லாருமாக வநுபவிக்கவேணுமென்று லோகத்திலே கண்வைத்தார்; அவர்களீப்ஸரமாயை யாலே அந்யபரராய்த் திரிகிற படியைக்கண்டு பொறு க்கமாட்டாமல், நீவிட்டாலும் நான்விடவோ? அவர்களையு மாம்ரித ராக்குகி றேனென்று ஈப்ஸரனோடே மார்தட்டுகிறாரென்று அவதாரிகை கண்டுகொ ள்வது. இத்தை ஸங்க்ரஹமாகவருளிச்செய்கிறார்(நீகைவிட்டாலும்) இத்யாதி. கரணகளேபரங்களைக் கொடுத்திருக்கக் கைவிட்டானென்பா னென்னெ ன்ன வருளிச்செய்கிறார் (சிச்சக்திகளையும்) இத்யாதி. விலக்காத மாத்ரங் கொண்டு சொல்லலாமோ வென்ன வருளிச்செய்கிறார் (கிணற்றின்கரை) இத்யாதி. "தீர்த்தர்" சாஸ்த்ரிகள். நின் மூர்த்தியான வணங்குந் துறைகள் பலவற்றையும் பரப்பிவைத்தாய். (பைசல்கைசு). பிள்ளையொரு சிறுங்கை. (நோய்முக்கைசு) - நோய் மூன்று சிறுங்கையென்றபடி. ௯௯.

[வேறொரு அரும்பதம்.]

தொண்ணூற்றொன்பாட்டு.— (வணங்கும்) இத்யாதி. கீழ்ப்பாட்டிலே உபகார ஸ்ம்ருதியாலே "வணங்குவனே" என்றவர், இப்பாட்டிலே "வண ங்குந்துறைகள்" இத்யாதியாலே அவனைவெறுத்துத் தாமே யெல்லாரையும் திருத்தப்பார்க்கிறபடி யெங்ஙனேயென்ன, தமக்குப்பிறந்த ஜ்ஞாநாதிசயத்தா லே எல்லாரும் வணங்கவேணுமென்று பார்த்தவிடத்து, இவர்கள் அந்யபரரா யிருக்க, "அப்படிசெய்தாய்" என்றுஅவனைவெறுத்து மாரைத்தட்டி, தாமவற் றைத் திருத்தப்பார்க்கிறாரென்று ஸங்கதியை ஸூசிப்பிக்கிறார் (பேசு) இத் யாதி. கைவாங்கமாட்டாமைக்கு ஹேது (தன்பக்கல்) இத்யாதி. நீர் நம்மை வணங்கினமாத்ரத்திலே நமக்கு என்ன ப்ரயோஜநம் நாநாமத நிஷ்டர் நாநாவிதமாயிருக்க வென்றருளிச்செய்கிறார் ( வணங்கும் ) இத்யாதி. உப

தேசாதிகளாலே எல்லாருந் திருந்துவர்களாகையாலே இனி யென்றும் ஸித்தாந்த விஸ்ட்டரில்லாமை இல்லையென்கிறா ரென்றபடி. நம்மால் திருத்தப்போகாதது உம்மாலாமோவென்ன வருளிச்செய்கிறார் (நீ) இத்யாதி. நீ உபேக்ஷித்தாய், நான் ரக்ஷிக்கதீக்ஷித்தே னென்றபடி. ஸர்வபூத ஸுஹ்ருத்தானவன் உபேக்ஷித்தானோ வென்ன வருளிச்செய்கிறார் (சிச்சக்தி இத்யாதி. ப்ரஜையை மண் தின்ன விட்ட தாயைப்போலே உபேக்ஷித்தா னென்று கருத்து. ஆனால் கைவிட்டானென்று இவர் இன்னா தாகிறபடி எங்ஙனேயென்ன வருளிச்செய்கிறார் (கிணற்றின்கரை) இத்யாதி. "உபேக்ஷாமாத்ரங்கொண்டு பழிவிளைத்தால் செய்யலாவதுண்டோ, நானதுக்குச் செய்வதென்" என்னும் ப்ரஶ்நத்தை யுட்கொண்டு "நான்செய்தகுற்றம் ஏது" என்கிற வீஶ்வராபிப்ராயத்தை யருளிச்செய்கிறார் (நாம்) இத்யாதி. "சமயம்" என்றது - ஸித்தாந்தமாய், சாஸ்த்ரங்களை என்றபடி. "ஆக்கி" என்று நம்மைச் சொல்லுகிறதென், அவர்கள் ஸ்வதந்த்ரரன்றோ வென்கிற சங்கையிலே "நின் மூர்த்தி" இத்யாதி என்று விவக்ஷித்து அதுக்கு ப்ரமாண மருளிச்செய்கிறார் (யோயः) இத்யாதி. பைசலென்று பையலாய், அது சிறுகுழந்தையாய், கைசிறுங்கையாய், நேர்பட்டமாத்ரத்திலே ஒருவருக்கும் வயிறுநிறையாதே; அப்படியே உபதேஶ்யனுடைய ஜ்ஞானமும் மத்யல்பம், உபதேஷ்டாக்களுடைய ஜ்ஞானமும் மத்யல்பம், பலப்ரதனுடைய வறிவு மத்யல்பமென்றுசொல்லும்படி யென்கை. (இவற்றினுடைய) என்றது-உபதேஶ்யரும் உபதேஷ்டாக்களும், ஆஶ்ரயணீயருமான விவர்களுடைய வென்கை. (உன் ஸ்வாதந்த்ர்யத்தையும்)என்றதுக்கு அவன் வாத்ஸல்யத்தாலே செய்தத்தை அவன் ஸ்வாதந்த்ர்யகார்யமாகச் சுமத்தினாரென்று கருத்து. ஸர்வசக்தியோடே இவர் மார்தட்டிச்சொல்லக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (இது) இத்யாதி. ௯௬.

தாத்பர்யம்.—இதில், தம்மைப்போலே எல்லாரையும் எம்பெருமான்திருவடிகளிலாஶ்ரயிக்கப்பார்க்க, அவர்கள் விஷயாந்தர ப்ரவணராய் பகவத்விஷய விமுகரா யிருப்பதைக்கண்டு, மோக்ஷோபாயாநுஷ்டாநத்துக்கே உபயோகியான சரீரத்தை இவர்களுக்குக் கொடுக்கவேண்டி யிருக்க விஷயாநுபவத்துக்கும் பொதுவான சரீரத்தைக்கொடுத்து இவர்களை ஈஶ்வரன் கெடுத்தானென்று அவனை வெறுத்து, இவர்களுக்கு நாமெப்படியாகிலும் பகவத்விஷயத்தில் ருசியை யுண்டாக்குவேனென்கிறார்.

ரஜோகுணமுடையாரும் தமோகுணமுடையாரும் ஸச்சாஸ்த்ரத்தைக் கற்று ஸத்வமூர்த்தியான உன்னைவிரும்பார்களென்று அவரவர்கள் ருசியின்படி கற்கைக்கு மாஶ்ரயிக்கைக்கும், பரஸ்பரவிருத்தமாய் ஒருவன் சொன்னத்தை மற்றவன் நிரஸிக்கும்படி நிலைநில்லாத அநேகமதங்களையும் அவற்றை யுபதேசிக்கைக்கு அவ்வவ மதங்களில்குருக்களையும், பூஜித்துத் தங்கள் பலம் பெறுகைக்கு உனக்குச் சேஷபூதராகிய ருத்ராதி தேவர்களையு முண்டாக்கி

வைத்து, ஜீவர்களுக்கு அறிய வல்லசக்தியையும் செய்யவல்ல சக்தியையும் கொடுத்துவைத்தாயாகையா லவர்களவற்றைக் கொண்டு அத்தேவர்களைத் தொழுது ஸமஸாரிகளாயே திரியாநின்றார்கள்; நீயவர்களை உபேக்ஷிக்கிலும் நானவர்களைத் திருத்தி உன் திருவடிகளை யாஶ்ரயிக்கும்படி அவர்களுக்கு உன் விஷயமான ப்ரீதியை உண்டாக்குவேனென்கிறார். கூசு.

எழுவதும்மீண்டே படுவதும்பட்டு, எனையூழிகள்போய்க்
கழிவதுங்கண்டுகண்டெள்கலல்லால், இமையோர்கள்குழாம்
தொழுவதுஞ்சூழ்வதுஞ்செய் தொல்லைமாலைக் கண்ணாரக்கண்டு
கழிவதோர்காதலுற்றார்க்கும், உண்டோகண்கள்துஞ்சுதலே. கூஎ.

அர்த்தம்.—எழுவதும்-உண்டாகும் விதத்தையும், மீண்டே-மற்றப்படியே (உடனே), படுவதும் - நசிக்கும் விதத்தையும், பட்டு - உத்பந்நமாய், எனையூழிகள் - அநேககாலம், போய் - கடந்து, கழிவதும் - (அநந்தரம்) அழியும் விதத்தையும், கண்டு கண்டு - பார்த்துப்பார்த்து, எள்கலல்லால் - விடுமதொழிய, இமையோர்கள் - நித்யஸூரிகளுடைய, குழாம் - ஸமூஹமானது, தொழுவதும் - ஆஶ்ரயிப்பதையும், சூழ்வதும் - சுற்றிவருவதையும (பரிஸர ஸேவையையும்,) செய்-செய்யாநின்ற, தொல்லை - அநாதியான, மாலை - ஸர்வேஶ்வரனை, கண் ஆர - கண்கள்நிறையும்படி, கண்டு - ஸேவித்து, கழிவது-காலம்கழியும்படி, ஓர் - அத்விதீயமான, காதல் - ஆசையிலே, உற்றார்க்கும் - பொருந்தினவர்களுக்கும், கண்கள்-நேத்ரங்கள், துஞ்சுதல் - மூடுதல் (நித்ரித்தல்,) உண்டோ - உண்டாகுமோ? கூஎ.

## [பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.]

அவ.—தொண்ணூற்றேழாம்பாட்டு.—(க) "பெருங்கிறியானையல்லால் அடியேன் நெஞ்சம்பேணலதே" என்றும்(உ) "நின்கண்வேட்கை யெழுவிப்பனே" என்றும, இவ்விஷயத்திலே இங்ஙனேகிடந்தலமாவாநின்றீர், இவ்விஷயத்திலகைவைக்கிலுமக்காகவும் பிறர்க்காகவும் க்லேசந்தவிராதாயிராநின்றது, அல்லாதார் கண்டீரே, புறம்புள்ள விஷயங்களிலே நெஞ்சைவைத்து அவற்றாலே புண்டுப்பது கண்ணுறங்குவதாய்க்கொண்டு போதுபோக்குகிறபடி; அப்படியே நீரும் நம்பக்கலில் நின்றும் நெஞ்சைப்புறம்பே மாற்றிப் போதுபோக்க வல்லீரோயென்ன, அவர்களுன்னை யறியாமையாலேயென்கிறார்.

வ்யா.—(எழுவதுமித்யாதி) இதுக்கிரண்டுபடி. உத்பந்நமாவதும் அநந்தரத்திலே நசிப்பதும். உத்பந்நமாய்ச் சிலநாள் நெடுக ஜீவித்து

---

அரு|| தொண்ணூற்றேழாம்பாட்டு.—(எழுவதும்) உத்பந்நமாவதும். "மீண்டேபடுவதும்" - அநந்தரத்திலே நசிப்பதும். "பட்டு" - உத்பந்நமாய்,

---

(க) திருவிருத்தம் - சுக. (உ) திருவிருத்தம் - [illegible]

திருப்பவளத்தாலே கேட்கவேணுமென்றும், ஸம்ஸாரிகளுக் குஜ்ஜீவநோபாயமாழ்வார்ஸம்பந்தமே யென்னுமிது தோற்றுகைக்காகவும் ப்ரஶ்நம்பண்ண, தம்முடைய திவ்யப்ர பந்தாந்வய மாத்ரமே பேற்றுக்கடி யென்கிறாரென்று ஸங்கதியை யருளிச்செய்கிறார் (பகவத்) இத்யாதி. (நன்மை) என்றது-பாக்யமென்றபடி. அதுதானும்-(க) *அனந்தன்மேல் கிடந்தபுண்ணியனை பாகவதபர்யந்தமாகப்பற்றுகை யென்கை. "நவிலுகை" சொல்லுகையாய், அத்தையருளிச்செய்து, பயிலுகையாய், அதாவது - பரிசயம் பண்ணுகையாய், அத்தைப்ரமாண முகேநவருளிச் செய்கிறார் (ஸர்வதாபிகதஸ்ஸத்பிः) இத்யாதி. (அதுக்கு) அஸ்த்ராப்யாஸத்துக்கு. "நல்லார் நவில்" என்றுதாமே யருளிச்செய்து "திருமால் திருப்பேர்வல்லாரடிக்கண்ணிசூடிய" என்றும் தாமேயருளிச்செய்யும்படியென்னென்ன, அவர்கள் கருத்தாலே அது, இது தம்முடைய திருவுள்ளத்தாலேயென்று விவக்ஷித்தருளிச் செய்கிறார் (அவர்கள்) இத்யாதி. சப்தார்த்தம் (ஶ்ரியःபதி) இத்யாதி. ௧௦௦.

## வேறொரு அரும்பதம் முற்றிற்று.

ஆழ்வார்திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

---

தாத்பர்யம்.—இதில், எம்பெருமானே தஞ்சமென்றாழ்வா ரருளிச்செய்ததைக்கேட்ட மதுரகவிகள் முதலானோர், ஆழ்வாரை யாஶ்ரயித்தால் ஸம்ஸாரிகளுஜ்ஜீவியார்களோ வென்னும் ஸம்சயத்தை ஆழ்வார் ஶ்ரீஸூக்தியாலே போக்கிக்கொள்ளவேணுமென்று கேட்க, நம்முடைய இத்திருவிருத்ததை யநுஸந்தித்தால் ஸம்ஸாரத்தைக் கடந்துஜ்ஜீவிப்பார்களென்று அருளிச்செய்கிறார்.

விலக்ஷணர் வர்த்திக்கும் திருநகரியி லவதரித்தவராகையாலே ஜந்ம வைலக்ஷண்யத்தையுடையராய், விலக்ஷணர் புகழும் கல்யாண குணங்களையுடையராய், ஶ்ரியःபதியுடைய திருநாமாநு ஸந்தாந பரிபூதரான பாகவதர்களுக்கு பக்தாக்ர கண்யராகையாலே சேஷத்வாதி ஜ்ஞாநபூர்ணரான ஆழ்வாரருளிச்செய்ததாய், அநுஸந்திக்கவும் கேட்கவு மினிதான சப்த ஸந்தர்ப்பங்களையுடையதாய், ஜ்ஞாதவ்யஸகலார்த்த ப்ரகாசகமாயுள்ள இத்திருவிருத்தம் நூறுபாசுரங்களையு மநுஸந்திக்கவல்லவர், ஆழ்வாருடைய பூர்ணகடாக்ஷத்துக்குப் பாத்ரபூதராய்க்கொண்டு, ஆத்மஸ்வரூப திரோதாயகமாய், பந்தகமான புண்யபாபங்களுக்குக்காரணமாய், துர்வாஸநா ஜநகமாய், அடைந்தாரை யழுந்தப்பண்ணுமதாய், பரிணாம சாலியாய், ஜந்ம மரணாதி ஸகல ஸாம்ஸாரிக துःகமூலமாய், தத்வஜ்ஞாநாபநோதயமான ப்ராக்ருதி மண்டலத்தைக்கடந்து ஆவிர்பூத ஸ்வஸ்வரூபராய் வாழ்வர்கள். ௧௦௦.

---

(க) திருச்சந்தவிருத்தம் - சுடு.

